Koviloor Digital Library

KVC0125

Vol. XVIII. 1940—41.

# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

பதினெட்டாம் சிலம்பு

இதழாசிரியர் கூட்டத்தலைவர்:
திருவாளர் பண்டித ந. மு.
வேங்கடசாமி நாட்டாரவர்கள்

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம், லிமிடெட்.

விக்கிரம ஆ

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.
Tirunelveli and Madras.

*All Rights Reserved*]

[*Price Rs. 3-0.*

Koviloor Digital Library


## ‘செந்தமிழ்ச் செல்வி’ இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்
## (Editorial Board Members)

தலைவர் :

திருவாளர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்,
*தஞ்சை.*

---

2. ,, P. சிதம்பரம் பிள்ளையவர்கள், B.A., B.L.,
*வக்கீல், நாகர்கோவில்.*

3. ,, கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M.A., M.L.,
*அட்வகேட், தாகூர் சட்ட விரிவுரையாளர்.*

4. ,, துடிசைகிழார் A. சிதம்பரனாரவர்கள்,
*பென்ஷன் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர், கோவை.*

5. ,, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள்,
*தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.*

6. ,, T. S. கந்தசாமி முதலியாரவர்கள், B. A.,
*வழக்கறிஞர், சாத்தூர்.*

7. ,, காழி சிவ. கண்ணுசாமிப் பிள்ளையவர்கள், B. A.,
*தருமபுரவாதீன வித்துவான், சென்னை.*

8. ,, வித்துவான் மா. இராசமாணிக்கம் அவர்கள், B.O.L.,
*தமிழாசிரியர், முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளி, சென்னை.*

9. ,, இளவழகனாரவர்கள், *கழகத் தமிழ்ப் புலவர்.*


---

The Progressive Printers, 2/17, Coral Merchant St., G. T. Madras.

Koviloor Digital Library

# உள்ளுறை

Koviloor Digital Library

Koviloor Digital Library

Koviloor Digital Library

Koviloor Digital Library

Koviloor Digital Library

## படங்கள்

Koviloor Digital Library



கொப்பனுப்பட்டி கலைமகள் கல்லூரி—மாணவி கல்விபயிலுமிடம்.

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—சித்திரை [பரல்-க

# வாழ்க !

வாழ்க அந்தணர், வானவர், ஆனினம்;
வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக;
ஆழ்க தீயதெல் லாம்; அரன் நாமமே
சூழ்க; வையக மும்துயர் தீர்கவே !

—சம்பந்தர்

இன்பம் வரவேண்டும் வரவேண்டும் என்று எல்லாரும் எதிர்பார்க்கிறார்கள். நல்லது; துயர் தீர்ந்தால் இன்பம் தானே உண்டாகின்றது. இது கருதியே, 'வையகமும் துயர் தீர்க' என்று உடனே வாழ்த்தியருளினார் சம்பந்தர்.

ஒரு காலத்தில் சோழ அரசன் திருமணத்தில், மற்றவர்களெல்லாரும் அரசனுக்கு எவ்வளவு எவ்வளவோ நீளமாக வாழ்த்துக் கூறினார்களாம். ஔவையார், "வரப்பு உயர, வரப்பு உயர" என்று இரண்டு சொல் சொல்லி வரப்பை வாழ்த்தினாராம். ஆழ்ந்த கருத்துடையவர்கள், பின்பு அதனை, 'வரப்பு உயர நீர் உயரும்; நீர் உயர நெல் உயரும்; நெல் உயரக் குடி உயரும்; குடி உயரக் கோன் உயரும்' என்று அரசனுக்கு அருமையாய் விளக்கவேண்டியதாயிற்று. சம்பந்தர் மற்றவர்களைப்போல நீளமாகவும் வாழ்த்தவில்லை. முதற்குறிப்புமட்டும் சொல்லி மற்றவர்களைத் திகைக்க வைக்கவுமில்லை. எல்லாம் காரண காரியங்களுடன் அவரே சுருக்கமாகச் சொல்லிவிட்டார்.

Koviloor Digital Library



ஏனென்றால், மற்றவர்களும் இந்த வாழ்த்து வகையை நட்டோறும் ஓதி, உலகத்தை வாழ்த்தவேண்டும் என்பதற்காகத்தான். அப்படியல்லாமல், தாம்மட்டும் வாழ்த்துவதாயிருந்தால், ஔவையாரைப்போலவே "வாழ்க அந்தணர்" என்று முதற்குறிப்புமட்டும் சொல்லி, உலகத்தை வாழ்த்துவதற்காக அந்தணரை வாழ்த்தியிருப்பார்.

"வாழ்க அந்தணர்" என்றால், 'நல்லவர்கள் வாழ்க' என்பது கருத்து.

மக்களில் நல்லவர்கள் வாழ்ந்தால் நுண்ணுடம்பிலுள்ள நல்லவர்கள் உளம் மகிழ்வார்கள். மற்றச் சிற்றுயிர்களிலும் மென்மைத் தன்மையுடைய நல்லுயிர்கள் இனிது வாழும். இங்ஙனமெல்லாம், மக்கள் தேவர் சிற்றுயிர்கள் என்னும் எல்லா உயிர்களிலும் நல்லவையா யிருப்பவை மேம்படுமானல், அந் நல்லவர்பொருட்டு மழை பெய்யும். மழை பெய்ய, வளம் மிகுந்து அரசியல் உயரும். அரசியல் உயர, நாட்டில் தீயவை அடங்கும். தீயவை அடங்க, எங்கும் தெய்வ குணம் மிகும். அது மிக, எல்லார்க்கும் துயரம் தீரும். இன்பம் வரும்.

இதுதான் வழி. நாட்டில் நல்லவர்களைப் பாதுகாத்து அவர்கள் மகிழ்ச்சியாயிருக்க முதலில் வழி செய்யவேண்டும். இது செய்தால், மற்றவை தாமே அமையும்; நாட்டில் சான்றோர்கள் இருப்பது ஒரு பெரிய பேறு. அவர்களால் விளையும் பயன் வெளிப்படையாய்த் தெரியாமலே உள் வலிவாய் நிகழ்ந்துகொண்டிருக்கும்.

எல்லோரும், 'வாழ்க நல்லவர்' என்று வாழ்த்துவோம்.

---

Koviloor Digital Library



# நடனம் வலுக்கிறது!

எல்லாவற்றுக்கும் ஓர் இளம் பதம் உண்டு. மும்முர மாகக் காரியங்கள் செய்யும் முறுகிய நிலைமையும் உண்டு. காரியம் நிறைவேறும்வரையில் இந்த மும்முரமான நிலைமை சிலவற்றில் அப்படியே நிலைத்திருக்கவும் பார்க்கிறோம்.

'முவ்வுரம்' என்பதே 'மும்முரம்' என்று வழங்குகிறது. முவ்வுரமாவது மூன்று உரம். 'உரம்' என்பதற்குப் பொது வாக 'வலிமை' என்று பொருள் சொல்லுகிறார்கள். மூன்று வலிமைகள் ஒன்று சேரும்போது, 'காரியம் மும்முரமாக நடக்கிறது' என்று சொல்லுவது நேரக்கூடியதுதான்.

சிலருக்கு அறிவுத் திறமை இருக்கும். அவர்கள் திட்டங் கள் வகுப்பதில் இணையற்றவர்களாகக்கூட இருப்பார்கள். ஆனால், செயலில் கொண்டுவருவதற்குக் காரியத் திறமை இராது. சிலருக்கு, 'அறிவுத்திறமை' 'காரியத்திறமை' என்னும் இரண்டுமே இருக்கும். ஆனால், சில காரியங்களை அவர்கள் விருப்பத்தோடு செய்யக்கூடாதவர்களாக இருப்பார்கள்.

எத்தனைதாந் திறமைகள் இருந்தாலும், விருப்பமில்லாத போது, எந்தக் காரியந்தான் எப்படி நிறைவேறும்? அறிவும் செயலும் ஒரு காரியத்துக்கு எப்படி வலிமையோ, அப்படியே விருப்பமும் அதற்கு ஒரு வலிமை!

இன்னுங் கேட்டால், விருப்பந்தான் ஒரு காரியத்துக்கு முதன்மையாயிருக்கவேண்டும் என்றும் சொல்லலாம். அறி வுத் திறமையும் செயல் திறமையும் அதன்வழியே உண்டாக வுங் கூடும். இந்த மூன்று வலிமைகளையும் 'இச்சா ஞான கிரியா சத்திகள்' என்று வேறு பெயர்களால் சொல்லும் போதும், 'இச்சை'யே முதலில் நிற்கிறது.

இதைப்பற்றி ஆசிரியர் திருவள்ளுவரே விளக்கிவிட்டால், அப்புறம் தடையொன்றும் இருப்பதற்கில்லை.

Koviloor Digital Library



"ஆள்வினையும், ஆன்ற அறிவும், எனஇரண்டின்
நீள்வினையான் நீளும் குடி"

என்பது அவர் வாய்மொழி. 'ஆள்வினை' யென்பது முயற்சி. ஊக்கம் முயற்சி என்பவையெல்லாம் விருப்பத்தின் முதிர்ந்த நிலைமைகள். 'நீள்வினை' யென்பது திறமையான செய்கை. மேலே சொன்ன மூவ்வுரங்களையும் இத் திருக்குறள் முறையே எடுத்துக் காட்டுகின்றது. இவற்றால் காரியம் நிறைவேறும் என்றும் விளக்குகிறது.

தக்கவர்கள் இம் மூவ்வுரமும் உடையவர்களாயிருப்பார்கள். அப்படிப்பட்டவர்கள் எடுக்குங் காரியம், அதிலும் திருவள்ளுவப் பெருமானே உறுதி கூறும்போது, நடவாமற் போகுமா? நடக்குமென்றே நம்பலாம்.

## எங்கே நடக்கிறது?

இந்தக் கேள்விக்காக யாரும் சீற்றங் கொள்வதற்கில்லை. கேள்வி என்னவோ ஒருவகையில் வியப்பாகவுந்தான் இருக்கிறது. எங்கும் நடக்கும் மும்முரமான காரியத்தை ஒருவர் எங்கே நடக்கிறது என்று கேட்டால் பின் எப்படியிருக்கும்! இருந்தாலும், மும்முரமாக ஒன்று நடக்கிறது என்றால், எவ்வளவோ ஆவல் இல்லாமல், 'ஆ, எங்கே நடக்கிறது' என்னும் கேள்வி எழுந்திருப்பதற்கில்லை.

இருக்கட்டும்; இந்த அருமையான கேள்விக்கு நாமும் அருமையாகவே விடை சொல்வோம். மும்முரமான காரியம் பெரும்பாலும் எங்குந்தான் நடைபெறுகிறது.

திரு. ஈ. வே. ரா. இப்போது 'திராவிட இந்தியப்' பிரிவினையில் மும்முரமாயிருக்கிறார். 'சனுப் சின்னு' 'முசிலிம் இந்தியப்' பிரிவினையில் மும்முரமாயிருக்கிறார். 'காந்தியார்' வழக்கப்படியே நாட்டின் பொருள் வலிமைக்கும் உரிமைக்கும் இராட்டைத் தொழிலே அடிப்படை என்று கூறிக், கதர்த் தொண்டு செய்வதிலேயே மும்முரமாயிருக்கிறார்.

Koviloor Digital Library



கீழ் நாட்டில் இப்படி என்றால், மேல் நாட்டில், வல்லரசுகள், போர் முயற்சியில் மும்முரமாயிருக்கின்றன.

இப்படி எங்கும் மும்முரமிருக்கும்போது யார்தாஞ் சும்மா இருப்பார்கள். இவற்றையெல்லாம் பார்த்துவிட்டு, உலகியலிற் பழுத்த ஓர் அறிஞர், 'எல்லாம் உலக வாழ்வுக்காகத்தாம்' என்று தாமும் மிக மும்முரமாக ஒரு முடிவுக்கு வருகிறார்.

'அப்படிச் சொன்னால் விளக்கமாயில்லை; 'உலக வாழ்வு' என்றால் ஒரே தொகையாக இருக்கிறது. உலக வாழ்வாவது: ஒன்று வீரம்; மற்றொன்று காதல்; இவ்வளவே. ஆதலால், எல்லாம் வீர வாழ்வாகவும் காதல் வாழ்வாகவுமே இருக்கின்றன என்று வகைப்படுத்திச் சொல்லவேண்டும்' என்று ஓர் இலக்கியப் புலவர், எதையும் வகை தொகையாகச் சொல்வதில் மிக மிக மும்முரங் கொள்கின்றார்.

சொல்லிவைத்தாற்போலச், 'செருமன்' வல்லரசை நடத்தும் 'எர் இட்லர்' காதலே கொள்ளாமல் அரசு நடத்துகிறார் என்பதும், சில நாளைக்குமுன் 'எட்டாம் எட்வருடு' மன்னர் அரசையே துறந்து காதலை மேற்கொண்டார் என்பதும் 'ஒன்று காதல் மற்றொன்று வீரம்' என்று பாகுபாடு செய்துகொண்டிருக்கும் இந்த இலக்கியப் புலவரின் மும்முரமான பாகுபாட்டுக்கு ஒருவகையில் அரண் செய்வனவாகவே இருக்கின்றன!

இதற்குள் வேறொரு குரல்! அது, தெளிவாகவும் இனிமையாகவும் அமைதியாகவுமே கேட்கிறது. ஆனாலும், உள் மும்முரம் மிகுதியாயிருக்கிறது.

'தொகையை வகை செய்துகொண்டால்மட்டும் போதாது. அதனை இன்னும் விரிவாகவும் விளக்கிக்கொள்ளவேண்டும். காதலும் வீரமும் என்றால் என்ன? முரட்டுப்போக்கில் நடக்கும் நடக்கைகளுக்கு அந்த நல்ல பெயர்கள் பொருந்தமாட்டா. அங்கிலையில், 'காமம்' 'முரடு' என்னும் பெயர்

Koviloor Digital Library



களே அவைகளுக்குச் சரி; உயிர்களுக்கு உண்டாகும் இந்த இருவகையான உணர்ச்சிகளும் கலையினிமைகளோடு கூடி இனிய உணர்ச்சிகளாக நடைபெறும்போதுதான், அவை, 'காதல்' 'வீரம்' என்று நல்ல பெயர் எடுக்கின்றன. கலையினிமை இல்லாவிட்டால் உலகமாவது! வாழ்வாவது! வாழ்வில் சுவையாவது!'

என்பதே அந்தக் குரல். அக் குரல் யாரிடமிருந்துதோன்றியிருக்கப்போகிறது! ஒரு கலைப்புலவரிடமிருந்துதான் தோன்றியிருக்கவேண்டும்.

நடனம்

அந்தக் கலைக்குரல் கேட்டதோ இல்லையோ, ஆ, உடனே, கலீர் கலீர் என்று அழகிய திருவடிச் சிலம்பு இன்னிசை எழுப்ப, இளைய சிவந்த ஞாயிறுபோல அருள்மேனி விளக்கம் நல்லொளி வீச, ஓர் இன்ப நடனம், அருகே நிகழத் தொடங்கிற்று.

கீழ்நாடு மேல் நாடு என்னும் நினைவெல்லாம் இப்போது இல்லை. ஒரே தேவ நாடாயிருக்கிறது. ஒரே தேவ நடனமாயிருக்கிறது!

அந்த அம்பலத்து ஆட்டம் ஆ, என்ன அழகு! என்ன அழகு! அந்த ஆட்டத்தில் என்ன ஒழுங்கு! என்ன ஒழுங்கு!

அம்பலத்தரசின் அந் நடனக் காட்சியில் என்னென்னவோ விளங்கின. கருத்து இன்னது, அதன் இயக்கம் இன்னது, அந்த இயக்கம் இயங்குகின்ற முறை இன்னது என்பனவெல்லாம் நன்கு விளங்கின.

'கருத்து' என்பது இயல்பான உணர்வு; அதன் 'இயக்க'மாவது, அவ்வுணர்வு இயல்பாகவே இனிமையாக இயங்குவது. 'இயங்கும் முறை' என்பது, அங்ஙனம் இனிமையாக இயங்கும் இயக்கம் அம் முறைமை தவறாமல் ஒழுங்காக நிகழ்ந்துவருவது.

Koviloor Digital Library



இந்த உணர்வும் இனிமையும் ஒழுங்குமே 'வாழ்வு' என்பது. ஆண்பெண் இயற்கை உணர்வுகள் 'உணர்வு' என்பதில் அடங்கும். அவை கலையினிமையோடு வீரமாகவும் காதலாகவும் நடைபெறும்போது, 'இனிமை' என்பதில் அடங்கும். அந்தக் காதலும் வீரமும் அற உணர்வோடு நிகழும்போது தான் வாழ்வு கமழ்கின்றது. ஆகவே, அந்த அறவொழுக்கமே இங்கு ஒழுங்கு என்பதில் அடங்கும்.

அடங்கவே, இன்பம் என்பது இனிமை; பொருள் என்பது உணர்வு. ஒழுங்கு என்பது அறம் என்னும் முடிவும் தானே விளங்குகின்றது. எதுவும் புலப்படும்போது இனிமையாகப் புலப்பட்டு, அப்புறம், அங்ஙனம் புலப்படும்பொருள் இன்னதென்பதும் அதன் ஒழுங்குமுறை இன்னதென்பதும் தோற்றுவிப்பது இயற்கையின் நிகழ்ச்சி. பொருள்கள் தோன்றும் முறை இது. தொல்காப்பியர் "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு" என்றதும் இது கருதியே. ஒழுங்கு இல்லாதபோது பொருளும் இன்பமும் நல்ல நுகர்ச்சிக்கு இடஞ்செய்யாமற் போவதனால், ஒழுங்கின் முதன்மையை வலியுறுத்தக் கருதித், திருவள்ளுவர் அறம் என்பதை முதலில் வைத்து 'அறம் பொருள் இன்பம்' என்றார்.

அப்படியே இருக்கட்டும்; பார்க்குமிடத்தில், எல்லாம் மூவ் வுரங்களாகவே இருக்கின்றன. முன்னே சொன்ன 'விருப்பம்' என்பதுகூட இனிமையின் இயல்புதான். 'அறிவு' என்றது, உணர்வின் வகை. காரியத்திறமை என்றது, ஒழுங்கு. ஆகவே, 'இச்சா ஞான கிரியா சத்திகள்' என்பவை இவ்வினிமையும் உணர்வும் ஒழுங்குமாகவே இருக்கின்றன.

காரியத்தைத் திறமையாக நடத்துவோர் அறவோர்; அவர்களிடத்தில் இந்த மூன்று உரங்களும் இருக்கும். கடைசியிற் கடவுளுக்கும் 'அறவோன்' என்று பெயர் உண்டு. அவன் காரியத்தலைவன் என்பதை அது காட்டுகின்றது. அப்படியானால், அவன் 'நடனம்' என்பது என்ன? நடனம் என்பது காரியந்தான். வேறு என்னவாக இருக்கப்போகிறது! மற்ற இரண்டும் அதனுள் உண்டு.

Koviloor Digital Library



ஒழுங்கு முறையிலேதான் தெய்வத்தன்மை அரும்புகிறது. அதனை மலரவைப்பது உணர்வு. பயன் அளிப்பது இனிமை யியல்பு. இங்ஙனம் ஒழுங்கும் உணர்வும் இனிமையும் இருந் தால் வாழ்வு ஏன் நன்றாயிராமற்போகும் !

ஆ, அம்பலத்தரசின் நடனக் காட்சியில் இந்த மூவ்வுர இயல்புகளும் என்ன அழகாகத் தோன்றி, என்ன அழகாக ஒன்றையொன்று மருவி, என்ன அழகாக இயங்குகின்றன !

## நடனம் வலுக்கிறது !

நடனத்தைப் பார்ப்பவர்கள், உண்மையில் சுவைக்கக் கூடி யவர்களாயிருந்தால், நடனமும் வலுக்கும். வெறுங் காரியமா யிருப்பது அறிவாகவும் விருப்பமாகவும் நிகழ்ந்து மும்முர மாகும்.

நடனம் என்பது இம் மும்முரக் காரியம். உயிரில்லாத பொருள்களிலும் உயிருள்ள பொருள்களிலும் இதன் இயக்கம் எந்த முறைமையில் நடைபெறுகின்றது என்று தெரிந்து சுவைக்கிறவர்களுக்கு, நடனம் மும்முரமாகத்தான் வலுத்துத் தோன்றுகின்றது.

இந்த மும்முர இயக்கம், உயிரில்லாத பொருள்களிடத்தில் ஐம்புல நுகர்ச்சிக்குரிய அழகுகளாய்ப் பரந்து விரிந்து அசை கின்றன. உயிருள்ள பொருள்களிடத்தில், அவ்வழகுகளோடு, அறிவு நுகர்ச்சிக்குரிய உணர்வுகளாகவும் விரிந்து நிகழ்ந்து இயங்குகின்றன. உயிருள்ள பொருள்களிலேயே சான்றோர்க ளிடத்தில், அவ்வழகுகளோடும் உணர்வுகளோடும், மெய் யுணர்வு நுகர்ச்சிக்குரிய அறவொழுக்கங்களாகவும் நிகழ்ந்து பொலிந்து துளும்புகின்றன.

உலகமெல்லாம் இங்ஙனம் மும்முரமாக நிகழும் நடனக் காட்சியைச் சுவையுணர்வு உடையவர்கள் எங்குஞ் சுவைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

எல்லா இடங்களையும்விடத் தமிழ்நாட்டிலேதான் நட னம் மும்முரங் கொள்கின்றது. ஏனென்றால், சுவைக்கக் கூடி

Koviloor Digital Library



யவர்கள் இங்கே மிகுதியாக இருக்கவேண்டும் என்று தெரிகிறது.

எப்படி? தமிழர்கள் இந்த இயற்கை நடனத்தில் மூவ்வுரங்களைக் காண்கிறார்கள். தமிழர்கள்மட்டும் தமது தமிழ் மொழியை 'இயல் இசை நாடகம்' என்று வகுத்துக்கொண்டிருப்பதே ஒருவகையில் அதற்குச் சான்றாய் நிற்கின்றது.

அம்பலத்தரசின் நடனத்தில் இந்த மூன்றும் உண்டு. இயல் என்பது உணர்வு. இசை என்பது இனிமை. நடனம் என்பது ஒழுங்கு. குழந்தைகள் ஒருவருக்கொருவர் நடிப்புக் காட்டிக்கொள்ளும்போது, 'என்ன ஒழுங்கு காட்டுகிறாய்' என்று சொல்லுவது வழக்கம். அவிநயம் ஓர் ஒழுங்கு முறையோடு கூடியது என்பதை அது நினைவூட்டும்.

பொருள்களை அறிவாக எடுத்துக்காட்டுவது இயற்றமிழ்; அவற்றை இன்பத்தோடு எடுத்துக் காட்டும்போது, இசை தானே கூடி இசைத்தமிழ் ஆகின்றது. அவற்றை ஒழுங்கு முறைமையோடு காட்டும்போது, அவிநயமும் கூடி நாடகத்தமிழாகும். மூன்றுங் கூடிய நாடகத்தமிழ்தான் இயல்பானது.

நாடகநூலிற், குறிப்பு சத்துவம் அவிநயம் என்று சொல்லுவது, முறையே கருத்து இயக்கம் முறைமை என்னும் இம்மூவ்வுரங்களையேயாம்.

அம்பலத்தரசின் மூவ்வுரங்களை அப்படியே முத்தமிழ்ச் செல்வியாகக் காணுந் தலைமையைத் தமிழ்மக்கள் உடையவர்களாயிருக்கிறார்கள்.

உலகத்தில் இயற்கையாக நடைபெறுகின்ற வாழ்வின் இயக்கமானது இங்ஙனமெல்லாம் பலபடியாக மூவ்வுரங்களாய் நடைபெறுகின்ற வகைமையினையே தமிழ்மக்கள் முத்தமிழாகக் கண்டனரென்றால், தமிழ்மக்களை இயற்கையைப் பெரிது சுவைப்பவர்கள் என்பது எவ்வளவோ வலிவாகத்தானே விளங்குகின்றது!

பொருட் புலவன், கலைப்புலவன், மெய்யுணர்வுப் புலவன் என்னும் முத்தமிழ்ப் புலவரும் இம் மூவ்வுரவகையினரே

Koviloor Digital Library



யாவர். மெய்யுணர்வுப் புலவன் உண்மையில் நாடகப் புலவனேயாவன். சான்றோர்களைப் 'பித்தர்கள்' என்றது மற்றெதற்கு!

முறையே இவர்கள் அரசியலரங்கம் கலையரங்கம் அருளரங்கம் என்னும் மேடைகளில் நடிப்பதற்குரியர்.

எல்லோருடைய இயல்புகளும் முத்தமிழிலக்கியங்களாய் அமைந்து நிகழ்கின்றன. முத்தமிழிலக்கியத்தைப் பொதுவாகத் தமிழ் இலக்கியம் என்றாலும் போதும்.

சுருங்கச் சொன்னால், தமிழ்ச் செல்வியின் மும்முரக்காரியமே எங்கும் நடைபெறுகின்ற உலககாரியம். எங்கும் நடைபெறுகின்ற உணர்வு இனிமை ஒழுங்குகளெல்லாம்—அறிவு கவர்ச்சி முறைமைகளெல்லாம்—கருத்து இயக்கம் நடைமுறைகளெல்லாம்—பொருள் இன்பம் அறங்களெல்லாம்—அரசியல் கலை மெய்யுணர்வுகளெல்லாம், தமிழ்ச்செல்வியின் திருவடிச் சிலம்புகளில் நல்ல பரன்மணிகளாய் அமைந்து இசைக்க இசைக்க, அவள் நடனம் மேலுமேலும் வலுப்பெற்று நிற்கின்றது!

உலகமே நாடக அரங்கம்; அதன் மேடையே தமிழகம்; எல்லாரும் உணர்வும் இனிமையும் ஒழுங்குங்கொள்ளச், 'செந்தமிழ்ச் செல்வி'யின் திருநடனம் அம் மேடையின்மேல் நல்ல மும்முரங் கொள்கின்றது!



Koviloor Digital Library



# மதுரை

(தென் இந்தியாவின் பழைய நகரம்)

" வீர. சோம. வீரப்பன் "

தென்னிந்தியாவின் சிறந்த பழைய புகழ்வாய்ந்த நகரங்களில் மதுரையும் ஒன்று. இது பாண்டி நாட்டின் அரசிருக்கை. மதுரை உண்டாகு முன்பு கொற்கை, மணலூர் முதலிய ஊர்கள் பாண்டியர்களுடைய தலைமை ஊர்களாகக்கொள்ளப்பட்டு வந்தன. அக்காலத்தில் இப்பொழுது மதுரை இருக்குமிடம் ஒரு பெரிய கடப்பங்காடாகக் கிடந்தது. ஒரு காலத்தில் மணலூரிலிருந்து பாண்டி நாட்டை ஆண்ட ஒரு பாண்டியமன்னன் கடப்பங்காட்டை வெட்டித் திருத்தி ஊர் உண்டாக்கினன். மதுரையை உண்டாக்கிய பின்பும் பாண்டிய இளவரசர்கள் மணலூரிலிருந்து ஆட்சி செய்துவந்திருக்கின்றனர். இரண்டு ஆறுகள் ஒன்று கூடும் துறைமுகத்தில் இவ்வூர் அமைந்திருந்ததனுல் 'கூடல்' எனப் பெயரிடப்பட்டது என்றுஞ் சொல்வார்கள்.

## கோயில்

இங்கே கோயில் ஒன்று உண்டு. அது சிவபெருமான் கோயில். இங்குள்ள சிவபெருமானுக்குச் சோமசுந்தரர்என்றும் அம்மனுக்கு மீனுட்சி என்றும் பெயர்கள் வழங்குகின்றன. பின் வந்த அரசர்களால் மேலு மேலும் விரிவாகக் கட்டப்பட்டு இக்கோயில் இப்போது சிற்பக்கலைக்கு எடுத்துக்காட்டாகப் பொலிந்து, மதுரைக்கு ஒப்புயர்வில்லாத வனப்பைக் கொடுத்துக்கொண்டிருக்கின்றது.

இக்கோயிலின்பொருட்டே இவ்வூர் முதன்முதலில் உண்டாக்கப்பட்டது. இக்கோயில் ஊருக்கு நடுவாகி வானளாவிய கோபுரம் வாயில்களோடுகூடி வீற்றிருப்ப அதனைச் சூழப் பற்பல தெருக்கள் வளைவாகவும் நீளமாகவும் செல்லுதலால், அறிஞர் இவ்வூரைக் கேசரம் நடுவே தோன்றி மலர்ந்த தாமரைப்பூவோடு உவமை சொல்லி மகிழ்வர். இதனைச் சூழ்ந்து ஆறென்று செல்லுகின்றது. அதற்குப் பெயர் வையை. இது மதுரையின்

Koviloor Digital Library



இயற்கை அழகைப் பன்மடங்காகப் பெருக்கிவிட்டது. வையை யினாலும் கோயிலினாலும் மதுரை வெளியூரிலிருந்து வருவோர்க் குக் கண்கொள்ளாக் காட்சிவிருந்தாகத் திகழ்கின்றது. இவ் வழகைக் கண்டு களித்தற்பொருட்டுப் பல நாடுகளினின்றும் வெளியூரார் ஆண்டுதோறும் வந்து போகின்றனர். இதனால் மதுரைக்கு உலகத்தில் நல்ல புகழ் ஏற்பட்டிருக்கின்றது.

## வாணிபம்

இது பாண்டியருடைய அரசிருக்கையாக இருந்த காலத்திலே பற்பல வாணிபங்களுக்குப் பெயர் பெற் றிருந்தது. சாவா, சுமத்திரா, சிங்களம் முதலிய கிழக்குத் தீவு களிலிருந்தும் வணிகர்களும் வணிகப் பொருள்களும் இறங்கி மதுரையில் நிரம்பியிருந்த துண்டென்று ஆராய்ச்சியாளர்கள் சொல்லுகிறார்கள். இங்கிருந்தும் பல வாணிபப்பொருள்களை வண்டிகளிற் கொண்டுபோய் மரக்கலங்களிற் சேர்த்துக் கடல் வழியாக மேனாடு கீழ்நாடுகளுக்கு அனுப்பி விற்பனைசெய்திருக் கிறார்கள். இவைகளைப்பற்றிய குறிப்புகள் பழைய தமிழ் நூல்களிலுங் காணப்படுகின்றன. சந்தனக்கல், அகில் முதலிய வட இந்தியப் பொருள்களும் இங்கு விலைக்கு வந்து நிரம்பி இருந்தன. இங்குப் பழைய உரோம் நாணயப் புதையல்கள் ஆராய்ச்சியாளர்களாற் கண்டெடுக்கப்பட்டுக் காட்சிக்கு வைக் கப்பட்டிருக்கின்றன.

பாண்டிய மன்னர்கள், கடற்கரையிலிருந்த தம் தலைமை ஊர்களை அடிக்கடி கடல் பொங்கிவந்து அழித்துவிடுதலால், பிற்காலத்தில் உள்நாட்டில் வையை ஆற்றங் கரையிலே இம் மது ரையை அமைத்தார்கள் எனவுஞ் சொல்வர். ஆகவே, இக்கா லத்து இங்கிலாந்திலே தேமசு ஆற்றங்கரையிலுள்ள இலண்டன் மாநகரம்போன்றிருந்தது அக்காலத்து வையை ஆற்றங் கரை யின் மதுரை எனலாம். இங்கிருந்து ஆண்ட பாண்டிய மன்னர் களின் பெரிய புகழும் இவ்வூரை உலகம் புகழும்படி செய்து விட்டது. இவ்வூரின் வாணிபம், அரசியல், கல்விமுறை, ஊரமைப்புத் திறம் முதலியன, கோவலன் வரலாறாகிய சிலப் பதிகாரத்தில் விளங்கக் கூறப்பட்டிருத்தலைப் பலரும் அறிவர்.

Koviloor Digital Library



இது பல புராணப் புகழும், வரலாற்றுப்புகழும், காவியப் புகழும், பிரபந்தப் புகழும் அளவிறப்பச் சூடிப் பெருமிதம் பெற்றிருக்கின்றது. இதனைப்பற்றிய தனிப்பாடல்களும் பல. இது செல்வத்திற்குப் பெயர்பெற்றிருந்ததுபோலவே கல்விக் கும் உலகத்து வேறு எந்த நகரத்திற்கும் கிடைக்காத பெரும் பெயரைப் பெற்றிருந்தது.

## தமிழ்ச் சங்கம்

இங்கிருந்த பாண்டிய மன்னர்கள் இங்குச் சிறந்த தமிழ்ப் புலவர்களை வரவழைத்து அவர்களுக்கு வேண்டும் உதவிகளைச் செய்து தமிழ்ச் சங்கம் அமைத்துப், பற்பல கலைகளைத் தோற்றுவித்துத் தமிழ்மொழியை வளம்பெறச்செய்த நிகழ்ச் சியை உலகமறியும். மதுரையிலிருந்து உண்டான தமிழ் நூல் கள் பல. அவற்றுள் சிலவே இப்பொழுது உள்ளன.

திருக்குறளாசிரியர் திருவள்ளுவரும் இம் மதுரையை ஊராகக் கொண்டிருந்தாரென்பதற்குச் சான்றுளது. இன் னும், நக்கீரர் மதுரைக் கூடலூர் கிழார் முதலிய சங்கப் புலவர் சிலரும் மதுரையிற் பிறந்தவர். இச் சங்கத்தைக் கடைச்சங்கமென்றும் சொல்லுப. கடைச் சங்கம் உண்டா வதற்குமுன் முதற் சங்கமும் இடைச் சங்கமும் கடல் கோட் பட்டுப் போன ஊர்களில் அமைந்திருந்தன.

பிற்காலத்துக் கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, ஔவை யார், பொய்யாமொழிப்புலவர் என்னும் புலவர் பெருமக்களை யும் நன்கு வரவேற்று உவந்து பரிசளித்துத் தமிழ் வளர்த்து வந்திருக்கின்றது மதுரை. அண்மையில் குமரகுருபர சுவாமி கள், காளமேகப் புலவர், அதிமதுரக்கவிராயர் முதலிய தமிழ்ப் புலவர்களும் மதுரை நாயக்க மன்னரைச் சார்ந்து தம் கல்வி ஆற்றலை உலகம் பரவச்செய்திருக்கின்றனர்.

இவ்வூரைப்பற்றிப் பாடுகின்ற புலவர்களெல்லாம் மதுரை யைப் புகழும்பொழுது தமிழும் தென்றலும் மணக்கும் மதுரை, முத்தமிழ் மதுரை, செந்தமிழ் மதுரை, தமிழ் மதுரை என்று சொல்லுவதிற் பெருவிருப்பமுடையவர்கள். இது பற்பல சமய

Koviloor Digital Library



வாதிகளும் தங்கள் சமயங்களைப் பரப்புதற்குரிய இடமாகவும் இருந்தது.

## சைவத் தலைநகர்

கி. பி. ஆரும் நூற்றூண்டில் இங்கிருந்த சமணசமயம் சோழ நாட்டிலிருந்து வந்த திருஞானசம்பந்த நாயனுரால் வாதத்தில் தோல்வியுற்றது.

அப்பொழுது இதனை ஆண்ட கூன் பாண்டியன் என்பவன் திருஞானசம்பந்தரது திருவருளால் சைவசமயத்திற்கு மீண்டு, கூன் நீங்கி நெடுமாறன் என்னும் பெயர்பெற்றுப் பாண்டி நாட்டில் சைவசமயம் பரவச் செய்தான். இவன் அக்காலத்துத் திருநெல்வேலியில் நிகழ்த்திய ஒரு பெரியபோரில் வெற்றிபெற்றவனுகவும் புகழப்படுகின்கிறுன். நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னரும் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். இவர் சைவசமயம் மீளுவதற்குக் காரணமாய் இருந்தவர். இவருடைய மனைவியார் மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறை நாயனுருமாவார். இவர்களுக்குப் பின் மதுரையில் சைவசமயம் மேலோங்கி நின்றது.

பாண்டியன் நெடுமாறனுக்கு முன்பு, அரிமர்த்தன பாண்டியன் என்னும் ஒருவன் காலத்தில், திருவாசகமும் திருக்கோவையாரும் பாடியருளிய திருவாதவூரடிகள் என்னும்மாணிக்கவாசகர் பௌத்த சமயத்தை வென்று சைவசமயத்தை நிலைநாட்டினுர்.

நெடுஞ் செழியன் என்னும் பாண்டியன் கோவலனைக் கொலை செய்ய நேர்ந்த இடம் இம் மதுரையே. அதற்குப் பின் இது கோவலன் மனைவி கண்ணகியினுடைய தெய்வத்தன்மையால் அழிந்து மறுபடியும் புதுப்பிக்கப்பட்டிருக்கிறது.

இடையே சில காலம், கன்னட நாட்டினின்றும் படையெடுத்து வந்த களப்பிர மன்னர்களாற் கைக்கொள்ளப்பட்டிருந்து, பின் முருக நாயனுரென்னுஞ் சிவனடியாரால் மீளவும் பாண்டிய மன்னருக்குக் கிடைக்கப்பெற்றது. அப் பாண்டியரது வேண்டுகோளால், அம் முருக நாயனுரும் சில காலம்

Koviloor Digital Library



மதுரையை ஆண்டு சைவசமயத்தை வளர்த்தார். சோழர், பல்லவர் முதலிய மன்னர்களும் இம் மதுரையைக் கைக் கொண்டிருந்தா ராயினும் பாண்டிய மன்னர்களால் மீண்டும் மீட்கப்பட்டிருக்கின்றது.

## நாயக்க மன்னர்

மேற்கூறியவாறு மதுரை பல படையெடுப்புக்களையும் தப்பிப் பிழைத்திருக்கின்றது. பாண்டிய மன்னர்களுள் இறுதியாக மதுரையை ஆண்ட பாண்டியன் பெயர் சந்திரசேகர பாண்டியனென்பது. இவன் காலம் பதினாறும் நூற்றாண்டின் முற் கூறு. சந்திரசேகர பாண்டியன் தன்னை எதிர்த்த சோழ மன்னனை வெல்லுதற்பொருட்டு அக்காலத்து ஆந்திர நாட்டு விசய நகரப் பேரரசனுன நாயக்க மன்னனைப் படைத் துணை வேண்டி நின்றான். பின்பு நாயக்க மன்னனது கட்டளையால் அவன் படைத்தலைவன் நாகம நாயக்கன் படையெடுத்து வந்து பொருது சோழனை வென்று மதுரையைத் தானே கைப்பற்றி ஆண்டு வந்தான். இது தெரிந்த விசயநகர நாயக்க மன்னன், நாகம நாயக்கன் மகன் விசுவநாத நாயக்கனைப் படைத்தலைவனுக விடுத்து, நாமக நாயக்கனைச் சிறை செய்து மதுரையைக் கைப்பற்ற, விசய நகர ஆட்சியின் கீழ் விசுவநாத நாயக்கனே மதுரையை ஆண்டு வந்தான். இது நிகழ்ந்தது 1559-ல்.

இவன் காலத்திலிருந்து மதுரை, நாயக்க மன்னர்களின் ஆட்சியின்கீழ் இருந்துவந்தது. மதுரையை ஆண்டுகொண்டு வந்த நாயக்க மன்னர்கள் இலங்கையைக் கண்டியிலிருந்து ஆண்டு வந்த நாயக்க மன்னனையும் அவன் படைஞராகிய சிங்களர் போர்த்துக்கேசியரையும் பொருது வென்று அரசனைச் சிறைப்படுத்திவிட்டுத், தங்களைச் சேர்ந்த ஒரு நாயக்கப் படைத்தலைவனை 'விசயபூபால மகாராசா' என்னும் பெயர் சூட்டிக் கண்டியை ஆண்டுவருமாறு ஏற்படுத்தினார்கள். பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிழக்கிந்தியக் கம்பெனியார் மதுரையைக் கைக்கொள்ளப், பிறகு இந்நகர்

Koviloor Digital Library



ஆங்கில ஆட்சியோடு இணைக்கப்பட்டு அதுமுதல் ஆங்கில ரால் ஆளப்பட்டுவருகின்றது.

## முடிபு

மதுரையைப்பற்றி ஆங்கிலேயரும் பல வரலாற்று நூல்கள் வெளியிட்டிருக்கிறார்கள். இங்குள்ள சோம சுந்தரக் கடவுளுக்கு ஆண்டுதோறும் சித்திரைத் திருவிழா நடைபெறும். அப்பொழுது அளவிறந்த மக்கள் கூடும் காட்சி ஒவ்வொருவரும் பார்த்து இன்புறத்தக்கது. இவ்வூரில் சோம சுந்தரர் ஆலயமன்றி அழகர் கோயில் என்னும் திருமால் கோயிலும் ஒன்றிருக்கின்றது. அதுவும் நல்ல சிற்ப முறையில் அமைக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டு கோயில்களும் முறை யே நாயன்மார்களாலும் ஆழ்வார்களாலும் பாடல் பெற்றுள் ளன. மதுரையில் வெளியூரார் கண்டு களிப்புறத்தக்க இடங் களில், சோமசுந்தரர் ஆலயம், அழகர் கோயில், திருமலை நாயக்கன்மால், வண்டூர்த் தெப்பக்குளம் என்பன முதன்மை. இவ்வூர் இப்பொழுது புதிய முறையில் சீர்திருத் தஞ் செய்யப்பட்டு வருகின்றதனால் இதற்கு முன்பு இருந்த சில குற்றங் குறைகள் இப்பொழுது நீங்கிக்கொண்டு வரு கின்றன.



Koviloor Digital Library



# என்ன விந்தை !

"குழந்தை"

## தெறித்தது !

உலகம் தோன்றிப் பலகோடி ஆண்டுகள் ஆயின. நெடுங் காலத்திற்குமுன் பூமி, உயிர்கள் வாழ முடியாதபடி நெருப் புப் பிழம்பாக இருந்தது. பூமியும் அதனைச் சார்ந்த கோள் களும் ஒருகாலத்தில் ஞாயிற்றின் பகுதிகளாகவே இருந்தன.

ஞாயிறு இப்பொழுது இருப்பதைக் காட்டிலும் பெரிதாக வும் சூடுள்ளதாகவும் இருந்தது. அது வானில் சுழலும்போது அதிலிருந்து தெறித்து விழுந்த துண்டுகள் அதனையே சுற்றிவரத் தொடங்கின. பூமியும் இங்ஙனம் தெறித்து விழுந்த துண்டு களில் ஒன்று.

அக்காலத்தில் பூமி மிகவும் வெப்பமாக இருந்தது. அத னைச் சுற்றிலும் சூடான காற்றும் வளிகளும் நிறைந்திருந்தன.

பூமி நெருப்பு வடிவமாக இருந்தபொழுது மக்களாவது மற்ற உயிர்களாவது அதில் வாழ்ந்திருக்க முடியாது.

ஞாயிற்றின் ஒருபகுதி உடைந்து எங்ஙனம் பூமி ஆயிற்றோ அங்ஙனமே பூமியின் ஒரு பகுதி உடைந்து திங்கள் ஆயிற்று. அமெரிக்காவுக்கும் ஜப்பானுக்கும் இடையிலுள்ள பகுதி யிலிருந்தே திங்கள் தோன்றியிருக்கவேண்டுமென்று அறிஞர் கருதுகின்றனர். இப் பகுதியே 'பசிபிக் கடலாக' மாறியுள்ளது.

## குளிர்ந்தது !

பூமி ஞாயிற்றைவிட மிகவும் சிறியது. ஆதலால் அது விரைவில் குளிர்ச்சியடையத் தொடங்கிற்று.

ஞாயிற்றின் வெப்பமும் நாளுக்கு நாள் குறைந்துவரு கின்றது. ஆயினும் அது பூமியைப்போல் ஆவதற்குப் பலகோடி ஆண்டுகள் செல்லும்.

பூமி குளிர்ச்சியடைவதற்கே நெடுங்காலம் ஆயிற்று. அதன், மேற்பக்கமட்டும் குளிர்ந்து உள் பக்கம் மிகுந்த வெப்பத்

Koviloor Digital Library



துடனேயே இருந்துவந்தது. இப்பொழுதுங்கூட நாம் சுரங்கத்தினுள் இறங்கினால் கீழே போகப்போக வெப்பம் மிகுந்திருப்பதைக் காணலாம். பூமியின் நடுவில் இன்னும் நெருப்புக்குழம்பு இருக்கிறது. சில வேளைகளில் எரிமலைகளின் வாயிலாக இத் தீ வெளிப்படுகின்றது.

திங்கள் பூமியைவிட மிகவும் சிறியதாதலால், அது முழுதும் குளிர்ந்துவிட்டது. திங்கள் மண்டிலத்தில் பனிமலைகளும் பனிக்கட்டிகளும் நிறைந்து கிடக்கின்றன. இதனாலேதான் திங்கள் நமக்குக் குளிர்ச்சியும் இன்பமும் கொடுக்கிறது.

## பொழிந்தது !

பூமி குளிர்ச்சியடைந்தபொழுது காற்றிலுள்ள நீராவி முழுவதும் குளிர்ந்து பெருமழையாகப் பொழிந்தது. இங்ஙனம் மழை ஓயாது பெய்ததால் பூமியிலிருந்த பள்ளங்களெல்லாம் நிரம்பிப் பெரிய கடல்கள் உண்டாயின. இதற்குப் பின்பே பூமியில் உயிர்கள் வாழ ஏதுவாயிற்று. "நீரின்றி அமையாது உலகம்" என்பது இதனால் நன்கு விளங்கும்.

## எழுந்தது !

உலகத்தில் இருக்கும் எல்லா உயிர்களும் ஒரேகாலத்தில் தோன்றியிருக்க முடியாது. முதலில் எலும்பு, ஓடு முதலியன இல்லாத பஞ்சுபோன்ற ஒருவகை மீன் தோன்றியது. இதன்பின் கிழிஞ்சல் மீனும், நண்டுகளும், புழுக்களும் உண்டாயின. இந்த உயிர்கள் தோன்றிப் பலகோடி ஆண்டுகளுக்குப்பின்பே மக்கள் தோன்றியிருக்கவேண்டும்.

மீன்கள் தோன்றிய காலத்தில் பூமியில் எங்கே பார்த்தாலும் சதுப்பு நிலங்கள் மிகுதியாக இருந்தன. ஆகவே, கடலில் வாழ்ந்த உயிர்களில் உரத்ததோலுடையவை நிலத்தில் ஏறி வாழத் தொடங்கின. கால நிலைக்கு ஏற்றபடி உயிர்கள் தம்மை மாற்றிக்கொள்கின்றன. அங்ஙனம் தமது வாழ்க்கையை மாற்றி யமைத்துக்கொண்டால்மட்டுமே அவை உயிர்வாழ முடிகின்றது. தம் நிலைமையை மாற்றிக்கொள்ள முடியாத உயிர்கள் அழிந்துவிடுகின்றன.

Koviloor Digital Library



முதலில் நீர்வாழும் உயிர்கள் தோன்றின. அதற்குப்பின் காய்ந்த நிலம் மிகுதியானதும் தவளை, முதலை போன்ற உயிர்கள் உண்டாயின. இவை நீரிலும் நிலத்திலும் வாழக்கூடியவை. பின்பு நிலத்திலேயே வாழும் உயிர்களும் வானத்தில் பறக்கும் உயிர்களும் தோன்றின.

## வளர்ந்தன !

சிற்றுயிர்கள் பல்வேறு மாறுதல் அடைந்து நாளடைவில் பேருயிர்கள் ஆயின என்றும், கோடிக்கணக்கான ஆண்டுகளாய் உயிர்கள் வளர்ச்சியுற்று அதன்பின் மக்கள் வடிவாக அமைந்தன என்றும் ஆராய்ச்சியாளர் அரிதாகக் கண்டிருக்கின்றனர். நமது வாழ்நாள் மிகவும் குறைந்தது. ஆதலால், இம் மாறுபாடுகளை நாம் நேரில் காணமுடிவதில்லை. உலகமும் உயிர்களும் இடைவிடாமல் திருத்தி அமைக்கப்படுகின்றன.

நிலத்தில் முதல் முதலில் மிகப்பெரிய பாம்புகளும், பல்லிகளும், முதலைகளும் தோன்றின. இவை ஒவ்வொன்றும் நூறு அடி நீளத்திற்குமேலும் இருந்தன. இவற்றின் எலும்புக்கூடுகளைப் பொருட் காட்சிச் சாலைகளிற் காணலாம். பின்பு, குட்டி போட்டுப் பால் கொடுக்கும் விலங்குகள் தோன்றின. இவ் விலங்குகள், அக்காலத்தில் மிகப் பெரியனவாய் இருந்தன. மனிதன் குரங்கின்வழியில் தோன்றியிருத்தல் வேண்டுமென்று அறிஞர் கருதுகின்றனர். முன் காலத்தில் மனிதன் குரங்கைவிடச் சிறிது உயர்ந்தவனாக இருந்திருப்பான்.

## என்ன விந்தை !

குரங்கு வளர்ச்சியடைந்து நாளடைவில் மனிதனாக மாறியிருக்கிறது. ஆகவே நாம் குரங்கின் உடன் பிறந்தோர் என்பதை என்றும் மறக்கக்கூடாது. படைப்பின் வியத்தகு தோற்றங்களைக் காணும்போதெல்லாம் இறைவனது முழுமுதற் பெருமை எவ்வளவு வெளிப்படுகின்றது !

---

Koviloor Digital Library



# வீரச் சுவை

"ந. மு. வேங்கடசாமி நாட்டார்"

சுவை என்னும் தமிழ்ச் சொல்லும், 'ரஸம்' என்னும் வட சொல்லும் ஒரே பொருள் உடையன. நாவினுல் நுகரப் படும் சுவை ஆறு வகைப்படும் என்பர். செவியால் நுகரப் படுவன 'குண, அலங்காரங்க'ளாகிய சொற்சுவைகளும், ஒன்பது வகையான பொருட்சுவைகளும் ஆம். நாவாற் சுவைத்து உண்டவை அப்பொழுதே அற்றுவிடும். செவியாற் சுவைத்து உண்டவை உள்ளத்தே எப்பொழுதும் நிலைபெற்று இன்பம் பயக்கும்.

கேள்வியின் சிறப்பைக் கூற வந்த தெய்வப் புலமைத் திருவள்ளுவர்,

"செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்"

என்றார். இதில் பல அரிய கருத்துக்கள் அடங்கியுள்ளன. மற்றும், அவர் செவியால் நுகரும் சுவையையுணராது வாயால் நுகரும் சுவையைமட்டும் உணர்வாரைக் குறித்து,

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்?"

என மிகக் கடுமையாக இடித்துரைத்தமை கருதத்தக்கது.

இனிப் பொருட் சுவை ஒன்பதாவன: நகை, அவலம், இழிப்பு, வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை, சமநிலை என்பன. இச்சுவை யுணர்வுகள் மேற்குறித்த செவி வாயி லாக அன்றிக் கண் வாயிலாகவும் நிகழாநிற்கும்.

பித்தன் ஒருவன் உடல் முழுதும் சாம்பல் பூசிக், கிழிந்த துணிகளையும் சுள்ளிகளையும் தொடுத்து. இடையில் உடுத்தி, அலரிப்பூவும், எருக்கம்பூவும் கோத்து மார்பில் அணிந்து, அழுதலும், தொழுதலும், விழுதலும், எழுதலும் முதலியன செய்து வருதலைக் காணுமிடத்தும், அவன் ஒன்றோடொன்று

Koviloor Digital Library



இயையாத சொற்கள் பலவற்றைப் பேசுதலைக் கேட்குமிடத்தும் நகை நிகழ்கின்றது. நாடக வரங்கில் ஒருவன் பித்தனாக நடிக்குங்கால் அவனது கோலத்தையும் செய்கையையும் காண்டலாலும், அவன் சொற்களைக் கேட்டலாலும் நகை என்னும் சுவை நிகழும். மற்றும் அவன் இயல்புகளை அமைத்து நல்லிசைப் புலவர் ஒருவர் பாடிய பாட்டினைக் கேட்டலாலும் அச் சுவை நிகழும். ஏனைச் சுவைகளும் இவ்வாறே விழியானும் செவியானும் நுகரப்படுவனவாகும். இவ்விரு பொறிகளாலும் திட்பமுற உணரும் நுட்பவுணர்வுடையார்க் கன்றி ஏனையோர்க்கு இச்சுவைகள் உணர்தற்கரியன என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ளார்.

மேற்குறித்த ஒன்பது சுவையுள் சமனிலையாவது சாந்தம். அஃதாவது ஐம்பொறியும் அடங்கப்பெற்றுப் பிறர் வையினும் வாழ்த்தினும் வாளாற்போழினும் தாளில் வணங்கினும் மனந் திரியாது அவற்றைச் சமமாகக் கொண்டு நிற்கும் நிலைமை. அஃது உலகியலின் நீங்கினார் பெற்றியாகலின் ஏனைய எட்டுமே காப்பியங்களிற் பயின்று வருவனவாகும்.

சுவை என்பது மெய்ப்பாடு என்றும் கூறப்படும். மெய்ப்பாடாவது "உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோராற்றால் வெளிப்படுதல்" என்பர் பேராசிரியர். புறத்து வெளிப்படுவது அகத்துணர்வே. ஆகலின் சுவைக்கு மெய்ப்பாடு என்னும் பெயர் பொருந்தியதே. ஏறக்குறைய நாலாயிரம் ஆண்டுகளின் முற்பட்ட தொல்காப்பியத்திலே மெய்ப்பாடு செய்யுளுறுப்புக்களுள் ஒன்றாகக் குறிக்கப்படுவதோடு, தனியாக ஓர் இயலில் விரித்துரைக்கப்பெற்றும் உள்ளது. வடமொழிவாணர்கள் பிற்காலத்தில் இதனைப் பின்னும் விரித்துரைக்கலாயினர்.

தொல்காப்பியர் ஒவ்வொரு சுவையும் தோன்றுதற்கு மூலமான பொருள்கள் நந்நான்கு கூறுகின்றனர். அவர் வீரம் என்பதனைப் பெருமிதம் என்னுஞ் சொல்லாற் குறிக்கின்றனர். யாவரொடும் ஒப்ப நில்லாது மேம்பட்டு நிற்றலின் பெருமிதம் என்னும் சொல்லால் வீரம் குறிக்கப்படுகின்றது.

Koviloor Digital Library



கல்வி, தறுகண், இசை, கொடை என்ற நான்கும்பற்றிப் பெருமிதம் பிறக்கும் என அவர் கூறியுள்ளார். எனவே போர்ச் செயலிற் காட்டும் ஆண்மையைமட்டுமே அவர் வீரம் எனக் கொண்டிலர் என்பது பெறப்படும். இந்நான்கினுள்ளும் படை வீரமும், கொடை வீரமும் பழைய இலக்கியங்களிற் பலவிடத்து ஒருங்கு கூறப்பட்டுள்ளன.

நலங்கிள்ளி என்ற சோழ மன்னன் பகைவருடன் போர் தொடங்குமுன் கூறுகின்ற வஞ்சினத்தில்,

"மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி
ஈயென இரக்குவ ராயின், சீருடை
முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்;
இன்னுயி ராயினும் கொடுக்குவென்; இந்நிலத்து
ஆற்ற லுடையோர் ஆற்றல் போற்றுதஎன்
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே"

என்று இயம்புகின்றனன். இதில் பகைவராயினர் என் அடியின்கீழ் ஒதுங்கி நின்று 'ஈ' என இரப்பராயின் இந்த அரசாட்சியைக் கொடுப்பது பெரிதன்று. என் உயிரையே வேண்டினும் கொடுப்பேன்" என்பது அவனது கொடை வீரத்தையும், 'என் ஆற்றலையும் துணிபையும் மதியாது இகழ்ந்த அறிவிலியானவன் தூங்கும் புலியை இடறிய குருடன் போலப் பிழைத்து மீளுதல் அரிது' என்பது அவனது படை வீரத்தையும் நன்கு புலப்படுத்துதல் காண்க.

ஒரு காலத்தில் தமிழ்நாட்டு மூவேந்தரும் பாரி என்னும் வள்ளலின் பறம்பு அரணை முற்றுகையிடத் தொடங்கினர். அப்பொழுது பாரியின் ஆருயிர் நண்பராகிய கபிலர் என்னும் புலவர் பெருமான் அங்கே போந்து அவ்வரசர்களை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றார்: "வேந்தர்காள்! நீவிர் மூவிரும் நும் சேனையுடன் ஒருங்குதிரண்டு போர்செய்தீராயினும் பறம்பு நும்மாற் பற்றுதற்கரியது; பறம்புநாடு முந்நூறு ஊர்களை

Koviloor Digital Library



யுடையது; அம் முந்நூறு ஊரினையும் பரிசிலர் பெற்றுவிட்டனர். நீவிர் கூத்தரும் பாணருமாகி ஆடிப்பாடி வரின் எஞ்சியுள்ள பறம்பு மலை நுமக்குப் பரிசிலாதற்குரியது. அஃதன்றி எம்மையும் பாரியையுமே பரிசிலாகவேண்டினும் மறாது வழங்குவன் அவ்வள்ளல்.'' இதன்கண் பாரியின் படைவீரமும் கொடைவீரமும் ஒன்றின் ஒன்று சிறந்து விளங்குதல் அறியற்பாற்று.

இனி, கொடையேயன்றி இதனைக் கொள்கவென்று ஒருவன் வலிதிற் கொடுக்கவும் அதனைக் கொள்ளேன் என்று மறுப்பின் அஃதும் வீரத்தின்பாற்படுவதேயாகும். பழைய சங்கப் புலவர்கள்பால் இத்தகைய பெருமித உணர்ச்சி ததும்பியிருந்தமை அன்னோர் பாட்டுக்களால் அறியக் கிடக்கின்றது.

இனி, படை வீரமாகிய தறுகண்மையைமட்டும் தனித்து நோக்குவோமாக. உலகத்து வேறு எம்மொழியினும் காணப்படாத பொருளிலக்கணம் என்பதொன்று தமிழில் இருத்தலைக் கற்றோர் அறிவர். அவ்விலக்கணம் அகப்பொருள் புறப்பொருள் என இரு பிரிவினையுடையது. பழைய தமிழ்ச் செய்யுட்களெல்லாம் அவற்றிற்கு இலக்கியமேயாகும். அவ்விருவகை இலக்கிய இலக்கணங்களாலும் உணர்த்தப்படுவன அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள்களுக்கு ஏதுவாகிய காதலொழுக்கமும் வீர வொழுக்கமும் ஆம். எனவே பெரும்பான்மைபற்றிக் காதலும் வீரமும் தமிழரின் தலை சிறந்த பண்பு என முடிபு கட்டுதல் பொருந்தும்.

தமிழருடைய படைமாட்சியைக் கூறவந்த திருவள்ளுவர்

"கூற்றுடன்று மேல்வரினும் கூடியெதிர் நிற்கும்
ஆற்ற லதுவே படை"

என்கின்றனர். பகைவரை வெகுண்டு நோக்கிய கண் அவர் வேல் கொண்டு எறியுமிடத்து இமைத்துவிடுமாயினும் வீரர்க்கு அதுவே தோல்வியாகுமாம்!

Koviloor Digital Library



தன்னைத் தாக்கவருகின்ற களிற்றின்மீது தன் கை வேலை எறிந்து அதன் உயிரைப் போக்கி மேலும் தன்மீது வரும் களிற்றினை எறிதற்கு வேல் நாடித் திரியும் வீரனொருவன் தன் மார்பிலே தைத்துக் கிடந்த வேலினைக் கண்டு அதனைப் பறித்துக்கொண்டு மகிழுகின்றானும்! என்னே தமிழருடைய ஆண்மை!

தமிழ் மறவர் போரில் புறங் காட்டுவது என்பது எக்காலத்தும் இல்லை. வெண்ணிற் பறந்தலை என்னும் போர்க்களத்தில் சோழன் கரிகாலனோடு போர் புரிந்த பெருஞ்சேரலாதன் என்னும் சேர மன்னன் தன் மார்பிலே தைத்து உருவின புண்ணும் புறப்புண்ணாகும் என நாணி வாளோடு வடக்கிருந்து உயிர் நீத்தான் என்றால், அவனுடைய வீரத்தையும் மானத்தையும் எவ்வாறு அளவிடலாகும்?

முதுகுடிப் பிறந்த மகளிரும் நிகரற்ற வீர வாழ்க்கையினராவர். நரம்புகள் மேலெழுந்து தோல் திரைந்த முதியவள் ஒருத்தி தன் மகன் போரிலே புறங்கொடுத்தனன் என்று சிலர் கூறக் கேட்டாள். அவளுக்கு உண்டாகிய சினத்திற்கு அளவில்லை. 'என் மகன் போரிற் புறங்காட்டியது உண்மையாயின் அவன் பாலுண்ட என் அங்கத்தைச் சிதைத்திடுவேன்' என்று போர்க்களம் அடைந்தாள்; தான் கைக்கொண்ட வாளினால் அக் களத்தே கிடந்த பிணங்களைப் புரட்டிப் பார்த்து வந்தாள்; தன் மகன், பகைவன் வேலினால் இரு கூறாகச் சிதைந்து கிடத்தலைக் கண்டாள். ஆ! அவனைப் பெற்ற நாளினும் பேருவகை கொண்டாள்!

மற்றொரு வீர மகள் முதனாட் போரிலும் அதற்கு முன்னாட் போரிலும் தன் கணவனையும், தமயன்மாரையும் இழந்தவள் அன்றும் போர் முரசின் முழக்கங் கேட்டுத் தன் குடிக்கு ஒருவன் போர் செய்யவேண்டுமென விரும்பித் தன் ஒரே மகனை அழைத்துக் குடுமியில் எண்ணெய் நீவி வெள்ளாடை உடுத்தி வேலினைக் கையிற் கொடுத்துச் செருமுகம் நோக்கிச் செல்க என விடுத்தாள்!

Koviloor Digital Library



புறநானூற்றிலுள்ள இரண்டு செய்யுட்கள் இங்ஙனம் கூறு நின்றன. தமிழ் மக்களின் இணையற்ற வீரவுணர்ச்சிக்கு இதனினும் வேறென்ன சான்று வேண்டும்?

தமிழர் இத்தகைய மறத்திறன் உடையராயினும் அறத் துறை வழுவிப் போர் செய்பவரல்லர். இரு பெரு வேந்தர் போர் செய்வது கருதினால் ஒருவர் ஒருவர் நாட்டு வாழும் குருக்கண்மாராகிய அந்தணரும், பெண்டிரும், பிணியுழந் தோரும் மணம் புரிந்து மகப் பெறுதோரும் என்னும் இவர் கட்கும், ஆனினங்கட்கும் ஏதமுண்டாகாவாறு, 'யாம் போர் தொடங்குதும்; ஆகலின் நீவிர் நுமக்குப் பாதுகாவலாகிய இடத்தை அடைவீராக' என்று முதற்கண் தெரிவிக்கும் இயல்பினராவர். மற்றும் பொருகளத்திலும் அடிபிறக்கிட் டோரும், படையிழந்தோரும் முதலாயினாரை அவர் பொருது கொல்வாரல்லர். எனவே, 'மன்னுயிர் காக்கும் அன்புடை வேந்தர்க்கு மறத்துறையினும் அறமே நிகழும்' என்க.

பகைவர்மேற் செய்யும் வன்கண்மையைப் பேராண்மை என்று சொல்வர்; அவர்க்கு ஒரு தாழ்வு வந்ததாயின் அது தீர்த்துக்கொள்ளுதற்பொருட்டுக் கண்ணோட்டமுடன் உதவி செய்தலை அவ்வாண்மைக்குக் 'கூர்மை' என்று சொல் வர் என்னும் பொருளமைத்து வள்ளுவர் கூறிய,

"பேராண்மை யென்ப தறுகண் ஒன்றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு"

என்னும் செய்யுள் ஈண்டு அறியற்பாலது.

சென்ற சென்ற போர்தொறும் வென்றியே புனைந்த அரக்கர் கோமானாகிய இராவணன் இராமனுடன் புரிந்த முதற் போரிலே படைகள் யாவும் பட்டொழிய, குடையும் கொடியும் இற்றொழிய, தேர் அழிந்து, முடியொழிந்து, வில்லும் அம்பும் இன்றி வெறுங் கையனாய் நாணத்தால் முகம் கவிழ்த்துக் கால் விரலால் நிலத்தினைக் கீறி நின்றானாக, அப்பொழுது அவனது நிலையைக் கண்டிரங்கிய பெருந்தகையாகிய இராமன் அவனை நோக்கி 'அறத்தினால் அன்றி அதற்கு மாறாகிய மறத்தினால்

Koviloor Digital Library



அமர் வெல்லுதல் அமரர்க்கும் அரிது என்பதனை மனத்தில் உறுதியாகக் கொள்வாய்; உன் ஊரிலுள்ள கிளைஞருடன் சேருமாறு பறந்து செல்வாய்; பாவி! இப்பொழுதே என் கையால் இறந்திருப்பாய்; நின் தனிமையைக் கண்டு இரங்கி யான் அச் செயலை நினைத்திலேன். உனக்குத் துணையாக அமைந்த சேனைகளும் பிறவும் பெருங் காற்றினால் மோதுண்ட பூளைபோல் ஆயினமை கண்டாயன்றே? இன்று போய்ப் போர் செய்தற்கு நாளை வருவாய் என' அருள் புரிந்தனன் என்னுஞ் செய்தியைக் கம்ப நாடர் தெரிவிக்கும்

"அறத்தி னாலன்றி அமரர்க்கும் அரும்பகை கடத்தல்
மறத்தி னாலரி தென்பது மனத்திடை வலித்தி
பறத்தி நின்னெடும் பதிபுகக் கிளையொடும் பாவி
இறத்தி யானது நினைக்கிலன் றனிமைகண் டிரங்கி"

"ஆளை யாஉனக் கமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்"

என்னும் செய்யுட்கள் அறிந்து இன்புறற்பாலன.

இனி வீரச்சுவை ததும்பும் சில செய்யுட்களையும் தொடர்களையும் கூறி இவ்வுரையை முடிப்போம். சேரன் செங்குட்டுவனானவன் கண்ணகிக்குச் சிலை கொணர்தற்பொருட்டு வஞ்சி சூடி வடதிசைக்குப் புறப்படத் துணிந்தபொழுது, அவன் அமைச்சனாகிய வில்லவன்கோதை கூறுவது,

"கங்கைப்பேர் யாற்றுக் கடும்புனல் நீத்தம்
எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்
ஆரிய மன்னர் ஈரைஞ் ஞூற்றுவர்க்கு
ஒருநீ யாகிய செருவெங் கோலம்
கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்
இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
இதுநீ கருதினை யாயின் ஏற்பவர்
முதுநீர் உலகின் முழுவது மில்லை"

என்பது,

Koviloor Digital Library



தூணினின்றும் வெளிப்பட்ட நரசிங்கப் பெருமான் அவுணர் கூட்டத்தையெல்லாம் இமைப்பளவிற் கொன்று குவித்து நின்று ஆர்த்த நிலைகண்ட பிரகலாதன், 'இன்னும் உன் உள்ளத்தின் ஒன்றும் உணர்ந்திலை போலும்; ஆழி வேந்தை வணங்குதியாயின் உன் புன்றொழில் பொறுப்பன்' என்று கூறா நிற்ப, இரணியன் அவனை நோக்கி,

'கேளிது நீயுங் காணக் கிளர்ந்தகோ ளரியின் கேழில்
தோளொடு தாளும் நீக்கி நின்னையும் துணித்துப் பின்னென்
வாளினைத் தொழுவ தல்லால் வணங்குதல் மகளிர் ஊடல்
நாளினும் உளதோ என்னா அண்டங்கள் நடுக்க நக்கான்"

கம்பர் வாயால் வெளிப்பட்ட இவ் வீரமொழிகள் தமிழருடைய ஆண்மையின் விளைவு என்பதில் ஐயமில்லை.

மனோன்மணீய நாடகத்தில் ஜீவக வழுதியானவன் தன் படை வீரர்களை நோக்கிப் போரிலே ஊக்குஞ் சொற்கள் பின் வருவன :

" அந்தணர் வளர்க்கும் செந்தழல் தன்னினும்
நாட்டு அபிமானம் உள் மூட்டிய சினத்தீ
அன்றோ வானோர்க்கு என்றுமே உவப்பு!
வந்த இக்கயவர் நும் சிந்தையிற் கொளுத்திய
வெந்தழற்கு அவரே இந்தனம் ஆகுக!
இன்று நீர் சிந்தும் இரத்தம் ஓர் துளியும்
நின்று உகம் பலவும் நிகழ்த்துமே
..........................................................
இத்தனிப் போரில் நீர் ஏற்றிடுங் காயம்
சித்தங் களித்துச் செயமாது உமக்கு
முத்தமிட் டளித்த முத்திரை யாகி
எத்தனை தலைமுறைக்கு இலக்காய் நிற்கும்!"

இத்தகைய செய்யுட்களைப் பயின்று வீரச்சுவையை நுகர்ந்து பெருமித மெய்துதல் தமிழ்மக்கள் கடனும்.

---

Koviloor Digital Library



# பெருநள்ளியின் பெருந்தகைமை

"வடிவை ஆ. மகாலிங்கம்"

இரப்பவர் தாம் வறிஞர் என்று இழிவான சொல்லைச் சொல்வதற்குமுன்னே, நள்ளி, குறிப்பறிந்து கொடுப்பவன். தன்னிடத்தில் இரந்தவர் மற்றொருவரிடம் சென்று வறியேம் என்று உரையாதவாறு மிகுதியாகக் கொடுப்பான்.

ஒருநாள் வில்லினை யேந்தி, மக்களுக்கு இன்னலியற்றும் கொடிய விலங்குகளைக் கொன்று வீழ்த்தற்பொருட்டு, இவன் வெளியே சென்றான்.

பல விலங்குகளைக் கொன்றான். அவற்றுள் உண்ணுதற் குகந்த சில இறைச்சித் துண்டுகளைத் தன் அழகிய கைகளின் மீது ஏந்தியவனாய் இல்லம் நோக்கிப் புறப்பட்டான். பொழுதும் அடையலாயிற்று. அதுகால், ஆடையில்லாதவர் வாடையில் மெலிவர் என்பது நள்ளிக்கு நன்றாய்த் தெரியும்.

சேய்மையில் யாரோ சிலர் கிளைகள் செறிந்த மரமொன்றின்கீழ், வாடி வதங்கி உள்நின்ற ஆவி ஊசலாட வருந்துவதைக் கண்டு நள்ளி மனம் கலங்கினான். குளிரால் வாடுகின்றார்களே என்று விரைவில் நடந்தான். அவர்கள் அண்மையிற் சென்று, 'கன்று பிரி காராவின் துயருடைய கொடி' யென அன்புடன் நோக்கினான்.

அவன் மனத்திடைப் பலப்பல எண்ணங்கள் எழுந்தன. தன் ஆடையை நோக்கினான். அது சின்னஞ்சிறு பருந்தினது கருமை நிறம் உடையதான சிறகையொத்த துணியால் அமைந்திருந்தது. ஆனால் புலவர் ஆடையோ அழுக்குப் படிந்து பழையதாய் அமைந்திருந்தது.

அப் புலவர் யார்? 'வன்பரணர்' என்னும் பாடல்சான்ற பெரியார்; தாம் வறுமையால் வாடி வருந்துவதனால், நள்ளி போன்ற பெருமக்களை அண்மிப் பொருள்பெற் றுய்யலாமென எண்ணி வந்தவர்.

Koviloor Digital Library



நெடுந்தூரம் நடந்து வந்தமையால் களைத்துத் தன் மனைவி மக்களுடன் மரத்தின்கீழ்த் தங்கியிருந்தார். நள்ளி தான் அரசன் என்பதை அவர்களிடம் கூறவில்லை. அவன் ஆடையும் அவனை அவ்வாறு வெளிப்படுத்தவில்லை. விலங்குகளை வேட்டையாடியபோது உண்டான குருதியினுல் நனைந்திருக்கும் அழகிய ஒளிமிகுந்த வீரக் கழலினையும் நீலமணி யிலங்கும் முடியினையுமுடைய நள்ளியெனும் நளியுடையான், தன்னை மறந்தவனுய் அவர்கள் பக்கலிற் சென்று, தானும் நெடுவழி நடந்திருக்கும் வருத்தத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் வறுமையிற் குளிரால் வாடியவர்கட்கு உதவத் துணிந்தான்.

கையகத்து வில்லைத் தாங்கிக் காண்போர்க்கு உண்மையில் வேட்டுவன் எனவே தோன்றினுன். நள்ளியின் அகமலர்ந்த முகத் தோற்றத்தைக் கண்டு வணங்கியவராய் எழுகின்ற வன்பரணரை இருக்கச்செய்து, வழி தவறிய வீரர்கள் தன்னைக் காண வருவதற்கு முன்னமேயே, அங்கே கிடந்த சருகுகளைக் கூட்டித் தீமூட்டித் தான் கையிற் கொண்டுவந்திருந்த இறைச்சியைச் சுவைப்பதமாகச் சுட்டுப் புலவரைத் தங் கிளைஞருடன் இனிதுண்ணும்படி மனமுவந்து அளிக்கப், புலவர் அங்ஙனமே உண்டு மாளா மகிழ்வு எய்தினர். அஃது அப்போது அவர்க்கு அமுதம்போன்றிருந்தது என்னலாம். இறைச்சியை யுண்டபின்னர் மரச்செறிவுடைய மலையிடையினின்று இழியும் குளிர்ந்த அருவிநீரை அள்ளியள்ளி உள்ளமார அருந்தினர். மலைபோலத் தோன்றிய பசி, வேட்டுவன் உருவத்தில் வந்த நள்ளியால், காய்கதிர்ச் செல்வனைக் கண்ட பனிபோல் மறைந்தது. என்னே பெரியார் பேரருள்!

“ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலின் பின்”

என்பது பொய்க்குமா?

வயிறுர உண்ட வன்பரணர் தனது சுற்றத்துடன் வேற்று நாடடைய விடைவேண்டி நள்ளியை நோக்க, அவன் விரைவின் வந்து புலவரை நோக்கிப் “பெருந்தகையீர்! உங்களுக்

Koviloor Digital Library



குப் பெருமைதங்கிய அணிகலங்களைத் தந்துதவ நான் இது கால் வல்லேனல்லேன். யான் வனத்திடை வாழ்பவன்" என அன்புநீர் சொரிய இனிய மொழிகள் கனிபோற் கூறித் தனது பரந்த மார்பிற் பூண்டிருந்த முத்துவடங்களையுடைய மாலையை வலிமைமிக்க 'தருகை நீண்ட' தடக்கைகளால் ஈந்துவந்தனன்.

அடைக்குந் தாளின்றிப் பொங்கிப் பாயும் அன்பினைக் கண்ட புலவர், இனிய குரலில், 'அன்பனே! நுமது நாடு யாது? நுமது பெயர் யாது?' என இனிமையாய் வேண்டினர். இவ்விரு வினாவிற்கும் பெரியோன் விடையளிக்கவில்லை. இவர் களை அனுப்பி அரசன் அப்பாற் சென்றான்.

புலவர் சிறிது தூரம் சென்றபின்பு, சிலர் வாயிலாகத், தன்னை இவ்வாறு அன்புடன் உபசரித்தவன் பெருநள்ளி என்னும் வள்ளலே என்றும், இருமருங்கும் சோலைகளையுடைய அழகிய வளமிக்க, நன்னீரருவிகளையுடைய "தோட்டி" யென்னும் மலையமைந்த நாடு அவனது நாடு என்றும் அறிந்து மாறிலா மகிழ்ச்சியெய்தினர்.

ஆகலின், பெருநள்ளியைப்போன்று பெருந்தன்மையுடையராய் வாழ்ந்த நிலவரை நீள்புகழாற்றிப், புத்தேளுலகு புலவரைப் போற்றுதபடி செய்தல்வேண்டும்.

மேற்கூறிய செய்தி பின்வரும் புறநானூற்றுப் பாட்டினால் தெரிகின்றது.

"....இழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
கானதர் மயங்கிய விளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை யொய்யெனத்
தான்ஞெலி தீயின் விரைவனன் சுட்டுநின்
இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலின்
அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மா னளிய நறுந்தண் சாரற்
கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்த றொடங்கினே னாக வல்லே

Koviloor Digital Library



பெறுதற் கரிய வீறுசா னன்கலம்
பிறிதொன் றில்லை காட்டுநாட் டேமென
மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்
மடைசெறி முன்கைக் கடகமோ டீத்தனன்
எந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் பேருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே...."

—புறம், ௧௫௰

---

# தாமரைப் பாவை

தாமரைப் பாவாய்! தாமரைப் பாவாய்!
செறிநீர்ச் செறுவி னிறைமலர் நாப்பண்
ஒருதனி யோங்கிய விரைமலர்ப் பாவாய்!
திருவுங் கல்வியு முருவுஞ் சிறந்தனை ;
5. விண்ணவர் காணுங் கண்ணரி யேய்ப்ப
நின்முக மலர்த்து நேர்மையை ; புன்கால்
மென்மெலத் தவழ வின்பமே லீட்டால்
ஆடுகள மகள்போ லாடுவை யசைந்தே ;
பாசடைப் பரப்பாங் தூசுடுத் தாங்கண்
10. பரிதியஞ் செல்வன் வரவுகாத் தவன்றேர்
காலையில் வரவுங் கவின்முக மலர்வாய் ;
மாலையிற் குவிவ தெவன்கொல்? ஆனுஞ்
சுரும்பரம் பாணர் விரும்பிவந் திசைக்கு
நன்மொழித் தூதுக் கிரங்காய் ; இன்னவில்
15. தன்னமர் காதலன் றணந்து பரத்தையர்
நன்னகர் சேறல் நாடுபு நலியு
மருதப் பாவையர் மாண்செய னீயும்
பெறுதல் வழக்கோ பேசுதி யெமக்கே.

—சி. து. கன்னிசாமி

Koviloor Digital Library



# ஆத்தி சூடி

"இளவழகனார்"

தமிழ் நூல்களில் 'ஆத்தி சூடி' தொடக்க நூல். குழந்தைகள் மனப்பாடஞ் செய்துகொள்ளும்பொருட்டுச் சிறு சிறு தொடர்களால் அது செய்யப்பட்டிருக்கின்றது.

சின்ன குழந்தைகள் மனப்பாடஞ் செய்துகொள்ளும் பொருட்டுப், பழுத்து மூத்த ஔவையார் நூல் செய்வதுதான் நல்லது. மேலும், அவர் ஒரு பெண்பாலா யிருப்பது இன்னும் நல்லது. குழந்தைகள் உள்ளத்தை அவர் நன்றாய் அறிவார்.

குழந்தையுள்ளம் பெற்றவர்களே, குழந்தைகளுக்கு நூல் செய்வதற்குரியவர். அறிவிலும் உலகியலிலும் மெய்யுணர்விலும் நன்றாய்ப் பழுத்த முதியோர்க்கு அந்த உள்ளம், இயல்பாகவே உண்டாகின்றது. அந்நிலை கைவந்த பின்பே, ஔவையார் இந் நூலை இயற்றியிருக்கின்றார்.

'ஆத்தி சூடி' இயற்றியருளியவர் சங்க காலத்து ஔவையார் அல்லர்; பிற்காலத்தவர்; கொன்றைவேந்தன் மூதுரை நல்வழி என்பனவும் இவர் இயற்றியனவே. 'நல்வழி'யின் முகப்பில், "சங்கத்தமிழ் மூன்றுந் தா" என்று இவர் பாடியிருப்பதனால், இவர் சங்க காலத்தவர் அல்லர் என்பதை அறியலாம்.

என்னவோ, ஔவையார் என்னும் பெயருடையோரெல்லாரும் அருமைப்பாடு உடையவராகவே விளங்குகின்றனர். சங்க காலத்து ஔவையாரும் அப்படியே; இவரும் அப்படியே. பெண்பாலாரில், வயது மூத்தவராய்ப் புலமையும் மெய்யுணர்வும் உடையவரா யிருந்தால், அவர் 'ஔவையார்' என்று அழைக்கப்பட்டிருத்தலைக் காண்கின்றோம்.

ஔவையார் என்போர், அவர் எவராயிருந்தாலும், தமிழ்க்கும் தமிழ் மக்கட்கும் நல்ல தொண்டு செய்திருக்கின்றனர். அவர், பொருள் கருதித் தமது வாழ்க்கையைச் செலுத்தினவு

Koviloor Digital Library



ரல்லர். 'அகசிசு' என்னும் மேனாட்டுச் சான்றோர் ஒருகால், நிறைந்த பொருளுதவியுடன், சில விரிவுரைகள் செய்யும்படி கேட்டுக்கொள்ளப்பட்டார். அதற்கு அவர், 'பொருள் தேடுவதில் எனது காலத்தை நான் வீணாகச் செலவழிக்க விரும்பவில்லை' என்று சொல்லி மறுத்துவிட்டாராம். இதனை அவருடன் நெருங்கிப் பழகியிருந்த 'எமர்சன்' என்னும் அறிஞர் அருமையாகப் புலப்படுத்தியிருக்கின்றார். ஔவையார் அத்தகையோரே யாவர். நாட்டில் உணர்வுநலங்கள் வளர்வதற்குப் பாடுபடுவதே அவர் முழு நோக்கம். நினைத்த இடங்களில் உண்டு, நினைத்த இடங்களில் உறங்கி, நினைத்த இடங்களிற் சென்று தமிழையும் உணர்வையும் வளர்த்த பெரியோர் அவராவர்.

அத்தகைய பழுத்த அருளுள்ளம் உடையோர்க்கே ஆத்தி சூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி என்பவைபோன்ற குழந்தை மலர்களை எழுதியுதவும் அரிய எண்ணம் உண்டாகும்.

இக்காலத்திற் குழந்தைகட்காக நூல் எழுதுவோர்க்குச் சிறிது தொகை கிடைக்கக்கூடும். அந்தக் காலம் அங்ஙன மன்று; இரக்கங் காரணமாகவே ஔவையார் இந்நூல்களை இயற்றியிருக்கின்றார்.

இந் நற்செயலால் ஔவையாருக்கு ஒரு தனித்த பெருமை தமிழகத்தில் நிலைபெற்றிருக்கின்றது. முன்னோர் நூல்களில், இவரொருவர் எழுதிய இந் நூல்களே, குழந்தை மலர்களா யிருக்கின்றன. குழந்தைகள் விரைவில் நினைவுகொள்ளவேண்டுமென்னுங் கனிவினால், ஆத்திசூடி கொன்றைவேந்தன் என்னும் நூல்கள் அகர வரிசையில் தொடுக்கப்பட்டிருக்கின்றன.

குழந்தைகளின் பருவத்துக்கேற்பப் பயன்படவேண்டுமே என்னும் இரக்க குணம் மேலும் உந்த, ஆத்திசூடியை மிகச் சிறிய தொடராகவும் கொன்றைவேந்தனை அதனினுஞ் சற்றுப் பெரிய தொடராகவும் இவர் இயற்ற நேர்ந்தது.

குழந்தைகளின் கல்வி வகையில் ஔவைப் பெருமாட்டியார் காட்டியருளிய ஊக்கத்தைத் தமிழ்நாடு என்றும் மறப்ப

Koviloor Digital Library



தற்கில்லை; எப்படி மறக்கும்! தமிழ் நாட்டுக் குழந்தைகளின் உள்ளங்களிலெல்லாந்தாம் ஔவைத் தாய் அருமையாய் விளங்குகின்றாரே! தமிழர்களின் உள்ளங்களை இப்படிக் குழந்தைப் பருவத்திலிருந்தே கவர்ந்துகொண்டு, இறுதிவரையிலுஞ் சிறப்பாக நிலவும் அருமைப்பாடு இவர்க்கன்றி வேறு யாருக்கு உண்டு!

அணுக்க காலத்திலேதான் இவர் நூல்களைப் பின்பற்றிப் பிறரும் நூல் செய்யத் தொடங்கினர்.

உ

'ஆத்தி சூடி' அமைந்திருக்கும் நிலைமையைப் பார்த்தால், அதனை ஒரு சின்ன 'வேதம்' என்று சொல்லலாம்போலத் தோன்றுகின்றது. ஔவையாருடைய பெரிய உள்ளமே, அச் 'சிறுமுது நூல்' இங்ஙனம் அமைவதற்குக் காரணம்.

இம்மையிற் செவ்வையாய் வாழ்ந்து மறுமையிலும் நன்னிலைமையை அடைவதற்கான வழி வகைகள், ஆத்திசூடியில் நன்றாய் எளிமையாய் இனிமையாய் விளக்கப்பட்டிருக்கின்றன.

இம்மை நலங்களில், விளையாடுவது குளிப்பதுமுதல் உயர்ந்த அரசியல் நுணுக்கங்கள் காதல் ஒட்பங்கள் வரையிற் கருத்துகள் திறமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

"சனிநீ ராடு
நீர்விளை யாடேல்"

எனவும்,

"புகழ்ந்தாரைப் போற்றிவாழ்
மெல்லினல்லாள் தோள்சேர்"

எனவுமெல்லாம் வருவன மேல் உண்மையை அறிவிக்கக்கூடும். "புகழ்ந்தாரைப் போற்றிவாழ்" என்றார், தன்னிடம் மதிப்புடையோரை விரைந்து தெரிந்து அரசன் தன்னவராக்கிக் கொள்ளுதல் இன்றியமையாதது என்றற்கு. அயலோராயிருப்பவரை இங்ஙனம் நண்பராக்கிக்கொண்டே போதல், பகைவர் அஞ்சுதற்குரியதோர் ஆண்மைச் செயலாகும். "வழிபடு

Koviloor Digital Library



வோரை வல்அறிதீயே" என்று புறநானூற்றில் (ம) வரும் அரச முறைமையும் இது.

மறுமை நலங்களில், நல்வினை நிலைகள்முதல் வினையற்ற வீடுபேற்று நிலைமைவரையில் ஔவையார் அருமையாக அறிவுறுத்தியிருக்கின்றார். பல பெரிய அருள் நூல்களிற், பாலினுள் வெண்ணெய்போல மறைபொருளாயிருக்குங் கருத்துகள் சிலவும், இக் குறுகிய சிறு நூலில், மோர்மேல் வெண்ணெயெனத் தெளிவாகத் திரட்டித் தரப்படுகின்றன.

"வேண்டி வினைசெயேல்
வீடுபெற நில்"

என்பவைபோன்ற திருமொழிகள் அத்தகைய வெண்ணெய்த் திரள்களேயாம். 'வேண்டி வினைசெயேல்' என்பதற்குப் 'பயன் விரும்பிச் செயல்புரியாதே' என்பதும், 'வீடுபெற நில்' என்பதற்குப் 'பற்றில்லாமல் இரு' என்பதும் பொருள். இவை எவ்வளவு நுட்பமும் முத்தழகும் உள்ளவை!

இனி, இவ் விம்மை மறுமை நலங்களைப் பெறும்முறைமைகளும், ஆத்திசூடியில் எவ்வளவோ நன்றாக அறிவுறுத்தப் படுகின்றன.

இம்மை நலங்களை அடைவதற்கும் அதனை ஆளுவதற்கும், தகுந்த உலகியலொழுக்கம் இன்றியமையாதது. ஔவையாரின் பழுத்த உலகியல் நுகர்ச்சிகள், ஆத்திசூடியில் அவர் அவ்வொழுக்கம்பற்றிக் கூறும் தொடர்களில் நல்ல காட்சியளிக்கின்றன!

"கிழமைப் படவாழ்
கைவினை கரவேல்
சான்றோ ரினத்திரு
செய்வன திருந்தச்செய்
சொற்சோர்வு படேல்
தொன்மை மறவேல்
நிலையிற் பிரியேல்
நேர்பட வொழுகு"

Koviloor Digital Library



முதலிய எத்தனையோ பல தொடர்கள், உலகியலொழுக்கங் களின் பிழிசாறே என்னும்படி அழகழகாக விளங்குகின்றன. 'கிழமைப்பட வாழ்' என்பதற்குப் 'பிறர் உன்னிடம் உரிமை யாக நடந்துகொள்ளும்படி அவ்வளவு கலந்த மனப்பான்மை யுடன் வாழ்' என்பது கருத்து. 'சொற்சோர்வு படேல்' என் பதற்குச், 'சொன்ன சொல்லின்படி பின் நடந்துகொள்வதில் தளர்வு கொள்ளலாகாது' என்பது கருத்து. உலகியல் வெற் றிக்கு இவை எவ்வளவோ தேவை. பிறவும் இங்ஙனமே.

தொழில் முறை, கலைநுட்பம் முதலியனவெல்லாமும்,

"பருவத்தே பயிர்செய்
இலவம்பஞ்சில் துயில்"

என்பவைபோன்ற தொடர்களால் விடாமல் எடுத்துக் காட் டப்படுகின்றன.

உடம்பையும் உணர்வையும் ஓம்புமுறைகள், இயல்பான எளிய முறைகளால் வகுத்தோதுதலும்,

"மீதூண் விரும்பேல்
மிகைபடச் சொல்லேல்"

என வருவனவற்றிற் காண்கின்றோம்.

இனி,

"எண்ணெழுத் திகழேல்
வித்தை விரும்பு
இளமையிற் கல்
ஓதுவ தொழியேல்"

என்னுந் தொடர்கள்போல்வன, கல்வி என்னும் ஒருபொரு ளின் தொடர்பாகவே வரினும், அவை கூறியன கூறலாக மாட்டா. எண்ணெழுத்து என்பவை, பொருளும் மொழியும்; 'வித்தை' யாவது கலை, இளமையிற் கற்றற்கு 'இளமையில்' எனவும், மேலும் இடைவிடாமற் பயிலுதற்கு 'ஒழியேல்' என வுங் கூறினர். ஒவ்வொரு தொடரால் ஒவ்வொரு கருத்தை விளக்கினபடியாம்.

Koviloor Digital Library



"அரவ மாட்டேல்
பாம்பொடு பழகேல்"

என்பனவும் அத்தகையனவே. முன்னது சிறியோர் விளையாட்டையும், பின்னது பெரியோரானபின் பழகும் பழக்கத்தையுங் குறித்தன.

௩

ஆத்திசூடியைக் குழந்தைப் பருவத்தில் மனப்பாடஞ் செய்துகொண்டால், பின் வயதேற ஏற மக்கள் அதன் கருத்துக்களை விளக்கிக்கொள்ளக்கூடும் என்று ஔவையார் கருதியிருக்கின்றார். குழந்தைப் பருவத்திலேயே பயன்படுத்திக் கொள்ளும்படி,

"இளமையிற் கல்
கண்டொன்று சொல்லேல்"

எனவெல்லாம் அருளிச்செய்தவர், இனிப் பெரியவர்களான பின் ஒழுகுவதற்குரிய

"இடம்பட வீடெடேல்
தையல்சொற் கேளேல்"

என்பவைபோன்ற பல முறைமைகளையும் விளக்கிச் செல்வதனால், ஔவையாரது கருத்து நன்கு விளங்குகின்றது. ஆகவே, மக்கட்கு எந்நிலையிலும் பயன்படவேண்டுமென்று கருதியே ஆத்திசூடியை அருளிச்செய்திருக்கின்றார் என்பதில் ஐயமில்லை.

ஆராய ஆராய, மேலுமேலும் ஆழ்ந்து தோன்றும்படியான சொற்பொருள்களும் இவற்றில் இல்லாமலில்லை.

பெரியாரைத் துணையாகக் கொள்ளவேண்டும் என்னுங் கருத்தில்,

"பெரியாரைத் துணைக்கொள்"

என்றருளிச்செய்த ஔவையார், சிறியாரோடு இணங்காதே என்னும் பொருளில்,

Koviloor Digital Library



"பையலோடு இணங்கேல்"

எனவும் அருளிச்செய்திருக்கிறார். பெரியோராயிருப்பவர் சிறியரோடு இணங்காவிட்டால், சிறியோர், பெரியோரது துணையை எப்படி அடைவது என்று சிலர்க்கு ஐயம் நேரக் கூடும். ஒளவையார் வரம்புபடவே இயற்றியிருக்கின்றார். 'துணைக்கொள்' 'இணங்கேல்' என்னுந் திறமான சொற்களில் அவ்வரம்பு ஆழங்காட்டி மிளிர்கின்றது.

துணை செய்பவர் எப்போதும் ஆற்றலிற் பெரியோராகவே இருத்தல்கூடும். இடுக்கண் நேரங்களில் அவர் துணையே பெரிது உதவும். அதனைத் தவறாமற் கொள்ளவேண்டுவது மற்றவர் கடமை.

ஒளவையார் அருளிச்செய்த மற்றொரு நூலான 'மூதுரை' யில், "நல்லாரைக் காண்பதுவும் நன்றே" என்னும் முதற் குறிப்பையுடைய செய்யுள் ஒன்று வருகின்றது. அச் செய்யுளில், 'நல்லாரைக் காண்பதுவும் நன்று; அவர் சொல் கேட்பதுவும் நன்று; அவர் குணங்கள் உரைப்பதுவும் நன்று; அவரோடு இணங்கியிருப்பதுவும் நன்று' என்னுஞ் சொற்பொருள்கள் வருகின்றன. காண்பது கேட்பது உரைப்பது என்னுஞ் செயல்களுக்கு வேறாக, இணங்குவது என்னுஞ் செயல் ஒன்றும் இதன்கண் வருதலைக் காணலாம். இதனால் ஒருவரைக் காண்பதும் கேட்பதும் உரைப்பதும் செய்த அளவிலேயே, அவரோடு இணங்கிவிட்டதாகக் கருதலாகாது என்பது தெரிகின்றது. ஒருவர் கொள்கைப்படி ஒருவர் நடந்துகொள்ளுதலே இணங்கிய செயலாம். ஒருவருக்குத் துணைசெய்வதற்கு அவரோடு அங்ஙனம் இணங்கவேண்டுமென்பதில்லை. அவரைப் பார்ப்பதும், அவர் சொல்வதைக் கேட்பதும்போல்வன போதும்.

இன்சொற்பொருளின் அழுத்தம் இங்ஙனமெல்லாம் இருத்தலின், ஒளவையார், 'பையலைப் பாராதே, கேளாதே' என்னுங் கருத்திலெல்லாம் பேசாமல், "பையலோடு இணங்காதே" என்னுங் கருத்திற் பொருளாழந்தோன்ற அருளிச் செய்வாராயினர்.

Koviloor Digital Library



இத்தகைய சொற்பொருளழுத்தங்கள் 'ஆத்தி சூடி'யி லும் அவர் நூல்கள் பிறவற்றிலும் பலப்பல இடங்களில் வரு கின்றன.

எதற்கும் ஔவையார் கருத்துப்படி, அவர் நூல்களைக் குழந்தைகள் இளமையிலேயே மனப்பாடஞ் செய்துகொள் ளும்படி ஏற்பாடு செய்துகொள்வது நல்லது.

(அடுத்த இதழிற் 'கொன்றைவேந்தன்' வரும்.)



Koviloor Digital Library



# போய் வருகிறேன்

"வித்துவான் மு. வரதராசன், B. O. L."

## நலம் கேட்டறியும் நாகரிகம்

சென்ற பங்குனித் திங்கள் மூன்றும் சனிக்கிழமையன்று பகல் சென்னையிலிருந்து பெங்களூர்க்குப் போய்க்கொண்டிருந்தேன். மணி இரண்டு அடித்ததும் அரக்கோணம் நிலையத்தில் புகை வண்டி சென்று நின்றது. யான் இருந்த வண்டியிலிருந்த சிலர் கீழே இறங்க, வெளியே இருந்த சிலர் உள்ளே புகுந்தனர். அவருள் ஒருவர் தம்முடைய இருப்புப் பெட்டியையும் தோற்பையையும் மேற்பலகையில் வைத்துவிட்டு என் பக்கத்தே உட்கார்ந்தார். உட்கார்ந்தவர் என்னைத் திரும்பிப் பார்த்தார்; உடனே புன்னகை செய்தார்; "ஓ! நீங்களா? எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கேபோகிறீர்கள்? சௌக்கியமாக — நலமாக இருக்கிறீர்களா?" என்று கேட்டார். (க்ஷேமம் என்று மனம் எண்ண, சௌக்கியம் என்று நா சொல்ல, நலம் என்று அறிவு திருத்தியதுபோலும்! தன்னை மறப்பதில் தமிழன் தானே வல்லவன்!)

கேட்டவர் யார் என்பது அப்போது எனக்கு விளங்கவில்லை. ஆயினும், சிறிதும் தயங்காமல், உடனே, "நலமாக இருக்கிறேன். சென்னையிலிருந்து வருகிறேன். பெங்களூர் போகிறேன். நீங்கள் நலமாக இருக்கிறீர்களா?" என்று கேட்டேன்.

யான் அவரை இன்னாரென்று அறியாவிடினும், அறிந்ததொரு விடையே எதிர்பார்த்தேன். "ஆ! ஆ! நலமாக இருக்கிறேன். ஒரு குறைவுமில்லை" என்பதே அவரிடமிருந்து யான் எதிர்பார்த்த விடை. ஆனால் நான் ஏமாற்றம் அடைந்தேன். "நலமாவது; என் வாழ்விலாவது; முதலாவது எனக்குப் பணத்தொல்லை பெரிதாகிவிட்டது; செல்வநலம் இல்லை. என் மனைவிக்கோ உடல்நலம் இல்லை. தாயோ கண்பார்வை குறைந்து தக்கோலத்தில் தங்கை வீட்டில் வருந்துகிறாள். தந்தையோ காலங் கெட்டுவிட்டது என்று எந்நேரமும் சொல்லிக்கொண்டு எல்லாருடனும் சொற்போர் புரிகிறார். என் மக்களைப்பற்றிக் கூறத்

Koviloor Digital Library



தொடங்கினுல் அது பெரிய கதையாகும்" என்றூர். நான் எதிர் பாராத மறுமொழி கிடைத்ததால் மிகவும் வியந்தேன். என்னு டன் நெருங்கிப் பழகும் நண்பரும் இத்தகைய மறுமொழி கூறிய தில்லையே என எண்ணினேன். ஆனுல், இதனுல் ஒரு நன்மை; "நலமாக இருக்கிறேம்" என்று அவர் விடையளித்திருந்தால் யான் புன்முறுவல் செய்து, "உங்களை இன்று பார்த்தது பெரிய மகிழ்ச்சி. பார்த்துப் பல ஆண்டுகள் ஆய்விட்டன அல் லவோ?" என்று வெறுஞ்சொல் சொல்லியிருப்பேன்; பிறகு, "இன்று செய்தித்தாள் பார்த்தீர்களா? ஹிட்லர் என்ன மனி தனே? அப்பப்பா! ஆனல் நம்மவன்—ஆங்கிலேயன்— பழையபடியே இருக்கிறுனே! அதற்கும் ஒரு காரணம் இருப் பதாகத் தெரிகிறது...." என என்ன என்னவோ பேசத் தொடங்கிவிட்டிருப்பேன்.

"தக்கோலத்தில் தங்கை வீட்டில்..." என்று அவர் கூறியவுடனே எனக்குப் பழைய நினைவு வந்துவிட்டது; உடனே அவரை இன்னுரென அறிந்துகொண்டேன். பிறகு அவர்தம் மகன் எந்த வகுப்பில் படிக்கிறுன் என்பதும், தங்கையின் கணவர் பர்மாவிலிருந்து வந்துவிட்டாரா என்ப தும் கேட்டறிந்தேன். பின்னர் அவர் என் குடும்பச் செய்தி களைக் கேட்டு நலமின்மை அறிந்து வருந்தினுர்.

## உள் ஒன்று ; புறம் ஒன்று

புகைவண்டி குடியேற்ற நிலையம் கடந்ததும் எங்கள் பேச்சுக் குறைந்துவிட்டது. எண்ணுதன எல்லாம் எண்ணத் தொடங்கினேன். அறிஞர் பெர்னுர்ட் ஷா எழுதிய 'வாரன் அம்மையார் தொழில்' (Mrs Warren's Profession) என்னும் நாடகத்தில் நிகழும் காட்சி ஒன்றை நினைத்துக்கொண்டேன். அந்நாடகத்தில் ஒருவர் வீட்டிற்கு விருந்தினர் இருவர் வருகின் றனர். அவ் விருந்தினர்மீது உள்ள வெறுப்பால் வீட்டுத் தலைவியும் மகளும் வெளியூர்க்குச் சென்றுவிட்டனர்; விருந் தினரை வரவேற்று ஓம்புதற்கு இல்லாள் இல்லையே என்று அவர் வருந்துகிறுர். அப்போது அவர்தம் மகன் அவரை நோக்கிப் பின்வருமாறு கூறுகிறுன்:— "தந்தையே! இதன் பொருட்டுக் கவலை ஏன்? விருந்தினர் வந்ததும் யான் சொல்

Koviloor Digital Library



கிறபடி செய்யுங்கள். முகமலர்ச்சி கொள்ளுங்கள்; எதிர்கொண்டு வரவேற்று இன்மொழி கூறுங்கள். அவர்கள் வரவு நமக்குப் பெருமகிழ்ச்சி அளிப்பதாகக் கூறுங்கள்; நேற்றிரவு நன்கு தூங்கினிரா என்பதைக் கேட்டறியுங்கள். மிகுந்த நோயால் வருந்தும் உறவினர் ஒருவரைக் காணும்பொருட்டுத் தாயும் தங்கையும் வெளியே போயிருப்பதாகக் கூறுங்கள். விருந்தினரை வரவேற்க முடியாமைக்காக அவர்கள் வருந்தியதாகக் கூறுங்கள். உண்மை தவிர மற்றெதையும் கூறி இனிமையாகப் பேசுங்கள்" என்று தந்தையைத் தேற்றுகிறான்.

இவ்வாறு உள்ளது மக்கள் வாழ்வு. உள்ளொன்று வைத்துப் புறமொன்றுக இருத்தல் நாகரிகத்தின் அடிப்படை போலும்!

## பொருளற்ற பேச்சு

ஒருவரை வரவேற்க மனம் இல்லாதபோதும், "வருக, வருக" என முகமலர்ந்து இன்மொழி கூறல்போலவே, ஒருவர் பிரியும்போது, அவர் மீண்டுவரல் வேண்டா என்ற கருத்துடையோரும் "மீண்டும் எப்போது வருகிறீர்கள்? (வருவீர்கள்?)" என்று கேட்பர்; மீண்டு வரல் கூடாது என்று வெறுத்துப் பிரிகின்றவரும் "விரைவில் வருவேன்" என்று கூறிப் பிரிவர்.

இவ் வழக்கம் முற்றியே ஒவ்வொரு பிரிவின்போதும், "போய் வருக" என விடை தரலும், "போய் வருகிறேன்" என விடைபெறலும் நிகழலாயின. இவை விருந்தினர் கூடிப் பிரியுங்கால் நிகழ்வனவே ஆகும்.

ஆயின், ஒரு குடும்பத்தில் உள்ளவரிடையே இவ்வாறு நிகழ்வதற்குப் பொருள் உண்டோ? மருமகள் தன் தாய் வீட்டிற்குச் செல்லுங்கால், "போய் வருகிறேன்" என விடை கேட்கிறாள். "போய் வா" என விடை தருகிறாள் மாமி. இங்கு வருதல் மருமகள் கடமை அன்றோ? தாய் தன் மகனைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புங்கால், "போய் வா" எனக் கூறுகிறாள். மகன் "போய்வருகிறேன், அம்மா" என்று சொல்லிவிட்டுப் பள்ளிக்கூடம் செல்கிறான். காய்கறி வாங்கக் கடைத்

Koviloor Digital Library



தெருவுக்குச் செல்லும் தம்பி தமக்கையிடம் அவ்வாறே விடை பெறுகிறுன். படக்காட்சி காணச் செல்லும் மகன் பெற்றோரிடம் அவ்வாறே சொல்லிவிட்டுச் செல்கிறுன். இவர்கள் சிறிது நேரத்திற்குள் திரும்பி வருதலன்றி வேறுவழியும் உளதோ ? அன்றியும், குடும்பத்தினருள் எவரேனும் வெளியூர் செல்ல நேரின், " போய் வருகிறேன் " என்று ஒவ்வொருவரிடமும் கூறுவர் ; வீட்டில் ஒருமுறை, வாயிலைக் கடந்து சென்று ஒருமுறை, தெருவில் நின்று ஒருமுறை, குதிரைவண்டி ஏறிய பின் ஒருமுறை, அவ் வண்டி சிறிது தூரம் சென்ற பின் ஒருமுறை, புகைவண்டி நிலையத்தில் ஒருமுறை, அவ் வண்டி நகருங்கால் ஒரு முறை என இவ்வாருகப் பலமுறை "போய் வருகிறேன்" என்பர்.

## வருதல்=போதல்

தமிழன் வாழ்வு சீர்கெட்டதை இஃது ஒருவாறு அறிவிக்கிறது எனலாம். பண்டைத் தமிழன் அஞ்சாமை அல்லாமல் துணைவேண்டா என்றிருந்தான் ; இமயம்வரை எதிர்ப்பாரின்றிச் சென்று வென்று வில்லும் புலியும் கயலும் பொறித்து மீண்டான் ; போருக்கு வருபவர் உளரேல் " வ்ருக வருக" என்று அழைப்பதற்கு அறிகுறியாக 'வரிப்புனை பந்தொடு பாவை தூங்கச் செருப்புகன்று எடுத்த சேண் உயர் நெடுங்கொடி ' உடையனுய் வாழ்ந்தான் ; புகழ் எனின் உயிரும் கொடுத்தான் ; நாண் பொருட்டால் உயிரும் துறந்தான்.

அஃது ஒரு காலம் ; இஃது ஒருகாலம். " போ " என்ற சொல்லைச் சொல்லவும், சொல்லக் கேட்கவும் அஞ்சுகிறுன் இக்காலத்துக் கோழை. "போய்விட்டான்" என்பதற்கு இறந்துவிட்டான் என்னும் பொருள் தந்து அதை அமங்கலச் சொல் என ஒதுக்குகிறுன்போலும் ! அதனுல், "போகிறேன் " என்று சொல்லவும் அஞ்சுகிறுன். சாதலுக்கு அஞ்சாத தமிழர் மரபில் பிறந்தவன் " சாதல் " என்னும் சொல்லைக் கேட்கவும் அஞ்சுகிறுன் ; சில இடங்களில் அப்பொருள் தரும் "போதல் " என்னும் சொல்லைச் சொல்லவும் அஞ்சுகிறுன் ; வருதலைச் சேர்த்து, "போய் வருகிறேன் ' என்கிறுன். போதலை அறவே விடுத்து "வருகிறேன், வரட்டுமா " என்

Koviloor Digital Library



கிறன் ; ஆனல் போய்க்கொண்டே இருக்கிறன். அவன் தாய் அவனுக்கு இளமையிலிருந்தே இத்துறையில் போதிய பயிற்சி அளிக்கிறள்.

## சாதல் அஞ்சாமை

பண்டைத் தமிழர் காதல்வாழ்வு வாழ்ந்தனர். காதல் வாழ்வு உடையவர் சாதலுக்கு அஞ்சுவரோ ? " வரட்டுமா " என்றுசொல்லிப் போய்க்கொண்டிருத்தல் அக்காலத்தில் இல்லை. போதல் போதலாகவும் வருதல் வருதலாகவுமே இருந்தன. கூற்றுவன் வீற்றிராத பள்ளிக்கூடம், கடைத்தெரு, நாடகம் முதலியவற்றிற்குச் செல்லும்போதேயல்லாமல் கூற்றுவன் வீற்றிருக்கையான போர்க்களத்திற்குச் செல்லும்போதும் தமிழனைப் "போ" எனக் கூறியே அனுப்பினர் அக்காலத்தவர். "போர்க்களம் போகிறேன்" என்றே சென்றன் அத் தமிழனும்.

மூதின்மகள் ஒருத்திதன் ஐயன் செருக்களத்தில் யானைப் போரில் இறந்தான். அவள் கொழுநன் ஒருநாள் பொருது பட்டனன். மறுநாள் செருப்பறை கேட்டது. அக் குடும்பத்தில் எஞ்சியிருந்தவன் அவளுடைய மகன் ஒருவனே. அவனும் சிறுவன். அவன் கையில் வேல் கொடுத்து, வெளிது உடுத்து, தலை வாரி அவனை உடனே போர்க்களத்திற்கு அனுப்பினள் அத் தாய். அப்போது அவள் "போய் வா" என்று கூறி அனுப்பினளா ? இல்லை. "போ" என்றே கூறினள்.

"கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற் கிவள்தன்னை
யானை எறிந்து களத்தொழிந் தனனே
நெருநல் உற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே
இன்றும், செருப்பறைகேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்ல தில்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே"

(புறநானூறு-279)

Koviloor Digital Library



" பக்கத்து வீட்டிற்குப் போய்வா " என விடைகூறலும் " பக்கத்து வீட்டிற்குப் போய்வருகிறேன், வரட்டுமா " என விடை கேட்டலும் அல்லவோ இன்று தமிழன் வாழ்வில் உள்ளன ?

## வாழ்வில் ஒருமுறை

"போய் வருகிறேன்" என்று பண்டைத் தமிழ்க் குடும்பத்தில் கூறுமிடம் ஒன்று உண்டு. அது வாழ்வில் ஒருமுறை நேர்வதாகும். அது சாதல் பற்றிய அச்சத்தால் அன்று; காதல் பற்றிய அறிவால் ஆகும். பொருள் காரணமாகவோ, பிற காரணமாகவோ தலைவன் பிரிந்து செல்லுமுன், தலைவி எங்ஙனம் பிரிவாற்றுவாள் என வருந்துவான்; எனினும் தன் கடமையை எண்ணிப் பிரியத் துணிவான்; அப்போது தலைவியின் மனக்குறிப்பை நன்குணர்ந்த அவன் "போய்வருகிறேன்" என்பான். அவ்வாறு கூறியபோதும், தலைவி, " ஐய ! போதலைத் தெரிவிக்க வந்தாய். வருதலையும் உடன்கூறி என்னைத் தேற்ற முயல்கிறாய். போகாமை உண்டு எனின் எனக்கு உரை. போதல் வருதல் இரண்டும் உள எனின், மீண்டு வரும் வரை உயிர் வாழ்ந்திருக்க வல்லார்க்கு உரை" எனக் கூறுவாள்.

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

(திருக்குறள்—1151)



Koviloor Digital Library



# மதிப்புரை

1. இந்தியாவும் விடுதலையும் : ஆக்கியோர் : திரு. வி. கலியாண சுந்தரனார். விலை ரூ. 2.

. நூலின் தலைப்பே இது முதன்மையான நூல் என்பதை வெளிப் படுத்தும் அறிவு, பழக்கம், தொண்டு முதலியவற்றிற் பழுத்துத் துறைபோன நிலையில் இதனை ஆசிரியர் ஆக்கியிருக்கின்றார். விடு தலையுணர்ச்சிக்கு வரலாற்றறிவும் பொருளாதார உணர்வும் முதன் மையானவை. இவை நூலின் முற்பாதியிலும் பிற்பாதியிலும் முறையே விளக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை அடிப்படையாக வைத்துக்கொண்டு, மக்கள் நல்வாழ்வுக்குத் தேவையான பற்பல நற்கருத்துக்களை ஆசிரியர் அங்கங்கும் விளங்க அறிவுறுத்திச்செல் கின்றார். தமிழ் தெரிந்தவர்கள் கட்டாயமாகப் படிக்க வேண்டிய நூல் இது.

2. கிருஷ்ண பக்தி அல்லது குணமணி : ஆசிரியை : ஸ்ரீமதி K. V. நாகமணி. விலை அணா 12.

இது கதை நூல் ; நடையில் ஓட்டமிருக்கிறது. முதல் வெளியீடு; நாடு ஊக்கந்தர வேண்டுவது கடமை.

3. அத்யாத்ம யோகம் : விலை ராப்பர் ரூ. 2-8-0
4. அத்யாத்ம யாத்திரை : ,, ,, ரூ. 1-4-0
காலிகோ ரூ. 1-8-0.

5. நாரத பக்தி ஸூத்ரம், பஜகோவிந்தம், ஆத்மாநு ஸந்தானக் கிரமம் : ராப்பர். அணா 12.

இம் மூன்று நூல்களுக்கும் ஆசிரியர் குகதாஸ் : நாரத பக்தி ஸூத்ரம் முதலியன மொழிபெயர்ப்பு.

நூல்கள் மிகவும் முயன்று எழுதப்பட்டிருக்கின்றன. உள் ளுணர்வை மிகுத்துக்கொள்ள விரும்புகின்றவர்களுக்கு இவை உதவி

Koviloor Digital Library



யாயிருக்கும். பல நூல்களின் கருத்துகள் இவற்றிற் காட்சியளிக்கின்றன.

6. அதர்வ-வேதம் : அதர்வ வேத சம்ஹிதையின் மொழி பெயர்ப்பு : ஆசிரியர் : எம். ஆர். ஜம்பு நாதர். விலை ரூ. 5.

இத் தமிழ் மொழி பெயர்ப்பு நூல், திருப்பனந்தாள் காசி மடத்துத் தலைவர்களான ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் அவர்கள் பொருளுதவிகொண்டு வெளியிடப்பட்டிருக்கிறது. இவர்கள் தமிழ்க்குச் செய்துவரும் பேருதவிகளுள் இதுவும் ஒன்று. முதன்மையான வடமொழி நூல்கள் தமிழில் வெளிவருவது, தமிழர் விளக்கத்துக்கு இடஞ்செய்யும். இவ்வாசிரியரின் நன் முயற்சி போற்றுதற்குரியது.

7. யோகம் செய்ய வேண்டுமா? (பிரஞ்சு மூலத்திலிருந்து மொழிபெயர்த்தது) மொழிபெயர்ப்பாசிரியர் : பி. கோதண்டராமன், எம். ஏ., பி. எல். விலை ரூ. 1.

கேள்விக்கு ஏற்ற விடையும் அகற்கேற்ற விளக்கமும் நூலில் வருகின்றன. நூல் நுட்பதிட்பம் வாய்ந்தது. அருமையானது. இந் நூலின் கருத்துகள், அரவிந்த ஆசிரமத்தில் விளங்கும் 'அன்னை' யின் கருத்துகள். மொழிபெயர்ப்பில் எளிமை திகழ்கின்றது. இவ்வரிய திறத்துக்குத் தமிழகம் ஊக்கங் காட்டுதல் நன்று.

---

# செய்திகள்

## தமிழறிஞர் பிரிவு

திருவாளர் S. அன்வரத விநாயகம் பிள்ளை M.A., L.T. அவர்கள் அணுக்கத்தில், இவ்வுலக வாழ்வு நீத்தமை பெரிதும் இரங்குதற்குரியதாயிருக்கின்றது. இவர்கள் கல்லூரி ஆசிரியராகவும், பல்கலைக்கழக ஆராய்ச்சியாளராகவும், நூலாசிரியராகவும் விளங்கியவர்கள். கழகத்துக்கு வேண்டியவர்கள். இவர்கள் பிரிவு குறித்து வருந்தும் சுற்றத்தார் நண்பர் முதலியோர்க்கு எங்கள் வருந்துதல் உரியது. இவர்கள் ஆருயிர் திருவருள் ஒளி பொருந்துக.

Koviloor Digital Library

சென்னையில் விரைவில் நடைபெறப்போகும்

## முழு இந்தியத் தமிழர் மத மாநாட்டின்

# நோக்கங்கள்

1. இப்போது தமிழ் மக்களால் கையாளப்பட்டுவரும் ' இந்து மதம் ' தமிழ் மக்களுக்கு உடன்பாடன்று என்பதை நிலைநாட்டுதல்.

2. இப்போதுள்ள இந்து லா (மனுதர்மச் சட்டம்) தமிழர்களுடைய கொள்கைக்கு முற்றிலும் மாறாய் இருப்பதால், தமிழர்களுக்குத் தனியான சிவில் சட்டம் (Tamil Law) ஏற்படுத்திக் கொள்ளுதல்.

3. ஆண்களைப்போலவே பெண்களுக்கும் சொத்துரிமை இருக்கவேண்டுமென்பதைச் சட்ட வாயிலாக ஏற்படுத்த வற்புறுத்துதல்.

4. கைம்பெண்கள் (விதவைகள்) திருமணம் செய்துகொள்ளக் கூடிய வயதுள்ளவர்களாயும், விருப்பமுள்ளவர்களாயும் இருந்தால், அவர்கள் மறுமணம் செய்துகொள்வதில் உள்ள தடையை விலக்கும்படி செய்தல்.

5. பிறப்பினால் மக்களுக்குள் உயர்வு தாழ்வு இல்லை என்னுந் தமிழர் கொள்கையை நடைமுறையிற் கொண்டுவரும்படி செய்தல்.

6. தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டுள்ள எல்லாரும், கிறித்தவர்கள் தங்களைக் ('கிறித்தவர்' என்றே சொல்லிக் கொள்வதுபோலவும், முகம்மதியர்கள் தங்களை 'முகம்மதியர்' என்றே சொல்லிக்கொள்வதுபோலவும்) தங்களைத் 'தமிழர்' என்றே சொல்லிக்கொள்ள வேண்டுமென்பதை வற்புறுத்துதல்.

7. தமிழ் மக்கள் பிறந்தநாள் தொடக்கம் இறக்கும் வரையும் அதற்குப் பின்னும் செய்யவேண்டிய எல்லாச் சடங்குகளையும் தமிழ் முறைப்படித் தமிழிலேயே தமிழ்க் குருக்கள்மாரைக்கொண்டே செய்வித்தல் வேண்டுமென்று வற்புறுத்துதல்.

8. கடவுள் வழிபாடு செய்வதில் தமிழ்மக்கள் எல்லாரும் ஒரே முறையையே கையாளுதல்வேண்டுமென்பதை வற்புறுத்துவதோடு, கடவுள் வழிபாடு செய்யும் முறையையும் எல்லாரும் ஒப்புக்கொள்ளக் கூடிய முறையில் வகுத்துக் கொடுத்தல்.

9. தமிழ் மக்கள் ஒருவருக்கொருவர் உண்ணல்—உறவாடல்—பெண் கொடுத்தல், வாங்குதல் முதலியன செய்துகொள்வதில் சிறப்பான தடை எதுவும் ஏற்படுத்தாவிட்டாலும், தமிழ் மக்கள் எல்லாருக்கும் சிவில் சட்டமும், கடவுள் வழிபாடும் ஒரே தன்மையாய் இருக்கும்படி செய்தல்.

10. மாநாட்டின்போது தமிழ்ப்பேரறிஞர்களாற் கொண்டுவரக் கூடிய, இதிற் காணப்படாத வேறு சிறந்த தமிழர் முறைகளையும் எல்லாரும் ஏற்றுக்கொள்ளும்படி செய்தல்.

வாணியம்பாடி,<br>22—3—40.

வே. சண்முக முதலியார்,<br>செயலாளர்.

Koviloor Digital Library



சிறைச்சாலையைச் சீர்திருத்திய

எலிசபேத் பிரை பெருமாட்டி

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—வைகாசி [பரல்-உ

# திகழ்க!

தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு

—திருவள்ளுவர்.

வளமான நிலங்கள்கூடச் சில காலங்களில் நல்ல விளையுள் இல்லாமல் இருக்கின்றன. அறிவும் முயற்சியும் உடையோர்க்குக்கூடக், கைவருஞ் செல்வமுந் தவறிப்போகின்றது. காரணம் என்ன?

'நாட்டில் நல்லெண்ணமுடைய சான்றோர்கள் திகழ வேண்டும். அவர்களில்லாமல் வேறு எவர் இருந்தாலும் எவை இருந்தாலும் பயனில்லை; அது நாடாகாது' என்று திருவள்ளுவர் காரணம் கூறுகின்றார்.

நல்ல உரையாசிரியரான பரிமேலழகர் இக் கருத்தை எப்படியோ துருவிக் கண்டு, 'தள்ளா விளையுள்' என்றமையால் "வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது"; 'தாழ்விலாச் செல்வர்' என்றமையால் "அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள் வாய்த்தல் பெறப்பட்டது" என்று கூறிவந்து, 'தக்கார்' என்றமையால் "அழிவின்மை பெறப்பட்டது" என்று பெரிதும் நுனித்தறிந்து திட்பமாய் விளக்கியிருக்கின்றார்.

தக்கவர்கள் நாட்டில் இல்லாவிட்டால் உழவர்கள் விளையுள் செய்துவிட முடியாது; பயிர்களும் விளைய மறுக்கும். வணிகர்கள் செல்வம் பெருக்கிவிட முடியாது. சிறிது செய்யு

Koviloor Digital Library



நேர்ந்தாலும், அவ் வினையுளும் செல்வமும் அழியாதபடி பாது காத்துக்கொள்ளுதலும் அவர்களால் இயலாது.

நாட்டில் அறவோர் திகழ்ந்தால், எங்கும் அற நினைவு மிகும். மற நினைவு படராது. அப்போது மாந்தர்க்கு வினை யுளும் பொன்னும் மிகுக்கின்ற நல்லறிவும் நன்முயற்சியும் நன்முறையில் தோன்றும்; நிகழும். அங்ஙனந் தோன்றி நிகழும்போதும், நிகழ்ந்து பயன் கண்டபோதும் தீய நினைவின ரால் இடருண்டாகாது; அழிதலும் நேராது. இவ்வாறு, உலக முயற்சியும் பயனும் அறவோரால் என்றும் அழியாமல் வளர்ச் சியாய் நடைபெற்றுச் செல்லும்.

நாட்டுக்கு உயிர் அறவோரேயாவர்; அம் முதன்மை கருதியே திருவள்ளுவர், உழவர்க்கும் வணிகர்க்கும் நடுவாகத் 'தக்கார்' என்பவரை நிறுத்தியிருக்கின்றார்.

ஆகவே, நாட்டிற் சான்றோர்களை இருக்கச் செய்வது, விளங்கச் செய்வது முதலியன முதன்மையான பணியென்று கொள்ளவேண்டியிருக்கிறது.

வினையுள்களையும், பெருக்கவேண்டும்; வாணிபத்தையும் வளர்க்கவேண்டும். இவ் விரண்டுக்கும் மேலாகச் சான்றாண் மையையும் மிகுக்கவேண்டும். எங்கும் அற நினைவுகள் நிகழு மாறு செய்யவேண்டும். இங்ஙனம் உழவரும் அறவரும் வணி கரும் நாட்டில் மிகுந்து திகழும்படி முயற்சி செய்வதே, நாட் டுப்பற்றுடையோரது செயல் என்று நன்றாய்த் தெரிகின்றது. இயன்றவரையிற் செய்துகொண்டே வந்தால், வரவர அரசியல் வளர்ச்சியும் உண்டாகும். சான்றோர் மிகுந்தால், வளம் மிகுந்தால்—எல்லாம் மிகுகின்றன.

அறவோரை மறந்துவிட்டுச் செய்யும் எம் முயற்சியும் நாட்டுக்கு நன்மையும் அழிவின்மையுந் தராது என்று அறி வுறுத்தியருளிய திருவள்ளுவருக்கு நாம் என்ன கைம் மாறு செய்யவல்லோம்!

நாட்டில் நல்லவர்கள் திகழ்க என எல்லோரும் வேண்டு வோம்.

Koviloor Digital Library

# யார் தெரியுமா?

காலையிற் பத்து மணி யிருக்கும். ஓர் இனிய குரலொலி கண்ணியமாய்க் கேட்டது. 'செல்வி'யின் அலுவற்கூடத்துக்கு யாரோ பாடிக்கொண்டு வருவது போலத் தோன்றிற்று. பாட்டு மிடுக்காயிருந்தது. வர வரத் தெளிவாகவும் புலப்பட்டது. அது குறச் சிந்து.

'தொல்காப்பியர் திருவள்ளுவர்
எங்கள் தவப் பெரியார்
எங்கள் தவப் பெரியார்—அவர்
தொல்காப்பியம் திருக்குறள்கள்
எங்கள் மறை நூல்கள்
எங்கள் மறை நூல்கள்'

என்று தமது வலக்கையை உயர்த்தி உயர்த்தி வெற்றி கூறுவதுபோலப் பாடிக்கொண்டு, ஒருவர் மிக்க கிளர்ச்சியோடு உள்ளே நுழைந்தார்.

ஓர் இருக்கையைக் காட்டி 'அமருங்கள்' என்று சொன்னதுகூட அவருக்குக் கேட்கவில்லை. மீண்டும் உரத்த குரலிற் பெருமிதச் சுவையோடு அக் குறச் சிந்தைத் திருப்பித் திருப்பி இரண்டு முறை அழுத்தந் திருத்தமாகப் பாடிவிட்டுப், பின் அவராகவே ஓர் இருக்கையில் அமர்ந்துகொண்டு, 'ஆம், நான் யார் தெரியுமா?' என்று பரக்கக் கேட்டார்.

எல்லாரும் அவரை வியப்புடன் உற்றுநோக்கினர். அதற்குள், மீண்டும் அவர், 'ஆம், நீங்கள் யார் தெரியுமா? சென்னையானு லென்ன? தென்காசியானு லென்ன?' என்று கேட்டார்.

அப்படியானுல் இவர் இருப்பது தென்காசி போலும் என்று அருகிருந்தவர் சிலர் பேசிக்கொண்டனர்.

Koviloor Digital Library



'ஆம்; விழா நடந்தவுடனே புறப்பாடுதான். தமிழ் நாட்டில் மற்ற இடங்கள் முழுமையும் ஒரே கண்ணுகப் பார்த்துக்கொண்டு வந்துவிட்டேன்; சென்னையையும் ஒரே பார்வையிற் பார்த்துவிடவேண்டும்; அவ்வளவு தான்; ஓம் திருக்குறள் போற்றி; ஓம் திருக்குறள் போற்றி; ஓம் திருவள்ளுவர் திருவடிமலர்களே துணை;

'ஓம் ஓம் தொல்காப்பியத் தேவா
ஓம் ஓம் திருவள்ளுவத் தேவா

யாம் யாம் ஒருவராளுேம் வாழ்வோம்
யாம் யாம் தமிழராளுேம் வெல்வோம்'

என்று கிளர்ச்சியாகப் பாடத் தொடங்கிவிட்டார். அவரை யறியாமலே அவர் கைகள் கால்கள் எல்லாம் ஒத்துத் தாளம்போடத் தொடங்கின. உடம்பும் ஏற்ற படி அசைந்துகொடுத்தது. வலது கைக்கு ஒரு 'தம்புரா' வும், இடது கைக்கு ஒரு 'கஞ்சரா'வுங் கொடுத்துவிட்டால், தம்மை மறந்து நடனத்துக்கே எழுந்துவிடுவார்போலத் தோன்றியது. மறுபடியுங்கூட ஒருமுறை அந் நடனத் தோடு தமிழ் நாட்டையே இன்பமாய்ச் சுற்றிவருவார் போலவுந் தெரிந்தது.

* * *

தென்காசி — விழா — திருவள்ளுவர்—தமிழர் என வெல்லாம் இவர் துண்டு துண்டாகச் சொன்ன குறிப்பு கள், சில நாட்களுக்கு முன் தென்காசியில் திரு. வி. க. அவர்கள் தலைமையில் நடைபெற்ற திருவள்ளுவர் கழகத்தின் கரு-ம் ஆண்டு விழாவை உடனே நினைவு கூர்வித்தன. ஆம்; அந்த விழா நிகழ்ச்சிதான் இவரை இத்தனைப் பாடு படுத்தியிருக்கிறது.

திரு. வி. க. தமிழகத்தைத் தட்டியெழுப்புந் தலைவர்; உணர்ச்சிக் கொழுந்து. தமிழகத்தை ஒன்றுபடுத்த வல்

Koviloor Digital Library



லது தமிழ்மொழியொன்றே என்று நீண்ட காலமாகவே எழுதியும் பேசியும் வருகின்றவர். சாதி குலம் சமயம் முதலியவற்றால் தமிழ்நாடு தாறுமாறாகப் பிளவுபட்டு வேற்றுமைப் பேய் தலைவிரித்தாடுதல் கண்டு பெரிதிரங்குவோர். அதற்கு மருந்து, தமிழ்-தமிழ்-தமிழே என்று யாண்டும் பறையறைந்துவரும் இயற்கை மருத்துவர்.

இத்தகைய பொதுநோக்குடையவர்க்கு, அதிலுந் திருவள்ளுவரைப்பற்றிப் பேச நேர்ந்தாற், சொல்ல வேண்டுமா? வேறு சொல்வானேன்? பேச்சு எல்லாரையும் ஒருவராக்க முயன்றிருக்கின்றது.

'தமிழ் நாட்டிற் சமய சச்சரவுகள் ஏற்பட்டுத் தமிழ் மக்கள் வேறுவேறாகப் பிரிந்திருக்கிறார்கள்; பகைமையும் உண்டாயிருக்கிறது. ஒற்றுமை ஏற்பட வேண்டும். அதற்கு மருந்து, திருவள்ளுவர்-திருவள்ளுவர்-திருவள்ளுவரே' என்று அவ் விழா உணர்ச்சியூட்டியிருக்கிறது.

* * *

உள்ளபடியே, தமிழகத்துக்கு வாழ்வுதர வந்த, ஏன்-உலகத்துக்கே வாழ்வுதர வந்த நல்ல உலகத் தலைவர் திருவள்ளுவர் என்பது முழு உலகமும் ஒப்ப முடிந்த உண்மை. தொல்காப்பியர் இலக்கணவழியாக வாழ்வளிக்க வந்த தலைவரானால், திருவள்ளுவர் இலக்கிய வழியாக வாழ்வு பொழிய வந்த தலைவராகின்றார்.

இலக்கண இலக்கியத் தலைவர்களால் உலகத்துக்கு என்ன செய்துவிட முடியும் என்று குமுறிக்கொண்டிருந்த பிற துறைத் தலைவர்கட்கெல்லாம், கடைசியாக இந்த இலக்கண இலக்கியத் தலைவர்களே நிலையான ஆட்சியாளராகத் திகழ்கின்றனர். இவர்கள் அடிச்சுவடு பற்றியே யாண்டும் எவரிடையிலும் யாரும் பணிசெய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கின்றது. தமிழ் நாட்டில் தொல்காப்பியரும் திருவள்ளுவரும் நல்ல மேலிடத்தை

Koviloor Digital Library



வலிவாய்க் கைப்பற்றியிருக்கிறார்கள். அவர்களுக்கு எத்தனைப் பெருந்தன்மை! அப் பெருந் தன்மையினும் பார்க்க எத்தனைப் பேரிரக்கம்!

திருவள்ளுவர், தாம் வழங்குங் கருத்தமுதங்களைச் சமயப் பகைமை முதலியவைகளால் தமிழ் மன்பதை, ஒருங்கிருந்து உண்ணுமல் வீணுக வினைப்பசியின் கொடுமைக்கு எங்கே ஆளாகிவிடுகின்றதோ என்னுங் குழைந்த அளக்கலாகாப் பேரிரக்கத்தாலன்ருே, யார்க்கும் நோவாதபடி, அவ்வளவு விழிப்பாய், அவ்வளவு வல்லமையாய், அவ்வளவு பொதுமையாய்த் தமது மா பெரும் மறை நூலைப் பற்றின்றி அருளிச்செய்திருக்கின்றனர்! திருக்குறளின் உருக்கத்துக்கு இதனினும் வேறு என்ன வேண்டும்? இந்த நல்லெண்ணம் ஒன்றுக்கே தமிழ் மக்கள் தாமும் தமது நாடும் தமது உடைமையுமெல்லாம் அப் பெருமான் திருவடிகட்கு உரிமையாகுமாறு அடைக்கலமாகி, அவர் கருதுமாறு அனைவரும் ஒருவர் என்னும் ஒற்றுமையையடைய முற்படலாம்.

உலகத்துக்கே ஒருவரான அப்படிப்பட்ட திருவள்ளுவர் முதன்மை யில்லை; மன்பதை யுலகுக்கே வினைப்பசி தீர்த்து இறவாத நாகரிகம் பயப்பிக்கும் அவர்தந் திருக்குறளமுதம் முதன்மை யில்லை; பாழுஞ் சாதிசமயப் பிளவுகள் முதன்மை; பாழுங் கொள்ளல் கொடுத்தற் பிரிவுகளின் புல்லிய வேற்றுமைகள் முதன்மை; நாகரிக உலகம் நகைக்கின்றது. சான்ருேர் வருந்துகின்றனர்.

ஆனல், ஒரு மகிழ்ச்சி; தமிழகத்துக்கு இப்போது வைகறை நேரம். விடியுங் காலம் அண்மையிலிருக்கின்றது. தொண்டர்கள் விழித்துக்கொண்டார்கள்; தலைவர்களின் ஆணை முழக்கங்கள் தெருவுதோறுங் கேட்கின்றன. அச்சத்துக்கு இடமில்லை. இனி உய்வுதான்.

* * *

Koviloor Digital Library



இப்போதுதான் அந்தத் தென்காசி விழாச் சுவையாளர்,

'யாம் யாம் ஒருவரானோம் வாழ்வோம்
யாம் யாம் தமிழரானோம் வெல்வோம்'

என்று தம்மை மறந்து பாடிக்கொண்டிருந்த பாட்டின் கருத்து அதே சுவையோடு தெரிகின்றது. 'ஆம், நான் யார் தெரியுமா' என்று அவர் கேட்ட கேள்விக்கு அவரையே விடைசொல்லச் செய்தால், 'நான் சைவன், நான் வைணவன், நான் வேளாளன், நான் நாய்க்கன், நான் மதுரையான், நான் சென்னையான்' எனவெல்லாம் விடை சொல்லாமல், ஒரே பேச்சாக 'ஆம், நான் தமிழன்; தெரியுமா' என்று விறைப்பாகவே விடைசொல்வார் என்பதில் ஐயமில்லை ;

நாமெல்லாமும் அப்படியே சொல்லவேண்டும் என்று அவர் எண்ணியிருக்கிறாரென்பது, 'நீங்கள் யார் தெரியுமா ?' என்று அவர் மற்றொரு கேள்வியுங் கேட்டதிலிருந்து தெரிகின்றது. 'எல்லாம் ஒரே கண்ணைப் பார்த்துக்கொண்டு வந்துவிட்டேன்' என்பதுகூட, எல்லாரையும் 'தமிழர்' என்னும் ஒரே பார்வையாகப் பார்த்துக்கொண்டு வந்துவிட்டேன் என்னும் பொருள் கொண்டதாகத்தான் இருக்கவேண்டும் ;

இனித், தமிழ் நாட்டில் எல்லாருமே இங்ஙனங் கேட்கவும் பார்க்கவும் தொடங்கிவிட்டால், அப்புறஞ் சொல்ல வேண்டுமா ? வேனிற்கால விடியல்போல உடனேயும் பொழுது விடிந்துவிடக்கூடும். விடியட்டுமே ;

"யார்யாரோ யாரிவரோ இவராரோ யாரவரோ"

என்று எண்ணிக்கொண்டும் பாடிக்கொண்டுமிருந்த நிலைமையெல்லாம் போய், ஒருவர் முகத்தை ஒருவர் விரைவிற் கண்டு அளவளாவ நேர்கின்றது. வாழி திரு. வி. க. தலைமையுரை.

Koviloor Digital Library

# கிரேக்க தெய்வங்களின் புராண கதை

"கா. சுப்பிரமணிய பிள்ளை M. A., M. L."

## I

'நாளும் கோளும்' என்பதில் நாள் என்பது நட்சத்திரத்தைக் குறிக்கும். கோள் என்பது கிரகங்களைக் காட்டும். பழைய கொள்கைப்படி கோள்களிற் பெரியது வியாழன் மண்டலம். வியாழனைக் கிரேக்கர்கள் ஜுபிட்டர் என்பர். ஜுபிட்டரே கிரேக்க தெய்வங்களுட் பெரியவர். அவரை நாம் வியாழன் அல்லது 'வியாழ பகவான்' என்று அழைக்கலாம். ஆனால் இந்திய நாட்டுப் புராணங்களில் வியாழன் தேவ குரு. அவர் வரலாறும் ஜுபிட்டர் வரலாறும் ஒன்றல்ல. நமது புராணம் வேறு; கிரேக்க புராணம் வேறு. ஒற்றுமையும் சில இடங்களிற் காணலாம். ஐரோப்பியப் பெருங்காவியங்களில் ஜுபிட்டர் கதை பெரு வழக்காக எடுத்தாளப்படுதலால், அதைப்பற்றி நாம் இக்காலத்தில் தெரிந்துகொள்ளுதல் கட்டாயமே.

முதலில் ஜுபிட்டரின் முன்னோர் வரலாறு ஒரு சிறிது அறிந்துகொள்ளுதல் நலம். கிரேக்கர்களது பண்டைக் கொள்கைப்படி உலகப்படைப்புக்குமுன் கடலும் காற்றும் நிலமுமாகிய எல்லாம் கலந்து உருவமற்ற திரட்சியாக இருந்தது. அதற்குத் தலைவன் குழப்பம் என்னும் தெய்வம். இரவு என்பவள் அவன் மனைவி. அவள் நிறமும் கறுப்பு; ஆடையுங் கறுப்பு. குழப்பமும் இரவும் கவலையின்றி நெடுநாள் ஆண்டு அலுத்துத், தங்கள் மகனாகிய இருட்டை ஆட்சித்துணையாக அழைத்தனர். அவன் வந்ததும் தகப்பனாரைத் தள்ளிவிட்டுத் தானே அரசு புரியலானான். அவன் தனக்கு வாழ்க்கைத் துணையாகத் தன் தாயாகிய இரவையே மணந்துகொண்டான். இக் கதை வகுத்த காலத்தில் கிரேக்கருக்கு ஆண் பெண் வேற்றுமை தவிர, இனமுறை வேற்றுமை தெரியவில்லை போலும்!

இரவுக்கும் இருட்டுக்கும் இரண்டு அழகான குழந்தைகள் பிறந்தார்கள். ஒரு பிள்ளையின் பெயர் ஒளி; மற்றொரு பிள்ளை

Koviloor Digital Library



யின் பெயர் பகல். ஒளி ஆணும், பகல் பெண்ணும்போலும். அவ்வாறு இல்லாமற்போனல், அவர்கள் இருவருக்கும் காமன் என்ற பிள்ளை பிறக்கமுடியாது. இருவரும் உடன்பிறந்தாராய் இருந்தும் மணஞ் செய்துகொண்டார்களோ என்னில், தங் கையை மணப்பது ஒருகாலத்தில் இயற்கைபோலும்! ஒளியும் பகலும் காமனும் கலந்து கடலையும் நிலத்தையும் படைத்தார் கள். ஒளியும் பகலும், இரவையும் இருட்டையும் துரத்திவிட்டுத் தாங்களே அரசாண்டனர். அவர்கள் காலத்திலேதான் உல கில் வெளிச்சமும் பரவிற்று. குழப்பமான திரட்சியினின்று ஒழுங்கான உலகம் உண்டாயிற்று. நிலம் முதன்முதல் உண் டானபோது மரங்கள், பூக்கள், புல், புள் ஒன்றுங் கிடையாது.

அது கண்ட காமன் உயிர்கொடுக்கும் அம்புகளை நில மாதின் நெஞ்சிற் புகுத்தினன். உடனே எங்கும் நல்ல பசுமை யான செடிகளும், பல நிறப் பறவைகளும், எல்லாவகைப் பிராணிகளும் தோன்றலாயின. ஓடைகளில் தெளிவான தண் ணீர் பாய்ந்து சென்றது. மீன்கள் துள்ளி விளையாடின. எங் கும் இயக்கமும் இன்பமும் பொங்கிப் பொலியக் கண்ட நில மாது வானம் என்னும் மகனைப் பெற்றுள். ஒளிக்கும் பகலுக் கும் பின்னர் வானமும் நிலமும் மணந்துகொண்டு அரசாளத் தொடங்கினர். அவர்களது அரசநகர் கிரேக்க தேசத்து நடுவில் இருந்த ஒலிம்பசு (Olympus) மலையில் இருந்தது. அதுவே கிரேக்கதெய்வங்களின் நிலையமாய்விட்டது.

கிரேக்க கொள்கைப்படி பூமியானது உருண்டையாக இல்லாமல் வட்டவடிவமாக இருந்தது. நில வட்டத்தைச் சுற்றிச் சாந்தப் பெருங்கடல் என்ற பேராறு சத்தமில்லாமல் ஓடிக்கொண்டிருந்தது. அதினின்றும் கடலும் எல்லா ஆறு களும் நீர் வருவாய் பெறலாயின. கிரேக்க நாட்டுக்கு வடக்கே, மக்கள் ஒருவரும் போகமுடியாத ஒளி நிறைந்த புண்ணிய நாடு இருந்தது. அங்கே வாழ்ந்த புண்ணியவான்கள் இள வேனிற் கால நலங்களை எந்நாளும் நுகர்ந்தனர். அவ்விடத் தில் நோய், முதுமை, சாவு முதலிய குறைகள் இல்லை. தெய் வங்கள் அடிக்கடி அங்குள்ளவர்களோடு கலந்து அளவளாவி அவர்கள் விருந்துகளையும் விளையாடல்களையும் ஏற்று மகிழ்ந் தன. இவ் வடநாடுபோலவே தெற்கேயும் இத்தியோப்பியர்

Koviloor Digital Library



என்ற மக்கள் நற்குணம் நல்லொழுக்கம் உடையவர்களாய்த், தங்கள் நடுவில் கடவுளர் அடிக்கடி காட்சிகொடுக்கப் பெற்றனர். சில கிரேக்க புராணிகர் சாந்தப்பெருங்கடலின் தூரமான கரையில் அழகுத் தீவுகள் இருந்தனவென்றும், மக்களுள் ஒழுக்கத்திற் சிறந்து தெய்வங்களின் அருள்பெற்றவர்கள் இறத்தல் இல்லாமலே அங்கே சென்று அழிவற்ற இன்பவாழ்வு பெற்றனரென்றுங் கூறுவர்.



Koviloor Digital Library

# பயிர் செய்தல்

"வேங்கடாசலம்"

## 1. வேளாண்மையின் முதன்மை

"சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை." —திருக்குறள்

செய் தொழில்கள் எல்லாவற்றிலும் வேளாண்மையே சிறப்புடையது; தலையாயது. மேலேகாட்டிய திருக்குறள் இதனைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது.

மனிதவாழ்க்கைக்கு இன்றியமையாதனவா யிருக்கும் ஊண், உடை என இரண்டும் வேளாண்மை யொன்றின் மூலமாகவே யடையக்கூடும். வேட்டையின் வழியாய் ஊனுணவும் தோலுடையும் முற்காலங்களில் பெறப்பட்டு வந்தன. புலாலும் கம்பளி உடையும் இக்காலத்திலும் பலரால் கொள்ளப்படுவதைக் காணலாம். ஆயினும் அவற்றைத் தரும் விலங்கினங்கள் புல்பூண்டுத் தொகுதியின்றி உயிர்நிலைத்திருக்க வழியில்லை.

## 2. சீர்கேடான காரணம்

நமது நாடு ஒரு வேளாண்மை நாடு. மற்றெல்லாத் தொழில்களையும்விட வேளாண்மையே முதன்மையானதாகத் தொன்றுதொட்டு நடந்துவருகின்றது. "தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது" என்னும் முதுமொழியால் அக்காலத்து மனப்பான்மை இன்னதென விளங்கும். ஆனால் இக்காலத்திலோ அதற்கு நேர்மாறாக 'உழுதூண் சுவையின் தொழுதூண் இனிது' என்றுசொல்லும்படியிருக்கிறது.

வேளாண்மை புறக்கணிக்கப்படுவதுடன் சில இடங்களில் கைவிடவும்பட்டு அதன் நிலையில் 'பணி' இருப்பிடங்கொண்டுள்ளது. முற்காலத்தைப்போல் வேளாண்மையினால் இப்பொழுது பயனடையக் கூடவில்லை யென்பதே அது புறக்கணிக்கப்படுவதற்குரிய தலைசிறந்த காரணமாகும். வேளாண்மையின் மூல

Koviloor Digital Library



மாகவே மிக உயர்நிலை யடைந்திருந்த ஓர் நாடு, பிற்காலத்தில் பொருள் கேடடைந்ததன் காரணமாக அத்தொழிலைக் கைவிடும்படியான நிலைமை ஏற்படுமானால், அதற்குப் போதிய காரணங்கள் இருந்தாகவேண்டும்.

இந்தியாவில் எத்தொழிலும் பண்டை முறையைப் பின் பற்றியே இப்பொழுதும் நடத்தப்பட்டு வருகின்றது. அதற்குக் காரணம் அம்முறை அக்காலத்தில் மிகச்சிறந்ததாகக் கருதப்பட்டுவந்ததே யாகும். இவ்வழக்கம் சிலகாரியங்களில் நன்மை தந்தபோதிலும் பிறவற்றில் அதற்கு மாறான கெடுதியையே தருகின்றது. காலவேறுபாட்டு இயல்புகளைக்கூர்ந்து நோக்காமல் ஒரே முறையையே எக்காலத்தும் பின்பற்றுவதனால், கருதிய பயன் கிடைப்பது அரிதாகும்.

சிறுமிகள் தங்கள் பெற்றோரைப் பார்த்துச் சமையல் தொழில் செய்து விளையாடுகிறார்கள். சோறு கறி முதலியவற்றிற்கு அவர்கள் கையாளுவது மண், கல் முதலியவையே. அவைகள் உண்ண உதவாவென்பதைஅவர்கள் நன்கு அறிவார்கள். அப்படி அறிந்தாலும் அவ் விளையாட்டை அவர்கள் விடுவதில்லை.

வேடிக்கையாகத் திரும்பத்திரும்பச் செய்யும் அவ் விளையாட்டானது, அவர்களுடைய மனத்தில் நன்கு பதிந்து வண்மையாக வேரூன்றிவிடுகின்றது. பிற்காலத்தில் அத்தொழில் அவர்களுக்கு மிக எளிதானதாகத் தோன்றுவதுடன், அதில் அவர்கள் திறமைசாலிகளாக விளங்கவும் காரணமாயிருக்கின்றது. ஆனால், விளையாட்டில் கையாடிய மண், கல் முதலியவற்றையே பிற்காலத்திலும் பொருள்களுக்கீடாக வழங்கினால் பயன் என்ன கிடைக்கும்? அதற்காகச் சமையல் தொழிலே வீணானதென்றும், அதனை முதலில் அமைத்தவர்கள் வேறொன்றுக்கும் உதவாதவர்கள் என்றும் சொல்வது நேர்மையாகுமா?

இதைப்போலவே, ஒரு தொழில் முற்காலத்தில் மிகுந்த ஊதியம் தந்தது என்னுங் காரணத்தைக்கொண்டு, காலவேற்றுமைகளைக் கருதாமல், அதே முறைகளை அப்படியே இப்

Koviloor Digital Library



பொழுதும் பின்பற்றி அதில் பொருள் இழப்பாகின்றதென்று சொன்னால், அதைப்பற்றி என்னவென்று சொல்வது ?

## 3. நாட்டின் பழைய நிலைமை

முற்காலத்தில் மக்கள் வாழுமிடங்களும் பயிரிடும் நிலங்களுந்தவிர மற்ற இடங்கள் காடுகளாயிருந்தன. காடுகள் மிகுதியாயுள்ள இடங்களில் மழைச்செழிப்பு உண்டென்பது பொதுவாக யாவரும் அறிந்தது. மற்றும், கதிரவன் வெப்பத்தால் நிலம் வறண்டுபோகாமல் காடுகள் பாதுகாத்துக்கொள்ளும். இதனால் நாடு நீர் வளமும், இலைகள் மக்கி நிலவளமும் பெற்றிருந்தது. வேளாண்மைக்கு இன்றியமையாதவைகளாயிருக்கும் கால் நடைகளுக்கு வேண்டிய புல் நிலங்களும் ஏராளமாக இருந்தன. இக் காரணங்களால் உரமிடுதல், நீர்பாய்ச்சுதல், கால் நடைகளைப் பாதுகாத்தல் முதலிய இனங்களில் செலவு மிகவும் குறைந்திருந்தன. அன்றியும் கால் நடைகளின் பெருக்கத்தால் உரங்கள் ஏராளமாகக் கிடைக்கவும், அவற்றின் விலை குறையவும் வழியிருந்தது.

இக்காலத்தில் நிலைமை அதற்கு நேர் மாறாயிருப்பதைக் காணலாம். வளமான நிலத்தில் உரமிடாமல் அக்காலத்தில் கூடின ஊதியம் கிடைத்ததென்ற எண்ணத்தைக்கொண்டு, எத்தனையோ நூற்றாண்டுகளுக்குப் பின் அதே வழக்கத்தைப் பின்பற்றி, இப்பொழுது முன்போல் ஊதியம் கிடைக்கவில்லையென்று சொல்வதில் என்ன பயன் இருக்கின்றது ?

## 4. கூர்ந்து நோக்கத்தக்க சில பகுதிகள்

பூண்டுத் தொகுதிகளில் ஓரினத்தைப் பயிராக்க வேண்டுமானால்,

1. அப் பயிருக்கு என்னென்ன தாதுப்பொருள்கள் தேவை ?

2. அவற்றுள், அது பயிரிடப்படும் நிலத்தில் எந்தத் தாதுப்பொருள், எந்த எந்த அளவிலிருக்கின்றது ?

3. அப் பயிரின் மொத்த வயது எவ்வளவு ?

Koviloor Digital Library



4. அக்காலத்திற்குள் அந்நிலத்திலுள்ள தாதுப் பொருள்கள் அப் பயிருக்கு உணவாகக் கூடிய நிலைமையிலிருக்கின்றனவா?

5. மற்றும் அதைப் பயிரிடும் முறைகள் அதாவது செய்ய வேண்டிய பக்குவங்கள் எவை?

என்பவைகளைச் சிறப்பாகச் சிந்திக்கவேண்டும். நிலத்தில் தேவையான தாதுப் பொருள்கள் இல்லாவிட்டாலும் அல்லது இருந்து பயிருக்குக் காலத்தில் உணவாகக்கூடாத நிலைமையிலிருந்தாலும், அத் தாதுக்கள் அடங்கிய உரவகைகளை ஏற்ற அளவில் அந் நிலத்துக்கு இடவேண்டும்.

## 5. தாதுப் பொருள்களின் இருவகை நிலைகள்

தாதுப் பொருள்கள் 'நிலத்திற் பதமடைந்தது' 'பதமடையாதது' என்று சொல்லக்கூடியபடி இரு நிலைகளிலிருக்கின்றன. உரவகைகளிலும் இப்படி உண்டு. 'பதமடைந்தது' என்று சொல்லப்படுவது வெல்லத்தைப் போன்றது. வெல்லமானது தண்ணீரில் கரைவதுபோலப் பதமடைந்த தாதுப் பொருளும் தண்ணீரில் கரைந்து பயிர்களால் எளிதிலேற்றுக் கொள்ளப்படும் நிலையில் உள்ளது. 'பதமடையாதது' தண்ணீரில் கரையாத கல் முதலியவற்றைப் போன்று, எளிதில் பயிர்களுக்கு உணவாகாதது. நாளடைவிற் பதமாகிப் பயிர்களுக்கு உணவாகக்கூடும்.

இப்படிச் சொல்வதனால் 'பக்குவமடையாத' நிலையிலுள்ள தாதுப்பொருள் நிலத்திற்கு வேண்டுவதில்லை யென்று எண்ணிவிடலாகாது. இதற்கு மாறாக இந் நிலையிலுள்ள தாதுப் பொருள்கள் ஒருநிலத்தில் எவ்வளவுக்கெவ்வளவு மிகுதியாயிருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அந் நிலம் வளப்பமுள்ளதாகக் கொள்ளப்படும். 'பதமாகாத' நிலையிலுள்ள உரம், சேமநிதிக்கு ஒப்பானது. இங்கே சொல்ல வந்தது என்னவென்றால், 'பதமாகாத' நிலையிலுள்ள உரத்துடன் 'பதமடைந்த' நிலையிலுள்ள உரமும் ஏராளமாக நிலத்துக்கு வேண்டும் என்பதே.

Koviloor Digital Library



## 6. தாதுப் பொருள்களை நிலம் எவ்வழிகளில் அடைகின்றது?

காற்றிலிருந்து சில தாதுக்களை நிலம் பெறுகின்றது. கதிரவனது வெப்பம் காற்றிலுள்ள தாதுப்பொருள்களை வேறு வேருகப் பிரிக்க அவற்றை நிலம் ஏற்றுக்கொள்கின்றது. மற்றும், கதிரவன் வெப்பம், நிலத்திலுள்ள 'பதமடையாத' நிலையிலுள்ள தாதுப் பொருள்களைப் 'பதமடைந்த' நிலைமைக்கு மாற்றுவதற்கான புழு வகைகள் உயிர்வாழ்வதற்கு இன்றியமையாதது. நீர்ப்பிடிப்புள்ள நிலத்தில் இப் புழுக்கள் உயிர் வாழ்வது இயலாது. அதனுலேயே அந்நிலம், வளப்பமற்றதாகின்றது. எவ்வகைப் பயிரும் அதில் செழித்து வளருவதில்லை. மற்றும் 'பதமடையாத' நிலையிலுள்ள உரப்பொருள்கள் சிறிதுமில்லாத நிலமே அழல் நிலம் எனப்படுவது.

தழைகளிலிருந்தும், கால்நடைகளால் கிடைக்கும் எருவகைகளிலிருந்தும் 'பதமடையாத' தாதுப் பொருள்கள் எளிதாகவும் ஏராளமாகவும் கிடைக்கின்றன. இதனுல், காடுகளின் முதன்மை தெளிவாகப் புலப்படுகின்றது. காடுகளில் உதிரும் தழைகள் மக்கி நிலத்தின் மேல் பரப்பிலேயே மண்ணுடன் கலந்திருக்குமாதலால், மழை பெய்யுங் காலத்திற் 'பதமடைந்த' உரப் பொருள் தண்ணீரிற் கரைந்து அத் தண்ணீர் பாயும் நிலங்களைச் செழிப்பாக்குகின்றது. மற்றும், பதம் அடைந்ததும், அடையாததுமான உரப் பொருள்களைத் தண்ணீர் மண்ணுடன் அடித்துக்கொண்டு போக, அவை வண்டலாகப் படிந்தும் நிலத்தை வளப்படுத்துகின்றன. இக்காரணங்களால், வேளாண்மையில் முற்காலத்தில் மிகுந்த ஊதியம் கிடைத்தது. ஊதியமென்று சொல்லும்பொழுது, விலை மிகுதியாகக் கிடைத்ததென்பது பொருளன்று. விளைவு மிகுதியாகக் கிடைத்ததென்பதே கருத்தாகும். அக்காலத்திற் பயிரிடுஞ் செலவும் குறைந்திருந்ததால், ஊதியமென்று சொல்லப்பட்டது.

## 7. நிலத்தில் தாதுப்பொருள்கள் குறைதல்

பயிரிடுவதன் மூலமாக நிலத்திலுள்ள தாதுப்பொருள்கள் குறைகின்றனவென்பதை நினைவுகூரவேண்டும். திரும்பப்

Koviloor Digital Library



பயிரிடுவதற்குமுன், முன் பயிரினால் எந்தெந்தத் தாதுப் பொருள்கள் எந்த அளவில் குறைந்துள்ளனவோ, அந்தந்தத் தாதுப்பொருள்களை அதே அளவில் அந் நிலத்தில் சேர்க்க வேண்டும். இதைச் சிந்தித்து நடப்பதானால் வேளாண்மையில் ஒருகாலும் பொருள் இழப்பென்பது ஏற்படாது.

விலைவாசிகளின் ஏற்றத்தாழ்வானது உலக மொத்தத்தின் பொருளாதார நிலையைப் பொருத்ததாயிருக்கின்றது. நாம் ஆழ்ந்து நினைக்கவேண்டுவது என்னவென்றால், குறைந்த செலவில், கூடின விளைவை அடையச் செய்வதேயாகும். கலம் நான்கு ரூபாவாக இருந்த நெல் பொருளியல் நெருக்கடியால் ஒரு ரூபாவுக்கு இறங்கிவிட்டதென்றால், கலம் நான்கு ரூபாவாக இருந்தபோது அதைப் பயிரிடுவதற்கு என்ன செலவாயிற்றோ அதே செலவில் நாலு கலம் நெல் கிடைக்கும்படி பயிர் செய்யவேண்டும் என்று கொள்ளவேண்டும்.

> "உழவினார் கைமடங்கின் இல்லை விழைவதூஉம்
> விட்டேமென் பார்க்கும் நிலை"
>
> —திருக்குறள்

என்றபடி உழவு தொழிலே மனிதனது எத்தகைய வாழ்வுக்கும் அடிப்படையாக இருக்கும்படி அமைந்திருப்பதனால், அத்தொழிலில் ஊதியமில்லையென்று சொல்லமுடியாது. அப்படிச் சொல்வதானால் வேளாண்மையைப்பற்றிச் சரிவரத் தெரிந்துகொள்ளவில்லை யென்பதே கருத்தாகும்.

எள்ளின் விளைவைப்பற்றிக் குறிப்பிடும்போது, 'விதைத்ததும் குறுணி, கிடைத்ததும் குறுணி' என்று சொல்வதுண்டு. அதாவது குறுணி எள் விதைத்து அதன் விளைவை விற்றதிற் குறுணி பணம் கிடைத்தது என்பது பொருள். பணம் என்பது பொன் நாணயத்தைக் குறிப்பது. அப்படியானால், விளைவின் அளவு எவ்வளவென்பது சிந்திக்கத்தக்கது. இக்காலத்தில், இது நமக்கு ஏட்டுச் சுரைக்காய் எனவே தோன்றும்.

---

Koviloor Digital Library

# இலக்கியச் சுவை

[பாண்டியனார்]

## இயற்கை எழில் :

எவர்தாம் இயற்கையின் இயக்க இன்பத்தில் ஈடுபடாதவர்? இருளை நீக்கி அருளைக் கொணரும் இளஞாயிறு எறிதிரைக் கடலினின் றெழுவதும், நித்திலம் பூத்த நீலப் போர்வையை நிறைய மூடிய நீள்வானத் துயர்வதும், மரமும் மலரும் மணமும் மல்கும் மலைவாழ் விலங்கும், புள்ளும் அடைய அலைவாய்த் தன் பொன் குழம்பு கவிழ விழுவதும், கண்டார் கருத்தைக் கவராதோ? உன்னினார் உள்ளத்தை உருக்காதோ? எண்ணினார் நெஞ்சை எழுப்பாதோ? பால் போன்ற ஒளியைப், பரந்த கடலிலும், பாசிலைக் காட்டிலும், பாய்சுனை ஆற்றிலும், பள்ளம் புரள் வெள்ளத்திலும், பிரிந்தார் உள்ளத்திலும், கள்ளக்காதலர் கருத்திலும் சொரியவிடும் மதியில் மயங்காதார் யார் யார்? மண்ணிலம் விண்ணிலமாம் படி மல்லிகை, முல்லை, மருக்கொழுந்து, சம்பங்கி, சுனைக்குவளை நிலத்தாமரை (Rose), நீர்த்தாமரை, கருநீலம், செதாம்பல், சீர்கொட்டி, சிறப்புறுநெய்தல், கொன்றை, குடவம், குராம், பிடவம், பொன்பொதி தாழை, பூத்தஞாழல் போதலர்ந்து பொன்தூள் சிந்தித் தேனொழுக்கித் தெய்வமணம் பரப்பி நாடு வண்டினம் தேடி வரக்கூடும் மலர்மங்கையர்க்கு மனமழியாதாருண்டோ? உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் உணர்ச்சி வெள்ளம் ஓடாதோ? ஊன்றிப் பார்மின்! 'எழில் வாய்ந்த பொருள் என்றைக்கும் இன்பம்' என்றான் கீட்சு என்னும் ஆங்கிலப் புலவனும்.

## மக்களுயர்வு:

இயற்கையின் எழில்முடி மக்கள் படைப்பு. எனவே மக்கள் ஒழுக்கமும், மாண்புறு நடக்கையும், உள்ளத்துணர்ச்சியும், ஓங்கிய இன்பமும், ஓயாத் துன்பமும், உற்றறிவார்க்கும், உன்னிப் பார்ப்பார்க்கும் ஒழியா இன்பத்தை ஊட்டுமன்றோ? ஆகவே மக்கட்காக உண்டாக்கப்பெற்ற இயற்கை

Koviloor Digital Library



யினும் மணிமுடியான மக்கட்படைப் பளிக்கும் இன்பம் மாபெரிது என்பதற் கைய மில்லை. ஏனெனில் அவர்கள் அனைத்துயிரையும் ஆள்பவர்; ஆறறிவாளர்; கடவுள் சாயல் படைத்த ஆவியர்.

## இலக்கியச் சுவை:

பூவுள் தேன்போல, மக்கள் ஒழுக்கத்தால், இயக்கத்தால் வரும் இன்பம் புதைந்து கிடக்கும் பொன்மேடுகள் இலக்கியக் குவியல்கள் எனின் மிகையாகாது. இலக்கியம் இயற்கை இலங்கும் கண்ணாடி; இன்பதுன்ப உணர்ச்சியின் ஒழுக்கில் எழுந்த ஒழுக்கத்தின் உரைகல். ஓலை இலக்கிலும், உடையாத் தகட்டிலும், ஓங்கு சுவரிலும், ஒல்லாக் கல்லிலும் ஒதுங்கி வாழும் உயர் நங்கை; இயல், இசை, நாடகம் என வாழ் இறைவி.

இயலானது, கண்ணால் கண்டதோ காதால் கேட்டதோ, கருத்துட் புகுந்து, மனத்துள் படிந்து, செந்நீரில் பாய்ந்து, உணர்ச்சியைத் தட்டியெழுப்புந் தகைத்து. சங்க இலக்கியமும், ஐம்பெருங் காவியமும், கம்பன் கவிதையும் இதன்பாற் படும்.

இசையானது, கொழுச் சென்றவழிக் குத்தியும் செல்வது போல், பழைய வெள்ளம் பாய்வழிப் புதுப்புனல் பாய்ந்தாங்கு, ஒளி நிழையும் இடத்துத் தட்பவெப்பம் தவழ்ந்தாங்கு, ஒளியும், ஒலியும் உடனுறைந்தாங்குச் செவிவழிச் சென்று சேர்ந்து புலனெல்லாம் புல்லரிக்கப் பொருளுடன் உணர்ச்சியூட்டுவது. பரிபாடல் முதல் பாரதி பாடல் ஈறாக உள்ளன இது.

நாடகமென்பது நானிலத்தோர் அடையும் நன்மையும் தின்மையும், இடம்பொருள் ஏவலிடை எய்தும் இன்பமுந் துன்பமும் இணைந்தோ, தனித்தோ விளங்க உரையாடல், இயல் இசை மேளதாளங்களோடு பொருந்தத் தலைவன் தலைவியர் பாங்கன் பாங்கியர் வாயிலாய், முதல் துணை வரலாற்று (Main or Sub-plot) வழியே நம்பியரும் நங்கையரும் கலந்தோ தனித்தோ நடித்து நமக்குக் காட்டல் என்னலாம். எனவே யாவற்றையும் கண்கூடாகக் காண்கின்றோம். காணலும், பயன் பல பொறிவழிச் சென்று ஐம்புலன்களையும் அப்படியே எழுப்புகின்றது. உணர்ச்சி ஓங்கி எழுகின்றது. நடிப்

Koviloor Digital Library



போருடன் நடிக்கின்றோம். நல்லதை விரும்பி நாவாரப் புகழ்கின்றோம்; அல்லதை வெறுத்து அறவே இகழ்கின்றோம். உலகமும் ஒரு நாடகமே என்னும் உணர்ச்சி உள்ளத்தில் ஓடுகின்றது. மறுமை இன்பமே மாயாதது என மனத்தில் பதிகின்றது. அவ்வமையம் நமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லையென்னும் செருக்கு எழுகின்றது. நாம் நம்மையே மறக்கின்றோம். 'நாடகமே உண்மையின் உரைகல்; உயர் கண்ணாடி' என்பது ஆறு அறிவின் ஆங்கிலப் புலவன், நாடக மன்னன் செகப்பிரியனின் சீரிய கருத்து. இதுவும் எழுத்து வடிவில் நூலாகவே இலக்கியக் கூட்டத்தில் விளங்கிவருகின்றது. மேனாட்டு, வடநாட்டு, நம் நாட்டு மொழிகளிலும் மேன்மை பெற்று விளங்குவது இதுவே.



Koviloor Digital Library

# உழைப்பால் உயர்ந்தவர்

## சர். ஆல்பிரட் சோன்சு

"மா. குமாரசாமி"

"கரடுமுரடு அற்ற நல்ல அரசபாதை, வாணிபத்துறையில் எது? இடையரு உழைப்பும், சிதரு உள்ளமுமே ஒருவனை வாணிப ஏணியின் மீது ஏற்றிவிடும் பண்புகள்"—என்பது வணிகத்துறையின் வாயிற்படி அணுகிடும் அருங்குண இளைஞனுக்குச் சர். ஆல்பிரட் சோன்சு கூறிய வாணிப வெற்றியின் பேருண்மை.

சர் ஆல்பிரட் சோன்சு, 'வேல்சின்' தென்பகுதியில் உள்ள சிறுநகரமொன்றில் 1845-ல் பிறந்தார். அவரது மூன்ருவது வயதிலேயே அவர் தந்தையார் லிவர்பூல் என்னும் பெரிய நகரத்துக்குத் தமது இருப்பிடத்தை மாற்றிக்கொண்டார். அந் நகரம் வாணிபத்துக்குப் பேர்போனது. அரை மனதுடன் உழைப்பவர்களுக்கும் சோம்பேறிகளுக்கும் இடந்தராத அந் நகரத்திலேதான் தமது இளம்பருவத்தின் இன்றியமையாத காலத்தைச் சர் ஆல்பிரட் கழித்தார்.

இளைஞர் ஆல்பிரட், விளையாட்டுக் களிப்பில் மிகுந்த அக்கறை காட்டாத மிகச் சில சிறுரில் ஒருவராக இருந்தார். காரணம் இரண்டு. அவை என்ன? கப்பற்பபணத்தை மிகவும் விரும்பியிருந்தமை ஒன்று; செய்ந்நன்றி மறவாத நாய்களின் நல்லறிவையும் நல்லன்பையும் பார்த்துப் பார்த்து அவற்றின் மீது அவர்கொண்ட அடங்கா அன்பு மற்றொன்று.

வாணிபத்துக்குக் கணிதம் ஆணிவேர். இளைஞர் சோன்சு தமது மாணவப் பருவத்தில் இக் கணிதப் பயிற்சியில் குறிப்பிடத்தக்க திறமை காட்டினர்.

15-ஆம் வயதில், அவர் லிவர்பூல் நகரத்தில் ஆப்ரிகாவின் மேற்குப் பகுதியொடு வாணிபம் செய்துவந்த ஆப்ரிகா கப்பல் தொழிற்சாலையில், சிறு வேலை ஒன்றில் அமர்ந்தார். தமது மனப்போக்கின்படியே வணிகத் துறையில் அமர்ந்த அவர் அத் தொழிலகத்தோடு இயைந்து தொழில் புரிந்துவந்த

Koviloor Digital Library



பயிற்சியின் பயனாய் மிகுவிரைவில் தக்க முன்னணியில் நிற்ப தற்கு உரியவரானார். சிறுவன் என்ற முறையில் அவர் தமது மிகுந்த உழைப்பிற்குப் பெற்ற ஊதியம் மிகச் சிறிதே யாயினும், அவர் தமது ஊக்கத்தைத் தளரவிட்டாரல்லர். அக்காலத்தும் அவர் மாலைவேளைகளில், லிவர்பூல் கல்லூரியிற் சேர்ந்து தொடர்ந்து படித்துவந்தார். முதலில் கீழ்த்தரக் கணக்கராயிருந்த அவர் படிப்படியாகச் சுங்கத் தொழிலகத் தின் கணக்கராய் உயர்ந்து, இறுதியில் அதனினும் மேம்பட்ட பதவி ஒன்றில் அமர்ந்தார்.

அவரது விடா உழைப்பின் பயனால் அவர் அத் தொழி லகத்தின் 'மானேச'ராவதற்குரியோருள் ஒருவரானார். ஆனால் அப்போதுதான் அவரது வாழ்க்கைச் சுழலின் மறுபகுதி, தோற்றமாயிற்று. தொழிற்சாலைத் தலைவர்கள், அவர் வேண்டு தலைத் தள்ளிவிட்டு வேறொருவரை அப் பதவிக்கு அமைத் தனர். இங்ஙனம் அவர்களால் அவர் விரட்டப்பட்டதே, அவரது வாழ்க்கையை மிகமிக உயர்த்தியதெனலாம்.

அவர் ஏதேதோ நினைத்தார். கதிரோன் முன் கரைந் தொழியுங் கட்டிப்பனி எனத் தம் துன்பங்கள் அனைத்தும் தம் எண்ணம் நிறைவேறினால் நீங்கும் என்று அவர் உணர்ந் தார். உணர்ந்த அந்நொடியே, கொஞ்ச நஞ்ச மிருந்த நம் பிக்கையின்மையையும் அறவே நீக்கி, முனைந்து எழுந்தார்; வீறு கொண்டார். அயரேன் இனி; எடுத்த பணியை— தொடுத்த வேலையை நிறைவேற்றியே தீருவேன் என்று உறுதி பூண்டு உழைக்கத் தொடங்கினார். சின்னாளில் அவரே ஒரு தொழிலகம் துவக்கிக், காலையிலேயே உழைக்கத் தொடங்கி மாலையில் வெகுநேரம் வரையிலும் உழைத்து உழைத்து, மிகு விரைவில் ஆல்பிரட் சோன்சு வாணிபமெனுங் கட்டிட மொன்றினைக் கட்டிமுடித்திட்டார்.

தன்னை 'மானேச'ராக்க இசையாத 'கம்பெனிக்கு' எதிராக, அவர் ஒரு 'கம்பெனி' நிறுவினார். பலப்பல கப்பல் களைக் கட்டினார். அந்தச் சமயத்தில்மட்டும் அவர் இருபது பெரிய கப்பல்களைக் கட்டினார். அவற்றுள் பெரியதொன்றின் எடை 2000 டன் ஆகும். வெகுவிரைவில் அவர் கப்பற்றொழி

Koviloor Digital Library



லில் வியத்தற்குரிய திறமை வாய்க்கப்பெற்றார். 'டெம்ப்சர் அண்டு கோ'வின் பாகத்தவர்களுள் இவரும் ஒருவரானார்.

இவர் இங்ஙனம் தடுப்பார் யாருமின்றி ஓடும் வெள்ளம் போல உயர்வது கண்டு, இயற்கையாகவே பலர் பொறாமைப் பட்டனர். இவரை அழித்தே தீருவதென முடிவுகட்டினர். தம் நோக்கத்தை நிறைவேற்றிவிட முனைந்து நின்று, பணி பல புரிந்தனர். அவர்களின் எதிர்ப்பு வரவர வலுப்பட்டது. பலப்பல இடங்களிலிருந்தும் புதுப்புது எதிர்ப்புகள் எழும்பின. அம்மட்டோ! மாஞ்சேச்டர் எனும் பேர்பெற்ற பெரு நகரத்திலிருந்த வணிகர்கள் அனைவரும் ஒருங்கு சேர்ந்து, தங்கள் தங்கள் 'கம்பெனி'களைக் கலைத்துவிட்டுக் கூட்டாகச் சேர்ந்து ஒரு 'கூட்டுக் கம்பெனி' துவக்கினர். 'சோன்சு கம்பெனி'யை எதிர்த்தொழிக்க அவர்கள் வஞ்சனை பல செய்தனர்.

இவ்வளவும் செய்ததின் பயன் என்ன? அவர்களின் பெருவாரியான ஒருமித்த எதிர்ப்பின் பயனே, சர் ஆல்பிரட் சோன்சைக், கப்பல் தொழிலின் உச்சி நிலைமையில் வீற்றிருக்கச் செய்தது. 120 கப்பல்களைக் கொண்ட, கப்பல் தொழிற்சாலையை நடத்தும் தலைவராகத் திகழ்ந்தார். 6 இலட்சம் டன் எடை உள்ள கப்பற் படைகள் பல கட்டும் கடுந்தொழிலகத்தில் அருள் மிக்க தலைவராய்க் காட்சி அளித்தார். "மலைபோல் எதிர்ப்பு உருண்டு திரண்டு வரினும் அவற்றிற்கு ஒரு சிறிதும் அஞ்சேன் அஞ்சேன்" என்று ஆர்த்து நின்று அரும்பெரு வெற்றியைப் பெற்ற பெருமான் அலரோ சர் சோன்சு!

அஞ்சா நெஞ்சமும், மிகு உடற்கட்டும், வெற்றி பெறுவோம் என்ற உறுதியும் தவிர வேறு வகையான படைக்கலம் ஒன்றுங் கொள்ளாமல், சிறுவனாகத் தன் வாழ்க்கையைத் துவக்கி வாழ்க்கைப் போரினிற் சமர் செய்து வாகை மாலை சூடிய சர் ஆல்பிரட் சோன்சு என்பவரே, தாம் அன்று தோன்றியவாறு உலகத்தில் இன்று தோன்றும் இளைஞன் ஒருவனை நோக்கி, இக்கட்டுரையின் முகப்பிற் கூறியவாறு மொழிந்தனர்.

Koviloor Digital Library



அவர் இவ்வாறு உயர்வுற்றதற்கு எது காரணம்? அவரிடம் எவையேனும் மறைந்த வல்லமைகள் பொதிந்து கிடந்தனவா? மந்திரவாதி, தனது மந்திரக்கோல் கொண்டு கதவினைத் திறப்பதுபோல, அவரிடம் ஏதாவது மந்திரக்கோல் மறைந்திருந்ததா? ஒன்றுமில்லையே! அவரே சொல்லுகிறாரே, -"சலியா உழைப்பின் உறுபயனே, தாம் பெற்ற இன்பம்" என்று.

சர் ஆல்பிரட் செய்தவைதாம் என்ன? தன்னந் தனியராய் இருந்த அவர், கப்பல் தொழிலிற் கடுந்திறன் காட்டி, அதை வளர்த்தார். பெரும் பெரும் வலிவு பொருந்திய வணிகர்களின் ஒருமித்த எதிர்ப்பினை எளிதில் தகர்த்தெறிந்து, தன் இயல்பான எழிலுடன் விளங்கினார்.

கனாரித் தீவுகளிற் பழ வாணிபம் சிறக்கச் செய்தார். லிவர்பூரில் ஒரு மருத்துவக் கல்லூரி கண்டார். வடக்கிந்தியத் தீவுகளில் சர்க்கரைத் தொழிலைப் பற்பல வகைகளிற் பண்புடன் நிலை நிறுத்தினார்.

"கப்பல் தொழிலும் அத் தொழிலாளரும் சிறந்து செழித்துச் செம்மையுற்று இலங்கவேண்டும்" என்பதே அவர் கொள்கை. எப்போதும் அவர் நல்ல கப்பல்களையும், வல்லமையும் தொழில் திறமையும் உடைய தொழிலாளரையுமே விரும்பி வரவேற்பது வழக்கம். ஒரு பெரிய கப்பல் தொழிலகம் நிறுவ வேண்டும் என்பதையே அவர் தனது வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்ட கொற்றவர். அதற்கேற்பவே அவர், மக்கட் கூட்டத்தின் மாபெரும் நன்மைக்காகவே உழைத்தார். வாணிகப் பெருமையையும் வெற்றியையும் நிலைநாட்டவே மாநிலத்துப் பாடுபட்டார்.

இத்தகைய கப்பற்றொழில்மன்னனின் இன்றைய அன்றாட வாழ்க்கை எங்ஙனம் சிறப்புற்றுத் திகழும் என்பதைக் கூறவும் வேண்டுமோ? அவர் வாழ்வேதான் உழைப்பினை அடிப்படையாகக் கொண்டு எழுப்பப்பட்ட கட்டடமாயிற்றே! அவருக்குக் கடிதம் வரையும் அன்பர்கள் அனைவர்க்கும் கடிதினிற் பதில் எழுதுவார். அவர் எழுதியவற்றை மட்டுமல்ல. அவருடைய ஒவ்வொரு கப்பலின் பெயர், அவற்றின் அளவு,

Koviloor Digital Library



எடை; ஒவ்வொரு கப்பற் றலைவன், அலுவலாளன், பொருளாளன் பெயர்கள்; ஆகிய அனைத்தினையும் அவர் நினைவில் வைத்திருந்ததே அவருடைய அரிய பெரிய குணங்களிலொன் ருகும். இவ்வளவையும் தம் நினைவில் நிறுத்தும் அவரது மன வலி மிகமிக வியப்பிற்குரியதே.

ஆம்! அதனுலேதான் அவர் தம் சிறு வயதில் எண்ணியிருந்த காரியங்களை மறவாமல், அப்படியே தம் வாணுளில் நிறைவேற்றினுர்.

இதுமட்டுமன்று. கடுமையான ஒழுக்க முறைகளும் சட்ட திட்டங்களுமே வணிகத்துறையில் ஈடுபட்டாரின் நோக்கங்களை நிறைவேற்றும் என்பது பொதுவாகக் கூறப்படுகின்ற ஒரு விதி. ஆனுல், சர் ஆல்பிரட் இதற்கு முற்றிலும் மாறுனவர். இதைப் பொறுத்தவரை விதிவிலக்கு என்றே அவரைக் கூறவேண்டும். அவர் கடுமையான முறைகளைக் கையாண்டதே கிடையாது.

சர் ஆல்பிரட், பெறற்கரிய தம் வாணுளைச் சோம்பித் திரிந்தும் பிறர் உழைப்பின் உறுபலன் கொண்டு வாழ்ந்தும் வீணுளாக்காது எக்காலும் உழைத்துழைத்து உயர்ந்தார் எந்தக் காலத்திலும் அவர் உழைக்காது சோம்பியிருந்ததே கிடையாது. அவரது வாழ்வின் எப் பகுதியை எடுத்துத் துருவித் துருவிப் பார்ப்பினும், அவர் உழைக்காத காலத்தைக் காணவே முடியாது.

"உழைத்தால் உயர வழியுண்டு" என்பதை, இன்றைய இளைஞருலகினர்க்கு, இன்றைய புத்துலக வாழ்வினர்க்கு, இவர் வரலாறே எடுத்துக் காட்டுமே!

இளைஞருலகில் இன்பமும் உழைப்பும் தழைத்து நிலவுமாக! உழைப்புக் கொழிக்குமாக!

———

Koviloor Digital Library

# ஆங்கிலத்திற் கண்ட சில

"அ. சிதம்பரநாத செட்டியார் M.A."

ஆங்கில ஆசிரியர் சிலர் வரைந்துள்ள மொழிகளிற் சில ஈண்டு மொழிபெயர்க்கப்படும் :—

1. பேரில் உளதோ மறுபே ருரைத்தாலும்
மல்லிகை முல்லை மற்றவை மணமே.

—செகப்பியர்.

2. அழேன்மின் தோழிமீர் அழேன்மின் தோழிமீர்
ஏழேழு காலமும் ஏய்த்தனர் ஆடவர்
ஒன்றிலே பற்றிலார் ஒண்கால் கடலிலே
ஒன் று கரையிலே ஒன் று.

—செகப்பியர்.

3. நின்றுகாப் போருந் தொண்டுசெய் வோரே.

—மிலிதன்

4. கற்சுவர் தானுங் கடுஞ்சிறை யாகாது
இருப்புக் கம்பியும் இருங்கூ டாகாது.

—இலவ்லேசு.

5. நாற்பதிற் பேதை நனிபே தையே.

—எட்வரடு இயங்கு.

6. தேவர் மிதிக்க அஞ்சு மிடந்தான்
கயவர் புக்குக் களிக்கு மிடமே.

—அலக்குசாந்தர் போப்பு.

7. மங்கைய ரெல்லாம் மனத்தே பரத்தையர்.

—அலக்குசாந்தர் போப்பு.

8. தெரிந்தான்போற் காட்ட லறியாமை மன்ற
தெரிவின்மை தோன்று மிடத்து.

—தாமசு கிரே

9. அவமதிப்பேம் எனவந்த அறிவிலார்
தவமதிப்புத் தந்தார் தாமே.

—கோலடு சிமித்து.

Koviloor Digital Library



10. நான்பார்க்கும் எவற்றிற்கும் நானே பார்த்திபன்.

—கூப்பர்.

11. தாய்நாடே,
நல்லே யாயினும் அல்லே யாயினும்
நல்குத லொழியேன்
தாய்நாடே.

—கூப்பர்.

12. புகழில் வாழ்க்கை யுகமொடு செல்வதின்
மிகவும் நன்றே வீறுபெறு நாழிகை.

—சர் வாலட்டர் சகாட்டு.

13. மக்கள் பறவை விலங்கிவை தமக்கும்
அற்புப் பூண்டோன் அரனடி தொழுவோன்.

—கோலரிட்சு.

14. இறைவனுக் குகந்தோர் இளமையி லிறப்பர்.

—பைரன்.

15. அழகுடைப் பொருளது அந்தமில் மகிழ்ச்சி.

—சாண் கீட்சு.

16. அழகே வாய்மை வாய்மை யழகே
உழுந்துருள் உலகில் உணர்வதும் அஃதே.

—சாண் கீட்சு.

17. கேட்ட பண்ணெலாங் கேள்விக் கினிய
கேளா தனவோ கேழின் றினியவே.

—சாண் கீட்சு.

18. எழுதுவோன் எழுதுகின்றான்
எழுதியபின் எழுதுகின்றான்.

— ஒமர்க்காயத்திலிருந்து பிட்டுசிராலிடு.

19. காதலித் தறியா தொழிதலிற் காதலித்
திழத்தல் இனிமை யுடைத்து.

—தென்னிசன்.

20. மாந்தர் வருவர் மாந்தர் போவர்
யான்றனி இருப்பன் எக்காலு மியானே.

—தென்னிசன்.

Koviloor Digital Library



21. தொட்டி லாட்டும் அக் கை யின் று ;
வட்ட வுலகை நாளை யாளும்.

—வாலசு.

22. பையன்கள் யாரோ கேண்மின் !
வாத்துந் தவளையும் வாலுந் தோலும் ;
பெண்டிரும் யாரோ கேண்மின் !
கண்டுங் கந்தமும் மற்றுள இனிமையும்.

—குழந்தைப் பருவப் பாட்டு.

23. வெற்றிபோல் வெற்றி யுறுவ தில்லை.

—அசுகார் ஒயிலிடு.



Koviloor Digital Library

# செட்டான வாழ்வு

"வித்துவான் மு. வரதராசன் B. O. L."

நாம் முயன்று பொருளீட்டுதல் இன்றியமையாதது. ஈட்டிய பொருளை ஆராய்ந்து செலவிடுதல் அதனினும் இன்றியமையாததே. ஆராயாமல் செலவிடுகின்ற ஒருவன் பொருளீட்டும் முயற்சி பயனற்ற முயற்சியே ஆகும். சோம்பியிராமல் உழைக்கின்றான் என்ற ஒரு வகையில் அவன் பெருமை கொள்ளலாம். அன்றியும், ஈட்டும் பொருள் குறைவாயிருப்பின், செலவிடுதலில் அளவிற்கு மிகுதல் கூடாது. அளவுக்கு மீறிச் செலவு செய்தால், அவன் வாழ்வு உள்ளதுபோலத் தோன்றி, இல்லையாகி முழுவதும் கெடும். "வருவாய் குறைவாயினும் குறையில்லை; செலவு மிகுதலே உண்மையான குறை" என்று திருவள்ளுவர் கூறுகின்றார்.

ஆராய்ந்து செலவு செய்கின்ற ஒருவன், தேடும் பொருள் முழுமையும் அழித்தல் ஆகாது. வருவாயின் அளவிலும் செலவின் அளவு சுருங்குதல் வேண்டும். அங்ஙனம் வாழ்தலே செட்டான வாழ்வு எனக் கூறப்படும்.

ஏன் அங்ஙனம் வாழ்தல் வேண்டும்? முதுமை காரணமாகவோ, நோய் காரணமாகவோ, பொருளீட்ட முடியாத நிலைமை நேர்தல் கூடும். அக்காலத்தே உணவுக்கும் உடைக்கும் பிறவற்றுக்கும் என் செய்வது? இளமையில் பொருளீட்டுங் காலத்துச் சிறிதளவு சேர்த்துவைத்திருப்பின், அப்போது உதவுமன்றோ? அதனாலேதான், செட்டான வாழ்வு இன்றியமையாதது என்ப. அவ் வாழ்வு பெற விரும்புவோர் 'நாளை நம் நிலை யாது ஆகும்' என்று நாள்தோறும் வினவித் தாமே விடைகாணல் வேண்டும்.

மிகக் குறைந்த வருவாய் உடையவரும் செட்டாக வாழக் கற்று, ஒரு சிறு பகுதியைச் சேர்த்து வைத்தல் கடமையாகும். இங்ஙனம் செய்தால், முதுமைப் பருவத்தில் முட்டின்றி வாழ்தல் கூடும். கிடையாத காலத்தில் உதவுமாறு கிடைத்த காலத்தில் எறும்பு உணவுப் பொருள்களைச் சேர்த்து வைத்துக்

Koviloor Digital Library



கொள்கிறது. மக்கள் இவ் எறும்பினிடம் கற்கவேண்டிய பாடம் இதுவே அன்றோ?

எத்துணைப் பெருஞ் செல்வராயினும், செலவு செய்யுங் கால், தக்க பொருள்களுக்காகச் செலவிடுகின்றோமா என்று ஆராய்தல் வேண்டும். அறியாமையால் ஆடம்பரமாகச் செலவு செய்தலும், வீணான களியாட்டங்களுக்காகச் செலவு செய்தலும் ஆகா. இத்தகைய வாழ்க்கையைவிட, வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்து எல்லாம் இழந்து ஏழையாதலே மேல் எனலாம். ஏன் எனின், இங்ஙனம் இழந்தவன் நல்லறிவு பெற்று வழியறிந்து வாழ்வதற்கேனும் முயற்சி செய்வான் அல்லனோ?

இவ்வுண்மையை அறிந்தே அலெக்சாண்டர் என்னும் ஆண்டகை தன் ஏவலாளர் போன்றே உடை உடுத்தி எளிய வாழ்வு வாழ்ந்தான். தான் அறிந்த நாடுகள் அனைத்தையும் வென்று ஆண்ட பெருமை வாய்ந்த அகஸ்டஸ் என்னும் அரசர்க்கரசன், தன் மனைவியும் மகளும் செய்துதந்த ஆடையே அணிந்து எளிய படுக்கையில் உறங்கினன் என்பர். ஜெர்மனி மன்னனாயிருந்த ரோடோல்ப் என்பவன் குளிர் தாங்காமல், சூடுபெறும் பொருட்டு ஒரு வீட்டில் நுழைந்ததாகவும், அவ் வீட்டுத் தலைவி அவனை இன்னன் என்று அறியாது நுழையத்தகாதவன் என்று கடிந்துரைத்ததாகவும் அத்தகைய உடை உடுத்து எளிய வாழ்க்கை நடத்தியதாகவும் அவன் வரலாறு கூறும். இப் பெரியோர்களே சேட்டான வாழ்வின் பெருமையை உணர்ந்து பயன் பெற்றவர்கள் ஆவார்கள்.



Koviloor Digital Library

# கொன்றை வேந்தன்

"இளவழகனார்"

'எளிய சிறு சிறு தொடர்களே குழந்தைகளின் தேவையைக் குறித்துணர்த்தும் ஆற்றல் வாய்ந்தவை' என்று வால்டர் பேட்டர் (Walter Pater) என்னும் ஆசிரியருங் கருதினார். ஒளவையாருக்கு இவ்வாற்றல் நன்றாய்க் கைவந்திருக்கின்றது. அவ்வகையில் இப்பெருமாட்டியாருக்கு இணையானவர் தமிழாசிரியரிற் பிறரெவரும் இல்லை என்று துணிந்து சொல்லலாம்.

மேலும், இவர் இயற்றியிருக்கும் அறிவுத்தொடர்கள் எவ்வளவு எளிமையாயிருக்கின்றன! சிறுவர்கள் நயமாக வழங்குவதற்கு ஏற்றபடி இத்துணை எளிமையாக இயற்றி யுதவிய ஆசிரியர் பிறர் எவர் உளர்? நல்ல தமிழ்ச்சுவையும், இயல்பான சொற்பொருளொழுக்கமும், உண்மையும், நுண்மையும், திருத்தமும், பொருத்தமும் வாய்ந்து இனிமை கனிந்து இயலுவதோடு, நடை இவ்வளவு எளிமையாகவுந் திகழவேண்டுமானால், அந்த ஆற்றல் ஆ! ஒளவையாரைப்போன்ற கனிந்த பெரிய தாய்மை யுள்ளம் வாய்ந்த அருட்சான்றோர்க்கேயல்லாமல் மற்றவர்க்குக் கிட்டுதல் அரிதம்ம, அரிது! பெரிதரிது, அரிது!

வாழ்க்கையில் எளிமையுடையோரே இந் நடை வெற்றியினையும் எய்துதற்குரியர். உள்ளம் எவ்வளவுக்குப் பண்பட்டுப் பிறவுயிர்கண்மேல் இரக்க வடிவமாய்த் தளதளவென்று உருகித் திகழ்கின்றதோ, அவ்வளவுக்கு அவ்வுள்ளத்திலிருந்து புறம் வரும் சொல்லும் பண்பு இரக்கம் முதலியன வாய்ந்து எளிமையாயிருக்கும். உள்ளந் தெளிவாயிருந்தால் நடையும் தெளிவாயிருக்கும். உள்ளங் குளிர்ந்தாற் சொல்லுங் குளிரும்.

"உள்ளங் குளிர என் கண் குளிர்ந்தனவே"

என்னுந் திருவிசைப்பாத் திருமொழி இக் கருத்தை எவ்வளவு உண்மையாய் எடுத்துக் காட்டுகின்றது!

Koviloor Digital Library



இங்ஙனம் அகமானது பண்பட்டுப் புறம்நோக்கும்போது தான் புறமுயற்சிகளெல்லாம், அவை எவையாயிருப்பினும், அங்ஙனம் நோக்குவார்க்கும் பிறர்க்கும் எளிமையாயிருக்கும்.

இளமையிலேயே கற்கவேண்டும் என்னும் அறிவுமொழி, உள்ளத்திருத்தத்தை முதலிற் பெறவேண்டு மென்னும் இப் பெருநோக்கத்தையும் உட்கொண்டிருக்கிறது. இங்ஙனம் நற் கலைகளை ஓதி உள்ளத் திருத்தம் அடைந்தோர்க்குப், புறத்தே உண்மை உணர்வும் அதற்கேற்ற ஒழுக்கமும் நன்கமைந்து நடை பெறுமாதலின்,

"நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு"
"ஓதா தார்க் கில்லை உணர்வொடும் ஒழுக்கம்"

என்னுங் கொன்றைவேந்தன் தொடர்களிலும், மேல் உண்மைகள் பெறக்கூடியனவாயிருக்கின்றன.

ஔவையார் நல்ல புலமையும் திருந்திய உள்ளமும் எளிய வாழ்க்கை நலமும் உடையவர். உலகமக்கள் எஞ்ஞான்றும் நலமாயிருக்கவேண்டுமென்னுங் குழைந்த கனிவும் உடையவர். அதனால் அவர்க்கு இவ்வளவு எளிய இனிய நடையில் எழுதும் இயல்பான வல்லமை சிறப்பாகப் பொருந்துவதாயிற்று.

'உலக நீதி' என்னும் நீதிநூல் எளிய நடையில் அமைந்திருந்தாலும், அதனினுங், 'கொன்றை வேந்தன்' முதலிய ஔவையார் நூல்களில் தமிழ்ச்சுவை முதலியன நன்கமைந்திருக்கின்றன. அதிவீரராம பாண்டியர் இயற்றிய வெற்றிவேற்கை என்னும் நூலில் தமிழ்ச்சுவை முதலியன சில நன்றாகவே பொருந்தியிருந்தாலும், அதனினும் இக் கொன்றைவேந்தன் என்னும் நூலே அழகிய எளிமையுடன் திகழ்கின்றது. மேலும், 'உலகநீதி' 'வெற்றிவேற்கை' என்னும் இரு நூல்களினும் பார்க்கக், கொன்றைவேந்தனில், இயல்பான சொற் பொருளொழுக்கம் முதலியன சிறந்து காணப்படுதல் பெரிதுங் கருத்திருத்துதற்குரியது.

ஔவையாரது நாவின் நுனியில், சொற்களின் எளிமையழகும் சுவைத்திறம் முதலியனவும் இயல்பாகவே திரண்டு

Koviloor Digital Library



தேங்கி நிற்கின்றன. இது பெரிதும் வியத்தற்குரியது. ஔவையார், கொன்றைவேந்தனிற், பேச்சுநடையின் இயல்பினை நன்றாகப் பின்பற்றியிருக்கின்றார். 'இரு' 'செய்' 'அழிவு' 'தேடு' 'இல்லை' 'உதவி' 'அழகு' 'முடியும்' 'வரம்பு' 'கொள்' என்பவைபோன்ற சொல் முடிவுகளும், 'வெட்டென மற' 'தாழ உரை' 'காற்றுடன் நெருப்பு' 'வேதனை செய்யும்' 'கோயிலுமில்லை' 'போரா முடியும்' 'கேடொன்றுமில்லை' 'சீராகாது' 'புண்ணியந் தெரியும்' 'காரியமில்லை' 'பின்னுக்கு மழை' என்பவை போன்ற தொடர்முடிவுகளும் இயல்பான பேச்சுநடையில் அமைந்திருப்பது, வழங்குவதற்கு எவ்வளவு எளிமை தருகின்றது! இம்முடிவுகளை அவை வருந் தொடர்களிலேயே வைத்துக் காணும் போது, இவ்வெளிமை யழகு பளிச்சிட்டுத் தோன்றும்.

ஊன்றி நோக்கினால், ஆத்தி சூடியினும் பார்க்கக், கொன்றைவேந்தனே மிகவும் எளிமையாயிருப்பது காணலாம். ஆத்தி சூடி மிகச் சிறிய தொடர்களால் ஆனதாகலின், அது சற்றுச் செறிவாயிருக்கின்றது. 'கொன்றைவேந்தன்' அப்படி இல்லை. இயல்பான பேச்சு முறைமையில் அமைந்திருக்கின்றது. செறிவும் இல்லை; தளர்வும் இல்லை.

> "ஆலயம் தொழுவது சாலவும் நன்று"
> "கீழோ ராயினும் தாழ உரை"
> "புண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்"
> "ஒத்த விடத்து நித்திரை கொள்"

என்னுந் தொடர்களை உற்றுநோக்கி இவ்வுண்மையை அறிந்து கொள்ளலாம்.

இங்ஙனம், 'இயல்பாக இருத்தல்' என்பதுதான் உண்மை நிலை; உண்மை நடையுமாகும். ஔவையார் அந் நிலையில் நின்றவர். கொன்றை வேந்தன் அந்நிலையில் அருளிச் செய்யப் பட்டதேயாகும்.

இயல்பாயிருத்தலுக்கு எல்லாக் கவர்ச்சியும் உண்டு. முயற்சியில்லாத எளிமையின் அழகு அவ் வியல்பான நிலைமையின் சீர்மையேயாம். ஆற்றலும் அதற்கே. முடிவிற், பெரும் பயன் விளைதலும் அந் நிலைமைக்கேயாகும்.

Koviloor Digital Library



அந்நிலைமையில் நிற்கும் ஆசிரியன்மாரால் மொழிக்கே ஒரு புதிய ஆற்றல் பிறக்கின்றது! பழைய சொற்களெல்லாம் வேறு வேறு கருத்துணர்த்தும் புதிய புதிய செஞ்சொற்களாய் மின்னி மின்னிப் பிறக்கின்றன; பொலிகின்றன! பொருளுணர்த்தும் முறைகள் பற்பலவாகக் கிளைத்துப் பயன்றருகின்றன. மலர்கள் தோன்றும்போது அவற்றிற்கு அழகும் உருவும் மணமும் உடன்தோன்றுவதுபோலச், சான்றோர் வழியாகச் சொற்கள் தோன்றும்போது அவற்றிற்கு ஒரு தனித்த அழகும் வடிவும் ஆற்றலும் உடன் உண்டாகின்றன. சொற்கள், தம்மைப் பயன்படுத்துஞ் சான்றோர்களின் இசைவுக்குத் தக்கபடி பற்பல அழகும் பற்பல வடிவும் பற்பல ஆற்றலும் பெற்று மேலும் பற்பல சொற்களாய்ப் பல்கி நிறைய நிறைய, அவ்வாற்றல், ஒரு மொழியானது இறவாத வன்மையையும் செழித்த தன்மையையும் நிலையாக அடைகின்றது. சொல்வளமும் பொருளாழமும் வழங்கு முறைமையும் இங்ஙனம் பெருகிவருதலின், நாளடைவில் ‘நிகண்டு’ முதலியனவும் ‘இலக்கணம்’ முதலியனவும் பெருகி, மொழியும் உணர்வும் பரவுவதற்கும் நிலைப்பதற்கும் இடமுண்டாகின்றது. சிறந்த தன்மையில் வளரும் ‘மொழி வளர்ச்சி’ யென்பது இதுவன்றோ!

சான்றோர்களால் நாட்டுக்கு உண்டாகும் அளவிறந்த நன்மைகளுள் மொழிக்கு உண்டாகும் இந் நன்மையும் சிறந்த தொன்றாகும். மொழிக்குத் திருந்திய வளர்ச்சியையுண்டாக்குவோர் சான்றோரேயாவர். இவ்வகையில் ஔவைப் பிராட்டியாருந் தமிழுக்குப் பேருதவி புரிந்திருக்கின்றார். தமிழ் மொழிக்கே ஒரு புதிய ஆற்றலை உண்டாக்கியிருக்கின்றாரென்று திட்டமாகச் சொல்லலாம்.

சங்க காலச் சான்றோர்களால் தமிழ்நங்கை நல்ல அரண்மனை வாழ்க்கையில் அரசர்க்கரசியாய்ப் பெருமிதமாய் வாழ்ந்து திகழ்ந்தனள். அவளை அதே அரச நிலைமையில்—ஆனால் எளிய வாழ்க்கை முறைமையில்—எல்லாரோடுங் கலந்த மனப் பான்மையில்—தாராளமாய் வாழக் கற்றுக்கொடுத்து, அந்நிலையில் நன்கு பழக்கியும் வைத்திருக்கின்றார் ஔவையார். சங்க காலங்களிற் கன்னிமை எழிலுடன் இளமை வீறு தோன்ற நில

Koviloor Digital Library



விய தமிழ் நங்கை, இப்போது ஔவைப் பிராட்டியாரால் அவ்விரண்டின் நிறைவோடு தாய்மைக் கனிவுந் திகழுமாறு கண்ணியமாய் விளங்குகின்றனள்! பெண்பால் என்னுந் தன் இனத்தில் எவ்வளவு இசைவு ஔவையார்க்கு! 'ஔவை' என்னுஞ் சொல்லுக்குத் 'தாய்' என்றும் பொருள் உண்டு. இளநங்கைக்குத் தாய்மையுள்ளம் வருவிக்கும் வகைமையை ஔவையார் நன்கறிவர்!

இங்ஙனம் ஒரு புதிய முறையில் தமிழ் நங்கையை இயங்கச் செய்தமையால், ஒரு நிலையான உயிர்ப்பாற்றலை நாட்டில் ஔவையார் உண்டாக்கியவராகின்றார்.

கொன்றைவேந்தனில் மேலும் அவர் செய்திருக்கும் இயக்க முறைகளும் பற்பலவாம். 'சீரைத் தேடின்' 'துடியாப் பெண்டிர்' 'நாடெங்கும் வாழ' 'நிற்கக் கற்றல்' 'நீரகம் பொருந்திய' 'நோய்ய உரையேல்' 'பண்ணிய பயிர்' 'பெற்றோர்க் கில்லை' 'பின்னுக்கு மழை' 'பொருந்திய ஒழுக்கம்' என்பவற்றிற் 'சீர்' முதலிய சொற்கள் ஔவையாரது பெரிய உள்ளத்தினின்றுந் தோய்ந்தெழுந்து, மின்னும் வகையில், ஒரு புதிய அழகும் ஒளியும் பொருளும் பெற்றுக் கதிர்விட்டு விளங்குதல் கண்டுகொள்ளப்படும். 'சீர்' என்பது பொதுவாக இங்கே 'நலம்' என்னும் பொருளில் வருகின்றது. 'வாழ' என்பது 'வளமாயிருக்க' என்னுங் கருத்துடையது. 'நீரகம்' என்பது 'நீர் நிலை' என்று உணர்த்தும் ஒரு சொல்லமைப்பாகும். 'பெற்றோர்' என்பது பொதுவாகத் தாய் தந்தையரையே உணர்த்துமேனும், இங்கே மெய்யுணர்வு பெற்றோரைக் குறியாநின்றது. பிறவும் இங்ஙனமே தனியான ஒரு புதிய ஒளியுடன் மின்னித் திகழ்தல் காணலாம். இவையெல்லாம் ஔவைப் பிராட்டியாரது உள்ளச் சீரின் நறுஞ் சாயலே யல்லாமல் வேறில்லை.

தமிழ்மொழி 'இயற்கைமொழி' என்பதற்கு ஈதும் ஒரு காரணமாம். சான்றோர்களின் இயல்பான உள்ளங்களில் தோய்ந்து எழாத மொழிகள் எங்ஙனம் 'இயற்கை மொழி' என்னும் மாட்சிமைக்கு உரியவை யாகும்!

[அடுத்த இதழில் முடிவுபெறும்]

Koviloor Digital Library




## 9. பெருமாள் மாடு

### " காழிக் கண்ணன் "

ஒருநாள் காலையில் போலீஸ் தலைவர் ரெட்டியார் வீட்டிற்கு வந்தார். வந்தவர், நேரே மாட்டுக் கொட்டிலுக்குள் வந்து என்னைத் தட்டிக்கொடுத்து, "இராமா, நன்றாயிருக்கிறாயா?" என்று கேட்டுவிட்டுத்தான் வீட்டிற்குட் சென்றார்.

ரெட்டியார் :— " வரவேண்டும், வரவேண்டும்! ஏது இத்துணைக் காலையில்? உட்காருங்கள்! பலகாரம் ஆய்விட்டதா?"

போலீஸ் தலைவர் :—" ஆகிவிட்டது ; தாங்கள் அமருங்கள்! இராமனைப் பார்த்து நாளாகிவிட்டதே, பார்த்துவிட்டுப் போகலாமென வந்தேன்? சிறையில் பிடித்தடைத்த வாணுபுரத்துக் குள்ளர்கள் இருவர் நேற்றுத் தப்பியோடிவிட்டனர். ஆனமட்டும் தேடினோம் ; பிடிபடவில்லை. ஊம்....எங்குப்போய்விடப் போகிறார்கள்! எதற்கும் நீங்கள்மட்டும் சற்று வீட்டில் எச்சரிப்புடனிருக்குமாறு சொல்லி வையுங்கள் !"

ரெட்டியார் :—" மிகவும் நல்லது; தங்கள் அன்பிற்கு நான் மிகவும் நன்றியறிதலுள்ளவனாக இருக்கிறேன்."

போ. தலைவர் :—" மற்றொரு சிறு செய்தி."

ரெட்டியார் :— " என்ன, தாராளமாய்ச் சொல்லுங்கள் !"

Koviloor Digital Library



போ. தலைவர் :—"ஒன்றுமில்லை ; போகிப் பாளையத்தி லிருந்து ராகுலு என்ற பெருமாள் மாட்டுக்காரன் வந்திருக்கி றான். பக்கத்து ஊர்ப் போலீஸ் தலைவர் நாயுடு அவர்களிட மிருந்து கடிதமொன்றும் வாங்கி வந்திருக்கிறான். அவனிட முள்ள "கோபு" என்ற பெருமாள்மாடு வேடிக்கைகள் பல காட்டுகின்றதாம். படித்தவர்களுக்குக்கூட அத்துணை அறி விருக்காதாம். தாங்கள் ஒத்துக்கொண்டால் நாளைக் காலை யில் தங்கள் தோட்டத்திலேயே ஆலமரத்தடியில் அவனைச் சிறி துநேரம் வேடிக்கை காட்டச் சொல்லலாமென் றிருக்கிறேன். ஊரிலும் தமுக்கடித்துச் செய்தியறிவிக்கலாமென்று எண்ணி யுள்ளேன்........"

ரெட்டியார் :—"அதற்கென்ன! தங்கள் விருப்பம்போ லாகட்டும் !"

போ. தலைவர் :—"தாங்களும்....வீட்டாருடன் எழுந்த ருளிச் சிறப்பிக்கவேண்டும்."

ரெட்டியார் :—" ஆகா ! அதற்கென்ன தடை! கட்டாயம் வருகிறேன். அதற்குவேண்டிய ஏற்பாடுகளையும் இன்றே செய்து வைக்கச் சொல்லுகிறேன்."

போ. தலைவர் :—" நம் இராமனையும் அழைத்துச்சென்று வேடிக்கைகளைக் காட்டவேண்டு மென்பது என் விருப்பம்; என்ன இருந்தாலும் இராமனைவிட அறிவு மிகுந்த காளை வேறொன்று இருக்க முடியும் என்று நான் நம்பவில்லை. எதற் கும் இராமனும் அந்த வேடிக்கைகளைப் பார்க்கட்டுமே !"

ரெட்டியார் :—"அப்படியே செய்யுங்கள்! நன்றாகக் கவ னித்துக்கொண்டானானல் இராமன்கூட எளிதில் அந்த வேடிக் கைகளையெல்லாங் காட்டுவான் !"

* * *

மறுநாள் காலை பொழுது விடிந்ததும் ஆலமரத்தடி நன் றாகப் பெருக்கிச் சுத்தஞ்செய்யப்பட்டது. நாலைந்து நாற்காலி கள் கொண்டுவந்து போடப்பட்டன ; இரண்டு மூன்று விசிப் பலகைகளும் போடப்பட்டன. மற்றொருபுறத்திற் சற்று மறை வாகச் சில இருக்கைகள் அமைக்கப்பட்டன. அவை பெண் மக்கள் உட்காருவதற்காக.

Koviloor Digital Library



முதல் நாள் மாலையிலேயே போலீஸார் தமுக்கடித்துச் செய்தி தெரிவித்திருந்ததால் சிறிது நேரத்தில் பெரியகூட்டங் கூடிவிட்டது. அவ்வூரிலுள்ள ஆண் பெண் குழந்தைகள் எல்லாம் வந்துவிட்டனர். இரண்டு மூன்று சேவகர்களுடன் போலீஸ் தலைவரும் வந்து சேர்ந்தார். ரெட்டியாரும் பன்னிரண்டு வயதுள்ள தம் அருமைப்பெண் இராதாவையும் அழைத்துவந்து நாற்காலியிலமர்ந்தார். அவர் பக்கத்தில் இராதாவும், அவ்வூர்ப் பெருமக்களிற் சிலரும் அமர்ந்தார்கள். மாட்டுக்காரச் சிறுவன் வீரப்பன் என்னையும் ஓட்டிக்கொண்டு அங்கே சென்றான். என்னைக் கண்டதும் "இராமா! இப்படி வா" என்று போலீஸ் தலைவர் அன்புடன் கூறித் தம்மருகில் என்னை நிறுத்திக்கொண்டார்.

"புரும், புரும், புரும்!" கோபுவை ஓட்டிக்கொண்டு ராகுலு வந்து சேர்ந்தான். ரெட்டியாருக்கும் கூட்டத்திலுள்ள மற்றவர்களுக்கும் பெரிய கும்பிடு போட்டான்.

கோபுவை நான் கூர்ந்து நோக்கினேன். எனக்கென்னவோ அறிவில் மிகுந்த காளையாக அது தோன்றவில்லை. மிகவும் மட்டமான தொன்றாகவே தோன்றிற்று. அன்றியும் அது வயிறு நிறையத் தீனி கண்டு மாதக்கணக்காகியிருக்கவேண்டும் என்றும் தோன்றிற்று. நமக்குத் தெரியாத வேடிக்கை என்ன இது செய்துவிடப்போகிறது பார்க்கலாம் என்று நினைத்துக்கொண்டேன்.

கோபுவை இரண்டு மூன்று முறை இராகுலு தட்டிக்கொடுத்தான். "இதுதான் கோபு; பேர்போன புரும் மாடு! எல்லாக் காளைங்களைப்போலவும் இத்தே நெனச்சுடக் கூடாது. பள்ளிக்கொடத்திலே படிச்சவங்களுக்குக்கூட இம்மாம் புத்தி யிருக்காதுங்க! கணக்குப் போடும்! இம்மாம் பெரிய கும்பலிலே யார் ரொம்ப அழகானவங்க இண்ணு கண்டுபிடிச்சுக் காட்டும். யார் பெரிய லோபி இண்ணு கேட்டா நேரே அவங்ககிட்டப் போய் நிண்ணு காட்டும். சும்மாவா எல்லாரும் "கோபு கோபு" இண்ணுப் பேசுறாங்க; போலீசு ஐயாமாருங்களே சிபாரிசு செய்றாங்க!" என்று பெருமையுடன் இராகுலு கூறினான். கூறிவிட்டு,

Koviloor Digital Library



"கோபு, எங்கே இங்கே கூடியிருக்கிற யசமாமாரு அம்மா மாருங்களுக்கெல்லாம் நமஸ்காரம் பண்ணு பாக்கலாம்!" என்று சொன்னான்.

கோபுவும் சற்று முன்னுக வந்தது. தன் கையிலிருந்த சிறு கொம்பினால் ராகுலு அதன் முழங்காலின் பிற்புறம் ஒரு தட்டுத் தட்டினான். உடனே அது தன் இரண்டு முழங்கால் களையும் மண்டியிட்டுத் தலையைக் கீழே தாழ்த்திற்று. இது தான் நமஸ்காரம் செய்வதுபோலும்! இராகுலு கொம்பினால் தட்டாவிட்டால் அது தன்பாட்டில் நின்றுகொண்டுதானிருக்கு மென்பது எனக்கு நன்கு புலப்பட்டது. பாவம்! இவ்வாறு பழகுவதற்குள் எவ்வளவு அடி அது வாங்கியிருக்கிறதோ யார் அறிவார்?

காளை பின் எழுந்தது. "எங்கே கோபு, இந்த ஊரினுள்ள வங்கள்ளாம் நல்ல மனுசாள்தானு? ரொம்ப ரொம்ப பணங் குடுப்பாங்களா? உனக்கு வயிறு நெறயத் தீனி வைப்பாங் களா?" என்று கேட்டுக்கொண்டே தன் கொம்பை அதன் வலது முன் காற்புறம் கொண்டுபோனான். உடனே அது தன் வலக்காலைச் சற்று வளைத்து மேலே தூக்கிற்று.

"இந்த ஊரிலே லோபிங்க, ஈயாத பாவிங்க யாரும் இல் லியே?" என்று கேட்டுக்கொண்டே இராகுலு அதன் காதி னிடம் அக் கொம்பைக் கொண்டுபோனான். உடனே அது தன் தலையை அப்புறமும் இப்புறமும் அசைத்தது. எனக்கோ ஒரு புறம் சிரிப்பும், ஒருபுறம் ஆத்திரமுமாக இருந்தது. இராகுலு வின் கைக்கொம்புக்குப் பயந்துதான் அது காலையும் தலையை யும் ஆட்டுகிறதென்றும், மற்றப்படி அவன் பேசுவதோ சொல் வதோ ஒன்றும் அதற்குத் தெரியாதென்றும் கண்டுகொண் டேன்.

தன் தோளிலிருந்து தொங்கிக்கொண்டிருந்த பெரிய துணிப்பையொன்றிலிருந்து இராகுலு பூமாலை யொன்றை எடுத்தான். அதனைக் கோபுவின் வாயிற் கொடுத்தான். அது வும் கவ்விக்கொண்டது. "கோபு! இங்கிருக்க அம்மாமாருங் களில் யார் ரொம்ப அழகானவுங்க இண்ணு தெரிகிறதோ

Koviloor Digital Library



அவுங்க பாதத்திலே இந்த மாலையெப் போட்டேட்டுவா பாக்கலாம்!" என்று கூறிக்கொண்டே "புரும், புரும்," என்று ராகுலு ஓசை செய்தான். மாடு மெல்ல மெல்ல நடந்து கூட்டத்தின் ஓரயாகவே போய்க்கொண்டிருந்தது; பின்னல் "புரும், புரும்" என்று ஓசை செய்துகொண்டே ராகுலுவும் போனான். பெண்மக்கள் இருந்த இடம் வந்ததும் அங்கே முதலில் நின்றுகொண்டிருந்த ஒருத்தி தன் கையை நீட்டினாள். உடனே கோபு மாலையை அவள் காலருகில் போட்டுவிட்டு அவள் கையிலிருந்த எதையோ வாங்கித் தின்றது.

எனக்கு அடங்காத கோபம் வந்துவிட்டது. ஐம்பது வயது இருக்கும் அக் கிழவிக்கு. அழகு என்பதை அவள் என்ன என்றுகூடக் கண்டிருக்கமாட்டாள். அம்மைத்தழும்பு நிறைந்து அருவருக்கத்தக்க தோற்றமுடையவளாயிருந்தாள். அவள் அணிந்திருந்த உடைகளிலும் நகைகளிலுமிருந்து, அவள் இராகுலுவின் மனைவியாகத்தா னிருக்கவேண்டுமென்று கண்டுகொண்டேன். அவள் கையில் வைத்திருந்தது பிண்ணாக்குத் துண்டு. சட்டென்று முன்னே பாய்ந்தேன்; இரண்டே பாய்ச்சலில் அவளிருந்த இடத்தை யடைந்தேன்; கீழே கிடந்த பூமாலையைக் கவ்வியெடுத்து விரைந்து திரும்பி வந்து ரெட்டியாரின் அருகிலிருந்த இராதாவின் மடியில் வைத்தேன். கூடியிருந்தோர் அனைவரும் ஆ! ஆ! என்று வியந்து கூவிக் கைகொட்டி ஆர்ப்பரித்தார்கள். ரெட்டியார் முகம் மலர்ந்தது. ராகுலுவின் முகம் சிறுத்துக் கருகிற்று. அங்கிருந்த பெண் மக்கள் எல்லோரிலும் இராதாதான் அழகிற் சிறந்த பெண் என்பது குருடனுக்குக்கூடத் தெரியும்!

தன் மானக்கேட்டை வெளிக்காட்டிக்கொள்ளாமல் இராகுலு மறுபடியும் "புரும், புரும்" என்று ஓசை செய்தபின், தன் பையிலிருந்து கோணங்கிக் குல்லாயொன்றை வெளியிலெடுத்தான். "கோபு, இதென்ன தெரியுமா?" என்று கேட்டு அக்குல்லாயை அதன் முகத்தருகிற் கொண்டுபோனான். அது தன் தலையை அசைத்தது. "ஆ! ஒனக்குத் தெரியாதது என்னு இருக்கு! எங்கே இந்தக் குல்லாயை இங்கே யாராவது

Koviloor Digital Library



ஈயாத லோபி இருந்தால் அவுங்க தலையிலே போட்டுட்டுவா பாக்கலாம்!'' என்று சொல்லி அதன் வாயிற் கொடுத்தான். குல்லாயைக் கவ்விக்கொண்டு காளை மெல்ல நடந்து சென்றது. ராகுலு தானிருந்த இடத்திலேயே உட்கார்ந்து "புரும், புரும்' என்று ஓசை செய்துகொண்டிருந்தான்.

கோபு முன்போலவே பெண்களிருந்த பக்கம் நாடிச் சென்றுகொண்டிருந்தது. வழியில் சிறுவர்கள் கூட்டமாக ஓரிடத்தில் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களுள் பத்து வயதுச் சிறுவனொருவன் சற்று முன்வந்து கோபுவைப் பார்த்துத் தலையை ஆட்டி ஆட்டிக் கூப்பிட்டான். அவன் அணிந்திருந்த உடையையும், அவன் முகச்சாயலையுங் கூர்ந்து நோக்கிய எனக்கு அவன் ராகுலுவின் மகன்தான் என்று எளிதில் விளங்கிற்று. அவன் தலையில் குல்லாவை மாட்டப் பழக்கி வைத்திருந்தபடியால் கோபு நேரே சென்று அவ்வாறே எளிதில் மாட்டிவிடும் என்று கண்டுகொண்டேன். ராகுலுவை மானங்குலைக்க இதைவிடத் தக்க வாய்ப்புக் கிடைக்காது என்ற ஒரெண்ணம் உதித்தது. மின்னல்போற் பாய்ந்துசென்று கோபுவின் வாயிலிருந்த கோணங்கிக் குல்லாயைக் கவ்விப் பிடுங்கினேன். கோபுவும் தன்னை விட்டாற் போதுமென்று குல்லாயை விட்டுவிட்டு நின்றுகொண்டது. குல்லாவைப் பிடுங்கிய யான் நேரே ராகுலு உட்கார்ந்திருந்த இடத்திற்குப் பாய்ந்து சென்று அவன் தத்திக்குத்தி எழுந்திருப்பதற்குள் அவன் தலையில் மாட்டி அழுத்தினேன். குல்லாயும் அவன் கண்கள்வரை அழுந்திவிட்டது. அவன் குய்யோ முறையோ என்று கத்திக்கொண்டு எழுந்து தக்குப் புக்கென்று குதித்தான். நானும் அவனைச் சுற்றிச் சுற்றிக் குதித்து முக்காரம் போட்டேன். அவ்வளவுதான். கூடியிருந்தவர்களெல்லாரும் கைகளைத் தட்டிக்கொண்டும், கா கூ வென்று கத்திக்கொண்டும் என்னருகே ஓடிவந்தனர்.

"ராமன் கிட்டவா பாச்சா பலிக்கும்! படிச்ச காளையாம், படிச்சகாளை! ராமன் கால்தூசி விலை பெறுமா வேறெந்தக் காளையும்? இந்த ராகுலுவைவிட லோபி வேறு யாரும் இல்லேண்ணு தெரிஞ்சு அவன் தலையிலேயே குல்லாயை மாட்டு

Koviloor Digital Library



ணும்னு அதுக்கு எவ்வளவு அறிவிருக்கணும்!'' என்று ஒருவன் கூறினன்.

"இராமன் என்ன சாதாரண காளையா! ஐம்பது திருடர்களைப் பிடித்துவந்து சிறையிலடைத்த காளையல்லவா!' என்ருன் மற்ருெருவன்.

"எரியிற வீட்டினுள்ளே புகுந்து படிக்கட்டு வழியா மேலே ஏறி ஏழு வயதுப் பெண் ஒன்றை வாயிற் கவ்விக் கீழே தூக்கிவந்து காப்பாற்றிவிட்டுத் தானே கிணற்றிலிருந்து தண்ணியையும் மொண்டு ஊற்றி நெருப்பை அணைத்த காளையடா அது!'' என்று ஒரு நாட்டுப்புறத்தான் கூறினன்.

"மாரியம்மன் திடல் மஞ்சுவிரட்டுலே தொழுவிலிருந்து நேரே மேலாலே தாவி நூறு அடிக்கு அப்பாலே பாய்ந்து, கண்மூடிக் கண் திறப்பதற்குள் அஞ்சு கல் தொலைவு சுற்றிவந்து பரிசுபெற்ற காளையா, இலேசா!'' என்று ஒரு குடியானவன் நேரே பார்த்தவன்போற் கூறினன்.

இன்னும் இவ்வாறே இல்லாததும் பொல்லாததுமான எத்தனையோ கதைகள் என்னைப்பற்றிக் கட்டிவிடப்பட்டன. பெருமாள் மாட்டுக்கார இராகுலு தன் மனைவியுடனும் மகனுடனும் கோபுவை ஒட்டிக்கொண்டு கூட்டத்திற்குள் புகுந்து நழுவிவிட்டான்.

போலீஸ் தலைவர் அடைந்த மகிழ்ச்சிக்களவில்லை. ரெட்டியாரை எல்லோரும் கொண்டாடினர்கள். "இந்த இராமன் இவ்வூருக்கே சொந்தம்'' என்று எல்லாரும் உரிமை கொண்டாடினர்கள். ஊரெல்லாம் மீண்டும் இரண்டு மூன்று வாரங்கள்வரை என்னைப்பற்றிய பேச்சுத்தான்.

---

Koviloor Digital Library

# நூல்நூற்ற நுண்ணிழையார்

## "உருக்குமணி தேவி"

நீர்வளமும் நிலவளமும் நிரம்பப்பெற்ற நம்முடைய மந்தமார் பொழில்வளர் இந்தியாத் தேயம் ஆதிதொட்டே அருங்கலையும், வாணிபத் துறையும், கைத்தொழிலு முடைத் தாய்த் தலைசிறந்து அலைநீர்க் கடல்சூழ் நாடாகத் திகழ்கின்றது. இதற்குப் பண்டையோருரைத்த தண்டமிழ் நூல்களிலும், பிறநாட்டறிஞர் எழுதிய விழுமிய எழுவில் குறிப்புகளிலும் பழியொழிந்த பற்பல மொழிச் சான்றுகளுள. நம் நாட்டிற் புகுந்து பொருள் மண்டிச்சென்ற யவனராதியர் நம் நாட்டை மிக்க வளப்பமுடைத்தென்றும், பொய்த்தலில்லாக் கைத் தொழிலும் ஆணித்திறனுடை வாணிபமும் கரைகடந்து நடந்தனவென்றுங் கூறிப் போந்தனர்.

* * *

கைத்தொழிலில் இரண்டே மிக உயர்வுற்றிருந்தன. அவை: அருந்தமிழிற் பெருமறையருளிய திருவள்ளுவர், தாம் மேற்கொண்ட நெசவு ஒன்று; கவிக்கரசெனப் புவிப் போற்றும் கம்பர் 'ஏரெழுப'தில் ஏத்திய ஏர்த்தொழி லொன்று. இவற்றிற்கு,

"வியன்மேவல் விழுச்செல்வத்து
இருவகையா னிசைசான்ற
சிறுகுடிப் பெருந்தொழுவர்
குடிகெழீய நானிலவரொடு"

என்னும் மதுரமதொழுகும் மதுரைக்காஞ்சி யடிகளே கரி யாகும்.

"செய்யுந் தொழிலெல்லாம் சேர எடுத்துரைக்கின்,
நெய்யுந் தொழிற்கு நிகராகா"

என்பதனாலேயே தெய்வப்புலமைத் திருவள்ளுவரின் கள்ள மிலா வுள்ளம் நெசவுத்தொழிலைக் குறித்ததுபோலும்.

* * *

Koviloor Digital Library



நம் நாட்டிற் பண்டையோராலாய கூறைகள்பல பகுதியன. நிலமெலாம் போற்றும் சிலப்பதிகாரம் செப்பும் ஆடைகள் மண்ணில் எண்ணில.

அவை கோசிகம், பீதகம், பச்சிலை, வண்ணடை, அரத்தம், தேவகிரி, நுண்டுகில், சுண்ணம், வடகம், பஞ்சு, இரட்டு, பாடகம், பரியட்டகாசு, வேதங்கம், புங்கர்க்காழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தத்தியம், கவற்றுமடி, நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, காத்தூலம், இறஞ்சி வெண்பொத்தி, செம்பொத்தி, பணிப்பொத்தி கோங்கலர், கோபம், சித்திரக்கம்மி, குருதி, கரியல், பேடகம் ஆய பல. மேலும்,

"பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்,
கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையும்"

என்னும் அடிகளின் உரையில் மயிரினும் என்றதற்கு எலிமயிரானுமெனக் கூறப்பட்டுள்ளது. மற்றும்,

"இழித்திலா எலிமயிரின் போர்வையும்" என நஞ்சமதடக்கிய கண்டனுறை காஞ்சிப்புராணத்தானும் அறியலாம். இன்னும், "மூங்கிலாடை உரித்தாலொத்த மாசில்லாத உடை; ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம்" என வருவனவற்றாலும்,

"பாம்புரி யன்ன வடிவின காம்பின்
கழைபடு சொலியின் இழையணி வாரா
ஒண்பூண் கலிங்கம்"

எனவரும் புறநானூற் றடிகளின் உரையாலும் பற்பல ஆடைகள் அக்காலத்து ஆக்கப்பட்டன என்பதும் தெற்றென விளங்காநிற்கின்றது.

ஓர் யவன ஆசிரியர், கம்பளியை ஆட்டு மயிரினலாயதினும் ஆண்டு இந்தியாவிலாய மரத்தினுலாய கம்பளியே உயர்ந்த தென்று கூறுகின்றார். மற்றும் நந்தம் நாட்டு வாணிபத்துறையைப் பஞ்சில்மட்டும் நெஞ்சில் நினைக்கின், எகிப்து, ஆசிரியா

Koviloor Digital Library



பாபிலோனியா முதலிய அயனாடுகளுடன் அது பயமின்றி வயமுற்றுச் சம்பந்தப்பட்டிருக்கிறது என அறிவோம்.

* * *

இங்ஙனம் உற்றோரானும் மற்றோரானும் புகழுந் தகைய பழிதீர் ஆடைகள் யாவும் ஆக்க, நம் ஆதி அன்னையரே ஏது என்பது மிகையாகாது. ஆடை அமைக்க இன்றியமையா வென்றிகொள் நூல் அம் மாதராலேயே நூற்றுவரப்பட்டது. நெய்தல் தொழிற்குக் 'காருக வினை' என்னும் பெயருண்டு. இத் தொழிலுடையோரைக் 'காருகர்' எனக் கூறுவர். இது 'காருக ரிருக்கை' 'காருக மடந்தை' என வருந் தொன்னூல் தொடர்களாலும், திவாகரத்தில்,

> "பருத்திநூல் பட்டுநூல் அமைத்தாடை யாக்கலும்
> சுமத்தலும் பிறவும் காருகவினைத் தொழில்"

எனத் தொழில் தன்மையைக் கூறுமாற்றானும் புலனும். இல்லங்களிலிருந்துகொண்டே, அரிய ஆடைகள் ஆக்குவதற்குரிய மெல்லிய நூலிழைகள் நூற்றளிப்பதாலேயே இப் பெயருற்றது என்று கூறலாம். இன்னும்

> "பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாக
> செஞ்சொற் புலவனே சேயிழையா"

என்ற எந்நூலினும் பொன்னூலாமாய முன்னூல்களிற் சிறந்த நன்னூற் பாயிர அடிகளில் பஞ்சி நூலையும் படிப்பு நூலையும் உருவகிக்குமிடத்துப், புலவனுக்குச் சேயிழையைக் கூறிய சிறப்பானே நூனூற்றல் மகளிர் தொழிலென்பது புலனும். மற்றும், 'பருத்திப் பெண்டின் பனுவலன்ன' என்ற புறப்பாட்டடிக்குப் "பருத்தி நூற்கும் பெண்சாதியது சுகிர்ந்த பஞ்சுபோன்ற" என்றுவரும் உரையானும், "நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளாற் கைவன் மகடூஉத் தனது செயற்கைநலந் தோன்ற ஓரிழைப்படுத்தலாம் உலகத்து நூனூற்றலென்பது" என்னும் களவியல் உரைப்பகுதியானும் நம் பண்டைய பெண்கள் நூல் நூற்று வந்தனர் என்பது வெள்ளிடைமலையாகும்.

* * *

Koviloor Digital Library



எனவே, தற்போது மேனாட்டு மாதர்கள் பல கைத்தொழில்கள் செய்து பொருளீட்டுவதுபோல இந்திய நாட்டு முந்திய மாதரும் நூனூற்றல் முதலானவை இயற்றிவந்தனர் என்பது அறியக்கிடக்கின்றது.

இங்ஙனம் ஆதிதொட்டே ஆடைக்கு முந்தி நின்ற இந்தியா, அயலார் வரவு பார்த்துப் பிந்தி நிற்பது வருந்தற் பாலதேயாம். முன்னோர்போல ஆண்பாலரேயன்றிப், பெண்பாலரும் கைத்தொழிலியற்றிக் காலந்தள்ளுவராயின், முந்திய சிறப்பை நந்தந் தேயம் எய்துமென்பது திண்ணம்.

---

# திருப்புகழ் இடைச்செருகல் முதலியன

"வ. சு. செங்கல்வராய பிள்ளை M. A."

## I

'அருணகிரிநாத சுவாமிகள்' திருவாய் மலர்ந்த திருப்புகழ் ஏட்டுப் பிரதிகளை ஆராயும்பொழுது பல 'வித' இடைச்செருகலான பாடல்கள் காணப்பட்டன. 'உதாரணமாக' (1) 'ஸ்ரீ முருகதாச சுவாமிகள்' பாடின "புதுவைத் திருப்புகழ்ப்" பாடல்கள் பன்னிரண்டும் திருப்புகழ் ஓலைப்புத்தகம் ஒன்றிற் கலந்திருந்தன.

(2) 'ஸ்ரீராமாநுஜர்' நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழில் உள்ள "உடைச்சேலை தா குழைக்கோலை தா" என்னும் பாடல் திருநெல்வேலிப் 'பிரதேச' ஓலைப்புத்தகம் ஒன்றில் அருணகிரியார் திருப்புகழ்களுடன் கலந்து காணப்பட்டது.

(3) திருச்செந்திற் கலம்பகத்துப் பாடலான "இன்பமுந் துன்பமும்" என்னும் பாடல் திருப்புகழ் ஓலைப்புத்தகத்திற் கலந்து தவறுதலாகத் திருப்புகழ் 54-ஆம் பாடலாக அச்சேறியும்விட்டது. இப்பாடல் திருப்புகழ் முதற்பாகத்தினின்றும் அடுத்த பதிப்பில் நீக்கப்படும்.

Koviloor Digital Library



வாக்கின் போக்கினுல் முதலிரண்டும் 'அருணகிரிநாத சுவாமிகள்' வாக்கல்ல என்று தெளிவுபெறத் தெரிந்து நீக்கப் பட்டன. மூன்ருவது - இப்பிழையைப் பூவிருந்த வல்லித் தமிழ்ப் பண்டிதர் திருவாளர் ராஜு முதலியார் அன்புடன் தெரிவித்தனர்.

## II

பின்வரும் இரண்டு சந்தப்பாடல்கள் அருணகிரியார்மீது ஓரன்பர் இயற்றினவை. இவைதமைத் திருநெல்வேலி 'ஜில்லா' ஆழ்வார் திருநகரியில் ஓர் ஓலையிற்கிடைத்தன, என்று கும்ப கோணம் 'காலேஜ்' தலைமைத் தமிழ்ப்பண்டிதர் 'பிரமஸ்ரீ சடகோப ராமாநுஜாசாரியார்' அவர்கள் எனக்கு 19-5.-1930 தேதியில் தந்து உதவினர்.

### (1)

பெரியதொரு கொம்படுத் திலங்கு
கமலம திரண்டுவிற் பதிந்த
பிறைமதிய மொன்றுவெற் பிரண்டு சிலைமீதே;
பிறழுமுகி லொன்றுமுத் திரண்டு
குமுதமல ரொன்றுதுப் பிரண்டு
பெருகுசுழி யொன்றுமற் றிரண்டு கயல்போலே;

தெரியுமிடை செங்கைபொற் பமைந்த
வதனமொளிர் கொங்கைமட் டலர்ந்து
செருகுகுழல் தந்தமிச்சை தந்த களிவாய்நேர்;
திகழதர முந்திமைக்க ணென்று
வடிவுபெறு மங்கையர்க் கிடைந்து
திரையுறு துரும்பெனச் சுழன்று மருளாதே;

வரியரவி னின்று தித்தி தொந்தொ
மடிகுடிகு டிந்த தத்த திந்த
மபநிதப என்று நிர்த்த னஞ்செய் நெடுமாமால்
மருக!உமை யின்பமுற் றமைந்த!
அசுரர்பொர வந்தெதிர்த்த அன்று
மயில்கடவு கந்த!நிற் பதங்கள் பெறுவேனே!

அரியதவ முன்பியற் றியைந்து
புலன்வழித கைந்துதத் துவஞ்சொல்
அடைவின்முறை நெஞ்சுறத் தெளிந்து மறைகாணு;

Koviloor Digital Library



அருவிலுரு வுந்தனித் திலங்கு
சுடரிலொழி யும்(லொளிரும்?)பரத் வ மென்ற
அருணகிரி செந்தமிழ்க் குவந்த   பெருமாளே.

(2)

சிகரவரை விண்டுவிற் பதுங்க
முளரிமலர் பங்கமுற் றலைந்து
செவிகுறைய மந்தரத் தையுந்து   மதயானை ;
திசைதொறும டங்கவச் ரகும்ப
முடைபடம தன்சிரத் தணிந்து
திகழ்மகுட மங்கியிற் பொரிந்து   பொடியாக ;

மகரமுகள் சிந்துமொக் குளந்த
னுருவழிய வண்பனைக் குரம்பை
வசியிலற அம்புவிக்கு ளொன்று   மிணையாகா ;
மறுமடிவு கொண்டிழைத்த தென்று
கெருவிதமு டன்புடைத் தெழுந்து
வளருபய கொங்கையர்க் குணைந்து   மெலிவேனோ ?

பகரமரர் குஞ்சரிக் குமஞ்சு
பருகுகுற மஞ்சரிக் குமொன்று
படும்விரக சம்ப்ரமத் தினின்ப   மறவாதே ;
படரொளிவி ரிந்தசப் ரமஞ்ச
மலரணையி லன்புறக் கலந்து
பரிவுபெறு சுந்தரப் ப்ரசண்ட   மயிலோனே ;

அகரவுயி ருந்தனித் திருந்த
ககரவுட லுந்தமிற் புணர்ந்து
ளமையவிடை நின்றஅக் கரங்கள்   முறையாக ;
அதனைமரு வும்படிக் கிசைந்த
விதிமுழுவ தும்பகுத் துணர்ந்த
அருணகிரி செந்தமிழ்க் குகந்த   பெருமாளே.

மேல் இரண்டு பாக்களையும் பாடிய பெரியார் ஸ்ரீ அருண கிரியார் ;வாக்கில் மிக ஈடுபட்டவர் என்பது அப் பாக்களின் சொல்லழகாலும் பொருளழகாலும் நன்கு புலப்படுகின்றது.

---

Koviloor Digital Library

# மதிப்புரை

**உலகம் சுற்றும் தமிழன் :** ஆசிரியர்: ஸ்ரீ. ஏ. கே. செட்டியார், விலை அணா 12.

ஆசிரியர் தம் உணர்ச்சிகளைத் தாமே சித்திரித்திருக்கின்றார். தொடக்கம்முதற் கடைசிவரையிற் படிக்க ஊக்கமாயிருக்கிறது. உள்ளங் கவரும்படி நகைச்சுவை முதலியன பெய்து விளக்கமாக எழுதும் வல்லமை இந்நூலில் நன்றாயிருக்கிறது. உலகத்திலுள்ள பல்வேறு நாடுகளின் இயற்கைகள் மக்களின் பழக்கவழக்கங்கள், மொழியியல்புகள், அரசியல் நிலைமைகள், தொழில்கள் முதலியன அங்கங்குந் தெளிக்கப்பட்டிருக்கின்றன. இந் நூலைப் படிப்போர், பல புதிய குறிப்புகள் கண்டுகொள்ளுவதோடு, நாட்டுப்பற்று, மொழிப்பற்று, உரிமை வேட்கை முதலியனவும் எழப்பெறுவர். அச்சுங் கட்டுங் கவர்ச்சியானவை.

**சிவபரத்துவ நிச்சயம் :** இயற்றியோர்: சிவஸ்ரீ ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை; உரையாசிரியர்: காழி திரு பி. அகோரம் பிள்ளை. உடனிருந்து பிழைபார்த்து அச்சிட்டோர்: வித்வான் பிரம்மஸ்ரீ K. M. வேங்கடராமையா அவர்கள் B. A., B. O. L. விலை அணா 12.

இது செய்யுள் நூல்; பாட்டு எளிமையாயிருக்கிறது. ‘ சிவபிரானே முழுமுதற் கடவுள் ’ என்னுங் கருத்து, நூலில் உறுதி செய்யப்படுகின்றது. வேண்டும் வடமொழிச் சான்றுகள் உரையிற் காட்டப்படுகின்றன. நல்ல உழைப்போடு அச்சிடப்பட்டிருக்கின்றது. பல நூல்களின் கருத்துகள் இதன்கண் மிளிர்கின்றன.

**தஞ்சைத் திருக்கோயில்கள் :** ஆசிரியர் : ஜே எம். சோமசுந்தரம் பிள்ளை. B. A., B. L. விலை அணா 4.

தஞ்சையைச் சேர்ந்த திருக்கோயில்களின் வரலாறும், பெருமையும் வரலாற்று ஆராய்ச்சியோடு இந்நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. முன்னோர் செய்யுட்கள், வரலாறு, கல்வெட்டு, புராணங்கள் முதலியன சான்றாக மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. ‘ தஞ்சையின் தலமான்யம் ’ என்பது வடமொழி மூலத்தோடும், தமிழ் விளக்கத்தோடும் நூலின் முதலில் இணைக்கப்பட்டிருக்கின்றது. ஆசிரியர் முயற்சி போற்றற்குரியது. ஆராய்ச்சிக்கு உதவியாயிருக்கும்.

**மனிதனும் கடமைகளும் :** ஆசிரியர் : க. சிதம்பரம் பிள்ளை, விலை ரூ. 1.

மனிதன் பல துறைகளிலும் தெரிந்து செய்யவேண்டிய பொதுவான கருத்துகள் இந்நூலிற் பகுதி பகுதியாகப் பிரித்து இயன்றவரையில் விளக்கப்பட்டிருக்கின்றன. ஆசிரியர் நோக்கமும், போக்கும், முடிவுகளும் நன்றாயிருக்கின்றன. சில பொருள்கள்மேல், உலக அறிஞர்களின் கருத்துகளுஞ் செய்திக்குறிப்புகளும் திரட்டப்பட்டிருக்கின்றன. நூலில் அங்கங்குந் தெளிவு நிழலாடுகின்றது. விளங்க எழுதப்பட்டிருக்கின்றது. அச்சு, தாள், கட்டு முதலியனவும் நல்ல. எல்லாரும் படிக்கவேண்டிய நூல் இது. ஆசிரியர் மேலும் இதுபோலும் பயன்படு நூல்களை எழுதியுதவுதல் நன்று.

Koviloor Digital Library



'கருணாமிர்த சாகரம்' என்னும்
இசை நூல் ஆசிரியர் தஞ்சை
**ஆப்ரஹாம் பண்டிதர்.**

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—ஆனி [பரல்-கூ

## வளர்க!

சிறுகுடி யீரே, சிறுகுடி யீரே!
வள்ளிகீழ் வீழா; வரைமிசைத் தேன்தொடா;
கொல்லை குரல்வாங்கி ஈனா; மலைவாழ்நர்
அல்ல புரிந்தொழுக லான்.

—கலித்தொகை.

உண்மைக்கு ஓர் அடையாளம் உண்டு. யார் உள்ளத்திலும் அது, தானே தோன்றி விளங்கிக்கொண்டிருக்கின்றது. மலையில் வாழுங் குறப்பெண்ணேயானாலும், அவள் உலகம் அறியா இள நங்கையேயானாலும், உண்மை அவளிடத்திலும் வீறுடன் எழாநிற்கின்றது. அவள் குரலே இப் பாட்டு.

அற நினைவுக்கு உட்படாத இடம் உலகத்தில் எங்கிருக்கின்றது? நிகழ்ச்சிதான் என்ன இருக்கின்றது?

மலையிடமேயானாலும் அங்கே வாழ்வோர் அறமல்லாதவை செய்தொழுகினால், மலைப்புனங்களில் வள்ளிச் செடிகளுங் கிழங்கு விடமாட்டா. கொல்லைகளில் தினை முதலிய பயிர்களுங் கதிர் விட்டுத் தானியங்கள் தரமாட்டா. மலையின்மேல் தேனீக்களும் தேன் கூடுகள் தொடுக்கமாட்டா. அறநினைவோடிருந்தால் எல்லாம் உண்டாகும்.

விளக்குக்குத் திரி பற்றுக்கோடாயிருப்பதுபோல, அறநினைவுகட்குச் சான்றோர் பற்றுக்கோடாயிருக்கின்றனர்.

வளர்க அறநினைவுகள்! வளர்க சான்றோர்!!

Koviloor Digital Library

# ஆங்கில மாடு

ஆசிரியர் தொல்காப்பியனாரும் சும்மா இல்லை. 'உவமானங்களும் உருவகங்களும் பேச்சுகளை அழகுபடுத்தும்' என்று எப்போதோ ஐயாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்குமுன் ஒரு கிளர்ச்சியை உண்டுபண்ணினாலும் பண்ணினார்;* அவ்வளவுதான்; அரசினரின் சட்டசபைப் பேச்சுகளுங் கட்டளைகளுங்கூட இவ்வுவமான உருவகங்கள் இல்லாமல் இப்போது நடக்கமாட்டேம் என்கின்றன. இறைவன் இல்லாத இடம் ஒன்று இருக்குமானால், இலக்கியம் இல்லாத இடமும் ஒன்று இருக்கும்போலிருக்கிறது! தெரியாமலா,

"எண்ணும் எழுத்தும் சொல் லானாய் போற்றி"

எனவெல்லாம் இலக்கண இலக்கியங்களை இறைவன் வடிவங்களாகக் கருதிச் சான்றோர்கள் பாடியிருக்கிறார்கள்!

* * *

புதுக்கோட்டை அரசில், ஒருகால், ஏதோ தப்புச் செய்ததன் காரணமாக ஒருவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். அவர் மீண்டும் அவ் வேலையைப் பெறுவதற்கு மிகவும் முயற்சிகள் செய்து விண்ணப்பமும் அனுப்பியிருந்தார். அப்போது அவ்வரசின் ஆட்சியாளராயிருந்தவர், அவ் விண்ணப்பத்தின்மேல், "வறுத்த கொள் முளைக்குமோ!" என்று கட்டளை எழுதி அதனைத் திருப்பி அனுப்பிவிட்டாராம்.† உவமானம் செல்லாத இடம் எங்கே இருக்கிறது? உவமானங்களுக்கு இல்லாத செல்வாக்கு உலகத்தில் வேறு எதற்கு இருக்கிறது! அவ்வாட்சியாளர்

---

* தொல், அகத், சசு.

† திரு உ. வே. ஐயரவர்கள் தாம் எழுதிய "நல்லுரைக் கோவை" மூன்றாம் பாகத்தில், "திவான் ஸர். ஏ. சேஷையா சாஸ்திரியார்" என்னுந் தலைப்புடைய கட்டுரையில் இவ்வரிய செய்தியை எடுத்துக்காட்டியிருக்கிறார்கள்.

Koviloor Digital Library



மற்றவர்களை ஆள, அவர் உள்ளத்தை இலக்கியம் எவ்வளவு சுவையாக ஆளுகின்றது!

சிறிது காலத்துக்குமுன் 'காங்கரசு', ஆட்சி ஏற்றிருந்தபோது திரு சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாரவர்கள் முதலமைச்சராயிருந்து இலக்கியச் சுவைகளோடு நிகழ்த்திய சட்டசவைப் பேச்சுகளைத் தமிழ்நாடு விரைவில் மறப்பதற்கில்லை. இவர்கள், ஆட்சியிலிருந்தாலும் இல்லாவிட்டாலும் இவர்கள்பால் இயற்கையாகவே ததும்பிநிற்கும் இலக்கிய உள்ளம்மட்டும் எப்படியும் நாட்டுக்குப் பயன்பட்டுக்கொண்டேதான் இருக்கிறது. அறிஞர்கள் எங்கெங்கே இருக்கிறார்களோ அங்கங்கே இலக்கியங்களும் எப்போதுங் கூடவேஇருக்க விரும்புகின்றன.

அறிஞர்களுக்கு இலக்கியம் ஒரு வீடு போன்றது. அவர்கள் அறிவு, புறத்துறைகளிற் போய்ப் பெரிது முயன்று அலுத்தபின் சற்று இளைப்பாறலாம் என்று கருதினல், உடனே அவர்கள், தமக்குச் சொந்தமான இலக்கிய மாளிகைக்கு வந்து அமைதியாய் இன்பமாய் ஆறுதல்கொள்ளுகிறார்கள். அத்தகைய மேதகவினருள், ஆச்சாரியாரவர்களும் ஒருவராவார்கள். பெருமக்களுக்கு இலக்கியம் எவ்வளவுதான் உதவியாயிருக்கிறது! அதன் மாட்சிமை பெரிது! இலக்கியம், ஒரு பெரிய கடல்போலவன்றோ கண்ணியமாய் எதிரே விளங்குகின்றது!

அறிஞர்கள் என்பதற்கே அடையாளம், அவர்களிடம் ஏதேனும் புதுமை காணும் உள்ளம் திகழ்தலேயாம் என்று அறிஞர்களே சொல்லுகிறார்கள். அவர்கள் நினைவிலும் சொல்லிலும் சிறிதாவது புதுமைமணம் கமழாமல் இராதாம். அவர்கள் எது செய்தாலும் புதிது புதிதாகவே செய்துகொண்டிருப்பார்களாம். அப்படிச் செய்தால்மட்டுமே அவர்களுக்கு மனம் அமையுமாம்.

* * *

Koviloor Digital Library



திரு இராசகோபாலாச்சாரியார் இப்போது, சில நல்ல கட்டுரைகளும் எழுதிவருகிறார்கள். 'வசனநடை' 'பேச்சுத்தமிழ்' எனவெல்லாம் புதிய முறைகளில் இவர்கள் எழுதியிருப்பது தமிழுக்கு ஒரு வகையில் ஆக்கந் தருவனவாயிருக்கின்றன.

இக் கட்டுரைகளுள் ஒன்றிலேதான் 'ஆங்கில மாடு' வருகின்றது. ஆங்கிலத்தைப்பற்றிப் பேச நினைத்தபோது அதனை ஒரு மாடாக உருவகஞ்செய்து நம் மனக்கண்முன் நிறுத்தியிருக்கிறார்கள். 'வசன நடை' என்னுங் கட்டுரையில் இது வருகின்றது. கட்டாயமாகப் படித்துக்கொள்ள வேண்டிய பாகமாதலால், அவர்கள் எழுத்தை அப்படியே எடுத்து இங்கே காட்டுவது நல்லது. அது பின்வருமாறு :—

"தமிழில் பேச்சு கெட்டுப் போயிருப்பது மூன்று விதத்தில். ஒன்று கொச்சைப் பதங்களுக்கு அளவுக்கு மிஞ்சி இடம் கொடுத்து வருவது; இரண்டாவது, ஆங்கில மொழிகளைத் தயக்கமின்றி எல்லாக் காரியங்களுக்கும் எல்லா சமயங்களிலும் கலந்து பேசும் வழக்கம். மூன்றாவது, பேசும்பொழுது கையையும் தலையையும் ஆட்டி, பேச்சுக்குப் பதிலாக உடலை உபயோகித்து சம்பாஷணை நடத்தும் வழக்கம்.

இவை மூன்றும் பேச்சை அவலக்ஷணமாகச் செய்வதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். ஆனால் அது நம்முடைய இலக்கிய வளர்ச்சியைத் தடுத்து வரும் ரகசியத்தை அனைவரும் காண மாட்டார்கள். இரண்டாவதாகச் சொன்ன காரணம் மிகவும் முக்கியமான விஷயம். பல வேறு விஷயங்களை அறிந்தும் ஆராய்ந்தும் வரும் தமிழர் தாங்கள் சாதாரணமாகப் பேசும்போது முழுதும் தமிழ் மொழிகளாகவே பேசினால் தமிழுக்கு வளர்ச்சி ஏற்படும். விஷயங்களைப் பேசும்போது தமிழ் மொழி தெரியாத இடத்திலும், மறந்து போன இடத்திலும், புதுத் துறைகளில் ஆராய்ச்சி செய்யும்போதும், வாதப் பிரதிவாதம் செய்யும்போதும், அறிவையும் நினைவையும் செலவழித்துத் தமிழ் மொழிகளைத் தேடி உபயோகிப்பதற்குப் பதில், எளிதில் கிடைக்கக்கூடிய ஆங்கில மொழிகளை, அதாவது பிறதேசத்தார் கஷ்டப்பட்டுத் தங்களுக்கென்று உண்டாக்கியிருக்கும் மொழி

Koviloor Digital Library



களை எவ்விதக் கூச்சமுமின்றி இடை யிடையேகலந்து பேச்சு நடத்தி விட்டு, தமிழுக்குச் சோறு போடாமல் கொல்கிறோம். சோம்பேறி களைப் பெற்ற தாயைப்போல் தமிழ் அவதிப்பட்டு வருகிறது. அன்னம் ஊட்டாத தேகம் எப்படி வளரும்? நுட்பமான பொருள் பேதங்களும் அவைகளுக்குத் தகுந்த மொழிகளும் நடையும் ஒரு பாஷையில் எவ்வாறு தோன்றும்? தோன்றியவை எவ்வாறு உயிருடன் நிற்கும்? பொருளைப் புகுத்திப் பேசிப் பழகி வந்தால் தானே பாஷை வளம் பெறும். கிடைத்த புல்லையும் தவிட்டையும் ஆங்கில மாட்டுக்கே போட்டு வந்தால் நம்முடைய பசு எவ்வாறு பால் கொடுக்கும்? கொஞ்சம் தடை தோன்றிய இடங்களி லெல்லாம் ஆங்கிலத்தைப் போட்டு நிரவிப் பேச்சை ஓட்டிக் கொண்டு போனால் தமிழ் எங்ஙனம் வளரும்? அறிஞர்க ளெல்லாம் தமிழைக் கொல்லுவதற்காகச் சதியாலோசனை செய்தாலும் இதைவிட வேறு யுக்தி கண்டு பிடிக்க முடியாது.

இக் காலத்தில் தமிழ் பேசுகிறவர்கள் பேசும் நடைக்கு உதாரணம் பாருங்கள் :—தன்னைத் தான் அறிய வேண்டும். அவ்வப்போது Introspection செய்வது நல்லது. ஆனால் morbid ஆகப் போகக் கூடாது. பிடிவாதமாகத்தான் ஒரு கட்சியில் வேலை செய்யவேண்டும். அதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் செட்டியார் வர வர ரொம்ப narrow-minded ஆகப் போய் விட்டார் அல்லவா? அது தான் என்னுடைய objection. ராதா கிருஷ்ணன் ரொம்ப கெட்டிக்காரன்; யோக்கியன். ஆனால் steadiness போதாது. அவன் failureக்கு அதுதான் explanation. காதல் மணம் எல்லாம் ரொம்ப சரிதான். ஆனால் நம்ம தேசாசாரத்தில் love க்கு எங்கே இடம்? sex-feeling எல்லாம் love ஆய்விடுமா? Indian Art ஐப் பற்றித் தமிழில் எழுதுவதைவிட இங்கிலீஷில் எழுதுவது எனக்கு சுலபமாகத் தோன்றுகிறது; இதற்குக் காரணம் என்ன? சீதம்மாள் நன்றாகத் தான் பேசுகிறாள். ஆனால் ஒவ்வொரு சமயம் ரொம்ப boaring ஆகப் போய் விடுகிறாள். மனித வாழ்க்கைத் தருமங்கள் எல்லாம் imitation பேரில்தான் உண்டானது என்று psychologists சொல்லுகிறார்களே, உங்கள் opinion என்ன? ஜெர்மனிக்காரன் யமன், propaganda விலேயே பாதி யுத்தம் முடித்து விடுகிறான். உங்களுடைய மகள் health இப்போ எப்படி? ஒரு வாரமாகக் கொஞ்சம் set-back ஆயிற்று. ஆனாலும் பரவாயில்லை. டாக்டர் hopeful ஆகத்தான் சொல்லுகிறார்.

........................................................

Koviloor Digital Library



. தமிழ் நாட்டில் படித்த மேதாவிகளும் அனுபவம் கண்ட பெரியோர்களும் தங்களுடைய சாதாரண சம்பாஷணைகளில் ஆங்கிலம் கலக்காமலும் அங்க சேஷ்டைகள் இல்லாமலும் இரண்டு ஆண்டு தவம் இருந்தார்களானல்—அத்துடன் வயல்களிலும், கடைத்தெருவிலும், ஏழைகள் வீட்டிலும், பாமர மக்கள் பேசும் பேச்சில் நன்ருகக் கலந்துகொள்ளக் கற்ருர்களானல், தமிழ் வசன நடை தானக வளம் பெறும். வசனம் என்ருல் பேச்சா எழுத்தா என்ற கேள்வியே கிளம்பாது.'' —ஆனந்த விகடன் (9-6-40).

இந்தப் பகுதியின் முதலில் ஒரு மொழியின் பேச்சு நடை மூன்று வகையான காரணங்களாற் கெட்டுப் போகின்றது என்று காட்டியிருக்கிருர்கள். அவற்றுள் ஒன்று, பிறமொழிச் சொற்களைத் தடையின்றிக் கலந்து பேசுவது என்றுங் கருதுகிருர்கள்.

பேச்சுக் கெட்டுப்போவதற்குரிய மூன்று வகையான காரணங்களுள் இரண்டாவதாகச் சொன்ன பிறமொழிக் கலப்புஎன்னுங் காரணந்தான் மிகவும் முதன்மையானது என்றும், அக் கலப்பு ஒரு பெரிய மொழிக்கொலையேயாகும் என்றும், அறிஞர்களெல்லாம் ஒன்றுகூடிச் சூழ்ச்சி செய்தாலும் இதைவிடக் கொடுமையான கொலைச் சூழ்ச்சி வேறு கண்டுபிடிக்க முடியாது என்றும் மிகவும் அழுத்தந் திருத்தமாகத் தெளிவுபடுத்தியிருக்கிருர்கள்.

'பிறமொழிக் கலப்பினல் ஒரு மொழி எப்படி கெட்டுப்போகின்றது? கலவாமையால் ஒருமொழி எப்படி ஆக்கம் பெறுகின்றது?' என்பவைபற்றி விளக்கிச் சொல்லும்போது, அவர்கள் பல நுணுக்கங்களை எடுத்துப் பொருத்தமாய் விளக்கியிருக்கிருர்கள். அவையாவன :

1. அயல்மொழிச் சொற்களைக் கலந்து பேசும் வழக்கம், தமிழ் மொழியின் அழகைக் கெடுக்கின்றது.

2. பல்வேறு கருத்துகளுக்கும், முழுதும் தமிழ் மொழிகளையே பயன்படுத்திப் பேசினல், தமிழுக்கு வளர்ச்சி ஏற்படும்.

Koviloor Digital Library



3. போதிய பழக்கமில்லாத காரணத்தினால் தமிழ் மொழி தெரியாத இடத்திலும், தெரிந்தும் அடிக்கடி வழங்கிவராத குறையினால் மறந்துபோன இடத்திலும், புதிய துறைகளில் ஆராய்ச்சி செய்யும்போது அங்கே தோன்றும் புதிய கருத்துகளுக்கு ஏற்ற சொற்கள் தமிழிற் கிடைக்காத இடத்திலும், உணர்ச்சிப்போக்கில் தடைவிடையாகச் சொற்போர் தொடுத்துப் பேசுமிடத்திலும், எளிதென்று கருதிப் பிறமொழிச் சொற்களைக் கலந்து பேசிவிடக் கூடாது. அறிவையும் நினைவையும் செலவழித்துத் தமிழ் மொழிகளையே தேடிப் பயன்படுத்தவேண்டும்.

4. அயல் நாட்டவர் தம் அறிவையும் நினைவையும் செலவழித்துத் தங்கள் மொழிக்கென்று வருந்தித் தேடி உருவாக்கி வைத்திருக்கும் சொற்களை நாம் சற்றுங் கூச்சமில்லாமல் எடுத்து நம் மொழியிற் கலந்துகொள்வது நன்றன்று. அப்படிக் கலந்துகொள்வது ஒரு சோம்பேறித்தனமுமாகும்.

5. புதிய நினைவுகளுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களை உண்டுபண்ணித் தமிழ் மொழியிற் சேர்க்காவிட்டால், அது, தமிழ் மொழிக்குச் சோறுபோடாமற் கொல்வதற்கு ஒப்பாகும்.

6. எவ்வகைப்பட்ட பொருள் நுணுக்கங்களையும் உணர்த்தும்படி தமிழ்ச் சொற்களுக்கு வழக்குகளை உண்டுபண்ணுவதே தமிழ் மொழிக்குச் சோறுபோடுவது என்பது.

7. அப்படிச் செய்தால், நுட்பமான பொருள் வேறுபாடுகளும், அவற்றைத் திட்டமாகப் புலப்படுத்தக் கூடிய தகுந்த தமிழ்ச் சொற்களும், அச் சொற்கள் கொண்டு இயலுகின்ற செழித்த நடையும் தமிழ் மொழியில் உண்டாகும். காலந்தோறும் அப்படிச் செய்துவராவிட்டால், மொழிக்கு வளம் என்று சொல்லக் கூடிய இந் நிலைமைகளெல்லாம் உண்டாகாமற்போகும். அப்படிச் செய்துவந்தால், மொழி என்றும் உயிரோடு இருக்கும்.

8. சொற்களிற் கருத்துகளைப் புகுத்தி, அச் சொற்களைச் சொன்னவுடன் அவை அக் கருத்துகளை உடனே புலப்படுத்துகின்ற உயிர்த்தன்மை கொள்ளும்படி, ஒரே உறுதியாயிருந்து பேசிப் பேசி வழக்குக்குக் கொண்டுவந்தால்மட்டுமே, மொழி வளம்பெறும்.

9. கருத்துகளும் உணர்ச்சிகளுமாகிய புல்லையும் தவிட்டையும் ஆங்கிலம் முதலிய அயல்மொழி மாடுகளுக்கே போட்டுவிட்டால்,

Koviloor Digital Library



நமது தமிழ் மொழியாகிய ஆன்மாடு என்ன ஆவது ? நமக்கு எப்படி அது பயன் தரும் ?

10. சிறிது தடை தோன்றுங் காலங்களிலெல்லாம் உடனே பிறமொழிச் சொற்களை எடுத்து ஆண்டுகொள்ளும் வழக்கமே, இங்ஙனம் தமிழ் மொழி வளர்ச்சிக்குத் தடையாயிருக்கின்றது.

என்று இக் கருத்துக்களையெல்லாம் நுட்பமாகக் காட்டிப், பின்பு, 'அறிஞர்களெல்லாரும் ஒன்று கூடித் தமிழைக் கொல்லுவதற்குச் சூழ்ச்சி செய்தாலும், பிற மொழிச் சொற்களைக் கலந்துகொள்ளுதல் என்பதை விட வேறு சிறந்த கொலைச் சூழ்ச்சியைக் கண்டுபிடிக்க முடியாது ; இதுதான் சிறந்த கொலைச் சூழ்ச்சியாவது' என்று அழுத்தமாக வற்புறுத்தி, வருத்தந் தோன்றக் கூறியிருக்கிறார்கள்.

அதன்பின்னுங் கடைசியாகப், படித்த அறிஞர்களும் பழக்கங் கண்ட பெரியோர்களும் பிறமொழிக் கலப்பிற் கருத்தாயில்லாமையினாலேயே தமிழ்மொழி கெட்டுப் போகின்றது என்று குறிப்பாகப் புலப்படுத்தி, இனியேனும் பிறமொழிச் சொற்களை இங்ஙனமெல்லாம் தமிழிற் கலக்காமலிருக்கவேண்டும் என்று அறிஞர்கள் இரண்டாண்டுகள் தவமிருந்தும், அதனோடு பொது மக்களுடைய தமிழ்ச் சொற்களில் கலந்துகொண்டும் பழகிவருவார்களானால் தமிழ் நடை தானாகவே வளம் பெறும் என்று ஒரு வழியையும் அறிவுறுத்தியிருக்கிறார்கள். மேலும், பேச்சு வேறு, எழுத்து வேறு அல்ல ; இரண்டுக்கும் ஒரே முயற்சிதான் என்று முடிந்த முடிபாக ஓர் ஐயத்தையும் இவர்கள் தீர்த்துவைத்திருக்கிறார்கள்.

ஆ! இக் கருத்துகளெல்லாம் எவ்வளவு அருமையும் பெருமையும் உண்மையும் வாய்ந்தனவாயிருக்கின்றன !

  

Koviloor Digital Library



இனி, இவர்கள் கட்டுரையைப் படிக்கும்போது யாருக்கும் இயல்பாகத் தோன்றக்கூடிய நினைவு ஒன்றையும் இங்கே குறிப்பிடவேண்டுவது கட்டாயமாயிருக்கிறது.

ஆங்கில மொழிச் சொற்களைக் கலக்கக்கூடாது என்று இவர்கள் எழுதிவந்த இடங்களிலெல்லாம், ஆரியம் ஆங்கிலம் முதலிய பிறமொழிச் சொற்களைக் கலக்கலாகாது என்று குறிப்பிட்டுவந்திருந்தால், அங்ஙனம் ஒரு நினைவு எழுவதற்கே இடமில்லாமற்போயிருக்கும். அல்லது, இவர்கள் கட்டுரையில் வடமொழிச்சொற்களைக் கலவாமல் எழுதியிருந்தாலும் அந் நினைவு எழுவதற்கு இடமிராது. "இக் காலத்தில் தமிழ் பேசுகிறவர்கள் பேசும் நடைக்கு உதாரணம் பாருங்கள்" என்று எடுத்துக்கொண்டு, அதன்கீழ் இவர்கள் காட்டும் எடுத்துக் காட்டுரையிலாவது, வடமொழிச் சொற்களைப் பிரித்துக் காட்டவில்லை. ஆங்கில மொழிச் சொற்களைமட்டும், நீக்குதற்குரியன என்னும் முறையிற் பிரித்துக் காட்டுகிறார்கள்.

இருக்கட்டும்; ஒரு மொழியின் கலப்புத் தவறு என்று காட்டும்போது, பிறமொழிகளின் கலப்புந் தவறு என்பது தானே பெறப்படுமன்றோ?

கிடைத்த புல்லையும் தவிட்டையும் ஆங்கில மாட்டுக்குத்தான் போடக்கூடாது; ஆரியம் முதலிய பிறமொழி மாடுகளுக்குப் போட்டு நம் தமிழ்மொழியாகிய ஆன் மாட்டைப் பட்டினியிற் கிடக்கவிட்டுக் கொன்றுவிடலாம் என்று யார்தாஞ் சொல்லுவார்கள்?

ஆனால், சென்னையில் முன்னே நடந்த தமிழன்பர் மாநாட்டில் திரு உ. வே. சாமிநாத ஐயரவர்கள் செய்த வரவேற்பு விரிவுரையில், 'தமிழில் வடமொழிச் சொற்களைச் சேர்க்கலாம்; ஆனால் ஆங்கில மொழிச் சொற்களைச் சேர்க்கலாகாது' என்று கருதிப் பேசிய குறிப்பொன்று, 'தமிழ் வளர்ச்சி' என்னுந் தலைப்பில், தமது

Koviloor Digital Library



'நல்லுரைக் கோவை' இரண்டாம் பாகத்தில், அவர்களே வெளியிட்டுள்ள ஒரு கட்டுரையிலிருந்து தெரிகின்றது. அக் குறிப்புள்ள பாகங்கள் வருமாறு :

"வடமொழிக் கலப்பு

"பண்டைக்காலப் புலவர்கள் வடமொழிப் புலவர்களோடு மனங்கலந்து பழகி அவர்களுடைய கருத்துக்களையும் சொற்களையும் தங்கள் நூல்களில் ஆண்டிருக்கிறார்கள். வடமொழியின் தொடர்பி னால் தமிழ் மக்கள் எவ்வளவோ அரிய கருத்துக்களை அறிந்து பய னுற்றிருக்கிறார்கள். ஒரு பாஷை வேறு பாஷையின் தொடர்பினால் விரிவுறும். அதனால் அப் பாஷையின் அழகு ஒருபோதும் குறையாது.

"தாய் மொழியில் நினைத்தலும் பேசுதலும்

"தமிழ் நாட்டார் பேசும்போழுதும் எழுதும்போழுதும் தமிழ்ப் பாஷையையே உபயோகிக்கவேண்டும். ஆங்கிலம் அறிந்தவர்களிற் பெரும்பாலோர் ஆங்கிலத்திலே நினைக்கிறார்கள். அவர்களால் ஆங் கிலச் சொற்கள் கலவாமற் பேசமுடியவில்லை. இத்தகைய நிலை ஒரு பெருங் குறையல்லவா ?"

இங்ஙனம் திரு உ. வே. ஐயரவர்கள் 'வடமொழிச் சேர்க்கையினால்மட்டும் தமிழ் மொழியின் அழகு ஒரு போதுங் குறையாது ; ஆங்கில மொழிச் சேர்க்கைமட்டும் தமிழ் மொழிக்கு ஒரு பெருங் குறை' என்று எழுதியிருப் பது எப்படியிருக்கிறது ! 'தமிழ் வளர்ச்சி' என்னுந் தலைப்பு இட்டு அவர்கள் இப்படி எழுதியிருந்தாலும், திரு இராசகோபாலாச்சாரியாரவர்கள் காட்டியிருக்கும் அழுத்தந் திருத்தமான காரணங்களால், வடமொழிச் சேர்க்கையினாலும் தமிழ் எவ்வளவோ கொடிய வதை கட்கு ஆளாகியிருக்கிறதென்பதும், ஒரு மொழியின் தகுதியான பொருட்கலப்பால் மற்றொரு மொழி வளம் பெறுகின்றதானாலும், அம் மொழியின் சொற்கலப்பால் இம் மொழிக்குக் கெடுதியே உண்டாகின்றதென்பதும் நன்கு விளங்குதலின், இவர்கள் விளக்கங்களே இவர் களுக்கும் அவர்களுக்கும் ஏற்றபடி விடைசொல்லத் தக்கனவாயமைந்திருக்கின்றன. 'யானைக்கும் அடி ச்றுக்கும்' என்பது இயல்பன்றோ !

Koviloor Digital Library



அல்லது, ஆராய்ச்சியாளரிற் சிலர், வடமொழி யென்பது வடதமிழே யாதலின் அது தமிழுக்கு வேறான அயல் மொழியன்று என்பதும், இங்குப் பொருந்துவதாயிருக்கலாம். வடமொழி தோற்றமுற்றபோது அப்படியே அது வடதமிழானாலும், பலகாலமாக ஒலியாலும் நடையாலும் வேறுபட்டு அயல்மொழி நிலையை அடைந்து தனித்த இலக்கண இலக்கியங்களுங் கால்கொண்டு பல்வேறு மொழிகட்குத் தாயுமாகி ஒரு குடும்பத் தலைமையை எய்திவிட்டபின் என் செய்வது? தமிழ் மொழிக்கு மாறான தொன்றைத் தமிழ் மொழியிற் கலந்து தமிழின் சுவை இத்தகைய தெனப் புலப்படுதற்கு வழியில்லாதபடி செய்துவிடுதல் நல்லதாகாதே.

இனி, 'ஆங்கிலம் ஆரியம் என்னும் அயல்மொழிகளின் சொற் கலப்பினால், தமிழ் மொழிக்கு ஐயகோ, இத்தனைக் கொடுமைகளா உண்டாகின்றன?' என்று யாரும் துணுக்குற்று அஞ்சும்படியான நிலைமை உண்டாய்விட்டமையால், இன்னும் இவைபோல நம் நாட்டில் உலவிக்கொண்டிருக்கும் 'இந்தி' முதலான அயல் மொழிகள் வகையிலும், இனி எதிர்காலங்களில் எவையேனும் வேறு அயல்மொழிகள் வரின் அவற்றின் வகையிலும் தமிழ் மக்கள் எவ்வளவு விழிப்பாக நடந்து கொள்ளவேண்டுமென்பது சொல்லாமலே பெறப்படும். அயல் மொழிகள் எவையேயாயினும், அவற்றின் சொற்களைக் கலக்காமலிருப்பது என்னும் ஒரு பெரிய ஆண்மையைத் தமிழ் மக்கள் உறுதியாய்க் கடைப்பிடித்து, அவ்வகையிற் கண்ணுங் கருத்துமாய் ஒழுகிவந்தால், தமிழும், அதன் வழியாகத் தமிழ் மக்களும் தமிழ்நாடும் என்றும் தமக்குரிய உணர்ச்சியுடன் நிலைபேறுற்று, வளமாய் விளங்கியொளிர்தல் முழுதும் திண்ணமாம். தமிழர்கட்கு இவ்வாண்மை சிறக்குமாக!

Koviloor Digital Library

# கிரேக்க தெய்வங்களின் புராண கதை

"கா. சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L."

வானத்தெய்வம் நிலமாதுடன் ஒலிம்பசு மலைமீது ஆட்சி புரிந்த காலத்து அவர்களுக்கு ஆறு புதல்வர்களும் ஆறு புதல்வியரும் பிறந்தார்கள். அவர்கள் மிகுந்த திறமையுடையவர்களாய் இருப்பதைக் கண்டு அத் திறமைகளைத் தனக்கு எதிரிடையாக அவர்கள் பயன்படுத்துவார்களோ என்று பயந்து வானம் என்னும் அவர்கள் தந்தை, அவர்கள் பிறந்த உடனேயே கீழ் நிலத்துக்கு நெடுந்தூரத்தில் உள்ள இருட் பாதாளத்தில் அவர்களைத் தள்ளி நன்றாகக் கட்டிப்போட்டுவிட்டார். பிள்ளைகளுக்குத் தைத்தியர் என்று பெயர். இப்படியே தனக்குப்பிறந்த இடி, மின்னல், படர்மின்னல், நூற்றுக்கை மக்கள் முதலிய எல்லாப் பிள்ளைகளையும் பாதாளத்தில் தள்ளிவிடவே அவர்களின் தாயாகிய நிலமாது மிகவுந் துயரமுற்றுப் பிள்ளைகளைக் கட்டவிழ்த்துவிடும்படி தன் கணவரைப் பலமுறை வேண்டினள். அவர் கேளாமையால் தானே பாதாளத்துக்குப் போய்த் தந்தைக்கு மாறாகச் சூழ்ச்சிசெய்யும்படி மைந்தரைத் தூண்டினாள். அவள் சொற்படி செய்யப் பிள்ளைகளெல்லாம் பயந்தனர். ஆனால் அவர்கள் எல்லோரிலும் இளையவனாகிய காலன் என்பவன் தன் துன்பம் பொறுக்கமாட்டாது தாய் சொல்வழி நிற்கத் துணிந்தான். உடனே தாய் அவனைக் கட்டவிழ்த்துவிட்டு அவன் கையில் ஒரு வாளைக் கொடுத்து "நீ போய் உன் தந்தையை வென்று வருவாயாக" என்றனள். அவன் ஒருவருக்குந் தெரியாமற் சென்று திடீரென்று தகப்பனாரைப் பிடித்துத் தன் வாளின் வலியால் அச்சுறுத்தி அவரை நன்றாகக் கட்டி வைத்துவிட்டு அவர் அரசிருக்கையில் ஏறித் தானே உலக முழுவதும் ஆட்சிபுரியத் தொடங்கினான். சினம் மிகுந்து ஒன்றும் செய்யலாற்றாத தகப்பனார் காலனை நோக்கி, நீ என்னைச் செய்ததுபோல உன் பிள்ளை உன்னைச் செய்யும் என்று சபித்தார். அச்சாபத்தை ஒரு சிறிதும் காலன் பொருட்படுத்தவில்லை. அவன் தன் முழு ஆட்சிக் கிணங்கிய தன் உடன் பிறந்தாராகிய தைத்தியர்களையெல்லாம் பாதாளத்தினின்று விடுவித்து அவர்களுக்குத் தன் ஆட்சியில் பங்கு

Koviloor Digital Library



கொடுத்தான். 'ரீயா' என்ற சொந்தத் தங்கையைத் தான் மணந்துகொண்டான்.

காலன் ஆட்சியில் மிகுந்த மகிழ்வடைந்து எங்கும் பொறுமையும் அமைதியும் நிலவியபோது ஒருநாட் காலையில் தனக்கு ஒருமகன் பிறந்தான் என அவன் கேள்விப்பட்டான். தன் தகப்பனுர் சாபம் அவன் நினைவுக்கு வந்தது. அவன் நினைப்பான்:—என் தகப்பனுர் என்னை ஓர் இடத்தில் வைத்திருந்தார். அதனுல் அங்கிருந்து தப்பி வந்து ஊறு இழைக்கலாயிற்று. நான் என் பிள்ளைகளை விழுங்கிவிடுவதே நல்லது என்று எண்ணித் தன் மனைவியினிடம் தன் பிள்ளையை வாங்கி விழுங்கி விட்டான். ஒருவகையாய்ப் பார்த்தால் இஃது ஓர் இயற்கை உண்மை. எல்லாருக்கும் பிறப்பும் இறப்பும் காலத்தால் வருகின்றன என்பது அது.

இவ்வாறே கால மன்னன் தனக்குப் பிறக்கும் பிள்ளைகளையெல்லாம் விழுங்கிவிடுவதைக் கண்ட தாய் அம் மன்னனைப் பார்த்து ஒரு குழந்தையாவது உயிரோடு இருக்க இடங் கொடுக்கலாகாதா, என் அன்பைப் பொருட்படுத்தக்கூடாதா என்று வேண்டினள். தன்னலமும் வன்னெஞ்சும் உடைய காலன் அவள் வேண்டுகோளுக்குச் சற்றும் இணங்க வில்லை. ஆனுல் அவள் தான்கொண்ட கருத்தை எவ்வகையிலும் நிறைவேற்றவே துணிந்துவிட்டாள். இது பெண்கள் இயல்பு என்று சொல்லுவாருமுளர். அவள் தன் கருத்தை நிறைவேற்றிக் காலனைவென்ற வீரக் குழந்தையே 'வியாழன்' என்ற 'ஜூபிட்டர்' ஆவான். காலத்தை வென்றமையால் அவன் பெருந் தெய்வமாயினன்போலும்.

வியாழன் என்ற பிள்ளை பிறந்ததும் அவன் தாய் அவனை ஒளித்து வைத்துவிட்டாள். தகப்பனுர் பிள்ளை பிறந்ததை யறிந்து பிள்ளையைக் கொண்டுவா என்று தாயைக் கேட்டபோது, அவள் மிகவும் துயரமுறுவாள்போல நடித்துக் கொண்டு பிள்ளையைக் கொடுக்கமாட்டேனென்று பன்முறை சொல்லிக் கடைசியாகக் கொடுப்பவள்போல நீளக் கல்லை அணையடை சேலையிற் சுற்றிக்கொடுக்க, காலன் அதை ஆராயாது வாங்கி விழுங்கிவிட்டான்.

Koviloor Digital Library



உள்ளூர மிகக் களிப்பெய்திய தாய் வியாழனை ஒருவருக்குந் தெரியாமல் வனதேவதையினிடம் கொடுத்து ஒரு மலைக் குகையில் அவனை வளர்த்துவரும்படி பணித்தாள். குழந்தையின் அரவம் ஒலிம்பசு மலையிற் கேளாதவண்ணம் குருமார்கள் தாயின் கட்டளைப்படி ஆடல், பாடல், கூக்குரல் செய்தனர். பல வேலைகளுக்கிடையில் காலன், வியாழன் வளர்ச்சிபற்றி அறியக்கூடவில்லை. ஆனால் கடைசியாகத் தன் மனைவியின் ஏமாற்றத்தை அறிந்துகொண்டான். அவன் குழந்தையை மாய்க்க முயலுமுன் குழந்தையாகிய வியாழன் தாய் உதவி கொண்டு திடீரென்று காலனைத் தாக்கி அவனை முற்றிலும் தோற்கடித்து அவன் முழு ஆட்சியைப் பற்றிக்கொண்டதுமல்லாமல், அவனுக்கொரு மயக்க மருந்து கொடுத்து அவன் விழுங்கிய மற்றப் பிள்ளைகளையும் கக்கும்படி செய்துவிட்டான். தனக்கு இணங்கிய சகோதரர்கட்குத் தன்னரசில் பங்கு கொடுத்தான். தனக்கு இணங்காது தகப்பனோடு சேர்ந்தவர்களைப் போரில் வென்றொழித்தான். அவனது வீரச்செயல்களைப் பார்ப்போம்.

வியாழனுடைய துணைவர்களாகிய தேவர்களுக்கும் காலனைச் சேர்ந்த தைத்தியர்களுக்கு முண்டான பெரும்போர் அரக்கர்ப் போர் (Giants' war) என்று கிரேக்க புராணங்களிற் பேசப்படும். தனக்கு எதிரிகள் மிகுதியாய் இருப்பதையறிந்த வியாழன் பாதாளத்திலிருந்து இடி ஆயுதங்கள் செய்யத் தெரிந்தவர்களை விடுவித்து அவர்களுடைய ஆற்றல் மிகுந்த படையைக்கொண்டு பத்து ஆண்டுச் சண்டையில் எதிரிகளைத் தொலைத்து, அவர்களைப் பாதாளத்தில் தள்ளி ஒலிம்பசு மலையில் தனது வீரக்கொடியை நாட்டினன். அதுமுதல் அவனுக்கு இடியின் தலைவன் என்ற பெயர் ஏற்பட்டது. இப்போர் நிகழ்ந்த இடம் கிரேக்க நாட்டுக்கு மேற்கேயுள்ள தேசலி (Thessali) என்னும் நாட்டின் பரப்பாகும். எதிரிகள் பாறைகளைப் பிடுங்கி ஒருவர்மேல் ஒருவர் எறிந்துகொண்டனர் என்றும் வியாழனது மலைக்கோட்டையைப் பிடிப்பதற்கு மலைமேல் மலையடுக்கித் தைத்தியர் முயற்சி செய்தார்களென்றும் கிரேக்க புராணம் கூறும். பத்து ஆண்டுப் போர் முடிவில் காலன் போரில் அலுத்து இத்தாலி தேயத்துக்கு ஓடிப்

Koviloor Digital Library



போய் அங்கே ஒரு வளநாடு அமைத்துப் பலநாள் ஆண்டனன்.

தைத்தியர்களையெல்லாம் வியாழன் அடக்கிய பிற்பாடு நிலமாது தன் பிள்ளைகளையெல்லாம் அடக்கிய வியாழன்மீது சினந்து, அவனைத் தண்டிப்பதற்காகத் 'தைவன்' என்ற பெரிய அரக்கனைப் படைத்தாள். அந்த அரக்கன் உடம்பிலிருந்து, கண்டார்மீது அனல் வீசி அழிக்கும் நூறு கோழிப் பாம்புகள் தலைநீட்டிக்கொண்டிருந்தன. அவனுடைய கண், வாய், மூக்கு முதலிய உறுப்புகளிலிருந்து தீப்பொறி கிளம்பிக்கொண்டிருந்தது. அவனுடைய பயங்கரமான குரலைக் கேட்டுத் தேவர்கள் அஞ்சி அலறி ஒலிம்பசு மலையை விட்டு எகுபதி நாட்டுக்கு ஓடிப்போயினர். அங்கேயும் தங்களை மறைத்துக் கொள்வதற்காக அவர்கள் பற்பல சிற்றுயிர்கள் வடிவத்தை எடுத்துத் திரிந்தார்கள். வியாழன் கூட முதலில் மிகவும் பயந்து ஓர் ஆடாய்த் திரிந்தான். அவன் தங்கையும் மனைவியுமான 'சூனே' ஒரு பசுவானாள். சிலநாட் கழித்து வியாழன் தனது கோழைத்தனத்தைக் கண்டு வெட்கமுற்று, மனவெழுச்சியுடன் ஒலிம்பசு மலைக்குச் சென்று தனது இடியேற்றின் உதவிகொண்டு தைவன் என்றவனோடு நீண்ட போர் புரிந்து அவனைக் கொன்று வெற்றியடைந்தான்.

மறுபடியும் நிலமாது 'யன்சிலேடசு' என்னும் ஒரு பெரிய அரக்கனைப் படைத்துத் தைவனுக்காகப் பழிவாங்கும்படி விடுத்தாள். அவனையும் வியாழ பகவான் வென்றடக்கி 'எத்தினு' என்னும் எரிமலைக்குக் கீழ் உள்ள குகையில் முறிக்க முடியாத விலங்கிட்டு வைத்தான். முதலில் அவன் பெரிய கூக்குரலிட்டு அச்சம் விளைத்தாலும் நாளடைவில் ஒன்றுஞ் செய்ய முடியாது அடங்கிப்போய் இடமாறுதல் மட்டும் செய்தவனானன். அவனது இடமாற்றத்தையே நில அதிர்ச்சி யென்று கிரேக்கர் எண்ணினர். எல்லா எதிரிகளையும் வியாழன் வென்றபின், கடல் ஆறு என்பவற்றின் ஆட்சியை நெட்டியூன் (Neptune) என்னும் சகோதரனுக்குக் கொடுத்தான். அவன் நம் வருணனுக்கு ஒப்பாவான். 'புளூட்டோ' என்னும் சகோதரனுக்குக் கீழ் உலக ஆட்சியைக் கொடுத்தான். அவன்

Koviloor Digital Library



நம் யமனுக்கு ஈடானவன். வியாழக் கடவுள் வானத்தையும் நிலத்தையும் தாமே நேராக அரசாண்டார். அவர் காலத்துத் தைத்தியர்களுள் நால்வர் பிற்காலத்தில் பெருமையடைந்தனர். அவர்கள் யாரெனில் அட்லாசு, (Atlas) மெனிட்டியசு, (Menetius) பிராமத்தியசு, (Promethius) எப்பிமித்தியசு (Epimithius) என்பவர்கள்.

இக்காலத்திற்குப் பின்புதான் மனிதன் உலகத்தில் படைக்கப்பட்டான். தைத்தியர்கள் மனிதனுக்கு உதவியாக இருந்தார்கள். தேவர்கள் மனிதனது நல்வாழ்வைக் கண்டு, சற்றுப் பொறாமையுற்றார்கள் என்பது சில கதைகளால் தெரிகின்றது.



Koviloor Digital Library

# தஞ்சை வாணன்

(ஒரு சிற்றாராய்ச்சி)

"அம்பை சங்கரனார்"

தஞ்சை வாணன் என்னும் சிற்றரசனைப்* பற்றிப் பொய்யாமொழிப் புலவர் என்னும் பெரியோரால் இயற்றப் பெற்றது தஞ்சைவாணன் கோவை. புலவர் தெய்வத்திறன் வாய்ந்தவர். இவர் இக்கோவையைப்பாடி அரங்கேற்றுவதற்குப் போகும்போது, தஞ்சைவாணன் ஊரிலில்லாமையால் அவன் மனைவிமுன்னர் அரங்கேற்றி ஒரு செய்யுளுக்கு ஒரு பொன் தேங்காய் விழுக்காடு பரிசு பெற்றாரென்றும், பின்னர், வாணன் தன்னூருற்று இச்செய்தியைக் கேட்டு மறுபடியும் புலவரை வரவழைத்து இரண்டாந்தடவையும் அக்கோவையை அரங்கேற்றச் செய்து அவன் மனைவிகொடுத்த ஒவ்வொரு பொற்றேங்காய்க்கும் மூன்று கண்கள் போல மும்மூன்று மணிகளை வைத்துக் கொடுத்தானென்றும் வரலாறு கூறும்.

இவன், தஞ்சை, தஞ்சாவூர், தஞ்சாக்கூர் என்ற பெயர்களுள்ள ஓரூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டதனால், தஞ்சை (வாழ்நன்) வாணன் என்ற காரணப்பெயரைப் பெற்றான். இவனுக்கு இயற்பெயர் குலோத்துங்கனாக விருக்கலாமோவெனக் கருதுதற்கு இடமிருக்கின்றது. "இருநிதி யன்னான்குலோத்துங்கன் தஞ்சையிலென்"† என்பது காண்க.

வாணனைச் சிறப்பிக்கும்பொழுதெல்லாம் வையையைப் பற்றியும், பொதியமலையைப்பற்றியும், "தஞ்சை சூழ் வையை" "தஞ்சைவாணன் தமிழ்க்கிரி" என்று பல விடங்களில் வருகின்றன. மேலும், "முந்நீர் பொருந் தண் பொருந்தம்" எனத் தாமிரபரணியாறும் வருகின்றது. இவைகளெல்லாம் பாண்டிய நாட்டிலுள்ளவை. எனவே, அவன், பாண்டிய நாட்டிலிருந்தனன் என்பது தெளிவாம்.

---

* சிலர் தஞ்சைவாணனை அமைச்சனெனவும் படைத்தலைவனெனவுங் கூறுவர்.

† தஞ்சைவாணன் கோவை 221; இச்செய்யுள் பின்பு கண்டுபிடித்துச் சேர்க்கப்பட்டது.

Koviloor Digital Library



"..............முன்னறிந்து தென்னன்
தன்னைப் பணிந்துற் றேவல்செய் யாது சமர்க்கெழுந்த
மன்னைப் புறங்கண்ட வாணன்.............."

"மீனவர்தம், செங்கோன் முறைமை செலுத்திய வாணன்"
"செழியன் கயலைத் திசைவைத்த வாணன்"

என்ற அடிகளிலிருந்து பாண்டிய அரசர்க்குக் கீழ் இருந்து ஆட்சிபுரிந்தவன் என்பது விளங்குகின்றது. ஆராய்ச்சியாளர்களின் முடிபும் மாறை என்ற நாடு பாண்டிய மண்டலத்திலிருப்பதாகவும், தஞ்சாக்கூர் என்பது இராமநாதபுரம் வட்டத்திலிருப்பதாகவும் ஆகின்றது.* ஆகவே தஞ்சைவாணனது மாறை நாடும், அதன் தலைநகரான தஞ்சையும் பாண்டிய நாட்டிலுள்ளவையென்பதே தேற்றம்.

ஆனால் தற்பொழுது அத் தஞ்சையென்ற பெயர் சிதைந்து வேறு பெயராய் மாறியிருக்கலாம். ஆதலால் சோழநாட்டிலுள்ள தஞ்சையிலேயே அவ்வரசனிருந்தானெனல் தவறு. முள்ளிநாடு, ஆரியநாடு, ஆண்மறைநாடு முதலிய சிறுநாடுகளும் அக்காலத்துப் பாண்டியநாட்டில் இருந்தனவாகத் தெரிகின்றது.† அவைகளில், 'முள்ளிநாடு' என்பதுபாவநாசம், முதலிய இடங்களை யுடையது. ஆண்மறை நாடு சேற்றூர் முதலியஇடங்களை யுடையது. ஆரியநாடு என்பது திருக்குற்றாலம் முதலிய இடங்களையுடையது எனத் தெரிகிறது. ஆண்மறை நாட்டையடுத்துத் தென்மாறை நாடும் இருந்ததென்று கருதுவது இயல்பே. மேலும் தற்போதுள்ள திருநெல்வேலி வட்டத்தின் வடபாதியும் இராமநாதபுரம் வட்டத்தின் தென்பாதியும் தொன்றுதொட்டுத் தமிழ் நாட்டு வீரர்களையும், சிற்றரசர்களையும் தம் அகத்தேகொண்டு திகழ்ந்தது என்பதற்குப் 'பாஞ்சாலங் குறிச்சி' வீரக்கதைகளும், 'கட்டபொம்மு'வின் வரலாறும், மற்றும் இத் தஞ்சைவாணன், சேதுபதி முதலியோரின் வரலாறுமே சான்றாயிருக்கின்றன. ஆதலின் இப்பக்கத்திற்

---

* தஞ்சாக்கூர்:—A town in Ramnad District, Capital of the hero of Tanchai vanan Kovai. மாறை:—A division of the Pandya Country. (Lexicon).

† சங்கரநாராயண சுவாமி கோயிற் புராணம் முகவுரை.

Koviloor Digital Library



குள்ளேதான் தஞ்சைவாணன் ஆண்டிருக்கவேண்டுமென்று கருதமுடிகின்றது.

இவன் வேளாண் மரபைச் சார்ந்தவ னென்பதை "வேளாண் மரபு விளக்கிய வாணன்" என்ற அடி நமக்கறுதியிட்டுக் காட்டுவதனுல், அதைப்பற்றி நாம் ஒன்றும் ஐயுறல் வேண்டா.

இவனைப் பாடிய பொய்யாமொழிப் புலவர் ஏறக்குறைய 700 ஆண்டுகட்கு முற்பட்டவரெனவே இவனும் அவர் காலத்தினனுதலின், கி. பி. 12, 13-ம் நூற்ருண்டுகளுக்குள் ஆட்சி புரிந்தவனுக இருக்கவேண்டும். ஒரு சாரார் இவனைக் கி. பி. 16-ம் நூற்ருண்டினன் என்றும் சொல்வர்.

இவன் தன் காலத்தில் பல அரிய வீரச் செயல்களைச் செய்திருப்பதாகத் தெரிகின்றது. சோழனும் இவனுக்குப் பயந்திருந்தானென்றும், இவனுக்குக் கையுறைகள் கொடுத்து நட்பாளனுக ஆக்கிக்கொண் டிருந்தான் என்றும்,

"கொலைகால் அயிற்படை நேரியர்கோன் அகங்கோட
அங்கைச் சிலைகால் வளைத்துத் திருத்திய வாணன்"

"மண்டுந் திரைவையை சூழ்தஞ்சை வாணற்கு வன்புலியுஞ்
செண்டுங் கொடுத்தகல் செம்பியர்போல்"

என்ற அடிகள் தெரிவிக்கின்றன. இவ்வமயம் பாண்டிய அரசர்க்குச் சேரன் பகைவனுயிருந்தான். ஆதலின், அவன் நாடு பாண்டி நாட்டோடு சேர்த்துக்கொள்ளப்பட்டது. இதனை,

"மலைநாடு கொண்ட வழுதி"

"வெங்கோன் மழைபொழி வானவர் போர்வென்ற மீனவர்" என்பவற்ருல் அறியலாம். தவிர, இவன் வல்லம் என்ற ஊரிற்குஞ் சென்று அங்கு நடந்த போரிலும் வெற்றிபெற்றிருக்கிரு னென்பது,

"சுடர் தோய் புரிசை வல்லத்தமர் வென்ற வாணன்"

Koviloor Digital Library



என்பதனுல் விளங்கும். இது சோணுட்டுத் தஞ்சையின் அருகேயுள்ள வல்லமோ, அல்லது தென்னுட்டில் அக்காலத்தில் இப் பெயரிய ஊர் ஒன்று இருந்ததோ நன்ருய்த் தெரிந்து கொள்ள முடியவில்லை.

இவ் வீரத்தோடு பல நற்குணங்களும் இவனைச் சார்ந்திருந்தன. இவன் மிகவும் பெயர் பெற்ற கொடையாளியாய்த் திகழ்ந்திருந்தான்.

"முத்தும் துகிரும் கொடுப்போன்"
"குன்ருகிய பொன்னும் வேழக்குழாமும் கொடை [புகழ்ந்து
சென்ருர் முகக்குஞ் செழுந்தஞ்சை வாணன்"
"கரைதாவி யுந்திய காவிரி வைகிய காலத்தினும்
தரைதாரு வன்னசெந் தண்ணளி வாணன்"

என்பவைபோன்ற அடிகள் இவனைப்பற்றி வருகின்றன. மேலும், யாதொரு தீங்கும் நேரிடாவண்ணம் செவ்விய முறையில் அரசாண்டவன். "கலி நீக்கிய வாணன்" என்பன போன்ற அடைமொழிகள் இப் பெருமானுக்குச் சூட்டப்பட்டிருக்கின்றன. இத்தகைய "தக்கார் புகழ் தஞ்சைவாணன்" வரலாற்றை முற்றும் உணர்ந்துகொள்ளக் கூடாமலிருப்பது எப்படி யிருக்கிறது!



Koviloor Digital Library

# பட்டுத்தொழில் வேந்தன்
## மேசாம் துரை
"மணி"

தோல்விகாணுச் செயல்களை விடாமுயற்சியுடன் நடத்தும் திறமையும், வாணிக வல்லமையும், புதுமை விழையும் புத்துணர்வு உள்ளமும் படைத்தோர் எத்தகைய குன்றுப் புகழும் வற்றுச் செல்வமும் பெற்றுத் திகழமுடியும் என்பதை அறிஞர் **மேசாம் துரை** அவர்களின் வாழ்க்கை வரலாறு தெளிவுற விளக்கும்.

ஆடு முதலிய விலங்குகளின் மயிர்களைத் தூய்மைப்படுத்தும் பொறிதனையும், வீண் ஆன பட்டு நூலினைப் பயன்படுத்தும் முறைதனையுங் கண்டுபிடித்துப் பெரும்புகழ் பெற்ற மேசாம் துரை, 1815-ஆம் ஆண்டில், லீட்சு எனும் நகரில், நாட்டுக்கு நலம் பல விளைக்கப் பிறந்தார். வாழ்க்கையின் நலன்கள் வாய்க்கப்பெற்ற அவர்தம் பெற்றோர், அவரை அந்நாட்டுக் கோயிற் பணியிற் புகுத்தினர். எனினும், வாணிபத் துறையில் அவர்க்கிருந்த நிறைந்த ஊக்கத்துக்கும் அவர்கள் வழிமறுக்கவில்லை.

லிவர்பூல் வணிகர் தொழிலகத்துப் பொருளகப் பிரிவில், மேசாம் அவர்கள் தம் இளமைப் பருவத்தைத் தகுதிசெய்து கொண்டார். அத்தொழிலகச் சேவையிற்றான் அமெரிக்காவிற்கு அவர் பன்முறை பயணம் செய்தார். 1838-ஆம் ஆண்டில், தனது தனிப்பட்ட தட்டில்லாத முயற்சியின் பயனுய்ப், புதுவது புனையும் மேசாம் துரை பிராட்போர்டு நகருக்கடுத்த **மானிங்காம்** எனும் ஓர் ஊரில் மயிர்களிலிருந்து நீண்ட மெல்லிய நூலை உண்டுபண்ணுந் தொழிலைத் துவக்கினர்.

அந்நாளில் மயிர்களைத் தூய்மைசெய்யும் பொறிகள் காண்பது எப்படி என்பதே எண்ணமாயிருந்தது எனலாம். மேசாம் துரை, மயிர்த் தொழில் துவக்கிய காலத்தில், அத்தொழிலில், மயிரைத் தூய்மைசெய்தல் என்பது ஏறக்குறையக் கையினுலேயே செய்யப்பட்டு வந்தது. 1792ல் 'கார்ட்ரைட்டு'

Koviloor Digital Library



என்பார் கண்டுபிடித்துப் பன்முறை பற்பல முயற்சிகள் செய்து பல திருத்தங்கள் செய்யப்பட்ட மயிர்த்தூய்மைப் பொறியிலுங்கூடச் சிற்சில வகையான மயிர்கள் தூய்மை செய்ய இயலாமற், கையினாலேயே செய்யவேண்டியதாயிற்று. மயிர்களைத் தகுதிசெய்யுந் தொழிலில் எல்லா மயிர்கட்கும் பயன்படக் கூடிய பொறி ஒன்று இயற்றவேண்டும் என்று பேரவாக்கொண்டு பெருமுயற்சி பேணி வந்தார் பேரறிஞர் மேசாம்.

'டானிச்தார்ப்' என்னும் பெயர் வாய்ந்த அறிஞர் கண்டுபிடித்த கருவியைக் கண்ட மேசாம், வெற்றிகரமாகச் செய்யத்தக்க கருவி ஈதென உணர்ந்தார். பன்னீராயிரம் பொன் அளித்து 'டானிச்தார்ப்' என்பாரிடமிருந்து அக் கருவியின் உரிமைகளையும், அதனை இன்னும் விரிவுசெய்வதற் காக அதேபோன்ற வேறு இரு கருவிகளையும் விலைக்கு வாங்கி னார். இதன் முடிவுதான், அதுகாறும் கருவியினால் தூய்மை செய்யப்படாதிருந்த நிலைமையை மாற்றி, 1843-ஆம் ஆண்டில், மான்னிங்காமில், மேசாம் துரை அவர்கள், அழகான முறை யில் மயிர்களைத் தூய்மை செய்து காட்டினார். மயிர் வாணிபத்தில் மிகப் பெரியனவும் பழையனவுமாகிய தொழிலகங்களில் இரண்டு, பொறி கண்ட முதலாண்டிலேயே ஐம்பது பொறிகளை விலைக்குவாங்கின. ஒவ்வொரு கருவியையும் விற்றபோது அவர் ஓராயிரம் பொன் ஆக்கமடைந்தார். பின்னர், மேசாம் துரையும் டானிச்தார்ப்பும் பற்பல மாற்றங் கள் செய்து, அக் கருவியை முன்னுக்குக் கொண்டுவந்து விட்டனர். அங்ஙனம் முன்னுக்குக் கொண்டுவரப்பட்டு, அக் கருவி நல்லழகு கூடியதாய் 1851ல் கூடிய 'பெரிய கண் காட்சி' நிலையிலும் வைக்கப்பட்டது.

நம் மேசாம் துரை இதனைக் கண்டுபிடித்த காலத்துக்கு நான்கு ஆண்டுகள் முன்னரே 'எயில்மான்' என்பார் ஒருவரும் 'பிரான்சு' நாட்டில் அத்தகைய பொறி ஒன்றைக் கண்டுபிடித் தார். முப்பதாயிரம் பொன் அளித்து, எயில்மானின் உரிமை களையும் பெற்று, மயிர்த்தூய்மைக் கருவிகளின் முழு உரிமை களையும் மேசாம் துரை தாமே வைத்துக்கொண்டார்.

Koviloor Digital Library



ஒரே காலத்தில் மேசாம் துரை 'இங்கிலாந்தில்' ஐந்தும், 'பிரான்சு' நாட்டில் மூன்றும், 'ஜெர்மனியில்' ஒன்றும் ஆக ஒன்பது மயிர்த்தொழிற் கூடங்கள் உடையவராயிருந்தார். பின்பு மேசாம் அவர்கள் இத் தொழிலில் இருந்து மெல்ல மெல்ல விலகிக்கொள்ளத் தொடங்கினர். ஏன்? அவர் இயற்றிய பொறிகளாற் கிடைத்த தொகையினுல் உள்ளம் நிறைவு அடைந்ததும், வீண் ஆன பட்டு நூலினைப் பயன் படுத்தும் வேறு புதுமுறையைக் காண விழைந்ததுமேயாம்.

ஒரு நாள், மேசாம் துரை இலண்டன் மா நகரக் கடையொன்றிற் சென்றூர். ஆங்கு, இந்திய நாட்டினின்று வந்து, யாராலும் பயன்படுத்தமுடியாமற் கிடந்த வீண் பட்டினைக் கண்டார். ஆங்கு இருந்த முழுப்பட்டினையும், 'ஒரு பவுண்டு அரை பென்னி' விழுக்காடு வாங்கி மான்னிங்காம் கொண்டு போனுர். அந்த வீண் பட்டினைப் பயன்படுத்த முயற்சிகள் பல செய்தார். இம் முயற்சியில் அவரொடு போட்டியிட முன்வந்தார் யாருமிலர். அறிஞர் மேசாம் பட்டுப்பொறிகள் இயற்றுதலில் வல்லுநராயும், பட்டினைத் தகுதிசெய்யுங் கொள்கைகளை நன்கறிந்தோராயும் இருந்த கணக்கற்ற தொழிலாளர்களை வரவழைத்து, 'பானிய' நாட்டுப் புதுவதுபுனையும் புத்தியல் அறிஞர் ஒருவரைக்கொண்டு வெல்வெட்டு முதலியன செய்தற்குரிய கருவி யொன்றைச் செய்து முடித்தார். எடுத்த செயலை முடிக்கும் நற்குணம் நனிசிறக்கப் பெற்ற நல்லறிஞர் மேசாம், பத்தாண்டுகள் உழைப்பும் மூந்நூற்று அறுபதாயிரம் பொன்கள் பொருளும் செலவழித்து, 1865-ஆம் ஆண்டில் வீண் பட்டினின்று வெல்வெட்டுச் செய்யும் வழியைக் கண்டார். இதன் முடிவுதான், அந்நாட்டிற் கைவிடப்பட்டிருந்த வெல்வெட்டுத் தொழிலை அந்நாட்டவர் மீண்டும் தொடங்குமாறு செய்வித்தது என்று அறுதியிட்டு உறுதியாக உரைக்கலாம். "யார்க்சையர் பட்டுத் தொழில் வேந்தன்" என்று உரைக்கத்தக்க அவ்வளவு ஊதியத்தை மேசாம் துரை, வீண் பட்டினைத் தூய்மைப் படுத்துதல் என்னும் இத்தொழிலினுற் பெற்றூர். சில ஆண்டுகளில், இரண்டு இலட்சம் பொன் முதல் வைத்து அவர் தம் தொழிலை ஒரு "கம்பெனியாக' மாற்றிவிட்டார்.

Koviloor Digital Library



மான்னிங்காம் நகரில் இந்நாளிலுள்ள பட்டுத் தொழிலகங்களில், ஐயாயிரம் தொழிலாளர்கள், வீணான பட்டினை வெல்வெட்டாக மாற்றுதல், பட்டுத்துண்டுகள் நெய்தல், பாப்பளின்கள் ரிப்பன்கள் அமைத்தல் முதலிய பல்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். 1891-ஆம் ஆண்டில், மேசாம் துரை, 'பெருமகன்' என்னும் பட்டத்தைப் பெற்றார்.

நூற்றேழு வகையான பொறிகளைச் செய்த செம்மலுக்கு—அறுநூறாயிரம் பொன் புதுக்கருவிகள் காணச் செலவிட்ட ஏந்தலுக்கு-குன்றா ஊக்கமும் பொன்றா உறுதியும் படைத்த பட்டுத் தொழில் வேந்தனுக்கு—விடா உழைப்பும் கெடாச் செய்கையும் வாய்க்கப் பெற்ற பெம்மானுக்கு—உழைப்பால் உயர்ந்த உத்தமனுக்கு—பத்தாண்டுகள் சற்றுஞ் சளையாது முயற்சி செய்து முடிவில் முழு வெற்றியுற்ற பேரறிஞர் பெருமானுக்கு இப் பட்டம் மிகமிகச் சிறியதொன்றேயாம்.

இத்தகைய பேரறிஞர் ஒருநாளும் புகழை விரும்பினாரல்லர். பொதுமக்கள் புகழ்ச்சியினின்று தப்பும்போது அவர் அடையும் மகிழ்ச்சிபோல, அவர் வேறு எப்போதேனும் அடைவரோ எனின், இன்று என்றே விடை இறுக்கவேண்டிவரும்.

வீண்புகழ்ச்சி வேண்டா இத் திருவினர், ஒருமுறை தாம் நன்றாயறிந்த பத்திரிகை ஒன்றினிடமிருந்து வந்த, தடுக்க இயலாத அழைப்பொன்றுக்கு விடுத்த விடையில், "நான் இவ்வுலகில் உள்ள வரை, உலக பாசத்தின் வெளியே இருக்க விழைகின்றேன். ஆனால் நான் வெளியே இருந்தாலும், என்னை உலகின் உள்ளே உலகத்தோர் இழுக்கின்றனர்" என்று குறித்துள்ளமை ஈண்டுக் கருதுதற்குரியது. ஆனால், ஆ, இத்தகைய பெரியார், 1906-ஆம் ஆண்டில், தம் 91-ஆம் வயதில் இவ் வுலக வாழ்வினின்றும் மறைந்தார்.

முயற்சி திருவினையாக்கும் என்பதை மெய்ப்பிக்க வந்த பேர் அண்ணலாகிய மேசாம் பெருமகனின் வாழ்க்கை வரலாறு, இன்றைய இளைஞர் உலகிற்கும் வருங்கால உலகிற்கும் புத்துணர்ச்சியும், உழைப்பில் ஆர்வமும், முயற்சியில் முனைப்பும் அளித்து நலம்பல விளைக்குமாக.

Koviloor Digital Library

# தமிழும் தமிழரும்

"வித்துவான் மா. இராசமாணிக்கம் B. O. L."

## I

## தமிழ் *

தமிழ் என்னும் பெயர் நமது மொழிக்கு எங்ஙனம் வந்தது? எப்பொழுது வந்தது? என்பனபோன்ற இன்றியமையாத நுட்பச் செய்திகள் இன்று நன்கு அறியக்கூடவில்லை. ஆயினும் இன்றுள்ள சங்க நூல்களைத் துருவி ஆராயின், தமிழ் என்னும் சொல் முதலில் நாட்டையும் பிறகு இடவாகுபெயராய் மக்களையும் குறித்தது என்பதை அறியலாம். சிந்தாமணி முதலிய பின்னூல்களில் தமிழ் என்னும் சொல் 'இனிமை' என்னும் பொருளில் ஆட்சி பெற்றுள்ளது. எனவே, தமிழென்னும் சொல் நாட்டையும் மக்களையும் இனிமையையும் மொழியையும் நாளடைவில் குறித்து வந்தது என்பது உணரத் தக்கது.

தமிழ் மொழி, 'திராவிட மொழிகள்' என்று மொழி வல்லுநரால் கூறப்படும் பன்னிரண்டு மொழிகளில் பழைமையும் பெருமையும் வாய்ந்தது. இதனை எல்லா மொழிநூற் புலவரும் ஆராய்ந்து கண்டுள்ளனர். வட இந்தியாவிலுள்ள கோண்ட், கூய், குருக், ப்ராஹுி முதலிய மொழிகட்கும் தமிழுக்கும் சிறப்பாக உள்ள ஒற்றுமை நயங்களை ஓர்ந்துணர்ந்த மொழிநூற் புலவர், ஏறத்தாழ 6,000 ஆண்டுகட்கு முன் வட இந்தியாவிலும் 'திராவிட' மொழிகளைப் பேசிவந்த மக்கள் இருந்திருத்தல் வேண்டும்; எனவே, இந்தியா முழுவதும் அப் பழைய காலத்தில் 'திராவிடர்' வசம் இருந்திருத்தல் வேண்டும் என்னும் முடிவுக்கு வந்துள்ளனர்.

'திராவிட' மொழிகள் பன்னிரண்டில் வளர்ச்சியுற்ற மொழிகள் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம்,

---

* இது சென்னை பாரதி இளைஞர் சங்க முதல் ஆண்டு நிறைவு விழாவின்போது-(7-5-'40) திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையிற் செய்த சொற்பொழிவு.

Koviloor Digital Library



குடகு என்பன. ஏனைய ஆறும், மலைவாசிகளாலும், காட்டு வாசிகளாலும் பேசப்படுவன. ஆதலால், அவை 6,000 ஆண்டு கட்கு முன்னிருந்த நிலையிலேயே இன்றும் உள்ளன என்பர் மொழிநூல் வல்லார். என்னை? காட்டுவாசிகளும் மலைவாசி களும் பிற நாகரிக மக்களுடன் கலத்தல் இன்மையால், பண் பட்ட மொழிகளின் சேர்க்கை அவர்தம் மொழிகட்கு ஏற் படாமையின் என்க. ஆதலின் அப் பண்படாத 'திராவிட' மொழிகளே மூலத் 'திராவிட' மொழியின் நிலையை உள்ள வாறு உணர்த்துவன ஆகும். அம் மொழிகளோடு பிற பண் பட்ட 'திராவிட' மொழிகளை வைத்து ஒப்பு நோக்கின், 6,000 ஆண்டுகளாகப் பின்னவற்றில் ஏற்பட்டுள்ள மொழி வளர்ச்சி நன்கு வெளியாம். இம் முறையிற்றான் மொழிநூற் புலவர் மொழி வளர்ச்சியையும் அதன் முற்போக்கையும் பிற்போக்கை யும் அறிதல்கூடும்.

ஒரு நாட்டுமக்கள் பிறநாட்டு மக்களுடன் கலவாமல் வாழ்தல் இயலாது.* எனவே அம் மக்கள் கூட்டுறவால் அவர் தம் பழக்க வழக்கங்களும், அவர்தம் மொழிக்கலப்பும் பையப் பைய மற்றவர் பழக்க வழக்கங்களோடும் மொழி யோடும் கலந்துவிடுதல் உலக இயற்கை. இம் முறையில் பழைய 'திராவிடம்'—ஆரியம், கிரேக்கம், அரேபியம், இலத்தீன் முதலிய பண்டைய மொழிகளோடு ஓரளவு கலந்ததாற்றான் வட இந்திய மொழிகள் தோன்றின; தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலியன பழைய நிலையிலிருந்து மாறிவிட்டன. ஆயின், மூல 'திராவிடம்' இன்னும் தமிழில் பெரும் பகுதியா கவும், பண்படாத மொழிகளின் பெரும் பகுதியாகவும், தெலுங்கு முதலிய மொழிகளில் அடிப்படையாகவும் இருந்து காட்சி அளிக்கின்றதை மொழிநூற் புலவர் நன்குணர்வர். இத் தகைய மாறுதல்—மொழிக் கலப்பு—மக்கட் கலப்பு எந்த நாட்டிலும் உண்டு. இஃது இயற்கை. பழைய 'திராவிடத்'

---

* "தமிழ் தலைமயங்கிய தலையாலங்கானம்"—புறநானூறு. தலை யாலங்கானம் என்னும் இடத்தில் முடியுடைத் தமிழ்வேந்தர் மூவரும் சிற்றரசர் எழுவரும் சேர்ந்து போரிட்டனர். எனவே, தமிழ்நாடு முழு வதுமே—தமிழர் அனைவருமே அங்குப் போரிட்டனர் என்பது பொருள்.

Koviloor Digital Library



தின் ஒரு பகுதியாகிய தமிழ், இந்தியாவின் தென் கோடியில் எத்தகைய படை எடுப்புக்கும் ஆளாகாமல் இருந்ததாற்றான், பழைய 'திராவிடத்'தின் உயிர்நாடியை இன்னும் தன்னகத்தே கொண்டுள்ளது. இத்தகைய தனிச் சிறப்பை உணர்ந்த தமிழர் அதனைப் போற்ற முயலுதல் இயல்பே அன்றோ? இந்தியாவிலுள்ள மொழிகள் அனைத்தினும் தமிழே தனக்கேன அமைந்த தனி எழுத்துகளை உடையது; தனி இலக்கணத்தை உடையது; தனிப்பட்ட நாகரிகத்தையும் உடையது. இதனை உணர்ந்த தமிழறிஞர், தம் தாய் மொழியாம் தமிழையும் கலையையும் நாகரிகத்தையும் பிற மொழிகளின் ஆதிக்கத்தினின்று காக்கவும் வளர்க்கவும் கடமைப்பட்டவர் அல்லரோ?

இந்தியா முழுவதையும் தன் வண்ணம் ஆக்கிக்கொண்ட ஆரியம், தமிழிலும் ஓரளவு கலந்துவிட்டது என்பதை மறுத்தல் இயலாது. எனினும், அதனை நீக்கிவிடின், மாசு நீக்கப்பட்ட மாணிக்கம்போல்—தனித்த தமிழ் ஒளிரும் என்பதில் ஐயமில்லை. பழைய சங்க நூல்களில் ஆட்சிபெற்றுள்ள வட சொற்கள் நீக்கம் பெறல் அருமையே. அவைபோக, இனி நம்மவர் எழுதும் நூல்களிலும் பேச்சிலும் வடமொழிக் கலப்பு இயன்றவரை உண்டாகாதிருத்தல் நலமாகும்.

எனினும், தமிழகத்தில் முன்னர் இருந்திராத பல பொருள்கள் இன்று இருக்கின்றன. அவை அவ்வந்நாட்டுப் பெயர்களோடேயே வழங்கப்படுகின்றன. அவற்றை நாமும் அப்பெயர்களோடு தமிழில் வழங்குதலில் இழுக்கில்லை. பேச்சு வழக்கில் நிலைபெற்றுவிட்ட அப் பெயர்களை மாற்றி அமைத்தலும் பொருந்துவதன்று. பிறமொழிச் சொற்களைப் பங்கம் பண்ணித் தமிழ்ப்படுத்திவிடுதல் என்னும் முறைமை தமிழ் இலக்கணத்தில் காணப்படுகிறது. அவ்விதியால் பிற மொழிச் சொற்கள் பல இன்ன மொழிகளைச் சேர்ந்தவை என்று கூறக் கூடாத நிலையில் இன்று உள்ளன. இவ்விதி ஏற்படாவிடின் அச் சொற்கள் தம் உண்மை உருவில் காட்சி அளித்திருக்கும் அல்லவா? அந் நிலையில் நாம் அவற்றை வேண்டும்போது ஆளவும், வேண்டாதபோது நீக்கவும் முடிந்திருக்குமல்லவா?

Koviloor Digital Library



ஆதலின் பிற மொழிச் சொற்கள் ஆளும் தமிழர் அவற்றை அவற்றின் சரியான உச்சரிப்பில் வழங்கல் முறையாகும். 'மீனாக்ஷி' என்னும் சொல் 'மீனாட்சி' என்று தவறாக அறிஞர் பலரால் எழுதப்படுகிறது. அவ்வறிஞர் அச் சொல்லைத் தமிழ்ப் படுத்திவிட்டதாகக் கருதுகின்றனர். 'மீனாக்ஷி' என்னும் வடசொல் 'மீன் கண்ணி' என்று பொருள்படும். ஆயின், 'மீனாட்சி' என்னும் சொல் அப் பொருளைத் தராது. 'காட்சி' என்னும் தமிழ்ச்சொல் 'காக்ஷி' என எழுதப்படலும் தவறாகும். இன்னணம் பொருளுணராமல் வடசொற்கள் பல பல தமிழில் பாழ்படுத்தப்படுகின்றன. தமிழெழுத்தாளர் இத்தகைய பெயர்களைப்பற்றி எச்சரிக்கையாக இருத்தல் நலமாகும்.



Koviloor Digital Library

# வீட்டைப்பற்றிய நினைவுகள்

"மகிழ்நன்"

I

பெயர்பெற்ற சென்னைக் கல்லூரியொன்றிற் பட்டம் பெறும் வகுப்பிற் (பி. ஏ.) படித்துக்கொண்டிருந்த ஒரு மாண வன், தனது நாள் குறிப்பேட்டில் 'வீடு' என்பது குறித்து அவ் வப்பொழுது வரைந்து வைத்தவை ஈண்டுத் தொகுத்துக் கூறப்படுகின்றன. அவன் ஓர் ஏழை மாணவன். பலவகையில் துன்புற்றுக் கல்வியை முடிக்கவேண்டிய நிலை அவனுக்கு ஏற் பட்டது. இதனால் அவனுடைய நினைவுகள் அடிக்கடி கல் வியைவிட்டு வேறு துறைகளிற் சென்றன. 'வீடு' என்பது அத்துறைகளில் ஒன்று.

"நேற்றிரவெல்லாம் தூங்கவில்லை. எனது வறுமையை நினைந்தழுது இரவிற் பெரும்பகுதியைக் கழித்தேன். படிப்பை முடிக்க ஒன்றரை யாண்டிற்குமேற் செல்லவேண்டும். வேறொன்றையுங் கருதாது எனதுயர்வையே எண்ணி இரவும் பகலும் உழைத்த என் அருமைத் தந்தை வைத்துப்போன தொகை மிக மிகச் சுருங்கிவிட்டது. என்ன செய்வதென்று தெரியவில்லை. நேற்றிரவு படிப்பிற் கருத்தைச் செலுத்தக் கூடாத அளவு கவலை பெருகுவதாயிற்று. கையில் ஒரு நூலை வைத்துக்கொண்டு படிப்பவன்போல் நெடுநேரம் நடித்தேன். ஏனெனின், என்னுடன் உறையும் சுந்தரமென்பவன் மிக அமைதியாய்க் கட்டிலிற் படுத்துக்கொண்டு ஏதோ ஒரு நூலைக் கவனமாய்ப் பார்த்தான். மணி பத்தானவுடன், 'இரவு நன் ருக' என்று ஆங்கிலத்திற் சொல்லிவிட்டுப் படுத்துக்கொண் டான். அவன் நன்ருக உறங்கும்வரையில் நான் விழித்துக் கொண்டிருந்தேன். மணி பத்தரைக்குமேல் ஆனபிறகு விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கையில் தலை சாய்த்தேன். இவ்வளவு நேரமும் அடங்கிக்கிடந்த என் துன்பம் இப் பொழுது கரைகடந்தோடும் வெள்ளம்போற் பாய்ந்தது. என்னை அறியாமலே அழுகை வந்தது. அழுகை வர வர அதிகமாயிற்று. குரல் கேட்கக் கூடாதென்று எவ்வளவு

Koviloor Digital Library



முயன்றும் என்னால் முடியவில்லை. தேம்பித் தேம்பி அழுதேன். 'அழுவதாற் பயனொன்றும் இல்லையே' என்று அறிவு எனக் கெடுத்துக் காட்டிற்று. அறிவு காட்டிய வழியில் நிற்கக் கூட வில்லை. மறுபடியும் அழுதேன்.

அழுகையைக் கேட்டுச் சுந்தரம் எழுந்துவிடுவானோ என்ற அச்சம் எனக்கு உண்டானது. எழுந்து பார்த்தேன். அவன் நெடு மூச்சுவிட்டு, அசைவற்றுத் தூங்குவதை அறிந்து மறுமுறையும் படுத்துக்கொண்டு விம்மி விம்மி அழுதேன். ஒவ்வொன்றிற்குந் தோற்றம், வளர்ச்சி, முடிவு உண்டு. அழு கைக்கு இவை இல்லைகொல்? நகராட்சிக் கழகத்தின் மேலுள்ள காலங்காட்டி, மணி இரண்டரை யாயிற்றென்று தெரிவித்தது. எனது தலையணை கண்ணீரால் நனைந்துபோ யிருந்தது.

சிறுவனாயிருந்த காலை, இனிய எனதன்னையிடஞ் சென்று என் குறைகளைச் சொல்லி இவ்வாறு அழுத சமயங்கள் நினை விற்கு வந்தன. குறையை நீக்குமாற்றல் அன்னைக்கு இல்லா விடினும், அன்பொழுக நன்மொழி கூறி, என்னைத் தேற்றி அமைதிபெறச் செய்ததை எண்ணி உருகினேன். எனது நெற்றியை நீவி ஆற்றி அணைத்த கை இங்கில்லையே! 'அழாய் மகனே' என்று இரங்கிக் கூறிய குரல் இன்னொருகால் என் செவியில் விழாதோ? அன்னாய், தந்தாய், இருவரும் என்னைத் தனியே தவிக்கவிட்டுச் சென்றீர். துணையின்றித் துடிக்கின்றேன். அகன்ற நானிலத்தும் உயர்ந்த மேனி லத்தும் என் அழுகுரல் கேட்டிளகும் நெஞ்சு இல்லையோ? கவலை அகற்றிக் கண்ணீர் துடைத்துக் காப்பாற்றுவார் ஒருவர் இல்லையோ? இறைவா, இடையில் நிகழ்ந்தவை யாவும் அகன்றுபோய், எல்லாம் வல்ல உன் திருவருளால் யான் மற்று மொருமுறை இளஞ் சிறுவனாகி என் தாய் தந்தையருடன் வீட்டிலிருந்தால் நலமாயிருக்கும்."

"இன்று எனது பழைய தலைமையாசிரியரிடமிருந்து கடிதம் வந்தது. கடவுளைப் பன்முறை அழுது தொழுது தேர்ந்தெடுத்த தீவிய சொற்களை என்னலியன்றவரை அழகு

Koviloor Digital Library



பெறக் கோவை செய்தமைத்து அனுப்பிய கடிதம் என் விருப்பத்தை நிறைவேற்றுமோ, பயனிலது என்று கழிக்கப்படுமோ என்ற ஐயமும் அச்சமும் இன்று நீங்கின. பள்ளியிறுதி வகுப்பில் யான் படித்தபொழுதும், அதற்கு முன்னும், எனது சிறிய திறமையைப் பாராட்டி என்பால் மிக அன்பாயிருந்த ஆசிரியர் எனது அழுகுரல் கேட்டு இரங்கினர். தனக்கு உவமையில்லாதான், மனக்கவலை தீர்த்தான். வாழ்க அவன் தாள். சனிக்கிழமை ஆசிரியரைக் காணப் பேரூர் செல்வேன்."

"தலைமையாசிரியர் வீட்டிற்குப் பேரூர்ப் புகைவண்டிக் கூடத்திலிருந்து நடந்து சனிக்கிழமை மாலை மூன்றரை மணிக்குச் சென்றேன். அவ்வீடு, முற்பகுதியில் சுற்றுச் சுவர் கொண்ட தோட்டமுடையதாய் அமைக்கப்பட்டது. இருப்புக் கம்பிகளால் ஆக்கப்பெற்ற சுற்றுச் சுவர்வாயிலில் நின்று பார்த்தேன். தோட்டக்காரன் பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக்கொண்டு நின்றான். வெயிலில் நடந்து வந்த எனக்குப் பசும் புல் தரையும் பூஞ்செடிகளுக்குத் தண்ணீரும் இனிமை யளித்தன. தோட்டக்காரனை மெல்ல அழைத்தேன். இடம் விட்டுப் பெயராமலே, 'ஆசிரியர் வீட்டிலில்லை' என்று அவன் கூறினன். அவர் வருமளவும் காத்திருக்க எண்ணி, எதிர்வீட்டுத் திண்ணையிற்போய் அமர்ந்தேன். அவன் வாயிலருகே வந்து, என் முகத்தை உற்று நோக்கிவிட்டு வீட்டிற்குள் நுழைந்தான். சிறிது நேரத்தில் அவன் திரும்பி வந்து, 'வரச் சொல்லுகிறார்கள்' என்று உரைத்தான். ஆசிரியர் வீட்டிற்குள் நுழைந்தேன்.

"வீட்டின் முதற்பாகத்து நடுவறையில், வட்டத் தாங்கி (மேசை) யொன்றின் அருகே, இரு பேரப்பிள்ளைகளை அருகமர்த்தி எழுதக் கற்றுக்கொடுத்துக்கொண்டிருந்தார், ஆசிரியரின் வாழ்க்கைத் துணைவியார். என்ன அமைதி! எத்துணை இனிய காட்சி! உள் வாயிலில் வந்து நின்ற என்னைக் குழந்தைகளிருவரும் விரிந்த கண்களுடன் பார்த்தனர். பிள்ளைப்பருவத்தின் வெள்ளை நோக்கு அழகாயிருந்தது. அம்மையாருக்கு வணக்கஞ் செய்தேன். எனது பெயராகிய, 'தணிகை' என்

Koviloor Digital Library



பதைச் சொல்லி, அப் பெயர்க்குரியவனோ யான்? என்று உரை பகராமலே அவர்கள் வினவினார்கள். 'நான் தான்' என்றேன். உடனே அவர்கள் எனக்கு இருக்கை யளித்து, உள்ளே போமாறு குழந்தைகளுக்குக் கட்டளையிட்டனர். 'பாட்டியாரின் கருத்தையும் அன்பையுங் கவர்ந்துகொண்ட இவன் எவனோ?' என்ற பார்வையுடன் சிறுவர் நீங்கினர்.

"அம்மையார் என்னைப் பார்த்துத் 'தம்பி, நீ நல்ல பிள்ளை யென்பதை முன்னரே கேட்டிருக்கிறேன். தாய் தந்தையரை இழந்து, தனிமையாயிருந்து, வறுமையால் வருந்தி, இளமையில் நீ வாடித் தோன்றுவதைக் காண உளம் இளகுகின்றது. நீ எழுதிய கடிதத்தை நாங்களிருவரும் பன்முறை படித்து வருந்தினோம். சிறிய வயதிற் பெரிய கவலைக்காளாகித் துன்பப்படுகின்ற பிள்ளையே, புகலிடங்காணாது புலம்புகின்ற குழந்தையே, எங்களாலியன்ற உதவியை உனக்குச் செய்வோம்; மகிழ்ச்சியோடு செய்வோம்; கவலை வேண்டாம்" என்று பேசினர். எனது நெஞ்சு கரைந்தது. எழுந்து போய் அவர்கள் அடிகளைத் தீண்டி வணங்கக் கருதினேன். அச்செய்கை நிகழவொட்டாது அவர்கள் தடுத்துவிட்டனர். உள்ளெழுந்த உணர்ச்சியாற் பேச என் நா எழவில்லை.

அம்மையார் மறுபடியும் பேசத் தொடங்கினர். "எங்களுக்குப் பொறுப்புக்கள் பல இருப்பதால், உன்னைக் குறித்தவரையில் எவ்வளவு நாங்கள் உதவி செய்யக்கூடுமென்பதைத் திண்ணமாக முடிவு செய்ய முயன்றோம். எல்லாவற்றையும் நன்காராய்ந்து இவ்வளவுதான் செய்யக்கூடுமென்று துணிந்திருக்கிறோம். செய்யும் உதவியை ஒவ்வொரு திங்களும் உனக்கு அனுப்பி வைப்பதில் இடையூறுகள் நேரலாமென்று எங்களுக்குத் தோன்றியதால், ஒரு தொகையை மொத்தமாய் உன் கையில் கொடுத்துவிட நினைத்திருக்கிறோம். இத் தொகை உனது செலவிற்கெல்லாம் போதுமென்று நாங்கள் எண்ணவில்லை. இவ் வையகத்தில் நாம் விரும்புமாறு எல்லாம் நிறைவேறுகிறதில்லை. சிறிது வருந்தித் தான் கல்வியை நீ முடிக்கவேண்டும்" என்று சொன்னார்கள். பெருந்தொகையை எதிர்பார்த்து வந்திருப்பேனென்

Koviloor Digital Library



றும், மன முறிவு எனக்கேற்படாதிருக்கவேண்டுமென்றுங் கருதி, அம்மையார் இவ்வாறு பேசினார்களென்று நன்கறிந்தேன். ஆதலின்,

> "செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
> வானகமும் ஆற்றல் அரிது"

என்ற பொன்னுரையைக் கூறி அவர்கட்கு நன்றி செலுத்தினேன்.

"நான் எழுதிய திருமுக வாயிலாய் எனது அழுகுரல் கேட்டு இளகிய அம்மையாரின் முகத்தைக் கவனித்தேன். குடும்பச் சுமை தாங்கிப் பழகியதாற் பிறந்த, பொறுமையும் இனிமையுங் கொண்ட அவர்களது சொல்லும், இரக்கமென்ற தண் பெரும் பண்பு பெருகுங் கண்களும், நன்மையையே நாடோறும் நினைத்துப் பேசிச் செய்ததன் பலனாக முகத்தில் விளங்கிய அமைதியும் அழகும் எனக்கு மட்டிலா மகிழ்ச்சி யளித்தன. இத்தகைய ஒரு தாயின் ஆட்சியிலுள்ள வீடு அன்பிற்கும் அமைதிக்கும் உறைவிடமாய் இலங்கு 'மென்பதில் ஐயமுண்டுகொல்? எங்கே திரும்பிடினும் அவ் வீட்டில் அழகும் அமைதியுங் குடிகொண்டிருந்தன. சுவர்களில் ஆங்காங்கு இயற்கைக் காட்சிகள் எழிலொடு திகழும் படங்கள் தொங்கின. வனப்புற அமைந்த கண்ணாடிக் கூடுகளில் கண்ணுக்கினிய நிறம்பெற்ற மலர்க் கொத்துக்கள் இருந்தன. பொருளுக்கேற்ப வரிசை செய்து வைத்த நூல்கள் புத்தக மாடங்களிலிருந்தன. எனது பார்வை நூல்களின்மேற் செல்வதைக்கண்ட அம்மையார், ஆசிரியர் வருகின்றவரை நூல்களைப் பார்க்க விருப்ப மெனக்கிருப்பின், அவ்வாறு செய்யலா மென்று பகர்ந்தனர். உவகையுடன் யான் நூல்களைப் பார்வையிடத் தொடங்கினேன். அவர்கள் ஒரு தையல் இயந்திரத்தில் எஞ்சி நின்ற சிறு வேலையை முடிக்கப் போய் அமர்ந்தனர்.

"'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது பழமொழி. இதைச் சிறிது மாற்றி ஒரு புது மொழி அமைக்கலாம். 'அகத்தின் அழகு அகத்தில் தெரியும்' என்பதுதான்

Koviloor Digital Library



இப் புது மொழி. ஒருவர் தம் வீட்டை (அகத்தை) எவ்வாறு வைத்திருக்கிருரோ, அவ்வாற்ருல் அவரது உள்ளத்தை (அகத்தை) நாமறியலாகும் என்பது இதன் கருத்து. ஒரு வீட்டில் உறைகின்றவர்களுடைய எண்ணம், விருப்பம் முதலியவை அவ் வீட்டிலுள்ள பொருள்கள், ஓவியங்கள் முதலியவற்றில் வெளிப்படுகின்றன. பொருள்கள் அலங்கோலமாய்க் கிடக்கும் ஒரு வீட்டிலிருப்பவர்களின் உள்ளம் ஒழுங்குடையதா யிருக்குமென்று நினைக்க இடமில்லை. ஒருவர் இருக்கும்பொழுது அழுக்கும் நாற்றமும் குழப்பமும் இருளும் நிறைந்திருந்த ஒரு வீடு, மற்ருெருவர் குடிபுகுந்த பின் தூய்மையும் நறு மணமும் ஒழுங்கும் வெளிச்சமுமுடையதாய் மாறியதை நான் கண்டிருக்கிறேன். இதற்கு நேர் மாருக நிகழ்ந்ததையும் பார்த்திருக்கிறேன். எட்டாத உள்ளத்தை எட்டிய வீட்டைக் கொண்டு துணிதல் பொருந்துமாயின், எட்டாத கடவுளையும் எட்டிய உலகைக் கொண்டு துணிதல் கூடும். அழகு உள்ளத்திலிருக்குமாயின், அகத்திலும் அது தோன்றும் ஒழுங்கு நினைவிலுளதேல், அகத்தில் அது தோன்ருதொழியாது. வையகத்தில் அழகையும் ஒழுங்கையுங் காண்கின்ருேம். அவ் வழகும் ஒழுங்கும் தோன்றுவதற்குக் களனயுளதோர் அகமில்லைகொல்? 'ஆதிபகவன் முதற்றே யுலகு.'"



Koviloor Digital Library

# ஒரு குறள்

"மா. வே. நெல்லையப்ப பிள்ளை B. A."

உலக வாழ்வில் மக்களால் அடையப்பெறுவன அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள் களே. இந்த நான்கு உறுதிப் பொருள்களையும் தொகுத்து எவரும் ஓதற்கு எளிதாய், எளிய நடையில் கூறுவது திருக் குறள் ஒன்றே. இந்நூலைப்போன்றதொரு நூல், தமிழ் மொழி யல்லாத எம்மொழியிலும் காணுதல் முடியாது. இத் தகைய நூல் இக்காலத்தில் பல தமிழ் நுண்ணறிவாளர்களால் ஆராய்ச்சி செய்யப்பட்டுவரினும், அதில் மறைந்தபொருள் களாய்ப் பல செய்யுட்களிற் புதைந்துகிடக்கின்ற சைவசமய வுண்மைகள் பல நன்கு ஆராய்ச்சி செய்யப்படவில்லை.

நான்கு உறுதிப்பொருள்களுடன், உலக வாழ்க்கை வந்த காரணத்தையும், அதன் குறிக்கோளையும், அக் குறிக்கோளை மக்கள் அடையும் வழிகளையும் முடிந்த உண்மைகளாகச் சிறப் பாகத் தெரித்துக் கூறுவது சைவசமயமே. இத்தகைய சைவ சமய வுண்மைகளைக் குறிக்கின்ற குறிச் சொற்கள் (Technical terms) திருக்குறள் நூலில் காணப்படாவாயினும் சைவசமய உண்மைகள் பல, குறிச் சொற்களின்றியே கூறப் பட்டுள்ளன. அப்பேர்ப்பட்ட செய்யுட்களில் ஒரு செய்யுளை எடுத்துக்கொண்டு அதன்கண் அடங்கிய உண்மையை ஆராய் வாம்.

இன்பத்துள் இன்பம் விழையாதான், துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்

என்பது அச்செய்யுள். இச்செய்யுள் பொருட்பாலில் அரசி யல் என்ற பகுதியில், 'இடுக்கண் அழியாமை' யென்னும் அதிகாரத்தின்கீழ்க் கூறப்பட்டிருக்கின்றது. பொருட்பாலில் அரசியல் கூறவேண்டிய காரணம் என்னையெனில், அரசியல் ஆணையால் நிகழும் காவல் முறைமையின் அன்றி, உலகியல் வாழ்வுக்கு இன்றியமையாது வேண்டப்படும் பொருளை மக்கள் அறத்தாற்றின் ஈட்டலும், ஈட்டின பொருள்களைக் காத்தலும்

Koviloor Digital Library



காத்தபொருளை அறத்தாற்றின் வகுத்து வழங்கலும் செல்லா என்பதாகும். அரசன் தன் அரசியலின்கீழ் வாழும் மக்களைக் காத்தற்கு வினை செய்தற்கண், தனக்கு யாதாமொரு காரணத்தால் துன்பம் வந்தபொழுது, அதற்காக மனங்கலங்கித் தான் செய்யும் முயற்சியில் தளராதிருத்தல் இடுக்கண் அழியாமையாகும்.

இனி இடுக்கணழியாமை என்னும் அதிகாரக் கருத்துக் கேற்றபடி செய்யுளின் பொருளை நோக்குவாம். "வினையால் தனக்கு இன்பம் வந்துழி அதனை அநுபவியா நின்றே மனத்தால் விரும்பாதான், துன்பம் வந்துழியும் அதனை அனுபவியா நின்றே மனத்தால் வருந்தான்" என்பது பரிமேலழகருரை.

உலகவாழ்வில் ஒருவன் தனக்கு வருகிற இன்பத்தை அனுபவிப்பதற்கும், துன்பத்தை அனுபவிப்பதற்கும் அவன் மனமே இடமாயிருப்ப தென்பதும், இன்பம் வரும்பொழுது மனத்தால் அதனை விரும்பாமலே நுகர்ந்தால், துன்பம் வரும்பொழுதும் அதனை அவன் வெறுத்துத் துன்பமடையமாட்டானென்பதும் இவ்வுரையாற் போந்த பொருள். ஆகவே, இன்பம் வந்த காலத்தில் விருப்பும், துன்பம் வந்த காலத்தில் வெறுப்புமில்லாத ஒருவன் மனமானது, உலக 'விடயப்' பொருளை விரும்பிநுகரும் கீழான நிலையை விட்டு நீங்கிப், பேரின்ப நாட்டமுடையதாய்ப் பிறவிக்குக் காரணங்களாயுள்ள இன்ப துன்பங்களை ஒப்பாகக் கருதும் உயர்ந்த நிலையை உடையதா யிருக்கின்ற தென்பது பெறப்படுகின்றது. இந்த உயர்ந்த மனநிலையே அரசனொருவன் தனது அரசியல் வினையைச் செய்தற்கண்ணும், அவ்வினையை இடையே தளரவிடாமல் தான் கருதிய நற்பயனை அடையும்படி கடைபோகச் செய்து முடித்தலுக்கும் இன்றியமையாது வேண்டப்படுகின்றதென்று இச்செய்யுள் கூறுகின்றது.

இந்த ஒப்பு நிலையானது ஒருவனுக்கு உண்டாக வேண்டுமென்றால், அவன், (1) உடலினது நிலையாமையையும், அவ்

1. இலக்கம் உடம்பிடுபைக் கென்று கலக்கத்தைக்
கையாறுக் கொள்ளாதாம் மேல்.

Koviloor Digital Library



வுடலால் அவன் நுகருதற்கு ஏதுக்களாயுள்ள (2) பொருள் களின் நிலையாமையையும் தன் மனதின்கண்ணே அறிந்து, அவ்வறிவு காரணமாக, நிலையில்லாத உடலிலே நிலையில்லாத நுகர்வுப்பொருள்களாலே நுகரும் இன்ப துன்பங்களும் நிலையில்லாதனவென்று அறிதல்வேண்டும். இங்ஙனம் உடலில் நுகரும் நிலையில்லாத இன்பமானது, சிறிது நேர அளவைக் கடந்தபொழுது துன்பமாய் மாறுதலினாலும் உலக வாழ்வில் இன்பமும் துன்பமும் சகடக்கால்போல மாறி மாறி வரு தலினாலும், உலக அனுபவம் தக்க அளவில் அடைந்த ஒருவன் உலகவின்பத்தை விரும்பாதவனாகிறான். அவன் இங்ஙனம் உலகவாழ்வின் அனுபவத்தால் உலக வின்பத்தை விரும்பாதவ னாயிருப்பினும் இயற்கையினுள்ள இன்ப விருப்பம் அவனுடைய மனத்தைவிட்டு நீங்குவதில்லை. இந்த இயற்கையான விருப்ப மானது, உலக வின்பத்தில் விருப்பமில்லாத ஒருவனை, நிலையா யிருப்பதும் துன்பங் கலவாததுமானதோரின்பத்தை நாடித் தேடும்படி தூண்டுகின்றது. இந்த நாட்டத்தினாலும், தேட்டத் தினாலும் அவன் வீட்டின்ப நூலைக் கற்றவர்களிடம் கேட் டாவது, தானே ஓதியாவது கடவுளைச்சேர்ந்தே, தானடைய விரும்பும் நிலையான இன்பத்தை அடையலாமென்று அறிந்து கொள்கின்றான். ஆன்மா தனித்து நில்லாது ஒன்றனைச் சார்ந்து நிற்கும் இயல்பான குணமுடையதாதலின், இதுகாறும் உலகத்தைச் சார்ந்து தனது உடலிலே உலக இன்பம் நுகர்ந்து வந்தவன், இனி நிலையானதும் துன்பங் கலவாததுமான இன் பத்தை அடைதற்குக் கடவுளைச் சார்கின்றான். இங்ஙனம் உலகத்தைவிட்டுக் கடவுளைச் சாரும்பொழுது அவன் உலக நெறியைவிட்டு, வீட்டு நெறியில் அருள் வழியிலே ஒழுகத் தொடங்குகிறான். அவன் உலக நெறியைவிட்டு வீட்டுநெறியை யடைவதற்கு அவனுடைய மனத்தின்கண் அருளொளியோடு விளங்குவதாகிய அறிவில் உலக வின்பத்தில் விருப்பும், உலகத் துன்பத்தில் வெறுப்பு மில்லாது இரண்டினையும் ஒப்பாகக் காணுதல் உண்டாகின்றது. உலக வாழ்வில் உண்டாகிற இன்ப துன்பங்களிரண்டும் ஒரே வகையாகப் பிறவிக்குக் காரணமாக

---

2. அற்றேமென்று அல்லற் படுபவோ, பெற்றேம் என்று
ஓம்புதல் தேற்றா தவர்.

Koviloor Digital Library



இருத்தலாலும் அவனுடைய அறிவில் 'ஒப்பு நிலை' உண்டாகிறது. இந்த ஒப்பு மனநிலையே இந்தக் குறட் செய்யுளிற் கூறப்பட்டது. இதுவே சைவ சமயத்திற் கூறப்படுகின்ற 'இருவினையொப்பு'மாகும். இதனாலே, உலக வாழ்வில் நேர்மையான அறநெறியிலொழுகும் ஒருவனுடைய மனத்திற் படிமுறையில் அருளொளி விளங்கி அவ்வருள் காரணமாகச் சைவசமய உண்மைகள் புலனாகுந் தன்மையுடையன வென்பது பெறப்படும்.



Koviloor Digital Library

# அறிந்து மறைந்த முகங்கள்

('Charles Lamb' என்பவர் கருத்துக்கள்)

"வித்துவான் அ. கிருட்டின மூர்த்தி"

## இளமை

என்னுறு துயரங் கேண்மின் !
என்னுடைக், கல்லா இளமை நாளில்
களித்துக், கல்லூரி சென்ற நாளில்
என்னொடு, ஓடி யாடிய தோழர்
என்னொடு, பாடிப் படித்த நேயர்
இவர்தம், அறிந்து மறைந்த முகங்கள்
அந்தோ ! அரிய வாயின அளிய னேற்கே.

## இளமை யின்பம்

என்னுடை, இன்னுயிர்த் தோழர்கள் குழுவில்
என்னகம், விரும்பிய வண்ணம் பருகி
என்னுளம், விரும்பிய வண்ணம் இருந்து
நண்பொடு, களித்தேன் ; நெடுநகை செய்தேன்
அவர்தம், அறிந்து மறைந்த முகங்கள்
அந்தோ ! அரிய வாயின அளிய னேற்கே.

## காதல்

மங்கையர்க் கரசி ஒருத்தி,
அங்கவள் பெடைமயி லாளென நின்றாள் ;
காதல், கடைமுகம் நோக்கி நின்றேன் ;
கதவம், அடைபட அந்தோ காணேன் !
ஆங்கு, அறிந்து மறைந்த முகங்கள்
ஆ ! ஆ !! அரிய வாயின அளிய னேற்கே.

Koviloor Digital Library



### நட்பும் பிரிவும்

அருமைத் தோழன் ஒருவன்,
நட்பில், நன்றி யிலாதான் போல
ஒருவன், ஒன்றுவ தில்லை யெனினும்
யானே, ஒன்று திழந்தேன்! அவனோ
அறிந்து மறைந்த முகத்துள்
அந்தோ, பொருந்திப் போதர இழந்திட் டேனே.

### முதுமை

என், இளமையை மூடிய பேயின்
இருப்பிடம் சூழ்ந்தே யானும்
என்றன், அறிந்து மறைந்த முகங்கள்
ஆங்குத், தெரிந்து தேடிடச் சென்றேன்
சென்றுழி, உலக மென்பது பாலை
பாலையைக், கடத்தல் கட்னெனக் கண்டறிந் தேனே.

### ஏக்கம்

ஆருயிர்த் தோழர்கள் கேளீர்!
நீவிர், அனைவரும் என்னோ டிங்கு
உற்ற, உடன்பிறப் பாளர்க ளாகி
என்றன், தந்தையி னல்லகம் வந்து
அந்தோ! தோன்று தொழிந்தமை எவனோ கூறீர்!

### கையறவு

அறிந்து மறைந்த முகத்தோர்
அங்ஙனம் ஓதப் படினே,
ஏ ஏஎ!, எத்துணைப் பெயரோ மாண்டார்!
சிற்சிலர், பிரிந்தார் பிரிக்கவும் பட்டார்
ஆ ஆ!, அனைவரும் சிதறிச் சென்றார்
அவர்தம், அறிந்து மறைந்த முகங்கள்
அந்தோ!, அரிய வாயின அளிய னேற்கே.

Koviloor Digital Library



மேற்போனவற்றின் தொகுப்பு :—

காவா இளமையும் கைப்பில் தனிச்சுவையும்
சாவாத காதலொடு சார்நட்பும்—மூவா, யான்
கையாறு மூப்பினோ டேக்கமுங் கையுற்று
வையா துயிர்வைத்த னன்.*

குறிப்பு :—கருத்துக்களின் விளக்கமும் நடையின் எளிமையும் கருதி, பாட்டுக்கள், வடிவாற் சிறிது பெருக்கி எழுதப்பெற்றன.

அளியனேற்கு-பெரிதும் இரங்கத்தக்க எனக்கு. வையாது உயிர் வைத்தல்-சாவாது சாதல்.



---

* இவ் விறுதிப் பாட்டு, சிலப்பதிகாரத்தேயுள்ள 'காவி யுகுநீரும்' என்ற அருமைச் செய்யுளின் நல்லிசையைத் தழுவியது.

Koviloor Digital Library

# கொன்றை வேந்தன்

"இளவழகனார்"

௫

இனி, ஔவைப் பெருமாட்டியின் உள்ளச் சாயலை இக் கொன்றை வேந்தன் வழியாக நன்றாய்க் காணலாம். உயிரும் உடலும்போல அச் சாயல் நிழலாடுகின்றது. அங்ஙனம் நிழலாடும் நூல்களே உண்மையில் 'நூல்' எனத் தக்கவை; அத் தகைய நூல்களிலேதாம் அச் சாயலையும் நன்றாய்த் தெரிந்து கொள்ளமுடியும்.

கொன்றைவேந்தன் தொடர் ஒவ்வொன்றும் ஔவையின் ஒவ்வோர் எண்ணச் சுடரேயாம். ஔவையின் ஒளியுருவை அவை நன்கு விளக்குகின்றன.

ஔவையார் ஆத்தி சூடியை இயற்றிய பின்பே, 'கொன்றை வேந்தனை' இயற்றியிருக்கின்றார். ஏனென்றால், ஆத்திசூடியிற் பொதுவாகச் சொன்ன சில கருத்துகட்குக் கொன்றைவேந்தனிற் காரண காரியங்களுடன் விளக்கங் கள் வருகின்றன.

'அறனை மறவேல்'

என்று ஓர் அறிவு மொழி பொதுவாக ஆத்திசூடியிற் சொல்லியிருக்கின்றது. அதைப் படிக்கும்போது, 'அறம்' என்பது என்ன என்று ஓர் ஐயம் எழும். அதற்கு விடை,

"பிறன்மனை புகாமை அறமெனத் தகும்"

என்று கொன்றை வேந்தனில் வருகின்றது. ஔவையாருக்குச் சிறப்பாகத் தோன்றிய அறக் கருத்து இது. இதனால் ஔவையார் உள்ளம் எத்தகையதென்பது நமக்குத் தெரிகின்றது.

திருவள்ளுவர் "ஒன்றாக நல்லது கொல்லாமை" என்றால், ஔவையார் 'ஒன்றாக நல்லது பிறன்மனை புகாமை' என்னுங் கருத்திற் பேசுகின்றார். இதனால், இருவருள்ளச் சாயலும்

Koviloor Digital Library



வேறு வேறு என்பது தெரிந்துகொள்ளலாம். ஆடவர் பிறன் மனை புகுதலால், பெண்கட்கு உண்டாகும் இடர்கள் இன்ன வென்பதைப் பெண்பாலாரான ஔவையார் நன்கறிவார். பொதுவாகத் திருவள்ளுவரும், ஔவையாரும் ஒத்த கருத்தினரேயாயினும், மிக நுண்ணிய நிலைகளில் அவரவர் உயிரியற்கைகள் வேறுபட்டே நிற்குமாகலின் அவைபோல்வன எவை யென்பது அவரவர் நூல்களால் கூர்ந்தறியக்கூடியதேயாம். "பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு அறன்" என்று திருவள்ளுவருங் கூறினரேனும், அவரதற்கு முதன்மை தந்திலர்.

இங்ஙனமே, 'இல்லறம்' 'துறவறம்' என்னும் இருவகை அறங்களைப்பற்றிச் சொல்லும்போதும் திருவள்ளுவர் ஔவையாரைப்போல இல்லறத்துக்குத் துணிவாக ஒரு முதன்மை கொடுத்தாரல்லர். "இல்வாழ்க்கை வாழ்பவன்...முயல்வாருள் எல்லாந் தலை" "இல்வாழ்க்கை....நோற்பாரின் நோன்மையுடைத்து" "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை" என்று திருவள்ளுவர் இல்வாழ்க்கையைச் சிறப்பித்தாராயினும், துறவறத்தினும் முதன்மை தோன்றுதவாறு "முயல்வாருள்" "நோன்மை" "அஃதும் (துறவறம்) பிறன் பழிப்பதில்லாயின் நன்று" என்று அங்கங்கும் சில சொற்கள் அவர் இட்டுச் சென்றிருக்கின்றார். அவர் கருத்தறிந்து உரையாசிரியர் பரிமேலழகரும் அவ்வவற்றிற் கேற்றவாறு உரைவிளக்கிச் செல்லுதல் பெரிதும் வியத்தற்குரியதாகவேயிருக்கின்றது. ஆனால் ஔவையாரோ, ஒரே தீர்மானமாக,

"இல்லற மல்லது நல்லறம் அன்று"

என்று இயற்றி, 'இல்லறமே நல்லறம்; அதுவல்லாத துறவறம் நல்லற மாகாது' எனத் துணிந்து கூறினர்.

ஏதொன்றிலுந் துணிவு தேற்றும் இயல்பு, ஆடவரினும் பெண்பாலார்க்கு இயல்பாகவே மிகுந்திருக்கின்றது. மேலும், மகளிரைத் தனியே விடுத்து ஆடவர் புறஞ்செல்லுவதான துறவு நிலைக்குப் பெண்ணினத்தவரான ஔவையார் சிறி

Koviloor Digital Library



தேனும் ஒருப்படுவரோ! பெண்டிரின் இடர்ப்பாடான நிலைமைகள் அவருக்கு நன்கு தெரியுமன்றே!

திருவள்ளுவருக்கும் ஔவையாருக்கும் இவ்வேறுபாடு இங்ஙனம் மிக நுண்ணிய நிலையிலேனும் இருத்தலாலன்றே, துறவற நோன்புகளிற் சிறந்ததான 'கொல்லாமை'யையே சிறந்த அறமாகத் திருவள்ளுவர் கொள்ளவும், இல்வாழ்க்கையறங்களிற் சிறந்ததான 'பிறனில் விழையாமை'யையே சிறந்த அறமாக ஔவையார் கொள்ளவும் இடமுண்டாயிற்று! இங்ஙனம் ஔவையாரின் உள்ளச் சாயல்கள் பலப்பலவாகக் கொன்றைவேந்தனில் விளங்குகின்றன.

இனி, ஆத்தி சூடியில்,

"ஆறுவது சினம்
இயல்வது கரவேல்
ஊக்கமது கைவிடேல்
ஔவியம் பேசேல்
சக்கர நெறிநில்
சொற்சோர்வு படேல்
இணக்கமறிந் திணங்கு
தெய்வ மிகழேல்
பூமி திருத்தியுண்
ஊருடன் கூடிவாழ்"

என்று வருந் தொடர்களுக்குக் கொன்றைவேந்தனில் ஏற்ற விளக்கங்கள் முறையே,

"தீராக் கோபம் போரா முடியும்
ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்
ஊக்க முடைமை ஆக்கத்திற் கழகு
ஔவியம் பேசுதல் ஆக்கத்திற் கழிவு
வேந்தன் சீறின் ஆந்துணை இல்லை
நிற்கக் கற்றல் சொல்திறம் பாமை
நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்
தெய்வஞ் சீறின் கைதவம் ஆளும்
மேழிச் செல்வம் கோழை படாது
ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்"

Koviloor Digital Library



என்று வருதலும் நினைவுகூர்தல் வேண்டும். ஆத்திசூடி இருசீர் இயைந்த அடிகள்; அவற்றோடு பின்னும் இரண்டு சீர்கள் கூட்டிக் கொன்றைவேந்தன் தொடர்களை ஔவையார் இயற்ற நினைந்தபோது, அவ்விரண்டு சீர்களையும் வீணாகக் கூட்டிவிடாமல், ஒருவகையில் இங்ஙனங் காரண காரிய விளக்கங்கட்காகப் பயன்படுத்திக்கொண்டமை பெரியதொரு விரகேயாம்.

ச

பொருள் முடிபுகளில் மாறுபாடில்லாமல் சொற்களை எவ்வளவு பொருத்தமாகவும் விழிப்பாகவும் இவர் பயன்படுத்துகின்றாரென்பதற்கு, மற்றும் ஓர் அரிய திறத்தை இங்கெடுத்துக் காட்டலாம். ஆசிரியர் திருவள்ளுவரது அறத்துப்பாலில் துறவறவியலில் 'விரதப் பகுதி' என்று ஒரு பிரிவு காணப்படுகின்றது. அதன்கண் எட்டுவகை 'விரதங்'கள் கூறப்படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாக ஒவ்வோரதிகாரம் உண்டு. 'விரதம்' என்பதற்கு நோன்பு என்பது பொருள். திருவள்ளுவர், தொடக்க நோன்பாகப் 'புலால் மறுத்தல்' என்பதை அறிவுறுத்தியருளினார். முடிந்த நோன்பாகக் 'கொல்லாமை' என்பதைக் கூறிக் கடைசியில் நிறுத்தினர். இடையில் தவம், கூடாவொழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னா செய்யாமை என்னும் ஆறு வகையான நோன்புகளை இயைத்து விளக்கியிருக்கின்றார். இவற்றுள், புலான் மறுத்தல் அதிகாரமும் கொல்லாமை அதிகாரமும் ஒன்றற்கொன்று காரணகாரியமாயிருத்தலின், அவையிரண்டும் ஒன்றன் பக்கத்தே ஒன்று அமைதற்குரியன. அப்படியிருந்தும் திருவள்ளுவர், அவையிரண்டையும் வெவ்வேறாகப் பிரித்து முதலிலுங் கடைசியிலுமாக நிறுத்தி அவற்றிற்கிடையில் வேறு நோன்புகள் சிலவற்றை அமைத்தடக்கி அவ் 'விரதப்' பகுதியை முடித்திருக்கின்றார். இதனால், இடையே நிறுத்தப்பட்ட தவம் முதலான ஆறு வகை 'விரதங்'களையுந் தம்முள் அடக்கிக்கொண்டு, 'விரதம்' என்னும் பெயர்க்கு முதன்மை வாய்ந்தனவாய் விளங்கிநிற்பவை, 'புலான் மறுத்தல்' 'கொல்லாமை' என்னும் இரண்டுமேயாம்

Koviloor Digital Library



என்பது தெற்றென விளங்காநிற்கும். திருவள்ளுவர் இங்ஙனம் விரித்துக் கூறிய 'விரதப்' பகுதி யுண்மைகளை ஔவையார்,

"நோன்பென் பதுவே கொன்றுதின் னாமை"

என்று நான்கே சொற்கள் கொண்ட ஒரே அடியில் மிகப் பொருத்தமாக விளக்கியருளிய அருள் வல்லமையை என் னென்பது! இதன்கண் புலால் மறுத்தலும் வருகின்றது; கொல் லாமையும் வருகின்றது.

கொன்றைவேந்தனில் வரும் ஔவையார் திறங்கள் பலப் பலவாய் மிகுவல்லமையுள்ளனவாயிருக்கின்றன. எல்லாம் எடுத்துக்காட்டப் புகுந்தால் இது மிகவும் விரியும். ஆயி னும், பின்வருஞ் சில குறிப்புகளேனுங் கொடுத்து இதனை முடிப்பது நல்லதென்று தோன்றுகின்றது.

ரு

ஔவையார் கொள்கைகள் இன்னவை என்பதும், அவர் விரும்பிய சீர்திருத்தங்கள் இன்னவை யென்பதுமெல்லாம் இக் கொன்றை வேந்தனிலும் பெறக்கூடியனவாயிருக்கின்றன.

ஔவையார் உருவ வணக்கத்தைச் சிறப்பிப்பவர். திருப் பதிதோறுஞ் சென்று வழிபடுதலிலுங் கருத்துடையவர். அன் றேல்,

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று"
"வையந் தோறுந் தெய்வந் தொழு"

என்று அருளிச்செய்திரார்; முதலடியில் வருகின்ற 'சாலவும்' என்னுஞ் சொல் மிகவும் பொருட்பேறுடையது. ஆலயந் தொழுதலால் உயிர்கள் எங்ஙனமெல்லாந் தெய்வத்தன்மை களை அடையக்கூடும் என்னும் முறைமைகளை அது குறிக் கொண்டிருக்கின்றது. தொடரின் முதற் கருத்தையும் அது நன்றாய் வற்புறுத்துகின்றது.

Koviloor Digital Library



ஔவையார் உள்ளொளியில் நின்று எழுதுவோர். அகக் கண் அருள் இருப்பவர்க்கு அவர் எழுத்து நன்கு விளங்கக் கூடும். இப் பொருண்மொழி நிழல்களை அம்முறைமையில் ஆழ்ந்து நோக்கி இன்பங்காண்பதே உயர்ந்த இன்பம். 'கச்தேவ் பிளாபர்டு' (Gustave Flaubert) என்னும் இலக்கியச்சுவையாளர், இங்ஙனமே இச் சொற்பொருட்பேறுகளை நன்குணர்ந்து மகிழ்பவர். ஒருவர் வாய்மொழியை ஆர நுகர்ந்து இன்புற வேண்டுமானால், இங்ஙனம் பொருள்கள் தேங்கி நிற்குஞ் சொல்லூற்றுகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பது அவர் கருத்து. அப்போதுதானே அப்பொருள் நீர்மைகளிற் குளிர நீராடி இன்புறலாம்!

(வரும்)



Koviloor Digital Library

# செய்திகளும் குறிப்புகளும்

இராமகிருட்டின வித்தியாலயம், கோயம்புத்தூர்: இக் கல்வி நிலையத்தின் 1939-40-ம் ஆண்டின் அறிக்கை, இந் நிலையத்தவரால் அன்புடன் அனுப்பப்பெற்றோம். நிலயத்தின் கல்வித்தொண்டுகள் சால மகிழ்ச்சி தருகின்றன. இளம் பிள்ளைகளின் உளம் தெரிந்து அதற்கு ஏற்ற நன்முறைகளுடன் இந்நிலயம் மேலோங்கிவருவதாகத் தெரிகின்றது. அறிக்கையின் முகப்பிற் காட்டப்பட்டுள்ள நோக்கங்களும், அதன்பின் காட்டப்பட்டுள்ள ஆக்கங்களும் உயர்ந்த சான்றோர்களின் திருவுள்ள முடிபையுடையனவாயிருக்கின்றன. 'தமிழ்ச் சேவை' என்னுந் தலைப்பிற் காட்டியிருக்கும் நிகழ்ச்சி மிகவுங் கவர்ச்சியாயிருக்கிறது. மேலுமேலும் ஆக்கம் பெறுமென்றுந் தெரிகின்றது. திருவாளர் T. S. அவிநாசிலிங்கம் செட்டியாரவர்களும், (M.L.A. Central) அவர்கள் நண்பர்களும் செய்யும் நன் முயற்சிகள் பெருகத் தழைத்தோங்கித் தமிழகத்துக்கு இன்னும் நன்முறையிற் பயன்படுகவெனப் பெரிதும் விரும்பிநிற்கிறோம்.

*    *    *    *

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்: அணுக்கத்தில் இப் பல்கலைக் கழகத்துக்கு நேர்ந்திருக்கும் வாய்ப்புக் குறித்துத் தமிழன்பர்கள் ஆரா மகிழ்ச்சியடைகின்றனர். பேரறிஞர் திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M.A., M.L., இக் கழகத்தின் ஆராய்ச்சித்துறைத் தலைவராக அமர்ந்திருப்பது, கழகத்தின் நற்பேறேயாம். முன்னும் ஒருமுறை அவர்கள் தொடர்பை இக் கழகம் பெற்றிருந்தது. இப்போதும் அவர்கள் சார்பில், தமிழ்க்கு ஆக்கமான சிறந்த பணிகளைக் கழகம் பெறக்கூடும். தமிழ் மக்களின் உள்ளத்துக்கு உவப்பான இந் நன்னிகழ்ச்சி குறித்து, இக் கழகத்தின் ஆட்சிக் குழுவினரும் பெருமைகொள்ளுதற்குரியர். பல்கலைப் புலவர்களான பிள்ளையவர்கள் இப் பல்கலைக் கழகத்துடன் நெடுங்காலம் தொடர்புகொண்டிருந்து, பலப்பல நற்றமிழ்த் தொண்டுகளைத் தமிழ்க்கு வழங்கியுதவவேண்டுமென்று, இறைவன் திருவருளை உன்னிப் பெரிதும் வேண்டிக்கொள்ளுகிறோம்.

Koviloor Digital Library



உயர்திரு. ஈசானசிவாச்சாரியார்
சைவசித்தாந்த, சிவாகம சாத்திர பண்டிதர்,
சென்னிமலை.

Koviloor Digital Library

ஓம்

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு



சிலம்பு-கசு] விக்கிரம—ஆடி [பரல்-ச

# சிறக்க !

யாண்டுபல ஆக நரைஇல வாகுதல்
யாங்குஆ கியர்? என வினவுதி ராயின்,
மாண்ட என் மனைவியோடு மக்களும் நிரம்பினர்;
யான்கண் டனையர்என் இளையரும் ; வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும்; அதன்றலை,
ஆன்றுஅவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே. —புறநானூறு.

*இத்தனை வயதாகியும் உங்களுக்கு என் மயிர் நரைக்கவில்லை என்று 'பிசிராந்தையார்' என்னும் பெரியவரைக் கேட்டால், அதற்கு அவர், 'என் மனைவி மக்கள் நல்லவர்கள், அறிவு உடையவர்கள்; என் வேலைக்காரர்கள் என் கருத்தின்படி நடப்பவர்கள்; என் நாட்டு அரசன் கெடுதிசெய்யாமற் பாதுகாப்பவன்; நானிருக்கும் ஊரிற் பலர், அறிவு அகன்று புலன் அவிந்து அருளில் அடங்கிய பெரியோராவர்' என்று விடை சொல்லியிருப்பது எப்படி இருக்கிறது!*

*ஆழ்ந்து நோக்கினால், கிழத்தனம் வராமைக்கும், இங்ஙனம் நற்குணங்களுடைமைக்கும் எவ்வளவு தொடர்பு தெரிகின்றது! கிழத்தனம் வராமைக்கு இனி வேறு வழிகள் ஏன்? யாரும் நற்குணத்தோடு இருந்தால், இருக்கும் வரையில், இளமையாகவே இருக்கலாம். வேறு வழிகளால் செலவுகள் மிகுதி; சற்றுப் பொறுத்துவருங் கிழத்தனமும் ஒரோவொருகால் விரைவாகவே வந்துவிடுகின்றது.*

*பிசிராந்தையாரது அறிவுமொழி, செலவில்லாத எவ்வளவு இனிய எளிய இயல்பான மெய்ம்மொழியாயிருக்கின்றது!*

*சிறக்க! சான்றோர் பலர் நாம் வாழும் ஊரே!*

Koviloor Digital Library

# இரண்டு கட்டிடங்கள்

ஒற்றையாயிருப்பதைவிட இரட்டையாயிருப்பதற்கு எப்போதுமே ஒரு தனி மதிப்பு உண்டு. இயற்கையிலும் அப்படித்தான்; செயற்கையிலும் அப்படித்தான்.

கதிரவனும் மதியமும் என்று இரண்டு பேரொளிகள் உலகத்தில் மாறி மாறி ஒளி வழங்கிவருவது எவ்வளவு கவர்ச்சியாயிருக்கிறது! மக்கள் உடம்பிலும் இரண்டு கண்கள் இரண்டு காதுகள் என உறுப்புகள் பல இரட்டையாக இருப்பதில் ஏதாவது உண்மை இருக்கத்தானே வேண்டும். இவை மட்டுமா! வீடுகளையே நினைவுகூரலாம்; கதவுகள் முதலியன, இரட்டைக் கதவுகளாயிருப்பது எவ்வளவு வசதி. கையில் ஓர் எலுமிச்சம்பழம் கொண்டுபோய்க் கொடுப்பதைவிட, இரண்டு பழங்களாகக் கையுறை கொடுப்பது நல்லதுதானே.

*　　　*　　　*　　　*

ஆசிரியர் தொல்காப்பியனாரும் பார்த்தார்; உலகமெல்லாம் இப்படி இரட்டையாயிருக்கும்போது நம் இலக்கணமெல்லாம் மட்டும் வேறா? உலக இயற்கைதானே மொழியிலக்கணம் என்பது. மொழியென்றால் உலகம்; உலகமென்றால் மொழி. தமிழ் மொழிக்கு உள்ள உலகப்பெருமையெல்லாம் மற்று எதற்கு? என்று திருவுள்ளம்பற்றினார். உடனே அவர் இலக்கணமெல்லாம், எழுத்து என்றால் உயிரெழுத்து மெய்யெழுத்து; சொல் என்றால் பெயர்ச்சொல் வினைச்சொல்; பொருள் என்றால் அகப்பொருள் புறப்பொருள்; அணி என்றால் உவமை உருவகம்; செய்யுள் என்றால் ஆசிரியப்பா வெண்பா என்று இரட்டை யிரட்டையாக அணி வகுத்து நிற்கத் தொடங்கிவிட்டன. முதன்மை இவ்வளவே. மற்றவை இவற்றில் அடக்கம். தொல்காப்பியத்தில் இவ்விலக்கணக் காட்சி, பார்க்கப் பார்க்க ஒரு

Koviloor Digital Library



பெருங் காட்சியாகும். உலகமே இத் தொல்காப்பியச் சோலையில் உலவுமாயின், அப்போது அது தருங் காட்சி பலவாயிருக்கும்.

*   *   *   *

இலக்கணம் மட்டுமன்று; இலக்கியம் சமயம் முதலாக எல்லாமே இங்ஙனம் இரட்டைச் செல்வம் உடையனவேயாம். இவ் விரட்டைச் செல்வம் தமக்குள் ஒன்றுக்கொன்று காரண காரியமாகவும் உதவியுந் துணையுமாகவும் என்ன அழகாய் இணைந்தமைந்து இயல்வனவாயிருக்கின்றது. உன்னிப் பார்க்கப் பார்க்க அது தரும் இன்பம் பெரிது.

சென்னைக்கு அருகில் உள்ள தின்னனூர் என்பது முன்பு திருநின்றவூர் என்று வழங்கிவந்ததாகத் தெரிகின்றது. அங்கே, மனமாட்சி மிக்க பெரியாரொருவர் முன் இருந்தார். அவருக்கு அமைந்த செல்வமெல்லாம் இம் மனமாட்சிமை ஒன்றே ஒன்றுதான். இன்னும் வேறு என்ன வேண்டியிருக்கிறது! இதுதான் எல்லாந் தருமே! ஆரவாரமே இல்லாத அப் பெரியாருக்கு எப்படியோ 'பூசலார்' என்று ஆரவாரப் பொருளுடைய பெயர் உண்டாய்விட்டது.

இப்படிப்பட்டவர், தமிழ்நாட்டில் ஒரு நல்ல இடத்தில் சிறந்த மாளிகை ஒன்று அமைக்கவேண்டுமென்று நினைக்கும்படி நேர்ந்துவிட்டது; தமக்காக அன்று; உலகத்துக்காகத்தான். அதற்காக அவர் அங்குமிங்கும் அலைந்தவராகத் தெரியவில்லை; ஒரே இடமாய் உட்கார்ந்துவிட்டார்போலிருக்கிறது; அந்நிலையில் மனம் சும்மா இருக்குமா? மனம், மனமாளிகை அமைக்க முயன்றது.

ஒருநாள் அப் பெரியார் தமது மனமாளிகையை ஊக்கமாய்த் தொடங்கினர். ஆ, என்ன வியப்பு! அவர்

Koviloor Digital Library



தொடங்கியதும், காஞ்சிபுரத்தில் அவர் காலத்திலிருந்த பல்லவ மன்னனும் பெரும்பொருட் செலவில் உண்மை யாகவே அந் நகரில் ஒரு மாளிகை அமைக்கத் தொடங் கினன். முன்னவரது அகமாளிகை தொடரும்போது இவ் வரசனது புறமாளிகையுந் தொடரும். அந்த அக மாளிகை சற்றுத் தடைப்படும்போது இந்தப் புறமாளிகை யும் சற்றுத் தடைப்படும். ஆ, இரண்டு கட்டிட வேலை களும் ஒரே காலத்தில் நிறைவேறி முடிந்தன.

இரண்டும் இறைவனுக்குத் திருக்கோயில்களாக அமைக்கப்பட்டவை. கட்டிடம் எழுப்பியவர்கள் ஒரு வரையொருவர் அறியமாட்டார்கள். கடவுள் அம் மாளி கைகளில் திருக்கோயில் கொள்ளும்போது, அகமாளிகை யில் முதற் கால் வைத்துப் பின் புறமாளிகையில் மறு கால் வைத்து இடங்கொண்டனராம். சென்னையை அடுத்த குன்றத்தூரிற் சேக்கிழார் குடியில் வந்த அருண்மொழித் தேவர் என்னும் பெரியார், தமது பெரியபுராண வரலாறு களில் இதனை எடுத்துக்காட்டியிருக்கிறார்.

* * * *

பூசலார் எண்ணம், இருந்த இடத்தில் இருந்தபடியே நிறைவேறிவிட்டது; காஞ்சியிற் கட்டிய கட்டிடம் இப் போது யார் கட்டியது என்று சொல்லுவது? பூசலார் கட்டினரா? பல்லவன் கட்டினனா? ஆனல், பூசலாரது அகமாளிகை பல்லவனது புறமாளிகைக்குக் காரணமா யிருந்ததுமட்டும் முழுதும் உண்மை. பூசலார் அவ்வளவு அழுந்தி நினையாவிட்டால், பல்லவனுக்குக் கோயில் கட் டும் எண்ணம் அப்போது உண்டாயிராது. எப்படியும் கச்சிக் கட்டிடம் இரண்டுபட்டுவிட்டது.

இந்த உண்மையைப் பார்த்தால், நாம் நினைக்கும் நினைப்பெல்லாம் நாமே நினைப்பன என்றும், நாம் செய் யும் செயலெல்லாம் நாமே செய்வன என்றும் கொள்

Koviloor Digital Library



வதற்கு இடமே இல்லைபோலத் தோன்றுகிறது. தெரிந்தோ தெரியாமலோ, உலகத்திலும் இப்படித்தான் சொல்லிக்கொள்கிறார்கள். ஏதாவது அரிய காரியம் செய்தவர்களைப் பாராட்டிப் பேசினால், அவர்கள், முகமனுக்காகவாவது, 'ஆ, நம்மால் என்ன இருக்கிறது? எல்லாம், பெரியவர்கள் நினைப்புத்தான்' என்று சொல்லக் கேட்கிறோம். அம் மொழி, முகமன்மட்டுமன்று; அதில் உண்மையுங் கலந்திருக்கின்றது என்றுதான் சொல்ல வேண்டும். யாரும் எதுவும் நினைப்பது வீண்போகாது என்பது ஆ, எவ்வளவு நுட்பமாயிருக்கிறது!

இதனால், இப்படி அகமாகவும் புறமாகவுங்கூட எதுவும் இரட்டை இரட்டையாய் நடைபெறும் உண்மை இனிது வெளிப்படுகின்றது.

*　　*　　*　　*

இந்த இரட்டைச் செல்வம் எக்காலத்துக்கும் பொது. அப்படியானால் இக்காலம்மட்டும் அதற்கு விலக்காய் விடுமா? தமிழ்த்தாய்க்கு நமது நாட்டில் இப்போது மாளிகை அமைக்கும் நினைவுகள் எப்படியோ தோன்றியிருக்கின்றன; தமிழ்நாடு இரட்டைச் செல்வத்தின் மதிப்பை நன்கு தெரிந்து பழைய காலத்திலிருந்தே விடாது போற்றிவருகின்றதன்றோ! ஆகவே, இரண்டு மாளிகைக்குரிய நினைவுகள், நினைவு வெளியில் உலவுகின்றன. தமிழ்த் தாய்க்கு, ஒன்றுக்கு இரண்டு கட்டிடங்கள் தோன்றுகின்றன என்றால், யாரும் வியப்படையாமலிருக்க முடியுமோ? வியப்புமட்டுமன்று; மகிழவுந்தான் வேண்டும். வியப்பதும் மகிழ்வதுமட்டும் போதுமா? அவரவராலான கிளர்ச்சிகளையும் உதவிகளையும் செய்யவுந்தான் வேண்டும்.

*　　*　　*　　*

'செல்வி'யின் இப்பரலிற் கடைசியில், 'செய்திகளுங் குறிப்புகளும்' என்னும் தலைப்பில், கலைச்சொல் லாக்கம்

Koviloor Digital Library



எனவும் நல்வாழ்க்கைக் கழக வேண்டுகோள் எனவும் இரண்டு குறிப்புகள் வருகின்றன. தமிழ்த் தாய்க்கு முறையே அகமாளிகையும் புறமாளிகையும் அமைக்கும் முயற்சியை அவை குறிக்கின்றன எனலாம்.

தமிழ்மொழிக்கு அரசினர், கலைச் சொற்களை உருவாக்கி அமைப்பதென்பது, சிறப்பாக அகத்தினுற் செய்யவேண்டிய திருப்பணி; மேலும் அது, முதன்மை யாக ஒலிவண்ணமானது; ஆதலால், தமிழுக்கு அப் பணியினுல் அமையும் மாளிகையை 'அகமாளிகை' என் பது பொருந்தும். நல்வாழ்க்கைக் கழகத்தாரது முதல் வேண்டுகோள், தமிழ்நாட்டின் தலைநகரான சென்ன பட்டினத்தில், தமிழ்த்தாய் சிறக்க வீற்றிருக்கும்பொருட் டுத் 'தமிழ் மண்டபம்' ஒன்று அமைக்கவேண்டும் என் பது; இது 'புறமாளிகை' என்பது வெளிப்படை.

ஆனல் இதில் ஒரு வியப்பு! தமிழ்த் தேவிக்குக் கலைச்சொல் லாக்க மென்னும் அகமாளிகை அமைக்க முயலுவோர், பூசலாரைப் போலப் பொருளில்லாத வரல்லர்! தமிழ் மண்டப மென்னும் புறமாளிகையை அமைக்க விரும்புவோர், பல்லவனைப்போலப் பொரு ளுள்ளவரு மல்லர்! எப்படியிருக்கிறது இந்த இயைபு!

ஆயினும், இவ்வகையில் உண்மையில்லாமலில்லை. ஒரு நாட்டுக்கு அரசினர் உயிர்போன்றவராவர். 'மன் னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'. அப்படியானல், நாடு உடம்புபோன்றதாகின்றது. உயிர் அகப்பொரு ளாதலால் அதுபோன்றவர் அகமாளிகை அமைக்கக் கருதுவதும், உடம்பு புறப்பொருளாதலால் அதுபோன்ற வர் புறமாளிகை அமைக்க விரும்புவதும் ஒரு வகையிற் பொருந்துந்தான். நல்வாழ்க்கைக் கழகத்தார், நாட்ட வரையே வேண்டிக்கொள்கின்றனர்.

* * * *

Koviloor Digital Library



எதெதற்கோ பெரிய பெரிய மாளிகைகளெல்லாம் இருக்கும் தமிழ்நாட்டுத் தலைநகரில் தமிழுக்கென்று ஒரு சிறந்த மாளிகை இல்லாமலிருப்பது எப்படியிருக்கிறது! தமிழகத்தார் உடனே இவ்வகையிற் பங்கெடுத்துக் கொண்டு முயன்று உதவி, இதனை விரைவில் நிறை வேற்றிவைக்க வேண்டுவது கட்டாயமாகும். வேண்டும் ஏற்பாடுகட்குத் தலைவர்கள் உடனே கருத்தூன்றவேண்டு மென்று அக் கழகத்தார் வேண்டிக்கொள்வது, மிகவும் உருக்கமாயிருக்கிறது!

பூசலார் கட்டிடமும் பல்லவன் கட்டிடமும் விரைவில் ஒரே காலத்தில் நிறைவேறிவிட்டன. இறைவன் திரு வுள்ளங் கொள்ளும்படி திருத்தமாகவும் இருந்தன. தமிழ்த்தேவிக்கு அமைக்க முயலும் இக் கலைச்சொல் லாக்க மாளிகையும் தமிழ் மாளிகையும் அங்ஙனமே ஒரே காலத்திலேதான் முடியுமோ, அல்லது ஒன்றையொன்று முந்துமோ? தமிழ்த்தேவி மனமாரத் திருவுள்ளங்கொள் ளும்படி திருத்தமாய் அமைகின்றனவோ, என்னவோ? அகமாளிகை திருத்தமாய் அமைந்தாற்றான் புறமாளிகை யின் திருத்தத்துக்கும் மதிப்பிருக்கும். எதற்கும் தமிழ் மக்களின் ஆவல் இவற்றிற் பெரிதாயிருக்கின்றதென் பதுமட்டும் நன்றாய்த் தெரிகின்றது. எனினும், அந்த ஆவல் இன்னும் பெருகிப் பொங்கிப் பெருங்கிளர்ச்சி யாய்ப் பெருக்கெடுத்து வழிந்தோடவேண்டும். ஊக்கத் துக்கு ஏற்றபடிதானே ஆக்கம்!



Koviloor Digital Library

# அரித்திப்பு

"த. இராமநாத பிள்ளை B. A."

சீனர் தமிழர் எகுபதியர் சுமேரியர் என்னும் பண்டை மக்கட் கூட்டத்தினருடைய நாகரிகங்களைக் கண்டு உணர்ந்து பயனெய்தியதுமன்றி, அவற்றை மேனாட்டாருக்கு உதவியோர் யவனரே. யவனர் பலகலைகளையும் ஆராய்ந்து அரசியல் வகுத்துச் செழிப்புற்றிருந்த காலம் 'சோக்கிறேற்றிசு' வாழ்ந்த காலமாகும். 'பாசஞானம்' உணர்ந்த யவனர் 'பதிஞானம்' விழைதல் இயல்பே. 'பதிஞானம்' விழைவோருள் ஒரு கூட்டத்தினர் ஒழுக்கநூ லுணர்ச்சியே இம்மை வாழ்க்கைக்கு மிகக் கட்டாயமென எண்ணித் 'தத்துவங்களை' வரையறுப்பதிலும் பார்க்க, மக்கள் யாவர்க்கும் பயன்படக் கூடிய அறத்தாற்றினை வரையறுத்தல் சாலவுஞ் சிறந்ததெனத் துணிந்தனர். அறத்தாறுதான் யாதென வரைவிலக்கணங் கூற முயன்றோருள் 'அரித்திப்பு' என்னும் ஞானியும் ஒருவராவர்.

அரித்திப்பு என்பவரின் பிறப்பிடம் 'ஆபிரிகாக்' கரைக்கு அண்மையிலுள்ள 'சைறீனி' என்னும் சிறுதீவு. அத் தீவின் முல்லை நிலங்களில் வீசுங் காற்று உயிரை வளர்க்குந் தன்மையது எனவும், அத் தென்றலை உட்கொண்டாலே அங்குள்ள குதிரைகள் சூல் கொள்ளும் எனவும் கூறுப. 'போகத்'திற்குரிய அந் நாட்டிற் பிறந்த ஆசிரியர் இம்மை வாழ்க்கையைச் சிறப்பித்து இயம்புதல் பொருத்தமே. ஆசிரியர் அரித்திப்பு ஐம்புல வின்பங்களை நுகர்தலே இன்பவாழ்வு என்னும் ஒருவகை 'உலகாயதமதத்தை' நிலைநாட்டி அம் மதத்தைப்பற்றி உரை செய்வதில் ஒப்பாரும் மிக்காருமின்றிப் புகழ் பெற்றதுமன்றித், தம் வாழ்க்கையாலும் இன்பமே வாழ்க்கையின் மாநோக்கமாகுமென உணர்த்தினர். இன்றும் அவருடையகொள்கைகளைப் பாராட்டி உரைசெய்யும் அறிஞர் பலர் உளராகலின், அவருடைய மதத்தை ஆராய்தல் பயனுடைத்தென்க.

ஐம்பொறியடக்கலே வாழ்க்கையின் மாநோக்கமென விளம்புவோரைக் கண்டிப்பதில் அரித்திப்புத்தலைசிறந்தவராகத் திகழ்ந்தார். ஆசிரியரது பேச்சே நகை விளைக்குந் தன்மை

Koviloor Digital Library



யானது. ஒருவன் தன்னிடம் இல்லாத பொருள்களில் இன்பம் நுகரமுயல்வதிலும், உள்ள பொருள்களில் இன்பம் நுகர முற்படுதலே அறிவின்பாற்படு மென்பர்.

ஒலிம்பு மலேயில் எழுந்தருளியிருக்கும் தேவரின்பெயரால் தேசியக் களியாட்டாக நிறுவப்பட்ட விழாவை அவர் பார்க்கச் சென்றபொழுது, சோக்கிறேற்றிசு என்னும் ஞானியின் நட்பைப் பெற்று அவருடைய ஞான அருண்மொழியையும் ஆவலுடன் கேட்டார். மேலும், தோன்றி நின்றழியும் இவ் வுலகில், கண்ணிமைப்பொழுதில் எழும் பொறியுணர்வாகிய வாயிற்காட்சி யொன்றுமே மெய்ப்பொருள் எனப் புறுற்றக் கூறுசு வற்புறுத்தியதையும் சிந்தித்துத் தெளிந்தனர். அக் காலத்தில் ஒழுக்கத்திற்கு அடிப்படையாக எண்ணப்படும் கொள்கைகள் பல போலியென்பதைச் சோக்கிறேற்றிசு உணர்த்த ஆசிரியர் உணர்ந்தனர்.

சோக்கிறேற்றிசு அறத்தின் இலக்கணத்தை உணர்தலே ஞானமென மொழிந்தனர். இன்பநுகர்ச்சி அறத்தாற்றினுக்குக் கருவியாகுமேயொழிய மாநோக்கமாகாதெனவும் ஐம்புல வின்பத்திலும் உட்கரணங்களாற் பெறப்படும் இன்பம் மேன்மையானதெனவும் உரைத்தபொழுதிலும், அவர் மாணவராம் அரித்திப்பு, அவர்தம் மதத்தைத் தழுவாமல் ‘கல்வியால் இன்பம் விளையக் கூடும்; ஆனல் ஐம்புல வின்பத்திற்கு ஒருபோதும் அது நிகராகா’தெனத் தம் மதம் நாட்டினர். அறிஞர் புகழ்ந்தேத்தும் கணக்குநூ லுணர்ச்சியால் விளையும் இன்பத்தினும் பண்டங்களே ஆக்கப் பயிலுதலால் விளையும் இன்பம் சிறந்ததெனவும், கணக்கு முறைகளேக் கற்பதினும் கண்ணல் கண்டறியக் கூடிய ஐம்புல வின்பத்தைத் தேடுதலே நன்முயற்சியாகுமென்றும் செப்பினர்.

அன்றியும், நன்மை என்பது ஒப்பு நோக்கியே அறியப் படுவதொன்றாதலின் மேலான நன்மையென்று ஒன்று இல்லே யெனவும், மேலான நன்மை என்பது ஒவ்வொருவரின் மயக்க வறிவில்தோன்றும் ஒரு பொருளாதலாலும், புத்தியால் அதனே வரையறுக்க இயலாதாதலாலும் ஐம்புலன்களால் பெறப்படும்

Koviloor Digital Library



உணர்ச்சியே நன்மைக்கும் தீமைக்கும் உள்ள வேறுபாட்டை உணர்த்துதற்குரிய கருவியாகும் எனவும் விளம்பினர்.

அவ்வவ் வேளையில் எழும் உணர்ச்சியையே எமது மனம் பற்றிப் பற்றி அறியுமாகலின், சென்ற காலத்தில் நிகழ்ந்த காட்சிகளாலும் எதிர்காலத்தில் நிகழும் காட்சிகளாலும் யாம் ஒரு பயனும் எய்தமுடியாதெனச் சாற்றினர். ஆகவே நிகழ்காலத்தில் எழும் இன்பங்களை நுகர்தலே தலைசிறந்த ஒழுக்கமாகும். இன்பங்களுள் தலையாய காம நுகர்ச்சிக்குக் காரணமாகும் காதல் முயற்சியே முதன்மையான மாநோக்கமாகும். என்னை? ஒருவன் வாழ்நாள் முழுவதும் இன்பமும் துன்பமுமே பற்றித் தொடர்கின்றன. இன்பத்திற்குக் காரணம் ஞானம்; துன்பத்திற்குக் காரணம் பேதைமை; இன்பம் யாவராலும் விழையப்படும் பொருள்; துன்பம் யாவராலும் வெறுக்கப்படும் பொருள். ஆதலின், இன்பநுகர்ச்சியே மாநோக்கமாகுமென்பதைக் கடைப்பிடிக்க.

அரித்திப்பு என்பவரின் பரம்பரையினருள் துலங்கும் 'அப்பிக்கூறசு' என்பவர்விளம்பிய உரை ஒன்று வருமாறு: 'உடம்பு நோயின்றியிருக்க, மனம் கவலைக் கிடங்கொடாதிருக்குமாயின், அதுவே இன்பநிலை.'

இத்தகைய நிலை முயற்சியற்ற நிலையாகலின், அதனை அரித்திப்பு நிறைவான நிலை எனக் கருதவில்லை. இன்பநிலை என்பது நாம் நாடி முயற்சித்துப் பெறும் நிலையென விளம்பினர்.

நல்கூர்ந்தோனாயினும் சரி, செல்வனாயினும் சரி; ஒருவன் ஞானியாயின் அவ் வின்ப நிலையை அடையலாம். ஒருவன் தன் இன்பங்களுக்கு அடிமையாகாமல் தன் வயத்தனாகித் தான் விரும்பியபொழுதுமட்டும் விரும்பிய இன்பங்களில் இன்புறும் இயல்பினனாதல் வேண்டும். இன்பத்துள் இன்பம் விழையாமலும் துன்பத்துள் துன்புறாமலும் இருக்கப் பயிலல் வேண்டும் என்பது அவர் கருத்துப் போலும். 'தேவுக்களை யாம் குறையிரந்தேம். அவர்க்கும் இத் தூய்தல்லாத வுலகிற்கும் ஒரு தொடர்பும் இல்லை. இன்பங்கள் யாவும் தோன்றி நின்றழியுந் தன்மையவாகலின், அவற்றை உடனே நுகர்ந்து மகிழ்க' என்பது அவர் சொல்.

Koviloor Digital Library

# தமிழில் ஆய்த எழுத்தைக் குறிக்கும் முறை

"வீ. குமாரவேலுப் பிள்ளை"

பிறமொழிப் பெயர்க் குறியீடுகளை அவற்றிற்குரிய ஒலி பிறழாவாறு தமிழில் எழுதும்பொருட்டு வரிவடிவில் புள்ளி வைக்கும் முறையொன்றை முன்னோர் வகுத்தனர். வழிவந்தோர் அம்முறையைப் பேணுதுவிட்டமையால் இக்காலத்தில் தமிழ்மக்கள் அதனை இழந்துநிற்கின்றனர். இந்நிலையில் காலஞ் சென்ற திரு. மாணிக்க நாயகர் அவர்கள் பழைய கல்வெட்டெழுத்துக்களைத் துருவி ஆராய்ந்து அம்முறையை அரிதிற் கண்டதாகக் கூறினார்கள். ஆனால், அதனைக் காட்டிச் சென்றிலர். ஆனதுபற்றியே இச் சிறு ஆராய்ச்சிக் குறிப்பு எழுந்தது.

தமிழ் மொழி, மக்களிடை முதன்முதல் இயற்கையையொட்டி எழுந்த மொழி. அது நுண்மாண் நுழைபுலமுடைய தமிழ் ஆன்றோர்களால் இயல்முறை அமைக்கப்பெற்றுக் காப்பாற்றி வரப்பெற்றது. இவ் வுண்மை நடுவுநிலை குன்றாமல் மொழியாராய்ச்சி செய்யும் அறிஞர்கட்கெல்லாம் நன்கு புலனும்.

தமிழ்மொழிக்கு எழுத்தியல் முறை எடுத்து விளக்கப் புகுந்த ஆன்றோர், வழக்கிலுள்ள தமிழ்ச் சொற்கள் எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்தனர். அவ்வாராய்ச்சியின் பயனாக முப்பது முதலெழுத்துக்களையும் மூன்று சார்பு எழுத்துக்களையும் கண்டனர். அவற்றுள் முதலெழுத்துக்களை அவற்றின் இயல்வேற்றுமை கருதி உயிரெழுத்தென்றும் மெய்யெழுத்தென்றும், இருவகைப்படுத்தினர். அங்ஙனம் இருவகைப்படுத்தப்பெற்ற முப்பதெழுத்துக்களையும் சில ஒழுங்கு முறை பற்றி அகரமுதல் னகர இறுவாயாக அமைத்தனர். அவற்றைப் பற்றிய குறிப்புக்கள் அனைத்தையும் தமிழ் எழுத்தியல் நூல்களில் காணலாம்.

Koviloor Digital Library



சார்பெழுத்தாவன சார்ந்துவரல் மரபினவாம். அவையும் மொழிக்கு உறுப்பாகிய எழுத்தாய் அமைதலின் அவற்றைச் சார்பெழுத்தென அமைத்துக்கொண்டனர். அவற்றை வரிவடிவில் புள்ளியால் விளக்கினர். அத்தகைய சார்பெழுத்து மூன்றனுள் ஒன்று ஆய்தம். அது மூன்று பகுதியையுடையதென்பர். இங்கு அத்தகைய ஆய்த எழுத்தின் வரலாற்றைச் சிறிது ஆராய்தல் வேண்டும்.

அங்கே, அஞ்சு, அண்டை, அந்தில், அம்பு, அன்று என்பனபோன்ற சொற்களில், மெல்லின மெய்யைத் தொடர்ந்துவருகிற ககர, சகர முதலிய வல்லெழுத்துக்களைத் தமிழ்மக்கள் சிறிது மென்மையாக ஒலிக்கின்றனர். அவ்விடத்தில் அங்ஙனம் வல்லெழுத்தைச் சிறிதே மென்மையாக்குகின்ற ஒரு நுட்ப எழுத்தைத் தமிழ் ஆன்றோர் தங்கள் நுண்ணறிவால் கண்டனர். அந்நுட்ப எழுத்திற்கு 'உள்ளதன் நுணுக்கம்' என்னும் பொருளமைந்த 'ஆய்தம்' என்ற பெயரை வழங்கினர். அதுவே ஆய்த எழுத்தின் முதற் பகுதியாய் அமைந்துளது.

ஆகு, மாசு, மார்பு முதலிய சொற்களில் உயிரெழுத்துக்களையும் இடையின மெய்களையும் தொடர்ந்துவரும் வல்லெழுத்துக்களைத் தமிழ்மக்கள் வேறோராற்றால் சிறிது மென்மையாக ஒலிக்கின்றனர். அவ்விடத்திலும் ஒரு நுட்ப எழுத்தை ஆன்றோர் கண்டனர். அதனை ஆய்த எழுத்தின் இரண்டாம் பகுதியாகக் கொண்டனர்.

எஃகு, அஃது என்பன போன்றவற்றில் உயிர்க்குறிலுக்கும் வல்லெழுத்திற்கும் இடையே அரையளபு பெற்று நிற்கும் ஆய்த எழுத்தை மூன்றும் பகுதியாகக் கொண்டனர். இம்மூன்றும் பகுதி ஆய்த எழுத்தைக் குறிக்கும் புள்ளி இக்காலத்தில் வழக்காற்றில் இருக்கிறது. ஆகவே ஆய்த எழுத்தின் முதலிரு பகுதிகட்கே புள்ளிகள் தேடி அமைத்துக் கொள்ளல் வேண்டும்.

ஆய்த எழுத்தின் முதற் பகுதிக்கு ஒரு புள்ளியும் இரண்டாம் பகுதிக்கு இரு புள்ளியும் அமைத்துக்கொள்ளல் இக்காலத்திற்கு ஏற்றதொரு முறையாய் அமையும் என்பதில்

Koviloor Digital Library



ஐயம் இல்லை. அம் முறையைக் கொள்ளின் எழுத்துக்களை அடியிற் கண்டபடி குறித்துக்கொள்ளலாம்.

I. முதற்பகுதி ஆய்தம் பெற்ற எழுத்துக்கள் :

| | | | | (கையெழுத்தில் குறிக்கும் முறை) |
|---|---|---|---|---|
| | Ga | அங்கே | ०க | cக |
| ஜ | Ja | அஞ்சு | ०ச | cச |
| | Da | அண்டை | ०ட | cட |
| | Tha | அந்தில் | ०த | cத |
| | Ba | அம்பு | ०ப | cப |
| | | அன்று | ०ற | cற |

II. இரண்டாம் பகுதி ஆய்தம் பெற்றவை :

| | | | | |
|---|---|---|---|---|
| ஹ | Ha | அகரம் | ஃக | ஃக |
| ஸ | Sa | அரசன் | ஃச | ஃச |
| ஷ | Sha | | ஃட | ஃட |
| | Tha | அஃது | ஃத | ஃத |
| | Pha | ஏர்பு | ஃப | ஃப |
| | | உறு | ஃற | ஃற |
| | Fa | | ஃவ | ஃவ |

III. இருபகுதி ஆய்தமும் பெற்றது :

| | | |
|---|---|---|
| Za | ஃ̊ ச | ஃச |

குறிப்பு: ஆய்தம் பெறுமுன் வல்லெழுத்து உயிர்க்கு மாற்றை அடியில் வரும் சொற்களைச் சொல்லிக் கண்டுகொள்க. அற்றம், பக்கம், அச்சம், அப்பம், அத்தன், அட்டை, மாட்சி.

Koviloor Digital Library

# திருமணம்

" திருச்சி ம. ச. கலியாணசுந்தரம் பிள்ளை B. A. B. L. "

மலைகள் விண்ணைத் தொட்டு முத்தமிடுகின்றன. ஆறுகள் விரைவுடன் சென்று கடலில் கலக்கின்றன. அலைகள் ஒன்றை யொன்று அணைத்துக்கொள்கின்றன. அழகிய பசுங்கொடிகள் பருத்த மரங்களைக் கட்டித் தழுவுகின்றன. பறவைகள் ஆணும் பெண்ணுமாக ஒன்றுகூடி வாழ்கின்றன. இத்தகைய இயற்கைத் தோற்றங்களில் நாம் அழகும் இன்பமும் ஒருங்கு சேர்ந் திருத்தலைக் காண்கிறோம்.

இனி, மக்களுலகில் அழகும் இன்பமும் ஒருங்கிருத்தலை ஓர் ஆணும் ஒரு பெண்ணும் சேர்ந்து நடத்தும் இல்வாழ்க்கை யிலேதான் நாம் காணமுடிகிறது. பெண்ணினிடம் நாம் காண்பன அழகும் இனிமையும்; ஆணினிடம் நாம் காண்பன வீரமும் வலிமையும். அழகும் இனிமையும், வீரத்துடனும் வலிமையுட னும் அன்புகாரணமாகச் சேருமிடத்து மூவுலகையும் ஆளக் கூடிய ஆற்றல் ஏற்படுகிறது. இதனாலன்றோ இல்வாழ்க்கையிலீடு பட்ட மனமொத்த கணவனும் மனைவியும் எவ்வகை இன்னல் களையும் புன்முறுவலுடன் எதிர்த்து வெற்றி பெறுகின்றனர்!

பொன் மலராயினும் மணமில்லாவிடின் அதனை உலகில் எவரும் விரும்பார். மலருக்குப் பயனைத் தருவது மணமேயா கும். இறைவனுடைய படைப்பாகிய தருவின் மலர்களாகிய மக்களுக்குப் பயனளிப்பது, அவர்கள் ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்து இல்வாழ்க்கையில் ஈடுபடுவதேயாகும். இதுபற்றியே சான்றோர், ஒருவனை ஒருத்தியுடன் இல்வாழ்க்கையில் சேர்த்து வைக்கும் செயலை "மணம்" என்று அழைத்துள்ளனர்.

இயற்கையாகவே மணமில்லாத மலருக்கு மணம் ஊட்ட முயற்சிப்பது பயனற்ற செயலாகும். அதுபோன்றே உண்மை யான அன்பில்லாத ஓர் ஆணையும் ஒரு பெண்ணையும் இல்வாழ்க் கையி லீடுபடும்படி சேர்த்து வைப்பதும் எவ்வகைப் பயனை யும் அளிக்காது. மணமென்பது, இரண்டு உயிர்களின் சேர்க் கையேயன்றி, இரண்டு உடல்களின் சேர்க்கையாகாது.

Koviloor Digital Library



மணத்திற்கு அடிப்படையாகவுள்ள அன்பு, வீட்டுக்கும் வித்தாகிறது. இல்வாழ்க்கையில், கணவன் தனக்கென யாதும் விரும்பாது தன் மனைவியின் மனமகிழ்ச்சியொன்றையே குறியாக வைத்துக்கொண்டு செயலாற்றிவருகிறான். மனைவியும், கணவனுக்கு இன்பம் பயக்கத்தக்கவைகளையே செய்து வருகிறாள். இவ்வாறாக அவர்களிடையே தன்னலமற்ற, அசைதலில்லாத, தூய அன்பு ஏற்படுகிறது. இவ்வாறு பிற உயிர்களிடத்தில் அன்பு செலுத்தப் பழகிக்கொண்ட கணவனுக்கும் மனைவிக்கும் கடவுளிடம் அன்பு செலுத்துவதும் மிக எளிதாகிறது. அன்புத் தளையில் அகப்படும் கடவுளும் அவர்கள் அன்பின் வயப்பட்டு, அவர்களுக்கு அருள்புரிகிறார். ஆகவே, அன்பு காரணமாக ஏற்படும் மணமானது இம்மையில் இன்பத்தையும் மறுமையில் வீடுபேற்றையும் கொடுக்கவல்லதாய் இருக்கிறது. தமிழர்கள் இத்தகைய மணத்தை மேலுமேலும் போற்றி வருவார்களாக!



Koviloor Digital Library

# கொன்றை வேந்தன்

"இளவழகனார்"

ஔவையார் சிறந்த பெண்மைநலம் உடையவர்; அதனாலேதான்

"வீரன் கேண்மை கூரம் பாகும்"

என்று வீரத்தன்மையை இவ்வளவு சுவைத்துக் கூற நேர்ந்தது. ஆயினும், அப் பெண்மை என்னும் மென்மையிலேயே உள் உரமும் உடையவர்.

"உரவோ ரென்கை இரவா திருத்தல்"

என்பது அவர் வீரவுரையன்றோ!

ஔவையார் எளிய வாழ்க்கை நிலையை உடையவராயினும், தன்மதிப்பு மிகுதியுமுடையவர்.

"தோழ னோடும் ஏழைமை பேசேல்"

என்று எத்துணைக் கண்ணியமாய் ஒரு தொடர் அவர் திருவுள்ளத்தினின்றும் எழுகின்றது!

இங்ஙனமே, உரிமைவாழ்விலும் அவர் கருத்துள்ளவராயிருக்கின்றார்.

"தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது"

என்பதனால் அது தெளியப்படுகின்றது.

இனி,

"நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை"

என்று இவர் ஒரு சிறந்த அறிவுத் தொடரையும் அருளிச் செய்திருக்கிறார். இது பொதுவுடைமைக் கருத்துப் போன்றது. பரந்த நோக்கமுடையது. எல்லார்க்கும் வாழ்வு உண்டாக்க ஆணையிடுகின்றது.

இந் நோக்கத்துக்கு, நாட்டின் மக்கள் தொகை எவ்வளவாயினும் ஊனமில்லை. கருத் தடைக்காக மலடு செய்துகொள்ளுங் கருத்துக்களில் ஔவையாருக்கு உடன்பாடில்லை.

Koviloor Digital Library



" சந்ததிக் கழகு வந்திசெய் யாமை "

என்று அவர் கருதுகின்றார்.

மக்கள் தொகை எவ்வளவாயினும் அவரவரும் உழைத்தே உண்பது என்று வைத்துக்கொண்டால், தொகைப் பெருக்கத்தால் இடருண்டாகாது.

" போனக மென்பது தானுழந் துண்டல் "

என்பதனால், உழைப்பை அவர் நன்கு வற்புறுத்துகின்றார்.

உழைப்புகளிற் சில, பொது உழைப்புகளாய் நிகழ்ந்து அரசறிய விளங்கவேண்டுமென்பதும் அவர் எண்ணம்.

" கொற்றவ னறிதல் உற்றிடத் துதவி "

என்பது அவர் திருமொழி. ' நல்வழி ' யென்னும் மற்றொரு நூலிலும், ' அரசறிய வீற்றிருக்கும் வாழ்வை' இவர் எடுத்தோதுவர்.

மறுவுலக வாழ்வுக்காக இவ்வுலகவாழ்வை வருத்திக் கொள்ள வேண்டுமென்பது ஔவையாரின் கருத்தன்று; இழந்துவிட வேண்டுமென்பதுமன்று; வாழுமுறையில் நன்றாய் வாழவேண்டுமென்பதுதான் அவர் கருத்து.

" அஃகமும் காசும் சிக்கெனத் தேடு
திரைகட லோடியும் திரவியம் தேடு
நீரகம் பொருந்திய ஊரகத் திரு
பாலோ டாயினும் கால மறிந்துண்
மெத்தையிற் படுத்தல் நித்திரைக் கழகு "

என்னுந் தொடர்கள் அக் கருத்தை நினைவுகூர்விக்கும். 'பொருள் தேடவேண்டும்; நீர்வசதியுள்ள ஊராகப் பார்த்துக் குடியிருந்துகொள்ள வேண்டும்; பாற்சோறும் காலத்தில் உண்ணவேண்டும்; மெத்தையிற் படுத்துக்கொள்ளவேண்டும்' எனவெல்லாம் ஔவையார் அருளிச்செய்வதைப் பார்த்தால், அவரையே இவ் வுலக இயக்கங்களுக்குத் தலைவராகத் தெரிந்து கொள்ளலாமோ எனவுந் தோன்றும்.

Koviloor Digital Library



ஆனால், அவர் இவ் வுலகவாழ்வை ஒரு சுமையாக ஆக்கிக் கொள்ளவும் இடந் தரவில்லை யென்பதைக் கருத்திருத்த வேண்டும். மக்கள் இனிதாகவும் எளிதாகவும் நல்வாழ்வில் வாழவேண்டுமென்றே அவர் விரும்புகிறார். அதற்கு நல்ல உள்ளப் பண்புகள் வேண்டும்.

"செய்தவம் மறந்தால், கைதவம் ஆளும்."

என்பர். 'செய் தவம்' என்பது இங்கே நற்பண்புகள் என்று ஓரளவுக்குப் பொதுவாக வைத்துக்கொள்ளலாம். நல்ல உள்ளப் பண்புகள் தாமே உண்டாகமாட்டா. அதற்கு, அவ் வியற்கையையுடைய திருவுருவத்தோடு உள்ளத்தை அடிக்கடி இயைத்துக்கொள்ளவேண்டும். செம்மையானவனோடு உள் ளம் படரும்போதுதான் உள்ளமும் செம்மையடையும். 'செம்மை' என்றாலும் 'சிவம்' என்றாலும் ஒன்றுதாம்.

"சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு"

என்று பல சிறந்த பொருள் நுட்பங்கள் பொதுள ஔவை யார் அருளிச்செய்ததும் இதன்பொருட்டேயாகும்.

அப்போது, உண்மையான அறிவுநிலை கைகூடும். அந் நிலையிற் சொல்லடக்கம், மன அடக்கம், செயலடக்கமென்னும் மோன நிலை மேலிட்டு, அச் சொல்லும் செயலும் நினைவு மெல்லாம் நடைபெறவேண்டிய அளவுக்குத், தக்க காலங் களில் தக்க இடங்களில் தக்க முறைகளில் நடைபெறும். இம் மோன நிலைமையே ஞான எல்லையை அடைந்ததற்கு அடையாளம்.

"மோன மென்பது ஞான வரம்பு"

என்று ஔவையார் எத்தனையோ ஆழமாக அருளிச் செய் திருக்கிறார்.

இந் நிலை கைவரும்போதுதான் இவ்வுலகவாழ்வு ஒரு சுமையாகத் தோன்றாமல், இனிதாகவும் எளிதாகவும் நடை பெற்று உண்மை இன்பம் தருவதாயிருக்கும். கொன்றை வேந்தனில் வரும் நுட்பதிட்பங்கள் இங்ஙனமெல்லாம் எவ்வளவோ அருமையாயிருக்கின்றன.

Koviloor Digital Library



"ஐயம் புகினும் செய்வன செய்
"கிட்டா தாயின் வெட்டென மற
"கெடுவது செய்யின் விடுவது கருமம்
"கேட்டில் உறுதி கூட்டும் உடைமை
"தேடா தழிக்கின் பாடா முடியும்
"நுண்ணிய கருமமும் எண்ணித் துணி
"பையச் சென்றால் வையந் தாங்கும்
"மொழிவது மறுக்கின் அழிவது கருமம்"

என்பவை போல்வனவெல்லாம், வாழ்வைத் திறமையாகவும் இன்பமாகவும் நடத்திச் செல்வதற்கான நன்முறைமைகளை திருத்தமாகவும் ஆணித்தரமாகவும் வெளியிடுகின்றனவா யிருக்கின்றன. ஒவ்வொன்றும் "மூத்தோர் சொன்ன வார்த்தை யமிர்த"மேயாம். இவற்றைக் கடைப்பிடித் தொழுகினால் வாழ்க்கை திறமானதாயிருக்கும்; கவலையிராது.

கொன்றை வேந்தன் ஒரு சிறிய நூலாயிருந்தாலும் வாழ்வின் பல்வகை நுணுக்கங்களும் அதன்கண் எடுத்து ஆராயப்பட்டிருக்கின்றன. திட்டமாகவும் உறுதியாகவும் ஐயுறவின்றித் தெளிவுபடுத்தப்பட்டிருக்கின்றன. எல்லாம், பொருந்திய சிறந்த வரையறுத்த முடிபுகள்; முடிந்த நிலையில் முடிக்கப்பட்ட முடிபுகள்.

திருவள்ளுவர் நூலுக்கும் ஔவையார் நூலுக்கும் ஒரு முதன்மையான வேறுபாடு உண்டு. கூர்ந்து நோக்குவார்க் குத் திருவள்ளுவர் கருத்துக்கள் இன்னவை யென்பது திட்ட மாகவே வெளிப்படுமாயினும், சில இடங்களில், பொதுமைக் குரிய சொற்களைப் பெய்து அக் கருத்துக்களை அவர் எளிதிற் புலப்படவொட்டாதபடி ஆழத்தில் இருத்திவிடுவர்; எல் லார்க்கும் பொதுவாக உரைக்கும் பொறுப்புடையவ ராதலின் அவர் திருக்குறள் மொழிகள் அங்ஙனம் அமைந் திருக்கின்றன. ஔவையார்க்கு அப் பொறுப்பு இல்லை; தமதுள்ளத்தில் முடிக்கப்பட்ட கருத்துக்களை அவற்றிற்கேற்ற திட்டமான சொற்கள் கொண்டு திறப்பாக வெளியிடுவதில் ஔவைக்கு ஒன்றுந் தடையில்லை; அவர் யார் பொருட்டும் மயங்கவேண்டிய கட்டாயமில்லை. அதனால் அவர் வாய்

Koviloor Digital Library



மொழிகள் வெட்டு ஒன்று துண்டு இரண்டாயிருக்கின்றன. அன்றேல்,

"இல்லற மல்லது நல்லறம் அன்று"

என்று திருவள்ளுவரினுந் துணிவாக இல்லறமே சிறந்த தென்று திட்டமாக வெளியிடுவரோ?

"சிறைகாக்குங் காப்பு எவன்செய்யும்? மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை"

என்று திருவள்ளுவர் சிறைக்காப்புக்கும் பைய இடங்கொடுத்துச் சென்றாராக, ஔவையார்

"காவல் தானே பாவையர்க் கழகு"

என்று அதனைத் திறப்பாகவும் உறுதியாகவும் வலியுறுத்திச் சொல்ல முன்வருவரோ? தங் கருத்துகளை இவர், தாராள மாக வெளியிடுகின்றவரா யிருக்கின்றார்.

"உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கு அழகு
கற்பெனப் படுவது சொல்திறம் பாமை
காவல் தானே பாவையர்க்கு அழகு"

என்று பெண்கள் வாழ்க்கை முறையைப் பற்றி மிகவுந் திட்டமான கருத்துக்களை இவ்வளவு துணிவாக ஆடவர் வெளியிடுதல் சிறக்குமோ? 'உண்டி' என்பதற்குப் பொது வாக 'நுகர்ச்சி' என்பது பொருள்.

ஔவையார் மிகவுங் கண்டிப்பானவர்; தெளிவும், யாரையும் எதிர்பாராத எளிய வாழ்க்கையுமே அதற்குக் காரணம். ஆ, அவரல்லரோ நம் வாழ்வை முன்னேற்றுபவர்!

இனி

"வளவனாயினும் அளவறிந்து அழித்து உண்"

எனவும் ஒரு தொடர் கொன்றைவேந்தனில் வருகின்றது. இதிலிருந்து, ஔவையார் சோழநாட்டிலேயே மிகுதியாய் இருந்தவர் என்பதும், இவர் காலத்திற் சேர பாண்டிய அரச ரினுஞ் சோழ மன்னனே வளம் மிகுந்து சிறந்திருந்தான் என்பதும் உன்னியறிதல்கூடும்.

(அடுத்த இதழில் 'மூதுரை' வரும்.)

Koviloor Digital Library

# பயிர் செய்தல்

## " வேங்கடாசலம் "

## 8. உழவு

வேர்களின் மூலமாகப். பயிர்கள் நிலத்தினின்றும் உணவைப் பெறுகின்றன. ஒரு செடி செழிப்பாக வளரவேண்டுமானல் அதற்கு வேர்கள் ஏராளமாக இருக்கவேண்டுவது இன்றியமையாதது. அங்ஙனம் அவை பெருகுவதற்கு மண் இளக்கமாக இருக்கவேண்டும். மண் குவியலில் (போடுமண்) செடிகள் மிகவும் செழிப்பாக வளருவதைக் காணலாம். அதற்குக் காரணமென்ன? (1) வேர்கள் பெரிதாக வளர்வதற்கும் அவை மண்ணில் ஆழமாக இறங்குவதற்கும் இடந்தருவது. (2) பயிருணவு மிகுதியாகக் கிடைப்பதுடன் வேர்கள் பின்னும் பெருக இடமேற்படல். (3) மண் இளக்கமாக இருப்பதால் தாதுப்பொருள்கள் எளிதிலுட்கொள்ளப் படக்கூடிய நிலைமையிலிருத்தல். (4) மட்குவியல் விரைவில் இறுகாதிருத்தல் (5) நீர்ப்பதம் அதிக நாளைக்கு நீடித்திருத்தல். இவ்வளவு பகுதிகளும், இடப்படும் பயிர்வகையிலும் சிந்திக்கப்படவேண்டும்.

நிலத்தில் மண் இளக்கமாயிருப்பதற்கு உழவு இன்றியமையாதது. அதுவும் ஆழமாக உழுதல் வேண்டும். ஒன்றிரண்டுதரம் மட்டிலும் உழுவதனுல் ஒரு மழை பெய்தவுடன் அல்லது ஒரு முறை தண்ணீர்விட்டதும் நிலம் இறுகிவிடுமாதலால், மிக்க நன்மை உண்டாகாது. உழவின் எண்ணிக்கை கூடவேண்டும். அதனுடன் ஓர் உழவுக்கும் மறு உழவுக்கும் இடையில் சிறிதுகாலம் விட்டுவைக்க வேண்டும். நிலம் ஈரமாயிருக்கும்பொழுது உழுது, அதைத் திரும்பத்திரும்ப மிதிப்பதனுல் மண் இறுகி உறைந்துவிடுவதைக் காண்கிறோம். ஆதலால், மண் நன்றாக வெயிலில் உலரவேண்டும். இங்ஙனம் காயக் காயத் திரும்பத்திரும்ப உழுது மண்ணைத் தெள்ளு புழுதி யாக்கவேண்டும்.

> " தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
> வேண்டாது சாலப் படும் "

Koviloor Digital Library



என்ற குறள், அடிமண் புழுதியாக்கப்பட வேண்டுவதன் கட்டாயத்தை நன்கு உணர்த்துகின்றது. இவ்வாறு நிலம் புழுதியாக்கப்படுவதனால் பிறநலன்களும் கிடைக்கின்றன. இங்ஙனம் பண்படுத்தப்பட்ட நிலத்தில் ஒரு முறை தண்ணீர் பாய்ந்தாலும் அதன் ஈரம் நீண்ட நாளைக்கு நிலைத்து நிற்கும். காய்ந்தவுடன் இறுகின போதிலும், திரும்பத் தண்ணீர் பாயும்பொழுது, கட்டாந்தரையில் தண்ணீர் விட்டதுபோலிராமல், இடப்பட்டபயிர் அறுவடையாகும் வரையிலும் மண் இளக்கம் இருந்துகொண்டேயிருக்கும். திரும்பத் திரும்ப உழுவதனால் மண் முழுவதும் வெயிலில் படுகின்றது. அதனால் 'பதமடையாத' நிலையிலுள்ள பயிருணவுப்பொருளைப் பதமடையச் செய்யும் புழுக்கள் உயிர்வாழவும், பெருகவும், வேலை செய்யவும் இடமேற்படுகின்றது. காற்றிலிருந்து வெய்யோன் வெப்பத்தால் பிரிக்கப்படும் தாதுப்பொருள்களை நிலம் முன்னைவிடக் கூடின அளவில் ஏற்றுக்கொள்ள இடமுண்டு. 'பதமடைந்த' நிலையிலுள்ள பயிருணவு மிகுதியாகக் கிடைக்கவுங்கூடும். நிலத்தில் களைகள் உண்டாகா.

எள் பயிருக்கு ஏழு உழவுகள் தேவையென்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதனால் ஒரே நாளில் ஏழுமுறை நிலத்தை உழுதுவிடவேண்டுமென்பது பொருளாகாது அப் பயிரின் தன்மையைப் பற்றிச் சற்று ஆராய்வோம். ஏறக்குறைய இரண்டரைத் திங்களில் அது பயனுக்கு வரக்கூடிய பயிர். கதிரவன் வெப்பமே அதற்கு மிகுதியாக வேண்டுவது. அடிக்கடி தண்ணீர் பாய்வது கூடாது. முற்காலங்களிற் பயிர் செய்யும் முறையில் இதற்குத் தண்ணீர் பாய்வதில்லை. கோடைக் காலத்திலேயே இது பயிரிடப்படுவதனால், கோடை மழையே இதற்கு நீர்பாயும் வழியாகும். முதலில் ஈரத்தில் விளைக்கப்படுவதால் அதையும், முடிவில் தண்ணீர் தேவையில்லாததால் அதையும் தவிர்த்து அதன் வாழ்நாளாகிய இரண்டரைத்திங்களுக்குள் தேவையான நான்கு முறைகளில் தண்ணீர் பாய்வதைக் கணக்கிட்டால், இரண்டு வாரங்களுக்கு ஒரு முறை தண்ணீர் பாயவேண்டியிருக்கும். இரண்டு கிழமைகளுக்கு ஒருமுறை தண்ணீர் பாய்வதனால், கடும் வெயிலில் இரண்டு கிழமைகளுக்கு அந் நீர்ப்பதம் நிற்கக்கூடியதாயிருக்க

Koviloor Digital Library



வேண்டும். அதற்கு எத்தனை உழவுகள் தேவையென்பதும் ஒருழவிற்கும் அடுத்த உழவிற்கும் இடையில் எவ்வளவு காலம் விட்டிருக்க வேண்டுமென்பதும் உழவர்களுக்குத் தானகவே புலப்படும். மேலும், பயிருணவானது நீரில் கரையக்கூடிய நிலைமையிலும் அந் நீர்ப் பதம் இருக்கவேண்டும். அதுவோ குறைந்த நீர்ப்பதமுடையது. அந் நீர்ப்பதத்தில் பயிருணவு கரைந்து பயிருக்கு உணவாக வேண்டுமானல், 'பதமடைந்த' தாதுப்பொருள் மிகுதியாக இருக்கவேண்டும். வெல்லம் துண்டாயிராமல் தூளாயிருப்பதுபோல், 'பதமடைந்த தாதுப்பொருள்களும் நுண்ணிய நிலையை யடைந்திருக்க வேண்டும். இவற்றையெல்லாம் சிறிதும் சிந்தியாமல் பாறைபோல் இறுகியிருக்கும் நிலத்தை ஒரே நாளில் இரண்டு மூன்று முறை உழுது விதைத்துவிட்டு அதற்குத் தண்ணீர்விட வழியில்லாமல் 'மழை பெய்யவில்லை கை முதல் கெட்டுவிட்டது' என்று சொல்வது நகைப்பிற்கே இடமாகும்.

> " ஏரினும் நன்ருல் எருவிடுதல் கட்டபின்
> நீரினும் நன்றதன் காப்பு" —குறள்

என்றபடி உழவுடன் மட்டும் நின்றுவிடாமல் எருவிட்டுத் தண்ணீர் பாய்ச்சிப் பயிரினைப் பாதுகாத்தல் வேண்டும். மழைச் செழிப்பின் காரணத்தால் பயிரேறியபின் தண்ணீர் பாய்ச்சாமல் முற்றிலும் மழையினுடைய ஆதரவிலேயே விடப் பட்டுவந்த பயிர் முறையை, மழை பெய்யாத காலத்திலும் அப்படியே பின்பற்றுவது கூடாது. பயிர்செய்யும் முறைகளுக்குரிய காரண நிலைகளைத் தெரிந்துகொண்டால், யாரும் காலத்துக்கேற்றபடி நடந்து தக்கவாறு பயிர் விளைத்துக் கொள்ளலாம்.

## 9. உர வகைகள்

உரவகைகளைப் பற்றிச் சிந்திக்கின் தழைகளும், கால் நடைகளால் கிடைக்கும் எரு வகைகளுமே எளிதாகவும், ஏராளமாகவும் கிடைக்கக் கூடியனவாம். இவைவகளில் 'பத மடைந்த' பயிருணவு மிகக் குறைவாகவும் மற்றது பெரும் பகுதியாகவு மிருக்கின்றன. இவற்றை நிலத்திற் கிடுவதனல்,

Koviloor Digital Library



நிலத்தில் ' பதமடையாத ' நிலையிலுள்ள பயிருணவு இன்னும் மிகுதியாகின்றது. இதனால், நில வளம் பெருகக் கூடுந்தான். ஆனால் இவ்வகையில் முதன்மையாகக் கருதவேண்டுவது ஒன்று உண்டு. ' பதமடைந்த நிலை'யிலுள்ள பயிருணவு மிகக் குறைவாக இருப்பதனால் அதைப் பெருக்குவதற்காக இப் பதமடையாத உரங்களை மிகுதியாகவாவது போட வேண்டும். வளமான நிலத்தில் முற்காலத்தில் குறுணிக்கு ஒரு வண்டி வீதம் எருவிட்டு வந்த வழக்கத்தை அப்படியே இப்பொழுதும் பின்பற்றிவந்தால் எப்படி ஊதியமடைய முடியும்? முன் கூறப்பட்டவைகளிலிருந்து முற்காலத்தில் நிலம் நல்ல வளப்பமுடையதாயிருந்ததென்பதும் இக் காலத்தில் அவ்வளம் மிகக் குறைந்துள்ளதென்பதும் தாமே புலப்படும். இப்பொழுதுங்கூட மலைகளில் காடுகள் அழிக் கப்பட்ட இடங்களில் காப்பி, தேயிலை முதலியவைகளைப் பயிரிடுவோர் முதலில் குறைந்த செலவில் கூடின ஊதியத்தை யடைந்து, பின் வரவர, நிலவளம் குன்றவே உரமிடுவதில் செலவு மிகுந்து, வருமானம் குறைந்து அதனால் பொருள் கேடடைந்து அத் தொழிலையே கைவிட்டுவிடுவதையும் நாம் காண்கிறோம். ஆகையால் போதுமானபடி நிலத்திற்கு உர மிடாவிட்டால் சரியான பயனை அடையவே முடியாது. ' சப்பா ' னில் எந்த உழவனும் இரண்டரை ' ஏக்கரா ' நிலத் திற்குமேல் பயிர் செய்யக்கூடாதென்று சட்டமிருக்கின்றது. பயிரிடப்படும் நிலத்தின் பரப்பு கூடுதலாயிருந்தால் போது மானபடி எருவிடமுடியாது. நிலவளம் குறைந்துவிடும். கிடைக்கக்கூடிய உரத்தையெல்லாம் அதே நிலத்தில் போடு வதன் காரணமாக நிலவளம் குன்றாமலிருப்பதுடன் விளைவும் மிகுதியாகக் கிடைக்கின்றது.

தழை யெரு, தொழு எரு முதலியவற்றைத் தவிர மீன், பிண்ணாக்கு, கொம்புத்தூள் முதலியவைகள் இப் பொழுது உரமாக நிலத்திற்கு இடப்படுகின்றன. இவைகளி லும் ' பதமடையாத ' தாதுப்பொருள்களே மிகுதியாயிருந் தாலும், தழை யெரு, தொழு எரு என்பவைகளிலிருப்பதை விடக் கூடின அளவில் பதமடைந்த பயிருணவு இவைகளிலிருக் கின்றது. அன்றியும், இவற்றிலிருக்கும் பதமடையாத தாதுப்

Koviloor Digital Library



பொருள்கள் தழைஎரு, தொழுஎரு என்பவைகளிலுள்ளதை விட விரைவில் பதமடையக் கூடும். பெரும்பாலும் ஒன்றிரண்டு பயிர்களிலேயே பதமடையும்நிலைமைக்கு வருகின்றன.

இக்காலத்தில் முழுப்பயன் அடையும் பொருட்டுச் சில உரவகைகள் உண்டுபண்ணப்படுகின்றன. இவை சேர்க்கை உரங்களெனப்படும். இவைகள் சில உப்புக்கள், உலோகத் தாது, சுண்ணும்பு, எலும்புத்தூள் இவற்றுடன் கந்தகத் 'திராவகம்' முதலியன சேர்ப்பதால் உண்டாகின்றன. மற்றெல்லா உரவகைகளையும் விட இவைகளில் பதமடைந்த பயிருணவு, கூடின அளவில் இருக்கின்றது. கந்தகத் 'திராவகம்' எந்தப் பொருளிலும் தாதுப் பொருளை வேருக எடுக்கக் கூடியது. அவ்வுரங்களிலுள்ள பதமடையாத நிலையிலுள்ள தாதுப் பொருள்களைப் பதமடையச் செய்கின்றது. இவ்வுரங்களைப் பயன்படுத்துவதனுல் அவைகளிலுள்ள பயிருணவானது அந்தப் பயிரினுலேயே முழுதும் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பயன் தருவதுடன், மற்ற உரவகைகளினுலடையக்கூடும் விளைவைவிடக் கூடின அளவில் விளைவு கிடைக்கின்றது. இதைச் சிந்திக்கும் பொழுது, எவ்வளவுக்கெவ்வளவு கூடின அளவில் பதமடைந்த பயிருணவு நிலத்திலிருக்கிறதோ, அதற்குத் தக்கபடி விளைவும் கூடின அளவில் கிடைக்குமென்று நன்ருய்த் தெரிகின்றது.

இச் சேர்க்கை உரங்கள் இடப்படும் நிலங்கள் வளம்குன்றி விடுகின்றனவென்று ஒன்று சொல்லப்படுகின்றது. அவ்வுரங்கள் மண்ணுடன் கலக்கும்பொழுது அவற்றில் சேர்க்கப்பட்டிருக்கும் கந்தகத் 'திராவகத்'தின் ஆற்றல் நிலத்திலுள்ள பதமடையாத பயிருணவைத் தாக்கி அதைப் பதமடைந்த நிலைக்குக் கொண்டுவந்து விடுகின்றது. இதனுல் அந்தப் பயிரில் கூடுதலான விளைவு கிடைத்தாலும், வளம் குறைந்த நிலத்தில் அந்தப் பயிருடன் அதன் வளப்பமும் எடுபட்டு விடுகின்றது. இதைத் தடுக்க ஒரு வழியுண்டு.

அவ்வுரங்களை நிலத்திலிடும்பொழுது பதமடையாத பயிருணவு ஏராளமாயிருக்கும் உரங்களையும் மிகுதியாகச் சேர்க்க

Koviloor Digital Library



வேண்டும். இப்படிச் செய்யின் சேர்க்கை உரத்திலுள்ள கந்தகத் 'திராவகத்'தின் ஆற்றல் பொதுவான உரத்துடனேயே நின்றுவிடுமாதலால் நிலத்திற்கு எவ்வகைக் கெடுதலுமுண்டாகாது. இனிப் பயிரின் வகைகளுக்குத் தக்கபடி அவ்வப் பயிருணவு மிகுதியாயிருக்கும் உரங்களை வழங்குவது நல்லது என்பதுங் கருதவேண்டும். அதனால் பெருத்த ஊதியம் பெறக்கூடும். எடுத்துக் காட்டாகக் கிழங்கு பயிரிடுவதானால் வேர்த்தாதும், புகையிலை போன்ற இலையின் விளைவை எதிர்பார்த்து இடப்படும் பயிரானால் தழைத் தாதும், நெல், காய்கறி, பழவகைகள் முதலிய தானியப்பயிர்களிடுவதானால் தானியத்தாதும் மிகுதியாயுள்ள உரங்களைச் சேர்க்கவேண்டும்.

## 10. மூவகைத் தாதுப் பொருள்கள்

பயிருணவு வேர்த்தாது, தழைத்தாது, தானியத்தாது என மூவகைப்படும். இவற்றில் வேர்த்தாது வேர் கிழங்குகளையும், காய் கறி பழவகைகளின் சதைப்பற்றையும் வளர்க்கும். தழைத்தாது இலைகளை வளர்க்கும். தானியத்தாது தானிய விளைவைப் பெருக்குவதுடன் செடிகளின் தாள், நரம்பு இவைகளையும் வலுக்கச்செய்யும். வேர்த்தாது, 'பொட்டாசு' என்னும் சாம்பல் பொருள். தழைத்தாது 'நைட்ரேட்' என்னும் உப்புப் பொருள். தானியத்தாது என்பது 'பிரகாசிதமலம். (Phosphoric acid) என்னும் எரிப்பொருள்.

எல்லாப் பயிர்வகைகளுக்கும் இம் மூன்று தாதுக்களும் தேவையானபோதிலும் விளைவின் எந்தப் பகுதியை முன்னிட்டுப் பயிரிடப்படுகின்றதோ அப் பகுதிக்குரிய தாதுப்பொருள் உரத்தில் மிகுதியாயிருக்கவேண்டுவது முதன்மையானது. பின்னும் நிலத்தில், குறிப்பிட்ட ஒரு பயிரையே தொடர்ச்சியாகப் பயிர் செய்யக்கூடாது. மூவகைப் பயிர்களும் மாறி மாறிப் பயிர் செய்யப்படவேண்டும். அப்படியில்லாவிட்டால் குறிப்பிட்ட ஒருவகைத் தாதுப்பொருள் நிலத்தில் மிகுதியும் குறைந்துவிடும். அப்புறம் அக் குறைவை நிரப்புவது எளிதன்று. மேலும், மற்றவகையான தாதுப் பொருள்கள் நிலத்தில் அளவிற்கு மேற்பட்டுவிடுமாதலால் பயிர் தேவையான நிலைமையில் உண்டாகாது.

Koviloor Digital Library



மேற்கூறிய மூவகைப் பயிருணவுகளில் வேர்த்தாதும், தழைத்தாதும் இயற்கை உரங்களில் மிகுதியாகவும், தானியத் தாது அவற்றில் குறைவாகவும் இருக்கின்றன. சுண்ணும்பிலும், எலும்பிலும் தானியத்தாது மிகுதியாக இருக்கின்றது. அது வும் பதமடையாத நிலையிலேயே இருக்கிறது. ஆகவே இவற்றின் பயனை மிகுதியாக அடைய விரும்பினால் அவற்றுடன் கந்தகத் 'திராவகம்' சேர்க்கப்பட்ட "சூப்பர்பாசுபேட்" என்னும் உரத்தையும் "பேசிக்சிலாக்" உலோகத்தாது அடங்கிய உரத்தையும் வழங்குவது மிகவும் நன்மை தரும்.

---

## நறுவீ முல்லை

நறுவீ முல்லை! நறுவீ முல்லை!
உறுபெரும் புறவிற் குறுமுகை யவிழ்ந்த
நறுவீ முல்லை! நாகிளஞ் செல்வீ!
விண்ணக மடந்தை நாண மண்ணகப்
5. பெண்ணெழின் மாதர் கொண்டபுன் முறுவல்
ஒளியெனக் குலாஅந் தெளிநிலாக் காட்சியை;
பாரகம் போர்த்த தாரகை யொத்தனை;
இல்லுறை யொழுக்கச் செல்வியர் சூடும்
நல்லெழின் மலராய் நவிலுவர் நின்னை;
10. கற்பெழின் மலர்நினைக் கருதா துலகில்
கற்பிலாப் பன்மலர் கவினெனப் புனையு
மாதர்தம் நெஞ்சக மயக்கம்
போதலெவ் வணங்கொல்? புகறியிங் கெமக்கே.

—சி. து. கன்னிசாமி

Koviloor Digital Library

# தமிழும் தமிழரும்

"வித்துவான் மா. இராசமாணிக்கம் B. O. L."

II

## தமிழர்

தமிழர் யார்? — இக்கேள்வி இன்றைய தமிழகத்தை அலக்கழித்து நிற்கின்றது. தமிழைத் தாய் மொழியாகக் கொண்டு அதன் உயர்வையே தம் உயர்வாகவும் அதன் இழிவையே தம் இழிவாகவும் அதனையே தம் உயிராகவும் உள்ளபடியே கருதுபவர் அனைவரும் தமிழரே ஆவர். தமிழர்க்குள் பல சாதிகள் இருக்கலாம்; பல மதங்கள் இருக்கலாம்; ஆயினும் தமிழையே தம் தாய்மொழி என எண்ணி அதனைப் போற்றுபவர் அனைவரும் தமிழரே என்பதில் ஐயமில்லை. தமிழ் நூல்களை உள்ளவாறு ஓதி உணராமல் பலர் தம் தாய் மொழியில் ஒன்றும் இல்லை என எண்ணி, வடமொழி நூல்களைத் தம் நூல்கள் எனக்கொண்டு தருக்குவர். அவர்தம் இழிசெயல், பிறன் தந்தையைத் தன் அப்பன் எனக் கொண்டாடும் பேதையனது அறிவிலாச் செயலுக்கு ஒப்பாகும்.

## தமிழ் நாட்டில் சமஸ்கிருதத்திற்கு ஆதிக்கமா?

தமிழர் நல்வாழ்வு வாழ வேண்டுமாயின் தமிழ் நன்னிலையில் இருத்தல் வேண்டும். மொழிச் சிறப்புடைய நாடே நாகரிகச் சிறப்புடையதாகும். மொழி உணர்ச்சியுள்ள சமூகமே அறிவுடைய சமூகமாகும். தமிழகத்தில் வேறு எம்மொழிக்கும் சிறப்புடைய ஆதிக்கம் இருத்தல் ஆகாது. பள்ளிகளில் தமிழ் மொழி கட்டாய பாடமாதல் வேண்டும். இன்று இந்நிலைமை இல்லை. தமிழ் மாகாணத்தில் உள்ள பள்ளிகளில் தமிழ் கட்டாய பாடம் இல்லை. எனின், இஃது எவ்வளவு மானக்கேடாகும்! இறந்தொழிந்த வடமொழியைக் கற்பிக்க வகுப்பு ஒன்று முதல்பாரத்திலிருந்து ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் வைக்கப்பட்டுள்ளது. இதற்கென ஆண்டுதோறும் லக்ஷக் கணக்கான ரூபாய் செலவழிக்கப்படுகிறது. 'எல்லோரும்

Koviloor Digital Library



தமிழர்தாம்' எனச் சங்கநாதம் செய்பவர் அனைவரும் இவ் விழி நிலைமையைக் கவனித்தல் வேண்டும். எல்லோரும் தமிழராகவுள்ள இத் தமிழ் நாட்டில் வடமொழிக்குச் செல்வாக்கு அளிக்கப்படுவதன் நோக்கம் என்ன? தாய் மொழிக் கல்வி அறியாதவர் தமிழ்நாட்டில் 100-க்கு 90 பேர் இருக்கின்ற இக் காலத்தில், வடமொழி வளர்ச்சிக்குச் செலவழிக்கும் பணத்தைக் கிராமப் பள்ளிகளை வைப்பதிற் செலவிடின் தாய் மொழியை எளிய கிராமவாசிகள் அறிய இடம் உண்டாகும் அல்லவா? ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் உள்ள சமஸ்கிருத வகுப்புகள் நீங்கலாகச் சமஸ்கிருதத்தைக் கற்பிக்கவென்றே பல பள்ளிகள் இத் தமிழ்நாட்டில் இருக்கின்றன. அவற்றிற்கு ஆண்டுதோறும் அரசியலார் பணம் உதவுகின்றனர். இப் பள்ளிகளை மேற்பார்வையிடத் தனிப் பார்வையாளர் (Inspector of Sanskrit Schools) ஒருவரை அரசியலார் வைத்துள்ளனர். தமிழ்மக்கள் வரிப்பணம் தமிழ்க் கல்விக்கு அல்லவா பெரிதும் செலவிடப்படல் வேண்டும்? ஒரு பயனும் நல்காத-தமிழர்க்கு முற்றும் மாறுபட்ட-நாகரிகத்தைக் கூறும் பேச்சு வழக்கற்ற சமஸ்கிருதத்திற்குத் தமிழ்நாட்டில் இத் துணைச் செல்வாக்களித்தல் அறமன்று! வேண்டுமாயின், கிரீக்-லாட்டின் போன்றவை வைக்கப்பட்டுள்ள கல்லூரிகளில் சமஸ்கிருதமும் விருப்பப்பாடமாக இருக்கட்டுமே! எல்லோரும் தமிழராக இருக்கக்கூடிய இத் தமிழ்நாட்டில் முதல் பாரத்திலிருந்தே சமஸ்கிருதம் வைக்கவேண்டிய அவசியம் இல்லை அன்றோ? 'எல்லோரும் தமிழரே' எனின், தமிழர்க்கு வேறான சமஸ்கிருதம் இங்கு ஆதிக்கம் பெறப் பார்த்துக்கொண்டிருத்தல் - அது வேரூன்ற ஆவன எல்லாம் செய்தல் அறமாகுமா? அங்ஙனம் செய்பவர், 'தமிழ் எமது தாய்மொழி அன்று, வடமொழியே எமது தாய்மொழி' என்று வெளிப்படையாக வேனும் கூறிவிடல் நலமாகும். இந் நெருக்கடியாகவுள்ள நிலைமையைத் 'தமிழர்' கண்டு கவனித்து ஆவன செய்தல் வேண்டும். பண்டைக்காலத் திண்ணைப்பள்ளிகள் ஏற்படுத்தல் வேண்டும். அரசியலார் அப்பள்ளிகளை ஆதரித்தல் இன்றியமையாதது.

Koviloor Digital Library



## தமிழிலேயே நடைபெறல் வேண்டும்

தமிழ் நாட்டிலுள்ள வளநாட்டு (ஜில்லா போர்டுகள்) மன்றங்கள், நகராண்மைக் கழகங்கள், ஐவர் மன்றங்கள், (பஞ்சாயத்துப் போர்டுகள்) இன்ன பிற பொது மன்றங்களின் செயல்கள் அனைத்தும் தமிழிலேயே நடைபெறுதல் வேண்டும். இவற்றிற்குரிய 'விதிநூல்கள்' தமிழிலேயே நடைபெறுதல் வேண்டும். இன்றுள்ள நிலைமை மிகக் கேவலமானது. அரசியலார் மொழியாகிய ஆங்கிலத்தில் செயல்கள் நடைபெறுகின்றன. அஃதறியாத உறுப்பினர் ஆண்மையும் அநுபவமும் மிக்கவராயினும் தம் கருத்தை ஆங்கிலத்தில் கூற இயலாது வாய் மூடி மௌனிகளாக இருக்கின்றனர். இவ் விழிநிலை அகற்றப்படல் வேண்டும். இன்று பல மன்றங்களின் நிகழ்ச்சிகள் தாய்மொழியில் நடைபெறுதலைக் காணப் பேருவகை எய்துகின்றோம். அதற்காகக் காங்கிரஸ் அரசியலார்க்கு நம் வாழ்த்து உரியதாகுக.

## பெயரிடுதலிலும் வடநாட்டு வேட்கை ஏன்?

பொது மன்றங்களில் ஆட்சி புரிபவர் சிறந்த தமிழ்ப் பற்று உடையராக இருத்தல் வேண்டும். அவர்கள் புதிய சாலைகள், நகரங்கள், நகரப் பிரிவுகள், புதிய தெருக்கள், பூம்பொழில்கள் இன்ன பிறவற்றை உண்டாக்குங்கால் அவற்றுக்குத் தமிழ்ப் பெயர்களையே மிகுதியாக வைத்தல் வேண்டும். ஈடும் எடுப்பும் அற்ற தமிழ்த் திருமறை செய்தருளிய 'திருவள்ளுவர்', நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் செய்த 'இளங்கோ அடிகள்', கவி இன்பம் உருக்கொண்டாற் போன்றுள்ள இராமாயணம் பாடிய 'கம்பர்' முதலிய பெரும்புலவர் பெயர்களை இடுதல் எத்துணைப் பாராட்டத் தகுவது! இப்பெயர்களைத் தமிழ்மக்கள் என்றும் தம் உள்ளத்தே பதிக்க இதைவிடச் சிறந்த வழி வேறுண்டோ? இப்பணியைப் பொது மன்ற ஆட்சியாளர் விரைந்து நடைமுறையில் செய்வார்களாக! தமிழ்மக்கள் தம் குழந்தைகட்குத் தனித்தமிழ்ப் பெயர்களையே வைத்தல் வேண்டும். தமிழை வளர்க்கும் சிறந்த முறைகளுள் இதுவும் ஒன்றாகும். தொல்காப்பியன், திருவள்ளுவன், கம்பன், இளங்கோ, வஞ்சிக்கோ, பாண்டிக்

Koviloor Digital Library



கோ, மதுரைக்கோ முதலிய ஆண்பாற் பெயர்களும், மணி மேகலை, கண்ணகி, மாதவி, பெருந்திருவாள், ஔவையார், கயற்கண்ணி, தாமரைக்கண்ணி, அன்னக்குயில் முதலிய பெண் பாற் பெயர்களும் இருப்ப - வடமொழிப் பெயர்களைத் தமிழர் சூடிக்கொள்ளல் அறிவுடைமையாமா ? ஆங்கிலேயன் ' கோவிந் தன் ' என்று பெயர் சூட்டிக்கொள்ள விரும்புவனோ ? தமிழர் எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

---

## 'செல்விக்'கு வாழ்த்து

செஞ்சுவை யொழுகுஞ் செந்தமி ழீன்றமுன்
　　வஞ்சியர் இருவர்களே— மிகக்
கொஞ்சிடு வாளவள் கரந்தைய மன்றினில்
　　குளிர்பொழி லாட்டிகொலாம்— பதி
னஞ்சொ டிரண்டுறு மாண்டுகள் மற்றொரு
　　செல்வி கடந்தனளாம்— என
விஞ்சிட விஞ்சிட வஞ்சியை வாழ்த்தவே
　　நெஞ்சுற வேண்டினனே.

—வித்துவான்- அ. கிருட்டினமூர்த்தி

---

Koviloor Digital Library

# தென்புலத்தார் கடன்

(ஓர் ஆராய்ச்சி)

" துடிசைகிழார் அ. சிதம்பரனூர் "

தென்புலத்தார் என்பது ஊரில் தெற்கே உள்ள சுடுகாட்டுக்குச் சென்றவர், அதாவது, செத்தவர்-இறந்தவர் என்று பொருள்படும்.

இப் பொருள்வழக்குண்மை அடியிற்கண்ட தேவாரப்பாவால் அறியலாம்:—

"போர்த்தானை யானையின்தோல் புரங்கண் மூன்றும்
பொடியாக எய்தானைப் புனிதன் தன்னை
வார்த்தாங்கு வனமுலையாள் பாகன் தன்னை
மறிகடலுள் நஞ்சுண்டு வானோர் அச்சந்
தீர்த்தானைத் தென்றிசைக்கே காமன் செல்லச்
சிறிதளவில் அவனுடலம் பொடியா வாங்கே
பார்த்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்றவாறே"

(அப்பர்—பள்ளியின்முக்கூடல், 4)

தென் + புலம் = தெற்கேயுள்ள இடம்.

புலம் என்னும் சொல்லுக்கு அறிவு-இடம்-வயல் முதலிய பல பொருள்கள் உளவேனும் ஈண்டு இடம் என்னும் பொருள்தான் சிறந்தது.

பழைய ஊர்களில் சுடுகாடு அல்லது புதைகாடு தென்றிசைக்கண்ணேயே பெரும்பாலும் உள்ளது என்பது கண்கூடு. இயமன் திசை தெற்கு ஆதலும் இதனை வலியுறுத்தும். இலக்கண நூலில் மங்கலம்—குழூஉக்குறி என்ற வழக்காறுகள் உள.

சுடுகாட்டை நன்காடு என்பது மங்கலமொழி. அதுபோல, இறந்தவர்களைத் தென்புலத்தார் என்பது மங்கலமொழி.

இறந்தவர்களைத் தென்புலத்தார் என்று கூறும் வழக்கு நால்வர் நாயன்மார்கள் காலத்துக்கு முன்னமேயே உள்ளது. இதனைப் புறநானூறு 9-ஆம் பாட்டில் காணலாம்;—

Koviloor Digital Library



" ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தில்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் ப ஃ றுளி மணலினும் பலவே "

இது, பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் என்னும் புலவர் பாடியது.

" தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும் "

என்பதற்கு உரையாசிரியர், "தென்திசைக்கண் வாழ்வோர் ஆகிய நுங் குடியில் இறந்தோர்க்குச் செய்தற்குரிய பிண்டமிடுதலைச் செய்யும் பொன்போலும் பிள்ளைகளைப் பெறாஅதீரும்" என்று தென்புலம் வாழ்நர்=இறந்தோர் என்றும் அருங்கடன் =பிண்டமிடுதல் என்றும் கூறியுள்ளதை நோக்குக.

இப்புறப்பாட்டினால் 2000 ஆண்டுகட்கு முற்பட்ட வழக்காறுகளும் ஒழுக்கங்களும் காணப்படுகின்றன.

இறந்தவர்க்கு ஆண்டுதோறும் செய்யும் கடனைத் "தென் புலத்தார் கடன்" என்றே அக்காலத்தில் தமிழ்நாட்டில் வழங்கி வந்தார்கள் என்றும், தென்புலத்தார் கடனைச் செய்வது மிக மிக அவசியம் என்று ஒவ்வொரு தமிழ்மகனும் கருதியிருந்தான் என்றும் , மக்களைப்பெறாத மகளிர்களைச் சண்டையிற் கொல்லுவது அறமாகாது என்றும், பிள்ளை இல்லாவிட்டால் மனைவியாவது ஈமக்கடன்-தென்புலத்தார் கடனை-ஆற்றவேணும் என்பதைப் பகைவனும் உணர்ந்து அவ்வாறு நீதிவழுவாமல், நடந்துவந்ததாகவும் இன்ன பல ஒழுக்கங்களை இதனால் அறிகின்றோம்.

Koviloor Digital Library



மக்களைப்பெருத மகளிர், கணவன்மார் இறந்தபின் இருக்க நேரின், இறந்த கணவருக்கு ஈமக்கடனையும் தென்புலத்தார் கடனையும் இயற்றியுள்ளார் என்பதை 234—249-ம் புறப் பாட்டுக்களால் அறிகிறோம் :

> "நோகோ யானே, தேய்கமா காலை,
> பிடி அடி யன்ன சிறுவழி மெழுகித்
> தன்னமர் காதலி புல்மேல் வைத்த
> ஈன்சிறு பிண்டம் யாங்குண் டனன்கொல்
> உலகுபுகத் திறந்த வாயில்
> பலரோ டுண்டல் மரீஇ யோனே" (புறம்-234)

இது, வேள் எவ்வி மக்களின்றி இறந்துபோக, அவனுடைய மனைவி பிண்டம்போட்டு வணங்கினதைப்பற்றி வெள்ளேருக் கிலையார் என்னும் புலவர் பாடியது.

இதில், யானைஅடி அளவு இடத்தைமெழுகி, தருப்பைப் புல்லை ஆசனமாக இட்டு, தருப்பைப்புல்லால் செய்த கூர்ச் சத்தைப் போட்டு அதில் இறந்தவனுடைய ஆன்மாவை ஆவாகனம் செய்து, அதன்மேல் இனிய சிறு பிண்டங்களிட்டு வணங்கும் வழக்கத்தை எவ்வளவு தெளிவாகக் கூறியுள்ளார் பாருங்கள்.

ஈன்சிறுபிண்டம் என்பதற்கு உரையாசிரியர் "இனிய சிறு பிண்டங்கள்" என்று உரைவகுத்திருப்பதைக் கூர்ந்துநோக் குங்கள்.

பிண்டம் என்பது சாதாரணப் பொங்கல் அல்ல. இப் போது தமிழர்கள் இல்லங்களில் வழக்கமாகச் செய்யும் உழுத் தம்பருப்பும் அரிசியும் அல்லது பொங்கின சோற்றில் நெய்—தேன்—பழம்—பால்—எள்—வெல்லம் இவைகளைச் சேர்த்து உருட்சியாகச் செய்யும் பிண்டமாகும். இத்தகைய பிண்டத் தையே மனத்துட்கொண்டு வெள்ளெருக்கிலையார் ஈன் சிறு பிண்டம் என்ருர்.

இன்னும் தும்பிகீரனர் என்கிற தும்பிசோகினனர் என்னும் புலவர், "கதிர் மூக்காரல்" என்று ஆரம்பித்த 249-ம் புறப் பாட்டில்

Koviloor Digital Library



"மன்னே இன்றே
அடங்கிய கற்பி னுய்நுதன் மடந்தை
உயர்நிலை யுலகம் அவன்புக,...வரி
நீறு ஆடுசுளகின் சீறிடமாக்கி
அழுத லானுக் கண்ணள்
மெழுகும் ஆப்பி கண்கலுழ்நீ ரானே"

(புறம்—249)

இதற்கு உரையாசிரியர் "இன்று தன் கண்ணோ அடங்கிய கற்பினையும் சிறிய நுதலினையும் உடைய மடந்தை உயர்ந்த நிலைமையை உடைய விண்ணுலகத்தே அவன் சென்று புக, அவனுக்கு உணவு கொடுத்தல் வேண்டிச் சுளகுபோலச் சிறிய இடத்தைத் துடைத்து அழுதல் அமையாத கண்ணையுடைய வளாய்த் தன் கண் கலுழ்கின்ற நீராலே சாணகத்தைக் கொண்டு மெழுகும் அளவிலே பட்டது" என்று கூறுவாரா யினர்.

சுளகு=முறம். இவர் முறத்தின் அகலமுள்ள இடத்தை மெழுகினுள் என்றுர். இன்னெருவர் யானை அடி அளவுள்ள இடம் என்றுர்.

இவ்விருவர் புறப்பாட்டுக்களிலும் மனைவி தென்புலத் தார் (இறந்தவர்) கடனை ஆற்றுவது குறித்துள்ளது.

இறந்தவருக்கு நன்மக்கட்பேறு இல்லாத காலத்தில் மனைவி செய்தலை இது கூறிற்று.

மக்கள் இருந்தால் அவர்கள்தாம் செய்யவேண்டும் என்பது கூறுமலே அமையும்.

அன்றியும் புறம்—9-ம் பாட்டில்

"பெண்டிரும், பிணியுடையீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெருஅதீரும்"

என்று இரண்டுமுறை பெண்களைப்பற்றிக் கூறி யிருப்பதால் முதலது மணமாகாத பெண்மக்களையும், இரண்டாவது மண மான பெண்டிர்களையும் (மனைவிமார்) குறித்துள்ளன என்பது போதரும்.

Koviloor Digital Library



தமிழ்நாட்டில் ஆண்மக்களையும் பெண்மக்களையும் ஒன்று போல் வேற்றுமையின்றிப் பேணிவந்துள்ளார். ஆரியர் வருமுன் பெண்கள் எல்லாம் சம உரிமை உடையவர்களாயிருந்தார்கள். முடி அரசர்களானாலும், சிற்றரசர்களானாலும், காணியாளர்கள் ஆனாலும் அவர்களுடைய சொத்து முதலில் பிறந்த குழந்தைக்கே (First born) உரியது. அக் குழந்தை ஆணாயிருந்தாலும் பெண்ணாயிருந்தாலும் ஒன்றே. இதற்கு 'அல்லி' 'பவளக்கொடி' என்ற மாதரசிகளே தக்க சான்று. ஆலவாயமர்ந்த அங்கயற்கண் அம்மையும் இதற்குச் சான்று ஆவர்.

தென்புலத்தார் கடனை ஆண்மகன்தான் செய்யவேண்டும் என்பதும், பெண்மக்கள் செய்யக் கூடாதென்பதும் ஆரியர் வழக்கம். அவர்களுடைய ஒழுக்க நூல்களாகிய மிருதிகள் அவ்வாறு கூறுகின்றன.

தூய தமிழ் நூலாகிய திருக்குறளுக்கு உரை வகுப்பான் புகுந்த பரிமேலழகர், ஆரிய நூன் முறைகளைத் தம் திருக்குறள் உரையில் நனிமுயன்று நுழைத்திருப்பதை உள்ளங்கை நெல்லிக்கனியென ஆராய்ச்சியாளர் அறிவர்.

அறத்துப்பால் மநு மிருதியின் சாரம் என்றும், பொருட்பால் சாணக்கியரின் அர்த்தசாத்திரத்தின் சாரம் என்றும், இன்பத்துப்பால் காமந்தகர் நூலின் சாரம் என்றும் கூறுவார் ஆயினர். ஆனால் காரணம் காட்டவில்லை.

அவ்வாறு கூறினதோடு அமையாது "உடுப்புக்குத் தகுந்தாற்போல் உடம்பை வெட்டுவதுபோலத்" தம்முடைய உரைக்குத் தகுந்தபடி குறள் அதிகாரங்களையும், குறட்பாக்களையும், குறட்சொற்களையும் மாற்றுவார் ஆயினர்.

இதனை, அச்சாகி வெளிவந்திருக்கும் பரிமேலழகர் உரை—மணக்குடவர் உரைகளையும், அச்சாகாமல் கையெழுத்துப்பிரதிகளாக இருக்கும் தருமர்—தாமத்தர்—பரிதி—நச்சினார்க்கினியர் இவர்களுடைய உரைகளையும் ஒத்துப் பார்த்துப் படிப்பவர்களுக்கு நன்கு விளங்கும்.

Koviloor Digital Library



"நன்மக்கட் பேறு" என்று நாயனர் கொடுத்த அதிகாரப் பெயரைப் பரிமேலழகர் "புதல்வரைப் பெறுதல்" என்று மாற்றியுள்ளார். மணக்குடியார் "மக்கட் பேறு" என்றார். ஏனையோர் "நன்மக்கட் பேறு" என்றே கொண்டுள்ளார்.

இவ்வாறு பரிமேலழகர் அதிகாரப் பெயரை மாற்றியுள்ளது எதனைக் குறிக்கின்றது என்பதைப் புலவர்களும் ஆராய்ச்சியாளர்களும் கூறுவார்களாக.

மேலும், அவ்வதிகாரத்திலேயே

"ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மக்கள்
சான்றோர் எனக்கேட்ட தாய்"

என்னும் குறளைப் பரிமேலழகர்

ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்" என்று மாற்றினர்.

இங்ஙனம் தாம் மாற்றிய குறளுக்கு உரைகூறுங்கால் "பெண் இயல்பால் தானாக அறியாமையின் கேட்ட தாய் எனவும் கூறினர்" என்று பெண்களுக்குச் சொந்தமாக அறிவு இல்லையென்று நாகரிக உலகம் நகைக்குமாறு கூறியுள்ளார்.

இவைகள் எல்லாம் எதனைக் குறிக்கின்றன என்று கூர்ந்து நோக்கின், தமிழ்நாட்டில் தமிழர்களுடைய நல்ல ஒழுக்கங்களைச் சிதைத்து, ஆரியர்களுடைய மிருதி ஒழுக்கங்களைத் தமிழ்நூற்களிலேயே புகுத்த எண்ணங்கொண்டு, அவ்வாறு செய்தமையைக் குறிக்கின்றன.

இல்வாழ்க்கை என்னும் அதிகாரத்தில் உள்ள "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தானென்றாங் (கு) ஐம்புலத்தாறோம்பல் தலை"

என்ற குறளுக்கு உரைவகுத்த பரிமேலழகர் "தென்புலத்தார்" என்ற சொல்லுக்குப் பிதிரர் என்று பொருள்கொண்டு "பிதிரர் ஆவார் படைப்புக் காலத்தில் அயனால் படைக்கப்

Koviloor Digital Library



பட்டதோர் கடவுட் சாதி, அவர்க்கிடம் தென்றிசையாதலின் தென்புலத்தார் என்றார்" என்று உரைகூறியுள்ளார்.

தமிழ்நாட்டில் ஆரியர்கள் நால்வகைச் சாதி நாட்டினது போலப் பரிமேலழகர் கடவுளரிடத்திலும் சாதிகற்பித்துக் "கடவுட் சாதி" என்றார்.

பரிமேலழகர் அவ்வாறு உரை கூறியதற்கு வடமொழியிலாவது தென்மொழியிலாவது ஆதாரம் இல்லையென ஆசிரியர் மறைமலைஅடிகள் "தென்புலத்தார் யார்" என்ற நூலில் நாட்டியுள்ளார். ஆண்டுக் கண்டுகொள்க.

இறந்தவனுக்கு ஆண்மகன் இல்லாவிட்டால் அவன் பெற்ற மணமாகாத பெண் இருந்தால் அவளிடத்திலாவது, மக்கள் இல்லாவிட்டால் மனைவியிடத்திலாவது தருப்பைப் புல்லைக் கொடுத்து வாங்கி, இறந்தவனுடைய குடிவழியில் வந்த ஒருவனைக் கொண்டு தென்புலத்தார் கடனை இறுக்கும் வழக்கம் இன்றும் தமிழரிடைக் காணலாம். இது எதனைக் குறிக்கிறது என்றால் மனைவியும் பெண்மக்களும் தென்புலத்தார் கடனைச் செய்யலாம் என்பதைக் குறிக்கின்றது.

ஆண்மகனே செய்யவேண்டும் மனைவியும் பெண்மக்களும் செய்யக்கூடாது என்பது ஆரியர் வழக்கு. அவ்வழக்கு தமிழருக்கு ஒவ்வாது.

## பிதிரர்

தென்புலத்தார் என்ற சொல்லுக்குப் பிதிரர் என்ற பொருளும் உண்டு. அகராதி பார்க்க.

பிதிர்=உதிர்—பிரி (என்று வினையிலும்) திவலை-கொடிகதை, காலநுட்பம், தாய்தந்தை மனைவி வழியின் மூதாதைகள் (என்று பெயரிலும்) பொருள்படும்.

உலகவழக்கிலுங்கூட "அந்த அப்பம் பிதிர்ந்து போயிற்று" என்றும், "அந்த எருவாமுட்டை பிதிர்ந்துவிட்டது" என்றும் கூறுவதை நாம் கேட்கிறோம். ஆதலின் பிதிர்=பிரிந்த என்று பொருள் ஆகிறது. உடலினின்றும் பிரிந்த உயிருக்குப் பிதிர்

Koviloor Digital Library



அல்லது பிதிரர் என்றும் பெயர். பிதிர்—ஒருமை ; பிதிரர்—பன்மை. பிதிரர்—உடலினின்றும் பிரிந்த உயிர்கள் (Departed Souls) ஆதலின், பிதிரர் என்றாலும், இறந்தவர் என்றாலும் தென்புலத்தார் என்றாலும் பொருள் ஒன்றேயாதல் காண்க. பிதிரர் என்பார் பரிமேலழகர் கூறும்வண்ணம் அயனால் படைப்புக் காலத்துப் படைக்கப்பட்ட ஒரு தனிப்பட்ட கடவுட் சாதியார் அல்லர். இது புரோகிதக் கூட்டத்தாருக்குச் சாதகமான உரையாகும்.

தமிழ் நூலாகிய திருக்குறள் விதிநூல் ஆதலால், தென்புலத்தார்கடனை இறுக்கவேண்டுமென்று விதித்துள்ளது.

> "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்றாங்கு
> ஐம்புலத்தாறு ஓம்பல் தலை"
>
> (குறள்—இல்வாழ்க்கை)

அக்கடனை ஆண்மக்கள் இருந்தால் ஆண்மக்களும், பெண்மக்கள் இருந்தால் பெண்மக்களும், மக்கள் இல்லாவிட்டால் மனைவியும் பிண்ட மிட்டு இறுத்துவந்தார்கள் என்று புறநானூறு வரலாற்று நூலாதலால் நடந்ததைக் கூறுகின்றது.

புறநானூறு என்னும் நூல் விதிநூலாக ஆவது, ஒழுக்க நூலாக ஆவது இல்லாததால் தென்புலத்தார் கடனை எவ்வாறு எம்முறையில் இயற்றவேண்டும் என்பதை விரிவாய்க் கூறவில்லை.

ஒரு புலவன் ஒரு வள்ளலையோ, அரசனையோ பற்றிப் பாடும்போது, "பலரோடு உண்டுவழக்கப்பட்டவன் தனியாகப் புன்மேல் வைக்கப்பட்ட இனிய சிறு பிண்டத்தை எப்படி உண்பான்" என்றும், "கற்பினளாகிய மனைவி பிண்டமிடுதற்கு இடம் செய்தபொழுது துன்ப மேலீட்டால் அழ, அவ்வாறு அழுத கண்ணீர் சாணிப்பாத்திரத்தில் விழ, அக்கண்ணீரையும் ஆப்பியையும் சேர்த்து மெழுகினாள்" என்று மனைவியினுடைய துக்கத்தைக் குறித்தும், "நாங்கள் அம்பு தொடுக்கின்றோம் ; பெண்டிரும், பிணியுடையீரும், தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும் புதல்வரைப் பெறாஅதீரும் நும்மரண் சேர்மின்" என்று அக்காலத்துப் போர்முறையைக்

Koviloor Digital Library



குறித்தும் பாடினதேயொழியத், தென்புலத்தார் கடனை எவ்வாறு எம்முறையில் இறுக்கவேண்டும் என்பதைப்பற்றிப் பாடினதன்று.

தென்புலத்தார் கடனை எவ்வாறு எம்முறையில் இறுக்க வேண்டும் என்பதைத் தமிழ் ஒழுக்கநூல்கள் 18 உள்ளும் காணலாம். தமிழில் ஒழுக்கநூல்கள் 18 என்பதைத்

"பங்க மில்பதி னெட்டொடு நான்குக்கு உணர்வாய்
அங்க மாறும்சொன் ஞனும்ஐ யாறுடை ஐயனே

(சம்—ஐயாறு, 1)

"பாதம் விண்ணோர் பலரும் பரவிப் பணிந்தேத்தவே
வேதநான்கும் பதினெட்டொடாறும் விரிந்தார்க்கிடம்
தாதுவிண்டம் மதுவுண்டு மிண்டிவரும் வண்டினம்
கீதம்பாட மடமந்தி கேட்டுகளும் கேதாரமே"

(சம்—கேதாரம், 2)

என்பவற்றால் அறியலாம்.

தென்புலத்தார் (இறந்தவர்) மூன்று பெரும் பிரிவினை உடையவர் ஆவர் அவராவார்—(1) தந்தை வழி மூதாதைகள், (2) தாய்வழி மூதாதைகள் (3) மனைவிவழி மூதாதைகள் ஆவர்.

இந்த மூன்று வழிகளாலும் ஏற்பட்ட மூதாதைகளுக்குத் தான் (Departed souls) தருப்பைப் புல்லின்மேல் மூன்று பிண்டங்களிட்டு, அம் மூவழி மூதாதைகளையும் நினைந்து வழி படுதல் தமிழர் வழக்கம்.

---

Koviloor Digital Library

# காதல்

(நிலைமண்டில ஆசிரியப்பா)

காதலுங் கடவுளுங் கருதிடி லொன்றே;
காதலே கடவுள் கடவுளே காதல்;
மேதினி தன்னில் மேவிய அறிஞர்
ஓதிடி லிதுவே யுண்மையின் றலையாம்;
5. உடலைத் தொட்டுப் பயிற றூனும்
கடலைக் குறுக்குங் காதலின் பண்போ?
முத்த வெண்ணகைக் கொவ்வைக் கனிவாய்
முத்தம் பருகலே முத்தியாங் காதலோ?
கண்டுங் கேட்டும் ஒண்டொடிக் கண்ணே
10. உண்டும் உயிர்த்தும் உறுவது மைம்புலன்;
அழகின் பாகம் அளவிடற் கரிதே;
அழகிய பொருளே யின்பமெக் காலும்;
அழகிய மங்கை யனைத்தினுஞ் சிறந்தாள்;
அழகின் வகையே உயிரு முடலும்
15. அழகிய ஓவியம் மணம்பெற் றதுபோல்;
கற்பும் பொற்புங் கனிவுறு குணமும்
மற்றவ் வோவியம் உயிர்பெற் றதுபோல்;
அழகெனப் படுவது ஆண்டவன் கையெழுத்
தழகினி லன்போ ஆண்டவ னேதான்;
20. கண்ட நாள்முதல் காலன் கவர்வரை
கொண்ட மனத்துடன் குலவுநல் லன்புடன்
காந்தங் கண்ட கரும்பொ னெனவே
காந்தன் கண்ட கமல மெனவே
பலரும் போற்றப் பாற்றேன் பழம்போல்
25. மலரும் மணமும் மணியொளி யும்போல்
மொழியும் பொருளும் ஒழுகு மாறுபோல்
ஆழியின் மாண்போ டாற்றின் போக்கால்
உயிரும் மனமும் உடலும் ஒன்றாய்
உயரும் ஒன்றுந் தனக்கென வின்றி,
30. உயிரொடு தொடர்பு உடையது காதல்;
உயிரது ஒன்று உடல மிரண்டு

Koviloor Digital Library



தன்னல மற்றுத் தியாகக் குன்றாய்
மன்னிய காதலின் மிளிர்வதே காதல் ;
நவிற்றொறும் நூல்போல் பயிற்றொறு மின்பம்
35. கவின்றரு மகன்மகள் காண்பது காதல்;
இந்நில மாந்தரை விண்ணோற் றுவதிதே
இன்னலக் காதலில் இறைவனைக் கண்டனம்.

சேலம் முத்து. நமசிவாயம்.

---

# ஒரு குறள்

(ஒரு மறுப்பு)

"வடிவை ஆ. மகாலிங்கம்"

தமிழ் நாட்டிற்கே தனிச்சிறப்பை அளிப்பது திருக்குறள். அதன் கருத்துக்களும், உண்மை நயங்களும் உலகின் பல்வேறு நாட்டுமக்களாற் போற்றப்படுகின்றன. அந்நூல், ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறட்பாக்களையுடையது. அதற்கு உரைகண்டார் பத்துப்பேர் என்று இதுகால் நமக்குக் கிடைக்கும் ஒரு வெண்பாவால் அறிகின்றோம். அவற்றுள் பரிதியார், மணக்குடவர், பரிமேலழகர் என்னும் இவர்கள் உரைகளே ஒருவாறு நம்மவர்க்குத் தெள்ளிய முறையில் ஏடுகளினின்றும் கிடைக்கின்றன. இம் மூன்றனுள்ளும், "நூலிற் பரித்த உரையெல்லாம் பரிமேலழகர் தெரித்த வுரையாமோ தெளி" என்றதற்கேற்பப், பரிமேலழகர் உரையொன்றுதான் மற்றையரால் திருக்குறளின் விரிபொருளை அறிந்துகோடற்கு உதவுகின்றது. இத்தகைய பரிமேலழகர் ஆக்கிய திருக்குறளுரைக்குச் சான்றோர்கள் ஒவ்வொரு வகையாக மறுப்புக் கூறித் திருத்துகின்றனர்.

திருக்குறளில்,

"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்;
கடையரே கல்லா தவர்"

Koviloor Digital Library



என்ற பாவிற்கு ஆக்கிய திருத்த அமைப்பை அன்னார் உரையோடு நோக்குதல் இன்றியமையாததாகும். ஏனெனில் அதினின்றும் பலப்பல உண்மைகள் போதருகின்றன.

'உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்;' 'கடையரே கல்லாதவர்' என இரு கூறு படுத்தி முதற்பகுதி பயனிலையில்லாது போன காரணத்தால் 'உடையார் முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார் தலையரே' எனக் கொண்டனர் அழகர். பிற்பகுதியை மாற்றாது அவ்வாறே ஆண்டு பொருள்கொண்டனர். அதாவது, 'செல்வர்களது முன்னிலையிலே வறுமையுற்றார் நிற்றல் போன்று தங்கள் ஆசிரியர் முன்னிலையிலே பணிவுடன் தாழ்மையாக நின்றாலும், கற்றவர்கள் தலையாயவரே. ஆனால் அதற்கு நாணிக் கல்லாதவர் கடையாயவரே யாவர்' என்பதாகும். பிற்பகுதியிற், கல்லாதவர் கடையர்என ஆசிரியர் கூறியதிலிருந்து, முற்பகுதியிற், கற்றார் தலையாயினார் எனச் சேர்த்துப் பரிமேலழகர் பொருள் கூறினார். இது 'கல்வி' எனும் அதிகாரத்தில் அமைந்ததாகலின், கல்வி கற்கும் மாணவர் எவ்வாறு ஆசானிடம் பாடம் கேட்டல் வேண்டும் என்பதை நன்றாக ஆராய்ந்தே அழகர் இவ்வாறு பொருள்கொண்டனர்.

மேற்கூறிய பரிமேலழகர் உரையை மறுத்தவகையாகவும், அதனைத் திருத்திச் செவ்வைப்படுத்திய வகையாகவும் ஒருவர் பொருள் கொள்கின்றார். அவர் கூறுவது :

"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்" என்ற பகுதியிற் பயனிலையைக் கொண்டு சேர்த்துப் பரிமேலழகர் கூறுவது வேண்டப்படுவதின்று. அந்தப் பகுதியிலேயே பயனிலை அமைந்து கிடக்கின்றது. அது, சிறிது ஊன்றி நோக்கி உணர்வார்க்குத் தெள்ளிதின் தென்படும். இராம காதையில் தவம் செய் தவமாம் தையல் சீதையைக் கண்ட சொல்லின் செல்வன் அனுமன், இராகவனை அடைந்தகாலை முதலில், "கண்டனன் கற்பினுக்கு அணியை" என்கின்றான். வேண்டியவற்றை உறுதிப்படுத்துவதற்குக் 'கண்டனன்' என்ற பயனிலைச் சொல்லை முன்னால் வைத்தமைபோன்று, 'உடையார்' என்பது செவ்விய பொருளைக் காட்டுதற் பொருட்டு முன்னால்

Koviloor Digital Library



அமைந்த பயனிலையாகும். ஆகலின், பயனிலையை முதலிற் கொண்டு எழுவாயை இறுதியிற் கொண்டனர் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனுர். எனவே, 'கற்ருர் உடையார்' என்று கொள்ளவேண்டும்.

"அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்"

என்று பிறிதோரிடத்துக் கூறியதும் இதற்குத் துணையாயிருக்கிறது. இனிப் பிற்பகுதியாகிய 'கடையரே கல்லாதவர்' என்பதிலும் அங்ஙனமே பயனிலை முன்வந்தது; அதற்கு அவ்வாறே பொருள் கோடல் சாலும்" என்பதாகும்.

மேற்கூறிய முறை சிறிது ஆராய்தற்குரியது. ஆராய்ச்சியிற் போந்த செய்யுள் 'கல்வி' என்னும் அதிகாரத்துள்ளது என அறிகின்ருேம். அதனை எண்ணத்துட்கொண்டே பொருளை நோக்குவோம்.

கல்லாதவர் கடையர். இதிலிருந்து கற்றவர் எந்த நிலையிலுள்ளவர் என்பதை எண்ணிப்பார்த்தால், 'கற்ருர் கடையரல்லாதவர்—அதாவது உயர்ந்தவர்—தலையாயர் எனப் பெறுகிருேம்' 'கல்லாதவர்' என்பதற்கு எதிர்மறைப் பொருளுடையது கற்ருர். எனவே அதன் பயனிலையாகிய கடையர் என்பதும் எதிர்மறைப் பொருளைக்கொண்டு சிறப்பைக் காட்டாதா? கல்வியைக் கூறுங்காற், கற்கவேண்டுவோரது கல்வி முறைமையை அறிவித்தல் வேண்டுமா? அன்றேல் உடைமையைக் காட்டல் வேண்டுமா?

அங்ஙனமே கொள்ளுவோமாயினும்; 'முன் இல்லார் போல் ஏக்கற்றும்' என்ற தொடருக்கு எப்பொருள் கொள்வதோ? அந்தப் பெரிய ஐயமே நம் மனத்திடை நிலவுகின்றது.

மேற் கூறிய இருவகைப் பொருள்கோள் முறைகளையும் ஆராய்ந்து, உண்மைப் பொருளை வெளியிடுதல் அறிஞர் கடன்.

---

Koviloor Digital Library

# செய்திகளும் குறிப்புகளும்

கலைச்சொல்லாக்க முயற்சி: கல்லூரிகளில் எல்லாக் கலைகளையும் தாய் மொழிகளிலேயே கற்பிக்கவேண்டும் என்று முன்னம் அரசினர் ஒரு திட்டம் வெளியிட்டனர். அதற்குத் தாய்மொழிகளிற் கலைச் சொற்கள் அமைக்கவேண்டிய கட்டாயமுண்டாயிற்று. அவ்வகையிற் சிற்சில முயற்சிகள் செய்யப்பட்டன. தமிழர்கள் தமது தாய்மொழியாகிய தமிழ் மொழியில் பல கலைச் சொற்களை உருவாக்கினர். இப்போது அவ்வகையில் முடிபாக ஓர் ஏற்பாடு செய்வது கருதி, அதற்கு உதவியாகச் சென்னை யரசினர், அறிஞர் குழு ஒன்றை அமைத்திருக்கின்றனர். அக் குழுவினர் வருமாறு:

மாண்புமிக்க V. S. சீனிவாச சாத்திரியாரவர்கள், தலைவர். பிறர்: திரு Dr. C. R. ரெட்டி, R. M. சிடேதம், சிடாக், A. தானியேல், J. சூரிய நாராயணன், வித்துவான் G. J. சோமயாசி, மதுரைத் தமிழ்ச் சங்க உறுப்பினர் ஒருவர், N. வேங்கடராமையர், J. இராமபிசரோட்டி, திருமதி கவுசலியா, இராவ்பகதூர் M. C. S. அநந்த பதுமநாபராவ், Dr. முகமது அப்துல் அக், V. இராசகோபால ஐயர், K. சாமிநாதன் என்போர்.

தாய் மொழிகட்கு ஆக்கமான நிகழ்ச்சிகள் செய்யச் சென்னை அரசினர் இங்ஙனமெல்லாம் முற்பட்டிருப்பது பெரிதும் வரவேற்றற்குரியது.

எப்படியானும் தமிழ்மக்கள், எவ்வகைக் கலை நுட்பங்களையும், எவ்வகை எண்ணங்களையும் தம் அருமைத் தாய்மொழியாகிய தமிழ் மொழியிலேயே எண்ணவும் பேசவும் பயிலவும் வாய்ப்பு நேரவேண்டுமென்றுதான் பன்னாளாக எல்லாரும் விரும்பிவருகின்றனர்.

இங்கே கட்டாயமாகக் குறிப்பிடவேண்டுவது ஒன்று உண்டு. தமிழில் அமையும் கலைச் சொற்கள் முழுதுந் தூய தமிழ் மொழியிலேயே அமையவேண்டும். வட எழுத்தாதல், வட சொல்லாதல், பிற இந்திய மொழியாதல், அல்லது அயல் நாட்டு மொழியாதல் தமிழில் ஒரு சிறிதும் இடங்கொள்ளலாகாது. கட்டாயமான குறியீட்டுப் பெயர்களாய், வரலாற்றுண்மை அறிவதற்குரியனவாய் இருந்தால், அவற்றைமட்டும் முற்றும் தமிழ்ச்சுவை மிக்க வடிவில் அழகு சிறந்தனவாய் ஒசை மாற்றலாம். English என்பது 'ஆங்கிலம்' எனவும், England என்பது 'இங்கிலாந்து' எனவும் தீஞ்சுவையான தமிழ் வடிவில் அழகாய் அமைந்தாற்போல, நல்ல முறையில் அமைதல் வேண்டும். இச் சொல்லாக்கத்தை முதன்முதலில் யார் செய்தார்களோ அவர்களைத் தமிழ் நாடு என்றும் வாழ்த்திமகிழ்கின்றது. அயல்மொழிக் குறியீடுகள் தமிழகத்திற் புகும்போதே அரசினர் இங்ஙனஞ் செய்துதவி நடைமுறையில் வழங்குமாறுஞ் செய்ய வேண்டுவது கட்டாயமாகும்.

Koviloor Digital Library



கலையறிவோடு தமிழ்ச் சொற்களை நோக்கும் ஊக்கமும் பயிற்சியும் இடையிற் குன்றிப்போன காரணத்தால், நுட்பமான பொருள் வேறுபாடுகளைத் தனித்தனியே உணர்த்தும் பொருட்கு நிரம்பிய சொற்களெல்லாம் சில காலமாகவே பொதுமையில் வழங்கிவந்து தம் நுண்பொருள் வழக்குகள் இழந்திருக்கின்றன. பின்னோர், வடமொழி வழக்கை நோக்கி வீணான பொய்க் கற்பனைகளும் பிற பொருளணிகள் சொல்லணிகளுமெல்லாம் தமிழில் வரைதுறையில்லாமல் நுழைத்துத் தமிழ் வழக்குகளை இத்தகைய குழறுபடையான இரங்கத்தக்க நிலைக்குக் கொண்டுவந்துவிட்டனர். விட்டில்கள் பழம் பழம் என்று நினைத்துத் தீப்பிழம்பில் வந்து விழுந்து தம்மையே மாய்த்துக் கொள்வதோடு அவை அப் பிழம்பினையும் அவித்துவிடுதல்போல, இடைக்காலத் தமிழ்ப் புலவரிற் பெரும்பாலார் அழகு அழகு என்று மயங்கி வீணான சொற்பொருளணிகளில் விழுந்து தமதுணர்வுக்குப் பொய்மை தேடிக்கொண்டதுமல்லாமல் தமிழ் மொழியின் அரிய குறியீட்டுவழக்குகளையுஞ் சிதைத்தொழித்த செயல் மிகுதியும் வருந்தற்குரியதாயிருக்கிறது.

தமிழ் மொழி, சொல்வளம் பெருக நிரம்பியது; சொல்லாக்க முறைகளாகிய வருவாய்க் கால்களும் நிரம்ப அமைந்தது. எத்தகைய சொல்லாக்கமும் தமிழ்மொழியில் மிக எளிதிற் செய்து முடிக்கலாம். தமிழ்மொழியில் அமைந்துள்ள பொருந்திய விகுதிச் சிறப்புகள், சாரியைகள் முதலிய இடைச்சொற்கள் இச் செயலுக்கு மிகவும் உதவியாயிருக்கும். ஆசிரியர் தொல்காப்பியர் சாரியைகளின் பயனை மிகச் சிறப்பாக உணரவைத்திருக்கிறார். தமிழ்ப் புலமையின் எல்லை இவ் விடைச்சொற்களின் பயிற்சிச் சிறப்பினாலேயே நிறைவடைகின்றது. இங்ஙனமே எழுத்துக்களிலும், இடையின எழுத்துக்களின் பயனும் பெரிதும் நுனித்தறிந்துகொள்ளுதற்குரியது. சொல்லாக்கங்கட்கு இடையின எழுத்துக்கள் பேருதவி செய்வனவாயிருக்கின்றன.

இனிச், சொல்லாக்கங்கள் செய்யும்போது, ஓர் அயல்மொழிச் சொல்லைச் சொன்னவுடன் என்னென்ன கருத்துக்களை அது நினைவுக்குக் கொண்டுவருமோ அத்தனைக் கருத்துக்களும் புதிது செய்யுந் தாய்மொழிச் சொல்லில் அமையவேண்டும் என்று கருதவேண்டுவதுங் கட்டாயமில்லை. சொற்களின் பொருளுணர்ச்சிகள் பெரும்பாலும் பழக்கத்தினாலேயே நிறைவடைகின்றது. திரு சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாரவர்கள் 'வசன நடை' என்று தாம் எழுதிய கட்டுரையில், "பொருளைப் புகுத்திப் பேசிப் பழகிவந்தால் தானே பாஷை வளம் பெறும்" என்று இந் நுட்பத்தைத் துணிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். ஆக்கத்தின்போது பொருள் சிறிது கருக் கொண்டால், பழக்கத்தினால் அக் கரு வளர்ந்து முழுமையில் உருக் கொள்ளுதலே மொழியின் வளர்ச்சிநிலை. சொற்களெல்லாம் பெரும்பான்மையும் இங்ஙனமே உள்ளன.

Koviloor Digital Library



ஆதலால், எவ்வகைக் காரணங்கொண்டும் தமிழ்மொழிச்குச் சொல்லாக்கங்களில் எந்தப் பிறமொழியின் சொல்லுதவியும் எழுத்துதவியும் சிறிதுந் தேவையில்லை என்பது தேற்றமேயாம்.

இப்போது, பொதுமையில் வழங்கும் தமிழ்ச் சொற்களிலும் ஊன்றி வரையறுத்தாற் பல குறியீடுகள் கிடைக்கக்கூடும்.

முன்னே, திருநெல்வேலிக் கலைச்சொல்லாக்கக் கழகம் செய்து முடித்துள்ள ஆக்கங்களையும் ஒழுங்குசெய்துகொள்ளலாம். பழநூற் பயிற்சிகளிலும் ஆக்கமுறை நுட்பங்களிலும் கலையுணர்விலும் பழக்கமுள்ள அறிஞர்களாக இன்னுந் தமிழகத்திலுள்ள பெருமக்களையும் இவ் வகையில் இக் குழுவினர் கலந்துகொண்டு தமிழ்க்கு ஆக்கமான முறையில் தூய்தமிழில் இவ்வரும்பெருஞ் செயலைச் செய்து ஒரு முடிவுக்குக் கொண்டுவருவது இன்றியமையாததாகும்.

தூய்தமிழில் அமையாத எத்தகைய சொல்லாக்கங்களையும் சிறந்த தமிழறிஞர்கள் ஏற்றுப் போற்றாராதலின், இதற்குமுன் வேறு எந்நலங்களும் எதிர்நிற்பனவல்ல. தூய்தமிழோடு அமையுமாயின் மட்டுமே பிறநலங்களும் ஏற்றுக்கொள்ளுதற்குரியன. இக் கலைச் சொல்லாக்க நன்முயற்சி, தமிழ்த்தாய்க்கு ஒரு திருமாளிகை அமைப்பது போன்றதாகும்.

திருவருளால் இவ்வரும்பெருந் திருப்பணி நன்முறையில் நன்கு நிறைவேறி நலம்பயக்கவேண்டுமென்று விரும்பிநிற்கிறோம்.

* * *

சென்னை, தமிழர் நல்வாழ்க்கைக் கழக வேண்டுகோள்: தமிழ்ப் பெருங்குடி மக்களே எழுங்கள்! தமிழர், நாட்டை இழந்தாராயினும், மூவேந்தர்களையும் இழந்தாராயினும், தொன்மையான நாகரிகத்தை இழந்தாராயினும் தமிழ் மொழிக்குத் தீங்கு நேரிடில் பொறுக்கமாட்டார்களெனச் சொல்லப்படுவதைக் கேட்கிறோம். இதனைக் கட்டாய இந்திப் போர் நிகழ்ந்தகாலைத் தமிழர்கள் மெய்ப்பித்துவிட்டனர். உலக வரலாற்றிலேயே இதுவரையில் நிகழாத மொழிப் போர் ஒன்று தமிழ் நாட்டில் நிகழ்ந்தது; தமிழர்கள், தமிழ் மொழியின் ஆக்கம் குன்றாது அதனைக் காக்கவேண்டி அப்போரில் முழுப்பங்குகொண்டு பல இன்னல்களுக்குள்ளாகியதோடு நில்லாது சிறைக்கோட்டமும் நணுகினர். தமிழர்கள் அப்போது காட்டிய ஒன்றுபட்ட நிலையும், கட்டுப்பாடும், உறுதியும், ஒற்றுமையும் தமிழின் சிறப்புக்கும், தமிழர் முன்னேற்றத்திற்கான வழிகளைக் காண்பதற்கும் பயன்படுத்தப்படலாமென இக் கழகம் கருதுகிறது.

ஆகவே, தமிழர் மண்டபம் ஒன்றைத் தமிழரது தலைநகராகிய சென்னையில் கட்டாயம் நிறுவவேண்டிய முயற்சியை மேற்கொள்ள வேண்டுமெனத் தமிழர் அனைவரையும் இக்கழகம் கேட்டுக்கொள்ளுகிறது. இந்நோக்கத்தை நிறைவேற்றுவான்வேண்டித் தமிழர் தலை

Koviloor Digital Library



வர்களின் கூட்டமாயினும் மாநாடாயினும் ஒன்று கூட்டி அதற்காக ஒரு திட்டத்தை உருவாக்குவது நலமென இக்கழகம் கருதுகிறது. இரண்டரைக் கோடி தமிழர் இதனைச் சிந்தித்தால் எளிதில் இது வெற்றி பெறும். தமிழர் பலர் ரூபா ஒன்று இதற்கென உதவினுலும் இம் மண்டபத்தை அமைப்பது மிக எளிதாகும். திரட்டப்படும் இந்நிதியில் தமிழர் மண்டபத்துள் நூல் நிலையம் ஒன்று அமைக்குமாறும், சிறந்த சங்க நூல்களை எளிய நடையில் வெளியிட ஏற்பாடு செய்து தமிழர் யாவரும் நன்கு பயில உதவுமாறும் இக்கழகம் தமிழர்களை வேண்டுகிறது. மேலும் சிறந்த தமிழ் நூல்கள் ஆங்கிலத்திலும் வெளிவரவேண்டும். அப்பொழுதுதான் தமிழின் தொன்மையையும் தமிழரது சிறப்பையும் ஆங்கிலேயர் உணர்வர்.

இருக்கின்ற பல்கலைக் கழகங்களில் ஒன்றை மாற்றியோ அல்லது தனியே தமிழருக்கெனத் தமிழ்ப் பல்கலைக்கழகம் ஒன்று நிறுவியோ தமிழ்மொழிப் பயிற்சிக்கே பயனுளதாய்ச் செய்யத் தமிழர்கள் கட்டுப்பாடான முயற்சியும் கிளர்ச்சியும் செய்யுமாறும் இக் கழகம் வேண்டுகிறது.

அரசியலாரும் அயல் மொழியாகிய இந்தியைப் பரப்புதற்காக முயலுவதை அடியோடு நிறுத்தி, இம்மாகாண மொழியாகிய தமிழ் மொழியின் வளர்ச்சிக்காக முயன்றால் இந்நாட்டிலுள்ள தமிழரது அன்பையும் ஆதரவையும் பெற்றவர்களாவார்கள்.

இக்கழகம், தனது நோக்கத்தைத் தலைவர்களது ஆழ்ந்த சிந்தனைக்கு விடுக்கின்றது. தமிழர் தலைவர்கள் இதற்காவனவற்றை ஆராய்ந்து விரைவில் முடிவு கட்டுமாறும் வேண்டுகின்றது.

மேலும், தமிழர் தலைவர்களும் தமிழ்ப் பெருமக்களும் அவர்களது ஒப்பற்ற கருத்தை இக் கழகத்தாருக்கு அறிவிக்குமாறும் வேண்டுகின்றது.

14, தியாகராய பிள்ளை தெரு,<br>தங்கசாலை, சென்னை,<br>1—5—1940.

இப்படிக்கு,<br>சென்னை, தமிழர் நல்வாழ்க்கைக்<br>கழகத்தார்.

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—ஆவணி [பரல்-ரு

# நிறைக !

தமியர் உண்டலும் இலரே ; முனிவுஇலர் ;
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சி ;
புகழ்எனின் உயிரும் கொடுக்குவர் ; பழிஎனின்
உலகுஉடன் பெறினும் கொள்ளலர் ; அயர்வுஇலர்.

—புறநானூறு.

இவ்வுலகம் வெறும் மண்ணுருண்டையாயிருப்பதனால் என்ன பயன் ? அல்லது, மக்கட் பண்பில்லாத மக்களைப் படைத்துக் காத்து வருவதனாலேதான் என்ன பயன் இருக்கிறது ? அங்கங்கும் நல்லோர் சிலர் விளங்குவதனாலேதானே உலகமென ஒன்று உண்டு என்னும் மதிப்பிருக்கிறது !

நல்லோர்களுக்குமட்டும் என்ன அப்படி வியப்பான ஆற்றல் !

அப்படி ஒன்றுமில்லை ; 'அமிழ்தமே கிடைப்பதானாலும் தாமே தனியாக உண்டுவிடலாகாது ; யாரிடத்திலும் வெறுப்பிருக்கக் கூடாது ; பிறர் அஞ்சக்கூடிய அருஞ்செயல்களுக்குத் தாமும் அஞ்சி மனம் மடிந்திருக்கக்கூடாது; புகழ்தருங் காரியமென்றால், உயிர் கொடுத்துப் பணி செய்யவும் பின் வாங்கலாகாது ; பழிதருஞ் செயலென்றால் உலக முழுதுங் கிடைக்குமாயினும் அதனை மேற்கொள்ளலாகாது ; எதற்கும் மனக்கவலை கொள்ளக்கூடாது.' இவ்வளவுதாம் ;

இவ்வளவு இருந்தால் யாரும் உடனே நல்லோராய் விடலாம். இப் பண்புகளில்லாதவர்கள் ஒருகாலும் உயர்ந்தோராதல் இயலாது.

நாட்டில் இத்தகைய நன்முயற்சியாளர்கள் நிறைக, நிறைக ! என விரும்புவோம்.

Koviloor Digital Library

# இரண்டு தமிழ்

'அப்படியா செய்தி! இத்தனை நாள் தெரியவே யில்லையே! "வடவேங்கடம் தென்குமரி குணகுட கடலா எல்லை" என்றுதானே எனக்குப் பாடம் கற்பித் தார்கள்' என்று சொல்லிக்கொண்டே ஒரு தமிழன்பர் தமிழ்க் களரியின் உள்ளே நுழைந்தார்.

அங்கிருந்தவருள் ஒருவர், 'அந்த இடைக்காலத்துப் பாட்டையேவா இன்னும் பாடிக்கொண்டிருக்கிறீர்? இந்த ஆராய்ச்சிக் காலத்தில் அந்த எல்லையெல்லாம் எங்கே நிலைக்கும்! நாடுகளின் வடிவங்கள் வரவரத் தானே வெளிப்படுகின்றனவாம். "தென்குமரி வட பெருங்கல் குணகுட கடலா எல்லை" என்றல்லவா எல் லாரும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்?' என்று ஏதோ அது கேட்டு வியந்தவர்போலப் பேசினர்.

அருகிலிருந்த வேருெருவர், 'ஆமாம்; வடபெருங்கல் என்பது வடவேங்கடந்தானே?' என்று ஓர் அரியதான பெரியதான ஐயத்தை எங்கிருந்தோ கொண்டுவந்து நடுவில் 'தொப்' பென்று போட்டார்.

இதைக் கேட்டால் சிரிப்புவராமலிருக்குமா? ஒருவர் மெதுவாக அதனை அடக்கிக்கொண்டு, 'இவரைப்போல் திரிபாக நினைத்துக்கொண்டிருப்பவர் இன்னும் எத்தனை பேரோ! ஏது இது பெரிய மலைப்புரட்டாக இருக்கிறது! இதற்காகவோ இன்னும் ஒரு பாட்டு, இதற்கு விளக்கம் போலப், புறநானூற்றில் (சு) வருகிறது!' என்று நினைத் துக்கொண்டு,

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்"

Koviloor Digital Library



என்று அப் பாட்டையும் சொன்னர். சொல்லி, 'வட பெருங்கல்' என்பது இன்னதென்று இப்போது தெரிகிறதா? 'பனிபடு நெடுவரை' என்றது போதுமா? அல்லது 'இமயமலை' என்று இன்னும் வெளிப்படையாகவே சொல்லவேண்டுமா' என்று விளக்கியும் புதுக்கினர்.

'என்ன இப்படிக் 'கட கடா, கண கண' என்று உருப்போடுகிறர்களே என்று பலரும் இவர்கள் பேச்சுக்குக் காதுகொடுத்தனர். இவர்களுக்குள் ஏதோ 'எல்லைத் தகராறு' இருக்கிறதென்று நன்ருய்த் தெரிந்தது. அவர்கள் மேலும் பேசிக்கொண்டதிலிருந்து உண்மை விளங்கிற்று; அவர்கள் பேச்சுகள் பின்வருமாறு தொடர்ந்தன.

'ஆமாம்; இப்போது உலகத்தில் எங்குந்தான் எல்லைத் தகராறு இருக்கிறது. மேல் நாடுகளில் எல்லைகள் பாடு பஞ்சுபடாத பாடாயிருக்கிறது!

'இந் நாட்டுக்கு மட்டும் அப்படி இல்லை; இங்கே இயற்கை நிகழ்ச்சியே பழைய காலத்திலிருந்து எல்லைகள் வகுப்பது வழக்கமாய்விட்டது. கடலில் வெள்ளம் வரும்போதெல்லாம் தமிழ்நாட்டின் எல்லை இயற்கையாகவே வகுக்கப்பட்டது. இப்படி ஊழி ஊழியாக மாறி மாறி வந்து இப்போது ஓர் எல்லை நிலைத்திருக்கிறது. அந்த இயற்கை எல்லையைத்தான் பின்னற் சொன்ன பாட்டுகள் குறிக்கின்றன. மற்றப்படி, இத் தமிழகத்தில் எல்லைத் தகராறுகள் நேர்வதெல்லாம், செயற்கையாக மக்கள் அவ்வப்போதும் செய்துவரும் நிலையாத எல்லைகளே தவிர வேறில்லை.

'ஆனல் இந்தியாதான் தமிழகமோ?

'இந்தியா ஒரே நாடுதான். முன்னல் 'தமிழகம்' என்று பெயர். பின்பு 'நாவலந்தீவு' என்று பெயர்.

Koviloor Digital Library



அதன்பின் ' பரத கண்டம் ' என்று பெயர். இப்போது ' இந்தியா ' என்று பெயர். வடக்கே மலை ; தெற்கே ஆறு ; கிழக்கும் மேற்கும் கடல் ; இப்படி இயற்கை எல்லைகளால் அமைந்த அழகிய நாடு இது. இல்லாமலா,

"தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லை
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப"

(மதுரைக், ௭0-௨)

என்றும்,

"குமரியொடு வடஇமயத்து
ஒருமொழிவைத்து உலகாண்ட சேரலாதன்"

—(சிலப், உரைப்)

என்றும்,

"வடதிசை எல்லை இமய மாகத்
தென்னங் குமரியொடு ஆயிடை" (பதிற், ௪௩)

"தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாஎல்லை
குன்றுமலை காடுநாடு
ஒன்றுபட்டு வழிமொழிய" (புறம், ௧௭: ௧-௪)

என்று இவ் வரலாற்றுப் பாட்டுகளெல்லாம் நிறையத் தோன்றியிருக்கின்றன !

' அது பழைய காலத்து ஏட்டுத் தமிழகம் ;

' அதுதானே இல்லையாம். அப்படியேயிருந்தாலும், ஏடு பழைய ஏடாயிருந்தாலென்ன புதிய ஏடாயிருந்தாலென்ன ? இந்தியா இன்றைத் தமிழ்நாடுதானும் ; என்றுந் தமிழ்நாடுதானும். இந்தியா முழுமையும் இப்போது வழங்குவது தமிழ்மொழிதானும். இக்கருத்து எங்கும் விறுவிறுவென்று இப்போது பரவுகிறதே.

' ஓ, இந் நாவலந்தீவு பதினெட்டு மொழிகள் பேசும் நாடாயிருந்தது என்று சில நூற்றாண்டுகளுக்கு முன்

Koviloor Digital Library



சொல்லிவந்தார்கள். இப்போது நூற்றுக்கணக்கான மொழிகளாகப் பெருகிவிட்டன என்கிருர்கள். திடு மென்று எல்லாம் ஒரு மொழியாக அடங்கிவிட்டது வியப்புதான்!

'வியப்பொன்றுமில்லை. உலகத்தில் ஓரிடத்தில் புறப்பட்டு எவ்வளவு தொலைவு போனலும் திரும்ப எங்கே வந்து சேரவேண்டும்? முதலில் புறப்பட்ட இடத் துக்குத்தான். மொழிகளும் இப்படி ஓர் உலா வரு கின்றன.

'இயற்கையின் திருக்கோலங்களை யார் முழுதுங் கண் டவர்! அந்த ஆற்றலுக்கு முன் எதிர் நிற்பதுதான் எது?

'தென்னட்டு மொழிகளுக்கெல்லாம் தமிழைத் தாய்மொழி என்று சொல்லுகிருர்கள். வடநாட்டு மொழி களுக்கெல்லாம் வடமொழியைத் தாய்மொழி என்று சொல்லுகிருர்கள். இதனல், இந்தியாவின் நூற்றுக் கணக்கான மொழிகளும் தென்மொழி வடமொழி என் னும் இருமொழிகளில் அடங்கிவிடுகின்றன.

'அந்த வடமொழியும் தமிழ்மொழியுள் அடக்கமாம்; தமிழர்தம் பெருமை சொல்லவும்படுமோ!

'அது சரி, அது நினைக்கவும்படாதுதான்; இப்போ தெல்லாம் 'ஆராய்ச்சி' என்பது, என்னென்னவோ செய் கிறது. கடலெல்லாம் நிலமாகிறது; நிலமெல்லாம் கடலா கிறது; மலை உருளுகிறது. ஆறு புரளுகிறது. இவற்றின் பாடே இங்ஙனமானல், மக்கள் பிரிவுகளும் அவர்கள் மொழிப்பிரிவுகளும் என்ன ஆவது! இருக்கட்டும்; தமிழ் மொழிதான் வடமொழியென்றே வைத்துக்கொள்வோம்.

'வைத்துக்கொள்வது ஒன்றுமில்லையாம்; உண் மையே அப்படித்தானும். இங்ஙனமெல்லாம் ஐயப்பட

Koviloor Digital Library



வேண்டியது சிறிதுமில்லை என்பதற்காகத்தான், 'உண்மையில்' என்று ஒரு சொல்லை முன்விழிப்பாகவே போட்டுக்கொண்டு,

"உன்மையில், வடமொழி என்பது வடதமிழ்;
தென்மொழி என்பது தென்தமிழ்!"
(லோகோபகாரி, விக்கிரம, ஆவணி, உ; (17-8-40)

என்று தீர்ப்புச் செய்திருக்கிறார்கள். 'யாராவது, வடமொழி யென்பது தனிமொழி; அது தமிழிலிருந்து தோன்றியதன்று என்று மேற்போக்காக எண்ணமிட்டால், என்ன காரணத்தினால் அப்படி எண்ணமிடுகிறார்களோ? ஆனால், உண்மை அப்படியன்று;' என்று இத்தொடர் விளக்குகிறது. 'வடமொழி ஏதோ வேறு ஒலிபோலவும் என்னவோ போலவும் தோன்றினாலும் உண்மையில் அது தமிழே' என்கிறது. இவ்வளவு வலிவாகச் சிறு ஐயத்துக்கும் இடமில்லாதபடி விளக்கிநிறுவும்போது, இந்தியா தமிழகந்தான் என்பதில் இனியும் ஐயம் என்னத்துக்கு!

'ஓ, அப்படியானால், 'தமிழ் நாடு தமிழருக்கே' என்பதா, 'இந்தியா இந்தியருக்கே' என்பதா, 'இந்தியா தமிழருக்கே' என்பதா?

'எப்படி வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளுகிறது! பொருள் ஒன்றுதானே. தெளிவுக்காக வேண்டுமானால், 'இந்தியா தமிழருக்கே' என்றாற்போகிறது.

'ஐயோ, கூவம் ஆறு என்ன ஆவது?

'அதை நினைக்கும்போது மிகவும் இரக்கமாகத்தான் இருக்கிறது. இது, மலைகளே உருளுங் காலம்.

'ஆனால், ஒரு பிரிவினைக்குமே இடமில்லை; இந்தியர்கள் தமிழர்களே என்று தீர்மானிக்க வேண்டியதுதான்!

Koviloor Digital Library



'தீர்மானத்துக்குக் கூடவா தடை! எல்லாந் தீர்மானிக்கவேண்டியதுதான்!

'இந்தக் கொள்கையை முன்னாலேயே இவ்வளவு உறுதியாக வெளியிட்டிருந்தால், நாட்டில் எவ்வளவு நன்மைகள் விளைந்திருக்கும்! இப்போது, எத்தனைப் பிளவு? எத்தனைச் சாதி? எத்தனை அவை? எத்தனை விரிவுரை? எவ்வளவு செலவு? எவ்வளவு போராட்டம்? எவ்வளவு இழப்பு? இராமசாமியார், காந்தியார், சின்னா போன்றவர்க்கும் அரசினர்க்கும் எவ்வளவு கவலை? எல்லாம் ஒரே முயற்சியாய் உருவாயிருக்குமே!

'அதற்கு, வடதமிழ் தென்தமிழ் என்று இப்படி இரண்டு தமிழாக இல்லாமல், பழமைபோல என்றுமுள தென் தமிழாகவே ஒரே தமிழாய்விட்டால் உருவாய் விடுகிறது.

'அதற்கென்ன, இரு தமிழாளரும் ஒரே தமிழராய் மாறினால், மொழியும் ஒன்றுபட்டுவிடுகிறது. அங்கே தானே வலிவு இருக்கிறது. நிலைக்கவும் நிலைக்கும்! வாழ்க்கையும் உணர்ச்சியும் மொழியும் வேறு வேறு அல்லவே!

'ஒன்றுபடுவதற்குத்தான் எல்லாரும் என்னென்னவோ செய்கிறார்கள்! இல்லாமலா, 'தென்மொழி வடமொழி யென்னும் வேறுபாடே வேண்டாம்; வடமொழி யென்னும் வடதமிழைத் தென்தமிழ் என்னும் ஒரே தமிழாகவே ஆக்கிக்கொள்ளவேண்டும்; வடமொழியாளர் வேறல்லர்; எல்லாரும் தமிழரே' என்றெல்லாம் சொல்லுகிறார்கள்! நடக்கும் என்னும் நம்பிக்கை இல்லாமல் ஏன் சொல்லுகிறார்கள்?

'இருக்கலாம்; முன் இழந்துபோன நாடுகளை மீண்டும் அடைவதற்கு, உலகமெல்லாம் முயற்சிசெய்கிற காலம் இது; ஒரு காலத்தில் முழுமையும் தமிழகமாய்த்

Koviloor Digital Library



தமிழர் ஆட்சியில் இருந்த இந்தியா மீண்டும் தமிழக மாகவே ஆகவேண்டும் என்பதற்காக, 'எல்லாம் தமிழே; எல்லாரும் தமிழரே என்னும் உணர்ச்சிபெற வேண்டும்; வேறுபாடே கூடாது; எல்லாச் சாதி சமயச் சள்ளை களையும் போக்கிக்கொண்டு ஒரே ஒற்றுமையாய்த் தமிழர் என்று வீறி யெழவேண்டும்' என்று சொல்லு கிறார்கள்போலிருக்கிறது! அதைப்பற்றி யென்ன?

'அது சரி; திரிந்த உருவம் குணம் செயல் முதலியன வெல்லாம் தம் சொந்தத் தமிழுருவம் பெற்றால், எளிதில் வேறுபாடே இல்லாமற்போகிறது! இதில் ஒருவர் என்ன வேறுபடுத்துவது இருக்கிறது!'

இப்படி அவர்கள் பேசிக்கொண்டார்கள். இதிலி ருந்து, எல்லாம் 'லோகோபகாரி' வெளியிட்ட 'இரண்டு தமிழ்க'ளின் வேலை என்று தெளிவாகத் தெரிந்தது; இனி, இக்கொள்கை கொண்டு இன்னும் என்னென்ன ஒற்றுமையைச் செய்ய அது நினைத்திருக்கிறதோ? நாட்டில் என்னென்ன கிளர்ச்சிகள் உண்டாகுமோ?

இடைக்காலத்தில் முத்தமிழ் உணர்ச்சி சிறிது குன்றியதற்கு, இவ்விரு தமிழ்க் கிளர்ச்சியை இப்போது உண்டுபண்ணிவிட்டது மிகவும் மேன்மையே.



Koviloor Digital Library

# அரித்திப்பு

## " த. இராமநாத பிள்ளை, B. A., Lond.
## சுன்னாகம், இலங்கை "

(முன் தொடர்ச்சி)

வாயில்களே நம் சிறந்த கருவிகள். பொறியுணர்வே ஐயந்திரிபற்றது—வழுவிலாதது. வாயிற் காட்சிகள் சிறிது குற்றமுடையவை யாயினும், அவை மூலமாகவே ஞேய மாகிய உலகை ஞாதுரு அறிவான். இத்தகைய ஐம்புல வறிவே மக்களால் அளந்தறியக்கூடிய அறிவென்பதை உணர்க. வாயிற் காட்சியையே எமது அளவையாகக்கொண்டு நன்மை தீமையை வரையறுக்க வேண்டியதெனவும் இன்ப வாழ்க் கைக்கு யாது துணையாகுமோ அதுவே நன்மையென எண்ணி இன்புற்றிருத்தலே கடன் எனவும் ஆசிரியர் வற்புறுத்தினர். இந்நிலையை அடைந்த ஒருவன் தன் அயலாரையும் அவ்வின் பத்தை அடையச் செய்தலே முறை. இவ்வறத்தாற்றைத் தவிர வேறின்றென அறிக. பரம நன்மை என ஒன்று இல்லை. நோக்கங்களுள் மாநோக்கமென ஒன்று இல்லை. மாநோக்க மென ஒன்று இல்லையென உணர்தலே மாநோக்கமாகும். அம் மாநோக்கமும் மாநோக்கமின்றி இருத்தலே. ஒவ்வொரு வினையையும் ஒரு தனி வினையாகவே நுகரவேண்டியது. நுகர் தற்குரிய வினையை ஐம்புலன்கள் நமக்குக் காட்டிக்கொடுக்கும். இங்ஙனம் கூறினும் அரித்திப்பு புலன்வழிச் சேறலை மாநோக்க மெனக் கூறினாரென்று கருத இடமில்லை. என்னை! இன்பம் நுகர விரும்பும்பொழுதே அதற்குரியதான புலன்வழியிற் செல்லவேண்டும் என்பதை அவர் இனிது விளக்கிக் காட்டி னார். அரித்திப்பு ஒருவரே வறுமையிலும் செல்வத்திலும் இன்பம் துய்க்கும் இயல்புடையவர் என ஆசிரியர் பிளேற்றோ வியந்து கூறினார்.

இனி ஆசிரியர் பேச்சே இன்பத்தையும் ஞானத்தையும் ஒருங்கு தருகின்றது. அவற்றுள் சில தருதும்,

Koviloor Digital Library



சிருக்கூசாப் பட்டினத்திலே வேந்தன் 'டையோனிசியசு' என்பவனுடைய அவையிலே அரித்திப்பு இருந்துழி, வேந்தன் ஆசிரியரைச் சில சமயங்களில் குறைவுபடுத்தினன். எனினும், ஆசிரியர் பற்றற்ற நிலையே சிறந்த தென்பதை மறந்திலர். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்பதை உணர்ந்தோராகலின், ஆசிரியர் வெகுண்டிலர். ஒருமுறை வேந்தன் அவரைக் கடைசி இருக்கையில் அமரும்படி சொன்னான். அதற்கு அவர் கடைசி இருக்கையை முதன்மை பெறச் செய்யும் நோக்கம் மெச்சத்தக்கதென விளம்பினர். ஒருவனது ஒழுக்கத்தைப் பிறர் கண்டிப்பினும் அவ்வொழுக்கத்தில் ஒருவன் இன்பம் நுகரக்கூடுமானல் அது நல்லொழுக்கமாகுமென ஆசிரியர் உரைத்தனர். ஒருநாள் வேந்தன், வீணை வாசிக்க வல்லோரான மங்கையர் மூவரை அளிக்க, அரித்திப்பு உவந்து பெற்றனர். இத்தகைய அழகிய மங்கை ஒருத்திக்காகப் 'பரிசி' என்பவன் தன்னுயிரை இழந்தானல்லனோ? யான் ஏன் மூவரை முழு மனத்துடன் அழைத்துச் செல்லக் கூடாதென உரைத்தனர். ஆசிரியர் அம்மூவரையும் தன்னில்லத்தில் விருந்தோம்பிய பின் அவர்களை அரசவைக்குத் திரும்பும்படி ஏவினர். அரித்திப்பு, தன் இளமையில் 'வேயிசு' என்னும் வரைவின்மகள் ஒருத்தியைக் காதலித்தபொழுதும் அளவு கடந்தார் அல்லர். அவள் சிற்றின்பங் கடியும் ஞானிகளைத் தன் வயமாக்கிக் குறைவுபடுத்தலில் இன்புற்றாள். அரித்திப்பு அவளோடு புல்லியும் புணர்ந்தும் இன்புறுகிறாரென ஒருவன் மொழிந்தானாக, அவர், தான் விரும்பும்பொழுது கூடல் நிகழு மொழிய, அவள் தன்னை மயக்கவில்லை என விடையளித்தனர். ஐம்புலன்களை முற்றும் அடக்குதலினும் அவற்றில் அளவுடன் இன்புறுதல் ஞானமென்பர். பிறிதோர் பொது மகளிடம் சென்றுழி, அவரிடம் கற்றோன் ஒருவன் கண்டு நாணமுற்றானாக, அவர் 'வரைவின் மகளிருடைய இல்லத்துள் புகுதலினும், புகுந்தபின் வெளிவா முடியாமல் இருப்பதே கேடு' என விளக்கினர்.

ஒரு நேரம், ஒரு வாதி அவரை இழித்துப் பேசினனாக, அவர் எழுந்து சவையைவிட்டு நீங்கினர். சவையோர் இடை

Koviloor Digital Library



யில் எழுதல் குற்றமென்றனர். 'இழித்துப் பேசும் உரிமை ஒருவர்க்கு உண்டெனின், அதைக் கேளாமல் விடும் உரிமை தனக்கு உண்'டென உரையாடினர். ஒருநாள் வேந்தன் 'டையோனிசியசு', ஆசிரியரை விளித்து, 'நீர் ஞானியல்லீரா? ஞானிகள் ஏன் அரசவையை நாடுகின்றனர்' எனக் கேட்டனர். ஆசிரியர். 'நன்று கடாயினீர். ஞானம் தேவையான காலத்தில் நான் சோக்கிறேற்றிசு என்பவரிடம் செல்வதுண்டு ; இப்போது பொருள் தேவையாகலின், நும்மிடம் வந்தேன் என்றனர். அதற்கு விடையாக வேந்தன் 'நன்று கூறினீர்— ஆனல் செல்வர்களை ஞானிகள் தேடித் திரிகிறார்களே ஒழிய, ஞானிகளைச் செல்வர் தேடுகின்றிலர்' என, ஆசிரியர், 'சரி தான்—ஞானிக்குத் தன் தேவை தெரிகின்றது ; செல்வனுக்குத் தன் தேவை தெரிகின்றிலது' என விடையிறுத்நனர். பின்பு ஒருநாள் ஒருவர், 'ஏன் ஐயா, வேந்தனின் பாதங்களை வணங்கி இரக்கின்றீ'ரென, அரித்திப்பு, 'அது, என் குற்றமன்று ; அரசனுடைய காலிலேதான் அவன் செவி உளதெனத் தெரிகிறது' என்றனர். ஒருமுறை கடற் பயணம் செய்துழி, புயல் எழுந்ததும், அவர் அஞ்சினர். மாலுமி, 'இஃதென்ன ! ஞானிகளும் உயிர்க்கஞ்சுகின்றனர்' என, அவர் 'கல்லா மக்களின் உயிரினும் பார்க்க ஞானிகளின் உயிர், எவ்வளவு சிறந்ததென்பதை உணர்கின்றிலை' என்றார்.

அரித்திப்பு தன் மகளை அளவுகடவா தொழுகும் வண்ணம் அறிவுரை கூறியிருந்து, கி. மு. 365-ல் 80-ஆம் வயதில் மேலுலக மடைந்தனர். அவர் மகள் அரித்தி, தன் மகன் 'தியடொறசு' என்பவர்க்குத் தந்தையின் மதத்தை நன்கு அறிவுறுத்தினள். அவர் சொன்ன உரை ஒன்று கருதற்பாலது. அது வருமாறு : 'தாய் நாட்டுக்காகவும் ஞானி தன்னுயிரை இழத்தலாகாது; மூடருக்காகவும் ஞானி தன்னுயிரை இழத்தல் ஞானமாகாது' என்பது. இது நிற்க.

ஞானத்தின் பெருமையை உணர்ந்து விளக்கிய பெரியாரின் உள்ளக்கிடக்கை திருமூலமா முனிவரின் கருத்தோடு ஒத்திருத்தலை ஓர்ந்துணர்க.

Koviloor Digital Library



"அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை
அஞ்சும் அடக்கில் அசேதனமா மென்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே.

ஐம்பொறிகளை அடக்கினால் ஞானத்தையும் இன்பத்தை யும் பெறவியலாதாகலான், அவற்றினை நல்லாற்றுப் படுத்தி இன்புறுக.

---

# திருவள்ளுவர் புகழ்ப்பூந்துணர்

("என்று தணியுமிந்தச் சுதந்திரதாகம்" என்பதுபோல)

நறவெனச் சுவைதரும் தமிழ்த்திரு மொழியில்
நானிலத் தியாவரும் நயப்புறும் வழியில்
அறமெனப் பொருளென இன்பெனப் பகுத்தான்
அலைகடல் உலகியல் அனைத்தையும் வகுத்தான்
உறவெனக் குருவென உறுதுணை யெனவே
உடனமர்ந் தெடுத்துரைத் துறுதிகள் தரும்நூல்
துறுமிய சொற்பொருள் வளக்கடல் குளித்தோன்
தூயவோர் காவியம் வாய்மையின் அளித்தோன்.

விண்ணக மதிப்பெரும் பரப்பினை அறிந்தும்
விளங்கிழை யவர்முகத் துவமைசொன் னற்போல்
மண்ணகத் தியல்பெலாம் அளந்தகத் தடக்கி
மாண்புல மைக்கெல்லாம் தான்வரம் பாகி
நுண்ணிய பேரறி வெனும்அலை புரளும்
நுனித்தகல் லுணர்வெனும் பனிப்பெருங் கடலைத்
திண்ணிய அறிவெனும் வயிரத்தின் வாளைத்
திருக்குறள் எனப்பெயர் பொறித்தனர் மேனாள்.

—முருக இலக்குவனார்.

Koviloor Digital Library

# தமிழ்மொழியின் தற்காலப் போக்கு *

"வித்துவான் P. K. அருணாசலம்"

காலத்துக்கேற்ற நடை, காலத்துக்கேற்ற உடை, காலத்துக்கேற்ற அணியில், செல்வம் மிகுந்த தமிழ் சிறக்கவேண்டும்; மாறாக, சீரழிகிறது. ஒரு புதிய நோக்கம், ஒரு புதிய போக்கில் பழந்தமிழ் உயிர்த்தன்மையுடன் ஒளிரவேண்டும்; ஆனால், முடங்கிக் கிடக்கிறது. 'பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்து இருப்பிலே நின்று வைகை ஏட்டிலே தவழ்ந்த' அந்நாள், தமிழ்த் தாய் 'தாரணி எங்கும் புகழ்ந்திட வாழ்ந்'தாள். தமிழ் இலக்கியம் சாயலும் 'சாதுரிய'முங்கொண்டு மலர்ந்து மணம் வீசியது. 'தத்துவ' ஆராய்ச்சி தழைத்தது. அறிவொளி எங்கும் பரவியது. வாழ்க்கையும் பெருகிச் செயல் நிறைந்து 'தேசம் பலவும் சென்று' இசைகொண்டது புலவரானோர், பழமையையும் புதுமையையும் பாடிக் கவி உலகை வளம்படுத்தினர்; கவிகளின் பொருளை இணைத்துக் காட்டியும், இனிது விளக்கியும், மறைந்த நுணுக்கங்களை வெளிக்கொணர்ந்ததன்றிச், சிறுகதை, தொடர்கதை எழுதி உரை நடைக்கும் வழிகாட்டினர்.

ஆனால், தற்போது 'கடவுள் தந்த தமிழி'ல் வளவிய வளர்ச்சிக்கு இசைந்த மாறுதல் இல்லை; மலர்ச்சி இல்லை. தேய்ந்து மாய்வதற்கு ஏதுவாய வறட்சியே காணப்படுகிறது. தமிழ்ப் பயிற்சியும் தளர்ந்து சுருங்குகிறது. தமிழறிவு உரம் பெறும் வகையில் கல்வித்திட்டம் வகுக்கப்படவில்லை பழங் காவியங்களிலும் சங்க நூல்களிலும் பொருள் உணர்ச்சி இன்றியே புகுந்துழன்று, இலக்கணக் கடலின் கரைகாணமாட்டாது தடுமாறும் தமிழ் மாணவர்நிலை இரங்கத்தக்கதே. பள்ளிப் பிள்ளைகளும் கல்லூரி மாணவர்களும், மற்றப் பாடங்களின் சுமை பளுவாய்ப் போகவே, தாய்மொழி என்ற தன்மையில் தமிழைப் புறக்கணிக்கின்றனர். தெரிந்த சிறு தமிழும் பிழையின்றிப் பேசுதற்கும் எழுதுதற்கும் பயன்படுவதில்லை.

---

* முன் திருநெல்வேலி இந்து கல்லூரி இதழில் வந்தது. கல்லூரித் தலைவர் ஆணைபெற்று வெளியிடப்படுகின்றது.

Koviloor Digital Library



இலக்கியம் பொருளாகக் கதைப்பார் யாருமிலர்; ஒரு சிலர் 'நப்பித் தவறி' உரையாடும்போது, அது 'சப்' பென்றிருக்கிறது. 'வம்பு தும்பு' களை வளர்க்கும்போது கூட, பேச்சு 'கார சார'மாக இருப்பது சிற்சில வேளைகளிலேதான். பேச்சிலே சோர்வு; சொல்லோட்டம் இல்லை; எழுத்திலே தளர்வு; எழுச்சி இல்லை. வெறும் வக்கணையே எழுதும் கடிதங்களும். 'பத்திரிகைத்' தமிழ் பாழ்மட்டும் அல்ல; பசப்புங்கூட. கருத்தை மொழிக்குமாற்றும் 'சிரமத்' துடன் சிந்தனைச் சிதர்களையெல்லாந் திரட்டித் தெளிந்த உருவாக்கி உரைக்கும் தொல்லை பெரிதே. ஆனால் முடியாத இடங்களைக் குழப்பி மறைக்க முயல்வதுகூடாது. இயற்றமிழ் ஆசிரியர் உரைகளும் 'பல் அலங்காரப் பண்பு'டன் நடைபெறுகிறதே அன்றி, அவை உயிர்த்தன்மையோடு உலவுதல் சிலரிடந்தாம். தனக்கு உரிய பொருளையும் பொலிவையும் உதிர்த்துவிட்டு ஒதுங்கிய சொல்லையும் தொடரையும் மீண்டும் வழங்கவிடுதல் தீங்கே. பொருளை நேராகப் புலப்படுத்துவதில்லை. நடந்த சிறுநிகழ்ச்சிகளை நவிலும்போதும், வளைந்து சுழன்று வட்டமிடுகின்றனர். தெளிவும் உண்மையும் இன்றியே படாடோபமாகப் பகர்கின்றனர்; மயங்கவைக்கின்றனர்; மாறுகொள்ளக் கூறுகின்றனர்.

இலக்கண வரம்பு இகந்தும் எழுதத்துணிகிறோம். எனது கை-என கைகள் எனலே வரம்பாய் இருக்கவும் அதனை மீறி எழுதும் 'எனது கைகள்,. 'இப் பசுக்கள் என்பது........' ஆகாயம் முதலிய அருவப்பொருள் உருவத்தியல் புடையது ஆகாது': இவைபோன்ற தொடர்களை அறிஞர்களே எழுதத் தொடங்க, தற்போது இலக்கணம் விலக்குமரக்கனி ஆகிவிட்டது எனலாம். 'எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர் செப்பினர் அப்படிச் செப்புதல் மரபு;' இதனையும் மறந்தோம். மொழியினின்றே நல்ல சொற்கள் பல நழுவின; புதியவை பல புகுந்தன. பல தமக்குரிய பொருளை இழந்தன. வேறு சில பிழைபட வழங்குவன. இந்நிலையில் தாய்மொழி இழிந்து மாறுதலை எண்ணிக் 'கவல்கின்றார் இலர்'; 'களிக்கின்றார்' சிலர்; இவர், அதனை வளர்ச்சியின் அறிகுறி என்று வாதிப்பார். மொழி வளர்ச்சி என்றால் என்ன? பயன்மரம் போலவே மொழியும் வளர்ந்து பின் படுதலை அவர் விரும்பு

Koviloor Digital Library



கின்றனரா? அதனை வளர்க்கும் சொல்லேர் உழவர் தாம் யாவர்? ஒட்டம் இன்றிப் பண்டைய நிலையில் ஒருமொழி தேங்கி நிற்குமானால் அது வழக்கு வீழும்; செத்து ஒழியும்; உண்மையே. ஆனால், தமிழறியாப் பத்திரிகை ஒருபால், பழம் பெரும் புலமை மற்றோர்பால், இன்று தமிழை வளர்க்க முற்படுகின்றன.

தமிழ்ப் 'பத்திரிகை' முன்னேற்றத்தால் ஆங்கிலங் கற்றறியாத தமிழனுக்கு மிகுந்த நன்மைகள் விளைந்திருக் கின்றன; மெய்யே. உலகநிகழ்ச்சி உள்நாட்டரசியல் 'சமுதாய' நெறி சமயப் பொது நிலைகளைத் தெரிதற்குத் தமிழ்த் தினசரிகளும் வாரம் மாத வெளியீடுகளும் பேருதவி புரி கின்றன; ஒப்புக்கொள்கிறோம். ஆனால் இவ் வுதவி ஒன்றினையே நினைந்து அதனுடன் வளர்ந்தோங்கிவரும் தீமையை மறைத் தல்கடன் அன்று. பத்திரிகை, மொழியைப் புறக்கணிக்கின்றது: போற்றுவதில்லை. செழிப்பதற்கு மாறாக அதனால் தமிழ் சீரழிகிறது. 'சிந்தனையின் வெளியீடே மொழி; அதற்கேன் இந்தப் பூசனை? கருத்துக்களைப் பரிமாறுவதற்கு உதவும் அகப்பைக்கேன் ஆராதனை' என்ற நினைவுபோலும்! ஒரு நாட் டினர்க்கு மொழியே உயிர்நாடி. அது வாழ்க்கையுடன் அறாத் தொடர்பு கொண்டது. உயிர் அடங்கி நாட்டின் தனிநலம் அழிதற்கும், நமக்குரிய செந்நெறியும் தனிநடையும் மாய்தற் கும் தமிழைப் புறக்கணித்தல் போன்ற உபாயம் பிறி தொன்று இல்லை.

'பத்திரிகைத்' தமிழிலேயே பழகிச், சிலர் 'தமிழெனும் அளப்பருஞ்சலதி'யில் மூழ்கியவராகத் தம்மை மதிக்கின்றனர். தமிழ் இலக்கியத்தைப் பயிலாமலேயே ஒன்றுக்கும் உதவா தது என்று அதனை ஒதுக்குகின்றனர். பத்திரிகையின் பத்தி களைக் கணத்துக்கு ஆறடி கண்ணால் அளந்து பயில்கின்றவர், களவியல் உரைமீதும் விரைந்த கண்ணோட்டத்தைச் செலுத்தி, தமக்கு விளங்காமையின் அதனையே வெறுக்கத் தலைப்படுகின் றனர். இவர்கள் செவியும் மனமும், வனப்பும் வன்மையும் வாய்ந்த பாடலிலும் உரையிலும் அல்ல, பத்திரிகையின் பிதற் றற் பசப்புத் தமிழ்களில் பழக்கப்பட்டிருத்தலே அதற்கு

Koviloor Digital Library



ஏதுவாம். ஆழ்ந்த சிந்தனையும் ஆராய்ச்சியும் இன்றி, 'அவசரத்தில் அள்ளித் தெளித்த கோலமாகத் தமிழ்ப் பயிற்சியே பெறாத பலரால் சமைந்தது அப் பத்திரிகைத் தமிழ். 'நுண்மாண் நுழை புலம்' இன்றி, ஏற்றத் தாழ்வை ஆராய்ந்து இலக்கிய இன்பை நுகர ஏலாது, நமது உயர்மொழியையும், அதில் அமைந்த உலகப் பொதுநூல்களையும், இவை வளர்த்த நாகரீகத்தையும், பயிற்சிக்குறைவால் வாளா கூளம் என நாமே தவிர்த்தல் நலமோ ?

மேலும், அவர்கள் எளிமை எளிமை என்ற கூக்குரல் எழுப்புகின்றனர். 'மாங்காய் புளிக்கும்' 'ஸ்ரீராமருக்குச் சீடை பிடிக்குமா' பூனைக்குட்டி 'மியாவ்', என்றுதான் கத்தும் என்பன போன்ற தொடர்களால், குன்றுமுட்டிய குருவி என, ஆன்ற கருத்துக்களை உருவாக்கவும் சிக்கலான முடிவுகளைத் தீர்க்கவும் முயல்கின்றனர். சில கோட்டால் சித்திரம் எழுப்புவாரைப்போல், 'அந்தி ஆத்தங்கரை இசக்கி அம்மன் சந்நதி' என்று உரை ஓவியம் தீட்ட விரைகின்றனர். வழக்கு உலகியல் என்றோதி, இவர்கள் இலக்கிய மரபுகளை மீறுதலே குறிக்கோளாக் கொண்டுளார் போலும்! பேசுகின்றபடி எழுதும் முயற்சியால் மொழிக்கு இழிவே அன்றி ஏற்றம் இல்லை. பேச்சில் வழங்கும் சொற்கள் பல உருக்குலைந்து சிதைந்தவை; திருத்தம் பெறாதவை; கொச்சை வழக்கால் வடிவம் இழந்து நிறம் மங்கியவை. இவை, பொருளைப் புலப்படுத்துவதற்கு ஒரு குறுக்குவழியே அன்றி, ஆழ்ந்த கவிதைக்கோ அகன்ற கட்டுரைக்கோ அடுக்கா. தமிழ் சிதைந்து தன் சிறப்புக்குன்றி, இழிவழக்கு என இகழ்ந்து ஓதுக்கப்படுமாயின், அதனால் நமக்குக் கேடும் வசையும் அன்றிக் 'கீர்த்தி' ஏன் ? அயல் மொழிக்கு உரிய மரபும் நடையும் மிகப் பயின்றுவரும் இக் காலத்தில் அவை தலையெடுத்துத் தமிழின் பண்பைக் கெடுத்துவிடாதபடி காத்தல் நமது கடமை.

புதியதொரு சொல்லைச் சொற்பொழிவுகளில் கேட்கும் போதும் பத்திரிகையில் பார்க்கும்போதும், அது 'சங்கமுகத் தமிழா', வேறு ஒரு குழூஉக்குறியா, அன்றி அயல்மொழியா என்று சொல்வோரும் அறியார்; கேட்போரும் அறியார். வெ

Koviloor Digital Library



ளித் தோன்றிய உடனே அது விரைந்து ஏற்றுக்கொள்ளப்படு கிறது; விளங்கவில்லை என்று யாரும் ஒருசொல்லைத் தள்ளுவ தில்லை. பொருளுடையதாக அதைப் போற்றுவிடின் 'அவருக் குத் தெரிந்தது தமக்குத் தெரியவில்லை எனும்' குறைவு நேரும் என்றநினைப்பே, ஒருமொழியில் போலிச்சொற்கள் பல புகுந் துலவக்காரணம். 'அபேதவாதம்' 'சமதர்மம்' பொதுவுடைமை, சமஉரிமை, பொதுஉரிமை: இவை பெரும்பாலும் ஒரே பொரு ளில், அதுவும் இன்னது என்ற தெளிவில்லாமல் இன்று வழங் கக் காணலாம். முற்காலத்திலே தமிழில் வந்து கலந்த 'திசை மொழியெல்லாம் என்னென்னவோ பெயருண்டு'.* ஒவ்வொரு காலத்தும், பிறமொழிகளிலிருந்து பல காரணங்களால் சொற் கள் வந்து புகுதல் இயற்கையே. ஆனால் தமிழில் அயல் மொழிச்சொல்லை-அதற்குரிய பொருளில் அல்ல-ஒவ்வாப்பொரு ளில்-அதனை உணர்த்தும் இயற்சொல் இருக்கவும், வழங்க விடல்கூடாது. திருஷ்டி என்றால் பார்வை; வடமொழியில். தமிழில் அதற்குக் கண்ணேறு, கண்ணூறு என்ற பொருளே பெருவழக்கு; கந்திட்டி ஆய், கந்தட்டியென மருவியது கண் திருஷ்டியே. இதனால் கண் எச்சில், கண் மிச்சில் என்பன வழக்கு ஒழிதல், 'ஒண்டவந்த பிடாரி ஊர்ப்பிடாரியை விரட்டியதைப்' போன்றதே. இத்தகைய தவற்று வழக்கு, தொல்லை தருவது;' சுமையானது; பழக்கமற்றது; இன்றியமையும் இவை நடையை

---

* அந்தமாச் சருபந்து 1 கட்டி-மெய்யில்
அகலாத்தும் 2 சகலாத்தும் 3 டகலாவும் 4 கட்டி
கந்தைக்குப் பாயமுங் கட்டி-நொண்டி
களரிக்குள் ஆடக் கங் கணங் 5 கட்டினனே.
சுற்றிலே வளைந்து கொண்டே - துருக்கரும்
தொடுகடல் எனவந்த வடுகருடன்
பற்றுவார் 'தோங்கச் சிக்கின விடமோக்க 6
பட்டிவச்சி கட்டிவச்சி கொட்டுகோட்'டென்பார்.

—S. முகமதுஉசைன் நயினாரவர்கள் M. A. LL. B. PHD. பதிப்பித்த செய்தகாதி நொண்டி நாடகம். 1, 2, 3, பாரசீகம் 4. இந்தி 5. சமஸ்கிருதம் 6. தெலுங்கு: 'கள்ளன் அகப் பட்டால் விடவேண்டாம் பிடித்துவந்து கட்டிவைத்து அடி அடி!'

Koviloor Digital Library



உயர்த்தும் என்ற தப்பு உணர்வால் வலிந்து புகுத்தப்படுகின்றன. அதனால் பொருட் குழப்பமே குடிகொள்கிறது. ஆற்றல் அழகு தெளிவு பயப்பதில் நமது முன்னோர் வழங்கிய தமிழ்ச் சிறு சொற்களை ஒத்தன பிற இல்லை.

தமிழ் வளர்ந்து தழைய 'டெலஸ்கோப்' 'டெலிகிராப்' போன்ற அயல்மொழி வந்து புகுதல் காலத்துக்கேற்ற கோலமே. 'ரேடியோ' பயன்படும்போது நாம் அதன் பெயரைச் சொல்ல ஏன் பின் வாங்கவேண்டும். 'ரயில்வண்டி' 'ஆகாசக் கப்பல்' அனைய சொற்களில், வளமற்ற மற்றொருவகை வளர்ச்சியைக் காண்கிறோம். இருவேறு மொழிச்சொற்களால் தொகுக்கப்பட்டிலங்கும் இத்தொடர்களில் கனிவில்லை ; கவர்ச்சி இல்லை. புகைவண்டி, விமானம் போன்றவையும், ஆட்சிக்குறைவால் இழிந்தவையே ; என்றாலும் வனப்பு வாய்ந்தவை. படக்காட்சி ஊமைப்படம், அழகும் 'அவசியமும்' வாய்ந்த மொழிவளர்ச்சியைக் காட்டும். 'கடிசொல் இல்லை காலத்துப்படினே'. மின்சாரம் வானொலி முதலிய இன்ப 'சாதனங்'கள் இன்றித் தற்கால வாழ்க்கை அமையா.

பூத இயைபுநூல்களுக்கு உரிய கலைச்சொற்கள், குறிப்பிட்ட ஒரு நாட்டு மக்களுடைய குழூஉக் குறியல்ல ; அவை பயிலப்பெறும் எல்லா நாட்டவர்க்கும் உரிய பொது உடைமையே. இவை வந்து கலப்பதால் மொழிவளருமா? வறளும் என்று வழக்கிடுவர் C. R. அவர்கள். ஆதலின் கலைச்சொல் ஆக்கத்துக்கு அவர்கள் ஊன்றிகோலானார்கள் ; எல்லாம் தமிழிலேயே முடியும் என்றார்கள். நமது முன்னோர் 'பண்ணுறத்தெரிந்து ஆய்ந்த' செம்மொழியே 'இப் பசுந் தமிழ் ; பேச்சிலே நடமாடி வரும் உயிர்மொழி: ஆதலின் இதற்கு அகற்சியும் வன்மையும் வருதல் சிரமம் அன்று. 'சேணிற் பறக்கின்ற செந்தமிழ்க் குதிரைமுன் திட்டேது தட்டேதுகாண்' என்ற புலவருக்குத் தமிழின் இயக்க வன்மையில் ஐயம் இல்லை.

ஒவ்வொரு நாட்டு மக்கட்கும் பரம்பரையின் பயனாய்ப் 'பிறநாட்டவர்க்கு இல்லாத சிறப்பியல்புகள் சில' வழி வழி வருகின்றன. நம்மக்கட்குரிய பாவங்களும் பண்புகளும் பழக்க

Koviloor Digital Library



வழக்கங்களும், நமது தாய்மொழியில் எழுந்த இலக்கியத்தில் முன்னோரால் இழைக்கப்பெற்றன. அவற்றுக்கு இணங்க, நாமும் மரபுவழாது மேலும் புனைந்தால், நமக்குரிய வழியில் அறவளர்ச்சியும் நாகரிகக் கிளர்ச்சியும் அடைவோம்; மன்பதைப் பொதுநலத்திற்கும் துணைநின்றவராவோம். இதற்காம் மன எழுச்சி தமிழனிடம் என்று காணும்? அன்று 'சூழ்கலி நீங்கு'ம்; 'தமிழ் மொழி ஓங்கு'ம். ஆதலின் நமது 'உள்ளமாம் வீணைதனில் உள்ள வீடத்தனையும் மெள்ளஎழுந்து மிழற்று'மா?



Koviloor Digital Library

# வீட்டைப்பற்றிய நினைவுகள்

"மகிழ்நன்"

(முன் தொடர்ச்சி)

"ஆசிரியருடைய வீட்டிலிருந்து எனது நினைவு இறைவன் மேற் சென்றது. கையிலெடுத்து யான் பார்த்துக்கொண் டிருந்த நூலின்மேற் கருத்துச் செல்லவில்லை. கண்ணுக்குத் தோன்றிய அவ்வீட்டின் பகுதிகளை எல்லாம் நன்கு நோக் கினேன். ஓரிடத்தில் தொங்கிய நிழற் படத்தின்மேல் எனது பார்வை சென்று தங்கிற்று. அதனருகிற் போய் நின்று உற்று நோக்கினேன். பார்க்கப் பார்க்க அப்படம் எனக்கு வியப்பைத் தந்தது. அதிலிருந்த இருவரும், ஆசிரியரும் அவர் தம் துணைவியாருந்தாம். ஆனால், என்ன வேற்றுமை! இருவர்க்குந் திருமணம் நடந்த காலத்தில் எடுக்கப்பட்ட அப் படம், இளமையுடன் அவர்கள் மிளிர்வதைக் காட்டிற்றாயினும் விரும்பத்தக்கதா யிருக்கவில்லை. காய்க்கும் கனிக்குமுள்ள வேற்றுமை ஈண்டுத் தெளிவாய்த் தோன்றிற்று. அம்மை யாரின் இன்றைய திருமுகத்தைப் படத்திலுள்ளதோடு ஒப் பிட நினைத்து, அவர்களிருந்த விடத்திற்கு நேராகத் திரும் பினேன். எனது உளத்தில் தோன்றிய நினைவை நன்கறிந்தவர் போல் அவர்கள் என்னைப் பார்த்து நகைத்தார்கள்.

இந்த நிலையில், இவ்வளவு நேரமும் உள்ளேயிருந்த பிள்ளை களிருவரும் ஓடிவந்து மாலைச் சிற்றுண்டி கொள்ளுமாறு பாட்டியாரை அழைத்தனர். அவர்கள் பிள்ளைகளை நோக்கி, 'இந்த மாமாவையும் அழையுங்கள்' என்று சொன்னார்கள். இது கேட்ட இருவருங் கூசி நின்றனர். 'அழைக்கவேண் டும்' என்று அம்மையாரிட மிருந்து கட்டளை பிறந்தது. உடனே பெரியபிள்ளை, 'மாமா, வாருங்கள்' என்று இனி தாய்க் கூறிற்று. நாங்களெல்லோருஞ் சிற்றுண்டி கொள்ளப் புறப்படும் நேரத்தில் தலைமை யாசிரியர் வந்தனர். என்னைக் கண்டு முகமலர்ந்து பேசித் தமது மனைவியை நோக்கினர் ஆசிரியர். அவர்களும் நோக்கால் யாதோ விடை பகர்ந்தனர்.

Koviloor Digital Library



முகம், கை, கால் கழுவிக்கொண்டு சிற்றுண்டி யருந்த எல்லோரும் அமர்ந்தோம். இது நடந்தது வீட்டின் மற்றொரு பகுதியில். இப்பொழுது பிள்ளைகள் செய்த அமளி சிறிதன்று. அவர்கள் தங்கள் மூதாதையின்மேல் விழுந்து பற்றித் தழுவிக் குதித்துக் கூச்சலிட்டனர். இது சிறிதடங்கிய பின், அம்மை யார் பிள்ளைகளைப் பார்த்து இரு விரல்களை நீட்டினர். உடனே சிறிய பிள்ளை, 'ச, ரி, க, ம, ப, த, நி, ச,' என்று ஓசை யொழுங்கு காட்டிற்று. மறுபடியும் அப்பிள்ளை, 'ச, ரி, க, ம, பாப்பா,' என்று சொல்லி ஆள்காட்டி விரலைத் தனக்கு நேரே திருப்பிற்று. சிறிய பிள்ளை இதைச் செய்ய, மற்றொரு பிள்ளை, 'ச, ரி, க, ம, ப, தாத்தா,' என்று மொழிந்து தன் விரலை ஆசிரியர்க்கு நேரே காட்டிற்று. பிறகு இருவரும் மாறி மாறி, 'பாப்பா,' 'தாத்தா' என்று கூவினர்; சிரித்தனர். இது தம் மனைவியின் செய்கை என்று ஆசிரியர் கண்டு நகைத் தனர். பிள்ளைகள் செய்த குறும்பில் யானுங் கலந்துகொள்ள விரும்பி, 'சசா, ரிரீ, ககா, மமா,' என்று பாடி, 'மாமா' என்கையில், சுட்டு விரலை எனக்கு நேரே நீட்டினேன். பிள்ளை களும் அம்மையாரும் பெருநகை செய்தனர். எல்லாவற்றை யும் பார்த்த ஆசிரியர், 'நானும் ஒன்று சொல்கிறேன்' என்று பேசி, 'ச, ரி, ச, ரி, சரி, சரி,' என்று முடித்தனர். பிள்ளை கள் சொன்னதும், யான் கூறியதும் சரிதான் என்ற கருத்தை இவ்வாறு ஆசிரியர் வெளியிட்டனர்.

குழந்தைகளின் அன்னை (ஆசிரியரின் மருமகள்) சிற் றுண்டி கொண்டுவந்து பரிமாறினர். அன்பு, அடக்கம், ஒழுக்கம் அவ்வம்மையினது செய்கை ஒவ்வொன்றிலும் வெளி வந்தன. கையிற் கண்ணாடி வளையல்கள் கழுத்தில் தாலியும் ஒரு பொற் சங்கிலியும், காதிற் சிவப்புக் கற்பதித்த கம்மல்கள், இவையன்றி நகை யொன்றும் அவர்மே லில்லை; எளிய, மெல்லிய பருத்திநூற் புடைவை யணிந்திருந்தனர். ஆசிரி யரின் பெருந்தன்மையும், அவர் துணைவியாரின் இரக்கமு மாகிய இவ்விரண்டு தன்மைகளும் செவ்வனே தொழிலியற்ற இம் மருமகளின் இனிமை வந்து சேர்ந்ததுபோலும். ஒன்றும் அவர் பேசவில்லையாயினும், புதுமலரிலிருந்து நறுமணம் வீசு

Koviloor Digital Library



வதுபோல் இனிமை அவரிடமிருந்து பரவிற்று. திருமகளனைய மருமகள் வாழி.

சிற்றுண்டி முடிந்தது. தாம் அலுவல் நிகழ்த்தும் அறைக்கு ஆசிரியர் என்னை அழைத்துச் சென்றனர். அங்கே பின்வருமாறு பேச்சு நடந்தது:

'உனது கல்லூரிச் சம்பளத்தை முன்போலவே துரைத் தனத்தாரிட மிருந்து நீ பெறுகின்றாய் என்று நினைக்கிறேன்.'

'ஆம்.'

'உண்டிக்கும் விடுதி வாடகைக்கும் பிறவற்றிற்கும் எவ்வளவு செலவாகும்?'

'சிக்கனமாகச் செலவு செய்தாலும் இருபது ரூபாவிற்கு மேலாகும்.'

'நீ சொல்வது சரி. மிகுதியாய் ஒன்றையும் என்னிட மிருந்து எதிர்பார்க்கலாகாதென்று என் மனைவியிட மிருந்து நீ அறிந்திருப்பாய். இருநூறு ரூபா தருகின்றேன். இதைப் பெற்றுக்கொண்டு எங்ஙனமாயினுங் கல்வியை முடித்துக் கொள். இதற்குமேல் உதவ முடியவில்லையே என்று கவலைப் படுகிறேன். இதுகாறும் உனைக் காத்த திருவருள் இனியுங் காக்கும். வருந்தற்க.'

இறுதியிற் சொன்ன சொல், எனது கண்களிற் பெருகிய நீரைக் கண்டு பிறந்தது. என்னாற் பேசக்கூடவில்லை. கூடிய விரைவிற் கண்ணைத் துடைத்துக்கொண்டு, 'எனது அழுகையைத் தவறாகப் பொருள் செய்து கொள்வீர்களென்று நினைக்கிறேன். தாங்கள் உதவுந் தொகை போதாதென்று நான் கண்ணீர் வடிக்கவில்லை; எனது நிலை கண்டிரங்கிய அன்பை நினைக்க, நினைக்க உள்ளம் உருகுகிறது. தந்தையே, இவ்வுதவியை என்றும் மறவேன்' என்றேன்.

'நன்று. நலம் பெற்று வாழ்க. இதுபற்றி ஒருவரிடமும் நீ பேசக்கூடா தென்பது எனது விருப்பம். இதை, நினைவிற் பதித்துக்கொள். விடை பெற்றுக்கொள்'

Koviloor Digital Library



'அம்மையாரிடமும் விடை பெற விரும்புகிறேன்.' கணவரழைக்க, அம்மையார் வந்தார். இருவரையுங் கும்பிட்டு வெளிக்கிளம்பினேன்."

"புகைவண்டியிலேறிய பிறகு நெடுநேரம் ஆசிரியர் வீட்டில் நிகழ்ந்தவற்றையே பற்றிக் கருதினேன். யான் பெற்ற தொகை தாள்களாக எனது மேற்சட்டையின் உட்பையிலிருந்தது. அவ்வப்பொழுது, கைகட்டுவதுபோல் நடித்துத் தாள்கள் சரியாய் இருக்கின்றனவா என்று பார்த்துக் கொண்டேன். இத்தொகையை அளித்த ஆசிரியர்க்கு, இதனினும் பன்மடங்கு பெரிய ஒரு தொகையை அவர் விரும்பியவாறு செலவு செய்ய யான் கொடுக்குங் காலம் வருமா என்று என்னை யானே வினவினேன். இத்தகைய எண்ணங்கள் சிறிது சிறிதாய் அகன்றபின், என்னுடன் வண்டியிலிருப்பவர்களை உற்று நோக்கினேன். பலகணி யருகே சென்று பார்க்க விரும்பிய தன் சிறு மகனைத் தடுத்து முத்தமிட்டு மடியிலிருத்தி அணைத்துக்கொண்ட ஒரு தாயைக் கண்டேன். நோய்கொண்டு இளைத்த தன் கணவன் தலையை மடிமேல் தாங்கி, வண்டியி லிருந்தவர்களை நோக்காமல், பெருங் கவலையில் ஆழ்ந்திருந்த, அழகிய ஓர் இளமனைவியையுங் கண்டேன். ஆக்கவுங் காக்கவும் அன்பைப்போல் வல்லது பிறிதொன்றில்லை."

"கிறித்துப்பிறப்பின் பொருட்டு வருகின்ற விடுமுறை அண்மையிலுளது. விடுமுறை தொடங்கு முன்னரே என்னுடன் படிக்கும் மாணவர் தம் வீடு பற்றிய நினைவுடையவராய்ப் பலப்பல பேசுகின்றார். இப்பொழுது நடக்கின்ற தேர்வில் நன்றாக எழுதவேண்டுமென்ற கவலையின் மிகுதியால் இதுகாறும் யான் இவற்றிற்குச் செவி சாய்க்கவில்லை. எத்துணை ஆவலுடன் வீடு சேரும் நாளை மாணவர் எதிர் பார்க்கின்றனர்! இறந்ததை நினைந்து இரங்கலும், எதிர் காலத்தை நோக்கி அஞ்சலும் அவர்கட்கில்லை. யானோ எண்ணுதன வெல்லாம் எண்ணி, எண்ணி யழிகின்றேன்."

"இன்னும் இரண்டு நாளிற் கல்லூரி மூடப்படும். மாலை வேளையில் மாணவர் கடைகளுக்குச் சென்று ஆடைகள், துணி

Koviloor Digital Library



கள், விளையாட்டுச் சாமான்கள் முதலியவற்றை வாங்கிக் கொண்டு வருகிறார்கள். 'இது, என் தங்கைக்கு, இது, என் தம்பிக்கு' என்று ஒருவன் மற்றொருவனுக்குச் சொல்கிறான். அழகிய ஊன்றுகோல் ஒன்றை ஒருவன் மிகுந்த விலை கொடுத்து வாங்கி, தந்தை அது பெற்று மகிழ்வாரென்று தன் நண்பர்க்குக் கூறுகின்றான். பெற்றோரிடம் பெற்ற பணத்தைக்கொண்டு பெற்றோர்க்கொன்று வாங்கி அளித்து இன்பம் பெறும்பேறு எனக்கில்லை. நேற்றிரவு, செய்தித் தாள் படிக்குமிடத்திற் கூடியிருந்த பலரும் தாய், தந்தை, உறவினர், நண்பர் முதலியவர்களைப்பற்றியும், வீடு, வெளி, வயல், காடு, குன்று, இவைகளைப்பற்றியுமே பேசினர். இது கேட்பதற்கு இனிமையாயிருந்தது. இங்ஙனம் பலரும் பேசிக்கொண்டிருக்கையில், உடற் பயிற்சியிற் பெரிதும் பழகி உரம் பெற்றவனாகிய தாராக்குளம் மாணிக்கம் என்பவன், கையில் ஒரு தடியுடன் புகை பிடித்துக்கொண்டு வந்தான். நடந்த பேச்சைக்கேட்டு ஊக்கமடைந்தவனாய்க் கையிலிருந்த தடியை உயர்த்தி, 'நண்பர்களே கேளுங்கள்,' என்று கூறி,

'வால வயதுக்காரி, தங்கமே தங்கம்,
வலதுபுறங் கொண்டைக்காரி தங்கமே தங்கம்,
நீலப் புடைவைக்காரி, தங்கமே தங்கம்,
நிற்கட்டுமோ? போகட்டுமோ? தங்கமே தங்கம்.'

என்று பாட்டுப்பாடிக் கூத்தாடலானான். 'பேஷ்,' 'பலே', 'சபாஷ்', 'ஆமா', என்று இவையனைய சொற்கள் பறந்தன. அடக்கமுடியாத சிரிப்பு எனக்கு வந்துவிட்டது. 'நிற்கட்டுமா? போகட்டுமா?' என்று பாடியபொழுது, அந்த மாணிக்கம் கண்ணைச் சிமிட்டி உடலை அசைத்தது எண்ண, எண்ண நகைப்பை அளித்தது. சென்னைக்கு வந்தபின், என்னை மறந்து இவ்வாறு யான் சிரித்தது கிடையாது. தன்னுடைய செய்கை இவ்வளவு நகைப்பிற் கிடமானது குறித்து வியப்படைந்தவன்போல் மாணிக்கம் அமர்ந்திருந்தான். நானோ, விலாநோவக் கண்களில் நீர் பெருகச் சிரித்தேன். எல்லோரும் சேர்ந்து, இன்னும் சில பாடல்கள் மாணிக்கம் பாடவேண்டுமென்று விரும்பிக் கேட்டனர். 'வீட்டுக்குப் போகப்

Koviloor Digital Library



போகிறேன் என்ற களிப்பிலே பாடியாடி விட்டேன். இனி வாய் திறவேன்' என்று மாணிக்கம் உறுதியாய்ச் சொல்லி விட்டான். மணி ஒன்பதுக்குமேல் ஆயிற்று. அடுத்த நாள் நடக்கப்போகும் தேர்வை நோக்கி ஒவ்வொருவராய் மாணவர் தத்தம் அறையை நாடிச் சென்றனர்; யானுஞ் சென்றேன்."

---

# செந்தமிழ்ச் செல்விச் சிறப்புப்பா

செந்தமிழ்ச் செல்விச் சிலம்பொலி
யாங்கணுஞ் சென்றுசென்று
முந்தமிழ் தச்சுவை யாயெவர்
காதினு முன்னிறைய
நந்தமிழ்ச் செல்வ ரவள்பதம்
போற்றி நயந்துபொற்பூ
தந்தமி தத்திடைப் பொங்குநல்
லன்பொடுஞ் சாத்துகவே.

பன்மொழிப் பேச்சுப் பயிலுநம்
நாட்டிற் பழந்தமிழாம்
பொன்மொழிப் பேச்சுமற் றெம்மொழிப்
பேச்சினும் பொங்குபுகழ்
நன்மொழிப் பேச்சென நின்றிடத்
தொண்டு நயந்துசெயும்
இன்மொழிச் செந்தமிழ்ச் செல்விமிக்
கோங்குக வெங்கணுமே.

கா. சின்னத்தம்பி,
தலைவத்துறை அரசினர் தமிழ்ப் பாடசாலை.

Koviloor Digital Library

# தென்புலத்தார் கடன்

"துடிசைகிழார் அ. சிதம்பரனூர்"

## பிண்டம்

பிண்டம் என்னும் சொல்லுக்கு உடல்—உண்டை—இரும்பு—கருப்பம்—கவளம்—கற்கண்டு—சிவன்—கூட்டம்—கால் வட்டத்தின் இருபத்துநான்கில் ஒன்று—செவ்வந்தி—சோறு—தொகை—பிச்சை—பெலன்—மாமிசம்—விலா—வெண்ணெய் முதலிய பல பொருள்கள் உளவேனும் ஈண்டுச் சோறு என்பதே பொருள்.

ஆதலின் 'புரோகிதர்கள்' செய்கிறபடி அரிசி—பழம்—பால்—தேன்—எள்—வெல்லம்—நெய் கலந்த உருண்டை அல்ல. அரிசியை அரைத்து மாவினுல் செய்யும் உருண்டையும் அல்ல. வெறும் பொங்கலும் அல்ல.

234-ம் புறப்பாட்டில் "ஈன் சிறு பிண்டம்" என்று பிண்டத்துக்கு அடைகொடுத்துக் கூறியிருப்பதையும், அதற்கு உரையாசிரியர் "இனிய சிறு பிண்டம்" என்று பொருள் வரைந்திருப்பதையும் நோக்கின் உண்மை விளங்கும்.

தென்புலத்தார் கடனைத் தமிழக் குருக்கள்மார்களைக் கொண்டு செய்யும் தமிழர்களுடைய இல்லங்களில் "உழுத்தம் பருப்பும் அரிசியும் கலந்து பொங்கின சோற்றில் பழம்—பால்—தேன்—நெய்—வெல்லம்—எள் இவைகளைக் கலந்து பிசைந்து உருட்டின உருண்டையே பிண்டமாகும்.

மூன்று உருண்டைகள் ஒவ்வொன்றும் தேங்காய் அளவு இருக்க வேண்டும் என்றும், அதற்கு உப பிண்டங்கள் எலுமிச்சங்காய் அளவு இருக்க வேண்டும் என்றும், அளவுகளும் இடும் முறைகளும் ஒழுக்க நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன. வழக்கமும் அதுவே.

ஒழுக்க நூல்களில் பார்க்கவேண்டியவற்றை வேறு நூல்களில் தேடினுல் அகப்படா.

Koviloor Digital Library



தற்காலம் தமிழர்களுடைய ஒழுக்க நூல்கள் தனிப்பட இல்லாமற் போனபோதிலும் வழக்கத்திலும், பல சித்தாந்த நூல்களிலும், ஆகமங்களிலும், இம்முறைகளைக் கிளந்து எடுத்து ஓதியிருக்கிறார்கள்.

இம்முறைகளை எல்லாம் "தென்புலத்தார் கடன்" என்ற எமது நூலில் பரக்கக் காட்டியுள்ளோம்.

தென்புலத்தார் கடனுக்கு இன்றியமையாத "ஆனைந்து" இன்னதென்றும், அதனை எவ்வாறு கூட்டவேண்டும் என்றும், அதன் குணம் இன்னதென்றும், ஆனைந்து என்பது இப்போது ஆரியப்'புரோகிதர்' கூறுகிறபடி பால்—தயிர்—நெய்—கோசலம்—கோமயம் அல்ல என்றும் தமிழ் நூல்களின் ஆதாரங்களைக் கொண்டே வெளியிட்டுள்ளேன்.

எம் நூல்கள் எல்லாம் "சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்"தில் அகப்படும்.

ஆரியச் சொற்கள் சில தமிழ் நூல்களில் வந்து வழங்குவதால் நூல்கள் முழுமையும் ஒதுக்கிவிடல் எப்படிப் பொருந்தாதோ, அப்படியே ஆரியர் வழக்கங்கள் சில தென்புலத்தார் கடனிலும்—மணவினையிலும் இன்னும் மற்றுள்ள 'கிரியை'களிலும் கலந்துள்ளதால் அக்'கிரியை'களை அறவே விட்டுவிடுதல் பொருந்தாது.

இன்னும் சிலர் தமிழ்ச் சொற்களுக்கு மூலம் (Root) தெரியாததால் மயங்கி வடமொழிச் சொற்கள் என்று ஒதுக்கி விடுகிறார்கள். அதுவும் கூடாது.

நன்றாய் ஆராய்ச்சி செய்து வடமொழிச் சொற்கள் என்று கண்ட பின்னரே அவைகளைத் தள்ளல் வேண்டும்.

நித்தியம் — கருமம் — சுவாகா — சுவதா — திதி — திவசம் முதலிய எத்துணையோ சொற்கள் வடமொழிச் சொற்கள் அல்ல, தமிழ்ச் சொற்களே என்று "நித்திய கரும விளக்கம்—உருத்திராக்க விளக்கம்—விபூதி விளக்கம்—இங்கித மணவியல் என்ற நூல்களில் காட்டியிருக்கின்றோம்.

Koviloor Digital Library



தமிழர்களுடைய 18 ஒழுக்கநூல்களைக் கொண்டு அவ் வெண்ணுக்குத்தக ஆரிய 'மிருதி ஆசாரங்'களிற் சிலவற்றை உட்படுத்தி, 18 பத்ததிகளாகப் பிற்காலத்தார் ஆரியர் கூட்டுறவுக்கு அப்புறம் எழுதலானார்கள்.

இப்பதினெண் பத்ததிகளில் முதன்மையாய்த் தமிழ் நாட்டில் வழங்குவது "அகோர சிவர்" பத்ததி. ஏனென்றால் அப் பத்ததியில் தமிழர் ஒழுக்கங்கள் மிகுந்தும் ஆரியர் ஒழுக்கங்கள் குறைந்தும் காணப்படுகின்றன. ஏனைய பத்ததிகளில் ஆரியர் ஒழுக்கங்கள் மிகுந்தும் தமிழர் ஒழுக்கங்கள் குறைந்தும் உள்ளன. (பத்ததி = ஒழுக்க நூல்).

சைவர்களுக்குச் சிவன் — சிவம் — சிவர் — சிவாசாரி — சிவாசாரியார் — அய்யர் — அய்யங்கார் — குருக்கள் — பட்டர் — ஆச்சாரியார் — தேசிகர் — பிள்ளை — முதலியார் முதலிய பட்டங்கள் உண்டு.

இப் பட்டங்கள் எல்லாம் ஆரியர்களுடையன என்று மயங்கற்க.

ஆரிய நூல்களின்படி 'பிராமணர்'கள் சர்மா என்றும், க்ஷத்திரியர்கள் வர்மா என்றும், வைசியர்கள் குப்தா என்றும், சூத்திரர் தாசர் என்றும் பெயர் பெறுவர்.

ஆனால், தென்நாட்டில் உள்ள ஆரிய மதத்தை ஒட்டிய சிலர் தமிழர் பட்டங்களை மேற்கொள்வது ஏன்? என்றால், அது பழக்கம் காரணம்.

மதம் வேறுபட்டாலும் பட்டங்கள் மாறா. ஆகையால் அப் பட்டங்கள் அப்படியே நிலைத்துவிட்டன.

இப்போது கிறித்து மதத்துக்குப் போன தமிழர்கள், தங்கள் பட்டங்களை அப்படியே வைத்திருப்பதை நாம் பார்க்கவில்லையா? அதுபோல, முன் காலத்தில் ஆரிய மதத்துக்குப் போன தமிழர்கள் தமிழ்ப்பட்டங்களையே வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இவ்வுண்மையினைப் பலர் அறிந்தும் அறியாதவர் போன்று பேசுகிறார்கள்.

Koviloor Digital Library



மதம் வேறு—சாதி வேறு—மரபு வேறு என்பதை உணர்ந்திலர்.

தமிழ் மரபில் (Tamilian Race) உள்ளவர் சிலர் சைவ ராகவும், சிலர் வைஷ்ணவராகவும், சிலர் மாத்வர் ஆகவும்—சிலர் பவுத்தராகவும்— சிலர் சைவராகவும்—சிலர் ஆரிய ராகவும்—சிலர் கிறித்துவராகவும்—சிலர் மகமதியராகவும் இருக்கலாம். அதனுலேயே அவர்கள் எல்லாம் தமிழர் அல்லா தவர் ஆகமாட்டார்கள். பல்வேறு மதத்தினர் ஒரே மரபைச் சேர்ந்தவர்களா யிருக்கலாம். மத வேறுபாட்டால் ஒரே மரபைச் (Race) சேர்ந்தவர் என்ற உணர்ச்சி மாறக்கூடாது.

இப்போது ஆரிய மரபில் (Caucasian Race) செர்மானி யரும்—ஆங்கில நாட்டாரும்—பிராஞ்சுக்காரரும் இருக்கவில் லையா? அவர்கள் எல்லாம் ஆரியர்கள் அல்லரோ?

ஆதலின் மரபுவேறு—மதம் வேறு—சாதிவேறு என்று உணர்ந்தால் மயக்கம் ஒழியும். ஒற்றுமை ஏற்படும். அம்மயக் கம் உள்ளவரை சச்சரவுகள் இருந்துதான் தீரும்.

ஆரியர்களுக்கும் 18 ஒழுக்க நூல்கள், அதாவது, 18 'மிருதி'கள் உண்டு. அவை, மநு—பராசரர் முதலிய பதி னெண்மர் செய்தவை. அவர்களுள் தற்காலம் மிருதியாக வழக்கத்தில் உள்ளவை மநு மிருதியும் பராசர மிருதியுமே ஆகும்.

ஆண்டுதோறும் ஆரியர்கள் செய்யும் 'சிரார்த்தம்' (தென்புலத்தார் கடன்) 'தர்ம சாத்திரங்'களில் (மிருதிகள்) இல்லை எனச் சிலர் கூறுகின்றூர்கள். அவர்கள் எல்லாம் மநு மிருதி 3-ம் 'அத்தியாயம்' 268—272 சூத்திரங்களைப் பார்த் தால் சிரார்த்தம் விதித்துள்ளதை அறியலாம்.

## கோத்திரம்

தமிழ் நாட்டில் 'கோத்திரம்' என்ற சொல் பெருவாரி யாக வழங்கா விட்டாலும், குடி வழி என்ற சொல் வழக்குண்டு. குடிவழி என்ற சொல் கோடி வழி என்றும் வழங்குவது உண்டு.

Koviloor Digital Library



கி. பி. முதல் நூற்றுண்டில் அரசு புரிந்த கரிகால் வளவன் நற்குடி 48000 பேர்களைத் தொண்டை நாட்டில் குடியேற்றியதை

“ நாடெங்கும் சோழன்முனம் தெரிந்தே யேற்று
நற்குடிநாற் பத்தெண்ணா யிரத்து வந்த
கூடல்கிழான், புரிசைகிழான், குலவு சீர்வெண்
குளப்பாக்கிழான்,வரிசைக் குளத்து ளான்முன்
கேடுபுகழாரிவரும் சிறந்து வாழச்
சேக்கிழார் குடியில்இந்தத் தேசம் உய்யப்
பாடல்புரி அருண்மொழித்தே வரும்பி னந்தம்
பாலறு வாயரும்வந் துதித்து வாழ்ந்தார் ”

என்று உமாபதி சிவம் பாடிய பாட்டில் குடி என்ற சொல் உபயோகிக்கப்பட்டிருக்கிறதை நோக்க வெளியாம்.

குடி—குடி வழி என்பதைக் கோத்திரம்—வம்சம் என வழங்குகிறுர்கள். சொற்கள் மாறுமே யொழிய வழக்கு என்றும் உண்டு.

கோத்ரம் என்ற சொல் வடமொழி ஆய்விட்டபடியினுலே தமிழர்களுக்குக் கோத்ரம் கிடையாது என்பது பொருந்தாது.

தமிழர் குடிப்பெயர்கள் எல்லாம் அவ்வவர் குடும்பத்தில் புகழ்பெற்ற ஒருவர் பெயரே ஆகும். உதாரணமாக:—சேக்கிழார் குடி—ஏகம்பவாணர் குடி—செய்யாற்று வென்ருன் குடி—நெற்குன்றவாணர் குடி—களப்பாளன் குடி என்பன போன்றன.

தமிழ் மரபில் உள்ளவர் ஆரிய மதத்தைத் தழுவிய காலத்தில் ஆரியர் மரபில் புகழ் வாய்ந்தவர்களுடைய கோத்திரத்தை வைத்துக்கொண்டார்கள். எடுத்துக் காட்டாக வசிட்டர் கோத்திரம்—அகத்தியர் கோத்திரம்—பாரத்துவாசர் கோத்திரம்—விசுவாமித்திரர் கோத்திரம் முதலியன.

இப்போது, தமிழராயுள்ளார் கிறித்துவமதம் புகுந்தால் பால் (Paul) துரைசாமி என்றும், ‘ஜோசப்’ (Joseph) முனிசாமி என்றும் ‘பால்’ ‘ஜோசப்’ கோத்திரங்களை வைத்துக்

Koviloor Digital Library



கொள்வதை நாம் பார்க்கவில்லையா? அதுபோல, ஆரிய மதத்தில் புகுந்தாரிடையும் உண்டு.

ஆங்கில நாட்டாரிடத்திலும் குடும்பம்—வீடு என்ற கோத்திரங்கள் உண்டு—காட்டாக:—(Wellington Family) வெல்லிங்டன் குடும்பம் (Tutor house) டியூடர் வீடு என்று கூறுவதை நாம் கேட்கவில்லையா?

ஆகையால், எல்லா மரபினர்க்கும் கோத்திரம் என்பது உண்டு.

## சிரார்த்தம்

ஒவ்வொரு மதத்தாரும் ஒவ்வொரு மரபாரும் தென்புலத்தார் கடனை ஒவ்வொரு வகையாகச் செய்கிறார்களே ஒழியச் செய்யாமல் இல்லை.

மகமதியர்கள் கல்லறைக்குச் சென்று, அக் கல்லறையின் மீது பூக்களிட்டு, பாத்தியா என்ற 'கிரியை' செய்வதும்,

கிறித்தவர்கள் கல்லறைக்குச் சென்று, பூக்கள் இட்டுப் 'பிரார்த்தனை' செய்வதும் எதனைக் குறிக்கின்றன? என்பதைப் பாருங்கள். அதற்கு அவர்கள் 'சிரார்த்தம்' என்று பெயர் கொடுக்காவிட்டாலும், ஆரியர்கள் செய்யும் 'சிரார்த்தம்' போன்ற 'கிரியை' என்று சொல்லலாம்.

தமிழர்கள் பிண்டமிட்டு வணங்கி வருகின்றார்கள். ஒரு மரபார் ஒரு மதத்தார் செய்வது, இன்னொரு மரபார் இன்னொரு மதத்தாருக்கு ஒவ்வாது. ஆரியர் 'சிராத்த' முறை தமிழருக்கு ஒவ்வாது. தமிழர்களுடைய பிண்டமிடும் முறை ஆரியர்களுக்கு ஒவ்வாது.

இதனை அறியாமல் ஆரியப் 'புரோகிதனை'த் தமிழன் கூப்பிட்டுப் "பிண்டமிடுதலை"ச் செய்யச் சொன்னால் அவன் என்ன செய்வான்! அவனுக்குத் தெரிந்த 'சிரார்த்த' முறையையே சிறிது மாற்றிச் செய்து வைப்பான்.

தமிழன் ஒருவன் கிறித்துவ மதப் பாதிரியையோ, மகமதிய மத மவுலானாவையோ கூப்பிட்டுப் "பிண்டமிடுதலை"ச்

Koviloor Digital Library



செய்யச் சொன்னால் எப்படி அவர்கள் தங்கள் வழக்கப்படி 'பிரார்த்தனை'யையோ, 'பாத்தியா'வையோ செய்து வைப் பார்களோ அதுபோல என்க.

ஆதலின், தமிழன் ஆரிய மதத்தைத் தழுவிய 'சுமார்த்தப் புரோகிதர்களை' எந்தக் 'கிரியை'க்கும் கூப்பிடக்கூடாது. தன் இனத்தான் ஒருவனைக் கூப்பிட்டுத் தமிழர் முறைப்படி செய்ய ஏற்பாடு செய்யவேண்டும்.

இறந்தவுடன் செய்யும் ஈமக்கடன் வேறு என்றும், ஆண்டு தோறும் செய்யும் தென்புலத்தார் கடன் வேறு என்றும் ஒவ் வொருவரும் நினைவில் வைக்கவேண்டும்.

இவைகளைக் குறித்து "ஈமக்கடன்" என்றும் "தென்புலத் தார் கடன்" என்றும் எழுதியுள்ள எம் நூலில் விரிவாக ஆதாரங்களுடன் கூறியுள்ளாம். ஆண்டுக் கண்டுகொள்க.



Koviloor Digital Library

# மூதுரை

## " இளவழகனார் "

ஔவையார் சிந்திய அருந்தமிழ்த் தேன்களுள் மூதுரை என்பதும் ஒன்று. 'மூதுரை' என்பதற்கு 'அறிவுரை' என்று பொருள் கொள்ளலாம். தமிழில் உள்ள முழுமுதல் இலக்கண நூலான தொல்காப்பியத்தின் உரையில், இந்நூல் 'மூதுரை' என்னும் பெயராலேயே வழங்கும். பிற்காலத்தில் 'வாக்குண்டாம்' என்னும் பெயராலும் இது வழங்குகிறது. " வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள் நோக்குண்டாம் மேனி நுடங்காது" என்று இந்நூலின் முதலில் கடவுள் வாழ்த்துச் செய்யுள் தொடங்குவதனால், முதலில் வரும் 'வாக்குண்டாம்' என்னும் சொல்லே நூலின் பெயராக வழங்க நேர்ந்தது. இதுபோலக் கொள்ளப்படுவதை 'முதற்குறிப்பால் பெற்ற பெயர்' என்று. இலக்கண ஆசிரியர்கள் சொல்லுவார்கள். பாட்டுக்களை மனப்பாடம் பண்ணும் பழக்கம் இருந்ததனால், நினைவுக்காக இங்ஙனம் முதற் குறிப்பினால் பெயர் கொள்வது வழக்கமாயிற்று.

இந்நூலின் கடவுள் வாழ்த்துச் செய்யுளில் சில நுட்பங்கள் மின்னிக்கொண்டிருக்கின்றன. அவ்வளவும் ஔவைப் பெருமாட்டியினது பேருள்ளத்தின் அடையாளமேயாம். 'இறைவன் திருவடியைத் தப்பாமல் சார்கின்றவர்களுக்கு, வாக்கு உண்டாகும்; நல்ல மனம் உண்டாகும்; திருமகள் நோக்கு உண்டாகும்; உடம்பும் வாட்டமுறாது' என்று ஔவையார் அருளிச் செய்கிறார். மக்கள் பெறவேண்டிய நலங்கள் இவையென்பது இதனால் நன்கு தெரிகின்றது.

'வாக்கு' என்பது பொதுவாகக் கல்வியைக் குறிக்கும்; 'நல்ல மனம்' என்பது நற்குண நற்செய்கைகளை உணர்த்தும்; 'மாமலராள் நோக்கு' என்பது செல்வாக்கை அறிவிக்கும். 'மேனி நுடங்காது' என்பது உடம்பின் நலத்தை விளக்கும். கல்வியும் நற்குணமும் செல்வாக்கும் உடம்பு நலமும் ஒருவன் உடையவனானால், இன்னும் அவன் அடையவேண்டியது என்ன இருக்கிறது!

Koviloor Digital Library



கல்வியும் குணமும் வளமும் இருந்தால் இருக்கும் வரையில் உடம்பும் வாடாமல் நலமாயிருக்கக்கூடும். இதனால், உயிரும் நலமாயிருக்கும். கல்வி, கலைமகள் நோக்கு; மனநலம், மலைமகள் நோக்கு; செல்வம் அலைமகள் நோக்கு. இறைவனைச் சார்ந்திருப்பவர்களுக்கு அவன் இப்படி மூவகை நோக்குகளாய் விரிந்து அருள்கின்றனன்.

'கல்வி நலம் உள்ளவர்களுக்கும் கடவுள் வழிபாடு உள்ளவர்களுக்கும் பெரும்பாலும் செல்வ நலம் உண்டாவதில்லை; உடம்பு நலமும் உண்டாவதில்லை' என்று ஒரு கருத்து, எப்படியோ தவறுதலாய் உலகத்தில் உலவுகிறது. ஒளவையார் இந்த எண்ணம் உடையவராகத் தெரியவில்லை. அதற்கு மாறுகக், 'கடவுள் வழிபாடு உள்ளவர்களுக்குக் கல்வியும் உண்டாகும்; கல்வி நலம் வாய்ந்த அவர்களுக்கே செல்வநலமும் உண்டாகும்; உடம்பு நலமும் உண்டாகும்' என்று தமது கருத்தை இச் செய்யுள் வாயிலாக விளக்கமாகவே புலப்படுத்துகின்றார். உடம்பில் ஒரு மேனியும் அவர்களுக்கு ஒளிவிடும் என்பது, 'மேனி நுடங்காது' என்று அவர் கூறியதனால் தெளியப்படும். மின்னுவது மேனி; மெருகிட்டதுபோலப் பளப்பளப்பான ஒளியுடன் மின்னிக்கொண்டிருக்கும் உடம்புகளுக்கே 'மேனி' என்னும் பெயர் பொருந்தும். அப் பளபளப்புதானும் கலக்கமடைந்து மங்காது என்பதற்கு 'நுடங்காது' எனப்பட்டது. நுடங்குதலாவது, சாயல் சுருங்குதல்.

யாராவது கல்விநலமும் கடவுள் வழிபாடும் உடையவர்கள், மேனிநலமும் செல்வநலமும் இல்லாதவர்களாயிருந்தால், அவர்களுடைய கல்வி முறையிலும் கடவுள் வழிபாட்டு முறையிலும் ஏதோ தவறு இருக்கவேண்டும். கற்றபடி ஒழுகாமை, முன் தவமில்லாமை முதலியனவும் காரணங்களாம். ஆகவே, நல்ல மனம் இருக்கவேண்டுவதும் இன்றியமையாததென்று கருதியே 'நல்ல மனமுண்டாம்' எனவும் இப்பாட்டில் அருளிச் செய்யப்பட்டது.

மக்கள் இம்மை மறுமைக்குரிய எல்லா நலங்களோடும் வாழ்வாங்கு வாழவேண்டுமென்பதே ஒளவைப் பிராட்டி

Koviloor Digital Library



யாரின் திருவுள்ளமாதலால், தமது கருத்தை அவர் இங்ஙனம் கடவுள் வாழ்த்துச் செய்யுளிலேயே விளங்க வைத்துக்கொண்டார். இவ் வாழ்த்துச் செய்யுள் நீங்கலாக மூதுரையில் முப்பது பாட்டுகள் உள்ளன. மக்கள், கல்வியும் குணமும் செல்வமும் என்னும் இம்மூன்றும் உடையவராய் இனிது வாழ்வதற்கான முறைமைகளே, அப் பாட்டுகள் முழுமையும் விளக்கப்படுகின்றன.

மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை என்று தாம் வகுத்துக்கொண்ட இக் கருத்துகள் மூன்றையும் ஒருங்கு தொகுத்துத் தொகுத்து, ஔவையார், நூலுள்ளும் இரண்டிடங்களில் நினைவு கூட்டுகின்றார். ஒரு பாட்டு உடன்பாட்டு முகமாகவும், மற்றொரு பாட்டு எதிர்மறை முகமாகவும் வருகின்றன.

“ நீரளவே யாகுமாம் நீராம்பல், தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம் ”

என்பது உடன்பாட்டு முகத்தால் வந்தது. இதில் ‘ நீரளவே யாகுமாம் நீராம்பல்’ என்பது உவமை. நுண்ணறிவு, செல்வம், குணம் என்பவை, அவ்வுவமை கொண்டு விளக்கப்பட்ட பொருள்கள். ‘ நூலளவே யாகுமாம் நுண்ணறிவு ’ என்றமையால் அது கல்வியை உணர்த்திற்று. வாழ்த்துச் செய்யுளில் வந்த கருத்துக்கள் இதன்கண்ணும் வந்தன. இக்கருத்துக்களையே தொகுத்துக்கொண்டு மற்றொரு பாட்டு,

“ கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொல்கூற்றம்
அல்லாத மாந்தர்க் கறம்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தான்ஈன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண் ”

என்று எதிர்மறைமுகத்தால் வருகின்றது. இதில் வந்த உவமை ‘மெல்லிய வாழைக்குத் தான் ஈன்ற காய் கூற்றம்’ என்பது. மற்ற மூன்றும் முறையே கல்வியில்லாதவரையும் நற்குண

Koviloor Digital Library



மில்லாதவரையும் செல்வமில்லாதவரையும் விளக்கிக்கொண்டு நின்றன.

இல்லாளும் இல்லமும் செல்வப்பேற்றுக்கு அடையாளம். ஔவையார் இங்ஙனங் கருதுபவர் என்பது, "இல்லாள் அகத் திருக்க இல்லாதவொன்றில்லை" என்று இந் நூலிலேயே அவர் மற்றோரிடத்திற் கூறியது கொண்டு தினைத்தனையும் ஐயுறவின் றித் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம்.

மனைவிக்குக் கணவனும், கணவனுக்கு மனைவியும் இரு வர்க்கும் மக்களும் மற்றுமுள்ள சுற்றங்களுமெல்லாம் செல்வங் களேயாம். செல்வம் என்பது, மனைவி மக்கள் வீடு வாசல் நிலம் நீர் பேர் புகழ் களஞ்சியம் காவல் வாழ்வு வரவு முதலிய வாழ்க்கைப்பேற்றுக்குரிய அனைத்தும் ஆம். மக்கள் இங் ஙனம் வசதியான வாழ்க்கைப் பேற்றைத் திருமகள் அருளால் அடைந்து இன்புறவேண்டுமென்பதே அம்மையின் எண்ணம். வற்றிய வாழ்க்கைக்கு அவர் நூல்களிற் சிறிதுமே இடமில்லை. இவையெல்லாந் திருமகள் நோக்கேயாம் என்பது,

> " மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
> உருவும் உயர்குலமு மெல்லாம்—திருமடந்தை
> ஆம்போ தவளோடும் ஆகும் அவள்பிரிந்து
> போம்போ தவளோடும் போம் "

என்று இந் நூலில் வேறோரிடத்திலும்,

> " நீரும் நிழலும் நிலம்பொதியும் நெற்கட்டும்
> பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
> வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றும்
> தரும்சிவந்த தாமரையாள் தான் "

என்று இவர் இயற்றிய மற்றொரு நூலான 'நல்வழி'யில் ஓரிடத் திலும் வருவனவற்றால் தெளிந்துகொள்ளப்படும். ஆதலால், இல்லாளும் இல்லமும் முதலியன செல்வப்பேற்றின் அறிகுறி களேயாம் என்பது நன்கு வலியுறும். வலியுறவே, முன், 'இல்லிற் கிசைந்தொழுகாப் பெண்' என வந்தது, செல்வப் பேறில்லாதவரது இரங்கத்தக்க எளிய நிலையைக் காட்டுவதே

Koviloor Digital Library



யாமென்பது மயக்கமின்றித் துணிந்துகொள்ளப்படும். ஆகவே ஔவையார், மூதுரையிற் கூறநினைத்த கருத்துக்களை வாழ்த்துச் செய்யுளில் பிழிவாக நிறுத்துக் கூறிக்கொள்ளும் உண்மை, எரியனைய நீர்போல விளக்கமாகவே தேங்கித் தெரிகின்றது.

இங்ஙனம், நூலுள் வருகின்ற கருத்துகள் முதலியன வாழ்த்துச் செய்யுளிலும் சுருக்கமாக வருமாறு செய்வது, தொன்றுதொட்டு வருகின்ற நூன்மரபேயாகும். ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரர், தமது அரிய சிவஞான பாடியத்தில், சிவஞான போதத்தின் முதலில் வரும் வாழ்த்துச் செய்யுளுக்கு விளக்கங் கூறுகின்றபோது, நூலுள் வரும் பொருட் கூறுகள் அச் செய்யுளிற் குறிப்பாக அடங்கிக் கிடக்கும் முறைமையை எடுத்து விளக்கி அதன் இறுதியில், "இங்ஙனம் நூல் நுதல் பொருளெல்லாம் குறிப்பால் தன்னகத்தடக்கி நிற்றல் மங்கலவாழ்த்துக்கு இலக்கணமென்றுணர்க" என்று மரபும் உரைத்து முடித்தமை இங்கு நினைவுகூர்தற்குரியது.

இனி, நன்னூல் இயற்றிய பவணந்தியார் "பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த நான்முகன் தொழுது நன்கியம்புவன் எழுத்தே" என்று கூறினாற்போலச், சிலர், தாம் விளக்கப்போகும் நூற்கருத்தை வாழ்த்துச் செய்யுளில் தெளிவாகவே இணைத்துக் கூறுதலும் உண்டு.

மூதுரை வாழ்த்துச் செய்யுள், சிவஞானபோத வாழ்த்துச் செய்யுள் போன்றது.

(வரும்)



Koviloor Digital Library

# பயிர் செய்தல்

"P. S. வேங்கடாசல முதலியார்"

## 11. நில்வளத்தின் இலக்கணம்

செடிகள் செழிப்பாய் வளர மண் இளக்கமாயிருக்க வேண்டுமென்றும், அதற்கு நிலத்தைத் திரும்பத் திரும்ப உழுதல் இன்றியமையாததென்றும் 'உழவு' என்ற தலைப்பின் கீழ்க் கூறப்பட்டது. இனி வேறு வழியில் இம்மண்ணிளக்கத்தை எவ்வாறு அடையக்கூடுமென்பதைக் காண்போம்.

பாறைபோல் இறுகி உறைந்திருக்கும் நிலத்தை வெட்டக் கடப்பாரை போன்ற கருவிகளைக் கையாளுகின்றோம். ஆனல் எரு, சாம்பல் முதலியவற்றை அள்ளுங்காரியத்தில் அத்தகைய முறையைப் பின்பற்றுவதில்லை. மாதக்கணக்காக அவை மழையில் நனைந்து வெயிலில் காய்ந்திருந்தபோதிலும் மணலை அள்ளுவதுபோலவே மிக எளிதாக அள்ளிவிடுகின்றோம். இதிலிருந்து மண்ணைப்போல் இறுகி உறையுந் தன்மை அவை களுக்கில்லையென்பது தெளிவாகின்றது.

இப்பொழுது ஒரு நிலத்தில் இவ்வெருவகைகள் எவ்வளவுக் கெவ்வளவு மிகுதியாயிருக்கின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு அந்நிலம் மிகுதியான மண்ணிளக்கம் உடையதாயிருக்குமென் பது புலப்படுகிறதன்றோ? அத்தகைய நிலத்தை ஒருமுறை நன்றாக உழுதுவிட்டால் அதனாலேற்படும் மண்ணிளக்கம் நெடு நாளைக்கு நிலைத்திருக்கு மென்பதும் புலப்படவில்லையா?

மலைகளில் ஒவ்வொரு கத்திரிச் செடியும் சுமார் மூன்று முதல் ஐந்தடி வரையினும் வளர்ந்திருப்பதைக் காணலாகும். அங்கு நிலத்தை உழுதோ, அல்லது வெட்டிக்கொடுத்தோ அதைப் பயிரிடுவார் யாருமில்லை. மண்ணிளக்கமும், தக்கபடி உரச்சத்தும் இருந்தாலன்றி அச் செடி அவ்வளவு செழிப்பாக வளரமுடியாதென்பது நமக்கு நன்றாகத் தெரிந்தது. அவ்வித மிருக்க உழவென்பது சிறிதேனுமில்லாத அம்மலையில் மண்

Koviloor Digital Library



விளக்கம் எப்படி உண்டாயிற்று? இது, ஆழ்ந்து சிந்திக்கத் தக்ககாரியமாகும்.

இதன் உண்மை யென்னவென்றால், மலைகளில் மரங்களின் தழைகள் உதிர்ந்து மக்கி மண்ணுடன் கலக்கின்றன. ஆண்டுகள் கணக்காக இங்ஙனம் நிலையேற்படுவதால் உரப்பொருள் நிலத்தில் சுவற அந்நிலம் பாசிபோன்ற ஓர் தன்மையை அடைகின்றது. நாட்டிலும் தரையோடு தரையாய்ப் படர்ந்து வளர்ந்திருக்கும் பெரிய செடிகள் அல்லது சிறிய மரங்களைச் சுற்றிலும் மண் இவ்விதத் தன்மையை யடைந்திருப்பதைக் காணலாம். எரு குவிக்கப்பட்டிருக்கும் இடங்களிலும் அதன் தன்மைக்கும், அது குவிக்கப்பட்டிருக்கும் காலஅளவிற்கும் தக்கபடி மண் சில அங்குலங்கள் முதல் ஒரு அடிவரையிலும் இவ்வித நிலையிலிருப்பதும் தெரியவரும். இந்நிலையை யடைந்த மண்ணானது இறுகி உறையாமல் எப்பொழுதும் 'பொலு பொலுப்பாய்' இருப்பதுடன் கடற்பாசிபோல் தண்ணீரை யேற்றுக்கொண்டு அந் நீர்ப்பதம் வெகுநாளைக்கு நிலைத்திருக்கும்படியும் செய்கிறது.

பெருங் காடுகளுள்ள மலை யுச்சிகளில் மண் மூன்றடி ஆழம் வரைக்கும் இப் பாசித் தன்மையைப் பெற்றிருப்பதுண்டு. இத் தன்மை வாய்ந்த நிலமே வளமான நிலமென்று சொல்லப் படும்.

முற்காலத்தில் காடுகள் வெட்டி யழிக்கப்பட்டுப் புதிதாக நிலம் பயிர்த்தொழிலுக்குக் கொண்டுவரப்பட்டிருந்தபடியால் மேலே கூறியபடி வளமுடையதா யிருந்தது அந்நிலைமைக்கும் இப்பொழுதுள்ள நிலத்தின் தன்மைக்கும் உள்ள வேற்றுமை எளிதில் காணக்கூடியதா யிருக்க, அக்காலத்து முறையை அப்படியே இப்பொழுதும் பின்பற்றி முன்போல் ஊதியம் அடையக்கூடவில்லை யென்று சொல்வது பெரும் விந்தை. யாகவே யிருக்கின்றது. மேலே கூறியபடி வளமான நிலத்தில் எள் பயிர் செய்ய ஏழு உழவுகள் தேவையென்றால், தகுந்தபடி உரமிடாத நிலைமையில் எழுபது முறை நிலத்தை உழுதாலும் முன்போல் இப்பொழுது பயனடையக் கூடுமோ வென்பது ஐயமே.

Koviloor Digital Library



## 12. நிலம் வளம்பெறச் செய்வதெப்படி?

முன் கூறப்பட்டிருப்பதிலிருந்து நிலவளத்தைப் பெருக்க எருவகைகளை மிகுதியாகச் சேர்க்கவேண்டு மென்பது தெளிவாகின்றது. காடுகளின்மையாலும், கால் நடைகளின் குறைவாலும் தழை, எரு முதலியவற்றையும், மற்றுக் கொம்புத்தூள், பிண்ணாக்குப் போன்ற உரவகைகளையும் விலைகொடுத்து வாங்குவது மிக்க செலவேயாகும். மிகக் குறைந்த செலவில் உரம் சேகரிக்க இக்காலத்தில் ஒரேவொரு வழிதானுண்டு. அதாவது பசுந்தாள் வரப் பயிர்களைப் பயிர்செய்தலேயாகும்.

அவற்றில் பலவகைகள் உண்டு. எளிதாகவும் மிகவிரைவாகவும் வளரக்கூடியவையும் அதேகாலத்தில் மிகுதியாகக் கிடைக்கக்கூடியவையுமான பயிர்கள் சணலும் டொயின் சருகுமே. அவற்றுள் சணல் ஒன்றரை மாதங்களிலும் மற்றது மூன்று மாதங்களிலும் பயனுக்கு வரக்கூடியவை. சணலானது உரப் பயிராவதுடன் சிறந்த கால் நடைத் தீவனப் பயிர்களுள் ஒன்றுமாகும். பசும் புற்றரைகள் இல்லாத இக்காலத்தில் கால் நடைத் தீவனச் செலவைக் குறைக்கவும், உரமான உணவை உண்டாக்கவும் கால்நடைத் தீவனப் பயிர்களைப் பயிரிடுவது நன்மை தரும்.

பசுந்தாள் உரப்பயிர்களை மண்ணில் புதைத்து மக்க வைக்கவேண்டும். அவைகள் நன்றாக மக்காவிட்டால் கறையான் போன்றவைகள் நிலத்தில் உண்டாகி, இடப்படும் பயிருக்கு அழிவை விளைவிக்கும் இதற்கு மழைகாலமே ஏற்றது. மழைக்கு முன்னமேயே நிலத்தை நன்றாக உழுது புழுதியாக்கி வைக்கவேண்டும். மழை பெய்ததும் தண்ணீரைத் தேக்கித் தழைகளைப்போட்டு அவை மண்ணில் புதையும்படி செய்ய வேண்டும். அப்படிச் செய்வதில் கோயில்களில் பலியிடுவதற்காகக் கொண்டுவந்து நிறுத்தப்பட்டிருக்கும் ஆடுகள் அமைதியாய் நிற்கும்பொருட்டு அவற்றிற்குத் தழை கொடுப்பது போன்று ஒன்றிரண்டாய் நிலத்திற்குத் தழைகளையிடாமல் கட்டுக் கட்டாகப்போட்டுப் புதைக்கவேண்டும். இப்படிச் செய்யுங்கால், இக்காலத்தில் சேடையில் தழைமிதித்து உடனே

Koviloor Digital Library



பயிர் செய்வதுபோல் செய்யமுடியாது. தழைகள் மக்கு வதற்குமுன் அதனாலுண்டாகும் வெப்பம் பயிர்களை அழித்து விடுமாதலால் அத் தழைகள் நன்றாக மக்கும் வரையிலும் பயிரில்லாதிருத்தல் வேண்டும். அத்துடன் எலும்புத் தூளும் சுண்ணாம்பு உரமும் நிலத்தில் சேர்ப்பது பெரிதும் பயன் விளைவிக்கும். சில ஆண்டுகள் வரையிலும் இங்ஙனம் செய்து வந்தால் எத்தகைய வளமற்ற நிலமும் வளம்பெற இடமுண்டு.

மணல் பாங்கான நிலமாக இருக்குமானால் அதில் தழைகள் அழுகி மக்காதாதலால் அப்படிப்பட்ட இடத்தில் தழைகளை மேலே கூறியபடி புதைப்பதால் பயன் உண்டாகாது. அப்படிப்பட்ட நிலத்தில் களிமண் அல்லது குளங்களில் படிந்திருக்கும் துறுவல் (கரம்பை) மண் சேர்க்கவேண்டும். அல்லது தழை முதலான எருக்களுடன் துறுவல் மண்ணும் சேர்த்துப் பெரிய கிடங்குகளில் போட்டு அதில் தண்ணீர் விட்டு நன்றாக அழுகி மக்கும்படி செய்து பின் அதை நிலத்திற்கு இட வேண்டும்.

## 13. நிலவளம் கெடாமல் பாதுகாப்பதில் சிந்திக்கவேண்டிய சில பகுதிகள்

எக்காரணத்தை இட்டும் நிலத்தில் தேவைக்குமேல் தண்ணீரைத் தேக்குவதாவது அல்லது நிலத்திலிருந்து தண்ணீர் ஊற்றுப்போல் கழிந்துகொண்டிருக்கும்படி செய்வதாவது கூடாது. 'பதமடையாத' நிலையிலுள்ள உரப்பொருளைப் 'பதமடைந்த' நிலைக்கு மாற்றுவதற்கான புழுக்கள் உயிர் வாழக் கதிரவன் வெப்பம் இன்றியமையாததென முன் கூறப் பட்டுள்ளது. இக்கதிரவன் வெப்பம் நிலத்தில் எவ்வளவு ஆழம் வரையிலும் இறங்குமோ அவ்வளவுதூரம் வரையிலுமே அதாவது நிலத்தின் மேற்பரப்பில்மட்டுமே 'பதமடைந்த' நிலையிலுள்ள உரப்பொருள் இருக்குமாதலால் நிலத்தில் தண்ணீர் தேங்கி நின்று வெளியே கழிவதன் வாயிலாக அவ்வுரப் பொருள் தண்ணீரில் கரைந்து நிலத்தை விட்டு வெளியாகி விடும்.

Koviloor Digital Library



வடிகால் தேவையாயிருக்கு மிடங்களில் அதை மிக ஆழ மாக இருக்கும்படி அமைத்தல்வேண்டும். மழையினலோ அல் லது மற்றெந்தக் காரணத்தாலோ நிலத்தில் திடீரென்று பெரு மிதமாய்த் தண்ணீர் பெருகும்படி ஏற்பட்டால் அந் நீர் நிலத் தில் தங்கி நிற்காமல் உடனேயே கழிந்துவிடும்படி செய்தல் முதன்மையானது.

மற்றும் நீர்ப்பிடிப்புள்ள நிலம் எளிதில் புளிப்படைவது இயல்பு. இப்புளிப்புத் தன்மையானது நிலத்திலுள்ள மேலே கூறிய புழுக்களை வேரறக் களைந்துவிடுவதுடன் அவைகளுக்கு மாருன சிலவகைப் புழுக்கள் தோன்றிப் பெருக இடந் தரு கின்றது. அவைகள் நிலத்திலிருக்கும் 'பதமடைந்த' நிலையி லுள்ள உரப்பொருளை ஆவியாக மாற்றி நிலத்தினின்றும் வெளியேறச் செய்து நிலத்தைப் பாழ்படுத்திவிடும்.

பயிரில்லாத காலங்களிலும் நிலத்தில் களைப்பூண்டுகள் இல்லாதபடி செய்வது இன்றியமையாதது. இவைகள் நிலத் தின் மேற்பரப்பிலுள்ள 'பதநிலையடைந்த' உரப்பொருள் முழுவ தையும் உண்டுவிடும். மனிதருக்கு வியர்வையாக நீர் கழிவது போல் மரஞ் செடிகளுக்கும் நீர் கழிவதுண்டு. கோடை காலத்தில் நிலத்திலும் நீர்ப்பதம் மிகக் குறைவாக இருக்கு மாதலால் தண்ணீர் குறைவினுல் அவைகள் பட்டுப் போகாம லிருக்கும்வண்ணமே அக்காலத்தில் அவைகளின் இலைகள் உதிர்ந்துவிடுகின்றன. ஏனென்ருல் இலைகளின் மூலமாகவே மரஞ் செடிகளில் வியர்வை வெளியாகின்றது. எனவே பயி ரிடப்பட்டிருக்கும் நிலங்களில் இக் களைப் பூண்டுகள் இருக்கு மாஞல் அவை (1) உரப்பொருளை உண்டுவிடுவதுடன் (2) தண்ணீர்த் தடையான காலங்களில் நிலத்தில் இருக்கும் குறைந்த நீர்பதத்தையும் போக்கடித்து அப்பயிர்களுக்குக் கெடுதியை உண்டுபண்ணக் கூடியவைகளா யிருக்கின்றன வென்பதும் தெளிவாகின்றது.

நீர்ப்பிடிப்பினுல் புளிப்படைந்த நிலத்தில் அப்புளிப்புத் தன்மையை மாற்றவும் அத்துடன் இனிப்புத் தன்மையை உண்டுபண்ணவும் சுண்ணும்புச் சத்தைச் சேர்ப்பதுடன் நன் ருக உழுது வெயிலில் காயும்படியும் செய்தல் வேண்டும்.

Koviloor Digital Library



## 14. பயிர் செய்வதில் கையாளப்படும் தவருன முறைகள்

பயிர் செய்வதில் சிறப்பாக நெல் பயிரிடுவதில் சில தவருன முறைகள் கையாளப்படுகின்றன. நெல் பயிரே நமது நாட்டில் உணவுப்பயிர்களில் முதன்மையானதாக இருப்பதால் அதன் தொடர்பாய் இழைக்கப்படும் தவறினுல் நாடு வேளாண்மையில் பிற்போக்கான நிலையையும் அதன் வாயிலாக வறுமையும் அடைந்ததெனத் துணிந்து கூறலாம்.

மண் சோதனை நடத்தி அரசியலார் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் நம் நாட்டு மண்ணில் "சோடா" என்னும் நிலையிலுள்ள உரப்பொருள் மிகுதியும் குறைந்த அளவிலிருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. 'சோடா' என்ற இந்நிலை எப்படி அடையப்படுகிறதென்பதை அறிந்தால், இழைக்கப்படும் தவறு எவ்வளவு பெரியது என்பது பளிச்சென்று புலப்படும்.

உரப்பொருள் 'பதமடையாதது' 'பதமடைந்தது' என்று சொல்லப்படும் இரு நிலைகளிலிருப்பதைப் போலவே 'பதமடைந்த' நிலையிலுள்ள உரப்பொருளும், 'அமோனியா' 'சோடா' என்று சொல்லப்படும் இரு நிலைகளிலிருக்கின்றன. இவற்றுள் 'சோடா' என்ற நிலையையடைந்த பின்னரே பயிர்கள் உரப்பொருளை உணவாக ஏற்றுக் கொள்ளக்கூடும்.

எரு, தழைகள் முதலியவை அழுகி மக்குவதன் வாயிலாக 'அமோனியா' என்ற நிலையை யடையும். அதன்பின் அவை மண்ணுடன் கலந்து அதிலுள்ள புழுக்களினுலேயே 'சோடா' நிலைக்கு மாற்றப்படவேண்டும். இதற்கு மண் எவ்வளவு தூரம் வெயிலில் காயவேண்டுமென்பது நன்ருகத் தெரிந்ததே.

நெல்பயிர் இடப்படும் நிலங்களை உற்றுநோக்கினுல் அவை வற்ருக் கடல்போல் எக்காலத்தும் தண்ணீர் தேக்கப் பட்டிருக்கின்றன. அதுமட்டுமா? ஆண்டில் ஒரு முறையல்ல, இரு முறையல்ல மும்முறையும் திரும்பத்திரும்ப அதுவே செய்யப்படுகின்றது. அத்துடனுவது நிற்கின்றதா? ஆண்

Koviloor Digital Library



டாண்டு தோறும் நெல்பயிரே தொடர்ந்து செய்யப்படுகின்றது. வெயிலில் காய்வதற்குச் சிறிதேனும் நிலத்திற்கு ஓய்வு கிடைக்க இடமில்லாமலிருப்பதால் அதில் 'சோடா' நிலையிலுள்ள உரப்பொருள் குறைந்த அளவில் இருப்பதைப்பற்றி வியப்பெய்துவதற் கில்லை.

ஆண்டில் ஆறுமாதங்கள் வரையில் நம் நாட்டில் மழையினால் நிலத்தில் தண்ணீர் தேங்கி நிற்கும்படியாயிருக்க அந்நிலைமையில் நெற்பயிர் செழிப்பாக வளரவில்லையா? அங்ஙனமாக அப்பயிரை இடுவதிலும் நிலத்தில் நீரைச் செழிப்பாகத் தேக்குவதிலும் குற்றமென்ன வந்தது என்று கேட்கலாம்.

நிலத்தில் தண்ணீர் தேங்கி நிற்பதால் அது புளிப்படையும்; நெல்லைத்தவிர மற்றப் பயிர்கள் அந்நிலைமையில் உண்டாகா. இவை மறுக்கக் கூடியவையல்ல. இதன் மறைபொருள் என்னவென்றால் மற்றெல்லாப் பயிர்களையும்விடச் சிறப்பான ஒரு குணம் நெற்பயிருக்கிருக்கின்றது. அதாவது 'அமோனியா' என்ற நிலையிலேயே நெற்பயிர் உரப்பொருளை உணவாக ஏற்றுக்கொள்ளுந் தன்மைவாய்ந்தது. இதன் காரணமாகச் 'சோடா' என்ற நிலையிலுள்ள உரப்பொருள் நெற்பயிருக்குத் தேவையன்று என்றாவது அல்லது அந்நிலையில் அப்பயிர் வளர்ச்சி பெறாது என்றாவது தீர்மானித்தல் தவறு. உரப்பொருள் 'சோடா' என்ற நிலையை அடையக்கூடாத காலத்தும் நிலம் பயிரில்லாதிருப்பதைத் தவிர்க்க அப் பயிரை இடலாம் என்பதே கருத்து. இதுவே தவிர அப்பயிருக்கு எக்காலத்தும் தண்ணீர் தேங்கி நிற்க வேண்டுவது இன்றியமையாதது என்பது பொருந்தாது. தண்ணீர் தட்டான காலங்களில் விளைவு மிகுதியாய்க் கிடைப்பதைப் பழக்கத்தில் காண்பதிலிருந்து, மேற்கூறியதன் உண்மை தெற்றென விளங்கும்.

உழவு தொழிலின் முதன்மையை வற்புறுத்திக் கூறியிருக்கும் பெரியோர்களில் ஒளவையார் ஒருவர். அவர் குலோத்துங்க சோழனுக்கு முடிசூட்டும் நாளன்று அவனை "வரப்புயர" என்று சொல்லி வாழ்த்தியதாகவும், அதன் கருத்தை விளக்கும்படி அங்கிருந்தோர் அவரைக் கேட்டதாகவும் "வரப்புயர நீருயரும், நீருயர நெல்லுயரும்,........" என இங்

Koviloor Digital Library



னம் பொருள் கூறியதாகவும் சொல்லப்பட்டிருக்கின்றது. இது ஆழ்ந்து சிந்திக்கத்தக்க பகுதியாகும்.

நெற்பயிருக்கு எம்பொழுதும் இருக்கும்படி தண்ணீரைத் தேக்கும் வழக்கம் உண்டானால் நீர் அளவைப் பெருக்க வரப்பை ஏன் உயர்த்தவேண்டும்? 'தலைக்குமேல் போகும் வெள்ளம் சாண் போனாலென்ன முழம் போனாலென்ன?' என்பதைப்போல் நிலம் நன்றாய் நனைந்து அதன்மேல் ஓரங்குலம் நீர் நிற்பது போதுமென்று ஏற்பட்டால் அதற்குமேல் ஓரடியுயரம் தண்ணீர் நிற்கும்படி செய்வதால் கிடைக்கும் மிகுந்த பயனென்ன?

கூர்ந்து நோக்குங்கால் அக்காலத்தி லெல்லாம் நெற்பயிருக்கு இப்பொழுது செய்வதைப்போல் தேவைக்கு மிகுதியாகத் தண்ணீரைத் தேக்கும் வழக்கம் இல்லையெனத் தெரிகின்றது. காய்ச்சலும் பாய்ச்சலுமாய் இருந்ததென்றே சொல்லவேண்டும். காய்ச்சலின் காரணமாகவே நீர்பதம் குறையாமலிருக்கும் வண்ணம் தண்ணீர் மிகுதியாகத் தேங்கும்பொருட்டு வரப்புயரவேண்டும் என்று அவர் கூறியதாகத் தெரிகிறது. ஆராய்ச்சி முறைக்கும் இதுவே பொருந்தியு மிருக்கின்றது.

இக்காலத்தில் நெற்பயிர் காரணமாக நிலத்தில் தேவைக்குமேல் தண்ணீரைத் தேக்குவதால்,

1. தண்ணீர்த் தடையை உண்டுபண்ணுதல். அதனால் கரிவு ஏற்படல்.

2. நிலத்திலுள்ள உரப்பொருள் அதினின்றும் வெளியாதல்.

3. நிலம் புளிப்படைவதன் வாயிலாக மற்றப் பயிர்கள் வளரத் தகுதியில்லாமற் போதல்; மற்றும் பல கெடுதிகளும் விளைகின்றன. அன்றியும் ஒரு பயிரையே ஒரு நிலத்தில் தொடர்ந்து செய்துவருவதால் குறிப்பிட்ட ஒருவகை உரப்பொருளே மிகுதியாகச் செலவாவதால் எந்தப் பயிரும் செழித்து வளர்வதற்குக் கூடாத நிலைமை ஏற்படுகின்றது இம் முறைமைகளை உன்னிப் பயிர்செய்ய, உழவு தொழிலில் மிகவும் நன்மைகள் உண்டாகும்.

---

Koviloor Digital Library

# வள்ளுவரும் உவமைகளும்

[வித்துவான். ம. இராசமாணிக்கம்]

உலகிற்கே அறநெறியை அறிவுறுத்த வந்த அறிஞர் திருவள்ளுவர் ஒருவரேயெனின் மறுப்பார் யாருமிலர். அவர் மக்கட்கு அறிவுறுத்திய முறை பலவாம். விதித்தல் முறையால் அறிவுறுத்துவனவும், எதிர்மறை முறையால் அறிவுறுத்துவனவும்,

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று"

என்று படித்தரம் அறிந்து முறைப்படுத்தி உரைப்பனவும், உவமைகூறி அறிவுறுத்துவனவும் எனப் பல. உவமை இருவகை: பொருளைச் செவ்வனே மக்கட்கு விளக்கும்பொருட்டு உலகறிந்த ஒரு பொருளை உவமையாகக் கூறுதல் புலவர்கள் மரபு. இது, உவமை இலக்கணம். ஆசிரியர் வள்ளுவனாரும் உலகினர்க்கு அறிவுறுத்த வேண்டிய உண்மைப் பொருள்களை அவர்கள் அறிந்த பொருளைக்கொண்டே உவமைகூறி விளக்குவர்; இது ஒன்று. தாம் நினைத்த பொருள் இரண்டனுள் ஒன்றனை உவமையாக்கி மற்றொன்றைப் பொருளாக்கி அறிவுறுத்துவார்; இது மற்றொன்று. இரண்டாவது முறையை இலக்கியங்களில் கண்ட பின்னர்த்தான் மாறனலங்கார ஆசிரியர் இதற்கோர் இலக்கணம் வகுத்தார். முதல் முதலாக இங்ஙனம் உவமை கூறுதலைக் கொண்டார் திருவள்ளுவர் ஒருவரேயாகலின், அவர் குறள்களையே எடுத்துக்காட்டாகக் காட்டி இவ்வணிக்கு இலக்கியமாவது திருக்குறளே எனக் காட்டினர் அதன் உரையாசிரியரும். ஆகவே நினைத்த இருபொருள்களுள் ஒன்றனை உவமையாக்கியும் மற்றொன்றைப் பொருளாக்கியும் கூறும் இம் முறையை முதலிற் கண்டவர் திருவள்ளுவரேயாகும். அவற்றுள் இரண்டு குறள்களைக் காண்போம்.

அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு.

Koviloor Digital Library



இது ஒழுக்கமுடைமை என்ற தலைப்பின்கீழ் உள்ளதோர் குறள். ஒழுக்கம் இல்லானிடத்து உயர்வு இல்லை என்பதை விளக்க நினைத்த ஆசிரியர், பொறாமை உடையானிடத்துச் செல்வம் இல்லாததுபோல என்று உவமை கூறி விளக்கினர் வேறு உவமைகள் கூறி விளக்கினும் அமையும். ஆயினும் வள்ளுவர் கருத்தில் அழுக்காறுடையான் செல்வம் பெறுன் என்பது நெடு நாட்களாக ஆராய்ச்சியின் வயப்பட்டு முடிவு பெற்று நின்றதாகலின், அக் கருத்தை அதற்கு ஒரு தனித் தலைப்பு அமைத்துக் கூறுவதற்கு முன்னரேயே உவமையால் கூறினர். இங்ஙனம் உவமையாகக் கூறும் கருத்துக்கள் யாவும் திருவள்ளுவர் கருத்தில் பன்னாள் இடம் பெற்று முடிவு பெற்று நிற்பன என்றறிதல் வேண்டும். இன்றேல் ஒழுக்க முடைமை அதிகாரத்துள் கூறவேண்டாமன்றே?

> இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
> கழிபேர் இரையான்கண் நோய்.

இது 'மருந்து' என்ற தலைப்பின்கீழ் உள்ளதோர் குறள். மருந்தின் திறங்களையும் நோய்க்குக் காரணமானவற்றையும் விளக்கிய ஆசிரியர், "மிக்க உணவு உண்பானிடத்து நோய் நிலைபெற்று நிற்கும்" என்பதை விளக்குமிடத்து, "உணவினை அளவாக உண்பானிடத்து இன்பம் நிலைத்து நிற்குமாறு போல" என்று தம் மனதில் பன்னாளாகச் செம்மைப்பட்ட கருத்தைக் கூறி விளக்கினர். இழிவறிந்து உண்பானது இன்பம்போல் என்று உவமை கூறுதல் அவர் அளவறிந்து உண்டு அதனல் பெற்ற இன்பத்தைப் பன்னாளாக ஆய்ந்து நடைமுறையில் கூறினர் என்றே கொள்ளல்வேண்டும். இன்பத்தையோ அன்றித் துன்பத்தையோ ஒரு புலவன் உவமை கூறினன் என்றல், இயல்பாக உவமையாகக் கருதப்படாத அக்கருத்துக்கள் அவன் மனதில் உவமையாகக் கருதப்படுதலின், அவை அவனது நடைமுறையிற் கண்டனவே என்றறிதல் வேண்டும். இம்முறையிற்றன் இக் குறளும் அருளப்பட்டது. இம்முறையில் ஆசிரியர் கூறும் செய்யுட்கள் பல. உலகறிந்த உவமை கொண்டு பொருளை அறிவுறுத்தும் செய்யுட்களுள் ஒன்றனைக் காண்போம்.

Koviloor Digital Library



கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.

இது நிலையாமைத் தலைப்பின் கீழ் உள்ளதோர் குறள். செல்வம் நிலையாமையைப்பற்றிப் பல ஆசிரியர்கள் பல திறத்தவாகக் கூறுவர். ஆனால் செல்வம் நிலையாமை மக்களுக்கு எளிதாக விளங்குமாறு, மிகவும் நுண்ணிய கருத்தை நல்ல உவமை முறையில் வைத்து விளக்கினர் இவரன்றி யாரும் இலர் என்ன லாம். செல்வம் நிலையாமைக்கு உவமையாகக் கூறப்படுவது காண்போர் குழாம். கூத்தாட்டுக் காணச்செல்வார், பலதிறத்த ராவர். கூத்தாட்டுத் தொடங்குமுன்னே பல நாழிகைகளுக்கு முன்பே சென்று சிலர் தங்குவர். சில நாழிகைகளுக்கு முன்பே சிலர் சென்று தங்குவர். தொடங்கும்போது செல் வார் பலர். தொடங்கியபின் சில நாழிகைகள் சென்றபின் செல்வார் சிலர். ஆகவே காண்போர் குழாம் பல திறத்த வாகக் காண வருதல் தெளிவு. கூத்தாட்டு முடிவுறுகின்றது என்று வைத்துக்கொள்வோம். கண்டார் யாவரும் வெளியே விரைந்து வருதலைக் காண்கின்றோம். பல திறத்தவாக வந்த அவர்கள் அம்முறைப்படியே செல்லுதல் இலர். யாவரும் ஒரே காலத்தில் விரைந்து செல்கின்றனர்.

இதுபோன்றே செல்வமும் பல வேறுபட்ட காலங்களில் அமைதியாக வந்து சேர்ந்து காண்போர் குழாம் ஒன்றாய்த் திரண்டு போயினாற்போல ஒரே காலத்தில் அழிந்தொழியும். உவமை எவ்வளவு நுட்பமாயிருக்கிறது !

“சொல்லுக சொல்லிற் பயனுடைய” என்று நமக்கு அறிவுறுத்துவாரானால், அவர் பயனுடைய சொற்களையன்றி வேறு கூறார் என்பது பெறப்படும் அன்றோ ! ஆகவே அவர் கூறும் ஒவ்வொரு சொல்லும் பொருள் பொதிந்த புதையல் என்றே கருதவேண்டும்.

---

Koviloor Digital Library



திருநெல்வேலித் தமிழ் இசைவாணர்

சா. சுந்தர ஓதுவா மூர்த்தி

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—புரட்டாசி [பரல்-கூ

# விளங்குக !

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே

—புறநானூறு.

நல்வாழ்வு என்பது அவரவர் உள்ளத்தைப் பொருத்தது. உலகம் ஒன்று, நாடாயிருக்கட்டும் ; ஒன்று, காடாயிருக்கட்டும் ; ஒன்று, பள்ளமாயிருக்கட்டும் ; ஒன்று, மேடாயிருக்கட்டும் ; எந்த இடத்தில் ஆடவர் நல்லவரோ அந்த இடத்தில் உலகமும் நல்லதாயிருக்கிறது.

இதுதான் உண்மை. இதனை ஔவைப் பிராட்டியார் இப் பாட்டில் விளக்கியிருக்கிறார். நிலத்தைப் பார்த்துச் சொல்லுவதுபோலவே, 'நிலனே நீ வாழி' என்று எடுத்துக்கொண்டு சொல்லுகிறார். இங்கே நல்லவர் என்பதற்கு 'முயற்சி மேம்பாடு' உள்ளவர்கள் என்பது பொருள். ஆடவர், முயற்சியை ஆளுகிறவர்கள். வெளிமுயற்சிகளின் கடுமையை ஔவையார் பெண்மக்களுக்கு வைக்கவில்லை.

உலகம் என்ன செய்யும்? நாட்டில் தக்கவர்கள் விளங்காவிட்டால், நாடு காடாகிறது. நல்லவர்கள் விளங்கினால் காடும் நாடாகும். பள்ளமும் மேடாகும். பல பயன்களும் உண்டாகும்.

ஆகவே, 'நல்லவர்கள் விளங்குக' என்னும் மனப்பான்மையே நாட்டில் மேலோங்க வேண்டுவது முதன்மையாயிருக்கிறது.

Koviloor Digital Library

# வழி எப்படி ?-I

பழைய காலத்தைவிட இந்தக் காலத்தில் வரவர நாடு நகரங்களும் நாகரிகங்களும் மிகுதி என்றே சொல்லு கிறார்கள். ஆதலால், அவைகளுக்கு வழிகளும் மிகுதியா யிருக்கின்றன. கற்பாதை, மட்பாதை, கால் நடைப் பாதை, இருப்புப்பாதை முதலிய நிலப்பாதைகளும், பல கடற்பாதைகளும், வான்பாதைகளும் வரவரப் பெருகிக் கொண்டிருக்கின்றன. வழிகள் பெருகப் பெருக 'வழி எப்படி?' என்னுங் கேள்வியும் பெருகிக்கொண்டுதா னிருக்கிறது. எங்கே போவது? எப்படிப் போவது? என்னும் மயக்கமே பெரிதாயிருக்கிறது. நகரங்களில், பலர், செல்லும் வழி தெரியாமல் அலமருதலை நாளுங் காணலாம்.

இயக்கங்கள் பெரும்பாலனவும் இப்படித்தாம் இருக் கின்றன. இயக்கங்கள் பெருகப் பெருக அவற்றிற்கு வழி துறைகள் காண்பதே அருமையாயிருக்கிறது. வழி காட்டிகள் என்று சொல்லப்படுகிறவர்களுக்கே வழி மயக்கம் தீர்ந்தபாடில்லை. பரிசீலனை பண்ணப் பண்ண வழிகள் பல பிரிவுகளாகப் பிரிந்து பிரிந்து *கவலை வழி களாகின்றன. ஆதலால் வழிகாட்டிகளா யிருப்பவர் களிற் பெரும்பாலோரே வழியல்லாத வழிகளில் மயங்கிச் செல்ல நேரிடுகிறது. இவைகளையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டுதான்,

"நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்"

என்றெல்லாம் பெரியோர்கள் ஒரு குறை அரற்றியிருக் கிறார்கள்.

---

* கிளை வழிகள்.

Koviloor Digital Library



மொழியியக்கமும் இங்ஙனமே பல கவலை நெறிகள் உள்ளதா யிருக்கிறது. பலருஞ் செய்த குழப்பத்தால், பலர்க்கு, 'வழி எப்படி?' என்று அறிவதே பெரிய காரியமாயிருக்கிறது.

கவிகளிற் சிலர், வெறுங் கருத்துணர்ச்சி மட்டுங் கொண்டு பாட்டுகளைப் பொழிந்திருக்கிறார்கள். அவர்கள் பாட்டுகளில் மொழியுணர்ச்சி அவ்வளவாக இல்லை. சில ரிடம் இரண்டும் இருந்தாலும், அவை உயர்வான நிலையில் இருப்பதில்லை. சிலருடைய கவிகள், அணிபெற அமை வது அருமையாயிருக்கிறது. சிலர்க்கு அந்த அணிகள் வரைதுறை இல்லாமற்போய்விடுகின்றன. சிலர்க்குப் பெருந்தன்மை அமைவதில்லை. சிலருடைய கவிகள் சிறிய நீரோட்டம்போல ஆழமும் அரும்பொருள்களு மில்லாமல் மேலோட்டமா யிருக்கின்றன. சிலருடைய பாட்டுகள் செறிவாக இருந்தாலும், தெளிவாகத் தெளி பளிங்குபோலவே விளங்கிநிற்கின்றன. நமது நாட்டில் இங்ஙனம் பல படிமுறைகளில் கவிகள் வாழ்ந்திருக்கின் றனர். அவர்களை வரிசையறிந்து போற்றிக்கொள்ளுதல் வேண்டும்.

எல்லா நலங்களும் பொருந்திய அரும்பெருங் கவி களும் நமது நாட்டில் இல்லாமலில்லை. குறித்துச் சொன் னல், அவற்றைச் 'சங்க இலக்கியங்கள்' என்று சொல்ல லாம். பலரும் செய்த பல கவலை வழிகளால், 'நல்ல வழி எப்படி?' என்று அறிவதற்குச் சங்க இலக்கியங்களையே கடைப்பிடிக்கவேண்டி யிருக்கிறது.

சங்க இலக்கியங்கள் உணர்ச்சியோடு கூடிய பாட்டு கள் மட்டுமல்ல; அவை உயர்வகையான உணர்ச்சி களோடு கூடிய பாட்டுக்கள். மக்கள் வாழ்க்கையைத் தழைக்கச் செய்வதற்குரிய கருத்துக்கள் அமைந்தவை. அவற்றில் மொழிச் சுவையும் உண்டு; பொருந்திய

Koviloor Digital Library



அணிச்சுவையும் உண்டு. எடுக்க எடுக்கக் குறையாத பொருட் செறிவும், அதே நேரத்தில் அவை அடுக்கடுக்காகத் தெரிகின்ற பளிங்குத் தெளிவும் அவற்றிற் காணலாம். இவைமட்டுமல்ல ; அவற்றில் எல்லாம் காணலாம்.

மொழி இயக்கத்துக்குத் தமிழில், சங்க நூல்களே வழிகாட்டிகள் ; அங்கே சென்ருல், அப்புறம் நல்ல வழி தெரிகின்றது.

மற்ற இயக்கங்களின் நோக்கத்தைப் போலவே மொழி இயக்கத்தின் நோக்கமும், மக்கள் வாழ்க்கையைத் தழைக்கச் செய்வதுதான். கருவி எவ்வளவு நன்ருயிருக்கின்றதோ அவ்வளவுக்கு வேலேயும் நன்ருயிருக்கும் ; பயனும் நிறைவாயிருக்கும். அம்முறையில், மொழி என்னுங் கருவியை நன்ருக வைத்துக்கொண்டு, இன்பமாய்ப் பணி செய்து நிறைந்த பயனேக் கொள்ளவேண்டு மென்பதே மொழியியக்கத்தின் கருத்து.

மொழி இல்லாவிட்டால் உலகத்தில் எந்தக் காரியமும் எளிதாக நடைபெறுவதற்கு வழியில்லே. ஒருவரைத் தண்ணீர் வேண்டுமென்று கேட்குஞ் சிறுகாரியம் முதல் உயர்ந்த சட்ட சவைகளில் அரிய தீர்மானங்கள் செய்யும் பெருங் காரியம் வரையில் எல்லாவற்றிற்கும் மொழியின் உதவி கட்டாயமாகத் தேவையிருக்கிறது.

மொழிகள், வழங்குவதற்கு எளிதாகவும் இருக்க வேண்டும் ; இன்பமாகவும் இருக்கவேண்டும்.

இன்று ஒன்று வழங்கி நாளே ஒன்று வழங்கினுல் மலேப்பு உண்டாகி அவை எளிமையில்லாமற் போகும். ஆதலால் வரம்போடு வழங்கும்பொருட்டு 'இலக்கணம்' ஏற்பட்டது.

> "எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
> செப்பின ரப்படிச் செப்புதல் மரபே"

என்னுங் கொள்கை இதனுல் எழுந்ததேயாகும்.

Koviloor Digital Library



உணர்ச்சியோடு உண்டாகும் சொற்களே கேட்பதற்குச் சுவையா யிருக்குமாதலால், அத்தகையவை 'இலக்கியங்க'ளாகக் கொள்ளப்பட்டன. இளங்கோவடிகள் உணர்ச்சி மிக்கவர்:

" காவி யுகுநீரும் கையில் தனிச்சிலம்பும்
ஆவி குடிபோன அவ்வடிவும்—பாவியேன்
காடெல்லாஞ் சூழ்ந்த கருங்குழலுங் கண்டஞ்சிக்
கூடலான் கூடாயி னான் "

என்பதுபோன்ற அவர் பாட்டுக்கள் மிக்க உணர்ச்சியில் எழுந்தவையே.

மொழிகள் இப்படி இலக்கண இலக்கிய நிலைகளோடு கூடியிருந்தால், அது வழங்குவதற்கு முறையே எளிமையாகவும் இனிமையாகவும் இருக்கும். மொழி என்னுங் கருவியை இப்படித்தான் நல்லபடி வைத்துக் கொள்ளவேண்டும்.

தகுதியல்லாத பாட்டுகளையும் உரை நடையையும் ஏதோ காரணமாக நம்பிக், கருவியைக் கெடுத்துக் கொள்வது நன்றாகாது. மொழியை நன்றாக வைத்துக் வதற்கு இது வழி.



Koviloor Digital Library

# காதற் கடிதங்கள்*

"பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்"

காதல் என்பது, ஆடவர் மகளிர் இருவரும் உலக வாழ்க்கையில் அறநெறி பிறழாதொழுகி, இன்பநுகர்தற்குரிய சிறந்த குணமாகும். காதல், காமம் என்னும் இரண்டனுள், காமம் இழிந்த நிலையில் நிகழ்வதென்பதும், காதல் உயர்ந்த நிலையில் நிகழ்ந்து தன்வயப்பட்டாரை எத்துணை இடையூறு நேரினும் பிறழவிடாது பிணித்து, இன்பத்தினும் துன்பத்தினும் பகிர்ந்தனுபவிக்கச் செய்து, நெடிது நிலைத்திருப்ப தென்பதும் அறிஞர் கண்ட உண்மைகளாம். ஆடவர் மகளிர் கூடி நுகரும் இன்பத்தின் இயல்பை விளக்க நினைந்த பெரியார், "எஞ்ஞான்றும்—காதலிருவர் கருத்தொருமித் தாதரவு—பட்டதே யின்பம்" என்று கூறினர். காமம் பற்றி ஆடவர் மகளிரை முறையே காமுகன் காமுகி என்று கூறுவதினும், காதல்பற்றிக் காதலன் காதலி என்று கூறுதல் அறநிலைக்கொத்த சிறந்த வழக்கென்பதையுங் காணலாம். தமிழ் மொழியிற் சங்க இலக்கியங்களாகவுள்ள அகநானூறு, குறுந்தொகை முதலிய அகப்பொருட் பகுதியை நுதலிய நூல்களெல்லாம் இக் காதலியல்பை விளக்க எழுந்தனவாம். அறம் பொருள் இன்பங்களை அகம் புறம் என வகுத்த தமிழ் இலக்கண நூலாசிரியர்கள், முன்னைய இரண்டையும் புறமெனக் கொண்டு, பின்னையதாகிய இன்பநிலையை அகமெனக் கொண்டு, பாகுபாடு செய்தனர். அகப்பொருளிற் காதலையும், புறப்பொருளில் வீரத்தையுமே சிறந்தனவாக எடுத்து விளக்கியதனாலும் இக் காதலின் பெருமையை உணரலாம். ஆடவர் மகளிர் இருவரும் முதலில் வாழ்க்கையின்பத்திற் றலைப்படுதற்கு, ஒருவர்பாலொருவர் மேற்கொள்ளுங் காதலே சிறந்த கருவியாம். முதலில், காதல் முகிழ்த்தற்கு ஏதுக்கள், உடல் வனப்பு, அன்பு, அறிவு முதலிய சிறந்த குணங்கள் என்னும் இவை முதலியனவாம். சிலவிடங்களிற் காதல் தோற்றத்திற்குக் காரணங் காண்டல் அரிதாகவும் முடியும். இக் காதல் வயப்பட்டார், ஒன்று

---

* 7-9-40-ல் திருச்சிராப்பள்ளி வானொலியிற் பேசியது.

Koviloor Digital Library



கூடுதற்கு நீங்காத தடைநேரின், அது காரணமாகச் சாதலும் அவர் பக்கல் இனிதாகும் என்பது, சரித்திரங்களாற் கண்ட தொன்று.

ஆடவர் மகளிர் ஒருவரையொருவர் காதலித்துத் தம்முட் கூட்டம் நிகழ்த்தற்கு முன்னரும், கூட்டம் நிகழ்ந்து எக்காரணத்தாலாவது பிரிவுநேர்ந்த பின்னரும் இக் காதற்சிறப்பு அவர்கள் முகமாக நன்கு புலப்படுவதாகும். இக் காதற் குறிப்பு, உடல்வேறு உயிர் ஒன்றெனக் கருதத்தகும் தொடர்புடையார்க்கன்றி, வெளிப்படுத்து நிலையில் உள்ளதன்று. ஆடவர், தம் இன்னுயிரனைய பாங்கர்பாலும், மகளிர், கண்போற் சிறந்த உயிர்த்தோழியரிடத்து மன்றி வெளிப்படுத்துவாரல்லர். இதனியல்பைச் சீவகசிந்தாமணி நூலாசிரியர், "சென்றே படினும் சிறந்தார்க்கும் உரைக்கலாவ தன்று" என்றார். இதன் கருத்து, இறப்புநேரினும் தாயர் முதலியோர்க்கும் கூறத்தக்கதொன்றன்று என்பதாம். காதல் முதிர்ந்த இடத்துக் காதலிக்கப்பட்டாரைப் பெறாத நிலையில், காணப்படும் வெளியெல்லாம் அன்னார் உருவமாகவே காண்பர் என்பதை அகப்பொருட்டுறையில் "எதிர்பெய்து பரிதல்" என்று இயல் நூலாசிரியர் கூறுவர். விமலையென்னும் ஓர் இள நங்கை, பந்து விளையாடினளாக, அப் பந்து புறவெளியில் வீழ்ந்ததுகண்டு அதனை எடுக்கச் சென்றவள், சீவக குமரன் என்னும் கட்டழகனைக் கண்டு,

> "பெண்பாலவர் கட்கணியாய்ப் பிரியாத நாணுந்
> திண்பால்நிறையுந் திருமாமையுஞ் சேர்ந்த சாயல்
> கண்பாற்கவினும் வளையுங்கவர்ந் திட்ட கள்வன்
> மண்பாலிழிந்த மலரைங்கணை மைந்த னென்றாள்"

இங்ஙனங் கருதிக் காதல் வயப்பட்டனளாக, அந்நிலையில் அவளைக் கண்ணுற்ற சீவகனும்,

> "பூவுண்டகண்ணாள் புருவச்சிலை கோலி யெய்ய
> ஏவுண்டநெஞ்சிற் கிடுபுண்மருந் தென்கொ லென்னா
> மாவுண்டநோக்கின் மடவாளை மறித்து நோக்கிக்
> கோவுண்டவேலான் குழைந்தாற்றல னாயி னானே"

Koviloor Digital Library



இங்ஙனம் ஆற்றலனாய்த், தான்கண்ட வெளி நிலமெல்லாம் அக் காதலியின் வடிவழகே தன் கட்பொறிகளுக்குப் புலனாகக் கண்டு,

"பைங்கண் மணிமகர குண்டலமும் பைந்தோடும்
திங்கண் முகத்திலங்கச் செவ்வா யெயிறிலங்கக்
கொங்குண் குழல்தாழக் கோட்டெருத்தஞ் செய்தநோக்
கெங்கெங்கே நோக்கினும் அங்கங்கே தோன்றுமே"

என்று காதலிற் கனிந்து கூறியதாக, ஆசிரியர் கவிவடிவிற் றீட்டிய ஓவியம், அறிஞருள்ளத்தைக் கனிவிப்பதாகும். இத னுள் "கோட்டெருத்தஞ் செய்தநோக்கு", சாய்ந்த கழுத்துத் தந்த பார்வை என்னும் பொருளதாகும். அவள் தன்னை நோக்குங்கால் கழுத்தைச் சிறிது சாய்த்துப் பார்த்ததைக் கண்டானாகலின், அத் தோற்றமே அவனுள்ளத்தைப் பிணித்த தென்றார். இது வியக்கத்தக்க தொன்று.

பிறிதோரிடத்துக் குணமாலையென்பாள் ஒரு பெண்கள் திலகம், நீராடித் திரும்புங்கால் ஒரு யானையால் தாக்கப்படும் நிலையில், சீவககுமரன் சென்று, தன் ஆண்மையால் அவ் யானை யை அடர்த்து விலக்கி, அவளைப் பாதுகாத்துச் செல்ல விடுத் தானாக, அந் நிலையில் இருவர்க்குங் காதல் ததும்பியது.

"கன்னிய ருற்றநோய் கண்ணனார்க்கு மஃது
இன்னதென் றுரையலர் நாணி னாதலால்"

"கைகளாற் சொலக் கண்களிற் கேட்டிடும்
மொய்கொள் சிந்தையின் மூங்கையு மாயினேன்"

என்று அவள் கருதுவாளாயினாள். மூங்கை என்பது ஊமை யாகும். இங்கே ஊமையின் இலக்கணத்தை ஆசிரியர், 'கை களாற் பேசக் கண்களாற் கேட்பது' என்றும், உள்ளச்செய்தி களை வெளிப்படுத்துப் பேச இயலாமையால் நினைவு பலவாக நிறையுமாதலின் "மொய்கொள் சிந்தை" என்றுங் கூறியது, நினைந்து இன்புறத்தக்கது. இங்ஙனம் குணமாலை நினைவும் செயலும் காதல் வயப்பட்டிருக்கும் நிலையில்,

Koviloor Digital Library



"வெஞ்சின வேழமுண்ட வெள்ளிலின் வெறிய மாக
நெஞ்சமு நிறையு நீல நெடுங்கணாற் கவர்ந்த கள்வி"

என்று அவள் கண்ணோக்கத்தால் காதல் வயப்பட்டுப் பிரிந்த சீவக குமரன், தனித்திருந்து தன்னுள்ளத்தில் திகழும் அவள் அழகிய உருவத்தை, ஓவியத்தில் வரைய எண்ணினான். அவள் உடலுறுப்புக்கள், ஆடையணி முதலியவற்றின் நிற வேற்றுமைகளுக்கு, அவ்வந்நிறத்து இரத்தினங்களைப் பொடித்துக் கரைத்துப் பசையூட்டி, வண்ணக் குழம்பாக்கி, அக்குழம்பில் துகிலிகையால் தோய்த்து ஓராடையில் ஓவியம் எழுதுவானாயினான். அங்ஙனம் எழுதுங்கால், அவள் யானைக்கு அஞ்சி மேற்கொண்ட நடுக்கமும், அந்நிலையில் தன்னை நோக்கியதால் நோக்கமும், அவ்வடிவில் ஒருங்கு புலப்படத் தீட்டினான் என்று கவி திறம்படக் கூறுகின்றார்.

"கூட்டினான் மணிபல தெளித்துக் கொண்டவன்
தீட்டினான் கிழிமிசைத் திலக வாணுதல்
வேட்டமால் களிற்றிடை வெருவி நின்றதோர்
நாட்டமும் நடுக்கமும் நங்கை வண்ணமே"

இப்பாட்டில் ஒன்றுக்கொன்று முரணாகவுள்ள அச்சத்தையும், காதலையும் ஒரு வடிவிற் புலப்படுத்தியதாகச் சீவகனது ஓவியநூற் றிறமையை ஆசிரியர் நன்கு புலப்படுத்தியுள்ளார். இச் சித்திரத்தில், நங்கையின் காட்சியில் தான் திளைத்து மேற்கொண்ட காதற் பெருக்கே இங்ஙனம் உள்ளபடி வரைதற்குக் கருவியாயிற்றென்பது தெளியத்தக்கது.

இங்ஙனம் கண்ணனார்க்கும் இன்னதென்று வாக்கால் உரைக்க இயலாத காதலின் இயல்பை, ஒத்த காதலர் இருவர் தம்முட் கூடுதற்கு முன்னம், கூட்டத்தின்பின் பிரிவு நேர்ந்த இடத்தும், பிறர் வாயிலாக இன்றிக் கடித மூலமாக ஒருவருக்கொருவர் புலப்படுத்திக்கொள்ளுதல் முற்காலத்தும் நிகழ்ந்ததுண்டு. காப்பியச் சுவைநலத்தில் திளைத்துப் பாடும் கவிகள் மூலமாகவே அக் காதற் கடிதங்களின் இயல்புகளை வெளிப்படக் காணலாம். காதலர் இருவர் கருத்தொருமித்துப் பிறர் அறியாவாறு தம் உள்ளத்து நினைவுகளை மறைமுகமாக

Koviloor Digital Library



ளாகிய தாழைமடலைக் கடிதமாகக் கொண்டாள். அம் மடல், நல்ல நிறமும், பளபளப்பும், நறு மணமும், காய்ந்துலர்ந்தாலும் கெடாத வன்மையும் உடையது. எழுதுகோல், பித்திகைக் கொழுமுகை ஆணி என்றதனால், நறுமணமுள்ள பூவரும்பின் முனையாகும். மை, செம்பஞ்சின் குழம்பாகும். ஆகவே, வெண்ணிறமான தாழையிதழிற் செந்நிறமான குழம்பில் பூவரும்பின் முனைகொண்டு எழுதப்பட்டதென்பதும், இக் கருவிகள் காதற்குறிப்பிற் கேற்றபடி இன்பம் விளைக்கும் பொருள்களாக அமைந்தன என்பதும் புலனாம். எழுதிய பெண்மக்கள் இருவருள், சகுந்தலை அரச குலத்தவனால் கைப்பற்றத் தக்கவளாயினும், அந்தணர் ஆச்சிரமத்தில் வளர்ந்தவளாவள். காதற்பயனுக்கு அநுபவ மில்லாப் புதியவளுமாவள். ஆதலின் அவள், மன்மதன் பகலும் இரவும் சுடுகின்றான்; நின் கருத்தறிந்திலேன் என வெளிப்படத் தீட்டினாள். தன் கருத்தைக் குறிப்பாற் புலப்படுத்தினால் தனக்குப் புதியவனாகிய வேந்தன், பொருள் வேறுகொண்டு புறக்கணிக்கவும் கூடும் என்னும் ஐயத்தால், விளக்கமாக எழுதினாளென்று கொள்ளலாம். ஒருவரை யொருவர் மனநிலை அறியாத நிலையில் எழுதப்படும் கடிதத்தில், குறிப்பு மொழி தெளிவாகப் பொருள் விளக்கஞ் செய்யாதாகலிற் பயனின்றி யொழியவுங் கூடும். ஆதலானும், பிற்றறியாமற் காதலிக்கப்பட்டா னொருவனே பார்க்கக்கூடுமென்னுந் துணிவானும், இங்ஙனம் விளக்கமாக எழுதப்பட்டுள்ளது. முடிவாகத் தான் வேட்கையைப் புலப்படுத்தி, இதற்குப் பரிகாரமாகச் செய்யவேண்டிய காரியத்தில் நின் கருத்து இன்னதென்று அறிந்திலேனென்று சகுந்தலை எழுதியது பொருத்தமே. தாமரையிலைக் கடிதம் எழுதியதும், காதலனாகிய வேந்தன் தாழாது வெளிப்பட்டானாதலால், மிகு விரைவில் வாடத்தக்க அவ்விலையின் பயன் வீணாக வில்லை. இனி மாதவி கணிகையர் குலத்தவள்; கோவலன்பாலே சிறந்த காதற் கிழமை பூண்டொழுகியவள்; அவள் கடிதம் எழுதியது, முன் அவனோடு கூடி யநுபவித்த பின்னரேயாம். அந்நிலையில் அவன் உள்ளத்தைப் பன்னாட் பழகி யறிந்தவளாதலின், தன் கருத்தைக் குறிப்பாகப் புலப்படுத்தினாலும் அவனறிந்து

Koviloor Digital Library



கொள்ளுவானென்று அவள் கருதுவது இயல்பே. இந் நிலையில், மன்மதன் கொடுமை கூறுபவளாய், அக் காமவேள் என்னும் அரசற்கு மகிழ்துணை புணர்க்கும் வேனிலாளன் இள வரசன் ஆவனென்றும், அவன் கொற்றக்குடை திங்களாத லால் அத் திங்கட்செல்வன் பிறப்பிலே கோட்ட முடையன் என்றுங் கூறி, இப் பரிவாரங்களை யுடைய காமன், புணர்ந் துளோர் ஊடல் முதலியவற்றாற் காலம் நீட்டிப்பினும், ஓதல் முதலியன குறித்துப் பிரிந்துளோர், குறித்துக் கூறிய பருவம் பொய்த்துத் தம் துணையை மறப்பினும், இன்பம் நுகரும் அவ் வுயிரைப் பூவாளிகளாற் கொள்ளும் இயல்பின னென்பது புதிய தொன்றன்று. இதனை அறிவீர்களாக என்று அவள் எழுதியது பொருத்தமே. உண்மைக் காதலுடையார் இயல்பை, உலகியல்பில் வைத்துக் கூறுமுகமாகத் தன்னிலை யைப் புலப்படுத்தினாள். இங்கே இளவரசனாகிய வேனி லாளன் துணைபுணர்ப்பவனாதலாலும், திங்கட் செல்வன் பிறப்பிலே கோட்டமுடையவனாதலாலும், பிரிந்திருக்கும் தனக்கு நலஞ்செய்யார் என்னும் கருத்துத் தோன்றக் கூறியது, இன்புறத் தக்கதொன்று. மாதவி, கணிகையர் குலத் தவளாயினும் மிக்க நாகரிகமும், ஒரு வழிப்பட்ட காதலும். அறிவும் உடையளாதலின் இங்ஙனம் எழுதினாள். இவளுடைய உயர்ந்த நிலையைக், காதலனாகிய கோவலன் பிரிவில், உலக வாழ்க்கையைத் துறந்து, துறவுநிலை பூண்டதனாலே அறிய லாம். இவளெழுதிய கடிதம், கட்டப்பட்ட மலர்மாலை யினோடியைத்து வசந்தமாலை யென்னும் மற்றொருத்தி வாயிலாக விடுக்கப்பட்டதாகும். அது, செய்மைக்கட் பிரிந்திருந்த கோவலற்குச் சில நாழிகை கழித்துச் சேரத் தக்கதாகலின், தாமரையிலை போல விரைவில் வாடும் இயல்பின தாகவின்றி, நெடிது நிற்பதாகிய தாழைமடலாக அமைந்தது பொருத்தமே. சகுந்தலை, துஷ்யந்தனுடைய காட்சியில் ஈடு பட்டுக் காதலால் வெம்பும்போது, அவள் சிறுமி. ஆதலால் தன் காதற்குறிப்பை எவ்வாறு காதலற்குப் புலப்படுத்துவ தென்றறியாளாய்த் துன்புறும் நிலையில், பிரியம்வதை என்னும் உயிர்த்தோழி, சகுந்தலையை நோக்கித் "தோழி, அவ்வேந்தற்கு ஒரு காதற் கடிதம் எழுதுக; அதனை ஒரு நறுமலர் மாலையில்

Koviloor Digital Library



மறையவைத்துத் தேவப்பிரசாதம் என்று பெயரிட்டு, அவ்வரசர் பெருமானிடம் சேர்த்துவிடுவேன்" என்றாள். அதனை மற்றொரு தோழியாகிய அநசூயை, யானும் அப்படியே நினைக்கின்றேன்; என்று ஆமோதித்துப் பேசினாள். அதன்மேற் சகுந்தலை, நும் கட்டளையில் மாறுபாடேது என்று உடன்பட்டுக் காதற் பாசுரத்தை ஆராய்ந்து எழுதினாள். இந் நிகழ்ச்சியில், அவள் தகுதிக்கேற்பக் கவி கருதியது பாராட்டத்தக்கதே. இனி மாதவி தன் காதலனோடு அனுபவித்துப் பன்னாட் பழகியவளாதலாலும், தனக்கு ஒருவர் அறிவிக்க வேண்டுவது இல்லையாதலாலும், மடலவிழ் கானற் கடல் விளையாட்டினுள் கோவலனூடக் கூடாதேகியபின், மனவேதனை தீரத் தன்னில்லத்துத் தனித்திருந்து சிறிது நேரம் யாழை இசைத்துப் புறநீர்மை என்னும் பண்ணை வாசிக்குங்கால், அவ் விசையின்பத்திற், காதலன் கூடலின்பம் தோன்ற மயங்கித் தெளிவுற்றுப் பின்னர்த் தன் காதலிற்கு, இன்ன விதமாகத் தன் கருத்தைத் தெரிவிக்க வேண்டும் என்பதைத் தானே துணிந்து திருமுகம் போக்கும் செவ்வியளாய் எழுதத் துணிந்தாள்.

இங்ஙனம் மாதவியின் இயல்பை மனத்துட் கொண்டு, அவள் தகுதிக்கேற்ப ஆசிரியர் அவள் காதற் கடிதத்தை அழகுற முடித்தது பெரிதும் பாராட்டத் தக்கதே. இவ்வாறு காதல் வயப்பட்டாருள், எழுதுவோர், எழுதப்படுவோர், இயல்புகள், எழுதும் வாசகங்கள், அவ் வாசகக் கருத்துக்கள், கடிதம், எழுதுகோல், மை முதலிய கருவிகள் இவ்வெல்லாவற்றையும் புலவர் பெருமக்கள் செவ்விய முறையிற் சிந்தித்துக் காதல் நறுமணங் கமழப் புலப்படுத்தியது, போற்றத்தக்க தொன்றும்.



Koviloor Digital Library

# கட்டுரை

"திரு. மா. பாலசுப்பிரமணிய முதலியார், எம். ஏ."

'கட்டுரை' என்பது ஆங்கில மொழிப் பயிற்சியினால் தமிழிடைப் புகுந்த சில புதிய இலக்கிய வகைகளுள் ஒன்று.

கட்டுரையின் அமைப்பும், கருத்தும், நடையும், நோக்கமும் பலவாறு இருத்தலின், அதன் தன்மையை வரம்பிட்டு வகுத்தறிதல் அருமை. ஒரு வகையான கட்டுரை, விரித்து விளக்கப்படாத ஆழ்ந்த கருத்துக்களை நெருக்கமாகக்கொண்டு, சில பக்கங்களுக்குள் அடங்குவதாக இருக்கின்றது; மற்றொரு வகையான கட்டுரை, கட்டுரையாக்கியோரின் கருத்துக்களையும் பற்பல மேற்கோள்களையும் கொண்ட, ஒரு கலவையாக இருக்கின்றது; வேறொரு வகையான கட்டுரை, கருத்தாழம் இன்றி, ஆக்கியோரின் தந்நுகர்ச்சி நவிற்சியாக அமைந்திருக்கின்றது; பிறிதொரு வகையான கட்டுரை, நீண்டு, மெய்ப்பொருட் கோட்பாடுகளைப் பற்றிய கருத்துக்கள் நிரம்பியதாய் இருக்கின்றது; இன்னொரு வகையான கட்டுரை, உண்மையில் ஒரு சிறு நூலாகவே அமைந்திருக்கின்றது. கட்டுரை என்னும் ஒரே இலக்கிய வகையைச் சேர்ந்த இவை இவ்வாறு வேறுபடுவதன் முன் நிலை யாதெனில், ஒவ்வொரு கட்டுரையாக்கியோரும் கட்டுரையின் தன்மையை வேறுவேறாக அறிவதேயாம்.

சிலர், "கட்டுரை என்பது உள்ளத்தின் மேற்போக்கான படர்ச்சியாகும்; அஃது ஒரு வரம்புக்கு உட்பட்ட உரைச் செய்யுள் அன்று" என்று கருதுவார். [' According to Johnson, for example, an essay is "a loose sally of the mind, an irregular, undigested piece, not a regular and orderly composition".] வேறு சிலர், "ஒரு குறிப்பிட்ட பொருளைப் பற்றிக் கிளைத்தல் இன்றி, விரிந்த நடையில், போதிய நீளமாகச் செய்யப்பட்ட ஓர் உரைச் செய்யுளே கட்டுரையாகும்" என்பர். [Murray's Dictionary speaks of the essay as "a composition of moderate length on any particular subject or branch of subject........more or less elaborate in style, though limited in range."] இவ்

Koviloor Digital Library



விரண்டு கருத்துக்களில் பின்னதே ஏற்புடையதாகத் தோன்றுகின்றது: ஏனெனில் கட்டுரை என்னும் பெயருக்கு ஏற்ற ஓர் உரைச்செய்யுள் நீளத்திலும் நுதல் பொருளிலும் ஓர் எல்லைக்கு உட்பட்டதாக இருக்கவேண்டும். கட்டுரையின் நோக்கம் எடுத்துக்கொள்ளப்பட்ட பொருளைப்பற்றிய யாவற்றையும் குறிக்கவேண்டும் என்பதன்று; ஆதலால், அது நீண்டதாக அமைதல் ஏலாது. எடுத்துக்கொள்ளப்பட்ட பொருளைப்பற்றிய பிறர் கருத்துக்களை மறுத்துக், கட்டுரையாக்கியோரின் கருத்தை நிலைநிறுத்துவதும் கட்டுரையின் நோக்கம் அன்று. ஆதலின், ஒரு கட்டுரையின் நுதல்பொருள் எல்லை மிகுந்து விரிவதும் கூடாது.

ஆயின், யாதானும் ஒரு பொருளைப் பற்றிச் சுருங்கிய அளவில், மேற்போக்காக எழுதப்பட்ட ஓர் உரைச்செய்யுளே கட்டுரை போலும் எனில், அதுவும் பொருந்தாது: ஏனெனில் கட்டுரை என்பது சுருக்கமாக இருப்பதுடன் கருத்தாழம் உடையதாகவும் இருக்கவேண்டும். கட்டுரை எழுத விரும்பும் ஓர் எழுத்தாளன், தான் எடுத்துக்கொண்ட பொருளைப் பற்றி, மிகச்சில கருத்துக்களையே அறிந்தவனாக இருந்தால், அவனது உரைச்செய்யுள் மேற்போக்காகவும் சுருக்கமாகவும் இருக்கும்: கட்டுரையாக்கியோன் பெரிதும் கற்றவனாகவும், எழுதும் ஆற்றல் உடையவனாகவும் இருந்தால், அவனது கட்டுரை, பல்கிய கருத்துக்களைக் கொண்டதாகவும் சுருக்கமாகவும் இருக்கும். இவ் விருவகையான சுருக்கங்களில், முன்னது பயனற்றது; பின்னதே வேண்டப்படுவது. சுருக்கமுண்மை ஒன்றாலேயே நாம் ஓர் உரைச்செய்யுளைக் கட்டுரை எனக் கோடல் தவறு. சுருக்கத்துடன் கருத்தாழமும் இருந்தாலன்றி ஓர் உரைச்செய்யுள் கட்டுரையாகாது.

சுருங்கிய அளவில் நெருங்கிய கருத்துக்களைக் கொண்ட ஓர் உரைச்செய்யுள் தெளிவு குறைந்து தோன்றுமன்றோ எனில், தெளிவு குறையாதவாறு திறமையுடன் எழுதப்படுவது தான் ஏற்ற கட்டுரையாகும் என்று ஈண்டு அறிதல் வேண்டும். அஃது எவ்வாறு கூடும் எனில், ஏற்பில்லாக் கருத்துக்களை நீக்கி, ஏற்புடைக் கருத்துக்களையே புகுத்தும் திறமையினாலும்,

Koviloor Digital Library



அந்த ஏற்புடைக் கருத்துக்களையும் வன்மையுடன் பொருத்தி வைக்கும் திறமையினாலும், தெளிவு குன்றாமல் சுருக்கமாகவும் கருத்தாழத்துடனும் கட்டுரை எழுதுதல் கூடும் என்பது உறுதி.

எடுத்துக்கொள்ளப்பட்ட பொருளைப் பற்றிய யாவற்றையும் குறித்தல் கட்டுரையின் நோக்கம் அன்று எனவும், அப்பொருளைப் பற்றிய பிறர் கருத்துக்களை மறுத்துத் தமது கருத்தை நிலைநிறுத்துவதும் கட்டுரையின் நோக்கம் அன்று எனவும் மேலே கூறியபடி கருதினால், அக்கருத்துக்கு இணங்க எழுதப்பட்ட ஒரு கட்டுரை பொருள் நிறைவின்மை என்னும் குற்றத்தை உடையதாகுமன்றோ எனின், ஆகாது என்றே கூற வேண்டும். ஒரு பொருளைப் பற்றி எழுதவேண்டின், இரண்டு முறைகளில் எழுதலாம். ஒரு பொருளைப் பல பிரிவுகளாகப் பிரித்துக்கொண்டு, ஒவ்வொரு பிரிவு பற்றியும் சில பல எழுதுதல், ஒரு முறை. ஒரு பொருளைப் பல துறைகளாக ஆராய்ந்து எழுதுதல் மற்றொரு முறை. இவ் விரண்டு முறைகளையும் ஓர் எடுத்துக்காட்டால் விளக்குவாம். அன்பு என்னும் பொருளைப் பற்றி எழுதவேண்டில், அஃது இரண்டு முறைகளால் செய்தல் கூடும். குழந்தைகளிடத் தன்பு, உற்றாருறவினத்தன்பு, நண்பரிடத்தன்பு, நன்மை செய்தாரிடத்தன்பு, தீமை செய்தாரிடத்தன்பு என்பவை போன்ற பிரிவுகளை முதலில் அமைத்துக்கொண்டு ஒவ்வொரு பிரிவு பற்றியும் சில பல எழுதுதல் ஒரு முறை. இல்லறத்துறையில் அன்பின் மதிப்பு என்றாதல், அரசியல் துறையில் அன்பின் மதிப்பு என்றாதல், கடமை உணர்ச்சியில் அன்பின் இடம் என்றாதல் கருதக்கூடிய பல துறைகளில் யாதானும் ஒரு துறையாகச் சென்று ஆராய்ந்து எழுதுதல் மற்றொரு முறை. அன்பைப் பொருளாக உடைய ஓர் உரைச்செய்யுளில், நினைக்கக் கூடிய எல்லாப் பிரிவுகளைப் பற்றியும், ஆராயக்கூடிய எல்லாத் துறைகளாகவும் எழுதின், அவ்வுரைச்செய்யுள் ஒரு நூலாகவே விரியுமன்றி, கட்டுரை ஆகாது. யாதானும் ஒரு பொருள் துறையாகவாதல் ஒரு சில பொருள் பிரிவுகளைப் பற்றியாதல் எழுதப்படுவதுதான் எல்லைக்கு உட்பட்ட கட்

Koviloor Digital Library



டுரையாகும். ஆனால் எழுதும் பொருளெல்லைக்குள் குறிக்க வேண்டிய கருத்துக்கள் யாவும் குறிக்கப்படவேண்டும். அப் பொழுதுதான் அக் கட்டுரை, எடுத்துக்கொண்ட பொரு ளெல்லைக்குள் பெறக்கூடிய நிறைவை உடையதாக இருக்கும்: பொருள் நிறைவின்மை என்னும் குற்றமும் இல்லதாகும்.

இனி, ஒரு கட்டுரைக்குச் சிறப்பாக உள்ள ஒரு தன்மை யை நன்கு அறியவேண்டும். அது யாதெனில், எடுத்துக் கொள்ளப்பட்ட பொருள், துறையைப் பற்றியாதல், பொருள் பிரிவுகளைப் பற்றியாதல், ஆக்கியோரின் ஆராய்ச்சிக் கருத்துக் களை அது கொண்டிருக்க வேண்டும் என்பது. வாளா, பிறர் கருத்துக்களை எடுத்துக் கூறுதல் கட்டுரையின் நோக்கம் அன்று. கட்டுரையை எழுதப் புகுந்த ஆக்கியோன் தான் ஆராய்ந்து அறிந்த கருத்துக்களையும் முடிவுகளையும் நுதலு வதே கட்டுரையின் நோக்கம்.

முடிவாகக் கூறுமிடத்து, ஒரு கட்டுரை உரைச் செய்யு ளாகச் சுருக்கமாகவும், கருத்தாழம் உடையதாகவும், பொருள்தெளிவு உடையதாகவும், பொருள்நிறைவு உடைய தாகவும், ஆக்கியோரின் முடிந்த கருத்துக்களைத் தெள்ளிதில் புலப்படுத்துவதாகவும், குறுகிய பொருளெல்லை உடையதாக வும் இருத்தல் வேண்டும் என்பது துணிபு.



Koviloor Digital Library

# சங்ககாலத்து அன்னதானம் *

"வித்துவான் மா. இராசமாணிக்கம் B. O. L."

நான் ஒரு தமிழ் மாணவன் ஆதலின், சங்கநூல்களில் "அன்ன தானம்" எங்ஙனம் பாராட்டப்பட்டுள்ளது என்பதைப்பற்றியே இங்குப் பேசுவேன்.

சங்கநூல்களில் புறநானூறும் மணிமேகலையும்பற்றியே ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறேன். புறநானூறு நடந்ததை நடந்தவாறு கூறிய காலத்தது; மணிமேகலை உள்ளதும் இல்லதும் கூறப்பட்ட காலத்தது. புறநானூறு சமணத்தையும் பௌத்தத்தையும்பற்றிக் கூறாத காலத்தது; மணிமேகலை பௌத்தத்தைத் தமிழர் பாராட்டிய காலத்தது. புறநானூறு பல நூற்றாண்டுகளில் இருந்த புலவர் பாடல்களைக் கொண்டது. மணிமேகலை கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் பாடப்பட்டது. எனவே, இவ்விரண்டையும் ஆராய்வதால் பழந்தமிழர் அன்னதான நிலையையும், பல மதங்கள் இருந்தகாலத்துத் தமிழர் அன்னதான நிலையையும் உள்ளவாறு உணரலாம்.

## 1. பசிப்பிணி

'பசிப்பிணியைப் போக்கலே அடிச்செயல்' என்பது பண்டைத் தமிழர்கொண்டிருந்த முடிபாகும். இதனைப் பற்றிப் புறநானூறும் மணிமேகலையும் கூறுவனவற்றை நிரலே காண்க. புறநானூறு 160, 164-ஆம் பாக்கள் பசிப்பிணியைப் படம் வரைந்து காட்டுகின்றன. பெருஞ்சித்திரனார் என்னும் பைந்தமிழ்ப் புலவர் தம் குடும்பத்தைப் பிய்த்துத் தின்னும் வறுமை இற்றென எடுத்தியம்புதல் உள்ளத்தை உருக்குவதாகும். "பால் அற்ற வறிய முலையைச் சுவைத்த என் மைந்தன் வீட்டறையுள் இருந்த பாத்திரங்களைப் பார்த்து அழ, தாய் அவனது அழுகையை மாற்றப் 'புலி வருகிறது' என அச்சத்தை உண்டாக்கியும், 'மதியைப் பார்' எனப் பராக்குக் காட்டியும் அவன் அழுகை தணியானாய்ப் புலம்ப, தாய் விழி நீர்

---

* இது சைதாப்பேட்டை அன்னதான சமாசத்து ஆண்டு விழாவிற் செய்த சொற்பொழிவு.

Koviloor Digital Library



வார, 'உனது வருத்தத்தை உன் தந்தையினிடம் காட்டு' என்று கூறி வருந்தினள். இந் நிலையில் குடும்பத்தை விட்டு வந்தேன்." (புறம்—160).

பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர், "என் வீட்டு அடுப்பில் காளான் பூத்தது. பசி அதிகரிக்கப் பால் இன்மையால் தோலோடு திரங்கிப் பால் வருகின்ற உண்ணும் தூர்ந்த வறிய முலையைச் சுவைத்துச் சுவைத்துப் பால் பெறுப் பாலகன் அழுவன்; அவன் இன்முகம் நோக்கித் தாய் தன்முகம் கோணி அழுவள். குழந்தை தாய்முகம் நோக்கி அழ, தாய் என் முகம் நோக்கி அழ, யான் நின்முகம் நோக்கி வந்தேன்" என்று ஒரு வள்ளலைப் பார்த்துக் குறையிரத்தல் எத்துணைக் கொடியதாகக் காணப்படுகிறது! (புறம்—164).

இப் பசிப் பிணியைப் பற்றியே மணிமேகலை நன்கெடுத்துக் கூறுகிறது. மணிபல்லவத் தீவில் தீவதிலகை என்னும் தெய்வம் மணிமேகலைக்குப் பசியின் கொடுமையைப் பற்றி விளக்குகையில்,

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாளணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி"

என்று உருக்கமாக உரைத்தது. பசியின் கொடுமையைக் 'கோசிக முனிவன் நாயின் ஊனைத் தின்ன முயன்றான்' என்பதாலும் உணரலாம். இக் கொடிய பசிப்பிணியைப் போக்க வல்லது உணவு ஒன்றே. அஃதே ஆருயிரைத் தருவது. எனவே அஃது, 'ஆருயிர் மருந்து' எனப்படல் பொருத்தமேயன்றோ? சாத்தனார் (மணிமேகலை ஆசிரியர்) உணவை 'ஆருயிர் மருந்து' என எட்டு இடங்களில் ஆண்டிருத்தலைக் காணலாம். ஆருயிர் அளித்த மணிமேகலையையே 'ஆருயிர் மருந்தே!' என அவள் பாட்டன் விளித்தல் பின்னும் பாராட்டற்குரியது (காதை 28, வரி 160). உணவையும் நீரையும் 'இருமருந்து' எனக் கோவூர் கிழார் கூறலும் கவனித்தற்குரியது (புறம்-70).

Koviloor Digital Library



## 2. உண்டி பெறத் தக்கவர்

"சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனும் குறளும் ஊமும் செவிடும்
மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு"

என்பது புறப்பாட்டு (28).

"காணார் கேளார் கால்முடப் பட்டோர்
பேணு மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோய் உற்றோர்
மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்"

என்பது மணிமேகலை (காதை 28, வரி 222-225). ஓடை கிழார் என்னும் புலவர், "எம்போன்ற தகுதிவாய்ந்தவர்க்கு ஈவோர் பயன் கருதாது ஈவோர் ஆவர். எம்மை ஒழிந்த பிறர்க்கு ஈவோர் பயன்கருதி ஈவோர் ஆவர்" —எனக் கூறு தல் பன்முறையும் சுவைத்தற்கு உரியது (புறம்—136).

"மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை இழிதரும் பல்யாறு போலப்
புலவர் எல்லாம் நின்னோக் கினரே"

என இடைக்காடனார் இயம்புவது உள்ளத்தை உருக்கு வதாகும் (புறம்—42).

"கோடைக் காலத்துக் கொடுநிழல் ஆகிப்
பொய்த்தல் அறியா உரவோன்"

என்று பெருஞ் சித்திரனார் (புறம்—237) தம் வள்ளலைப் பா ராட்டுதலை நோக்க உள்ளம் உவகை கொள்கின்றது.

## 3. அறம்செய்யும் முறைமை

"கதிர் சுடுகின்ற வெயிலில் பனிமுகத்துப் பௌத்த பிக்ஷு ஒருவன் அன்பும் அருளும் கலந்த கனிவுரைகளால் எம் செவி நிறைத்து, எம் அகத்தைக் குளிர்ப்பித்துத் தான் எடுத்துச் சென்ற பிச்சையை என் கைத் தந்து, என் தந்தையை அணைத்

Koviloor Digital Library



துப் பௌத்த மடம் ஒன்றிற் சேர்த்துவிட்டுச் சென்றனன்" எனச் சுதமதி கூறுதல் (மணிமேகலை, காதை 5, வரி 59—70) அறம் செய்வோர் முறைமையை நன்கு விளக்குவதாகும்.

## 4. அறத்தின் அவசியம்

உண்டி இல்லாத மக்கட்கும்; தாமாக வேலை செய்து சோறுபெற இயலாத மக்கட்கும் அறம் செய்தலே சிறந்த கடனாகத் தமிழர் கொண்டிருந்தனர்.

> "நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
> உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே;
> உண்டி முதற்றே உணவின் பிண்டம்;
> உணவெனப் படுவது நிலத்தொடு நீரே;
> நீரும் நிலமும் புணரியோர் ஈண்டு
> உடம்பும் உயிரும் படைத்திசி னோரே"

என்னும் புறநானூற்றுச் செய்யுள் அடிகளாலும் விளங்கும். இதுவே, 'ஒப்பற்ற அறம்' என மணிமேகலையில் அறவண அடிகள் அறைந்திருத்தல் அறியத்தகும். இதனை, ஆபுத்திரன் அமைச்சன் வாயிலாகவும் சாத்தனார் வற்புறுத்துக் கூறியிருத்தல் படித்து மகிழத்தகும்.

> "அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்,
> மறவா திதுகேள்: மன்னுயிர்க் கெல்லாம்
> உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
> கண்ட தில்!"

இங்ஙனம் வற்புறுத்தப்படும் அன்னதானம் மணிமேகலையிற் பல இடங்களிற் கூறப்பட்டுப் பளிக்கறையுள் மாணிக்க ஒளிபோல் விளங்குதல் பண்டைத் தமிழர் அன்ன தானத்தைப் போற்றி வளர்த்த அருஞ்செயலை நமக்கு நினைப்பூட்டுவதாகும். மணிமேகலை என்னும் மாண்பு மிக்க நூல், சிறந்ததோர் இடத்தில் வணிகப்பெண் வாய்மொழியாக அறத்தின் அவசியத்தை அறிவிக்குந் திறன் அறிதற்பாலது:

"இளமையும் நில்லா; யாக்கையும் நில்லா;
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா;
புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்;
மிக்க அறமே விழுத்துணை யாவது"

ஆதலின், அன்னதானம் பிற தானங்கள் அனைத்தினும் தலையாயது என்பது பெறப்படும். இத் தானத்தை விடாது செய்து வரும் இவ் வன்னதான சமாசத்தை நான் தமிழன்னைபெயரால் வாழ்த்துகிறேன்.

---

# முருகன் அருள் வேட்டல்

"அ. குமரப்பன்"

### திருவுந்தியார்

சீர்வளர் செந்தூர் சேயவன் றனக்கொரு
பேர்மிகை யென்றினி யுந்தீபற
பேரெதற் கருவனுக் குந்தீபற.

குன்றுதோ றாடலைக் குணமெனக் கொண்டவன்
என்றுகொல் அருளுமென் றுந்தீபற
இருவினை யறுக்குமென் றுந்தீபற.

பல்வளம் மிக்குறு பழநியில் வாழ்கிற
செல்வனை யேபாடி யுந்தீபற
செருக்கினை யறுக்குமென் றுந்தீபற.

மயக்கறுப் பவனன்று வள்ளிக்கு முன்னின்று
மயக்கமுற் றானென் றுந்தீபற
மலைமகள் மதலையென் றுந்தீபற.

அருணகி ரிக்கன்று அம்மலை மீதினிற்
கருணைபு ரிந்தனென் றுந்தீபற
கான்மயில் வாகனென் றுந்தீபற.

Koviloor Digital Library



அரனது சேயனை அறுமுக ரூபனைச்
சரவணன் வாழ்கவென் றுந்தீபற
சண்முகன் வாழ்கவென் றுந்தீபற.

முத்திக்கு முதல்வன்மு ராரிக்கு மருகன்
அத்திக்கு இளையனென் றுந்தீபற
அன்பர்க்கு எளியனென் றுந்தீபற.

அசுரரை வென்றம ராடிய வேலவன்
பசுபதி பாலனென் றுந்தீபற
பால்மொழி கணவனென் றுந்தீபற.

அந்தமு மாதியும் பந்தமு மில்லாக்
கந்தனை யேபாடி யுந்தீபற
கலக்க மகன்றிட உந்தீபற.

நான்முகன் நோவுற நச்செனக் குட்டிடும்
வேன்முரு காவென் றுந்தீபற
வீண்பிறப் பகன்றிட உந்தீபற.

வேட்டுவ மங்கையை விரும்பிநின் றூன்நமை
ஆட்டிவைக் கின்றனென் றுந்தீபற
ஆனந்த ரூபனென் றுந்தீபற.

தந்தைக் குபதேசந் தந்தனன் நம்பெரும்
எந்தையாம் கந்தனென் றுந்தீபற
எம்மையும் ஆள்வனென் றுந்தீபற.

மும்மல மாயவும் மோனந் திளைக்கவும்
செம்மல் அருளுமென் றுந்தீபற
செவ்வேள் முருகனென் றுந்தீபற.

கண்வலை வீச்சினிற் காதற் படுகின்ற
பெண்மயக் கறுப்பனென் றுந்தீபற
பேரின்ப நாதனென் றுந்தீபற.

அறம்பொரு ளின்பத் தாலுறு வீட்டினைத்
திறம்படத் தருவனென் றுந்தீபற
செந்திலி னுறைபவ னுந்தீபற.

Koviloor Digital Library

# இலாஞ்சனைச் சாதியர்*

நாம் உலகில் எந் நாட்டவரின் பழைய வரலாற்றை எடுத்து ஆராய்ந்து பார்த்தாலும், அந்நாட்டவர் யாவரும் தம் மிலும் சிறந்ததும் வலியதுமான யாதோ ஒரு பொருள் இருப்பதாகவே கருதி அதனை வழிபட்டிருப்பதை அறிய லாகும். இயற்கை ஒன்றையே நம்பி வாழும் மனிதன் தான் நோய்வாய்ப் பட்டு வலிமை குன்றியக்கால், புலன்களை யடக்கித் தனியிடத்திருந்து, தனக்கு மறுபடியும் வலிமை கிடைக்கவேண்டுமென்று, மனங்குழைய மிகப்பணிவுடனும் மிக்க ஆவலுடனும் யாதோ ஒரு பொருளை வேண்டி நிற்பான். பின்னர் (இயற்கையாகவே) அவன் படிப்படியாக வலு வடைந்து முன்போல வேண்டியன உண்டு விரும்பியன செய்து, கண்டவிட மெல்லாம் அலைந்து திரியவும் முற்படு வான். இப்படி முன்னைய உரனும் வலியும் பெறவே இவற்றைக் கூட்டிவைத்த அப்பொருளை மேன்மேலும் அவாவி விருப்புடன் ஆதரிக்கவும் வணங்கவும் முற்படுவன். அம்பு, ஈட்டி, வாள் முதலியவற்றால் தான் படுத்தும் பறவை விலங்கு முதலியவற்றை நன்கு பாகஞ்செய்து நெருப்பில் வதக்கித் தகுந்த சுவையூட்டித், தானும் (கண்ணப்பர் போல்) சுவைத்த பின் அத் தெய்வத்திற்குப் படைப்பன்.

இவன் இப்படிப் படைக்கும் பொழுது அத் தெய்வத்தை ஆல் அரசு முதலிய மரங்களிலேனும், சுறுவெலும்பு, விலங்கு எலும்பு, சிக்கிமுக்கிக் கல், வேலுருவத்தடி முதலியவற்றிலே னும் ஏற்றி அதன் முன்பு படைப்பான். இங்ஙனம் ஏற்றிய பொருட்கள் கொண்டுசெல்லக் கூடியனவாயின் அவன் அவற் றை எஞ்ஞான்றும் தன்னைப் பிரியாவண்ணம் இடுப்பிலேனும் சடைமயிரிலேனும் செருகிவைத்துக் கொள்வான். வணங்குங் காலங்களில் மணலைக் குவைசெய்து இவற்றை அதனிடை நாட்டிப், பூவும் நெல்லும் இறைச்சியும் மீனும் இட்டு இறைஞ்சுவன்.

---

* சென்னைப் பிரமசமாசத்தில் வித்துவான் திரு இராசமாணிக்கம் பிள்ளையவர்கள் தலைமையில் சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சி யாளர் திரு V. மயில்வாகனர் நிகழ்த்திய சொற்பொழிவின் பகுதி.

Koviloor Digital Library



மகாவம்சம் இயக்கர் நாகரைப் பற்றியும் கூறும் பழமை யான நூல். இவ் வியக்கரும் நாகரும் மேற்கூறியவாறே இலங்கையில் இற்றைக்கு மிகுந்த சேய்மையில் வாழ்ந்தவர். இவர்களையே 'இலாஞ்சனைச் சாதியார்' (Totemistic Tribes) என்று பிற்கால மனிதக் கூட்ட நூலார் பெயரிட்டனர். இவர்களுடைய மரபார் நாக தம்பிரானையும், நாகம்மாளையும் இசக்கியம்மனையும் யாழ்ப்பாணத்தை யடுத்த சில தீவுகளில் இன்றும் வணங்கிவருகின்றனர். ஆயினும் இப்போது இவர்கள் மிகச் சீர்திருத்த மடைந்திருக்கின்றனர். விந்தனைக் காட்டிலுள்ள வேட்டுவச் சாதியினரும் இப் பிரிவினரின் வழித் தோன்றல்களே. 'நாக பஞ்சமி' 'நாக சதுர்த்தி' என்னும் பெருநாட்கள் பம்பாய் நகரில் இன்றும் கொண்டாடப்படு கின்றன. இக் காலங்களில் நாகபாம்பின் புதரில் பால் வார்த்து வணங்கும் இந்துக்களு முளர். மேலும், தங்கள் இல் லங்களிலேனும் வேறெவ்விடத்திலேனும் நாகபாம்பைக் கண்டால் அதனை வருத்தாது புறம்பே ஓட்டி விடுவர். இவை யெல்லாம் நாக வணக்கத்தை அடிப்படையாகக் கொண்டனவே. இவ் விலாஞ்சனைச் சாதியார் மேற்கிந்தியத் தீவுகளிலும், தென்னாபிரிக்காவிலும், பிலிப்பைன் தீவுகளிலும் இன்று மிருக்கின்றனர்.



Koviloor Digital Library

# முல்லைப் பாட்டு

"வித்துவான் மேரி மாசிலாமணி அம்மையார்"

ஆங்கில இலக்கியத்தில், பற்பல காலங்களிலும், புலவர் பெருமக்கள் பாடியுள்ள சொற்சுவை பொருட்சுவை கெழுமிய பாடல்களிற் சிறந்தவற்றைத் தொகுத்து 'அந்தாலசி' (Anthology) என்று வழங்குவதுபோல், தமிழிலும், யாதானுமொரு காரணம்பற்றி நூற்கள் தொகுக்கப்பட்டுத் 'தொகுதி' யென்று வழங்கப்பட்டன. அங்ஙனம் கடைச்சங்க காலத் தொகுதிகளாகப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்பனவற்றைக் கூறுவோம். இம் மூன்று தொகுதிகளில், முதலாவதாகக் கூறப்பட்ட பத்துப்பாட்டு என்பது, பத்துப்பாட்டுகளின் தொகுதியாகும். அப் பத்துப் பாட்டில், ஐந்தாவதாய் வைத்து எண்ணப்படும் முல்லைப் பாட்டு, தமிழிலக்கண ஆசிரியர் முல்லை நிலத்திற்குக் கூறியுள்ள பொருளைத் தன்னிடத்துக் கொண்டு விளங்குவதும், நூற்று மூன்று அடிகளைக் கொண்டதுமான ஓர் அகத்திணை நூலாகும்.

இவ்வுலகின்கண் நிலவிவரும் எந்த மொழிக்குரிய இலக்கிய வரலாற்றை எடுத்து ஆராய்ந்துபார்த்தாலும், அம்மொழியின் பண்டைய நூற்களில் கூறப்படும் பொருட்கள் காதலும், போருமே (Love and War) எனக் கூறலாம். இவ்விரண்டு பொருட்களையும் நம் தமிழ் நாட்டில், 'அகம், புறம்' என இலக்கண ஆசிரியர் கூறுகின்றார். ஆயினும் தமிழிலக்கிய இலக்கணங்களிற் கூறப்படுகின்ற அகத்தைச் சார்ந்த நுண்ணிய பாகுபாடுகளும், மரபுகளும் (Conventions) வேறெந்த நாட்டு இலக்கியத்திலும் காணக்கிடையாதனவாகும். தமிழாசிரியர்கள், ஐந்திலக்கணம் என்று கூறும் பாகுபாடுகளில் மூன்றாவதாய்க் காணப்படும் பொருளிலக்கணம் தமிழுக்கே சிறப்பான ஒரு பகுதியாகும்.

இனி, 'பாட்டு' என்பது 'பலவகைப் பொருளைச் சில வகையெழுத்திற் காட்டிக், கற்பவர் மனத்தில் ஒரு கிளர்ச்சியை யுண்டாக்குவது' எனக் கூறலாம். அத்தகைய கிளர்ச்சியை

Koviloor Digital Library.



இம் முல்லைப்பாட்டு எங்ஙனம் உண்டாக்குகிறது என்று நோக்குவது, இச் சொற்பொழிவின் ஒருபுடை ஆராய்ச்சி யாகும்.

இயற்கையின்படியே தமது எண்ணத்தைச் செலுத்து வதில் வல்லுநரான சங்க காலப் புலவர்கள், உயர்வு நவிற்சி யின்றித் தீட்டியிருக்கும் ஏனைய சித்திரங்களைப்போல், முல்லைப்பாட்டிலும், பண்டைத் தமிழ் நாட்டின்கண் நடந்த ஒரு நிகழ்ச்சியைப் புலவர் நப்பூதனார் சித்திரித்துக் காட்டு கிறார். இப் பாட்டில் அகப்பொருளிலக்கணம் அமைந்த ஒரு நாடகத்தை ஆசிரியர் எழுதுகிறார் என்னலாம். அந் நாடகத் தின் காட்சிகள் பின்வருமாறு:—

'முல்லை நிலத்தின்கண் எழுநிலை மாடத்திருக்கும் தலைவி, கார்காலம் துவங்கியவுடன் வந்துவிடுவதாகக் கூறிப் போர் முனைக்குச் சென்ற தலைவன் கார்காலம் துவங்கியும் வரக் காணாதவளாய்த் துயருற, பெருமுது பெண்டிர் அவளது துயர் பொறாராய் ஊர்ப்புறஞ் சென்று நாழியிலுள்ள நெல்லையும் முல்லையையும் தூவி விரிச்சி கேட்டு நிற்க, அவண் தம் தாயார் வரத் தாழ்த்ததால் ஆத்திரத்துடன் காத்திருந்த கன்றுகளை ஆய்மகள், 'இன்னே வருகுவர் உம் தாயர்' என்று தேற்ற, அச் சொற்களையே நற்சொல்லாகக் கேட்டுத் தலைவியிடம் நடந்ததைக் கூறி ஆற்றவும், ஆறாதவளாய்க் கிடந்தனள்.

இக்காட்சி ஒருபுறமிருக்க, பிடவம் முதலிய செடிகளையும் வேடரின் காவற் கோட்டைகளையும் அழித்து அமைத்த பாசறையின்கண், தலைவனுக்கெனவமைத்த இருக்கையாகிய வீட்டில், ஓசையெங்கணும் ஒடுங்கிய நள்ளிரவில், பொழுதளந் தறிவோர் பொழுதையறிவிக்கப், பள்ளியறையிற்போய்ப் படுக் கையிலமர்ந்த அரசன், துயில் கொள்ளுதலை விரும்பாது, மறு நாட் செய்யவிருக்கும் போரை விரும்பியவனாய், முன்னாட்களில் நடந்த போரில், புண்பட்டுக் கிடந்த யானை குதிரைகளையும் வீரரையும் நினைத்தவனாய்க் கவலையுடனிருந்து, பின்னாள் பகை வரையெல்லாம் வென்று, வாகை சூடி, 'நாளை மாலையில் தலை வியைக் காணப் பெறுவே'மெனும் மகிழ்ச்சியுடன் தன்

Koviloor Digital Library



பாசறையின்கண் துயில்கொண்டான். மாளிகையிடத்திருந்த தலைமகளோ, தலைமகனைத் தன் பக்கத்தே காணாது, மிக்க துயருடனிருந்து பின்னர் ஆற்றியிருத்தலே நலமெனக்கொண்டு, படுத்திருக்கையில், மாலைக்காலத்து மழைசொரியும் ஓசையைச் சற்றுமுன் கேட்டிருந்த அவள் செவிகளில், மாற்றாரை வென்று பகைப் புலத்தைக் கவர்ந்து சங்கும் கொம்பும் முழக்கி விரைவுடன் மீண்டுவரும் தலைவனது தேரில் பூட்டப்பெற்ற குதிரைகள் கனைக்கும் ஒலி ஆரவாரித்தது.'

இவ்விடத்தில் நாடகம் முற்றுப் பெறுகிறது. ஆசிரியர் முடியாததுபோல் முடித்துக்கூறும் வல்லமை, நமது பாராட்டுக்குரியது. ஆங்கிலக் கவிஞர்களிற் சிலர், முற்றுப் பெறும் முடிவைக் கூறாது, தொக்கு நிற்கும் முடிவு கூறுவதுபோல், அகப்பொருளின் நுட்ப திட்பத்திற் கேற்றவாறு, ஆசிரியர் கூறிய இம்முடிவு, படிப்பவரின் மனத்தில் உவகையை ஊக்கிக், கற்பனை வல்லமையை எழுப்பிவிட்டு, ஆசிரியர் கூறாதுவிட்ட தலைவன் தலைவி சந்திப்பைத் தாமே சித்தரித்துக்கொள்ள ஏவுகிறது. இத்தகைய திறம், கம்பர் முதலிய தலையாய கவிஞர்க்கும், சங்ககாலத்துச் சான்றோராகிய புலவர்களுக்கும் இயற்கையில் அமைந்ததுபோலும்!

இனி, முல்லைப்பாட்டின் பொருள் நயத்தை ஆராயுமிடத்து, ஆங்கில இலக்கியம் பயின்றவர், இப் பாட்டின் ஒரு பகுதி, 'பாஸ்டோரல் கவி' (Postoral Poem) போன்ற தன்மையுடைத்து என்று பாராட்டாநிற்பர். 'வஞ்சிதானே முல்லையது புறனே' என்றதன்படி, ஆசிரியர் நப்பூதனார், உட்கார் மேற் செல்லுதலாகிய வஞ்சியை முல்லை நிலத்துடன் பொருந்த வைத்தது உய்த்துணரற்பாலது. காதலனைப் பிரிந்து முல்லை நிலத்தின்கண்ணிருந்த தலைவியையும், முல்லையையும் வஞ்சியையும் ஒருங்கு சேர்ப்பதுபோல் ஒருங்கு சேர்க்கும் வகை ஆராய்ச்சியாளர்க்குச் சொல்லொணா இன்பம் பயக்கும்.

பாட்டின் முதலடிகளில், மேகக்கூட்டங்கள் கடல்நீரை உண்டு வலங்கொண்டெழுந்து, மாயோன், மாவலிச்சக்கரவர்த்தி வார்த்த தாரைநீர் கையிற்பட்ட அளவில், திருவிக்கிரமாவ

Koviloor Digital Library



தாரமெடுத்துச் சென்றதை யொத்திருந்ததாகக் கூறியிருக்கும் இவ் வுவமையால், 'மாயோன் மேய காடுறை யுலகமும்' என்ற தன்படி முல்லைநிலக் கடவுளாகிய மாயோனைக் கூறியது மிகவும் பொருத்தமாயமைகிறது. முல்லைநிலத்திற்குரிய ஆய்மகளைக் கூறுமிடத்து, 'நடுங்கு சுவலசைத்த கையள்' என்று கூறி வாடைக்காலத்தில் காணக்கூடிய ஒரு பொதுவான காட்சியை, இந்தக் கவிஞர் தம் சொல்லால் சித்தரித்துக் காட்டும் திறம்தான் என்னே! முன்னாட் போரில் புண்பட்ட யானை குதிரைகளையும், போர்வீரரையும், நினைந்து வருந்திய அரசன், தனது படுக்கையறையில் ஒரு கையை மெத்தையின் மேலும் மற்றொரு கையைத் தலையின் கீழும் வைத்துப் படுத்திருத்தலும் தலைமகள் ஏழடுக்கு மாளிகையில், தன் கணவன் வருகையை நினைந்து படுத்திருப்பதுமாகிய காட்சிகளை ஆசிரியர் சுருங்கச் சொல்லியபோதும், அம் மனநிலைகள் நம் கண் முன்னே காணும் காட்சிகள்போற் றோன்றுகின்றன.

உள்ளத்தில் உவகை நிலவும்பொழுதே, இயற்கையன்னையின் பெயர்க்கலாகா எழிலும் ஒருவருக்குப் பல்வகையில் காட்சியளிக்கும் எனும் உண்மையை, ஆசிரியர், தம் நூலின் கடைசியடிகளில் வரைந்திருக்கும் மாட்சி, ஏனைய பகுதிகளைக் காட்டிலும், அவரது புலமைத் தன்மையையும், உலகியல் நிலையையும் எடுத்துக் காட்டியதாகும். பகைவர்மீது வெற்றிகொண்டு, தலைவியைக் காணவேண்டுமெனத் திரும்பிவரும் தலைவனுக்கு, அஞ்சனம் போன்ற காயாம்பூவும், பொன் போன்ற கொன்றைத் தாதும் மங்கையரின் அழகிய கை போன்ற வெண்காந்தள் முகைகளும், இரத்தம்போல் அலர்ந்திருந்த செங்காந்தளும் கண்ணையும் மனத்தையும் கவர்ந்து ஏனைய நாட்களில் அளிக்கும் உவகையைக் காட்டிலும் பன்மடங்கு உவகையையளித்து அவன் மனதைப் பரவசப்படுத்த, வளைந்த கதிர்களையுடைய வரகங் கொல்லையில் ஆண்மான்களுடன் பெண்மான்கள் துள்ளி விளையாடும் காட்சி, தான் தலைவியுடன் துய்க்கவிருக்கும் இன்பத்தை நினைப்பூட்டி, அவனை விரைந்துசெல்ல ஏவுகிறது.

Koviloor Digital Library



"செறியிலைக் காயா அஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடற் குவிமுகை அங்கை யவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்
கான நந்திய செந்நிலப் பெருவழி."

இவ்வடிகளை இரண்டு மூன்று தரம் படித்துப்பார்த்தால், தலைவன் மனத்திருந்த இன்பவுணர்வை ஒருவாறு ஊகிக்கலாம்.

பண்டைக்காலத் தமிழரின் பழக்க வழக்க ஒழுகலாறுகள் சில, முல்லைப்பாட்டிற் காணக் கிடைப்பன. 'விரிச்சி' யெனும் நற்சொல் கேட்டு நிற்கும் பழக்க மிருந்ததென்றும், அரசனது பள்ளியறையில் வாள் வரிந்த கச்சுடன் மடமங்கையர் சென்று அரசனைப் பாதுகாத்தனர் என்றும், பண்டையோர், கடாரத்து நீரிலே இட்ட நாழிகை வட்டிலாற் பொழுதறிந்து வந்தனர் என்றும், யானைப் பாகர் யானைகளைப் பழக்கும்பொழுது வடநாட்டுச் சொற்களைப் பயன்படுத்தின ரென்றும், பண்டைய அரசர் காட்டில் ப்ாடிவீடமைத்தன ரென்றும், அரசனின் மறைந்த நிலைகளை எடுத்துச் சொல்ல வியலாத ஊமையரையே பள்ளியறைக்குக் காவலாராயமைத்தனரென்றும் தெரியவருகின்றது. எழுடுக்கு மாளிகையில் வாழ்தல், படுப்பதற்கென்று அரசனுக்குப் பாசறையில் ஒரு தனித்த இடமமைத்தல், யவனராகிய சிற்பிகளை வரவழைத்துத் தம் நாட்டில் வேலையிலமர்த்தல் முதலியவை, பண்டைத் தமிழரின் முதிர்ச்சிபெற்ற நாகரிக நிலையைத் தெற்றெனக் காட்டாநிற்கும்.

இனி இப் பாட்டு யார்மேல் பாடப்பட்டது என்னும் கேள்வி எழுகிறது. அகத்துறைப் பாட்டாகையால், தலைவன் பெயர் கூறாது விடுத்தார் என்றும், பத்துப் பாட்டில் ஆறுவது ஏழாவதாக அமையும் மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை என்பவைகள், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்மேற் பாடப்பட்டனவாகையால், ஐந்தாவதாக அமைந்துள்ள முல்லைப்பாட்டும் அவ்வரசன் மீதே பாடப்பட்டதென்றும் கூறப்படுகிறது. ஆயினும் நெடுஞ்

Koviloor Digital Library



செழியன்மீது பாடப்பெற்ற பாட்டாக இதைக் கொள்ளாமல், பொதுவாக ஒரு தலைவன் தலைவியைப் பற்றிய அகத்துறைப் பாடலாகக் கொள்வதில் ஒரிழுக்கும் வருவதாகத் தெரிய வில்லை. நெடுஞ்செழியன் போன்ற ஒரு தலைவனுக்கே உரிய தான செய்தியொன்றுங் கூறாது, தலைவன் தலைவிக்குரிய மன நிலைகளையே எடுத்துக் கூறுகிறார் ஆசிரியர். ஒவ்வோர் அகத் துறைப் பாடலும், ஒரு தலைவன் தலைவியையே சுட்டிக்காட்டு மென்று கொண்டால், நற்றிணை குறுந்தொகை என்பவைகளில் வரும் அகத்துறைப் பாடல்களுக்கெல்லாம் ஒவ்வொரு தலை வன் வேண்டியிருக்கும்.

'உச்சிமேற்புலவர் நச்சினார்க்கினியர்' இப்பாட்டுக் கெழு திய உரை அறிவுடையோரின் பாராட்டுக் குரியதெனினும், பாட்டைப் படித்து இன்புறுவதற்குச் சற்றுத் தடங்கலாயிருப் பதுபோலத் தோன்றுகிறது. உரையாசிரியர் கொண்டுகூட் டும் முறை, ஆசிரியரின் சொன்முறையினின்று பிறழ்வதுமல் லாமல், ஆசிரியரின் முறைப்படி பாட்டைப் படிக்கும்பொழுது, மனதிலெழும் காட்சிகளைப் பிரித்து வெவ்வேறு இடங்களில் கொண்டு சேர்ப்பதுபோலிருக்கிறது. ஆகையால் இப் பாட்டுப் போன்ற சங்கநூற்களைப் படித்து இன்புற விரும்புவோர், உரையை முதலிற் கருதாது, பாட்டை இரண்டு மூன்று முறை, தட்டுத் தடங்கலில்லாமல் ஆற்றொழுக்காய் வாசித்துப் பின்னர் ஆராய்ச்சி நிகழ்த்த வேண்டும்.



Koviloor Digital Library

# கடவுள் வாழ்த்து

"அ. ஆ."

"கோவிந்தா! கோவிந்தா! கோஒவிந்தா!!" : இது வட ஆர்க்காடு சித்தூர் முதலான ஜில்லாக்களில் புரட்டாசித் திங்களில் சனிக்கிழமைதோறும் எழுவதான பேரொலி. திருவேங்கட மலையில் இவ்வொலி என்றும் எழுவதாகக் கூறுவர். ஆனால், புரட்டாசிச் சனிக்கிழமையில் ஒவ்வொரு வீடும் திருவேங்கடமாக விளங்கும். அன்று, வீடெல்லாம் 'கோவிந்தா'; நெற்றியெல்லாம் 'திருமண்' என்று சுருங்கக் கூறலாம்.

சனிக்கிழமை என்று வரும் எனச் சிறுவர் காத்திருப்பர். காலையில் எழுந்தவுடன் அவர்க்குப் பசிநினைவு எழுதல் இயற்கை. "இன்று கோவிந்தனுக்குப் படைத்து உண்ணல் வேண்டும்" என்று தாயர் அவர்க்கு நினைவூட்டினால் போதும். "சிறிதும் பொறுக்கமாட்டோம் என்கின்றீரே! உங்கள் வயிறே கடவுளா?" என்று தாயர் கடிந்துரைத்தல் அன்று வேண்டுவதன்று. "கோவிந்தனுக்குப் படைத்து" எனத் தாயர் வாயினின்றும் பிறக்கும் சொற்கள் சிறுவர் செவியினுள் நுழையு முன்பே, "கோவிந்தா! கோவிந்தா! கோஒவிந்தா!!" என்ற முழக்கம் எதிரொலிக்கும்.

இதனால், சிறுவர் கடவுளன்பில் ஆழ்பவர் எனக் கொள்ளல் வேண்டா. அவ் அன்பில் ஆழ்வார்க்கும் பசி வந்திடப் பத்தும் பறந்துபோம் அல்லவோ? காலையில் எழுந்தவுடன் அரும்பிய அப் பசியைக் "கோவிந்தா" முழக்கமும், "காபி" குடியும் சிறிது நேரமே தணிக்க வல்லன.

இம் முழக்கமே அன்றி, வேறு எவ்வகை ஆரவாரமும் சிறுவர் உள்ளத்தை ஈர்த்தல் கண்கூடு. இங்ஙனம் ஆரவாரத்துக்கு அடிமையாகும் மனநிலை ஒன்று உண்டு. இம் மனநிலை சிறுவரிடமே அல்லாமல் ஏனையோர் சிலரிடமும் உள்ளது.

ஆண்டு நிரம்பியும் அறிவு நிரம்பாமையால் சிறுவராயுள்ளார் சிலர். அவரைப் பாமரர் என்பர். அவரிடமும் அம்

Koviloor Digital Library



மனநிலை காணப்படும். ஆண்டவனைப் பற்றியும் அடியாரைப் பற்றியும் கோயில்களில் அமைதியுடன் நிகழும் விரிவுகளைக் கேட்க அவர் வாரார்; வரினும் செவிகொடார்; பக்கத்தாருடன் பேசத் தொடங்குவர்; இன்றேல் தம் புலன்கட்கு ஒய்வு தருவர் (உறங்குவர் என்க). ஆனால், அக் கோயில்களிலே ஆரவாரங்கள் நிகழும்போது அவர்தாம் முன்னணியில் நிற்பர்; ஆண்டவனுக்குப் படைத்த பொங்கல், வடை, சுண்டல் முதலானவற்றில் பங்குபெற என்ன பாடுபடுவர்! (நெருக்குண்பதால்) தம் உடலையும், (சட்டைப் பையிலுள்ள பணத்தை இழப்பதால்) தம் பொருளையும் தியாகம் செய்யத் துணிவர். உடல் பொருளே அன்றி ஆவியையும் இழந்திடும் திருவிழாக் கூட்டங்களும் உண்டு. "இயற்கை அன்னையின் எழில் நலங்களில் இன்புற எழுமின் எழுமின்" என்று அறிஞர் நாக்கடிப் பாக வாய்ப்பறை அறையினும் 'அவர் அதனைப் பொருட் படுத்தார். மற்று என் செய்வர்? களியாடல்களிலும் உலகத்துச் சினிமாக்களில் கடைப்பட்டனவாக உள்ள தமிழ்ச் சினிமாக்களைக் காண்பதிலும் பொழுது போக்குவர். அவரை அறிதற்குரிய அறிகுறிகள் மற்றும் பல உள்ளன. எடுத்துக் காட்டாக, அரசியல் துறையினைக் கொள்ளலாம். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாமலும் அறநெறி பிறழாமலும் தன்னலமின்றி அமைதியாய்த் தொண்டுசெய்யும் அரசியல் அறிஞரை அவர் பின்பற்றார்; அவ்அறிஞர் வீழ்ச்சிக்குக் காரணமாக நின்று அவர் அத் துறையை வெறுத்து விடுத்தோடி ஒதுங்குமாறு செய்வர். ஆனால் அரசியலின் அடிப்படை தந்திரமே எனக் கொண்டு சமயத்துக் கேற்பச் சாய்ந்து செதுமொழிகள் பயில்வோர்க்குத் தலைமை நல்கி, பெருங் கூட்டமாய்த் திரண்டு, பல்வேறு ஒலிகளை ஒன்றுபட்ட குரலால் எழுப்பி, உலகத்தைக் கலக்கத் துணிவர். அத்தகையோர் உலகில் இல்லையானால், சாதிப் பூசல் இல்லை; சமயப் போர் இல்லை; பிற குழப்பம் இல்லை. ஆனால் அவர் இல்லாத உலகம் உலகமா?

மற்றொருவகைச் 'சிறுவ'ரும் உள்ளனர். அவரே, ஆன்றவிந்தடங்கிய சான்றோராய், எதனையும் பொருட் படுத்தா

Koviloor Digital Library



ராய், 'ஆருயிர் முறைவழிப் படூஉம்' எனக் கவலையின்றிக் காலங் கழிப்பவர். அவ்வகைச் 'சிறுவரை'ப் பெரியோர் என்ப. அவர் உலகவாழ்க்கையில் சிறுமை உறினும் அறிவில் பெருமை உற்றவர்; எந்நிலையும் நன்னிலை என்பவர்; வேண்டுதல் வேண்டாமை இல்லாதவர். ஆதலின், அவர்தம் புறவொழுக்கத்திலிருந்து உண்மை அறிதல் இயலாது. அவர் எல்லாம் செய்வர்; எதையும் பற்றார் என்ப. அவரைப் பற்றிய ஆராய்ச்சி ஈண்டு வேண்டா. அவர் உலகத்தைப் பொருட்படுத்தாமை போல, அவரை உலகம் பொருட்படுத்தாது விடுக.

'அவரை உலகம் பொருட்படுத்தாது விடுக' என்றல் எளிது; ஆனால் அங்ஙனம் விடுதல் அரிது. அத்தகைய பெரியோர் ஒருவரை யான் அறிவேன். அவரைக் காணும்போது என்னை அறியாமல் என் உள்ளம் குவிகின்றதே! அதனைத் தடுக்க முடியவில்லையே! அவரைச் சில ஆண்டுகட்கு முன் கண்டபோது, "ஐய! நீர், மக்கள் விரும்பியவாறெல்லாம் கடவுள் வழிபாடு செய்ய உடன்படுகின்றீர். உமது முடிந்த கொள்கையும் கூறுகின்றிலீர்" என்றேன். அவர், "அப்பா! உனக்குத் தெரியவில்லை. உலகம் பலவகை. அவரவர் நிலைக்கேற்றவாறு கடவுளை வழிபடுவர். சிலர்க்கு ஆரவாரம் வேண்டும். சிலர்க்கு அமைதி வேண்டும். சிலர் நம்பிக்கை கொள்வர். சிலர் ஆராய்ச்சி செய்வர். எல்லார்க்கும் ஒரே நிலை அமைத்தல் எஞ்ஞான்றும் இயலாது. எழுத்துக் கற்கும் வகுப்புமுதல் கல்லூரி இறுதிவகுப்புவரை உள்ள நிலையத்தில் எல்லா மாணவர்க்கும் பொதுநூலாக ஒன்றை வற்புறுத்திக் கற்பிக்க இயலுமோ? உனக்கு ஆரவாரம் வேண்டா எனின், அமைதியாக ஆழ்வார் நாயன்மார் பாடல்களைப் பாடுக" என்றார்.

அவர் பொன்மொழியை இப்போது நினைக்கிறேன். யான் சிறுவனாயிருந்து 'கோவிந்தா' போட்டு மகிழ்ந்த காலம் கழிந்தது. பின்னர்ச் சைவப் பற்றுக் கொண்டேன்; அச் சனிக்கிழமையை வெறுத்தேன்; திருமண் அணிவோரைக் காணின் 'முட்டு' என்றேன். என் தம்பி (அவன் சிறுவனாக

Koviloor Digital Library



இருந்த போது) பக்கத்து வீட்டுக்குச் செல்ல, அவ் வீட்டார் அவன் ஆவலை அறிந்து அவன் நெற்றியில் திருமண் இட, அவன் மீண்டபோது அதைக் கண்ட யான் சினங்கொண்டு அவருடன் போருக்குப் புறப்பட்ட நாளும் கழிந்தது. அந்நிலையும் ஒரு வகை ஆரவார நிலையே. பின்னர், சிவராத்திரியில் சிவா என்றும், ஏகாதசியில் கண்ணா என்றும் கண்விழித்து மகிழ்ந்த 'சமரச' ஆரவாரமும் இன்று என்பால் இல்லை. உலகம் பல வகை; உண்மையே. என் வாழ்க்கையிலேயே பலநிலை இருந் திருந்து கழிந்தன. இனிஅடுத்து வரும் நிலைகள் எவையோ?

இன்று உள்ள நிலை எது? ஆரவாரத்தில் விருப்பம் இல்லை. அமைதியில் உள்ளதுபோலத் தோன்றுகின்றது. ஆனால் உண்மை அறியேன். "கூற்றாயினவாறு...." என்பது முத லான பாடல்களை நிறுத்தி அமைதியாக இசைக்கருவிகளுடன் பாடுங் கூட்டத்திலும் மனம் செல்லவில்லை. அவர் இசைமீதும் மனம் இல்லை. அவற்றைப் பாடுவோர், நிறுத்தத் தகாத இடங் களில் நிறுத்தும் போதும், பொருந்தா முறையில் நீட்டி ஒலிக் கும் போதும், காரணமின்றி மடக்கிப் பாடும்போதும் வெறுப்புத் தோன்றுகின்றது. என்னை? அப்போதெல்லாம், கடவுளை விடுத்து அவர் இசையின்மீது உள்ளம் செல்கின்றது அன்றோ? 'நன்றே! இறைவன் ஏழிசையாய் இசைப்பயனாய் உள்ளான்' எனின், அதுபோலிச் சமாதானம் என்க.

செயற்கை இசையும் அதற்குரிய கருவிகளும் இன்றிக் கடவுளைப் பாடுவோரும் உளர். மெய்யறிவைப் பற்றிய தொரு நூலை வாரந்தோறும் கற்கும் கூட்டம் ஒன்றற்கு யான் ஆறு திங்களாகச் செல்லும் வழக்க முடையேன். அங்கே நண்பர் ஒருவர் தொடக்கத்திலும் முடிவிலும் கடவுள் வாழ்த் துப் பாடுவார். தொடக்கத்தில் ஒரு செய்யுளும் முடிவில் ஒரு செய்யுளுமாக வாரந்தோறும் வழக்கமாக அவற்றையே பாடுவார். தொடங்கும் பாட்டில் ஓரடியும் எனக்கு நினை வில்லை. பொன், உலகம், அந்தம் முதலாகச் சில சொற்களும் பல எழுத்துக்களுமே என் செவியில் கேட்டவை. அப் பாட்டை எளிதில் கற்கக் கூடிய செய்யுட் பயிற்சி எனக்கு இல்லை எனக் கருதல் வேண்டா. யான் சில நூல்களைக்

Koviloor Digital Library



கற்றுள்ளேன் அல்லனே? ஆதலின், நான்கைந்துமுறை ஒரு செய்யுளை ஒருவர் பாடக் கேட்டால், அதை அவ்வாறே மனப் பாடம் செய்ய வல்லேன். இதனைத் தற்புகழ்ச்சியாகக் கூறி னேன் அல்லேன். ஆராய்ச்சியின் பொருட்டு உரைத்த உண்மையாகும் இது. நண்பர் எவ்வளவு தெளிவாக— அஃதாவது இரண்டடித் தொலையில் உள்ள என் செவியிலும் விழாதவாறு பாடுகின்றார் என்பதை இதினின்று அறிதல் கூடுமன்றோ? அவரைக் காரணம் கேட்டல் வேண்டுமோ? கடவுளைப் பாடும்போது காதலாகிக் கசிந்துருகா விடினும், அடங்கி ஒலித்தல் (அல்லது பிறர் செவியில் விழாதவாறு அடங்க ஒலித்தல்) வேண்டும் என்னும் மாற்றமே எதிர் பார்க்கக் கூடியது. முடிக்கும் செய்யுளில் முதலடி நினை விருக்கின்றது.

"தந்தை தாய் ஆவானும் சார்கதி....ஆவானும்" இவ் அடியிலும் கதி என்பதற்குப் பின் இரண்டெழுத்துக்கள்— நிரையசை—தெளிவாக விளங்கவில்லை. இந்த ஓரடி பாடுங் கால் அவர் சிறிதெடுத்த குரலில் தொடங்குவார். ஆதலின், அதனைக் கேட்டறிய முடிந்தது. படிப்படியாக ஒலி குறைந்து கொண்டே போக, அவர் ஈற்றடி பாடும்போது, அவருடைய உதடுகள் மட்டுமே அசையும் போலும்! (கண்மூடி இருத்தல் மரபாதலின் அதனையும் நன்கு கண்டறிந்திலேன்.)

இம் முறையும் வேண்டா; கடவுள் வாழ்த்தில் கண்மூடி மௌனியாய் இருத்தல் ஒன்றே நன்று எனின், அப்போது தான், நாத்திகர் கடவுள் இல்லை என்பது பொருந்துமா என்ற ஆராய்ச்சி என் உள்ளத்தே எழுகின்றது. இதுபோன்ற வற்றையே தாயுமானவர் 'பாழ்த்த கன்மங்கள் போராடுதே' என்றபோது குறித்தனரோ?

மீண்டும் ஒருநாள் ஒய்வு பெற்று, மேற்குறித்த பெரியா ரிடம் சென்று, கடவுள் வாழ்த்துப் பற்றிய முடிந்த கொள்கை யைக் கேட்டறியுமாறு என் உள்ளம் என்னைத் தூண்டு கின்றதே!

---

Koviloor Digital Library

# நான் கேட்ட கால்

"வித்துவான் திரு. பொன். சுப்பிரமணியம்"

மூவேந்தர்களுள் சேரன் இதுபொழுதுஞ் செங்கோ லோச்சுகின்றான். இன்றுவரையிற் சிறப்பாகச் செங்கோ லாட்சி புரியும் சேரமுன்னோரிடம் சில நூற்றாண்டுகளின் முன் னர் ஒரு புலவர் பரிசு பெறும்பொருட்டு வந்தார். அவர் கன்னட நாட்டார். கன்னடமொழியில் சிறந்த அறிவு வாய்ந்தவர். அவ்வாறு அறிவிற் சிறந்த அப்புலவர், வறு மையால் நலிவுற்றுத் தம் நாட்டில் தம்மை ஆதரிப்பாரற்றுத் தமிழ் நாடாகிய சேரநாடு நோக்கி வந்தார். சேரனைக் கண் டார். தம் வறுமைகளையெல்லாம் அரசனுக்குப் புலப்படும் படி எடுத்துக் கூறினார். அரசனுங் கேட்டு மகிழ்வுற்று, ஒரு மூட்டை நிறைந்த பொன் நாணயங்களை அப் புலவருக்குக் கொடுத்தான். புலவர் அதனைப் பெற்று மனமகிழ்ந்து அரச னிடம் விடைபெற்றுக்கொண்டு தமது ஊருக்குப் புறப்பட் டார்.

தற்காலம் நமது நாட்டில் இருப்பதுபோன்று பண்டு புகைவண்டி முதலிய வண்டிகள் கிடையா. ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்கோ அன்றி வேறு நாட்டுக்கோ செல்ல வேண்டுமென்றால், நடந்தோ அன்றி மாட்டுவண்டி மூலமோ தான் செல்லவேண்டும். அத்தகைய நிலையில், புலவரும் சேர நாட்டை விட்டுப் புறப்பட்டுத் திருநெல்வேலி வட்டத்தி லுள்ள அம்பாசமுத்திரம் வந்துசேர்ந்தார். வந்தவர் அங் கே சின்னாள் தங்க எண்ணினார்.

ஒருவர் வீட்டில், தாம் பரிசில் பெற்று வந்த பொன் மூட்டையை வைத்து, இதனுள் பருப்பு இருக்கின்றது ; இங் கேயே இருக்கட்டும் என்று சொல்லிவிட்டுச் சென்றார்.

புலவர் சென்றதும், அவ் வீட்டுக்காரர் ஐயுற்று, மூட்டை யைப் பிரித்தார். கண்டார் பொன்னினை. "பணமென்றால் பிணமும் வாய்திறக்கு" மன்றோ? பொன்னினைக் கவர்ந்தார்.

Koviloor Digital Library



அச் சாக்கு நிறையத் துவரம்பருப்பை நிறைத்துத் தைத்து வைத்துவிட்டார்.

புலவர் இரண்டுநாள் கழித்துவந்து மூட்டையைப் பார்த்தார். பொன்னைக் கண்டாரில்லை! கேட்டார். வீட்டுக்காரர், 'நீங்கள் கூறியபடி பருப்பே உள்ளது. நாங்கள் ஒருவரும் மூட்டையைத் தொடவில்லை' என்று சாதித்தார். பார்த்தார் புலவர். என்ன செய்வார்? ஊராரிடம் முறையிட்டார்.

ஊரார் புலவரின் வாய்மொழி கேட்டு அவ்வூர் இறைவன் திருக்கோயிலின்முன் அவை கூடி, எல்லோரும் ஒரு முடிவிற்கு வந்தார்கள். முடிவில் வீட்டுக்காரரை நோக்கி, ஒரு நாள் குறிப்பிட்டு, அன்றைக்கு, நீர், 'புலவர் வைத்த மூட்டையில் பொன்னைக் காணவில்லை; நான் எடுக்கவும் இல்லை' என்று ஆணை செய்ய வேண்டுமென்று சொன்னார்கள். வீட்டுக்காரர் வீட்டிற்கு வந்தார். அவருக்கு மனக்கலக்கம் உண்டாயிற்று. என்ன செய்வதென்று தெரியவில்லை. பின்னர் ஒருவாறு மனந்தெளிந்து தமக்குத் தெரிந்துள்ள மந்திரத்தைக் கொண்டு, திருக்கோயிலிலுள்ள இறைவனைக் கோயிலுக்கு, எதிரில் நின்ற ஒரு மரத்தில் நிறுவினார்.

இஃது இவ்வாறிருக்க, இறைவன் முதல் நாளன்று, கவலை கொண்டிருக்கும் புலவரிடம் கனவில் தோன்றி, 'நான் இது பொழுது கோயிலிலுள்ள உருவத்தில் இல்லை; எதிரில் உள்ள மரத்தில் இருக்கின்றேன்; ஆதலின், நாளைக்கு வீட்டுக்காரர் உறுதி மொழி செய்து கொடுக்கும்போது, அம் மரத்தைப் பிடித்துச் செய்து கொடுக்கச் சொல்ல வேண்டும்' என்று கூறிச் சென்றார்.

அவ்வாறே புலவரும் மறுநாள், உறுதி செய்து கொடுக்கச் சொன்னார். வீட்டுக்காரரும் வேறு வழியின்றி உடன்பட்டுச் செய்ய, மரமும் அவரும் அப்படியே எரிந்துபோனார்கள். உடன் அந் நிகழ்ச்சியைக் கண்ட ஊராரெல்லாரும், புலவர் வெற்றிக்கு மகிழ்ந்து வீட்டிலிருந்த அவரது பொன் முழுவதையும் வாங்கிக் கொடுத்தார்கள்.

Koviloor Digital Library



புலவர் அதனைப் பெற்றுக்கொண்டு, 'இறைவனே, இப் பொன் எனக்கு ஒரு அரசர் கொடுத்தது. அதனை நான் நல் வழியில் செலவு செய்ய வேண்டும்' என்று கேட்க, இறைவன் அப்புலவரிடம் 'நீர் இங்கிருந்து பார்த்தால் ஒரு பசு போவது தெரியும்; அதுசென்ற வழியே கால்வாயும், அது படுத்த இடத்தில் ஒரு குளமும் இப் பொன்னைக் கொண்டு வெட்டிவிடுக' என்று கூறினர். அவ்வாறே அவரும் வெட்டுவித்தார். அதுவே இன்றும் அவரது பெயரால் 'கன்னடியன் கால்' என்று வழங்கி வருகின்றது.

திருநெல்வேலி வட்டம் அம்பாசமுத்திரம் தாலுக்காவைச் சேர்ந்த சங்கரன் கோவிலுக் கண்மையில், பொதிகையில் தோன்றி இழியும் தாமிரபரணி யாற்றிலிருந்து பிரிந்து தனியே செல்லும் இக் கன்னடியன் கால்வாயே நான் கேட்ட கால்.

நிற்க, சோழவள நாட்டிலே, காவிரியாற்றுப் பாசன நிலமும், பழவாற்றுப் பாசன நிலமும் எவ்வாறு மேன்மையுடையனவோ, அவ்வாறே திருநெல்வேலி ஜில்லாவில் இக் கன்னடியன் கால் பாயும் நிலங்களெல்லாம் தனிமதிப் புடையனவாக விளங்கிவருகின்றன.

அன்றியும் இதுபொழுதும் திருச்செந்தூருக்கு வருகின்ற சித்தர் மடத்துச் சித்தர்களெல்லாம், கன்னடியன் கால் வெட்டிய அச் சிறந்த புலவரின் பெயரைக் கொண்டு, திருநெல்வேலி வட்டம் முழுவதும் சுற்றிப் பணம் திரட்டிக்கொண்டு போகின்றார்கள். என்னே அருள்; பாருங்கள் புலவனின் திறத்தை; எண்ணத்தை. இன்னும் இதைப்பற்றிய உண்மை விளங்கின், பின்னரும் எழுதலாம்.



Koviloor Digital Library

# மூதுரை

"இளவழகனார்"

கல்வியைப்பற்றி ஔவையார் கருதுங் கருத்துக்கள் மிகவும் ஊக்கந் தருவனவாயிருக்கின்றன; கல்வியாவது என்ன என்பதை முதலில் அவர் வரையறுக்கிறார்; ஒரே பாட்டில் இதைப்பற்றிய பல கருத்துக்களையும் பொருந்தச் செறித்துக், காட்சிக் கழகாய் அமைத்திருக்கிறார். வழக்கப்படி அவருடைய எளிமையும் இனிமையும் நுட்பதிட்பங்களும் இதன்கண் ஒளிவிடுகின்றன. நகைச் சுவையையும், அதே நேரத்தில் மிக்க கண்டிப்பையும் இது தருவதாயிருக்கின்றது.

'கல்வி' யென்பது பிறர்க்குப் பயன்படுகின்ற திறமையும், பிறர் குறிப்பை அறிந்துகொள்கின்ற திறமையுமாகும் என்பது அவர் கருத்து.

நூல்களைப் படித்துவிடுவதுமட்டுங் கல்வியாகாது; பிறர் வாழ்க்கையைச் செப்பஞ் செய்யத்தக்க திறமையைப் பெறுகின்றபோதுதான், கல்வி நிறைவடைகின்றது. பலரெதிரிற், 'கல்வி' பயன்படவில்லையானால், அது கல்வியே ஆகாது. பிறர் குறிப்பை அறிந்துகொள்ளுந் திறமையும் ஒருவனுக்கு இல்லையானால், அவன் எப்படி அவர்களுக்குப் பயன்படக்கூடும்? ஆகவே இவ்விரண்டு கருத்துக்களும் ஒருவன் கல்விக்கு உயிர் நாடிகளாயிருக்கின்றன. ஔவையார் இக் கருத்துகளை அமைத்து அருளிச்செய்த மூதுரைச் செய்யுள்,

"கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நல் மரம்"

என்பது. 'கிளைகளும் வளார்களுமாகத் தழைத்துக் காடுகளில் இடம் பரவி நிற்கும் அவையல்ல நல்ல மரங்கள்; சவை நடுவில், நீட்டிய ஏட்டை வாசிக்கத் தெரியாமல் நின்றவனும், பிறர் குறிப்பை அறியமாட்டாமல் நின்றவனுமே நல்ல மரங்களாவர்' என்று அவர் அறிவிக்கின்றார்.

Koviloor Digital Library



பலர் முன்னிலையில் பணியாற்ற இயலாதவன் என்னுங் கருத்தில், அவ்வகையிற் கடைசி தரமானவனை, எழுதிய ஓலையொன்றைதானும் வாசிக்கமாட்டாதவனை இங்கே சுட்டிச் சொன்னார்.

பிறர்க்குப் பயன்படும்படி அவையில் ஒன்றைப் பேசும் வல்லமையில்லாமல், ஒன்றைப் படிக்கவுங்கூடத் தெரியாத நிலைமையில், ஒருவன் உயரமாய் நிற்பதை நோக்க, உடனே அவருக்கு மரத்தின் நினைவு எழுந்தது. ஒப்பிட்டுப் பார்த்தார்; கப்புங் கிளையுமாக இருக்குங் காட்டுமரங்கள் அவருக்கு நல்ல மரங்களாகத் தோன்றவில்லை. சிறிதுங் கோணலில்லாமல் நேராய் நெட்டையாய் நிற்கும் இவன்போன்றாரே அவருக்கு நல்ல மரங்களாகத் தோன்றினர். இப்படி நகைச் சுவை தோன்ற, இச் செய்யுளை ஔவையார் அருளிச் செய்திருக்கின்றார்.

ஆசிரியர் திருவள்ளுவர் முதலியோர் கல்வியில்லாதவரை விலங்குகளோடு ஒப்பிட்டுக் கூறினால், அம்மையார் அவர் எல்லாரினுங் கண்டிப்பாக, அக் கல்லாதவரை 'நல்ல மரங்கள்' என்றே கூறுகின்றார்.

இங்ஙனம் இச் செய்யுளிற் கல்வி யென்பது இன்னது என்று பிழிசாறாக வடித்துக் கூறி, அதனைக் கல்லாதவர்களைக் கண்டிப்பாக இழித்துக் கூறுமுகத்தால், கல்வி கற்றுக்கொள்ள வேண்டியதன் கட்டாயத்தை நன்கு வலியுறுத்துவாராயினர்.

இனி, அத்தகைய கல்வித் திறமையும் ஒருவருக்குச் சொந்தத் திறமையாக அமையவேண்டு மென்றும் அவர் கருதுகிறார். ஒருவரைப் பார்த்து மற்றொருவர் நடிக்கமுயலுதல், வழியல்லாத வழியிற் செல்லுதல்போல ஆகும். அதனால், அவரவர்க்கே உரிமையாக அவரவருள் மறைந்துகிடக்கும் ஆற்றல்கள் வீறுடன் வெளிவந்து விளங்குதற்கு இடமில்லாமற் போகின்றது. பிறர்பால் அவர்க்கே உரிமையாக விளங்கி நிற்குந் திறமைகள் மேலுமேலும் ஓங்கிப் பயன்படுவதற்கும் தடையாகின்றது. உலகத்தாரும், கற்றார் பலருடைய பலவேறு திறமைகளையும், அவற்றால் உண்டாகும் பலவேறு பயன்களையும் இழந்துவிடும்படி நேர்கின்றது. ஆதலால், கல்விகளை அவ

Koviloor Digital Library



ரவரும் முறையாகப்பயின்று அவரவர்க்கே உரியவாய் அவரவர் உயிரறிவினுள் மறைந்துகிடக்குந் தனித்திறமைகளை மேலெழுப்பி உலகுக்குப் பயன்படும்படி ஒளிரவைக்க வேண்டும். கல்விப் பயிற்சிகள் இங்ஙனம் நடைபெறுவது நன்றாயிருக்கும். அப்படிச் செய்யாமல், தாம் முறையாகக் கல்லாமலே கற்றாரைப்போல ஒருவர் நடிக்க முயல்வது, மேலே காட்டியபடி கல்வியில் உயர்ந்துவரும் சான்றோரையுந் தடைசெய்து தாமுந் தோல்வியுறுதற்கே ஏதுவாகும். இயற்கையே அழகாக இருக்கும் நீல மயில், அதற்கேற்ற பசுமையான இடமாகிய ஒரு கானகத்தில் மேகங்கள் தவழ்ந்து வருகின்ற குளிர்ந்த நேரத்தில் இயல்பாகத் தனக்குள் தோன்றிய உள்ளமகிழ்ச்சியினால் நிறமான தனது தோகையை மலர விரித்துக் கண்ணியமாகவும் கவர்ச்சியாகவும் அடி பெயர்த்து நடம் ஆடுகின்ற இன்பக் காட்சியைக் கண்டு, எல்லாப் படியாலும் அதனோடு ஒப்புமையில்லாத ஒரு வான்கோழி தன்னையும் அம் மயில்போலப் போலியாகக் கருதிக்கொண்டு வறண்ட பாலைவனத்தில் வெயிலில் தனக்குள் எழுந்த செயற்கையெழுச்சியினால் தானும் தனது பொல்லாத சிறகை விரித்து ஆடினால் எப்படியிருக்கும்! இயல்பான கல்வித் திறமையில்லாதவர், கற்றாரைப்போல நடிக்க முயல்வது இவ் வான்கோழியின் செயல்போன்றதே யாம். ஒளவையார் இவ்வழகிய உவமையை மிகவும் அமைவாகப் பொருத்திக்,

> "கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
> தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
> பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
> கல்லாதான் கற்ற கவி"

என்று ஓர் எளிய இனிய மூதுரையை அருளிச் செய்வது, எவ்வளவு நன்றாயிருக்கின்றது!



Koviloor Digital Library

# அதியமான் நெடுமானஞ்சி

"சி. சு. கன்னிசாமி"

அதியமான் 'கடையெழு வள்ளல்களில் ஒருவன். தகடூரைத் தலைநகராகக் கொண்ட நிலப்பரப்பை ஆண்ட ஒரு குறுநில மன்னன். ஏழைமக்கள் வாய்திறந்து இரவாமுன் அவர் முகக்குறிப்புக் கண்டு உவந்தளிக்கும் வள்ளல். அறிவிற் சிறந்தவன் ; திறலிலும் அப்படியே.

ஒருகால் அம்மன்னன் ஓர் உயரமான மலையை அடைந்தான். அங்கே ஒரு கருநெல்லிமரம் அவன் கண்ணுக்குத் தெரிந்தது. மரம் அம் மலையின் உச்சியில் செங்குத்தான பாறைப் பிளப்பின் ஒரு பகுதியில் இருந்தது. அரிதின் முயன்று அதியன் அவ்விடத்தை அடைந்தான். ஒரு கருநெல்லிக்கனி கிடைத்தது. அது, தன்னை உண்டவரை நீண்ட வாழ்நாளுடன் வாழவைக்கும் இயல்புடையது. மன்னன் மலையை விட்டு இறங்கியதும், நெஞ்சத்தில் மகிழ்ச்சி மிக, முகத்தில் அவ்வொளி பெருக, விரைவாய்த் தகடூரை நோக்கி நடக்கலானான்.

சற்று வெயில் நேரம் ; அந் நேரத்தில் ஔவையார் எதிரே வந்தார். கருநெல்லிக் கனியைத் தான் உண்டு நெடுங்காலம் உயிர் வாழ்வதை விட ஔவை உண்டு பன்னெடுங்காலம் உயிர்வாழ்ந்தால், அப் பிராட்டியாரால் உலகத்துக்கு எத்தனையோ நலம் உண்டாகும் என்று அதியன் மனம் நினைத்தது. சான்றோரைக் காணும்போது அவருக்குக் கையுறை தருவது முறைமையன்றோ ! அம் முறைமைப்படி அதியமான் தான் அரிதிற்பெற்ற அக் கருநெல்லிக்கனியை ஔவையார்க்கு உவப்புடன் அளித்தான்.

ஔவையாரும் அதியமானும் மனங்கலந்து பழகியவர்கள் ; ஔவையார், நெல்லிக்கனியை மகிழ்வோடு வாங்கி உண்டார். அவருக்கு ஒரு பெரும் வியப்பு உண்டாயிற்று. ஏனெனின், அவர் இதுவரையில் எப்போதும் சுவைத்தறியாத தீஞ்சுவை அக்கனியில் இருக்கக் கண்டார். அதன் உண்மையை அவர் ஊன்றியறிய விரும்பினார். அதியன், அதன் அமிழ்தத் தன்மையை ஒளியாமற் புலப்படுத்தினான்.

Koviloor Digital Library



கேட்டனர் ஒளவையார். வியப்பினால் தம்மையும் மறந்தார். 'இப்படியும் ஒருவன் உண்டுகொல்' என்று அவன் அன்பிற்கு மனங் கரைந்தது. இங்ஙனம் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனை எவ்வாறு புகழ்வதெனக் கருதினார். அவர் திருவுள்ளம் அவ் வள்ளலைப் பின்வருமாறு வாழ்த்தியது.

"வெற்றியைத் தன்னகத்தே கொண்ட வாளை ஏந்திப் பகைவர்போர்க்களத்தில் மடியும்படி வென்ற, வீரக்கழலையும் தொடியணிந்த பெரிய கையையுமுடைய அதியர் தலைவா! போரில் அடையும் வெற்றிச் செல்வத்தையும் பொன்னரி மாலையையும் உடைய அஞ்சியே! பழமையாக நிலைபெற்றிருக்கின்ற பெரிய மலையின் பிளப்பிடத்தே அரிய உச்சியிற் கொண்ட, சிறிய இலையையுடைய நெல்லிமரத்தின் தீஞ்சுவைக் கனியை, நினக்கென நெஞ்சிற் குறியாது, அதனாலாகும் பயனை வெளிப்படுத்தாமல் மனத்துள் அடக்கிச், சாகுந்தன்மை நீங்கும்படி எமக்குக் கொடுத்தனையே! நீ, பிறைசூடிய சென்னியையும் நீலகண்டத்தையுமுடைய ஒப்பற்ற இறைவனைப்போல நிலைபெற்று விளங்குவாயாக!" ஒளவையின் இவ் வாழ்த்து,

"வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்
களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்!
போர்அடு திருவின் பொலம்தார் அஞ்சி!
பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே! தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறிஇலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே!"

என்று புறநானூற்றில் (௯௧) வருகின்றது. இத்தகைய செல்வரும் சான்றோரும் மனங்கலந்து பழகிய நாடு இத் தமிழ் நாடு. அவர்களால் இந் நாடு வாழ்வு பொருந்தியுள்ளது. அந் நலத்தை என்றும் இது பெற்றிருத்தல் நன்று.

Koviloor Digital Library

# செய்திகளும் குறிப்புகளும்

## தமிழர் நல் வாழ்க்கைக் கழகம், சென்னை.

தமிழ்ப் பெருமக்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக.

தமிழர் நல்வாழ்க்கைக் கழகம், தமிழ் மக்களின் நலங் கருதியும், தமிழ் மொழியின் ஆக்கங் கருதியும் அறிஞர்களாற் சென்ற ஆண்டு மார்ச்சுத் திங்களில் தோற்றுவிக்கப்பட்டதாகும்.

இக் கழகம், தனது முதற் பணியாகத் தமிழர் திருமண முறைகளைத் தமிழ் மரபுக் கேற்பச் சீர்பெற அமைக்க முயன்று, தமிழகத்துப் புலவர்கள் பல்லோரது ஆதரவு கொண்டு தமிழர் திருமண நூல் ஒன்றை வெளியிட்டு, 16-7-1939-ம் நாள் சென்னையில் மறைத் திரு. மறைமலை யடிகளார் தலைமையில் திருமண மாநாட்டைக் கூட்டி அதில் தமிழ்ச் செல்வர்கள் ச. சோமசுந்தர பாரதியார், எம். ஏ., பி. எல்., த. வே. உமாமகேச்சுரம் பிள்ளை, பி. ஏ., பி. எல்., கா. சுப்பிர மணிய பிள்ளை, எம். ஏ., எம். எல்., ஆர். கார்மேகக் கோனர், சி. பன்னிருகைப் பெருமாள் முதலியார், எம். ஏ., பி. எல்., பண்டிதை த. பதுமாவதி அம்மையார் ஆகிய அறிஞர்கள் ‘தமிழர் மண முறை’ பற்றி ஆற்றிய விரிவுரைக்குப் பின் அந் நூலை அரங்கேற்றி எல்லோரும் உவந்து ஏற்றுக்கொள்ளச் செய்தது.

இச் சீரிய மாநாட்டின் குறிப்புகளையும். இம் மாநாட்டை யொட்டிய மாதர்கள் கூட்டம் இரண்டின் குறிப்புகளையும் நூல் வடிவத்தில் வெளியிட்டுப் பயன்படுத்த இக் கழகம் விரும்புகிறது. வடமொழி மந்திரங்களைத் தமிழில் மொழிபெயர்த்தல் பயன் தருமெனக் கருதி மொழி பெயர்ப்பும் செய்துவருகிறது. திராவிட நாட்டுப் பண்களை ஆய்ந்து வெளியிடவும், தமிழர் பழக்க ஒழுக்கங்களுக்கேற்பத் தமிழர் சட்டம் வகுக்கவும், இவைகளையெல்லாம் நூல் வடிவில் வெளியிடவும் விரும்புகிறது. அதுவும், செங்கற்பட்டு மாவட்ட மக்களின் விருப்பத்திற்கிணங்கச் செங்கற்பட்டில் அண்மையில் கூட இருக்கும் இரண்டாவது தமிழர் திருமண மாநாட்டிற் கிடைக்குமாறு அச்சிட அவாவுகின்றது.

தமிழ்ப்பணி, தமிழர்பணி, தமிழ்நாட்டுப்பணி யாற்றுதற் கியைந்த முறையில் தமிழர் மண்டபம் ஒன்று அமைக்கவும், தமிழ்ப் பல்கலைக் கழகம் ஒன்று காணவும் வேண்டியது இன்றியமையாத தெனக் கருதுகிறது.

Koviloor Digital Library



கழகம் மேற்கொண்டுள்ள இம் முயற்சிகளனைத்துக்கும் செங்கற்பட்டு மாநாட்டில் அடிகோலப்படுமென்றும், இவை நிறைவேறத் தமிழ்ப் பெருமக்கள் அனைவரும் உறுதுணை நின்று அருளாலும் பொருளாலும் உதவி புரிய வேண்டுமென்றும் நாங்கள் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

இங்ஙனம்,

மா. அ. கனகசபை,
தலைவர்.

பி. என். குருசாமி,
செயலாளர்.

14, தியாகராய பிள்ளைத் தெரு, தங்கசாலை, சென்னை, 28-8-40.

தமிழர் நல்வாழ்க்கைக் கழகம், சென்னை.

---

## தேவகோட்டை, கொலைமறுத்தல் தொண்டு

### நகரத்தாரின் ஆட்டுக்கடாப் பலி நிறுத்தப்பட்டது.

நாளது விக்கிரம ஆடி ஆடிமீ 2௳ முதல் 7௳ வரை கோட்டையம்மன்கோவில் பொங்கல் விழாவை முன்னிட்டுப் பலி நிறுத்தல் தொண்டு தீவிரமாக நடத்தப்பட்டது. இதற்கெனச் சென்னை ஜீவரக்ஷாபிரசார சபையின் சொற்பொழிவாளர் திரு. டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள் வந்திருந்தார்கள்.

அவர்களும் மற்றும் சீவகாருணிய அன்பர்களான, திரு. கரு. கி. சொர்ணநாதஞ் செட்டியார், மு. அ. சுப்பிரமணியஞ் செட்டியார், வித்துவான் வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார், பண்டித. கணபதி ஐயா, பாலகவி வே. இராமநாதன் செட்டியார், சந்திரமௌலி கரு. மாணிக்கஞ் செட்டியார் முதலியோரும்;

சொர்ணமூர்த்திப் பெண்பாடசாலை மாணவிகள், திருமதி க. நாச்சம்மை, லெ. சாரதாம்பாள், சொ. வேதாம்பாள், சு. பெரியநாயகி, பழ. சிவகாமி ஆகியவர்களும் சொற்பொழிவுகள் செய்தார்கள்.

ஒவ்வொரு வீதியிலும் சுவரொட்டித் தாள்கள் ஒட்டப்பட்டன. வீடுகள்தோறும், மாணவிகள், துண்டு அறிக்கைகளைக் கொண்டு போய்க் கொடுத்தனர். நாளும் சீவகாருணிய பஜனை, மாணவிகளால் நடத்தப்பெற்றது. சொ. பெ. பாடசாலைத் தலைமையாசிரியர், முருகன் அவர்களும், சரசுவதி வாசகசாலை அங்கத்தினர்களும்,

Koviloor Digital Library



ஏனைய ஆர்வமுள்ள இளைஞர்குழாமும் கலந்துகொண்டு பெரிதும் தொண்டாற்றினர்கள்.

இதன் பயனாக நீண்டகாலமாய் நகரத்தாரின் சார்பாக வெட்டப் படும் ஆட்டுக்கடாப் பலி நிறுத்தப்பெற்றது. அதனால் அநேக ஆடு, கோழிகள் உயிர்தப்பினதுடன் பலர் பலியிடுவதை நிறுத்தி உண்டியலில் பணம்போட்டார்கள். சரசுவதி வாசகசாலையில் ஒரு நிழற்படம் எடுக்கப்பெற்றது. இப் பணிக்கு இந் நகர் ஆ. வி. க. குடும்பத்தார்கள் பொருளுதவி செய்ததை எல்லோரும் பாராட்டுகின்றனர்.

---

## "சென்னை மாகாணத் தமிழர் ஏழாவது மகாநாடு"

இம் மகாநாடு சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் 1940 அக்டோபர்மீ 19, 20 ஆகிய சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் திருநெல்வேலியில் நடைபெறும். இந்து அறநிலைப் பாதுகாப்புக் கழகத்தின் தலைவர் திவான்பகதூர் T. M. நாராயணசாமிப் பிள்ளையவர்கள், எம். ஏ., பி. எல்., தலைமை தாங்க அன்புடன் இசைந்திருக்கிறார்கள் தமிழ் வளர்ச்சியைப்பற்றிய பொருள்கள் மட்டும் ஆராயப் பெறும்.

தீர்மானங்கள் அனுப்ப விரும்பும் அன்பர்கள் அவைகள் 15-10-1940-க்குள் பின்வரும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். திருவாளர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, அமைச்சர், சென்னைத் தமிழ்ச் சங்கம், சங்கரநயினார் கோவில்.

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை,
அமைச்சர்.
29-9-1940.



Koviloor Digital Library



பண்டித

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்



தமிழாசிரியர்

ஔவை சு. துரைசாமிப் பிள்ளை

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—ஐப்பசி [பரல்-எ

# ஓங்குக!

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லா ரொருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை.

—ஔவையார்

இந்தப் பாட்டு எவ்வளவு அழகான உண்மையை மக்களுக்கு எடுத்துக்காட்டுகின்றது!

நெல்லுக்கென்றுதான் நீர் இறைக்கப்படுகின்றது; ஆனால், வழியெல்லாமிருக்கும் புல்லுக்கும் அது பயன்படுகின்றது; நெல்லில்லாவிட்டால் புல்லுக்கு வாய்க்கால் நீர் கிடைப்பதற்கு வழியில்லை. அங்ஙனமே உலகத்தில் நற்குண நற்செய்கைகளிற் சிறந்த சான்றோர் சிலரேனும் இல்லாவிட்டால், மற்றவர்களுக்கு வாழ்க்கை நடைபெறுவதென்னவோ அருமைதான்.

ஆனால், அப்படி எல்லாரும் நினைப்பதில்லையே; அப்படி நினைத்தால், நாடு நல்லவர்களைத் தக்கபடி போற்றிக்கொண்டு இன்னும் மேன்மேலும் ஓங்கும். பல துன்பங்கள் இன்பங்களாக மாறிவிடும். கொந்தளிப்புக் குறைந்து அமைதி நிலவும்;

நல்லோர்கள் சிற்சிலர் அங்கங்கும் இருப்பதனாலேதான் உலகம் நடைபெறுகின்றது என்னும் எண்ணம் மேன்மேலும் ஓங்கவேண்டும்; ஓங்குக!

Koviloor Digital Library

# வழி எப்படி ?-II

தமிழ்மொழி பரவ வேண்டுமானல், தமிழின் எழுத் திலக்கணம் சொல்லிலக்கணங்களைப் பலமுறை படிப் பதிலும் நெட்டுருச் செய்வதிலும் மட்டும் இல்லை. தமிழ் மொழியை வாழ்க்கையில் இணைக்கவேண்டும்.

மொழியென்பதே கருத்தை உணர்த்துவதுதான். எழுத்துஞ் சொல்லும் படிப்பதெல்லாம் பொருளுக்காக வேயாம். உலகத்திலுள்ள எந்த மொழியும் வாழ்க்கைப் பொருள்களைப் பற்றிக்கொண்டுதான் உயிரோடு நிலவு கின்றன. வளர்ச்சி பெறுகின்றன ; மற்றவை இறந்தன. ஆதலால் கருத்துக்களை இயக்குமுகமாகத்தான் மொழி கள் அவற்றை ஒட்டிக்கொண்டு ஓங்குதல் வேண்டும்.

அரசியல் என்னுங் கருத்தைப் பற்றிக்கொண்டு 'ஆங்கில மொழி' உலகமெல்லாம் விளங்கிநிற்கின்றது ; ஆங்கில மக்கள் தம் வாழ்க்கையிற் பல துறைகளிலும் முயற்சியுள்ளவர்கள் ; அவர்களுடைய வாழ்க்கை ஆற் றல்களிற் பிணைந்துநின்று, ஆங்கிலம் மேலும் மேலும் ஒளிவிடுகின்றது. அவ்வக்கால உணர்ச்சி முயற்சிக ளோடு இணைந்தே, மொழிகள் ஆக்கம் பெறுகின்றன.

இளங்கோவடிகள், சீத்தலைச் சாத்தனர் என்போ ரின் உணர்ச்சியுள்ளங்களையும் அக்கால நிகழ்ச்சிகளை யும் பற்றிக்கொண்டு, தமிழ்த்தேவி, சிலம்பு மணிமேகலை என்னும் சில அரிய அணிகலன்களை அணிந்துகொண் டாள். சங்க இலக்கியங்கள் அக்கால உணர்ச்சிகளைப் பொருளாக வைத்து எழுந்தமையினலேதான் ஆற்ற லோடு என்றும் நிமிர்ந்து நிலவுகின்றன. கருத்துக ளோடு கூடிய சொற்கூட்டங்களுக்குத்தாம் மொழி என்று பெயர் ; வெறும் எழுத்துக் குவியலை வைத்துக்

Koviloor Digital Library



கொண்டு என்ன செய்வது? கருத்துகள் அவற்றிற்கு உயிர் போல; அவ்வுயிரில்லாமல் அவை எப்படி இயங்கும்? ஆகவே அவ்வக்கால உணர்ச்சிகளை நல்ல முகமாகத் திருப்பிக்கொண்டு தமிழ் மக்களின் வாழ்க்கையிற் பிணைந்துகொண்டே, தமிழ்மொழி மேலும் மேலும் வளர்ச்சிபெறவேண்டியிருக்கிறது.

திருஞானசம்பந்தர் நன்றாக இசைபாடக் கூடியவராயிருந்தார். அதைக் கேட்க அக்கால மக்களே மிகவும் விரும்பினர். இக்கால மக்களும் விரும்புகின்றனர். அதனால், அதன் வாயிலாக அவருடைய தமிழ்ச் செய்யுளையுங் கற்றுக்கொள்ளவேண்டி யிருக்கிறது. அச் செய்யுள்களிலிருந்து இசையைப் பிரித்துவிட்டால் அச் செய்யுளுக்கு உயிரில்லாமற் போகும். ஆனால் அப்படிப் பிரிக்கக்கூடிய முறையில் ஞானசம்பந்தர் வைக்கவில்லை. அச் செய்யுள்கள் இசைவடிவமாக இரண்டறப் பிணைந்துவிட்டன. அப்படிப் பிணைந்திருப்பதற்குத்தான் 'இசைத் தமிழ்' என்று பெயர். 'நாடகத் தமிழ்' என்பதும் இப்படித்தான். சங்ககாலங்களில் இம் முறைமைகளாலுந் தமிழ் வளர்ந்தது.

இக்காலத்தில் இங்ஙனம் வாழ்க்கையிற் பயன்படாமல் எல்லா வகைகளிலிருந்துந் தமிழ்மொழி விலகிநிற்கின்றது. தமிழ்நாட்டுப் படக்காட்சிகளிலெல்லாம் அயல் மொழிகளே ஆக்கம் பெறுகின்றன. தமிழ் மொழியை வாழ்க்கை நிகழ்ச்சிகளிற் சேர்க்கிறோம் என்று சொல்லுகிறவர்கள், அடியோடு மொழியையே வேறு உருவாக மாற்றிவிடுகிறார்கள். தமிழர்கள் நல்லுணர்ச்சியுடன், இவற்றைப் பொருந்தப் பிணைத்து, அம் முகமாகத் தமிழ் மொழியை இயக்கிவரவேண்டும். ஞானசம்பந்தர் தமிழ் மொழியை இப்படி இசையிற் பிணைத்து இயக்கிவந்தமையினாலேதான்,

Koviloor Digital Library



"நாளும் இன்னிசையால் தமிழ் வளர்க்கும்
ஞானசம்பந்தன்"

என்று சுந்தரமூர்த்திகள் அவரை வாய்குளிரப் போற்றினர்.

சில காலத்துக்கு முன் 'நவசக்தி'யில் 'தொழிலைப் போற்றித் தமிழை வளருங்கள்' என்னுங் கருத்தில் ஒரு கட்டுரை வந்தது. அதனை மீண்டுந் தமிழ் மக்கள் நினைவு கூர்வது நல்லது. முறை, நல்ல முறை.

அரசியற் கட்சிகளின் உணர்ச்சியினால், அழகாகவும் ஒழுங்காகவும் தமிழ் பேசுதற்குரிய நல்ல பேச்சாளர்கள் இப்போது அக் கட்சிகளில் மிகுந்திருக்கிறார்கள். நல்ல எழுத்தாளர்களும் அரும்புகின்றனர். 'நீதிக்கட்சி' தமிழ் மொழியை ஆக்கமாக வளர்த்துவருகின்றது.

இப்படியே, கலைகளைப் பற்றிக்கொண்டுந் தமிழ் மொழி வளர்ச்சிபெறுதல் வேண்டும்; இவ் வகையில், தமிழ்மொழி திருத்தமாக வளரும்படி தமிழ்மக்கள் பாது காத்துக்கொள்ள வேண்டுவது கட்டாயமாகும்.

இங்ஙனமே அவ்வக்கால உணர்ச்சிகள், வாழ்க்கை கள், கலைகள் முதலியவற்றைப் பற்றிக்கொண்டு தமிழ் மொழி வளர்ச்சிபெறுதலே அதன் இயக்கத்துக்கு நல்ல வழியாக இருக்கின்றதென்பதைத் தமிழ் நூன் முறைகளே நன்கு விளக்கிநிற்கின்றன.



Koviloor Digital Library

# 'சொல்' சொன்ன சொல்

"மா. பாலசுப்பிரமணிய முதலியார், எம். ஏ."

[ஒரு கட்டுரை எழுதப் புகுந்தேன். இடையில் ஓர் ஐயம் உண்டாயிற்று: இரண்டு சொற்களில் எஃது ஏற்புடைத்து என்பது எளிதில் புலப்படவில்லை. நெடு நேரம் ஓர்ந்து பார்த்தேன். பார்த்தபடியே சொல்லுலகத்துள் நுழைந்தேன். சொற்கள் வந்து என்னைச் சூழ்ந்தன. அவற்றுள் ஒன்று எனக்குக் கூறிய மாற்றத்தை ஈண்டுப் பொறிக்கின்றேன். வேண்டுவார் விரும்பிப் படித்துப் பயன்பெறுக—முற்குறிப்பு]

"நான் ஒரு சொல்; என் உற்றார் உறவினர் யாவரும் சொற்கள். நாங்கள் எல்லோரும் சொல்லினத்தைச் சேர்ந்தவர்கள். சொல்லினத்தார் அனைவரும் நுண்மை உடையவர்கள்.

எங்கள் இனத்தில் கட்டுப்பாடு மிகுதி. ஒரு சொல் இருக்கவேண்டிய இடத்தில் வேறொரு சொல் இருக்கக்கூடாது. ஒரு சொல் வரவேண்டிய காலத்தில் மற்றொரு சொல் வரக்கூடாது. அப்படி இருந்தாலும் வந்தாலும் முட்டுப்பாடே மிகும். எங்களுக்கென உரிமைகளும் கடமைகளும் உள. உரிமைகளைக் கொண்டாடுவதிலும் கடமைகளை நிறைவேற்றுவதிலும் எங்களுக்கு முனைப்பு மிகுதி.

எங்கள் நுண்மையை அறிந்து, எங்கள் கடமைகளையும் உரிமைகளையும் உணர்ந்து, எங்களைப் போற்றினால் நாங்கள் தகுதியுடன் விளங்கி இருப்போம்; இன்றேல் நிலை வேறுபடுவோம். நாங்கள் இயற்கையில் அழகுள்ளவர்கள்: ஆனால் எங்களை இடம் தப்பியும், காலம் தப்பியும் பொருத்தினால் எங்கள் அழகு குற்றப்படும். எங்களில் ஒருவரை மற்றொருவராக மயங்குதல் மாந்தர்க்கு இயல்பு. அப்படி மயங்காமல் எங்களைத் தேர்ந்தெடுத்து வைத்தால் நாங்கள் அழகு மிகுந்து விளங்குவோம். இன்றேல் எங்கள் அழகை மறைத்துக் கொண்டு மாந்தரை மயங்கவைப்போம். காலத்தாலும் இடத்தாலும் பொருந்துமாறு எங்களில் ஒருவரை ஒரு கற்றவர்

Koviloor Digital Library



தெரிந்தெடுக்க முனைந்தால் அவர் நினைவுமுனையில் ஒருமுகப் பட்ட எங்களில் பலர் விரைந்து வந்து சூழ்ந்து அவரை மயக்க முயல்வார்கள் : அஃது எங்கள் இயல்பு. எங்கள் முயற்சியால் மயக்குறாமல் எங்களில் ஏற்ற ஒரு சொல்லை அந்தக் கற்றவர் தேர்ந்தெடுத்து வைத்தால் அந்தச் சொல் அழகு பெருகி விளங்கும். அன்றியும் அச் சொல் தக்க துணைவர்களோடு பொருத்தப்பட்டால் மேலும் அழகு மிளிரும்.

எம்மவரில் வீரர்களும் உளர், கோழைகளும் உளர்; வன்மையாளரும் உளர், மென்மையாளரும் உளர்; காதலர்களும் உளர், துறவிகளும் உளர். எமருடன் நன்கு கலந்து பழகினலொழிய எம்முள் இன்னவர் வீரர் இன்னவர் கோழையர் என்றுதல், இன்னவர் வலியவர் இன்னவர் மெலியவர் என்றுதல், இன்னவர் காதலர் இன்னவர் துறவியர் என்றுதல் ஒருவருக்கு எளிதில் புலப்படாது. வீரச் சொற்கள் அமைக்கப் படவேண்டிய இடங்களில் கோழைச் சொற்கள் பொருந்தா; அவ்வாறே வலிய சொற்கள் இருக்கவேண்டிய இடங்களில் மெலிய சொற்கள் பொருந்தா : ஆதலின் எம்மவர்தம் தன்மைகளைத் தெரிந்து போற்றுதல் கற்றவர்க்குக் கடனும்.

எங்களில் ஒவ்வொருவர்க்கும் இயற்கையாகவே ஒரு நுண்ணிய ஆற்றல் உண்டு. ஆனல் அவ்வாற்றல் பலதரப்பட்டது. காலமும் இடமும் அறிந்து, முறையும் பொருளும் தெரிந்து, எங்களை ஏவினல் நாங்கள் ஏவுவார் விரும்பும் ஆக்கமும் கேடும் விளைவிப்போம். ஊழித் தீபோல விரைந்து மாந்தர் உள்ளத்தே பாவி அவரிடை உணர்ச்சித் தீயினை மூட்டுதல் எங்களால் கூடும். ஊழிக்காற்றினும் கடிது பரவி மாந்தர் மனவமைதியைக் கலக்கிடுதலும் எங்களால் ஆகும். இதனுற்றான் கைதேர்ந்த எழுத்தாளர்களும் நாத்தேர்ந்த சொல்லாளர்களும் எங்களைப் போற்றி வளர்க்கின்றனர்.

அறிவியல் உலகமே எங்களாற்றான் நிலைபெற்று நிற்கின்றது. ஏன்! படைப்பு முதலே நாங்கள் தாம்.—In the beginning was the word; the word was with God; and the word was God—“முதலில் சொல்லே இருந்தது; அது

Koviloor Digital Library



கடவுளோடு இருந்தது; அதுவே கடவுளாக இருந்தது” என்னும் பெரியோர் மொழியினை நினைத்துப்பாருங்கள். எங்கள் பழமையான பெருமை என்றும் அழியாதது. அதனுடன் காலப்போக்கில் எங்களுக்குப் புதுப்புதுப் பெருமைகளும் உண்டாகின்றன.”

[பிற்குறிப்பு— சொல்லுலகத்திருந்து மீண்டேன்; கருத்துலகத்துள் நுழைந்தேன். தமிழ் வள்ளுவர் திருவாய்மலர்ந்தருளிய சில குறள்வெண்பாக்கள் நினைவுக்கு வந்தன.

“ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்,
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.”

எனவும்,

“திறன்அறிந்து சொல்லுக சொல்லை; அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல்லை.”

எனவும்,

“சொல்லுக சொல்லைப்; பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து.”

எனவும் அவர் கூறியுள்ள பாக்கள் மிகவும் உன்னுதற்குரியன அல்லவா?

ஒரு சொல்லின் உரிய பொருளைத் தெரிந்து அச்சொல்லை ஆளுதலே மொழிப்புலவரின் வழி. என்னை?

“குன்றக் கூறல், மிகைபடக் கூறல்,
கூறியது கூறல், மாறுகொளக் கூறல்,
வழூஉச்சொல் புணர்த்தல், மயங்க வைத்தல்,
வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல்,
சென்றுதேய்ந் திறுதல், நின்றுபய னின்மை,
என்றிவை ஈரைங் குற்றம் நூற்கே.”

என்ற நன்னூல் பொதுப்பாயிரச் செய்யுளில் பவணந்தியார் சொல்லாட்சிக் குற்றங்களாக, வழூஉச்சொல் புணர்த்தல், வெற்றெனத் தொடுத்தல், நின்றுபயனின்மை என்ற மூன்றையும் குறித்தமையானும்,

Koviloor Digital Library



" சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல்,
நவின்றோர்க் கினிமை, நன்மொழி புணர்த்தல்,
ஓசை யுடைமை, ஆழமுடைத் தாதல்,
முறையின் வைப்பே, உலகமலை யாமை,
விழுமிய தூ பயத்தல், விளங்குதா ரணத்த
தாகுதல் நூலிற் கழகெனும் பத்தே."

என்ற அந்நூல் பாயிரச் செய்யுள் பிறிதொன்றில் அவர், சொல்லாட்சி அழகுகளாக, நன்மொழி புணர்த்தல், ஓசை யுடைமை, ஆழமுடைத்தாதல் என்ற மூன்றையும் குறித்தமை யானும், முப்பத்திரண்டு உத்திகளில் தொடர்ச்சொற் புணர்த் தல் என்ற ஒன்றையும் அவர் குறித்தமையானும் மொழிப்புல வர்கள் சொல்லாட்சித் திறனைப் பெரிதும் போற்றிவந்தனர் என்பது புலனாகின்றது.

நிற்க; மதுரைக் கண்ணங்கூத்தனார் இயற்றிய கார் நாற் பது என்னும் நூலில்,

" முல்லைக் கொடிமகிழ, மொய்குழலார் உண்மகிழ,
மெல்லப் புனல்பொழியும் மின்னெழில்கார்—தொல்லைநூல்
வல்லார் உளமகிழத் தீந்தமிழை வார்க்குமே
சொல்லாய்ந்த கூத்தர்கார் சூழ்ந்து."

என்ற சிறப்புப்பாயிரச் செய்யுளில் நூலாக்கியோரான கூத்தர் சொல்லாய்ந்த கூத்தர் என்று பாராட்டப்பட்டமையின் முன் னாள் தமிழ்ப்புலவர் சொற்பயிற்சியில் மிகுந்த கருத்துடைய ராய் இருந்தனர் என்பது மேலும் தெளிவாகின்றது.

அன்றியும், திருக்குறளின் சிறப்புப்பாயிரமாகக் கருதப் படும் திருவள்ளுவ மாலையில்,

" தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்— நாவிற்
குயலில்லை சொற்சுவை ஓர்வில்லை மற்றும்
செயலில்லை என்னும் திரு."

என்ற உறையூர் முதுகூற்றனார் செய்யுளால் சொற்சுவை யோர் வினைத் தராத நூல் பெருமைக்குரிய நூலாகாது என்பது

Koviloor Digital Library



பெறப்படுதலின், சொல்லாட்சித் திறன் மொழிப் புலமைக்கு இன்றியமையாதது வேண்டப்படுவதொன்று என்னும் உண்மை நிலைநாட்டப்படுகின்றது.]

---

## வாழ்க நஞ் செல்வி

தேன்இனிய தமிழ்மொழியைத் தெய்வநல
உயர்மொழியைச் சிந்தித் தோரும்
வானிலுயர் பதவிதனை வழிவழியாப்
பெற்றின்பில் வாழ்ந்து கொள்வர்
நானிலத்து நற்றமிழை வளர்க்கஒரு
நற்றாளுய் நவிலத் தக்க
மேனினிமை பெற்றுயர்ந்த மேலான
'செல்வி'இவண் மிளிர்க மாதோ !

பதினேழு ஆண்டுகளாய்ப் பைந்தமிழ
ரிடைத்தவழ்ந்து பண்பார் இன்பக்
கதிசெலுத்தி உண்மைவழி தனிற்றமிழைக்
காத்திட்ட உயர்ந்த தாளாம்
மதியணிசெஞ் சடையண்ணல் மன்னுவது
போன்றுலகில் மன்னி என்றும்
நிதியமதை ஒத்துயர்ந்து நீணிலத்தில்
நஞ்'செல்வி' நிலைக்க மாதோ !

வளர்ந்திடுசெந் தமிழ்ச்செல்வி வண்டமிழ்க்குப்
பலபணியும் வழுத்தி ஈண்டுக்
கிளர்ந்திடுநற் றவப்பணியே கிளர்ந்தோங்கி
ஆற்றிடுவாள் கிளைத்து வாழி !
உளமதில்நம் தமிழரெலாம் உள்ளுணர்ச்சி
பெற்றவராய் உயர்ந்து ஓங்க !
வளமலிய வாழ்ந்திடுக ! வளர்ந்திடுக !
நஞ்செல்வி வளர்த்து மாதோ !

—அ. மு. பரமசிவாநந்தம்

Koviloor Digital Library

# வீட்டைப்பற்றிய நினைவுகள்

"மகிழ்நன்"

(முன் தொடர்ச்சி)

"இன்று கல்லூரிவேலை நடக்குங் கடைசிநாள். காலை ஐந்து மணிமுதல் குளிக்குமிடத்தில் நிகழ்ந்த ஆர்ப்பாட்டங்களுக் களவில்லை. நீரை ஒருவர்மேலே ஒருவர் வாரி இறைத்தும், கல்லில் துணியை வெளுப்பதைவிட்டு ஒருவன்முதுகில் மற்றொருவன் துணியை ஓங்கியடித்தும், தோள்களைத் தாவிப் பிடித்துச் சவாரி செய்தும், ஆங்கிலப் பெண்களும் ஆண்களும் ஒருவரை யொருவர் பற்றி நடமிடுவதுபோல் நடித்தும், பாடியுங் கூவியுங் குதித்தும், குளிக்குமிடத்தை மாணவர் அமர்க்களமாக்கினர். இங்ஙனம் இவர்கள் கும்மாள மிடுகையில், சிவந்த உதடுகளில் பல் துலக்கும் பசைவிளங்க, "ஷோக் சீதாராமன்" அங்கே வந்தான். இவன் நாளுக்கொரு வகையில் உடையணிந்து மகிழ்பவன். நமது நாட்டுமுறையில் உடுத்துக் கொண்டாலும், ஆங்கிலமுறையில் உடுத்துக் கொண்டாலும் அவனது தோற்றம் நேர்த்தியாயிருக்கும். எள்ளின் பூவைப் போன்று நுனியில் இருபுறமும் வளைந்த மூக்கும், உருண்ட முகமும், பொன்னிறமுமுடைய இவனைக் கண்டால் 'தாராக்குளம் மாணிக்கம்' சீற்றமடைவான். "இவனைப் பார்த்தாலே எனக்கு எரிச்சலுண்டாகிறது" என்று மாணிக்கம் பன்முறை சொன்னதுண்டு. உடுக்கும்பொழுதுங் குளிக்கும்பொழுதும் சீதாராமன் எவரும் தன்னுடனிருக்க இணங்கமாட்டான். இதனால் அவனைச் சிலர் 'சிகண்டி' என்று பேசிக்கொள்வர். எவருடைய பேச்சையுங் காதில் ஏற்றுக்கொள்ளாது, எவருடனும் எக்காரணமும்பற்றிப் பிணங்காது, சீதாராமன் மிகத் திறமையாய் நடந்துகொள்ளும் இயற்கையுடையவன். இவனைப்போல் ஆடைகளணிந்து இலங்கவேண்டுமென்ற விருப்பம் எனக்கு அவ்வப்பொழுது தோன்றியதுண்டு. "எட்டாப் பழத்திற்குக் கொட்டாவி ஏன்?" என்று எனது விருப்பத்தை முளையிலேயே கிள்ளிவிடுவேன். நிற்க.

Koviloor Digital Library



எழில் பெற அமைந்த பட்டு உட்சட்டையுடன் பல் விளக்கிக்கொண்டு வந்து நின்ற சீதாராமனைக் கண்டவுடன் மாணிக்கத்திற்கு ஒரு நினைவு தோன்றிற்று. "இந்தப் பயலைப் பிடித்து எண்ணெய் முழுக்காட்ட வேண்டும்" என்று மாணிக்கம் தன் அருகில் நின்ற சொக்கலிங்கத்துக்குச் சொன்னான். இவன் ஆவலுடன் அதற்கிணங்கினான். இதனால் மகிழ்ச்சி யடைந்த மாணிக்கம், "சாதிக்காய் ஏலம் வெற்றிலை பாக்கு என்ன ஷோக்கு" என்று ஓர் இசைத்தட்டிலுள்ள பாட்டின் பகுதியைப் பாடினான். இவ்வளவுதான், சீதாராமன் நின்றவிடம் தெரியாமல் மறைந்துபோனான். மாணிக்கமும் சொக்கலிங்கமும் விழித்தனர். யான் வியப்பு மேலிட்டு நின்றேன். ஓர் ஆசிரியர், "பெண்டிர் நெஞ்சின் வாயிலாய் உணர்கின்றனர்; ஆடவர் மூளையைக்கொண்டு அறிகின்றனர்" என்று கூறுகின்றார். நினைத்துப் பார்த்து ஆண்கள் ஒரு முடிபிற்கு வருகின்றனர்; பெண்களோ இயல்பான ஓர் உணர்ச்சியினால் கடிதில் ஒரு முடிபை யடைகின்றனர். இது பெரும்பாலான மக்களுக்குப் பொருந்தும். எல்லாவிடத்தும் இஃதுண்மை யென்று சொல்ல இயலாது. சீதாராமனின் பெண்தன்மையே அவனுக்கு நேரப்போவதை முன்னுணர்த்திற்றென்று நினைக்கிறேன்.

குளிக்குமிடத்தில் நிகழ்ந்த கூத்தாட்டுங் கூச்சலும், படிப்பு முடிந்து மாணவர் வீட்டிற்கேகும் மகிழ்ச்சியினால் பிறந்தன வென்பதைப் பகரவேண்டியதில்லை. இன்று விடுதியிற் குழப்பமே குடிகொள லாயிற்று. அவரவர் தங்கள் தேர்வு எழுதி முடிந்தவுடன் வண்டிகளிலேறிப் புகைவண்டிக் கூடத்திற்குப் புறப்பட்டனர். என்ன கூப்பாடு! என்ன வழியனுப்பல்! என்ன நகைப்பு! என்ன உருக்கம்! எவர்கண்ணிலும் படாமல் நான் மறைந்துகொண்டேன். "நீ எப்பொழுது புறப்படப் போகிறாய்? எந்த ஊருக்குப் போகின்றாய்?" என்ற கேள்விகளுக்கு விடையளிக்கும் வருத்தத்தையும் வெட்கத்தையுந் தப்பவே நான் மறைந்துகொண்டேன். "தாயுமிலி, தந்தையிலி, தான்தனியன் கேளேடி" என்ற திருவாசகப் பகுதியைச் சொல்லிக்கொண்டே மாணவர் கண்ணிற் படாமல் ஓரிடத்திருந்தேன். விடுமுறையை விடுதியிலேயே நான் கழிக்கப்

Koviloor Digital Library



போவது சுந்தரத்திற்கும் விடுதித் தலைவருக்குமன்றி வேறு ஒருவருக்குந் தெரியாது.

வெளியே சென்று, கடற்கரையில் நீண்ட நேர மிருந்து திரும்பி, உணவருந்தி இரவு எட்டு மணிக்குத்தான் விடுதி சேர்ந்தேன். என்ன தனிமை, பெரிய அவ் விடுதி, வாயில்களும் பலகணிகளும் மூடப்பட்டதனால், மங்சலநா ணிழந்த மங்கைபோல் நின்றது. ஒளியும் ஒலியுமடங்கி, இருளும் அமைதியும் எங்குந் தங்கத், தனியே எனது அறையிற் போய மர்ந்திருந்தேன். விடுதிகாவலன் என்னையணுகி, "அச்சமாயிருந்தால் என்னுடன் வந்திருக்கலாம்" என்று இரக்கங் கொண்டு மொழிந்தான். குறுநகை செய்து அவனை யனுப்பி விட்டேன். சிறிதுநேரஞ் சென்றபின்; "அகன்ற இவ்விடத்திற்கு யானே தலைவன்" என்ற ஓர் உணர்ச்சி எனக்குண்டாயிற்று. இவ்வுணர்ச்சியாற் செருக்குற்று, உதடுகளிடையே காற்றைச் செலுத்தி ஊதினேன், பாடினேன்; ஏவலாளர் பலருக்குக் கட்டளைகள் பிறப்பித்தேன். இவர்களுள் ஒருவன் எனது கட்டளையைச் செவ்வனே நிறைவேற்ற வில்லையென்று அவ்விடத்திலேயே அவனை வேலையிலிருந்து நீக்கிவிட்டேன். பிறகு ஒரு பெரிய மக்கட் கூட்டம் என்முன் இருப்பதாக வைத்துக்கொண்டு, அவர்களுடைய நாட்டுப் பற்றைக் கொழுந்துவிட்டெரியச் செய்யும் ஒரு பேச்சாளனாக என்னை மதித்துக்கொண்டு, ஆங்கிலத்திற் சொன்மாரி பொழியலானேன். செகப்பிரியர் (Shakespeare) இயற்றிய, 'ஜூலியஸ் சீசர்' என்னும் நாடகத்தில் மார்க்ஆந்தனி என்பவன் பேசிய வகையிற் சொற்களை வழங்கினேன். இடையிடையே யான் செய்த பொல்லா இலக்கண வழுக்கள் எனக்கே நகைப்பை யுண்டாக்கின. அவற்றைப் பாராட்டாது மிக விரைவாகச் சுடு சொற்களை யடுக்கினேன். கைகளையாட்டிக் காலைத் தூக்கி மிதித்துச் சொற்களுக்கு ஆற்றல் ஊட்டினேன்; உதட்டைக் கடித்தேன். புருவந் தூக்கி விழித்தேன். அரைநாழிகை யளவுதான் சொற்பொழிவு நீண்டது. என்னைக் கேட்ட மக்கள் கைதட்டி ஆரவாரிப்பதாக எண்ணிக்கொண்டு நன்றிகூறி வணக்கஞ்செய்தேன். இப்படிப் பல கூட்டங்களிற் பேசி எவரும்

Koviloor Digital Library



வியக்கும் நாவன்மை பெற்றவனாகி விட்டதாக நினைத்துக் கொண்டேன். நாட்டில் எவரும் போற்றும் அரசியல் வாதி யாகிவிட்டேன். பம்பாய், கல்கத்தா, டெல்லி முதலிய விடங்களிலிருந்து சொற்பொழிவாற்றுமாறு அழைப்புகள் வந்து குவிந்து கிடக்கின்றன. இவற்றிலெதை ஏற்றுக்கொள்வது எதைத் தள்ளுவது என்ற கேள்வி என்னை வருத்துகிறது. பம் பாய்க்குச் சென்று பேசுகிறேன். கடற்கரையில் எள் விழ இட மின்றி மக்கள் வந்து குழுமியுளர். அங்கு நிகழ்த்துஞ் சொற் பொழிவு இங்கிலாந்திலுள்ள செய்தித் தாள்களிலெல்லாம் வெளியாகிறது. எனது அரசியலறிவு எங்கும் புகழ்ந்து கொண்டாடப்படுகிறது. இரவு எட்டரை மணியிலிருந்து ஒன்பது மணிக்குள்ளாக இந்த உயர்நிலையை எய்திவிட்டேன். சுவரிலிருந்த பல்லியொன்று இசைத்தது. எனக்கேறிய பித்தம் இறங்கிற்று. "அட கெடுவாய், விடுமுறைக்குப் போக இடம் இன்றித் தனித்துயரெய்தித் தனியாயிருப்பதை மறந்து, ஏதோ நினைந்து மகிழ்கின்றாய்" என்று மனம் எனக்கெடுத்துரைத் தது. படுத்துக்கொண்டேன்.

வீட்டைப்பற்றிய நினைவுகள் எழுந்தன. எங்களது சிற் றூரில், மாலைப்பொழுதிற் கூரையிலிருந்து கிளம்பும் புகை யுடையதாய் யான் பிறந்த இல்லம் எனக்குக் காட்சியளித்தது. அங்கே நோய் கண்டு இளைத்த மேனியராய்த் தோன்றிய என் அன்னையின் ஒளி விடு நீள் விழிகள் விளங்கின. அப்பொழுது நான் பள்ளி யிறுதி வகுப்பிற் படித்துக்கொண்டிருந்தேன். தந்தை வீட்டிலில்லாத ஒரு நாள், "கண்ணே, உன்னை விட்டுப் போய்விடுவேன் ; எப்படி நீ வாழப்போகிறாயோ ? கடவுள் தான் காக்கவேண்டும்" என்று அன்னை இயம்ப, இருவரும் அழுத அழுகை இப்பொழுது நினைவிற்கு வந்தது. தைத்திங்க ளில் அன்னை இம் மண்ணுலகைவிட் டேகினர்.

எங்கள் வீட்டிலேயே இருந்தால் யான் அன்னையை எண்ணி ஏங்குவேனென்று கருதிய தந்தை வேறொரு வீட்டிற் குடிபுகுந்தார். வறுமையின் கொடுமையால் சமைக்குந் தொழிலையும், வீட்டைக் கழுவி மெழுகும் எல்லா வேலையையுந் தந்தையே ஏற்றுக்கொண்டார். எது நேர்ந்திடினும் எனது

Koviloor Digital Library



கல்விக்கு இடர்வரலாகாதென்ற ஒரே கருத்து அவர் உள்ளத்தில் ஆட்சிபெற்றது. தண்ணீரெடுக்குஞ் சிறுவேலையையும் என்னைச் செய்யவொட்டார். யான் விரும்பியுண்பதொன்றுங் குறைவு படக் கூடாதென்று யான் உண்டபிறகே அவருண்பார். அந்த அன்பின் ஆழத்தை அளக்கவல்லார் யார்? இரண்டு திங்கள் புதிய வீட்டில் தங்கியபின் வேனில் வர, போதிய அளவு காற்று வீசாத அந்த வீட்டைவிட்டு மறுபடியும் எங்கள் வீட்டிற்கே போய்ச் சேர்ந்தோம். பள்ளியிறுதி வகுப்புத் தேர்வு நிகழுங் காலத்தில் ஒருநாள் யான் இரவு பத்தரை மணிக்கே படுத்துக் கொண்டேன். அன்று மிகப் புழுக்கமாயிருந்தது. எப்படியோ தூங்கிவிட்டேன். நள்ளிரவில் யாதோ ஒன்று என்மேல்பட்ட உணர்ச்சியால் விழித்தெழுந்தேன். இரக்கம் பெருகுங் கண்களுடன் தந்தை அருகமர்ந்து விசிறிகொண்டு வீசிக்கொண்டிருந்தார். யானறியாமல் எத்தனை நாள் இவ்வாறு செய்தனரோ, அறியேன்.

பள்ளியிறுதி வகுப்பில் யான் தேறியபின், இரவும் பகலுந் தந்தை என்பொருட்டு உழைப்பதை நீக்க எண்ணி யாதாயினும் ஒரு வேலையிலமர வகைதேடினேன். இஃதறிந்த அவர் மிகுதியும் வெகுண்டு பேசலாயினர். படித்துப் பட்டம் பெறும் வரையில் வேறொன்றுங் கருதலாகாதென்று முடிவாய்க் கூறிவிட்டனர். இடை வகுப்பில் (Intermediate) யான் படித்த இரண்டாண்டும் அவர் வருத்தத்தைச் சொல்லி முடியாது. இடை வகுப்புத்தேர்வு நடக்கும்பொழுதே தந்தைக்கு இருமல் நோய் வந்தது. அக்காலத்தில் யான் அவருடன் அணுகியிருந்தால் எனக்கும் அந் நோய் வரும் என்றஞ்சி, வைத்தியர் வீட்டில் இரவில் நான் துயில்வதற்கு ஏற்பாடு செய்திருந்தார். இடைவகுப்புத் தேர்வு முடிந்தது. வைத்தியர் எனது நிலை கண்டிரங்கி, "தம்பி, உன் தந்தையின் முடிவு அண்மையிலுள்ளது, இன்று அவரருகே இரு" என்றனர். அன்றிரவு ஒன்பது மணிக்குமேல் தந்தை பேசத் தொடங்கினர். என்னை அழைத்து, "அப்பா, உனது பரீட்சை முடியும் வரையில் இந்த உயிரை வைத்திருக்கவேண்டுமென்று விரும்பினேன். இன்னுங் கொஞ்ச நேரத்திற் போய்விடுவேன். குழந்தாய், உன்னைப்

Koviloor Digital Library



போலொரு மகன் யாருக்குக் கிடைப்பான்? உன்னைப் பெற்றது நாங்கள் செய்த புண்ணியம். உன்னைக் காப்பாற்ற ஒருவருமில்லாத நிலையில் விட்டுப்போகிறேன். இன்னும் இரண்டாண்டு யான் இருந்தாற்போதுமே. எப்படியாவது பி. ஏ பட்டம் பெறும் வரையிற் படிப்பை நடத்து. அப்பா, வீட்டையும் நிலத்தையும் விற்ற பணம் ரூபா முந்நூறு வைத்தியரிடமிருக்கிறது. அதைப் பெற்றுக்கொள். உன்னைப்போல் ஒரு மகனுக்குப் படிப்பை முடிக்கவேண்டிய பொருளைக் கொடுக்கக் கூடவில்லையே என்று வருந்துகிறேன். என்ன வறுமை!" என்று பெருமூச்சு விட்டனர்.

"தந்தையே, அதை நினைத்து வருந்துவதேன்? என்ன பாடுபட்டு என்னை வளர்த்தீர்கள்? தாயார் சென்றபின் கடந்த இரண்டாண்டுகளாய், இரவும் பகலும் எந்த நேரமும் எனக்காகத் தாங்கள் பட்டபாட்டை யாரறிவார்? என்னைப் பாலும் பழமும் இரவில் அருந்தச்செய்து, தாங்கள் சோறுந் தண்ணீரும் ஒளித்து உண்டதை இந்தக் கண்கள் பார்க்கவில்லையென்றோ நினைக்கிறீர்கள்? என்று யான் விளம்பினேன். இது கேட்டவர் நெடுநேரம் பேசவில்லை. மறுபடியும் பேசுவாரென்று காத்துக்கொண்டிருந்தேன். தந்தை மீளா நெறி சென்றார். வீடெங்கேயுளது எனக்கு? விடுதியிலுள்ள காலங்காட்டி மணி பத்தானதை யறிவித்தது. இறைவனே எனக்குத் தாயுந் தந்தையும். தாய் தந்தையர் உறைவிடமே வீடு. வீடு நமக்கிங்கில்லை. அங்கே செல்வேன் அதை நாடி.

முற்றும்.

Koviloor Digital Library

# மூதுரை

"இளவழகனுர்"

கல்வி இங்ஙனம் பயிற்சியினுல் மாட்சிமைப்படுதலோடு குணத்தினுலும் மாட்சிமைப் படுதல் வேண்டும். குணத்தினுல் மாட்சிமைப்படும்போதுதான் கல்வி பெருமையடைகின்றது. அதற்கு, அம் மாட்சிமை வாய்ந்த கற்றுரோடு மேனு மேலும் மனங்கலந்து பழகுதல் இன்றியமையாததாகும். நல்ல தோற்றமும் மணமும் வாய்ந்த தாமரை மலர்கள் நிறைய மலர்ந்துள்ள தெளிநீர்க் குளங்களில் நல்ல அன்னங்கள் சேர்ந்து வாழ்வதுபோலத், திறமையுங் குணமும் மிக்க பெருங்கல்வியாளரோடு, ஏனையோர் நெருங்கிக் கலந்துகொள்ளவேண்டும். குணமாட்சிமையில்லாதவர்களோடு கலந்துகொள்ளலாகாது. அது மூர்க்கரது செயல். இங்ஙனம் அறிவுரை கூற விரும்பும் ஔவையார்,

> நற்ரு மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்
> கற்ருரைக் கற்ருரே காமுறுவர்—கற்பிலா
> மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற்
> காக்கை உகக்கும் பிணம்.

என்று தெளிவுபடுத்தி விளக்குகின்ருர். பின் இரண்டடிகளில் மூர்க்கரைப்பற்றிய குறிப்பு வருவதனுல் முன் இரண்டடிகளிற் கூறிய 'கற்ருர்' என்பவர், திறமையோடு குணமாட்சிமையு முடையவராவர் எனக் கொள்ளுதல்வேண்டும். மலர்ந்து மணக்கும் நீர்ப்பொய்கைக்கும் கரிந்து நாறும் இடுகாட்டுக்கும் எவ்வளவு வேறுபாடு இருக்கிறது! அப்படியே, அழகிய வெண்ணிறமான மலருகக்கும் அன்னமெங்கே! இருண்ட கரு நிறமான பிணமுகக்குங் காக்கையெங்கே! அணுவுக்கும் மலைக்கும் உள்ள வேறுபாடன்ருே இவற்றிலுந் தெரிகின்றது! ஆகவே, கற்ருர், நிறைவடைந்த பெருங்கல்வியாளரோடு சேர்ந்துவிளங்குவது எவ்வளவு இனிமையும் பெருமையுமுடையதாயிருக்கின்றது!

Koviloor Digital Library



இங்ஙனம் மாசறக் கற்று நிறைவடைந்தால், அக் கற்றோருக்கு இணையானவர்கள் இவ்வுலகத்தில் யாரிருக்கிறார்கள்? அவர்களுக்கு இங்கே குறையென்பதுதான் என்ன இருக்கிறது? எல்லா வளங்களும் ஒருங்கு நிரம்பிய மன்னனும் அவருக்கு நிகராகமாட்டான். 'மன்னனையும் மாசறக் கற்றோரையும் சீர் தூக்கிப்பார்த்தால், மன்னனைவிடக் கற்றோரே சிறப்புடையவராவர். ஏனென்றால், மன்னனுக்குத் தன் தேசமல்லால் சிறப்பில்லை; கற்றவர்க்கோ சென்ற இடமெல்லாம் சிறப்பு' (உசு); காரணம், களங்கமற்ற உயர்ந்த பொதுமை மனப்பான்மை, கற்றவர்களுக்கு உண்டு; அவர்களுக்கு யாதும் ஊர்; யாவருங் கேளிர். ஆதலால், நிறைவடைந்த பெருங்கல்வியாளருக்கு இவ்வுலகத்தில் ஒரு குறையு மில்லையென்றே தீர்மானிக்கவேண்டும்.

பிறர்க்குப் பயன்படுந் திறமையும், பிறர் குறிப்பை அறிந்துகொள்ளுந் திறமையும், தனக்கே உரிய உயிர்த்திறமையும், குணமும், யாதும் ஊரே யாவருங் கேளிர் என்று பொதுமையாகக் கருதும் மனப்பான்மையும் என்னும் இத் திறமைகளே ஒருவனுக்குக் 'கல்வி' எனப்படுமென்பது இம் மூதுரைச் செய்யுட்களால் திட்டமாக விளங்குகின்றது. "வைத்ததொரு கல்வி மனப் பழக்கம்" என்னும் ஔவைபாரது தனிப்பாடலொன்றும் இங்கு நினைவுகூர்தற்குரியது. ஆகவே இச் சிறந்த மனப்பழக்கங்களாகிய மக்கட் பண்புகளை ஒருவன், கல்வியெனக் கருதிப் பயிலாமல், சில நூல்களை ஏட்டளவாகக் கற்றுக்கொண்டு அதனையே கல்விப்பயிற்சியெனக் கருதிக்கொள்வனாயின், அவனது நிலை எவ்வளவு ஏழைமையானதாயிருக்கிறது! கல்வியின் உண்மை நிலையை ஔவையார் இம் முறைமையில் நுட்பமாக உணர்த்துவது, அவர்க்கே உரியதான ஒரு பெருந் தனித் திறமையாகும். கல்வியை இம் முறைமையிற் பயின்று மாட்சிமைப்பட்டவர்களுக்கு உலகத்தில் ஏன் குறைவு வரும்? வெறும் ஏட்டறிவையே கல்வியறிவாகக் கருதிக்கொண்டு எவரையும் உலகமுறைமையையும் பொருள் செய்யாமல் முறைதவறிச் செல்வோர்க்கு, எங்ஙனம் எல்லா நலங்களும் உண்டாகும்? நலங்களுக்குரிய காரணங்கள் அவர்கள்பால் இல்லையே! அத்தகையோர் கற்றோருமாகார்; திருவள்ளுவரும்

Koviloor Digital Library



இவர்போன்றாரைக் "கல்லார் அறிவிலாதார்" என்று தெளிவாகவே கூறுகின்றார்; ஆகவே அத்தகைய கல்லாதாரைக் கற்றாராக நினைத்துக்கொண்டு, அவர்க்குச் செல்வம் முதலிய நலங்கள் உண்டாகாமையைக் கருதிக், 'கல்விச்செல்வம் உடையவர்களுக்குப் பொருட்செல்வம் உண்டாவதில்லை' என்று ஒரு தவறான எண்ணத்தைப் படைத்துக் கூறுவது எப்படிப் பொருந்தும்? உண்மையான கல்வியாளர்க்கு உலகத்தில் எல்லாச் செல்வங்களும் உரியவாகவே இருக்கின்றன. கூர்ந்து நோக்கினால், உண்மையான கல்வியறிவு உடையவர்களே உலகத்தில் நல்ல செல்வமுடையவர்களாக இருக்கக் காண்கின்றோம். மேலைத் தவமுடையவர்கள் இப்பிறவியில் ஏற்ற கல்வி நலம் உடையவராய்க், அக் கல்வியறிவின் வாயிலாக நிரம்பப் பொருள் நலம் படைப்பவராயிருக்கின்றனர். இதனாலன்றோ ஆசிரியர் திருவள்ளுவர், கல்வியறிவினாலேயே ஒருவன் உலகிற் பொருள்படைப்பது கூடும் என்னுங் கருத்தால், கல்வி, கேள்வி, அறிவு முதலான அதிகாரங்களைத் தமது திருக்குறளிற் பொருட்பாலின்கண் நிறுத்தி அறிவுறுத்துவாராயினர்!

"இருவே றுலகத் தியற்கை; திருவேறு;
தெள்ளிய ராதலும் வேறு"

என்னுந் திருக்குறளில், 'பொருளே நோக்கமாக வாழும் உலக வாழ்க்கை ஒன்று, தெளிவே நோக்கமாக வாழும் அருள் வாழ்க்கை ஒன்று; இங்ஙனம் இருவேறு நோக்கமாக உலகம் நடைபெற்றுச் செல்கின்றது' என்று அறிவுறுத்தப்பட்டிருக்கின்றதேயல்லாமல், 'கல்வி'யைப் பற்றி இங்கே குறிப்பது ஏதுமில்லை; 'கல்வி' இவ்விருவகை வாழ்க்கைக்கும் பொது. கல்வியறிவுகொண்டு பொருளே நோக்கமாகவும் உயிர் வாழலாம்; தெளிவே நோக்கமாகவும் உயிர் வாழலாம். உண்மை இங்ஙனம் இருப்பதனாலேதான், ஔவையார் இம் மூதுரையின் வாழ்த்துச் செய்யுளில், 'வாக்குண்டாம்' என்பதனாற் கல்வியறிவைக் குறிப்பித்து, 'நல்ல மனமுண்டாம்' என்பதனாலும் 'மாமலராள் நோக்குண்டாம்' என்பதனாலும் முறையே 'அக் கல்வியறிவுகொண்டு தெளிவையும் பெறலாம், திருமகள் நலத்தையும் பெறலாம்' என்று தெளிவுபெற அருளிச் செய்திருக்

Koviloor Digital Library



கின்றார். கல்வி இவ்விரண்டுக்கும் பொது என்பது இதிலிருந்து நன்றாகத் தெரிந்துகொள்ளலாம். ஏதாவது ஒரு நோக்கமாக வாழ்க்கை செலுத்துகிறவர்களுக்கு மற்றொரு நலம் குறைவதுபோலத் தோன்றலாம்; ஆனால் கல்வியாளர்கள் முயன்றால், அவர்கட்கு உண்டாகாத நலங்கள் எவையுமில்லை; இரண்டும் ஒருங்கே பெற முயன்றாலும் அந்நோக்கத்துக்கேற்ற அளவில் அவ்விரண்டும் அவர்கட்கு ஒருங்கே உண்டாவதிலுந் தடையில்லை.

கல்வியின் மெய்ந்நிலைமையைப் பயன்படும் முறையில் ஒளவையார் இம் மூதுரைச் செய்யுட்களில் எவ்வளவு நுட்பதிட்பமாக நன்றாக அருளிச்செய்திருக்கின்றார்! உலகத்தார்மாட்டு வைத்த அவரது பேரருளுக்கு எல்லையே இல்லை. தெளிவடைந்த நிலையிலுள்ள சான்றோர்கள் இங்ஙனமெல்லாம் மெய்ப்பொருள்களைத் தாமே உளங்குழைந்து அருளிச்செய்யாவிட்டால், உலகத்தில் ஏனையோர் உய்வதற்கு, வேறு முறைகளில் வழிகளுண்டோ?



Koviloor Digital Library

# இந்திய இயங்கோவியம்

"புலவர் பாண்டியனர்"

உலகம் முழுவதிலும் படக்காட்சி ஒரே படியாய் உயர் வடைந்திருக்கிறது. இந்தியாவிலும் ஏற்றம் பெறும் தொழில் களுள் இது எட்டாவது படியில் இருக்கின்றது. என்ருலும் ஏனைய நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பின் இந்திய இயங்கோ வியத் தொழில், பண்பிலும் பயனிலும் பெரிதும் பின்னிட்ட தே. நாம் இப்பொழுது செய்யவேண்டியது, நல்ல நிலையும் நயமான பயனும் அடையும்படி இத்தொழிலைச் செம்மைப் படுத்துவதேயாகும். அப்படியானல் இதை முன்னேற்றும் நோக்கமுடையார் மனதைச் செலுத்தவேண்டிய அடிப்படைச் சீர்திருத்தங்கள் எவ்வெவை? முதன் முதல் ஒரு படத்தின் வெற்றிக்கும் வீழ்ச்சிக்கும் காரணமான நடிகர்களைப் பற்றிய கேள்வியே எழும். இரண்டாவதாகப் படம் இயக்குவோரையும் எடுப்போரையும் (Director and Producer) பற்றிச் சொல்ல வேண்டும். அவர்களே நடிகர்களுக் குரிய தனித்தனி நடிப்புகளைக் குறிப்பிட்டுக் கொடுப்பதாலும் பழக்குவதாலும் படத்தை அழகுபடுத்தவோ பாழ்படுத்தவோ கூடும். கீழ் வரும் பிரிவுகளில் இந்திய இயங்கோவியத்தொழிலிலுள்ள சில குற்றங் குறைகளைக் குறித்து ஆராய்வதுடன், கூடுமானல், அவற்றை அகற்றவும் வழி வாய்க்கால்களை வகுத்துப் பார்ப் போம்.

## நடிப்புக் கதைகள்

மற்றைய நாடுகளில், நம் நாட்டில்போ லல்லாது, நடிப்புக் குழுவுள் உள்ள ஒவ்வொரு நடிகரின் நடிப்புத்திறனையும் ஏற் றத் தாழ்வையும் நன்குணர்ந்து கைதேர்ந்த புலவர்களே பட லங்களைப் பாங்குற அமைப்பர். கவலையின்றி மேலெழுந்த வாரியாய் ஒன்றும் எழுதமாட்டார்கள். எல்லாம் முறையாயும் ஒழுங்காயும் அமையும். ஆனல், இந்தியப் படங்கள் எப்படி? இயற்கையின் எழில் இன்றி ஏதோ ஒரு வரலாற்றை எவரோ ஒருவர் எழுதுகின்ருர். வரவர இப்பொழுது சில ஆண்டு களாய்ப், பல படக்கூடங்களில் அயல்நாட்டு வரலாறுகளை அப்

Koviloor Digital Library



படியே எடுத்து, இந்திய மொழிகளில் பெயர்த்தெழுதி ஓர் உண்மையும், இயற்கை எழிலும் இன்றிப் படம் பிடித்துவிடுகின்றனர். இப்படி எடுக்கும் படங்களின் அடிப்படையான குறைவுகளைப் போதுமான அளவு கண்டுபிடிப்பதில்லை. இதில் எழும் தடை யென்னவெனில், முற்றிலும் இந்தியப் பழக்க வழக்கமும், நடையுடை பாவனையும், அக்கம் பக்கக் காட்சியும் அமைக்க முடியாமையே. மேனாட்டு வாழ்க்கை முறைக்கும், கீழ் நாட்டு மேரை மரியாதை, ஒழுக்கமுறை, நாகரிகப் போக்கிற்கும் எண்ணமுடியாத வேற்றுமை இருப்பதால் இயல்பாகவே இவற்றைக் கடப்பது கடினமாகி விடுகின்றது. முடிவென்ன? படம் வெற்றி பெறுவதில்லை. ஏனெனில் ஏற்ற முறையில் பொருத்தமான வழியில், எடுத்துக்கொண்ட வரலாற்றை இனிது நடித்தெடுக்க முடியாது போகின்றது.

## எழுதுவோர் செயல்

சமூகத்திற்கும் சமூகச் செல்வநிலைக்கும் சளனும் சனியனும் நோயுமாகும் குழந்தை மணம், பரத்தைத் தொழில், எளிமைத்தனம், அலுவல் அமையாமை போல்வன, ஐயமின்றி நமது நாட்டின் நலத்தை அழிக்கும் நச்சுப் படைகளே. அவற்றை அடியோடு அகற்ற வேண்டியது இன்றியமையாமை ஆகும். இவை பற்றிய வரலாறுகளை வெகு பரிவுடன் கையாளுவதுடன், இரக்கத்துடன் எழுதவேண்டும். படங்களுக்குக் கதை கட்டுவார் கருத்தினில் அழுத்தமாய் இருக்க வேண்டியவற்றுள் இவை சில. இதுவரைக்கும் எழுதியவற்றை எண்ணிப் பார்க்கில், சரியானபடி கூறவேண்டுமானால், சமூக முன்னேற்ற வரலாறுகள் புனையப்பெறவில்லை என்றே கூறலாம். இன்னனம் சமூகச் சீர்திருத்தப் படக்கதைகள் வெளிவராததற்கு முதன்மையான காரணம் எழுதுவோர் இற்றைய சமூக நிலையையும் அதன் நல்ல தீய பழக்கங்களையும் பற்றிப் படிப்பதற்கும், அறிவதற்கும், உணர்வதற்கும் போதுமான கருத்து வையாததேயாம். படலம் பகுப்போர் இவற்றையெல்லாம் தங்கள் மனக்கண்முன் வைத்துக்கொண்டே சென்றால், கதையின் இடை இடையே பொருத்தமான நீக்கல் முறைகளையும் விலக்கல் விதிகளையும் வகுத்துச் செல்ல

Koviloor Digital Library



லாம் அன்றோ? இப்படிச் செய்வதால் பொது மக்களின் குற்றங்குறைகளை எடுத்துச் சொல்லுகின்ற முறையில், அறிவூட்டுவதுமன்றி இன்பமும் பயக்கச் செய்கின்றனர்.

## படமுதலாளிகள் கடமை:

இந்திய இயங்கோவியம் எழுப்புவோரும் தங்கள் படங்களில் இடையிடையே அங்கொன்று இங்கொன்றாய், இத்தகைய சமூகச் சீர்திருத்தத் துண்டுதுணுக்குகளைச் செருக இடம் பார்க்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் படங்கள் உண்மைக்கு ஒத்திருக்கும். உண்மைக்கு ஒத்த படங்களே சிறந்தனவாம். அன்றியும் ஒரு காரியத்தைப் பரவச் செய்யும்பொழுது, அப்படிப் பரவச்செய்கின்றோம் என்று மற்றவர்கள் மனத்தில் படாமலிருந்தால்மட்டுமே, அது நன்றாய்ப் பரவும்; பயனடையும். ஆகையால் படமுதலாளிகள் இத்தகைய எழுத்தாளர்களைக் கதை கட்டச் சொல்லி, அக்கதைகளைப் படமெழுப்பும் வாயிலாகச் சமூகத்திற்குப் பெருந்தொண்டு செய்யலாம். இவ்வழியாய் அவர்கள் வருவாயுங் கூடும். சிந்தாமணி, சேவாசதனம், அச்சுத்கனியா முதலியன இதற்கெடுத்துக்காட்டுகளாகும். உண்மையில் படமெடுப்போர், இந்தியத் தாயை இன்னும் மேலாகவும், இன்பமாகவும் ஆக்கமுயலும் அவள்தன் ஆண்பெண் மக்கட்குத் தங்கள் தொழிலைக் கையளிப்பது கடனன்றோ?

## நடிகர் நாடுதல்

இந்தியப் படமுதலாளிகட்குக் கடினமாய்த் தெரிவது இன்னொன்று. அது தகுந்த நடிகர்களைத் தெரிந்தெடுப்பதேயாகும். இரண்டொருவர் போக மற்ற நடிகர்கள் பெரும்பாலும், கல்லாத வகுப்பிலிருந்தும், கலைநலங் காணுக் கையர்களிலிருந்தும், நாகரிக நாற்றம் நாடாதார் நடுவிலிருந்தும் வந்தவர்கள் என்று வாயார வாய்மை உள்ளோர் கூறிவிடுவார். ஆகையினாலேதான் பெரும்பாலான நம் நடிகர்களும் நடிகைகளும், தெளிவாய்ப் பேசவோ, சரியாய் உச்சரிக்கவோ, எளிதாய் நடிக்கவோ முடியாமற்போகிறது என்பார்கள்; கூர்மதி

Koviloor Digital Library



படைத்தவர்களுங் குறைவே. இப்பொழுதுதான் வரவரப், படித்த இளவல்களும், குலமங்கையரும் படக்காட்சியில் நடிப்பதைத் தங்களின் வாழ்க்கை அலுவலாய்க் கொண்டுவருகின்றனர். இன்னும் வருங்காலத்தில் இயங்கோவியத்தின் உயர்வு, இத்தகைய கலைக்காளைகளையும், குலக் கொழுந்துகளையும் பொருத்ததேயாம்.

## பாட்டின் பகுதி

பாடுந் திறமைக்குத் தனிமுதன்மை பலமுறையிலுங் கொடுத்துவருகின்றனர். பாடும் படக்காட்சியாய் இருப்பதால் பாட்டுத்திறமைக்கு உயர்விடங் கொடுப்பதை மறுக்க முடியாது; உண்மை. ஆனால் அளவுக்கு மிஞ்சிய உயர்விடங் கொடுப்பது அடாது; ஏனெனில் பாடுந்திறன் பெற்ற எல்லாரும் நடிப்புத்திறனும் ஒருங்கே அமைந்திருக்க முடியாது என்பது நாமெல்லோரும் கண்டறிந்ததே. ஆகையினால் நடிப்பு இயக்குவோர், கேலிக்கிடமாய், நடிப்பும் ஒருங்கே அமையப் பெறாத தலைவன் தலைவிகளின் பாடல்களை இடை இடையே புகுத்திப் படங்களை அழகுபடுத்த நினைக்கக் கூடாது. அதற்கு மாறாகப் படமே பாழ்பட்டுப் போகும். "உள்ளதும் போச்சு, பிள்ளை பள்ளிக்குப் போய்" என்றெல்லோரும் கைகொட்டிக் கொல்லென்று நகைத்துவிடுவர். மேலும் இந்தியப் படமெடுப்போர், எப்படியோ, சிறிதும் வேண்டாத இடத்திலும் பாட்டைப் புகுத்தும் திறன், வரம், கொடை பெற்றிருக்கின்றனர். இது நம் படங்களிற், காணுந்தோறும் வருந்துவதற்கு இடமாகின்றது. அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு. சற்று எண்ணிப்பாருங்கள். ஒரு பெண் தன் கணவனோ அன்பனோ இறந்ததும், தன் கவலையைப் பாட்டு வழியாய்ப் பக்க மேள தாளங்களுடன் வெளியிட ஆரம்பிக்கிறாள். உள்ள உளைவும், ஓங்கிய நோவும், ஊறும் உணர்ச்சியும், ஒல்லா மயக்கமும், ஒவ்வாத் தளர்ச்சியும் மேலிடுங்கால், மேளதாளங்களுக் கிடை ஒத்துறுத்து, உரத்துங் கனைத்தும் உரப்பியும் பாடமுடியுமா என்று பலர் பற்காட்டிச் சிரிக்கவும், சீ சீ என்று வெறுக்கவும் இடமாகின்றது. 'சுவையே அழிந்தது; சூழலுந் தொலைந்தது; சுற்றுணர்ச்சியும் மடிந்

Koviloor Digital Library



தது' என்று முணுமுணுக்கின்றனர் சிலர். ஒருவேளை எல்லாம் இசை மயத்திலேயே இறப்பவும் இன்புறும் தமிழணங் கொருத்தி இயற்கை இன்பம் இன்றும் நடமாடும் நாட்டுப்புற நங்கைபோல், ஒப்பாரியும் புலம்பலும் ஊதலாம் என்றாலும், நன்கு படித்தறிந்தோர், அதை நாகரிகமற்றது, அவலச் சுவைக்கு அடாதது, அறிவுக் கொவ்வாதது என்றே ஒதுக்குவர். என்ன? பேசவும்முடியாமல், நாவெழாமல் நையும் அவ்வமையம் ஆழ்ந்த அமைதியும், தாழ்ந்த தன்மையும், இரக்கப் பார்வையும், தளர்ந்த நிலையும், வெருண்ட விழியும், சுழித்த வாயும், சோர்ந்த குழலும், வீழ்ந்த உடையும், கன்றிய கன்னமும், கருத்துக்குப் பொருந்திய முகச் சொல்லும் பொருந்தப் பெறுமானல், அதுவே பாட்டினும் பதின்மடங்கு நாவன்மையுடன், வந்த கேட்டை நவிலுமன்றோ ?

## நடிப்புத் திறன்

அளவுக்கு மிஞ்சிப் பாட்டிற்குப் படக்காரர் இடங் கொடுக்கிறார்கள் என்றோமே. அளவுக்கு மிஞ்சாவிட்டாலும் அதிக அளவுக் கவலை, நடிப்புத் திறனுக்கு நாட்டவேண்டும். அதுவே சிறந்த இயங்கோவியங்கள் எழச்செய்யும். நடிப்புத் திறன் ஒரு நன்கொடை. அது எல்லோருக்குங் கிடைக்கும் பிறவி உரிமையன்று. எளிதில் அடைய வல்ல செயற்கைச் செல்வமும் அன்று. வலிதிலும் வளமாய் வாங்கக்கூடிய வண்மைப் பண்டமும் அன்று. நடிப்புத்திறன் இயற்கை; செயற்கை யன்றே என்றாலும் இயற்கைத்திறன் செயற்கை நலத்தான் உயர்வுபெறும். ஆகையால் இயற்கையும் செயற்கையும் சேர்ந்த நடிகரே என்றும் செயல்பெறுவார்; செல்வமடைவர்; புகழுடைவர்.

## இயக்குவோர்

இதன்மேல் இயக்குவோரைப் பற்றிய கேள்வி கிளம்புகின்றது. நமது நாட்டிலுள்ள நடிப்பு நடத்துவோர் பலர்க்கு நடத்தலைப் பற்றிய ஆனா ஆவன்னா முதலாகத் தெரியாது என்பர். இப்படிப்பட்ட இயக்குவோரே எளிதாய்க் கிடைக்கக் கூடியவர்களாயிருப்பதால் இயங்கியின் வருவாயே கரு

Koviloor Digital Library



தும் முதலாளிகள், இவர்களை ஆவலாய்த் தேடிப்பிடிக்கிறார்கள். அது தற்கொலையாகிவிடுகிறது. ஏனெனில் இயங்கோவியக் கலையின் நுட்பங்களைக் கைத்தொழில் முறையிற் கையாள உயர்ந்த பழக்கமும், மனநிலைக் கலையில் தலைமையான அறிவும், மக்கள் வாழ்க்கையில் உண்மையான உணர்ச்சியும், நடிப்புத்திறனின் நலனும் நன்கமைந்த இயக்குவோரே பட எழுச்சியை வெற்றிபெற நடத்த முடியும் என்பதற் கையமில்லை. படத்தொழில் விழுந்திருக்கும் நொடியிலிருந்து வெளியேற வேண்டுமானால், படமுதலாளிகள் பணப் பேராசையைச் சிறிது மேற்கொண்டு தணிக்கவேண்டும்.

## காலச் செய்தி

படமெழுப்புவோர் கருத்தில் வைக்க வேண்டியது இன்னொன்று. அது படம் ஓடவேண்டிய நோக்கத்திற்கும், எடுத்துக்கொண்ட பொருளுக்கும், நடக்கும் இடத்திற்கும், எழுந்த காலத்திற்கும் தகுந்த செய்திகளையும் செயல்களையும் இடைப் பொருத்துதல். அது மக்கட்கு அரிய முறையில் அறிவூட்டும். "நம் எல்லா முன்னேற்றமும்—அரசியல், சமூகப், பொருள்நிலை—இறுதியில் நம் பொதுமக்களின் கல்வியறிவு நிலையைப் பொருத்ததாகும்" என்று பண்டித மணி சவகர்லால் நேரு கூறுகிறார். எனின், பேசும் படக் காட்சியைவிடப் பெரிதான கேள்வி இன்பமும் கல்வியறிவும் ஊட்ட வல்லது எது? ஏனெனில் குளிர்ந்த குரல் கேள்வியாலும், குறிபெறுங் கண் பார்வையாலும் கற்பிப்பது இயங்கோவியம் ஒன்றே. அரசியற் கொள்கைகளை அப்படியே பரப்புவதற்கு அமைந்த கருவி. ஏன் காலச் செய்திகளைக் கலந்து விடுவதில்லை என்றால், அத்தகைய செய்திகளைக் கேட்க விரும்புவாரும் மிகச் சிலரே. ஆனால் அரசியலார் அவ்வக்காலச் செய்திகளை அழகுற இடை அமைக்க நினைப்பூட்ட விழிப்பாயிருக்க வேண்டும். இதில் பொதுமக்களுக்கு ஒரு கடமை இருக்கின்றது. சிறந்த தன்மை வாய்ந்த படங்களையும் உயர்ந்த நடிப்பையும், சீரிய ஆயத்த முறையையும், மக்கள் விரும்புவார்களானால், படமுதலாளிகள் கொடுத்தே தீரவேண்டும். இவ்விதமாய்ப் பொதுமக்களின் இன்பமும் சுவையும், பொதுவில் படங்களின் உயர்வையும் செவ்விதாய் ஓங்கச் செய்யும்.

Koviloor Digital Library



## செம்மறியாடுகள்

இயங்கோவியத் தொழிலால் ஏராளமான பொருள் வருவாய் உண்டென்று, எண்ணிக்கை இல்லா முதலாளிகள் படமெழுப்ப எத்தனிக்கின்றார்கள். நல்லதே. ஆனால் அவர்கள் மேல் சுமந்துள்ள கடமையையும் அடிக்கடி அகத்துள் அறிந்து நினைப்பூட்டிக் கொள்ளவேண்டும். அவர்கள் நோக்கம் இயற்கையும் உண்மையும் புதிதுமான படமெழுப்புவதாய் இருக்கட்டும். செம்மறி யாடுபோல் சேர்ந்த இடத்திலே சேர்வதோ, விழுந்தான்மேல் விழு என்றாற்போல் எடுத்ததையே திருப்பித் திருப்பி வெவ்வேறு பெயருடன் படம் எடுப்பதோ பொதுமக்களைக் களைப்படையச் செய்யும்:

## படக்கூடங்கள்

புதுப் படத் தொழில் கூட்டங்களுடன், புதுப் படக்கூடங்களும் மண்டபங்களும் கிளம்புகின்றன. ஆகையால் புது முதலாளிகள் மெய்யாகவே நல்ல படம் எழுப்ப வேண்டும். இன்றேல், முதலாளியும், கூட்டமும், படக் கூடமும் பட்டுக் கொள்ளும்.

## முடிவு

இவ்வகையாக இந்தியப் படத்தொழில் தலைவர்கள் நல்ல நடிகர்களையும், கலைநுட்பங் கைவந்தோர்களையும், நன்கு இயக்குவோர்களையுங் கொண்டு சிறந்த படம் எழுப்புவார்களாக. அப்படியாயின், பொதுமக்கள் படப் பற்றுக் கொண்டோராவர். இயங்கோவியத்தில் இன்பம் வைப்பர். இயங்கோவியத்தின் இணையற்ற செல்வாக்கை, எவரே எடுத்தியம்ப முடியும்? இன்பந் தந்து களைத்த கருத்திற்கு இளைப்பாற்றி யளிப்பது எது? நல்ல கருத்துக்களை ஞாலம் முழுவதும் நல்ல முறையில் நடுவது எது? அறியா மக்களுக்கு அகவிருளகற்றி அறிவொளி வீசுவதெது? இடம் பொருள் ஏவற் கேற்பப் பேசியும், படித்தும், நடிக்கும் அழகமைந்த இயங்கோவியம் அன்றோ? புதுவது புனையும் விருந்தெங்கே (Novels), நாடக மேடை எங்கே, இசைக்கூட மெங்கே, இயல்மண்டபமெங்கே, பொம்மைக் கூத்தெங்கே, எல்லாம் இயங்கோவியத்தின்

Koviloor Digital Library



முன் பொம்மலாட்டமே; ஞாயிறுமுன் மின்மினியும், புன்னுனிப் பனியுமே. என்? இவையெல்லாம் ஒருங்கே படக் காட்சியில் அமைந்ததுதான் என்க. படத் தொழிலாளர்களே! புதிதும், புனிதமும் வாய்ந்த படலப் படிகளைப் பாருங்கள். அவை மேன்மேலும், புத்துணர்ச்சியையும், புத்தெண்ணங்களையும், புத்தித் தெளிவுள்ளங்களையும் எழுப்பட்டும். இம்முறைகளைக் கையாண்டுவந்தால், மற்றை நாட்டவரினும் மிக்கவராகாவிடினும், ஒத்தவராகவாவது கருதப்பெறுவமல்லமோ!

---

## நான் கண்ட மலர்

காலை யொருநாள் காவினுள் சென்றேன்<br>
நீல வானம் நோக்கி மலர்ந்த<br>
கடிமல ரொன்று கண்டெனைக் கூறும்;<br>
"அடிமை மகனே! ஆண்மை யிழந்தோய்!<br>
5 உனது வாழ்வும் வாழ்வில் சேர்மோ?<br>
உனக்கு மின்பம் உண்மையி லுண்டோ?<br>
வீர மில்லா வெற்றுடல் பெற்றாய்!<br>
பாரி லிழிவுப் பட்டம் பெற்றாய்!<br>
பெற்ற நாட்டின் பேற்றை யிழந்தும்<br>
10 முற்றிய மகிழ்வில் மூழ்கி வாழ்குவை!<br>
ஆமின் என்னிலை ஆய்ந்து நோக்கில்<br>
நீயும் என்னை நினைந்து புகழுவை;<br>
என்னை யாரு மிழிவு படுத்திடில்<br>
உன்னி வருந்தி யுணங்கி வாடுவன்;<br>
15 பொறுக்க இயலாப் பேரிழி வாகிடில்<br>
கறையில் உயிரைக் கடிதில் விடுவன்;<br>
எனினு முன்போ லிழிவில் வாழேன்!<br>
உனையே வேண்டுவ னுவந்து செய்யே;<br>
இன்னே செல்லுதி! இழிந்த உன்னிழல்<br>
20 என்னில் படுமேல் யான்மா சுறுவன்"<br>
என்றே யம்மலர் எனையோட் டியதே!

கோட்டாறு தே. ப. பெருமாள்.

Koviloor Digital Library

# ஆன்றோர் கண்ட அரசியல்

[வடிவை ஆ. மகாலிங்கம்]

ஆன்றோர் என்பார் யார்? இற்றைக்குச் சுமார் இரண்டாயிரம் யாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த தமிழ் மன்னர்கள் எவ்வாறு குடிகளைக் காத்து வந்தனர்? அவர்களது நீதிமுறைமை யாது? அவர்காலத்து மக்கள் மன்னர்பால் எவ்வித அறிவோடும் ஒழுக்கத்தோடும் வாழ்ந்து வந்தனர்? மன்னர்கள் வரி சுமத்தக்கொண்ட வழிகள் யாவை? அவற்றை அறிவுடைய குடிகள் எங்ஙனம் கீழ்ப்படிதலோடும் நடுவுநிலைமையோடும் செலுத்தினர்? அவர்கள் ஆணையால் போர்புரிந்த வீரச் செல்வர்களின் தன்மை யாது? போரின் திறம் யாது? என்பன ஒருசேர ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இரண்டாயிரம் யாண்டுகளின் முன்னர்த் தமிழ்நாட்டைப் புரந்த உயர்குலத் தோன்றல்களே ஆன்றோர் எனப்படுகின்றனர் சிறப்பாக. அன்னார் வரலாறுகளைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய நூல்கள், போதியமுறையிலல்லாவிடினும், ஒருவாறு தெள்ளத் தெளியச் சான்றுடன் பகர்கின்றன. திருக்குறள் எனும் அறிவுநூலின் அரும்பெருங் கருத்துக்கள், புறநானூறு முதலிய அரசியலைப்பற்றிக் கூறும் நூற் கருத்துக்களைப் பலவகையாக எடுத்துக் காட்டுகின்றன. எனவே மேற்கூறியவை போன்ற நூல்களினின்றும் நோக்குவோம்.

> நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
> மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
> ஆதலால் யானுயிர் என்ப தறிகை
> வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே.

—புறம்.

நெல்லின் நல்விளைவால் மக்கள் தங்களது வாழ்வை வீழ்வெய்தாது காத்தல் இல்லை. அதுபோன்றே நீரும் என்னலாகும். ஆனால் அகன்ற பரப்பைத் தன்னகத்தேயுடைய இவ்வுலகத்திற்கு, நடுவுநிலை யொருவாது, "பால் புளிப்பினும், பகல் இருளினும் நால்வேதம் நெறிதிரியினும்" தன் நிலை திரியாது

Koviloor Digital Library



தன்னுயிர் போன்று மன்னுயிர் காக்கும் அரசனே ஆருயிராவான். ஆகலின் ஒவ்வொரு பண்டை மன்னரும் தங்களை மக்களது உயிர் என்றெண்ணினர். உயிரிலாது உடலியங்காமைபோல, மன்னனில்லாது போயின் மன்பதையே நிலைத்திராது என்ற உயர்நோக்குடன் வாழ முன் வந்தனர். உயிர்களை அழியாது காக்க விரும்பிய மன்னவன், நம்பி வாழ்வாரைச் செவ்விய முறையிற் பாதுகாக்கும்வண்ணம் நாட்டைப் புரந்தனன் என்பது தெள்ளிதின் தென்படவில்லையா?

அக்காலத்தரசர்கள் நீடியகாலம் இன்னலின்றி நாட்டினை ஓம்பல் வேண்டுமென்ற விருப்பத்தால், குடிகளும் அவர்களோடு ஒத்துழைத்தனர்.

"மன்னுயிர் எல்லாம் நின்னஞ் சும்மே" என்றார் ஒரு புறநானூற்றுப் பெரியார்.

நடுவுநிலைமை தவறாது நாட்டுமக்களைப் புரத்தல் என்னும் உயரிய செயலை மன்னர்கள் சிறந்த வொழுக்கமாகக் கொண்டனர். நீதி தவறிய மன்னர், பிழையுற்றதை அறிந்து மண்ணொடொழித்து விண்ணுடேகினர் என்றறிகின்றோமேயன்றி, குற்றமுற்று அவ் வழியிலே மீண்டும் உயிரோடு இருந்தனர் எனக் காண்டல் அரிதினும் அரிதாகும். முந்தித் தவம் கிடந்து முன்னூறு நாட்சுமந்து அந்திப் பகலாய் வந்தித்துப் பெற்ற அரும்பெறல் அன்னையாகினும்—ஒரு பிழை யியற்றினால் அயலாரைப் போன்றே தண்டிக்கப்படுவள். அவ்வாறு செய்வதில் தம்முயிர்க்குறுதி எண்ணிலர். குற்றம் செய்ததாகக் காணப்படுபவரை நேரிலே சென்று பலவாறு முயன்று உண்மை காண ஆராய்வர். அதில் 'எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும், எப்பொருள் எத்தன்மைத்தாகினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பர்'. தண்டனை விதிப்பதிலோ அன்றி முறைமை கூறுவதிலோ கழுவாயில்லாத தவற்றை இயற்ற நேர்ந்துழி என்ன செய்தனர் என்பதற்குக் கீழ்க்கூறும் பொய்யிற்புலவன் புகழுரையே போதிய விடையளித்தல் காணலாம்.

"எற்றென்று இரங்குவ செய்யற்க, செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று."

இதற்கு மணக்குடவர் உரையே சாலும்.

Koviloor Digital Library



இத்தகைய சீர்மையை மேற்கொண்டு மன்னர்கள் பெயரும் புகழும் எய்தினர்.

இன்னும் தண்டனை எவ்வாறு விதிக்கப்பட்டது என்று அறிதலும் வேண்டுவதாகும். அதற்கும் தென்மொழிப்புலவனே விடை அளிக்கின்றான்.

"கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்."

தமது செல்வம் குறைந்துபோகாது பலநாள் நிலைத்து நிற்றலை விரும்பிய மன்னர் குற்றம் செய்தார் அஞ்சும் வண்ணம் பல கூறி, இறுதியில் சிறிதான தண்டனையே கொடுத்தல் சாலும். ஏனெனில், "பல் குழுவும் பாழ் செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும் கொல் குறும்பும் இல்லது நாடு" என உலகினர் போற்றுதல் வேண்டாவோ?

தங்களது அரசியலுக்கு இன்னலியற்ற வேண்டுமென்ற கெட்ட நோக்கத்தோடு பாடுபடுபவரை "ஒற்றும் உரைசான்ற நூலும் தெற்றென்க மன்னவன் கண்" என்றாற்போல ஒற்றர்களால் அறிந்து முளையிலே இல்லாது செய்வர். இதனைத் திருக்குறளாசிரியர் ஓர் உவமை முகத்தான் விளக்குவாராயினர்.

"இளைதாக முள்மரம் கொல்க, களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து."

இங்ஙனம் ஒழுக்கமே விழுப்பமெனக் கண்ட சான்றோர் குடிகளினின்றும் வரிபெற்ற முறைமை அறிதற்பாலது.

"மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்
உரம்சாச் செய்யார் உயர்தவம் வளங்கெடப்
பொன்னுங் கொள்ளார்.... ..........''

—நற்றிணை, 226.

இவ்வுலகத்து யாராகினும் தாம் வருந்தி வளர்த்த மரத்தினுள்ள சாற்றை அம் மரம் கெட்டுவிடும்படி முழுமையும் எடுத்துவிடுவார்களா? அதுபோன்று மன்னரும் தம் குடி

Koviloor Digital Library



யிடத்து வருத்தத்தை யுண்டுபண்ணி வரி வாங்குபவரல்லர். நற்றிணையிலே பலவிடத்தும் போற்றப்படும் அறிவு சான்ற பெரியார் 'கணிபுன்குன்றனர்' என்பாரது வாய்மொழி ஆக லின் அதன் உண்மை ஆராய்தற்குரியது.

இதுபோன்று புறநானூற்றிலும், வருகின்றது. 'விளைந்த நீண்ட வயலைக் காண்கிறோம். அது நூறு செறுவாகினும் வலிமை மிக்க யானை யொன்றை அதன் விருப்பப்படி உண்ண விடுவோமாகில் சிறிது போழ்தத்து அது வயல் முழுவதும் அழித்துத் தனக்கும் வயிறு நிறையாதவாறு நிற்கின்றது. ஆனல் ஒரு சிறு அளவினதாக இருப்பினும் அவ் வயல் நெல்லை அறுத்துக் கவளங் கவளமாக ஆக்கிக் கொடுத்தால் பன் னெடுநாள் உண்டு இன்பமாக வாழும். அதேபோன்று மன் னரும் மக்களிடத்து ஒழுக்கமுறை தவறி நடுவுநிலைமை விடுத்து ஏவலாளர் பலரை ஏவி, வரிபிரித்து வரச்சொன்னல் யானை பட்டபாடேயாகிவிடும். இறுதியில் அவனைச் சார்வது ஒரு சிறிதேயாகும். அதற்கு நேர்மாருக, உகந்த முறையிலென்றால், அதனினும் பன்மடங்கு துன்பமின்றிக் கிடைக்க இன்பமாய் இருக்கலாம்' என்பது.

மன்னர்கள் ஆணையால் போர்செய்த வீரர்களின் திறம் விளக்கும் இடங்கள் பல. போர்முனையகத்தே ஓர் வீரன் கூறு கின்றான்.

'மாற்றான் படையிலுள்ள படைஞனே! எனது தலைவன் முன் நில்லாதே. ஏனென்றால் உன்னைப்போன்று வீரர்கள் நின்று இறந்துபட்டு இதுகால் கல்லாகிவிட்டனர்' என்பது. என்னே அவன் வீரமொழியின் திறம்.

"என்ஐமுன் நில்லன்மின் ; தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர்.'

—குறள்

இன்னும் உடம்பிற் போர் செய்வதினு லுண்டாகும் புண் காணப்படாவிட்டால் அவர்க்கு அந்நாள் வீழ்நாளாகவே விளங் கும். அவர்கள் தக்க சான்றோராகலின் இசையும் எனினும்

Koviloor Digital Library



இசையா தெனினும் வசைதீர எண்ணுவர். கான முயல் எய்த அம்பினில் யானை பிழைத்தவேல் ஏந்த முற்படுவர். கைவேல் களிற்றொடு போக்கி மெய்வேல் பறியா நகுவர்.

மன்னர்கள், வீரர்களைத் தவிரத் தாமும் சலிப்பின்றிப் போர் செய்ய முன்வருவர். போகும்போதே உறுதிமொழி கூறிச் செல்வர். இது, பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாடிய புறநானூற்று எழுபத்திரண்டாம் செய்யுளால் நன்றாக அறியப்படுகின்றது.

"........சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎன் ஆயிற், பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியன்எம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலே னாகுக........
புலவர் பாடாது வரைகஎன் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையா னுறவே"

இத்தகைய வழக்கம் உலகம் புகழும் சேக்குவீயரும் கையாளுதல் அறிந்து இன்புறுதற்குரியது.

"........then let mine eyes not see"

திறமையான புலமையாகலின் அன்றோ, வெளிநாட்டார் அதை வணக்கஞ் செய்தனர்.

இவ்வாறு பற்பல விடங்கள் காணப்படுகின்றன. அறிஞர் அஃகி அகன்ற அறிவொடு அவற்றை நுண்பொருள் காணும் உயரிய விருப்புடன் முயன்று கற்பார்களாயின், இன்னும் அரிய கருத்துக்களும் ஆன்றோர் ஆண்ட அரசியல் முறைகளும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறியலாகும் என்பது அறிவுடை நூல்பல அமைவுறக் கற்றோர் துணிபாகும்.

---

Koviloor Digital Library

# வாணிகச் சாத்து

"இராவ்பகதூர் சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியார், B.A., B.L."

சாத்து என்ற சொல்லுக்குத் 'திரள்' அல்லது 'கூட்டம்' என்று பொருள். முற்காலத்தில் வாணிகர்கள் வாணிபம் செய்வதற்காகத் திரளாகச் செல்வது வழக்கம். அக் காலத்தில் நாட்டில் அமைதியும் பாதுகாப்பும் குறைவாக இருக்கும். வழியில் ஆறலைப்போர் மிகுந்திருப்பர். ஒரு நாட்டை விட்டு மற்றொரு நாட்டிற்குச் செல்லுகையில் அரசியலாரின் பாதுகாவல் மிகக் குறைவாக இருக்கும். அவ்வித நிலைமையில் வாணிகர்கள் விலைபொருந்திய பொருள்களை எடுத்து ஏகும் போது திரள் திரளாகச் செல்வது இன்றியமையாத ஒரு செயலாகும். அவ்வாறு திரளாகச் செல்லும்போது ஒருவர்க்கொருவர் பாதுகாவலாகவும் ஒத்தாசையாகவும் இருப்பர். மேலும் காவலுக்காக ஆயுதங்களையும் எடுத்துச் செல்வர். இவ்வாறு செல்லும் திரளுக்குச் சாத்து என்று பெயர். இச்சொல் பண்டைத் தமிழ் நூல்களில் எடுத்தாளப்பட்டுள்ளதை இனி எடுத்துக் கூறுவோம்.

முற்காலத்தில் தமிழ் நாட்டில் வழக்கில் இருந்த இவ் வணிகமுறை இக்காலத்திலும் மேற்கு ஆசியா, வட ஆப்பிரிக்கா நாடுகளில் வழங்கிவருகிறது. பாரசீகம், அராபியா, சூடான், சகாரா இடங்களில் வாணிகர்கள் பெருங் கூட்டங்களாகச் செல்வர். அந் நாடுகளில் அரசியல் திட்டம் இன்னும் தகுந்த நிலை அடையவில்லை. அமைதி கிடையாது. பெரும்பாகம் பாலைவனமாக உள்ளது. அங்குப் பெடுவேன் (Bedun) என்ற நாடோடி வகுப்பார்கள் குடி இருப்பார்கள். அவர்கள் எந்த அரசியலுக்கும் அடங்காது கொள்ளைத் தொழிலிலேயே பிழைத்து வருபவர்கள். ஆகவே, அவர்களிடம் தப்பிப் பிழைப்பதற்காகவே அந் நாட்டு வணிகர்கள் கூட்டம் கூட்டமாகச் செல்வர். அந்நாடு மணல்பாங்கான நிலமானதால் சரக்குகளைச் சுமந்து செல்வதற்கு ஒட்டகங்களைப் பயன்படுத்தி

Koviloor Digital Library



வருகிறுர்கள். ஆள் ஏறிச் செல்வதற்குப் பெரிய குதிரைகளைப் பயன்படுத்திச் செல்வார்கள். பாதுகாவலுக்காகக் கத்தி, கேடயம், துப்பாக்கி முதலிய ஆயுதங்களை உடன் எடுத்து ஏகுவார்கள். ஒவ்வொரு வணிகத் திரளில் 40 முதல் 1000 ஒட்டகங்கள் வரையிற் செல்வதுண்டு. முகம்மது நபியின் வரலாற்றை வாசித்தால் இப்படிப்பட்ட கூட்டங்களுடன் அவர் பயணம் செய்தார் என அறியலாம். அரபிக் கதைகளை வாசித்தாலும் இக் கூட்டங்களைப் பற்றி அறியக்கூடும். இப்போதும் மெக்கா நகரத்திற்கு யாத்திரையாகச் செல்லும் யாத்திரிகளும் இவ்வகைக் கூட்டங்களுடனேதான் செல்லவேண்டும். அந் நாடுகளில் யாத்திரைக் கூட்டங்கள் பெரும்பாலும் வணிகக் கூட்டத்துடனே செல்லுமாம்.

இக் கூட்டங்களுக்குக் (Caravan) காரவான் என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள். அச்சொல் கார்வான் என்ற பாரசீகச் சொல்லிலிருந்து வந்ததேயாம். கார்வன் என்ற பாரசீக மொழிக்கு வணிகன் என்று பொருள். வட இந்தியாவிலும், சிந்து, இராசபுதனம் பாலைவனங்களில் இவ்வித காரவான்கள் இப்போதும் செல்வதுண்டு. முதன்மையாகப் பாரசீகம், துர்கித்தானம், ஆப்கானித்தானம் முதலிய நாடுகளிலிருந்து வடமேற்கு மாகாணத்தில் உள்ள பெஷாவருக்கு வரும் வணிகர்கள் இவ்வித காரவான்களாகத்தாம் வருகிறுர்கள்.

இவ் வணிகக் கூட்டங்கள் செல்லும்போது சில கெடித்தலங்கள் அல்லது தங்குமிடங்கள் உண்டு. அங்கே சதுரமான கட்டடங்கள் அமைத்திருப்பார்கள். நடுவில் பெரும் முற்றமும் சுற்றிலும் சிறந்த அறைகளும் வைத்துக் கட்டியிருப்பார்கள். இங்கே வணிகர்கள் தங்கிப் போவதுண்டு. முற்றத்தில் குதிரை, ஒட்டகம் கட்டுவார்கள். அங்கே ஒரு நன்னீர்க் கிணறு இருக்கும். அறைகளில் வாணிபர்கள் இளைப்பாறுவார்கள். இக் கட்டடங்களுக்கு வாயில் ஒன்றே இருக்கும். பாதுகாவல் நன்ருக இருக்கும். வணிகர்கள் வாடகை செலுத்துவார்கள். தண்ணீரைத் தவிர வேறு வசதி கிடைப்பதில்லை. வர்த்தகர்களே வேண்டிய சரக்குகளை உடன் எடுத்துச் செல்வார்கள், இவ்வித விடுதிகளுக்குக் காரவான் சாரை என்று

Koviloor Digital Library



பெயர் வழங்குகிறது. அதாவது வணிகர் விடுதி என்பது பொருள்.

அந்நாடுகளில் வணிகர்கள் தனியாகச் செல்லமுடியாது. காரவானுடனேதான் செல்லவேண்டும். அக் காரவான் புறப்படு முன்னர்ப் போய் அதனுடன் சேரமுடியாமல் போனால் அவன் பயணம் நின்றுவிடும். காரவானுடன் சச்சரவு செய்துகொண்டாலும் அவனுடைய நிலைமை கெட்டு விடும். ஆகவே, காரவானுடன் ஒத்துப்போவதே ஒரு வாணிக னுடைய கடமை. அதனுடைய விதிகளைத் தழுவி நடப்பதே அவனுக்கு நன்மை. ஆகவே ஒருவன் குறித்த காரியத்தை அடையவேண்டும் என்றால், காரவானுடன் ஒத்துப்போவது என்ற சொல் ஒரு பழமொழியாக ஆகிவிட்டது. இதனைத் தமிழிலும் காணலாம்.

காரவான் என்பதன் சரியான தமிழ்ச்சொல் சாத்து என் பது ஆகும். அக்காலத்தில் இவ்வழக்கம் எல்லா நாடுகளிலும் இருந்ததனால் இலக்கியத்திலும் அது வந்துவிட்டது. பண் டைத் தமிழ் நூல்களில் பல இடங்களில் இச் சொல் வந் திருக்கிறது.

மணிவாசகப் பெருமான் இச் சொல்லை வழங்கியிருப் பதில் ஒருவகைச் சிறப்பு இருக்கின்றது. அப் பெரியார் அமைச்சராக இருந்தபோது கடற்கரைத் துறைமுகத்திற்கு யவனர் கொண்டுவந்த குதிரைகளை வாங்கச் செல்கிறார். அங்கே வந்த யவனக் கூட்டங்கள் பாலைவனத்தில் வாழ்ந்த வர்கள். அரபிக் குதிரைகளைக் கொண்டுவந்தார்கள். குப்பாயம் அணிந்தவர்கள்.

இப்போதும் குதிரை விற்கும் அரபியர்கள் இக்கோலத் தையே பூண்டிருக்கிறார்கள். அவர்கள் கூட்டங்களாகச் செல்லுகிறவர்கள். ஆகையினால் அவர்களுடைய முறை வாணிகச் சாத்து ஆகும். பின்னால் குதிரை கொண்டுவந்த பரி மேல் அழகரும் சாத்தாகத்தான் வருகின்றார். அவ்வாறு வந்துதான் மணிவாசகனாரை ஆட்கொள்ளுகிறார். ஆகவே, தான் அவரைக் குறிக்கையில்,

Koviloor Digital Library



"குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்"

—(கீர்த்தித் திருவகவல்-28)

என்கிருர். (குட நாடு - மேற்கு நாடு, அரபி தேசம் - யவன நாடு என்று அறிக.) இதனையே அகத்துறையாகத் திருவார்த்தையில்

"எங்கள் பிரான்இரும் பாசந் தீர
இகபர மாயதோர் இன்ப மெய்தச்
சங்கங் கவர்ந்துவண் சாத்தி னேடும்
சதுரன் பெருந்துறை யாளி அன்று
மங்கையர் மல்கும் மதுரை சேர்ந்த
வகையறி வள்ளம் பிரானு வாரே—"(10)

என்று கூறுகின்ருர். இங்கும் பரிமேல் அழகனுகக் குதிரைகளை இட்டுக்கொண்டு வாணிகச் சாத்திேனுடு மதுரைக்கு வருகின்ற முறையை மிக அழகாக எடுத்து ஆண்டிருக்கின்ருர்.

இச்சாத்து இக்காலத்தில் அராபியாவில் மக்கா நகர் யாத்திரைக்குப் பயன்படுவதைப்போல் அக்காலத்திலும் யாத்திரைக்குப் பயன்பட்டுவந்தது. அதனை யாத்திரைப் பத்தில் மணிவாசகர் உருவகமாகக் கூறுகிருர்.

"விடுமென் வெகுளி வேட்கைநோய்
மிகவோர் காலம் இனியில்லை
உடையான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ
டடன்போ வதற்கே ஒருப்படுமின்."

(யாத்திரை—5)

உலக யாத்திரை அன்று; பரலோக யாத்திரை. அதற்குச் சாத்தோடு செல்லவேண்டும். அச் சாத்து உடையான் தலைமையில் செல்லுகிறது. அத் தலைவன் இடும் விதிகளுக்கு அடங்கிச் செல்லவேண்டும். காலம் தாழ்ந்தால் அச் சாத்து ஏகிவிடும். ஆகவே இதுவே காலம் வேறு இல்லை என எச்சரிக்கை செய்கிருர். இப் பொருள் சாத்தின் வழக்கங்களுக்கு

Koviloor Digital Library



உட்பட்டிருப்பதைக் காணுங்கள். இதனை அறியாதார் சாத்து என்ற சொல்லுக்கு வேறு பொருள் உரைத்திருக்கின்றனர்.

இனி வேறு சில மேற்கோள்களை எடுத்துக் காட்டுவோம். சிலப்பதிகாரத்தில் காடுகாண் காதையில்

"மதுரை மூதூர் மாநகர்ப் போந்த
தெதிர்வழிப் பட்டோ ரெனக்காங் குரைப்பச்
சாத்தோடு போந்து தனித்துயர் உழந்தேன்"

என்ற அடிகளுக்கு அடியார்க்கு நல்லார் "நீங்கள் மதுரை என்னும் மூதூராகிய நகரை நோக்கிப் போந்ததனை வழியி லெதிர்ப் பட்டேன். எனக் குரைத்தலானே வாணிகச் சாத்தோடு போந்து தனிமையால் யான் துயருழந்தேன்." என்று பொருள் கூறுகிறார். இதனால் தனிமையில் செல்லும் மக்கள் பாதுகாவலுக்காக வாணிகச் சாத்தோடு செல்வதுண்டு என அறியலாம்.

இனிப் பெரும்பாணாற்றுப்படையில்

"அணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
வில்லுடை வைப்பின்."

என்று காண்கிறோம். இதற்கு நச்சினார்க்கினியர் "கழுதையிலே மிளகெடுத்துக் கொண்டு போகின்ற திரளோடே வம்பலர் வழங்கும் பெரிய வழிகளில் கவர்த்த வழிகளையும் காத்திருக்கும் ஊர்." என்று பொருள் கூறுகிறார். இந்த வணிகச் சாத்தில் கழுதைகள் சரக்குகளைச் சுமக்கின்றன. உல்கு என்றால் சுங்கம். பெருவழிகளில் சாத்து சென்றால் அதனிடமிருந்து அரசியலார் சுங்கம் வாங்கி வந்த வழக்கம் இங்குச் சொல்லப்பட்டிருக்கிறது. சிந்தாமணியில்,

"ஆயிடைத் தாளின் ஊக்குபு சாத்தோ டெழுந்தவே" (1775) என்றதற்கு "எருது முதலியன காலாலே முயன்று அவ்விடத்துப் போகின்ற சாத்துடனே போயின" எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. இதனால் சாத்தில் எருது,

Koviloor Digital Library



குதிரை, கழுதை, ஒட்டகம் முதலிய விலங்குகள் சரக்குகளைச் சுமந்துகொண்டு ஏகும் என அறிவோம். அப்படிப்பட்ட எருதைப் பொதி எருது என்று இக்காலத்திலும் வழங்குகிறார்கள்.

இனி, தமிழ்ப் பேரகராதியில் (சர்வகலாசங்கம்) சாத்து என்ற சொல், 'சார்த்தா' என்ற வடமொழியிலிருந்து வந்தது போலக் குறிக்கப்பட்டுள்ளது. எவ்வாறு இது வந்தது என்று விவரமாகக் குறிக்கவில்லை. முன்னரே கூறியபடி இச்சொல் தமிழர் கொண்ட ஒரு வழக்கத்தைக் கூறும் சொல்லாகும். எல்லா நாடுகளிலும் இவ்வழக்கம் இருந்ததாகையாலும் சங்க நூல்களிலும் உள்ளதாகையாலும் இச் சொல் வேறு ஒரு மொழியிலிருந்து வந்தது எனச் சொல்ல இடமில்லை என்று உறுதியாகக் கூறலாம்.



Koviloor Digital Library

# கம்பநாடரும் உடன்பிறப்பு நோக்கத்தின் உண்மையும்

வித்துவான் S. ஆறுமுக முதலியார் M.A., L.T.
(உரிமை ஆசிரியர்க்கே)

பண்டைக்காலத்திற் சமயங்கள் பலவாக இந்நாட்டில் அமைந்திருப்பினும், தாயுமான முனிவர் கூறியபடி. "காகம் உறவு கலந்துண்ணும்" தன்மையும், "பேரின்ப வெள்ளத்தைப் புசிக்கச் சேரவாரும் செகத்தீரே" என்று கூவியழைக்கும் அருட்டிறமும், "யாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்" என்னும் பரந்த நோக்கமும், தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் பெருமையும், "தாமின்புறுவது உலகின்புறக் கண்டு காமுறுகின்ற" பான்மையும், பிறவும் மக்களிடைக் களிநடம் புரிந்தன. ஒரு நாட்டின் பண்டை நிலையை யறியச் சிறந்த சான்று அக்காலத்திய புலவர்களும் அன்னார்தம் நூல்களு மாதலின், அக்காலத்திய நூல்களிலிருந்து ஒரு சில சான்றுகள் தருதும்; மணிமேகலையில் சமயக் கணக்கர் தந் திறங் கேட்ட காதையை எடுத்துப் பார்த்தால், சைவ வைணவ, பௌத்த, சமண சமயங்களும் பிறவும் ஒருங்கே பக்கத்தே பக்கத்தே ஒற்றுமையுடன் தழைத்தோங்கிய பெருமையைப் பார்க்கலாகும். சமயப்பிணக்கங்களும் பூசல்களுமில்லாமல் இச் சமயங்களெல்லாம் ஓங்கிவளர்ந்தன என்பதற்குச் சிலப்பதிகாரமும் சான்றுபகரும். பல சமயக்கோயில்களும் அடுத்தடுத்து அமைந்து கிடந்த பான்மை இந்நூலிலிருந்து விளங்கும். இதனாசிரியராகிய சேரர்கோமானின் பொதுமைப் பான்மையை என்னென்று கூறுவது? ஆய்ச்சியர் குரவையைப் படிப்போர் இவர் திருமால் அடியாரான ஆழ்வார்களுள் ஒருவர்தாமோ என்று ஐயுறுவர். சிவத்தைப் பற்றிய தொடர்களைக் காண்போர் இவரும் ஒரு நாயனாரோ என்பர். கவுந்தியடிகளின் அன்புத்திறத்தை விளக்கும்போது ஆசிரியரை ஒரு சமணசமயத் 'தீர்த்தங்கர'ராகவே நாம் காண்கிறோம். வேட்டுவவரியைப் படிப்போர் இவர் 'சாக்தேய மதத்தவ'ரோ என்னலாம். மற்றுமொரு சான்று பகரவேண்டின், சிவபெருமான், திரு

Koviloor Digital Library



மால், முருகக்கடவுள் முதலியோர்க்கும் ஒருங்கே வேற்றுமை யின்றி வாழ்த்து வணக்கச் செய்யுட்களமைத்த பாரதம் பாடிய பெருந்தேவனாரைக் கொள்ளலாமன்றோ?

மக்களும் சிறந்த ஒழுக்கமுடையோராய்த் தாளாண் மைக்கு, உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசாமல் சொன்னபடியே நடந்துவந்தனர். பிறரையும் குலம் சாதி பற்றி இகழாமல், எல்லோரையும் ஒருங்கே நேசித்து எங்கெங்கு உண்மை, உயர்குணம், ஒழுக்கம், பெருமை முதலியவை உள்ள னவோ அவற்றையெல்லாம் போற்றிவந்தனர். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்போம்.

"உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வில
ரன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே."

என்பது புறநானூற்றுப் பாடல்களில் ஒன்று. இதிற் கூறப்படும் குணநலத்தையும், உயர்ந்த பண்புகளையுங் கொண்டுள்ள தனக் கெனவாழாப் பிறர்க்குரியாளரைத் தன்னகத்தே உடைய ஒரு மக்கட்கூட்டம் எவ்வளவு மேன்மை யடைந்திருக்க வேண்டும்? அம் மக்கட் கூட்டத்தையுடையநாடு எவ்வளவு பெருமையுடன் விளங்கியிருக்க வேண்டும்? "யாது மூரே யாவருங் கேளிர்" என்று மற்றொரு புறப்பாட்டின் முதலடியில் எவ்வளவு ஆழ்ந்த கருத்தும் பரந்த நோக்கமும் பொதிந்து கிடக் கின்றன!

(10) பொது நோக்காளிகளின் ஏறு எனத் திகழும் திரு வள்ளுவர், கடைச்சங்ககாலத்துக்குப் பிறகு வந்த பிற்காலப் புலவர்கள் எல்லோருக்கும் ஒரு சிறந்த வழிகாட்டியாயும், எடுத்

Koviloor Digital Library



துக் காட்டாயும் இருந்தார் என்றே கூறிவிடலாம். திருவள்ளுவர்தம் கருத்துக்களையும், எண்ணங்களையும், சொற்களையும், சொற்றொடர்களையும், குறள்களையும் பொன்னேபோற் போற்றித் தத்தம் நூல்களிற் பெய்துவைக்காத புலவர்களும் சமய ஆசிரியர்களும் அன்றுதொட்டு இன்றுவரை உளரோ நம் நாட்டில்? திருவள்ளுவர், தாம் கூற வந்த செய்தியைத் தமிழ்நாட்டார் மட்டுமன்றி உலகோரனைவரும் ஒப்புக் கொள்ளுமாறு பொதுமை ததும்பி ஊற்றெடுத்தோடி அனைவரும் அள்ளிப் பருகி உய்யப் பொதுமறை எழுதிய ஒரு பெருமையை நினைக்க நினைக்க உள்ளம் உருகாநிற்கும். உவகை ஓங்கி ஏழாநிற்கும். பிறப்பினால் உயர்குலம், உயர்சாதி என்று பெயரளவில் நிற்கும் போலி உயர்வுகளுக்கு இடந்தராமல், உண்மையான ஒழுக்கத்தையும் அதன் விழுப்பத்தையும் உலகினர்க்கு வற்புறுத்தி, உடன்பிறப்பு நோக்கத்தை உலகில் நிலைநிறுத்திப் பரவச்செய்த பெரியாரைப் பின்பற்ற யார்தாங் கூசி நிற்பர்?

தமக்கு முன் சென்ற புலவர் பெருமக்கள் பலரும் திருக்குறளமுதத்தை வாரிப் பருகி மகிழ்ந்ததைப் போலவே, கம்பநாடரும் பல இடங்களில் திருக்குறட் கருத்துக்களையும் அடிகளையும் தம் நூலுட் பெய்துவைத்துள்ளார் என்னு முண்மை எல்லோரு மறிந்ததொன்றும். அதோடு திருவள்ளுவர் விதைத்த பொது நோக்கமாகிய விதை கம்பராமாயணத்தில் முளைத்து வளர்ந்து, பூத்துக் காய்த்துப் பழுக்கின்றது என்றே கூறலாம். உடன்பிறப்பு நோக்கத்தின் உண்மையியல்பு என்ன? எவ்வாறு அது பெருகிக்கொண்டே சென்று உலகனைத்தும் வளைக்கின்றது. என்ற கேள்விகளுக்கு ஏற்ற பதிலைக் கம்பராமாயணம் படிப்போர் தாமேயறிவர்.

இவ் வுடன் பிறப்பு நோக்கம், ஓரிடம் இரண்டிடங்கள், ஒரு படலம் இரண்டு படலங்கள், அல்லது ஒரு காண்டம் இரண்டு காண்டங்களில் மட்டுமன்றிப், பாலகாண்டம் தொடங்கி, யுத்தகாண்ட மீறாக, நூல்முழுவதுமே பரந்து விரிந்திருக்கின்றது. ஒரு தொடர்நிலைச் செய்யுள் முழுவதும் காணக் கிடக்கின்ற காவியப்பண்பாகிய பாவிகங்களுள் ஒன்றாக இவ் வுடன்பிறப்பு நோக்கத்தை அமைத்துள்ளார் கம்பர். ஒரு

Koviloor Digital Library



முத்து மாலையில் பல முத்துக்களையும் ஒன்று சேர்த்துக் கொண்டு அவற்றிற்குள்ளே ஊடுருவிச் சென்றிருக்கின்ற நூலி ழையைப் போன்றே, பாவிகமாகிய பண்பும் பல பொருள் களையும் ஒன்று சேர்த்துக்கொண்டு காவிய முழுவதும் ஊடுரு விச் சென்று நூல்முழுவதும் படித்துணர்ந்த பின்னரே அறி யற்பாலதாயிருக்கிறது. அங்ஙனமே இவ் வுடன் பிறப்பு நோக்கமாகிய நல்லமை வாய்ந்த பண்பும் இராமாயணம் முழு வதிலுமே இயங்கிச் சென்று முடிவில் உய்த்துணரப்படும். இராமன், சீதை, பரதன், குகன் முதலிய காவிய உறுப்பின ரின் மனநிலைகளை வெளிப்படுத்தும் உரையாடல்களாலும், தனிமொழிகளாலும், கவிக் கூற்றுகளாலும், அவர்களைப் பற் றிப் பிறர் பேசும் பேச்சுகளாலும், அவர்கள் செயல்களாலும் பிறவற்றாலும் இது கம்பரால் தொடர்ச்சியாக அவர் நூலுள் வெளிப்படுத்தப்படுகின்றது. முதன்முதலில் இங் நோக்கம் இராமனுடைய வீட்டில் தொடங்கி, பல்கிப் பெருகி, பரந்த நோக்கமும் விரிந்தபார்வையும் பெற்று, மொழி, நிறம், குலம் முதலிய வேற்றுமைகளை வென்று எல்லோரிடத்தும் தொடர் பின்றிச் செல்லுவதாகக் கம்பர் அமைத்துள்ள வகை நன்று கக் காணப்படுகின்றது. ஒரு தொடர்நிலைச் செய்யுளில் ஒன் பான் சுவையும் ஒருங்கே அமையவும் பத்துவகை அழகும் பாங்குடன் பொருந்தவும், மிகவும் உயர்ந்தமுறையில், படிப் போர் மனதில் பசுமரத் தாணியெனப் பதியும் வண்ணம் இவ் வுத்தமப் பண்பை அமைத்திருக்கின்ற பெருமை கம்பநாட ருக்கே உரியது. இப் பெருமையினாலேயே கம்பராமாயணம் சிறந்த தமிழ்க் காவியங்களுள் ஒன்றாய் மிளிர்வதாகின்றது.



Koviloor Digital Library

# ஒரு வீரப் பெண்

"அரசு"

இத்தாலியருக்கும் அபிசீனியருக்கும் கடும்போர் நடந்து கொண்டிருந்தது. போர்க் களத்தினின்று தப்பி ஓடிவந்தது ஓர் அபிசீனியப் படை; அதைத் தேடிக்கொண்டு வந்தது ஓர் இத்தாலியப் படை.

தங்களைப் பின்தொடரும் இதாலியப் படையை அறிந்து கொண்டதும் அபிசீனியப் படையினர் மிகுவிசையாய் விரைந்தனர். இருந்தபோதிலும் இத்தாலியப் படையினர் இன்னுஞ் சிறிது நேரத்தில் தங்களைப் பிடித்துவிடுவர் என்றுணர்ந்த அபிசீனியப் படையினர், அங்கேயே அவர்கள் அறிதற்கரியதோர் இடத்தில் மறைந்துகொள்ளச் சென்றனர். அப்பொழுது அங்கு நின்றுகொண்டிருந்த ஒரு பெண்ணினிடம், "நீ, பின்னால் எங்களைத் தேடிவரும் இத்தாலியப் படையினருக்கு நாங்கள் இருக்கும் இடத்தைக் கூறிவிடாதே. கூறிவிட்டால் நம் நாட்டிற்குக் கேடுகாலந்தான். நாட்டைப் பாதுகாக்க விரும்பினால் நீ நாங்கள் மறைந்திருக்கும் இடத்தை உயிர்போனாலுங் கூறாதே" என்றுரைத்துச் சென்று அண்மையில் ஓர் இடத்தில் ஒளிந்துகொண்டனர்.

இப் பெண் நீக்கிரோ சாதியினள்; நல்ல கறுப்புநிறம்; வயது பதினெட்டு இருக்கும். இவள் பெற்றோர், உற்றோர், மூதாதையர் யாவரும் தங்கள் நாட்டிற்காக உயிர் துறந்தனர். இவள் இருக்குமிடத்திலிருந்து சிறிது தூரத்தில் ஒரு சிறு ஊர் உண்டு.

அபிசீனியப் படையினரைத் தேடிக் கொண்டு அந் நீக்கிரோப் பெண் இருக்குமிடத்தை அடைந்ததும், "நீ இங்கு அபிசீனியப் படையைப் பார்த்தாயா?" என்றனன் இத்தாலியப் படைத்தலைவன்.

"யாரை? அபிசீனியப் படையினரையா? அவர்களை நான் பார்க்கவே இல்லையே" என்றாள் அப் பெண்.

"என்ன! நீ அவர்களைப் பார்க்கவில்லையா? உண்மையை உரைத்துவிடு. இன்றேல் உன் உயிர் போய்விடும்" என்றனன் அப் படைத்தலைவன்.

Koviloor Digital Library



"அபிசீனியப் படையினர் இப்பக்கம் வரவே இல்லையே! அபிசீனியப் படையினர் இதன் வழியாகச் சென்றிருப்பின் நான் ஏன் கூறமாட்டேன்?" என்றனள்.

"இவ்வாறு, உன்னைக் கேட்பின், நீ உண்மையை உரைக்க மாட்டாய். உனக்குச் சரியான தண்டனை பளித்தால், உடனே உண்மையை ஒன்றுவிடாமல் கூறிவிடுவாய்; நீ இப்பொழுது உன் உயிரை இழக்க விரும்புகிருயா? அல்லது உண்மையை உரைத்து உயிருடன் வாழ விரும்புகிருயா?" என்றனன் தலைவன்.

"எனக்குத் தெரிந்தாலன்ரே, நான் அவர்கள் இருக்குமிடத்தைக் கூறப்போகிறேன்? நான் அவர்கள் இருக்குமிடத்தை அறியேன்" என்று மறுத்துவிட்டனள்.

உடனே தலைவன் அப் பெண்ணைக் காட்டி, அடித்து அவள் வாயினின்று அனைத்தையும் கக்கும்படி செய்யக் கட்டளையிட்டனன். அப் பெண் கட்டப்பட்டாள். பின்பு நன்ருய் அடித்தனர் அவளை. அவள் திடீரெனத் தன் இடுப்பிலிருந்த ஒரு சிறு கத்தியை எடுத்துத் தன் நாக்கை அறுத்துக்கொண்டாள். குருதி பீரிட்டது. இவள் ஏன் இப்படித் தன் நாக்கை அறுத்துக் கொண்டாள்? தான் ஒரு வேளை பகைவர்களின் துன் புறுத்தலினுல் கூறிவிட்டாலும் கூறிவிடலாம் என்ற எண்ணத்தினுலேதான் இங்ஙனம் தன் நாக்கை அறுத்துக்கொண்டாள். நாட்டுப் பற்றுக்கு இதை விடச் சிறந்த எடுத்துக்காட்டும் வேண்டுமோ? இதைக் கண்டான் இதாலிப் படைத்தலைவன். "அவளிடமிருந்த, அபிசீனியர் மறைந்திருக்கும் இடத்தை நான் அறிந்துவிடுவேன் என்ற எண்ணத்தினுலன்ரே தன் நாக்கை அறுத்துக்கொண்டாள்! அவளுடைய உறுதியை நம்மிடமே அன்ரே காண்பித்துவிட்டாள். இவளை இனிமேல் இவ்வுலகில் வாழவிடக் கூடாது" என்றெண்ணித், தன் படையினரிடம் அவளைக் கொன்றுவிடும்படி கட்டளையிட்டனன்.

அடிமேல் அடி வீழ்ந்தது; செந்நீர்ப் பெருக்கு மேலும் மேலும் வந்துகொண்டே இருந்தது; இன்னும் சில நொடி

Koviloor Digital Library



களே அவள் உடலில் உறைய உயிருக்கு உரிமையுண்டு. பட், பட்; இரண்டு அடிகள் ஓங்கி வீழ்ந்தன அப் பாவையின் மீது. உடனே விரைந்தது அவளது ஆவி; விரைந்து சென்று, தன்னலப் பேணிகளைத் தகர்த்தது.

---

# செய்திகளும் குறிப்புகளும்

## சீனிவாச சாத்திரியார் தமிழ்க் கலைச்சொற் குழுவும் அதன் முடிவுகளும்.

I (அ) இக் குழுவினருள் தமிழன்பு படைத்தவர் ஒருவருமிலராதலின், இவர்கள் முடிவுகள் தமிழைப் பொறுத்தவரைக்குமாவது ஏற்புடையனவல்ல. இம் முடிபுகளைச் சீர்திருத்தத் தக்க தமிழறிஞர்களைப் பொறுக்கி வேறு முடிபுகளுக்கு வரவேண்டும். (ஆ) இச் சாத்திரியார் கழகம் ஆங்கிலம் வடமொழிஆகிய இருமொழிச் சொற்களைக் கடன் வாங்கச் சொல்வது ஆரியப்பற்றினாலேயாகும். கடன் வாங்கினால் ஒருமொழியிலிருந்தே வாங்குதலேனும் ஒற்றுமை யாவதுபெற்றிருக்கும். அதிலும் ஆங்கிலத்திலிருந்து வாங்குவதாவது அச்சொற்களின் நேர்ப் பிறப்பிடத்திலிருந்தே வாங்குவதாகும்; கடன் வாங்கும்போது இடைமொழிகள் ஒன்று ஏன் வேண்டும்? (இ) அரசியலார் இனி அமைக்கவிருக்கும் உட்கழகங்களுக்கு இச் சாத்திரியார் குழுவினருள் ஒருவராவது ஒருவகையிலும் ஏற்றவரல்லராதலின் அவர்களை அதில் அமைத்தல் கேடே பயக்கும். (ஈ) இனி ஏற்படுத்தவிருக்கும் உட்கழகங்களுக்கும் பாடநூல் உட்கழகங்களுக்கும் (Text Book Committee) தக்க தமிழறிவும் அவ்வப் பாடங்களிற் பயிற்சியும் உடையோரையே தேர்ந்தெடுத்தல்வேண்டும்.

II (அ) முதலாவதாகக் கருதத்தக்கது, எல்லா மொழிகளுக்கும் சொல்லாக்கப் பொதுவிதிகள் ஏற்படுத்துவது முறையன்று: ஒவ்வொரு மொழியிலும் இலக்கியங் கண்டபின் இலக்கணம் வகுத்தல் வேண்டும். (ஆ) தமிழ்மொழி சொல்வள மிக்கு இலக்கண வரம்புடையதாதலின் தமிழ் வேர்களினின்றே கலைச்சொல்லாக்கம் நடைபெறல்வேண்டும். (இ) தமிழ்மொழி ஏனைய தென்னிந்திய மொழிகளுக்குத் தாய்மொழியாயமைந்திருத்தலின் திராவிட மொழிகள் யாவற்றிற்கும் தமிழ் வேர்களினின்றே கலைச்சொல்லாக்கம் நிகழ்தல் முறையுடையது. (ஈ) ஏனைய திராவிட மொழிகள் வழங்கும் நாட்டிலுள்ள தூய தமிழ் வழக்குகளைக் கடன் வாங்கல் பொருத்த

Koviloor Digital Library



முடையதே. (உ) தமிழ் வளர்நிலைமொழி (Agglutinative language) ஆகவும், ஆங்கிலம், வடமொழி பகுசொன்னிலைமொழி (Inflectional language) ஆகவும் இருப்பதனுல் ஆங்கில வடமொழிச் சொற்களைத் தமிழில் வழங்க முயலுவது நீரொடு நெய்யைக் கலக்கமுயல்வதையொக்கும். (ஊ) தமிழ்மொழியில் ஆங்கில வடமொழியொலிகளிற் பலவின்மையால் அம் மொழிச் சொற்களைச் சிதைத்தே தமிழில் வழங்கவேண்டும்; அது யாவருக்கும் வெறுப்பை உண்டாக்கும். (எ) இவ்வாறு கடன் வாங்கப்படும் சொற்களால் கலையறிவு பொதுமக்களிடையே பரவாது தயங்கும். (ஏ) இச் சாத்திரியார் கழகமே உருதுக்கு அதன் முதன்மொழியாகிய அரபி பர்சிய மொழிகளைக் கடன்வாங்க விதிப்பதால் தமிழுக்கு அதன் சொந்தச் சொற்களையும் ஏனைய திராவிட மொழிக்கு, அவற்றின் தாய்மொழியாகிய தமிழ்ச் சொற்களையுமே பயன்படுத்தல்வேண்டும் என்பதை நன்கு உள்ளீடாகக் குறிப்பிடுகின்றது.

III (அ) தமிழ் வேர்ச்சொல் ஒன்றிலிருந்தே பலவகையான பெயர்வகைச் சொற்கள், வினைவகைச் சொற்கள், எச்சவகைச் சொற்கள், இனச் சொற்கள், அடுக்குச் சொற்கள், எதிர்மறைச் சொற்கள் முதலியன கொத்துக் கொத்தாய்ப் பிறந்து தமிழருள்ளத்தில் வேரூன்றும் வாய்ப்புடையன. (ஆ) இவ்வுண்மையைப் பயன்படுத்திச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் கலைச்சொற்கள் வெளியிட்டிருப்பதை அரசியலார் தமது R. C. 2406/g. 38 (22-11-39)ல் தாமே விலையின்றி வழங்கி ஒவ்வொரு உயர்கலாசாலையாரையும் பயன்படுத்தச் செய்திருக்கின்றனர். (இ) இச்சொற்கள் இரண்டாண்டிற்குள் எளிதிற் பரவியிருப்பதால் நூலாசிரியர்களும் பதிப்பாளர்களும் பள்ளியாசிரியர்களும் இவற்றைப் பயன்படுத்தி வருகின்றனர். (ஈ) இப் புதிய விதிகள் இவ்வெளியீடுகளைப் பயனற்றனவாக்கி யாவருக்கும் பேரிழப்பை உண்டுபண்ணும். (உ) இப் புதுவிதிகள் மொழிநூல் (Phylology), சொல்லியல் (Etymology), இலக்கணம் (grammar) ஒன்றிற்காவது பொருத்தமற்றவையாதலின் மயக்கந் தருவனவாகும்.

IV தமிழர் கடமைகள் :—(அ) யாண்டும் கூட்டங்கள் போட்டு மேற்கண்ட உண்மைகளுக்கேற்ற தீர்மானங்கள் நிறைவேற்றி அரசியலாருக்கு அனுப்பல். (ஆ) பள்ளி ஆசிரியர்களும், நூலாசிரியர்களும், பதிப்பாளர்களும் மாகாணக் கல்வியாளருக்கு (D. P. I.) வேண்டிய வேண்டுகோள் (Memorial) அனுப்பல் (இ) இதற்கென ஒரு முறையீட்டுக்குழு (Deputation) அமைத்து அரசியலாரை வழிப்படுத்தல்.

Koviloor Digital Library



(ஈ) பேச்சு வழக்கிலும், எழுத்து வழக்கிலும், செய்தித் தாள்களிலும், எல்லா நிலையங்களிலும் தனித்தமிழ்ச் சொற்களையே வழக்கிற் கொண்டுவரல் (உ) தக்க தமிழ் வல்லுநரைக் கொண்டு ஒவ்வொரு வேலைத் துறையிலும் வேண்டிய தூய தமிழ்ச் சொற்களை அமைத்தல் (ஊ) மேலதிகாரிகளை இச் சொற்களையே பயன்படுத்தச் செய்தல் (எ) ஸ, ஜ, ஹ முதலிய வடவெழுத்துக்களை நீக்கல். (ஏ) புதிது புதிதாக வழக்கிற்கு வருஞ் சொற்களை ஆய்ந்து ஏற்ற தமிழ்ச் சொற்களை அமைத்துக் கொடுத்தல் (ஐ) எல்லாப் பள்ளி ஆசிரியரையும் அவரவர் பட்டத்திற்கேற்ற தமிழ்ப் பாடங்களில் தேர்ச்சிபெறச் செய்தல். S. S. L. C. trained ஆசிரியர் S. S. L. C. தமிழ்த் தேர்தலில் தேறினாற்றான் தமிழ்நாட்டில் ஆசிரியராக இருக்கலாம்; அவ்வாறே B. A. L. T.களுக்கும்; ஆரியங் கற்றுத் தமிழ்நாட்டில் வேலையிலிருக்கும் எண்ணிறந்தோராற்றான், தமிழ்க் கேடுகள் விளைந்துள்ளன. (ஒ) எல்லா வேலையாளரையும் தமிழில் அவ்வப் படிக்குரிய தமிழ்த் தேர்ச்சியைப் பெற்றால்மட்டுமே வேலையிலிருக்கவிடப்படலாம். (ஓ) தமிழ்நாட்டுப் பள்ளி யாவற்றிலும் தமிழ் கட்டாய பாடமாக்கல்; வடமொழி இந்தி விருப்பப் பாடமாக இருக்கலாம். (ஔ) தமிழ்ப் பாதுகாப்புக் கழகங்கள் யாண்டும் நிறுவல்.

---

# மதிப்புரை

1. ஸ்ரீ துளஸீராமாயணம் (பாலகாண்டம்—சுருக்கம்)—மொழிபெயர்ப்பு; ஸ்ரீ எஸ். அம்புஜம்மாள் மொழிபெயர்த்தது. கிடைக்குமிடம்: ஹிந்தி பிரசார சபை, தியாகராய நகர், சென்னை. விலை ரூ. 1-4-0.

இந்தி மொழியிலிருந்து இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. பிற மொழியிலுள்ள நல்ல நூல்களெல்லாம் தமிழ் மொழிக்கு வரவேண்டும். இந் நூல் தமிழ்க்கு ஒரு விருந்தென்றே கூறலாம். இம் மொழிபெயர்ப்பில், துளசிதாசரின் குரலும் மேன்மையும் நன்றாகத் தெரிகின்றன. நடை இயல்பாகவும் இனிமையாகவும் இருக்கிறது. இந் நூல், காந்தியடிகளின் அன்புரையையும், திரு. பி. ஸ்ரீ. அவர்களின் அணிந்துரையையும் பெற்றிருக்கிறது. ஆசிரியை இதனை அன்போடு செய்திருக்கிறார். அவருக்கு இந்தி மொழியிலுள்ள பேரன்பு தமிழினிடத்தும் சிறந்துவரவேண்டுமென்று விரும்பு

Koviloor Digital Library



கிறோம். தமிழுருவத்தை மிகுதியாகப் பிறமொழி உருவமாக்கி யிருக்கிறார். தமிழின் சுவை இன்னது என்று தெரிந்து ஊறி இன்புறுவதற்கு இது தடையாயிருக்கிறது. தமிழ் மொழியை அதன் முழு நிலையில் அழகொழுகக் காட்டவேண்டுவது, மற்ற ஆசிரியர்களை விட மொழிபெயர்ப்பாசிரியர்களுக்கே முதன்மையான கடமையாகும். அடுத்த காண்டங்களின் மொழிபெயர்ப்பில் ஆசிரியை இந் நலத்தில் இன்னுஞ் சிறிது கருத்து வைத்தால், அவருடைய அழகிய ஆற்றல்கள் நறுமணங்கமழும் பொன்மலர்களாய்த் தேவியின் திருவடிகளை அணி செய்து நிற்கும்.

2. முக்கூடற் பள்ளு—மூலமும் உரையும். பதிப்பாசிரியர்: மு. அருணசலம், எம். ஏ. கிடைக்குமிடம்:—புதுமைப் பதிப்பகம்; சாம்பசிவம் தெரு, தியாகராய நகர். விலை அணா 0-10-0.

இது புதிய பதிப்பு. பதிப்பு முறையும் அச்சும் நன்றாயிருக்கின்றன. குறிப்புரை அவ்வப் பக்கத்தின் அடியிலேயே சேர்க்கப்பட்டிருக்கிறது. உரை தெளிவாயிருக்கிறது. ஆசிரியர் ஒரு விளக்கமான முன்னுரையும் எழுதிச் சேர்த்திருக்கிறார். கற்பவர்க்குப் பயன்படும்படி இந் நூலின் தொடர்பான பற்பல குறிப்புகள் அதன்கண் விளக்கப்பட்டிருக்கின்றன. ஆசிரியர்க்குத் தமிழகம் மேன்மேலும் ஊக்கந்தர வேண்டும்.

3. திருவகுப்பு விருத்தியுரை—உரையாசிரியர்: பிரசங்க பூஷணம் குகஸ்ரீ. பு. பா. இரத்தினசபாபதி நாயகர் அவர்கள், 97, சஞ்சீவிராயன் கோயில் தெரு, பழைய வண்ணாரப்பேட்டை, சென்னை.

அருணகிரி நாதர் அருளிச்செய்த திருவகுப்புகளில் 'சீர்பாத வகுப்பு' 'வேல் வகுப்பு' 'சேவகன் வகுப்பு' என்னும் மூன்றிற்கு முதன்முதலாக இந் நூலில் உரை எழுதப்பட்டிருக்கிறது. உரையாசிரியரின் முயற்சி போற்றுதற்குரியது. சொற்பொழிவுகள் நிகழ்த்துவதோடு, ஆசிரியர் இத்தகைய நூலெழுது முயற்சிகளிலுந் தலைப்பட்டு உதவுவது அன்பர்களுக்கு நற்பேறு. பாராயணம் செய்யும் அருள் நூல்களை அவற்றின் உரை தெரிந்து செய்யவேண்டுவது கட்டாயமாதலால், அன்பர்கள் இந் நூலைப் பயன்படுத்திக் கொள்வது முதன்மையாகும்.

---

Koviloor Digital Library



வித்துவான்
S. ஆறுமுக முதலியார்,
M.A., B.O.L., L.T.



பூ. ஆலால சுந்தரஞ்
செட்டியார், M.A..
கிறித்தவ கல்லூரி.



வித்துவான்
இராஜ. சிவ.
சாம்பசிவ சர்மா.



வித்துவான்
இ. சிவகுருநாத பிள்ளை.
விருத்தாசலம்.

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—கார்த்திகை [பரல்-௩

# உயர்க!

போதியி லாயினும், இமய மாயினும்,
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்,
நடுக்கின்றி நிலைஇய என்ப தல்லதை
ஒடுக்கங் கூறார் உயர்ந்தோர் உண்மையின்;
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே.

—இளங்கோவடிகள்

பொதியில்மலை குறுமுனிவருக்கு இருப்பிடம்; இமயமலை இறைவனுக்கு இருப்பிடம்; புகார் என்னுங் காவிரிப்பூம்பட்டினம் நற்குணமுடையவர்க்கு இருப்பிடம்.

துறைபோகிய கல்வி கேள்விகளால் முழுமையும் உணர்ந்த பெரியோர் இம் மூன்றையும் பற்றி ஒரே கருத்துடையவர்களா யிருக்கிறார்கள். 'பொதியிலாயினும் இமயமாயினும் புகாரேயாயினும் இவற்றைப் பற்றிய புகழ் இந் நிலவுலகத்தில் எப்பொழுதுங் கலங்காமல் நிலைபெற்றிருக்கும்' என்பதே அவர் முடிவு.

இதற்குக் காரணம் என்னவோ என்று தெரிந்துகொள்ள யார்க்கும் உள்ளம் வேட்கை கொள்ளும். 'உயர்ந்தோர் இருப்பதனால்' என்று அதனை இப் பாட்டு விளக்கிக் காட்டுகின்றது. உயர்ந்தோர் காரணமாகவே பொதியிலும் இமயமும் புகாரும் மதிக்கப்படுகின்றனவேயல்லாமல் வேறில்லை.

நல்லோர் இங்ஙனம் இடந்தோறும் இருந்து அதனால் நிலைத்த புகழ் உயர்வது எவ்வளவு நல்லது!

Koviloor Digital Library

# குறுந்தொகை மாநாடு

இக் காலம், எங்கும் மாநாடுகள் கூடுகின்ற காலம்! ஒரு கருத்தின்மேல் நாட்டிலுள்ள தக்கோரெல்லாம் ஒருங்குகூடி ஆராய்கின்ற பேரவை மாநாடு ஆகின்றது. எதெதற்கோ மாநாடுகள் கூடுகின்ற இக்காலத்தில், சிறந்த செந்தமிழ் நூல்களின்மேல், நாட்டின் தக்கோர்கள் ஒருங்குகூடி ஆராய்வது எவ்வளவு மேலானது!

தமிழர்களுக்கு உள்ள வாழ்வெல்லாம் தமிழினலேயும் தமிழ் நூல்களினலேயுமே யல்லாமல் வேறில்லை. அவற்றிலும் பழந்தமிழிலும், சங்கநூல்களிலுமே தமிழர்களுக்குத் தனி வாழ்வு அமைந்துள்ளது. நாகரிகம் மிக முதிர்ந்ததென்று கூறப்படுகின்ற இந் நூற்ருண்டிலும் பழந்தமிழ் நாகரிகமே தலைசிறந்ததாக மதிக்கப்படுமானல் அதன் ஏற்றந்தான் எவ்வளவு! நாடோ, அரசோ, உரிமையோ, தலைமையோ, பிறவோ தமிழர்களுக்குக் குறைந்துள்ள காலங்களிலெல்லாம், அவர்கள் தமிழ் மொழியே அவர்களுக்கு உற்ற துணையாயிருந்து அவர்களைத் தலை நிமிரச் செய்து வாழ்விக்கின்றதென்ருல், இன்னும் அவர்கள் வாழ்வின் ஆக்க நோக்கங்களெல்லாமும் தமிழ் மொழியின் நிழலிலேயே உள்ளனவென்பது நன்கு தெரிகின்றதன்ருே!

மொழியின் நிலைப்புக்கும், இனிமைக்கும், பயனுக்கும் நல்ல நூல்கள் அதற்கு முதன்மையாயிருக்கின்றன. தமிழ்மொழியின் இலக்கியவளம் உலகமெல்லாம் தெரிந்ததேயாம். அவ் விலக்கிய நூல்களுள் குறுந்தொகையும் ஒன்று. இந்நூலிலுள்ள சுவைக்கருத்துக்களை ஆராய்ந்து பயன் கொள்ளும்பொருட்டே, 30-11-40; 1-12-40 என்னும் இரண்டு நாட்களிலும் சென்னை, சிந்தாதிரிப் பேட்டை உயர்பள்ளி மண்டபத்தில் இம் மாநாடு கூடியது. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஊதியத்திலிருந்து நடைபெறுகின்றன. அறநிலையங்களில் ஒன்

Koviloor Digital Library



ரூன தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பாக இம் மாநாடு நடைபெற்றது. முன்பு மார்ச்சுத் திங்களில் கலித்தொகை மாநாடு இச் சங்கச் சார்பில் நடைபெற்ற மையும் அன்பர்கள் அறிவர்.

மாநாட்டுத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துப் பேராசிரியரான திருவாளர் **பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்**; இவர்கள் இலக்கியச் சுவையே தம் வாழ்க்கை நலமெனக் கருதித் துய்த்து இன்புறுபவர்கள். 30-11-40 காலை 6-மணிக்கு இவர்கள் எழும்பூர் புகைவண்டி நிலையத்துக்கு வந்து இறங்கியபோது தமிழன்பர்கள் பலர் அங்கு வந்திருந்து மலர்மாலைகள் அணிந்து "பண்டிதமணி வாழ்க" என்னும் வாழ்த்தொலிகள் வீதிவாய்க் கேட்க வரவேற்றுத் தங்குநிலையத்துக்கு அழைத்துச் சென்றனர்.

திரு. வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள், M.A., B.L, இரத்தினசபாபதி செட்டியாரவர்கள் B.A., காழி சிவ. கண்ணுசாமி பிள்ளையவர்கள், B.A., வித்துவான் மு. வரதராசனார் B.O.L., வித்துவான் கா. மு. சின்னப்ப பிள்ளையவர்கள், கழகத் தமிழ்ப் புலவர் இளவழகனார், ஆ. இராசகோபாலப் பிள்ளையவர்கள், செங்குந்தமித்திரன் ஆசிரியர் மாணிக்கவாசக முதலியாரவர்கள் முதலிய பலரும் புகைவண்டிநிலைக்கு வந்திருந்தனர்.

இரண்டு நாட்களுக்கு முன்னிருந்தே தமிழன்பர்களிடையே இருந்த கிளர்ச்சி பண்டிதமணியவர்கள் சென்னை சேர்ந்ததிலிருந்து மிக்கோங்கியது.

மாநாட்டு மண்டபம், பந்தரும் பிறவும் வாய்ந்து காட்சிக் கினிமையாய் அணி செய்யப்பட்டிருந்தது. குறித்த நேரத்தில் வாத்தியங்கள் முழக்கெடுத்தன. அன்பர்கள் புடைசூழத் தலைவரவர்கள் மண்டபம் போந்து அவையோர் கண்ணுங் கருத்துங் களிக்க அவர் செய்த பேராரவாரத்தினிடையே அவ் வவைக்கு ஓர் அணிகலன்

Koviloor Digital Library



போல ஒளிவிட்டுத் தம் தலைமை இருக்கையில் அமர்ந்தார்கள். அவ் வொளி நிலையைக் 'கதிரேசர்' என்னும் பெயரமைப்போடு ஒப்பிட்டு அன்பர்கள் சால மகிழ்ந்தனர்.

மாநாடு குறுந்தொகை மாநாடாயிருந்தும் மக்கள் பெருந்தொகையாய் வந்திருந்தனர்.

திவான்பகதூர் T. M. நாராயணசாமி பிள்ளையவர்கள் M. A., B.L., C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள் B.A , B.L., திரு வேங்கடசாமியவர்கள், M. A., T. S. நடராச பிள்ளையவர்கள் B.A., B.L., S. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள் B.A., L.T., திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள், வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் M.A., ரா. சேதுப்பிள்ளையவர்கள் B.A., B.L., K. கோதண்டபாணி பிள்ளையவர்கள் B A., Dr. T. S. திருமூர்த்தியவர்கள், காசி விசுவநாதன் செட்டியாரவர்கள், T. சிவசைலம் பிள்ளையவர்கள் M.A.,L.T., E. K. நடேச சர்மா அவர்கள், மா. இராசமாணிக்கம் அவர்கள், B.O.L. 'விநோதன்' ஆசிரியர் வேணுகோபால் நாயுடு அவர்கள், ஆலாலசுந்தரம் செட்டியாரவர்கள் M.A., முதலிய பெருமக்கள் பலரும்; E. T. இராஜேஸ்வரி அம்மையார் M.A., B. ஞானம்பாள் அம்மையார் M.A., இராஜாமணி அம்மையார் M.A , முதலிய தாய்மார்கள் பலரும் வந்து அவையை மாட்சிமைப்படுத்தினர்.

இடையிடையே திருவாளர் முனிசாமி நாயுடு அவர்கள் தேவார திருவாசகங்களை இன்னிசை கலந்து பாடி அவையோர்க்கு விருந்தளித்து வந்தனர்.

தமிழ்நாட்டிலிருந்து திருவாளர் காரைக்குடி கணேசன் அவர்கள், பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள், திருவையாறு வேங்கடாசலம் பிள்ளையவர்கள், சோமசுந்தர தேசிகரவர்கள், தென்காசி ஜில்லாமுன்சிப் நடராச நாடாரவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் கோவிந்தசாமிப் பிள்ளையவர்கள், சிதம்பரநாத செட்டியார் அவர்கள், வித்துவான் மு. அருணாசலம் பிள்ளையவர்கள், வி. அ. அரங்கசாமியவர்கள், ஈரோடு பாப்பிலி அவர்கள், கருந்திட்டைக்குடி அ. கணபதி பிள்ளையவர்கள், சிவ. குப்புசாமி அவர்கள், வித்துவான் சு. முத்துமாணிக்கவாசக முதலியாரவர்கள், சென்னை ஆறுமுகம் பிள்ளையவர்கள் முதலிய பெருமக்கள் பலரும் அன்புடன் அனுப்பியிருந்த பாராட்டுரைகள் படிக்கப்பட்டன.

Koviloor Digital Library



தலைவரவர்கள் தம் அரும்பெறல் தலைமையுரையைப் பலவகையான நுட்பதிட்பங்களும் சுவைகளும் ஒருங்கு நிரம்ப, அவையோர் உள்ளங்கள் ஒருமுகப்பட்டுத் தம் வயமாக இனிது நிகழ்த்தினார்கள். குறுந்தொகையின் முதற்பாட்டுக்கே அவர்கள் உரைத்த அழகிய விளக்கங்கள் தமிழறிஞர்களின் உள்ளத்தை விட்டு எஞ்ஞான்றும் நீங்கா. வழுவென்று கருதும் சில பகுதிகளுக்கு இடையிடையே அவர்கள் உரைத்து நிறுத்திய அமைதிகளும், தக்க கருத்துகளுக்கெல்லாம் வேறு நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டி ஒப்புமைப்படுத்தி விளக்கிய திறமும், இறைவன் நிலையோடு காதல் நிலையை ஒப்பிட்டு அதனதன் வரம்பு இன்னது என்று வரையறுத்துச் சென்ற அருமையும், பிறவும் நினைக்க நினைக்க இன்ப ஊற்றுக்களாய் ஊறிச் சுவைக்கின்றன.

முருகக்கடவுளின் திருவடி, நிறம், ஒளி, ஆடை, வேல், சேவற்கொடி என்னும் அறுவகைப் பொருளும், தாமரை, பவழம், குன்றி, குன்று என்னும் நானிலப் பொருளும், முருகவேளின் இளமையும், அழகும், வீரமும் என்னும் மூவகைத் தனிச்சிறப்பும், பிறவும் அப்பாட்டின் கண் அமைந்திருத்தலைத் தெளிவாக எடுத்துக்காட்டி மகிழ்வித்தார்கள்.

தலைமையுரை முடிந்தபின், தலைவரவர்கள் பணிக்க, அவையோர் அகமுக மலர்ச்சிக்கிடையே திருவாளர் வித்துவான் ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் எழுந்து, முல்லைக் கருத்துமேல் வருகின்ற குறுந்தொகைப் பாக்களை ஆராய்ந்து, அவற்றின் நலங்களைத் தொகுத்து, உணர்ச்சியோடு விரித்துரை நிகழ்த்தினார்கள்.

இப்படியே மறுநாள் 1-12-40 அவை நிகழ்ச்சியில் திருவாளர் வித்துவான் இராஜ. சிவ. சாம்பசிவசர்மா அவர்கள் நெய்தற் பொருள்மேல் வருகின்ற பாட்டுக்களையும், திரு

Koviloor Digital Library



வாளர் பண்டிதர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கள், மருதத்திணை பற்றிய செய்யுள்களையும், திருவாளர் வித்துவான் ம. இராசமாணிக்கம் பிள்ளையவர்கள் பாலையொழுக்கம் பற்றிய பாடல்களையும், திருவாளர் வித்துவான் பா. சொக்கலிங்கம் அவர்கள் குறிஞ்சிச் செய்திகள் கொண்ட அடிகளையும் எடுத்துத் தத்தம் சொற்பொழிவுகளை விளங்க விரித்துரைத்தார்கள். ஐவர் சொற்பொழிவுகளும் முறையே தெறிப்பும், ஆராய்ச்சியும், எழுச்சியும், அறிவின் நலமும், நகைச் சுவையும் சிறப்பின் வாய்ந்து அவையோர் உள்ளங்களுக்கு விருந்தாயின.

சங்க நூல்களைப் பற்றிய ஆர்வம் மேலுமேலும் மிகுவதாயிற்று; இவ்வூக்கம் பின்னுங் கிளர்ச்சி பெறுமாறு இரண்டாம் நாள் விழாவில், கழக வெளியீடாக அணுக்கத்தில் வெளிவந்த 'மாணவர் சங்கச் செய்யுள்' என்னுங் காலணு வெளியீட்டை நிரம்ப வாங்கிப் பாகனேரித் தமிழ்ப் புரவலர் வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியாரவர்கள் அவையோர்க்கு அன்புடன் வழங்கினார்கள்; இடையே, இவர்கள் தமிழன்பும், தமிழ்நூல்கள் வெளிவரும்பொருட்டு ரூபா பதினையாயிரம் இவர்கள் ஒதுக்கிவைத்திருக்கும் உதவியும் பற்றிக் கழகவினையாளர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளையவர்கள் ஓர் உணர்ச்சியுரையை வெளியிட்டுப் பாராட்டுரை கூறினார்கள்.

தலைவரவர்கள், சொற்பொழிவாளர் ஒவ்வொருவரது சொற்பொழிவும் முடிந்தவுடன் ஏற்ற முடிப்புரைகளை அவையோர் புத்தூக்கமும் புது மலர்ச்சியுங் கொள்ளுமாறு சிறக்க நிகழ்த்திவந்தார்கள்; மேலும், அவ்வப்போதும் இடையிடையே நகைச்சுவை ததும்புஞ் செஞ்சொன் மொழிகளை அள்ளிஅள்ளிச் சிந்தி அவையோரை மகிழ்வித்து வந்த திறம் திரு. பண்டிதமணியவர்களுக்கே உரிய தனித்திறமாய், இன்ப வாரிதியாய் விளங்கியது.

Koviloor Digital Library



அணுக்கத்தில் கழகத்திலிருந்து வெளிவந்த சங்கஇலக்கிய இன்கவித்திரட்டு (இளவழகனார் விளக்கங்கள்) என்னும் அறிய நூல் வெளியீடு, உயர்ந்த ரெக்சைன் கட்டடத்தில் அமைத்துத், தலைவர் பண்டிதமணி அவர்களுக்கும், சொற்பொழிவாளர் ஐவருக்கும் அன்பளிப்பாக வழங்கப் பெற்றது. திருவாளர் திவான்பகதூர் T M. நாராயணசாமி பிள்ளை M.A., B.L., அவர்கள் இவ்வன்பளிப்பை அவையில் மனமுவந்து வழங்கினார்கள்.

வழக்கம்போல இக் குறுந்தொகை மாநாட்டிலும், எல்லாச் சொற்பொழிவுகளோடு தலைமையுரையையும் சேர்த்து அச்சிட்டு அவரவர் உருவப் படங்களுடன் 'குறுந்தொகைச் சொற்பொழிவுகள்' என்னும் நூல் மிகவுங் குறைந்த விலைக்கு வெளியிடப்பெற்றது.

கடைசியில், கழகத் தமிழ்ப் புலவர் திருவாளர் இளவழகனாரவர்கள் அவரவர் தனிப் பண்புகளை எடுத்து விளக்கி மகிழ்ந்து நன்றியுரைகள் கூற, மாநாடு, 'பண்டிதமணி வாழ்க ; சொற்பொழிவாளர் வாழ்க ; தமிழ் மக்கள் வாழ்க' என்னும் அவையோர் வாழ்த்தொலிகளுடன் கிளர்ச்சியாக இனிது நிறைவெய்தியது.

சங்க இலக்கியங்களைப் பற்றிய மாநாடுகள் இங்ஙனந் தொடர்பாக நடைபெற்று வருதலும், சொற்பொழிவுகளை நூல்களாக அச்சிட்டு அவ்வம் மாநாட்டிலேயே வழங்கிவருதலும், தலைவர்க்கும் சொற்பொழிவாளர்க்கும் அவையில் கண்கவருங் கட்டடமுடைய செந்தமிழ் இலக்கிய நூல்களை அன்பளிப்பாக வழங்குதலும், பிறவுமெல்லாம் நாட்டில் மிக்க கிளர்ச்சிகளை உண்டுபண்ணி வருகின்றன. தமிழ், தமிழர் என்னும் உணர்ச்சிகள் வீறியெழுகின்றன. மேல்மேல் மாநாடுகளை மக்கள் எதிர்பார்த்த வண்ணமாயிருக்கின்றனர்!

வாழி தமிழ்!

—வ. சுப்பையா,

---

Koviloor Digital Library

# நம் பண்டைய நீதிநூலாசிரியர்

"பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்"

(திருச்சிராப்பள்ளி வானொலியிற் பேசியது)

மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படும் வண்ணம் நம் பெரியார் நமக்கு உதவிய நூல்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கனையும் பற்றியனவே யாம். இவ்வெல்லாம் நீதியின்பால் அமைவனவெனினும் இவற்றுள் பொருட் பகுதியைப் பற்றி யெழுந்த நூல்களையே 'நீதிநூல்' எனப் பெரியோர் வழங்குவர். அப் பொருட் பகுதியை மாத்திரம் சிறப்பாக எடுத்துக் கூறிய ஆசிரியரும் உளர். அதனோடு அறமுதலிய ஏனைய உறுதிப் பயன்களையும் இயைத்துக் கூறிய ஆசிரியர்களே பெரும்பான்மையோராவர். இம் முறையில் தமிழிற் சிறந்த நீதிகளை வழங்கிய வண்மையிற் சிறந்த பெரியார் திருவள்ளுவரே யாவர். அவர்க்கு முன்னும் பின்னும் நீதிநூலருளிய ஆசிரியர்கள் வடமொழியிலும் தமிழிலும் பலரிருந்தனர். எனினும், அன்னார் புகழொளி யெல்லாம் வானத்து விளங்கும் மீன்களாக, வள்ளுவர் சீர்த்தி அப் பன்மீன் நடுவண் பான்மதிப்போலத் திகழ்வதாகும். "எல்லாப் பொருளும் இதன்பாலுள இதன்பால், இல்லாத எப்பொருளும் இல்லையால்" என்றபடி உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் வள்ளுவர் வாய்மொழியிற் காணப்படுவனவேயாம். தம் தெள்ளிய கல்வியானும் ஒள்ளிய மதி நுட்பத்தானும் உலகியலையும் மக்கள் வழக்க வொழுக்கங்களையும் அழுந்தி யறிந்து உள்ளத் தமைத்துத் 'திருக்குறள்' என்னும் நீதிக் களஞ்சியத்தை உலகமுள்ளளவும் நிலைபெற யாத்துதவிய பெருமையே அப் பொய்யில் புலவர் புகழொளி விஞ்சுதற்கு ஏதுவாயிற்று.

திருவள்ளுவர் எழுதிய நூல் ஒழுங்கிற்கும் ஏனையோர் நூன் முறைக்கும் உள்ள வேறுபாடுகள் பலவாம். தாம் கூற மேற்கொண்ட பொருளை நன்றாக ஆராய்ந்து இவ்வாறு தெளிவுபடுத்த வேண்டுமென்று உள்ளத் தமைத்துப் பின்னர்ச் செய்யுள் வடிவில் இவர் வெளியிட்டுள்ளார். பெரும்பான்மையும் மேற்கொண்ட பொருளின் இலக்கணம், அதன் சிறப்பு, அதனை

Koviloor Digital Library



லாம் பயன், அஃதில்வழி வருந் தீங்கு என்று இன்னோன்ன பாகுபாடுகளை வரையறுத்துக்கொண்டு கூறுதல் இவர் இயல்பு. எப்பொருட்கும் வரையறையும் தெளிவும் இன்றியமையாதன. வரையறுத்துத் தெளிவுபடுத்தப்படாத பொருள்கள் மக்கள் உளங் கோடற்கு ஏற்றனவாகா வென்பது பெரியார் துணிபு. இத்தகைய சிறப்பு வாய்ந்த திருக்குறளுக்கு வடமொழி தென் மொழிகளிலுள்ள பற்பல நீதிநூல்களையும் நன்கு கற்று ஆராய்ந்த பரிமேலழகர் என்னும் புலவர்பெருமான் இயற்றிய உரையே எல்லா உரைகளினும் சிறந்ததாகப் போற்றப்படுவது. அவ்வுரையாளர் ஓரிடத்து "தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச் சுப்பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதிநூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின்" என்று எழுதியிருத்தலால் வடமொழியிற் பிரசித்தி வாய்ந்த வியாழ வெள்ளிகளின் நூற் கருத்துக்கள் நம் வள்ளுவர் வாய்மொழி யிற் புலப்படுகின்றன வென்பது பரிமேலழகர் கருத்தாம். ஒரு நாட்டினர் வழக்க வொழுக்கங்களை யுணர்ந்து அவற்றிற் கேற்ப நீதிகளை வரையறுக்கும் ஆசிரியர்கள் கால இடையறவால் சேய்மைக்கண் உள்ளாரெனினும் பொருள் ஒற்றுமைக் கருத்தால் அணிமையில் உள்ளவராகவே கருதப்படுவர்.

வடமொழியில் மனு முதலிய நூல்கள் அறம் பொருள் இன்பங்கள் விரவக் கூறப்பட்டுள்ளன. பொருட் பகுதியாகிய அரசியல் முறையைத் தனிமையில் விளக்க எழுந்த நூல்களுள், பிருகற்பதியாகிய வியாழ குருவால் தேவர்கள் பொருட்டு இயற்றப்பட்ட பாற்கற்பத்தியமும், உசனஸ் என்னும் சுக்கிரா சாரியரால் அசுரர் பொருட்டு இயற்றப்பட்ட ஔசநசமும் முதலில் நினைக்கத்தக்கனவாம். இவற்றின் பின் எழுந்தன சந்திரகுப்தன் காலத்து அமைச்சராக இருந்த சாணக்கியரால் ஆக்கப்பட்ட கௌடலியமும், காமந்தகனால் இயற்றப்பட்ட காமந்தக முதலியனவும் ஆம். இவற்றுள் இக்காலத்துச் சட்ட நூல் வல்லோராற் பெரிதும் தழுவப்படுவது கௌடலியம் என்னும் நூலேயாம். வியாழனால் ஆக்கப்பட்ட நூலினும் வெள்ளியாகிய சுக்கிரரால் ஆக்கப்பட்ட நூல் தென்னாட்டு வழக்க வொழுக்கங்களுக்குப் பெரிதும் இயைபுடையதாகும் இவற்றின் பிற்றோன்றிய கௌடலிய நூலின் தொடக்கத்தில்

Koviloor Digital Library



அதன் ஆசிரியர் பூர்வாசார்ய வணக்கமாகச் "சுக்கிரப்பிருகஸ்பதிப்யாம் நம:" "சுக்கிரற்கும் பிருகஸ்பதிக்கும் வணக்கம்" என்று கூறியுள்ளார். இதனாலேயே வெள்ளி நூலின் விழுப்பம் புலப்படுவதாகும். பிற்காலத்துக் கவிஞர் பெருமானாகிய கம்பர், "வெள்ளியும் பொன்னும் என்பார் விதிமுறை வகுத்த நூலில்" என்று முறைப்படுத்துக் கூறியதும் இதனை வலியுறுத்தும். இங்ஙனம் சிறந்துள ஔசநஸத்தின் சுருக்கமே 'சுக்கிர நீதி' யென்னும் பொருள் நூலாகும். இச் சுக்கிர நீதியைத் தமிழ் மக்கள் நலங்குறித்து மொழி பெயர்த்த பொழுது யான் கண்ட புதுமைகளும் பழமைக் குரிய சான்றுகளும் பலவாம். "புதல்வர்ப் பேற்றை விரும்பும் பெண் மக்கள் வயிரமணியை அணிதலாகாது" என்று கூறப்பட்டுளது. கருவைத் தடைப்படுத்தற்கு வைரவொளி எங்ஙனம் காரணமாகும் என்பதை இரசாயன நூலார் ஆராய்தல் வேண்டும். இதுபோன்றன புதியனவாம். நீர்ப்பொறி, இசைப் பொறி, காற்றியக்கும் பொறி, கம்பிவழிச் செய்தியனுப்புங் கருவி, நீராவியால் இயக்கப்படும் பொறிகள் முதலிய இக் காலத்துக் காணப்படும் இயந்திரத் தொழில்களைப் பற்றியும் அந்நூலிற் கூறப்பட்டுள்ளன. ஆனால் இவற்றின் அமைப்பு முறைகள் வேறுபட்டிருக்கலாம். போர்த் தொழில் முறைகளும், போர்க் கருவிகளும், பொறி வழியாக ஆயுதங்களைச் செலுத்தும் வெடிமருந்து செய்யு முறையும், படைகளின் அணி வகுப்புக்களும் பிறவும் செவ்வையாகக் கூறப்பட்டுள்ளன. மக்கள் இயங்குஞ் சாலை (Road) ஆமை முதுகுபோல் இருக்கவேண்டுமென்று குறிப்பிடப்பட்டுள்ளது, ஆமை முதுகு இருமருங்கும் தாழ்ந்து நடுவிடம் சிறிது உயர்ந்திருக்கும். இது சாலை வழியிற் பெய்யும் மழை நீரால் அச் சாலை கெடாமலிருப்பதற்குக் கருதப்பட்டதாகும். மேலும் இந்நூலின்கண் அரசனியல்பு, அவன் பிரகிருதிகளாகிய அமைச்சர் முதலியோரியல்பு, வினைசெய்யும் ஏவலரியல்பு, கிராம பரிபாலனம், வாணிகமுறை, நியாய மன்றங்கள், நீதிபதிகளின் அதிகாரங்கள், வழக்கின் இயல்புகள் முதலியன விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

Koviloor Digital Library



கரிகாற்சோழவரசனைக் குடிமக்களுள் ஒருவனாகச் சிலப்பதிகாரம் கூறும். இதனால் அரசன் குடிமக்களின் உயர்ந்தவனாகத் தன்னை எண்ணலாகாது என்பது புலனாம். செங்கோன்மை தவறாது செலுத்தும் நல்லரசற்கு அரசியற்காரியம் தன்னலங் குறித்ததாகாது குடிமக்கள் நலங் குறித்ததேயாம். இங்கே, கோவலனைக் குற்றமில் வழியும் கொலைபுரிவித்த பாண்டியனைக் கண்ணகியார் வெகுள, அது காரணமாகப் பாண்டியன் உயிரிழந்தான் என்று தண்டமிழ்ப் புலவர் சாத்தனார் செங்குட்டுவற்குக் கூறினாராக, அதுகேட்ட செங்குட்டுவன் பாண்டியன் தவறின்மையையும் அரசியல் நடாத்தும் சிரமத்தையும் சாத்தனார்க்குக் கூறுமுகமாக,

“ மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்லென ”

என்று இளங்கோவடிகள் கூறியது நினைந்தின்புறத்தக்கது. “ அரசன் குடிகளிடத்தினின்று தனக்குரிய அரசிறையாகிய வேதனத்தைப் பெறுதலால் அக்குடிகளுக்கு ஏவலாளாந் தன்மையுடையனாவான் ” எனவும், “ பூ மரத்தை வளர்த்து மலர் பறித்து மாலைகட்டிப் பயன்பெறுபவனையொப்பக் குடிகளைப் பாதுகாத்து அவர்பால் அரசிறை பெறவேண்டும் ” எனவும், “ அங்ஙனமன்றி அம்மரத்தை யெரித்துக் கரிசெய்து பயன் பெறுதல்போலக் குடிகளைக் கெடுத்துச் சிறுபயன் கொள்ளலாகாது ” எனவும் சுக்கிரநீதி கூறுகின்றது .இச் செய்திகள் மிகவும் பாராட்டற்குரியனவாம்.

திருக்குறட் பொருட்பகுதியில் அரசர் அமைச்சர் படைத்தலைவர் முதலியோரின் இலக்கணங்களாகக் கூறப்பட்டனவும் பிறவும் யாண்டும் காண்டற்கரியனவாம். ஒற்றர் இயல்பு கூறுங்கால், ஒற்றும் நீதிநூலும் ஆகிய இரண்டும் அரசர்க்கு இரு கண்களாகும் என்று கூறப்பட்டுள்ளது நாட்டின் இலக்கணங் கூறுங்கால், ஒரு நாட்டில் வாழ்வார் தேடி வருந்தாமல்

Koviloor Digital Library


வேண்டுவனவெல்லாம் ஆங்கே பெறத்தக்கதாக இருத்தல் வேண்டும் என்னுங் கருத்தமைய "நாடென்ப நாடா வளத் தன" என்கிறார். பிணியின்மையும், நிரம்பிய செல்வமும், விளைவும், இன்பமும், காவலும் ஆகிய இவ்வைந்தும் நாட்டிற்கு அழகு செய்வனவெனவுங் கூறப்பட்டுள்ளது. இதனால் அரசன் தன்னாட்டை இத் தகுதிகளுக் குரியதாக அமைத்துக்கொள்ளல் வேண்டுமென்பது புலனாகும். அமைச்சரியல்பு கூறுங்கால், வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகையென மூன்ற திகாரங்கள் காணப்படுகின்றன. இவற்றை ஊன்றிப் படிப் பார்க்குத் தாம் செய்யவேண்டிய காரியங்களைப்பற்றிய தெளிவு கல்லெழுத்துப்போல நெஞ்சிற் பதிவதாம். திருக்குறளே யல்லாமல் நாலடியார், நான்மணிக்கடிகை, திரிகடுகம், சிறு பஞ்சமூலம் முதலிய சங்கமருவிய நீதிநூல்களும் தமிழிற் பலவுள. அவையெல்லாம் மக்கள் ஒழுக்க முறைகளை வரை யறுத்துத் தெளிவுபடுத்துவனவாம்.

நாலடியார் என்னும் நூல் சுற்பார் மனத்தைக் கவர வல்லது. "ஆலும் வேலும் பல்லிற்குறுதி நாலுமிரண்டுஞ் சொல்லிற்குறுதி" என்னும் பழமொழியில் நாலென்பது நாலடியாரையும் இரண்டு என்பது ஈரடியானமைந்த திருக் குறளையுங் குறிப்பனவாம். ஒருவன் சிற்சில செயல்களிற் செவிடனாய்க் குருடனாய் ஊமையாயிருத்தல் வேண்டுமென நாலடி கூறுகின்றது. இம்முறை வியக்கத்தக்கது. இதன் கருத்து, பிறர் இரகசியங்களைக் கேட்பதிற் செவிடனாகவும், பிறர் மனைவியரைக் காம நோக்கமாகக் காண்பதிற் குருடனாக வும், பிறரைப்பற்றிக் காணாவிடத்துப் புறங்கூறுவதில் ஊமை யாகவும் இருத்தல்வேண்டும் என்பதாம். இங்ஙனம் சாதுரிய மாகக் கூறுமியல்பு இந்நூலிற் பலவிடங்களிற் காணலாம். ஒருவன் மற்றொருவன்பால் இல்லாத குணங்களைப் புகழ்தலி னும் அவனை வைதல் நல்லதென்கிறார். கடையாயார், இடை யாயார், தலையாயார் ஆகிய இம் முத்திறத்தாரும் அஞ்சுதற் குரியன யாவை என்னும் வினாவை எழுப்பி விடையிறுக்கு முகமாக முறையே கடையாயார் பசிக்கு அஞ்சுவரெனவும், இடையாயார் துன்பத்திற்கு அஞ்சுவரெனவும், தலையாயார் பழிச் சொல்லிற்கு அஞ்சுவரெனவும் கூறுவர். குலப்பெருமை

Koviloor Digital Library



பேசுவார்க்கு "நல்லகுல மென்றுந் தீய குலமென்றுஞ் சொல்லள வல்லாற் பொருளில்லை" என்றும், "தவங் கல்வி யாள்வினை என்றிவற்றா னாகும் குலம்" என்றுங் கூறுவர். இன்னோரன்ன சிறந்த நீதிமணிகள் பல ஒளி செய்தலை இந்நூலாகிய பொற் பேழையிற் பரக்கக் காணலாம்.

பிற்காலத்து ஔவைப் பிராட்டியார் அருளிய ஆத்திசூடி, வாக்குண்டாம், நல்வழி முதலிய நீதிநூல்கள் சிறுவரும் உணர்ந்து இன்புறத்தக்க நிலையில் அமைந்து பேரறிவாளர்க்கும் விருந்தாக விளங்குவன. 'இயல்வது கரவேல்' என்னுஞ் சூத்திரம் ஒருவன் மனமொழி மெய்களாற் பிறர்க்குச் செய்யக்கூடிய உதவியை யொளித்தலாகாது என்னும் பொருளை யுட்கொண்டு இப்பொருளின் விரிவுகளுக் கெல்லாம் நிலைக்களமாக நிற்றலை நோக்குவார்க்கு இதன் திட்ப நுட்பங்கள் இனிது விளங்கும்.

> "சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
> செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
> திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்"

என்பதனாற் சூத்திரத்தின் இலக்கணத்தை யறியலாம். இவ் விலக்கணத்துக்குப் பெரிதும் இவ் ஆத்திசூடிச் சூத்திரங்கள் இயைபுடையவாக விளங்குவன. இந்நூல் மாபாடியம் போன்ற விரிவுரையை யேற்குந் தகுதி வாய்ந்தது. உயர்ந்த நீதிகளைச் சிறுவர் எளிதிலுணர்ந்து கொள்ளுதற்கும் பெரும் புலவர்கள் பல திறமாக வகுத்து ஆராய்ந்து உரை காண்டற்கும் இஃது இலக்கியமாகத் திகழுமாயின் இதனை யுபகரித்த தமிழ்ச் செல்வியின் அறிவின்றிட்பம் எத்துணைச் சிறந்ததாகும் என்பதை அறிவுடையார் உணர்வாராக. பண்டை நீதிநூலார் கூடியவரை முயன்று தம் அனுபவத்திற் கண்ட உண்மைகளை நெடுங்காலமாயினும் சிதையாமலிருத்தற் பொருட்டுச் சூத்திர வடிவிலும் செய்யுள் வடிவிலும் யாத்துதவினர். அவை உரை நடையில் ஆக்கப்படாமை குறையென்ப ஒரு சாரார். முற்காலத்தில் இவ்வளவு விரிவாக அச்சிடுதற்குரிய வசதிகளில்லை. கற்பவர் நெஞ்சத்தில் உரை நடையினும் செய்யுள் நடை நிலை

Koviloor Digital Library



பெற்று ஞாபகத்துக்கு நன்கு பயன்படும். காலந்தோறும் மக்கள் வழக்க வொழுக்கங்கள் மாறுபடுதலியல்பே. அம் மாறுபாட்டிற் கேற்ப நீதிகளும் திருத்தப்படுமென்பது சொல் லாமலே விளங்கும். மகாபாரதத்துக் கண்ட சில அறங்கள் இக் காலத்துக்குப் பொருத்தமாகக் காணப்படா. அது பற்றிப் பேரறிஞராகிய வியாச முனிவர் இழித்துரைக்கப்படுவா ரல்லர். ஆகவே எத்தகைய நீதிகளையும் கால நோக்கிக் கொள்ளுதலும் தள்ளுதலுஞ் செய்தல் வேண்டும். “பழையன கழிதலும் புதியன புகுதலும்” என்பதைக் கடைப்பிடித்து மனம் போனபடி செய்யத் துணிதல் நன்றன்று. இங்ஙனம் வடமொழி தென்மொழிகளிற் சிறந்த நீதிநூல்களை யாக்கிய பெரியாருடைய இயல்புகளை இங்கே கூறியன கொண்டு தெளிந்துகொள்க.



Koviloor Digital Library

# மின்னலும் இடியும்

"N. K. வேலன்"

'மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை' என்னும் பழமொழி ஒன்று வழங்கி வருகின்றது. மின்னலுக்கும் மழைக்கும் அல்லது மேகத்திற்கும் ஏதேனும் தொடர்பு உண்டா என்பது ஈண்டு ஆராயப்படும். வானத்திற் கரிய மேகங்களின் இடையே பளிச்சுப் பளிச்சென்று மின்னல் தோன்றிக் கண்ணைப் பறிக்கின்றது. கண்ணை மூடித் திறப்பதற்குள் வானமும் நிலமும் கிடுகிடுக்கும் வண்ணம் இடியோசை கேட்கின்றது. சில வேளைகளில் மின்னல் தோன்றி மறைந்தவுடன் மரங்கள் ஒடிந்து சாய்வதையும் கரிந்துபோவதையும் காணலாம். இடியினுல் ஆடுமாடுகளுக்கும் ஏனைய உயிர்களுக்கும் சேதம் ஏற்படுவதும் உண்டு.

மின்னல் இடி இவற்றின் தன்மைகளை நன்கு ஆராய்ச்சி செய்வதற்கு முன்னர் மக்கள் இவ் வியத்தகு நிகழ்ச்சிகளைப் பற்றிப் பலவேறு கதைகளைக் கட்டியிருந்தனர். மின்னற் கொடி என்னும் தேவ அணங்கினை இடி என்னும் அசுரன் துரத்திச் செல்வதாகச் சிலர் எண்ணி இருந்தனர். மற்றும் சிலர் மேகங்களை இந்திரன் வருணன் முதலிய தேவர்களின் ஊர்திகளென்றும், மின்னல்கள் அவர்கள் வீசியெறியும் வாள்களென்றும் கூறிப் போந்தனர். மேகங்களுக்கு அரசனுன இந்திரனுக்குப் பிள்ளையெனக் கூறப்படும் அருச்சுனனுடைய பெயரைச் சொன்னுல் இடி நிலத்தில் விழாதெனச் சிலர் நம்பி வந்தனர். இதனுலேதான் இடி இடிக்கும்பொழுது 'அருச்சுனு' 'அருச்சுனு' என்று சொல்வது இன்னும் சில இடங்களில் வழக்கமாக இருக்கின்றது.

மின்னல், இடி இவற்றின் தன்மைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்தவர் பெஞ்சமின் ஃபிராங்க்ளின் (Benjamin Franklin) என்னும் அமெரிக்க நாட்டு அறிஞர். மின்சாரக் கருவியில் உண்டாகும் நீளமான சுடர்கள் எல்லா வகையிலும் மின்னலை ஒத்திருப்பதை அவர் கண்டார். மின்னல் என்பது மிகப்

Koviloor Digital Library



பெரிய மின்சாரச் சுடராக இருக்கலாம் என்று அவருக்குத் தோன்றிற்று.

மின்சாரச் சுடர் நேராய்ப் பாய்வதில்லை. அது நெளிந்து நெளிந்து ஓடும். மின்னலும் இங்ஙனமே பாய்கின்றது. கூறிய முனையுடைய பொருள்கள் மின் ஆற்றலைத் தம்மிடம் இழுக்கின்றன. இங்ஙனமே மின்னலும் மலை, மரம், கோபுரம், புகை போக்கி இவற்றின் உச்சிகளைத் தாக்குகின்றது. தனது ஆற்றலை எளிதில் கடத்தும் பொருள்களையே மின்சாரம் தேடிச் செல்கின்றது. மின்சாரம் போதிய ஆற்றலுடையதாக இருந்தால் உயிர்களைக்கொன்றுவிடும். மின்னலும் ஆடுமாடு முதலிய உயிர்களைக்கொல்லுந்தன்மையாக இருக்கின்றது. மின்சாரச்சுடரில் சடசடவென்னும் ஓசையுண்டாகும். மின்னல்தோன்றும் போது உண்டாகும் இடியோசையும் இதைப் போன்றதே. மின்னலும் இடியோசையும் ஒரே இடத்தில் தோன்றினும் மின்னலின் ஒளியை முதலில் காணுகின்றோம். சற்றுப் பின்னரே இடியோசை நமக்குக் கேட்கின்றது. ஒலி அலைகளை விட வெளிச்சம் விரைந்து செல்லும் தன்மையுடையது. இதனாலேதான் மின்னலின் ஒளி இடியோசைக்கு முன் விரைந்து வந்து நம்மைச் சேர்கின்றது

மேகங்களில் மின் ஆற்றல் நிறைந்திருக்கவேண்டுமென்றும் இல்லையேல் அவற்றின் இடையில் மின்னல் தோன்றுவதற்கு வழியில்லை என்றும் பெஞ்சமினுக்குத் தோன்றியது. மேகங்களிலுள்ள மின் ஆற்றலைக் கீழே இறக்குவதற்கு இவர் பல வழிகள் தேடினார். முடிவில் ஒரு காற்றாடியைப் பறக்க விட்டு அதன் வழியாக மின்னலைப் பூமிக்குக் கொண்டுவர இவர் முயன்றார். பட்டுத் துணியினால் ஒரு காற்றாடி செய்து அதில் கூர்மையான இரும்புக் கம்பி ஒன்றை வைத்துப் பொருத்தினார். இக் காற்றாடியைச் சணற் கயிற்றால் கட்டி மின்னலும் இடியும் தோன்றும் வேளை பார்த்து உயரத்தில் பறக்கவிட்டார். சணற் கயிற்றின் மற்றொரு முனையில் இரும்புச் சாவி ஒன்றைக் கோத்தார். மின் ஆற்றல் பூமியில் ஒழுகிவிடாது இருக்கும்பொருட்டுச் சணற் கயிற்றில் ஒரு பட்டு நாடாவைக் கட்டி அதனைப் பிடித்துக்கொண்டார். ஏனெனில் பட்டுத்

Koviloor Digital Library



துணியில் மின் ஆற்றல் எளிதிற் பாய்வதில்லை. காற்றாடியின் அருகில் ஒரு மேகம் வந்தது. உடனே அதன் வாலும் கயிறும் விறைத்து நின்றன. பெஞ்சமின் ஒரு கையில் பட்டு நாடாவைப் பிடித்துக்கொண்டு மற்றொரு கையை இரும்புச் சாவியின் அருகில் கொண்டுபோனார். சாவியிலிருந்து மின் ஆற்றல் சுறுக்கென்று அவர் கையில் பாய்ந்தது. ஆகவே மேகத்தில் மின் ஆற்றல் நிறைந்திருப்பது உறுதியாயிற்று. மின்னலும் மின்சாரச்சுடரும் ஒரே தன்மையுடையன என்பது இதனால் விளங்கும்.

மின்னலின் சுடர் மேகத்திலிருந்து நிலத்திற் பாய்ந்தால் அதனையே இடிவிழுந்தது எனக் கூறுகின்றோம். இது மரத்தின்மேல் பாய்ந்தால் மரம் பட்டுப்போகும். கட்டிடங்கள்மீது விழுந்தால் அவை இடிந்துபோம். பொருள்களை இடிப்பதால் இதனை ‘இடி’ என்று சொல்கிறோம். உயிர்களின்மேல் விழுந்தால் அவ் உயிர்கள் இறந்துபடுகின்றன. இங்ஙனம் விழும் இடி தனித்து நிற்கும் பொருள்களையே நாடிச்செல்கின்றது. அடர்ந்த காடுகளையும், நெருக்கமாய்க் கட்டப்பட்ட கட்டிடங்களையும் இடி தாக்குவதில்லை. மின்னல் உண்டாவதற்கு நேர் மின்சாரம் (Positive Electricity), எதிர் மின்சாரம் (Negative Electricity) என்னும் இருவகை மின்சாரம் வேண்டும். மின்சார அழுத்தம் மிகுதியாக இருந்தால் மட்டுமே மின்சாரம் வெள்ளம்போலப் பாயும். அடர்ந்த காடுகளில் ஆயிரக்கணக்கான மரங்கள் இருப்பதால் மேகத்திலுள்ள மின் ஆற்றல் ஒவ்வொரு மரத்தின் வழியாகவும் சிறிது சிறிதாக ஒழுகி நிலத்திற்போய்ச் சேர்ந்துவிடுகின்றது. வீடுகள் நெருங்கிய பட்டினங்களிலும் இங்ஙனமே நேர்கின்றது. தனித்த கோபுரங்களையும் தனித்த மரங்களையுமே மின்னல் தேடிச்சென்று அழிக்கின்றது.

கட்டிடங்களின்மேல் இடி விழாமல் பாதுகாப்பதற்கு ‘இடி தாங்கிகள்’ உதவுகின்றன. செம்பினாலாகிய கம்பி அல்லது பட்டையை இடிதாங்கி எனக் கூறுவர். இக் கம்பியின் ஒரு முனை கட்டிடத்திற்குமேல் கூர்மையாக நீட்டிக்கொண்டிருக்கும். கம்பியைச் சுவரின் வெளிப்புறமாகக் கீழே இறக்கி

Koviloor Digital Library



அதன் மற்ருெரு முனையைத் தரையில் ஆழமாகப் புதைத்து விடவேண்டும். இக் கம்பி தன் கூரிய முனையின் வழியாய் மின் ஆற்றலைச் சிறிது சிறிதாய் இழுத்து அதன் அழுத்தத்தைக் குறைத்துவிடும். இதனுல் அக் கட்டிடத்தில் மின்னல் பாய்வ தில்லை. அப்படிப் பாய்ந்தாலும் மின் ஆற்றல் கம்பியின் வழியாய் நேரே நிலத்துக்குள் போய்விடுகின்றது. ஆகவே இடியினுல் அக் கட்டிடத்திற்காவது சுற்றுப் பக்கங்களிலுள்ள மற்றக் கட்டிடங்களுக்காவது யாதொரு தீங்கும் நேருவதில்லை.

இயற்கையில் மின் ஆற்றல் எங்கும் மலிந்துகிடக்கின்றது. பொருள்கள் ஒன்ருேடொன்று உராய்வதால் மின் ஆற்றல் உண்டாகின்றது. அரக்குக் கோலைக் கம்பளித் துணியில் தேய்த்து அதனைக் கிழிந்த மெல்லிய காகிதத் துண்டுகளின் அருகில் கொண்டுவந்தால் அத் துண்டுகள் குதித்து அரக்குக் கோலிற் போய் ஒட்டிக்கொள்கின்றன. அரக்குக் கோலைத் தேய்ப்பதனுல் உண்டாகும் மின் ஆற்றலே காகிதத் துண்டு களைக் கவர்கின்றது. இங்ஙனமே கண்ணுடிக் கோலைப் பட்டுத் துணியில் தேய்த்தால் கண்ணுடிக் கோலில் மின் ஆற்றல் ஏறுகின்றது. பெரிய அளவில் மின் ஆற்றலை உண்டாக்குவதற்கு இரண்டு முறைகள் கையாளப்பட்டுவருகின்றன. பெட்ரோல் எண்ணெயை ஆவியாக மாற்றி அதனை வெடிக்கச்செய்து அதன் உதவியால் மின்சாரப் பொறியைச் சுழலும்படி செய் வார்கள். சில இடங்களில் நீர்வீழ்ச்சியின் உதவியால் உருளை களைச் சுழற்றி மின்சாரம் எடுக்கப்படுகின்றது.

மின்சாரம் கரந்து உறைவதாகவும், எங்கும் நிறைந்ததாக வும், ஆற்றல் மிகுந்ததாகவும் இருக்கின்றது. இதன் தன்மையை முற்றும் அறிந்தவர் எவருமில்லை.



Koviloor Digital Library



# இசைத்தமிழின் மாண்பு

நெல்லைத் தமிழிசைவாணர்
" சா சுந்தர ஓதுவா மூர்த்திகள் "
(உரிமை ஆசிரியர்க்கே)

இவ்வுலகிற் பேசப்படும் மொழிகளிற் சிறந்தது தமிழ்மொழி. இஃது இயல், இசை, நாடகமென மூன்று வகைப்படும். இசைத்தமிழ் ஏனையிரண்டோடும் இயைபுடையது; அது, நடுவில் அமைந்து நிற்றலே இவ்வுண்மையை வெளிப்படுத்தும்.

இயற்றமிழ் :—எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென்னும் ஐந்திலக்கணங்களும் அவை அமைந்த இலக்கியங்களும்.

இசைத்தமிழ் :—சுரம், சுருதி, இராகம் என்னும் மூன்றின் இலக்கணங்களும் பன்னீராயிரம் (12000) ஆதியிசைகளும், பண்களும்.

நாடகத்தமிழ் :—தாளம், பாவனை, அலங்காரம். இரசம் என்னும் நான்கு அங்கங்களும் உடையன.

எழுத்தொடு சொற்பொருள் யாப்பணி என்னு வழுத்துஞ்
சுருதி சுரம் ! வண்ணம்—அழுத்தும் தனிலொற்றுப் பாவனை
தாள மிரசம் பனிரண் டிலக்கணமாம் பார். (மதிவாணன்)

இவற்றுள் இசையென்பது பண், சுரம், காமரப்பாட்டு, கானம், குழைவரி, கந்தருவம், கீதம், இராகம், கேயம், நாதம் எனவும் சொல்லப்படும்.

ஏழிசை யென்பது, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்று நம் பண்டைத் தமிழ் மக்களால் வழங்கப்பட்டன.

ஏழிசை பிறக்குமிடம் :—குரல் மிடற்றிலும், துத்தம் நாவிலும், கைக்கிளை அண்ணத்திலும், உழை சிரத்திலும்,

Koviloor Digital Library



இளி, நெற்றியிலும், விளரி நெஞ்சிலும், தாரம் மூக்கினும் பிறக்கின்றன.

அவற்றுள், குரல்—முதற் சுரம் (ச) சட்ஜமம் என்றும், துத்தம் இரண்டாம் சுரம்—(ரி) ரிஷபம் என்றும்,—கைக்கிளை மூன்றாம் சுரம் (க) காந்தாரம் என்றும், உழை—நான்காம் சுரம் (ம) மத்திமம் என்றும், இளி—ஐந்தாம் சுரம் (ப) பஞ்சமம் என்றும், விளரி—ஆறாம் சுரம் (த) தைவதம் என்றும், தாரம்—ஏழாம் சுரம் (நி) நிஷாதம் என்றும் இக்காலத்தில் வேற்றுப் பெயர்களால் வழங்கப்படுகின்றன.

இவ்வகையாக இசைத்தமிழ் வழங்கிவரும் ஏழு சுரங்களும் பண்டு தமிழ்நாடென்றழைக்கப்பட்ட நாவல் தீவு, இரலித்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, புட்கரத்தீவு, தெங்குத்தீவு, கமுகுத்தீவு என ஏழு தீவுகளிலிருந்தும் உண்டானவையாகச் சொல்லப்படுகின்றன.

மேலும் அவை, ஏழு முனிவர்களால் கண்டுபிடிக்கப் பட்டவையாகவும் கருதப்படுகின்றன. இதையே வடமொழியில் ஆதிநூலாகிய சங்கீத ரத்நாகரம் செய்த சாரங்க தேவரும், ஜம்புத்தீவு, சாகத்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, சால்மலித்தீவு, புட்கரத்தீவு சுவேதத்தீவு என ஏழு தீவுகளிலிருந்தும் ஏழு சுரங்களுண்டாயினவெனக் கூறுவதோடு, தர்க்க விபாஷா தேவாரவர்த்தினி, மாளவகைசிக தேவாரவர்த்தினி, பின்ன சம்சவிபாஷா தேவாரவர்த்தினி, தட்சிண குச்சரி, திராவிடி, திராவிடகுச்சரி, திராவிடபாஷா சோம ராகம், தட்சணாத்யாபாஷா சுத்தபஞ்சமம், தட்சண பாஷாங்கம் என்று தமிழ்நாட்டில் வழங்கி வந்த பண்களையும் சொல்லுகிறார்.

ஏழு தீவுகளுக்கும் ஏழு சுரங்கள் சொல்லப்படுவது போலவே ஏழு தீவுகளின் உட்பிரிவாகிய ஏழு நாடுகளுக்குத் தகுந்தவிதமாய் ஒவ்வொரு சுரத்திற்கும் ஏழு சுருதிகள் வழங்கி வந்ததாகவும் தெரிகிறது. ஏழு என்ற சொல் தமிழில் சொல்லக்கூடிய சிறப்பெழுத்துடையதா யிருப்ப தோடு ஏழு என்ற எண்ணால் குறிக்கப்படும் பொருள்களும்

Koviloor Digital Library



தமிழ்நாட்டிற்கே சிறந்தவை என்றும், முதல் முதல் தமிழ் நாட்டிலேயே வழங்கிவந்தன வென்றும் சொல்லலாம்.

தமிழ் மக்கள் வழங்கிவந்த கலைகள் எல்லாவற்றுளும் ஏழு என்னும் எண் மிகுதியாய் வருகின்றது. ஏழிசை, யாழின் ஏழு நரம்பு, ஏழு கிரகங்கள், ஏழு கிழமைகள், ஏழு பண்கள், ஏழு வங்கியம், ஏழுவகைத் தோற்றம், ஏழு தீவு, ஏழு நாடுகள், ஏழு தாளம், ஏழு தாதுக்கள், ஏழு குதிரைகள், ஏழு பருவங்கள், ஏழு கண்டங்கள், ஏழு மாதர்கள், ஏழு முழவுகள், ஏழு முனிவர்கள், ஏழு மேகங்கள், ஏழு வள்ளல்கள், ஏழு நதிகள், ஏழு பதிகள் என்ற வார்த்தைகளை உற்றுநோக்குக.

இவை, சங்கீதம், சோதிடம், இலக்கணம், முதலிய பல கலைகள் சம்பந்தமாக வழங்கிவந்த வார்த்தைகளென்று நாமறிகிறோம். இவற்றுள் ஏழு சுரங்களையும், ஏழு தாளங்களையும், ஏழு பாலைகளையும், ஏழு பண்களையும், ஏழு முழவுகளையும், ஏழு வங்கியங்களையும், யாழின் ஏழு நரம்புகளையும் முற்றிலும் தமிழிசையில் வழங்கிவருகிற கணிதமுறை யென்று தெரிகின்றது.

தமிழ்நாடு ஏழு பெருந்தீவுகளாக இருந்ததென்று இதன் முன் பார்த்தோம். அம்முறைக் கிணங்கவே எவ்வேழான இக் கணக்குகள் வழங்கி வந்திருக்கின்றன வென்று தோன்றுகிறது. அநேக கணக்குகள் ஏழு என்னும் எண்ணில் வருகின்றன.

இனி ஏழு சுரங்களும் எந்தெந்த அளவோடு வருகின்றன வென்று பார்க்கவேண்டியது அவசியமாகும். வானமண்டலத்தை எப்படிப் பன்னிரண்டு ராசிகளாகப் பிரித்து அதில் ஏழு கிரகங்களின் சஞ்சாரங்களை ஆசிரியர்கள் சொன்னார்களோ, அப்படியே ஒரு ஸ்தாயியைப் பன்னிரண்டு பாகங்களாய்ப் பிரித்து அதில் ஏழு சுரங்களின் சஞ்சாரக் கிரமம் இன்ன எனவும் சொல்லி யிருக்கிறார்கள். ஆகையினால், ஒரு ஸ்தாயியில் பன்னிரண்டு சுரஸ்தானங்கள் ஏற்படுகின்றன என்றும், அதில் ஏழு சுரங்கள் தங்கள் கணிதமுறைப்படி வெவ்வேறு ராகங்களாகச் சஞ்சரிக்கின்றனவென்றும் நாமறியவேண்டும்,

Koviloor Digital Library



இதுபோலவே தமிழ் எழுத்துக்களின் உயிரெழுத்து பன்னிரண்டாகவும், அவற்றுள். நெட்டெழுத்துமட்டும் ஏழா கின்றது. அவை, யாழின் பன்னிரண்டு மெட்டுக்களையும் ஏழு சுரங்களையும், நினைவுகூர்விக்கின்றன. அப்படியே உடம்போடு கூடிய மக்கள் முதலிய உயிர்கட்கு ஆறுமேலாமென பன்னிரண் டாதாரங்களுண்டு. அவற்றிற்கு ஏழுவகைத் தோற்றமு முண்டு. பன்னிரண்டு சூரியர்களுண்டு. அவற்றிற்கு ஏழு குதிரைகளுமுண்டு. இங்ஙனம் எண் ஒப்புமை காணப் படுகின்றது.

ஒரு ஸ்தாயின் பன்னிரண்டு சுரங்களுள் ச, ப, என்ற சுரங் கள் சிவ, சத்திபோல தலையான சுரங்களாய் இருப்பதினால் இவைகளை எக்காலத்திலும்மாற்றாமல் நிலையான சுரமாய் வைத் திருக்கிறார்கள். இவைகள் இடபந் தனுசு என்ற இராசிகளில் தனித்தனியாயிருக்கின்றன. துத்தம், கைக்கிளை, உழை, விளரி, தாரம், அல்லது, ரி, க, ம, த, நி என்ற ஐந்து சுரங்களும் இரண்டிரண்டு ராசிகளில் நின்று இரண்டிரண்டு இடங்களைப் பெறுகின்றன. ஆகவே, சட்சமம் (1) இடபம் (2) காந்தாரம் (2) மத்திபம் (2) பஞ்சமம் (1) தைவதம் (2) நிஷாதம் (2) ஆகப் பன்னிரண்டு ராசிகளில், 1, 2, 2, 2, 1, 2, 2, என்ற ஸ்தா னங்களில் ஏழு சுரங்கள் இருக்கின்றனவாகப் பண்டைத் தமிழ் மக்கள் வழங்கிவந்திருக்கிறார்கள்.

இவ் வேழு சுரங்களையும் இம்முறையாகவே இவைகளுக் குரிய கணக்கின்படி கிரக மாற்றிக் கொண்டு வருகையில் தாய் இராகங்களாகிய ஏழு பெரும்பாலைப் பண்கள் பிறக்குமென் றும் இம்முறைப்படியே பன்னிரண்டு சுரங்களிற் கிரக மாற்றிக் கொண்டு வரப் பன்னிரு பாலை பிறக்குமென்றும் கணக்கிட் டிருக்கிறார்கள். இவை விரிவாக விவரிக்கப்பட்ட நூல்களுள் 'பெருநாரை'—'இசைநுணுக்கம்' முதலியவை முக்கியமாகும். 'இவைகள் 369 ஸ்வரங்கள் உள்ள நூல்கள். தமிழரே சங்கீதப் பிக்ஷையைப் பலர்க்கும் அளித்தனர். இவர்கள் இசையை அவரவரும் தங்கள் பாஷைக்குத் தக்கபடி சொற்களை அமைத்து இசைநூல்கள் எழுதிக்கொண்டனர்.

Koviloor Digital Library



தமிழரின் பேரிசையைக் கற்றுக்கொண்டவர்கள் காலஞ் சென்ற திரு. முத்துசாமி தீக்ஷிதர், திரு. தியாகராஜ ஐயர், திரு. சியாமா சாஸ்திரிகள் முதலியோர். முத்துசாமி தீக்ஷிதரவர்களால் ஆக்கப்பட்ட சமஸ்கிருத சாஹித்யங்கள் இணைந்துள்ள சங்கீத விஸ்தாரமும், தியாகராஜ ஐயரால் ஆக்கப்பட்ட தெலுங்கு சாஹித்யங்கள் இணைந்துள்ள ஸ்வர கிரவல்களும், சியாமா சாஸ்திரியாரால் ஆக்கப்பட்ட தெலுங்கு சாஹித்தியங்கள் இணைந்துள்ள சங்கீதமும் தமிழே. அந்த ஸ்வரங்களுக்கு நேராகத் தமிழ் எழுத்துக்களை அமைக்க முடியும்.

தமிழரின் பேரிசை நூல்கள் பல காரணங்களால் அழிவுற்றன. எஞ்சியிருக்கும் 'சிலப்பதிகாரம்,' 'சீவகசிந்தாமணி' முதலியவற்றில் சங்கீதத்தைப்பற்றிச் சில குறிக்கப்பட்டுள்ளன. மறைந்தவை போக இசை இலக்கியங்களான தேவாரமும், தாள இலக்கியங்களான திருப்புகழ் முதலியனவும் இருக்கின்றன.

இத்துணைச் சிறப்புவாய்ந்த இசைக்கலையை நாம் நன்கு பயன்படுத்திக்கொள்ளவேண்டும் நம் நாட்டினர் தன் நிலை உணராது மற்றத் துறைகளைப்போலவே நம் சங்கீதத்துறையிலும் 'மாற்றம் விரும்புகின்றனர். இது நம் கலைக்கு அழிவேற்படும் நிலையிலுளது.' உத்தம சங்கீத வித்துவான்கள் நம் தமிழ் இசைக்கலையில் தாம் கண்ட உண்மைகளை நிலைக்கச்செய்யப் பாடுபடவேண்டும். எவ்வெவ்வகையில் கலைவளர்ச்சியை முன்னேற்றமுடியுமோ, அவ்வவ்வகையில் அறிவுடை அனுபவசாலிகளான கலைவல்லவர்களின் கலைப்பணியை நாம் எதிர்பார்க்கவேண்டும். நம் தமிழ் வித்வான்கள், மக்களால் அறியப்படச் சீர்குலைந்து சின்னாபின்னப்பட்டுக் கிடக்கும் நம் இசைக் கலையை வளர்க்க முன்வருவார்களென்று எதிர்பார்க்கிறேன். இதனால் இசை மேம்பாடடையும். அதனால் நம் மக்கட்குப் பெருமையுண்டு. மேலும் நம் நாட்டிற்குத் தனி மதிப்புண்டு. இதை என்றென்றும் மறவாமல் மக்கள் ஆவனசெய்ய முற்படுவார்களாக!

―――

Koviloor Digital Library

# யாப்பியல் அமையாச் செய்யுள்

## (VERSE WITHOUT METRE)

"ந. மு. வேங்கடசாமி நாட்டார்"

தமிழ் மொழி வழக்கு எனவும் செய்யுள் எனவும் இரு வகையினை உடையது. மக்கள் பலரும் பேசும் சொல் நடையே வழக்கு என்பது. கற்றுவல்ல புலவர்களாற் செய்யப்படுவது செய்யுள் ஆகும். ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளை அடிவரையறை உடையது எனவும், அடிவரையறை இல்லது எனவும் இருவகைப்படுத்து உரைக்கின்றார். முன்னதில் வெண்பா முதலிய பாக்கள் யாவும் அடங்கும். பின்னதை ஆறுவகைப்படுத்துத் தொல்காப்பியர் கூறினும் நூல், உரை என்ற இரண்டினுள் அவற்றை நாம் அடக்கிக்கொள்வோம். எனவே செய்யுள் என்பது பாச் செய்யுள், நூற் செய்யுள், உரைச் செய்யுள் என மூவகைப்படும். இவற்றுள் நூற் செய்யுள் என்பது சூத்திரம். உரைச் செய்யுள் என்பது கட்டுரை. இப்பொழுது செய்யுள் என்ற அளவில் சூத்திரமோ, கட்டுரையோ உணரப்படுவதில்லை. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா வஞ்சிப்பா என்னும் பாக்களும், அவற்றின் இனமாகிய தாழிசை துறை விருத்தங்களும், மருட்பா, பரிபாடல் என்பனவுமே செய்யுள் என்று உணரப்படுவன. இவை பாட்டு என்னும் பெயராலும் வழங்கற்குரியன.

யாக்கை, யாப்பு என்பன இரண்டும் யாத்தல் (கட்டுதல்) என்னும் பகுதியடியாகப் பிறந்தன. பல்வகைத் தாதுக்களால் யாக்கப்பட்டது உடம்பு. பல்வகைச் சொற்களால் யாக்கப்பட்டது செய்யுள். யாவரும் அழகுள்ளவற்றையே விரும்புவர். உடம்பு அழகுடையதாவது அதன் உறுப்புக்கள் பலவும் ஏற்ற வடிவம் உருவம் உடையனவாதலால். அவ்வாறே செய்யுளும் அதன் உறுப்புக்கள் ஏற்ற அளவும் ஓசையும் உடையனவாயின் அழகுடையதாகின்றது. செய்யுள் உறுப்புக்களாவன: எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை முதலாயின. அவை எல்லாவற்றிற்கும் அளவு அல்லது வரையறை உண்டு. அவ்வரையறைகளின் வேறுபாட்டால் வெவ்வேறு

Koviloor Digital Library



வகையான ஓசைகள் உண்டாகின்றன. அவ்வோசை வேறுபாடுபற்றியே வெண்பா முதலிய பாக்கள் வகுக்கப்பட்டன. இவையாவும் சேர்ந்ததே யாப்பியல் என்பது. எனவே யாப்பியல் முற்றும் அமையாத செய்யுள் உண்டு என்பதற்கே இடமில்லை. ஆனால், ஓர் உடம்பு எவ்வளவு அழகுடையதாயினும், அதனுள் இருக்கும் உயிரின் அறிவு முதலியவற்றிற் கேற்பவே அது மதிப்புப் பெறுவதுபோல, செய்யுளும் அதன்கண் அமைந்த கருத்தின் சிறப்பினாலேயே பெரிதும் மதிக்கப்படுவதாகும். சிலர் செய்யுட்களின் வரையறைகள் கவி தன் கருத்தை உள்ளவாறு வெளியிடுதற்குத் தடையாயிருத்தலின் அவை கூடா என்பர். அவர்க்கு நாம் கூறுவது, உரைக்கும் பொருளுக் கேற்பவே ஒருசார் செய்யுட்கள் கடுமையான வரையறை யுள்ளனவாகவும், மற்றொரு சாரன அங்ஙனம் இல்லாதனவாகவும் வகுக்கப்பட்டிருக்கின்றன என்பதே. கத்தூரியை அதன் மணம் கெடாதவாறு திட்பமுடைய சிறிய சிமிழிற் பெய்து வைப்பதுபோல, மக்கட்கு அறிவுறுத்தும் உயர்தனிக் கருத்தினை அமைப்பதற்கு வரையறை மிகவுடைய சிறிய வெண்பாவானது கருவியாகக் கொள்ளப்பெற்றது. உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்குங் கருத்தினை வெளிப்படுத்தத் துள்ளலோசையினையுடைய கலிப்பாவினைக் கருவியாகக் கொண்டனர். ஒரு நீண்ட கருத்து அல்லது வரலாற்றினை ஒரே தொடர்ச்சியாகச் சொல்வதற்கு அகவற்பா கருவியாயிற்று. அகவலுக்கு மிகுதியான வரையறை அல்லது கட்டுப்பாடு இல்லை. அகவல் அல்லது ஆசிரியப்பாவை ஆயிரம் அடிவரையில் பாடலாமென விதித்துள்ளனர். ஆயிரம் என்பதை அளவின்மை என்றே நாம் கொள்ளலாம். எதுகை, மோனை, இயைபு முதலிய தொடை விகற்பங்களும் இதற்கு ஒரு தலையாக வேண்டுமென்றும் நியதியில்லை. இவ்வாற்றால், ஆங்கிலத்தில் Blank-verse என்பதனோடு இஃது ஒருவாறு ஒற்றுமையுடையது என்னலாம். நீண்ட கருத்தையோ, வரலாற்றையோ, உரையாடலையோ தடையின்றிச் சொல்லிச் செல்வதற்கு இதுவே அமையும். ஆதலின் யாப்பியல் அமையாச் செய்யுள் என்று புதிதாக ஒன்று தேடவேண்டியதில்லை.

Koviloor Digital Library



இனி எதுகை, மோனை முதலிய தொடைகள் கருத்தினைத் தடையின்றிச் சொல்வதற்கு இடையூறாகும் எனச் சிலர் கருதுவர். இது முழு உண்மையாகாது. சிறுவர்கள் இயல்பாகவே எதுகை, மோனைகளைக் கையாளுகின்றனர். பொதுமக்கள் வழங்கும் பழமொழிகளிலும், பெண்டிர்கள் கூறும் ஒப்பாரி முதலியவற்றிலும் எதுகை மோனை நயங்கள் இயல்பாக அமைதலைக் காண்கிறோம். ஆதலின் இதனை இயற்கைக்கு மாறு என்று சொல்லுதல் அமையாது. மற்றும் இவையெல்லாம் சிறந்த ஓசைகளுக்குக் காரணமாகின்றன. மக்களின் கருத்துக்கள் சொற்களால் மட்டுமன்றி ஓசை வேறுபாட்டாலும் உணர்த்தப்படுவன என்பதை நாம் கருத்தில் இருத்துதல் வேண்டும். ஓசையானது உணர்ச்சியை எழுப்பாவிடில் இசைக் கலையினால் என்ன பயனுண்டு? பல்வேறு வகையான உணர்ச்சிகளைப் புலப்படுத்தவும், உண்டாக்கவும் ஓசை கருவியாக இருத்தலால் அன்றே நம் முன்னோராய அறிஞர் பலரும் பல் வகை ஓசை நலமுடைய செய்யுட்களாலேயே நூல்கள் இயற்றிப் போந்தனர்? முன் ஆசிரியப்பாவைப்பற்றி விளக்கிய விடத்து, எதுகை, மோனை அதற்கு இன்றியமையாதன அல்ல எனக் கூறினோம். ஆயினும் சான்றோர்கள் பலரும் பெரும்பாலும் அவை பொருந்தும்படியாகவே செய்யுட்கள் இயற்றியுள்ளனர். அதனால் அவர்கள் கருத்துத் தடையுண்டது என்பதற்கு இடமில்லை. ஆங்கிலத்தில் 'Rythm' எனப்படும் சந்தம் அல்லது தாளவறுதிக்கு எதுகை மோனைகள் சிறந்த கருவிளாகும். இற்கு உதாரணமாக,

> காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
> பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
> அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கலவ ஓடி
> ஒளிக்கின்ற தென்னோ வுரை.
> மலையிடைப் பிறவா மணியே யென்கோ
> அலையிடப் பிறவா அமிழ்தே யென்கோ
> யாழிடைப் பிறவா இசையே என்கோ
> தாழிருங் கூந்தல் தையால்.

என்பவற்றை நோக்குமின். அண்மைக் காலத்தில் தம் கருத்

Koviloor Digital Library



தினைத் தங்கு தடையில்லாது பாடிய சுப்பிரமணிய பாரதியின் செய்யுட்களும் எதுகை மோனை முதலியவற்றால் சந்த நலம் அமைந்தே உணர்ச்சியை எழுப்பி இன்பம் பயத்தல் கண்கூடு.

ஆகவே யாம் யாப்பியல் அமையாச் செய்யுள் வேண்டும் என்பது பொருந்த முடைத்தெனும் கருத்தினேம் அல்லேம்.

---

## வீரத் தமிழர் பாட்டு

எங்கள் தமிழர் பெருமை—உண்மை
　　இப்புவியில் யார்க்கும் இல்லை.
செங்கதிர் போல விளங்கும்—அவர்
　　சீர்மையை என்னென்று சொல்வோம்!

தம்போற் பிறரை மதிப்பார்—நாளுந்
　　தம்முணவைப் பங்கு வைப்பார்.
அன்பே சிவமெனச் சொல்வார்—அவர்
　　யாரையுந் 'தள்ளிநில்' என்னார்.

நந்தனைப் பெற்ற தமிழர்—பொய்யா
　　நன்மொழி கற்ற தமிழர்
சுந்தரர் அப்பர் சம்பந்தர்—வந்து
　　தோன்றிய செந்தமிழ் நாட்டார்.

சாதிக் குறும்பினி யுண்டோ?—மதச்
　　சண்டைகளும் இனி யுண்டோ?—நிதம்
ஓதித் திருத்தொண்டர் வாழ்வை—நிற்கும்
　　ஒள்ளிய நந்தமிழ் உள்ளம்.

ஒன்றே கடவு ளெவர்க்கும்—மாந்தர்.
　　ஒன்றே குலம் உலகெல்லாம்
என்று முழங்கும் சன்மார்க்கம்—அதை
　　எல்லாரும் போற்றிட வாரீர்.

—சுத்தானந்த பாரதியார்.

Koviloor Digital Library

# உடன்கட்டை ஏறுதல்

"C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் B.A., B.L."

கற்பு எனப்படுவது பெண்பாலார்க்கு அமைந்த ஒரு சிறந்த குணம். அது, எல்லா நாட்டாராலும் போற்றப் படுகிறது ஆகும். மற்ற நாடுகளைப் பார்க்கிலும் பரதகண்டத் தில் அதன் சிறப்பு ஒப்பு உயர்வு அற்றது. கற்புடைப் பெண் டிரைப் பத்தினிக் கடவுளராகத் தொழுவது இந்நாடு. மங்கல நாணுடன் தம் ஆயுள் முழுதும் விளங்கவேண்டும் என்பது எல்லாப் பாரத மகளிர்க்கும் உள்ள ஓர் உயரிய உணர்ச்சி. "பொற்றொலியோ டெவையும் போம்" என்றபடி ஒரு பெண் கணவனை இழந்தால் தன் இம்மை நலங்களை எல்லாம் இழந் தும் அவைகளை வெறுத்தும் கைம்மை நோன்பைப் பூண்பாள். அவ்வாறு கைம்மை பூண்பதைக் காட்டிலும் உண்மை அன்பு கொண்டவள் தன் கணவன் உயிர் துறக்கத் தானும் உயிர் துறக்க எண்ணுவாள். இவ்வாறு உயிர்துறத்தலே உடன் கட்டை ஏறல் என்று கூறப்படும்.

உடன்கட்டை ஏறுதல் வடநாட்டில் மாத்திர மன்றித் தமிழ்நாட்டிலும் முன்காலத்தில் வழங்கிவந்தது. வடநாட்டில் கற்பினைப் 'பதிவிரதா தருமம்' என்ற ஒரு சொற்றொடரால் வழங்கிவந்து அதனை ஒவ்வொரு பெண்டிரும் கையாள வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார்கள். அதன் காரண மாக அநேக சிறு பெண்கள் தம் மனதிற்கு எதிரிடையாகக் கணவன் உடலோடு எரியிற் புகும்படி செய்யப்பட்டார்கள். இக் கொடுமை மிகவும் அதிகரித்து வந்தபடியினால் 1837-ல் லார்ட் வில்லியம் பெண்டிங்கு என்ற தலைமை அதிகாரி அதனைத் தடுத்து ஒரு சட்டமும் இயற்றினர். ஓர் அரசனோ, அல்லது தலைவனோ இறக்க அவனுடன் பலபேர் மனைவியரை உயி ருடன் எரித்த கோரச் செயல்களும் இருந்தன. அவை நாளுக்கு நாள் அதிகரித்தும் வந்தன. சில பெண்கள் தம் கணவனைக் கண்டும் இரார். அவளுக்குக் கற்பின் உணர்ச்சி எவ்வாறு ஏற்படும்? அச் செயல்களில், உடன்கட்டை ஏறு தலின் கருத்தும் எவ்வாறு பொருந்தும்? ஆனால் தமிழ்

Koviloor Digital Library



நாட்டிலோ அவ்வாறான பலவந்த வழக்கம் எப்போதும் இருக்கவில்லை. தன் மனவிருப்பப்படி, ஒரு பெண் பிறர் தடுக்கவும் உயிர் வைத்திராளாகி உயிர் துறப்பள். இது கணவன்மீது வைத்திருந்த அன்பினாலே அன்றி, நாட்டு வழக்கத்தினால் அன்று. இதனைப் பாண்டியன் மனைவியான கோப்பெரும் பெண்டின் வீரச் சொற்களினால் அறியலாம்.

பல்சான் றீரே! பல்சான் றீரே!
செல்கெனச் செல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே!
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டா
தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரேம் அல்லேம் மாதோ;
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல; எமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே.

கற்புக்கரசியான கண்ணகி தன் கணவன் கோவலன் அநியாயமாகப் பாண்டியன் கட்டளையால் கொலையுண்டிறக்கவே பாண்டிய அவைக்குச் சென்று அவனுடைய கொடுங்கோல் முறையை எடுத்துக் காட்டித் தன் கற்பினால் மதுரையை எரித்துப் பின் வஞ்சிக்குச் சென்று மேல் உலகம் சென்றாள். இந்த அரிய செயலினால் அவளைத் தெய்வமாகக் கொண்டு பத்தினிக் கடவுளென எல்லா நாட்டாரும் தொழுதனர்.

அந்தச் சரிதம் போலவே பின் காலத்திலும் தம் கணவர்களுடன் உயிர் துறந்த மகளிர் பலரிருந்தனர். அவர்களுடைய உருவங்களைச் செய்து பல இடங்களிலும் வைத்துத் தொழுது வரலாயினர். அவ்வாறு ஏற்பட்ட கோயில்கள் பல தமிழ்

Koviloor Digital Library



நாட்டில் உண்டு. பலகிராமங்களில் அச்சின்னங்கள் படைத்த தனிக் கற்களும் உண்டு. அவைகளை மா சதிக் கல் என்பர். இப்போது மாஸ்திக்கல் என்று மருவிற்று. பெண் மக்கள் இப் பெயரைத் தமக்கு இட்டுக் கொள்ளும் வழக்கமும் இப்போது இருக்கிறது. உதாரணம் மாஸ்தியக்காள், மாஸ்தி யம்மாள் என்பவை. இப்பெயர்கள் கொங்குநாட்டில் மிக அதிகம். சதி என்பது உடன்கட்டை ஏறின பெண்ணின் சிறப்புப் பெயர். அது தாக்ஷாயணியின் பெயரிலிருந்து வந்த தாகும். மாசதிக்கற்களில், கணவன் இறக்க, அவன் உடலுடன் ஒரு பெண் உடன் கட்டை ஏறுவதும் பிறகு இருவரும் மேலுல கத்திற்குச் செல்லுவதுமாகச் சித்திரிக்கப்பட்டிருக்கும். சில கற்களில் உடன்கட்டையேறிய பெண்களின் பெயர் காலம் முதலியவையும் குறிக்கப்பட்டிருக்கும். இவ்வித உருவக்கற்கள் கருநாடநாட்டில் மிக உண்டு. இவைகளை நாட்டு மக்கள் வழி படுவார்கள். ஆகவே கற்பு என்ற குணத்தில் மக்கள் வைத் திருந்த பெருமதிப்பு இதனால் தெரியவரும்.

தமிழ் நாட்டில் பத்தினிப் பெண்டிரைக் கடவுளராகத் தொழுது வந்ததனாலும் அக்கோயில்கள் மிகக் குறைவாக இருக் கிறதனாலும் உடன்கட்டையேறும் வழக்கம் மிகக் குறைந்த அளவினதாகவே இருந்திருக்கவேண்டும். உண்மையாகவே அளவுக்கு மிஞ்சிய அன்பு உள்ளவர்கள்தாம் உடன்கட்டை யேறினார்கள். வற்புறுத்துதல் சிறிதும் இருக்கவில்லை என்றும் இதனால் அறியலாம். ஏனையோர் கைம்மை நோன்பைமாத் திரம் கொண்டிருக்கவேண்டும். அருமையாக ஏற்பட்ட செய லாக இருந்தபடியால் திருவள்ளுவர் முதலியோர் கற்பை மாத் திரம் கூறினார்களே யன்றி உடன்கட்டை ஏறுதலைப் பற்றிக் கூறவில்லை. ஆகவே இவ்வழக்கம் தமிழ் நாட்டில் அரிதாகவும் தமது விருப்பத்தின்படி எற்பட்டது எனவும் நாம் அறிய வேண்டும்.

இக்காலத்திலும் சிற்சில சமயங்களில் பெண்டிர் சிலர் தம் கணவன் இறந்தவுடன் தற்கொலை புரிந்துகொள்வதை நாம் பார்க்கிறோம். சில ஆண்டுகளின் முன் 'அமிர்தபஜார்.' பத்திரிகையில் ஓர் அரிய நிகழ்ச்சி வெளியிடப்பட்டது. தன்

Koviloor Digital Library



கணவன் இறந்ததும் ஒரு பெண்மணி தானும் உடன் கட்டை ஏறவேண்டும் என்று துணிவுடன் சொன்னாள். அதனை அவள் சுற்றத்தார்கள் தடுத்துவிட்டார்கள். ஆனால் அவள் தன் துணிவை எடுத்துக்காட்ட ஒரு விளக்கில் தன் விரலை வைத்து எரித்துக்காட்டினாள். விரல் கரியாகியும் அவள் முகம் வாடவில்லை. உடல் வருந்தவில்லை. புன்சிரிப்போடே மலர்ந்த முகத்தோடே இருந்தாள். அதைக்கண்ட சுற்றத்தார் அவள் இச்சையின்படி நடக்க அனுமதித்தார்கள். உடனே அவள் ஒரு மணப்பெண்போல் அணிந்துகொண்டு கணவன் பாடையுடன் சென்றாள். இறுதியில் தன் ஆடை ஆபரணங்களைத் தானம் செய்து விட்டுப் புன்முறுவலுடன் கணவன் உடலுடன் படுத்துக்கொண்டாள். தீ எரிய எரியச் சிறிதும் மனக்கலக்கமின்றி உயிர்துறந்தாள். இவ்வித மனப்பான்மை இருந்தால் மட்டுமே உடன்கட்டை ஏறலாம். அன்னாரைத் தடுக்கவும் எவராலும் முடியாது. ஆனால் அவ்வாறு நடக்கும் சமயங்கள் மிக அரியவையாம்.

உடன்கட்டை யேறுதலிலும் பலவகை உண்டு. இறந்த உடன் உடலை எரிப்பவர்களில், மனைவி தானும் உயிருடன் ஈமத்தீயில் புகுவாள். இதற்கு எத்தனை மனத்திடம் வேண்டும் என நீங்களே அறிந்துகொள்ளுங்கள். சில சமயிகள் உடல்களைப் புதைப்பதுண்டு. பண்டைத் தமிழரில் இவ்வழக்கம் அதிகம். அவர்களில் உடன்கட்டையேறுவது உயிருடன் புதைபடலே ஆகும். இதுவும் மிகவும் பயங்கரமானதே. ஒன்றிரண்டு சம்பவங்களே நடந்தன என அறிகிறோம். சில பைராகிச்சாதிகளில் இது நடந்ததெனப் படிக்கிறோம். இவ் வழக்கத்தைக் கண்டுதான் அரபிக் கதைகளில் இந்துபாத்து சரிதத்தில் அவனை அவன் பெண்சாதி இறக்கக் குழியில் தள்ளிவிட்டனர் எனச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இவ்வழக்கம் சிற்சிலவாக இருந்திருக்கவேண்டும். ஆனால் பெரும்பான்மையாகக் கணவன் இறந்த செய்தியைக் கேட்ட மனைவி கிணற்றில் விழுந்து இறப்பதுண்டு. இச் செய்திகளை இக்காலத்தில் அடிக்கடி கேள்விப்படுகிறோம். மிக்க அன்புடைய பெண்கள் கணவன் இறந்ததைக் கேட்டவுடனே தமக்குத்தாமே உயிர்விடு

Koviloor Digital Library



வார்களாம். சிலப்பதிகாரத்தில், கண்ணகி வழக்குரை கேட்டுத் தன் குற்றம் உணர்ந்த நெடுஞ்செழியன் 'கெடுக என் ஆயுள்' என்று கூறி அரசுகட்டிலிலிருந்து மயங்கி வீழ்ந்து உயிர்துறக்க, அவன் கோப்பெருந்தேவியும்,

"கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்று
இணையடி தொழுது வீழ்ந்தனள்"

என்று இயல்பாக உயிர்நீத்த செய்தி கூறப்பட்டிருக்கிறது. அவ்விதச் செயல்கள் அருமையிலும் அருமை.

"தெய்வம் தொழாஅள் கொழுநன் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்பதற்கு இவர்கள் இலக்கானவர்கள்.

கற்பு என்பது நமது பரத கண்டத்திற்கு மாத்திரம் ஏற்பட்ட ஓர் அரும் பெரும் குணம் என்று எண்ணவேண்டாம். உடன்கட்டை ஏறுதலும் இந்நாட்டிற்கே உரியதொரு செயல் என்று நினைக்கவேண்டாம். திருமணப் பாங்கில் சிறிதளவு தளர்ச்சி கொண்டவர்கள் என்று நாம் தப்பாக எண்ணிக் கொண்டிருக்கும் மேல்நாட்டார்களிடமும் கற்புள்ள பெண் மணிகள் உண்டு; உடன்கட்டையேற ஆயத்தப்பட்டவர்களும் உண்டு; உயிர் விட்டவர்களும் உண்டு என அறியவேண்டும். இதற்கு ஆதாரமாக இலண்டன் நகரத்தில் நடந்த ஒரு செய்தியை இங்கு எடுத்துக் காட்டுவோம்.

பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆங்கில முடி ஆட்சி ஹானேவர் வமிசத்திற்கு வந்தது. அதற்கு முந்தி ஆண்டுவந்த ஸ்டேவர்ட் வமிசத்தில் சில அரசகுமாரர்கள் இருந்தார்கள். அவர்களின் உரிமையின் பொருட்டுச் சிற்சில கலகங்கள் ஏற்பட்டன. அக் கலகங்களை அடக்கி, அதில் சேர்ந்து கலகம் செய்த மக்களைச் சிறைபிடித்துச் சிரச்சேதமும் செய்தனர். அந்தக் கொடுந்தண்டனைகள் ஹைட்பார்க் என்ற உல்லாச வனத்தில் நடத்தப்பட்டன. அப் பூந்தோட்டத்தில் ஒரு குளம் இருக்கிறது. அக்குளத்தில் திக்கற்ற பெண்கள் அடிக்கடி தற்கொலை செய்துகொள்வதுண்டு.

Koviloor Digital Library



ஒருநாள் ஓர் ஆசிரியர் அக் குளக்கரையில் திரிந்துகொண் டிருந்தார். அப்போது ஓர் அபாக்கியப் பெண்மணி ஒரு குளத்தில் விழச் சென்றாள். அதைக் கண்டதும் அவர் அப் பெண்ணைக் குளத்தில் விழாமல் தடுத்து அவளுக்குப் பல நன் மொழிகள் கூறினர். அவளுடன் இரவு 8 மணிகாறும் நல் லொழுக்கத்தைப் பற்றியும் பிறப்பின் பயனைப்பற்றியும் பேசிக் கொண்டிருந்தார். அப்போது சில போர்வீரர்கள் அவ்வழியே மெதுவாக வந்துகொண்டிருந்தார்கள். இனி வீட்டுக்குத் திரும்பலாம் என்று எண்ணி அப் பெண்மணியை நோக்கி "இனி உன்னை எப்போது காணலாம்" என்று கேட்டார். "நீங்கள் இவ்வளவு அன்போடு கேட்கிறபடியால் நாளைக் காலை இஸ்லிங்க்டன் ஆலயத்தில் என்னைக் காணலாம்" என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டு அப் போர்வீரர்கள் வரும் பக்கத்திற்குச் சென்றாள். அப் போர்வீரர்கள் சில ஆட்களை நடத்திச் சென்றனர். அவர்களை ஒரு பெருங் கூட்டம் சூழ்ந்து சென்றது. அவர்களைக் கண்டதும் அப் பெண் வெகு பரிதாப மாக அழ ஆரம்பித்தாள். "ஐயோ! என் அன்புள்ள வில்லி யத்தைக் கொண்டுபோகிறார்களே! என்னை விட்டு அவரைப் பிரித்துக்கொண்டு செல்லுகிறார்களே! ஐயோ, ஐயோ" என்று அலறிக்கொண்டே பின் சென்றாள்.

அவ்வாசிரியனும் பின்சென்றான். அங்கு நடந்த சோக சம்பவமோ மிகவும் பரிதாபகரமானது. ஐந்து அழகிய வாலிபர்களைக் கைக்குட்டையிட்டு வெள்ளைத்துணி உடுத்துக் குருக்கள்மார் பின்தொடர மெதுவாகப் போர்வீரர்கள் நடத் திச் சென்றார்கள். மரணச் சங்கு ஊதப்பெற்றது. வாலிபர் களும் குருக்கர்களும் பிரார்த்தனை செய்துகொண்டே சென்றார் கள். எல்லாருடைய முகங்களிலும் விசனமே குடி கொண்டிருந் தது. இவ்வாலிபர்கள் கலகத்தில் சேர்ந்தவர்கள் எனக் குற்றம் சாட்டப்பட்டு மரணதண்டனை விதிக்கப்பட்டு அவ்வாறு கொண்டுபோகப்பட்டனர். அவர்களில் அப்பெண்மணியின் கணவனும் ஒருவன். வெகு அழகு வாய்ந்தவன். தைரியசாலி. சிறிதேனும் பயம் அறியாதவன். கொலைக்களத்திற்குக் கொண்டு செல்லப்பட்டும் முகம் களங்கமற்று இருந்தது. அது மன அமைதியைத் தோற்றுவித்தது.

Koviloor Digital Library



அவ்வாறு அச் சவக்கோலம் செல்லுகையில் அப்பெண் மணி சிறிது சிறிதாக அவர்களை நெருங்கித் தன் கணவன் பாதத்தில் விழுந்து, "வில்லியமே, என் அரும் அன்பனே, என் பிரியமுள்ள நாயகனே, உன்னை எங்கு இழுத்துக்கொண்டு செல்லுகிறார்கள். ஏன் என்னை விட்டுச் செல்லுகிறாய். அவர்களோடு செல்லவேண்டாம். உன்னைக் கொல்லவர் போகிறார்கள். உன்னைப்போல் சிறந்த மனிதன் யார் இருக்கிறார்கள்? உன்னைப்போல் போர்வீரன் எந்தச் சேனையிலும் இல்லை என்று அரசனுக்குத் தெரியாதா?" என்று கதறினாள். அவள் புலம்புவதைக் கண்டு போர்வீரர்கள் சற்றுத் தயங்கினார்கள். வில்லியமோ தன் மனைவியை வாரி எடுத்து முத்தமிட்டான். "நடப்பது நடந்தேதீரும்; நீ பொறுமையுடன் இரு. ஈசன் செயலை யார் தடுக்க முடியும்" என்று சமாதானம் கூறினான். பிறகு நிற்காது போர்வீரர்கள் கைதிகளை நடத்திச் சென்றார்கள். "வில்லியமே, என்னைவிட்டுச் செல்லுகிறாயே ஐயோ ஐயோ" என்று கதறிக்கொண்டே சென்றாள். "அந்தோ கொலை, அந்தோ கொலை" என்று கதறிக் கீழே விழுந்தாள்.

ஹைட்பார்க் தோட்டத்தில் ஒரு சுவரோரம் அவர்கள் சென்றனர். அங்கே ஐந்து குழிகள் தோண்டப்பட்டிருந்தன. அருகில் ஐந்து பெட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. அவ்வைந்துபேரும் தன் உறவினருடன் பேசச் சிறிது நேரம் அனுமதி தரப்பட்டது. பிறகு சிறிதுநேரம் பிரார்த்தனை செய்ய இடம் கொடுக்கப்பட்டது. கடவுளைப் பிரார்த்தித்தபடியே முழங்காலிட்டு உட்கார்ந்தார்கள். அவர்கள் முகத்தில் கறுப்புக்குல்லாய் மூடப்பட்டது. உடனே ஒரு கணத்தில் அவர்கள் மீது குண்டுகள் சுடப்பட்டன. மார்பையும் முகத்தையும் குண்டுகள் பாய்ந்து துளைத்தன. உயிர் மாய, உடல்கள் கீழே விழுந்தன.

மறுநாள் காலையில் அந்த அபாக்கியப் பெண்மணியைக் காண அவள் குறித்த காலத்தின்படி அவ்வாசிரியர் சென்றார். இஸ்லிங்டன் ஆலயத்தைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தார். அவள் தென்படவில்லை. ஆனால் ஆலயத்திற்குள் பலபேர் புகு

Koviloor Digital Library



வதைக் கண்டார். உடனே அவரும் உள்ளே சென்றார். உள்ளே சென்றதும் என்ன கண்டார்? அந்த ஒப்பற்ற பதிவிரதையின் சவம் அங்கே வைக்கப்பட்டிருந்தது. அடுத்திருந்த குளத்திலிருந்து அவளது பிரேதத்தை எடுத்துக் கொண்டுவந்து அங்கே வைத்திருந்தார்கள். அவளுடைய முகச்சாந்தியும், தீராத விசனக்குறியும் கண்டு பரதவித்தார்.

இச் சரிதையைப் படித்தவர்கள் கற்புள்ள மாதர் எல்லா நாடுகளிலும் இருப்பர் என்று எண்ணுவார்கள். உடன் கட்டை ஏறல் என்ற சடங்கு இச்சரிதத்தில் இல்லாவிட்டாலும் இதுவும் உடன்கட்டை ஏறுதல் ஆகும் அன்றோ!

---

## நாமகள் ஊசல்

(௧) கொண்மூத் திரட்கீழ்க் குளிர்மதியம் போனிலவும்
தண்ணார் நுதலிற் றனிமுத்தம் பூத்தனபோல்
தெண்ணீர்த் துளியரும்பச் செந்தேன் றொடையவிழப்
பண்ணார் மொழிக்கிறைவி ! யாடுகபொன் னூசல்
　　பாகார்ந்த சொற்கிள்ளா யாடுகபொன் னூசல்

(௨) செங்கேழ் மலர்த்திருவுஞ் சிந்தை வியப்பெய்த
மங்காத கல்வியெனு மாப்பே றளித்திடுவாய்
பொங்கு மொழிப்புலவர் புதுக்கவிக ளாரமிர்தந்
தங்கியுணுஞ் செவ்வியினாய் ! ஆடுகபொன் னூசல்
　　தையலிளஞ் சேற்கண்ணா யாடுகபொன் னூசல்

—சி. து கன்னிசாமி

---

Koviloor Digital Library

# "அறஞ்செய விரும்பு"

"மா. பாலசுப்பிரமணிய முதலியார், எம். ஏ."

தமிழ்க் கிழவியான அவ்வைப் பெருமாட்டியார் திருவாய் மலர்ந்தருளிய அறஞ்செய விரும்பு என்னும் அறக்கருத்தின் நுணுக்கங்களை ஆராய்ந்து அறிதலே இக் கட்டுரையின் பயன்.

அறம் என்பது நல்வினை. மக்கள் யாவரும் நல்வினை செய்ய விரும்புதல்வேண்டும் என்பது அவ்வையின் கட்டளை. இதனை நம் தமிழ்வள்ளுவரும் தம் திருக்குறளில் வலியுறுத்திக் கூறியுள்ளார். அக்குறள்,

"செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி."

என்பது. ஈண்டுச் செயற்பாலது ஓரும் அறனே என்றது அறஞ் செய விரும்பு என்றதனோடு ஒக்கும். உரையாசிரியர் பரிமேலழ கரும் இக்குறளில் அறன் என்னும் சொல்லுக்கு 'நல்வினை' என்றே பொருள்கொண்டார்.

அறஞ்செய விரும்பு என்பது நல்வினை செய்ய விரும்பு என்னும் பொருட்டு. அறஞ்செய் என்றுதல் அறஞ்செய்க என்றுதல் கூறுமல் அறஞ்செய விரும்பு என்று அவ்வையார் கூறியதன் கருத்து ஓர்ந்து உணரப்படவேண்டும். ஆறுவது சினம் எனவும் இயல்வது கரவேல் எனவும் ஈவது விலக்கேல் எனவும் இன்ன பிறவும் செயலிடத்துத் துணிவு பிறக்கக் கூறிய அவ்வையார் முதற்றொடரில் செயலிடத்துத் துணிவு பிறக்கக் கூறுமல் நினைவிடத்துத் துணிவு பிறக்கக் கூறியதன் கருத்து ஆய்ந்தறியப்படுதல்வேண்டும். செயல் துணிபாகக் கூற விரும்பியிருப்பின் அம் முதல் தொடர் அறஞ்செய், அறஞ்செய்க முதலிய தொடர்களில் ஒன்றாக அமைந்திருத்தல்வேண்டும். அவ்வாறு அமையாமையின் அவ்வையின் கருத்து அவ்வாறு கூறுதல் கூடாது என்பதாதல்வேண்டும். என்னை? விருப்பம் கொள்ளினும், முயற்சி செய்யினும், ஒரொருகால் அறம் செய்ய இயலாதுபோதலும் உண்டு. அக்கால் அறஞ்செயல் நிகழா தேனும் அறஞ்செய்தற்கண் விருப்பம் ஒன்று இருத்தலே

Koviloor Digital Library



சாலும் என்பது அவ்வையின் கருத்து. இக்கருத்தை ஒன்றியே பொதுப்பட அவ்வை அறஞ்செய விரும்பு என்று அருளிப் போந்தார்.

ஒருவன் ஒரு நல்வினை செய்தற்குப் பெருவிருப்புடையனாய் முயற்சி தளராமல் முற்படுகின்றானெனினும்,

"பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்"

என்னும் குறளில் கூறியபடியே பொருள், கருவி, காலம், வினை, இடம் என்பன கருதிச் செய்யாமையானும்,

"எண்ணிய வெண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்."

என்னும் குறளில் கூறியபடி, எண்ணிய நல்வினையை எளிதில் எய்திட வேண்டப்படும் திண்மை இன்மையானும், வாய்ப்பு இன்மையானும், பிறவற்றானும் அந் நல்வினையைச் செய்ய மாட்டாமல் நிற்பது கண்கூடு. அவ்வொருவன் முயன்று மேற்கொண்ட நல்வினையைச் செய்திலனாயினும் அது செய்ய விருப்பம்கொண்டமையே அதை அவன் செய்ததனோடு ஒக்கும் என்பது அவ்வையாரின் உட்கருத்து.

அறநூல் ஆராய்ச்சி செய்த மேனாட்டு அறிஞர்களும் இக்கருத்தை மேற்கொண்டிருந்தனர். எடுத்துக் காட்டாகக் காண்ட் (Emmanual Kant) என்னும் ஜர்மனி நாட்டு அறிஞர் இயற்றிய "Fundamental Principles of the Metaphysic of Morals" (அறநூல் மெய்ப்பொருளின் அடிப்படையான கொள்கைகள்) என்னும் நூலில் கண்ட இயைபுடைய வரிகள் சிலவற்றை ஈண்டுக் குறிப்போம் "A good will is good not because of what it performs or effects, not by its aptness for the attainment of some proposed end, but simply by virtue of the Volition, that is, it is good in itself, and considered by itself is to be esteemed much higher than all that can be brought about by it in favour of any inclination, nay, even of the sum total of all inclinations.

Koviloor Digital Library



Even if it should happen, that, owing to special disfavour of fortune, or the niggardly provision of a step-motherly nature, this will should wholly lack power to accomplish its purpose, if with its greatest efforts it should yet achieve nothing, and there should remain only the good will (not, to be sure, a mere wish, but the summoning of all means in our power), then, like a jewel, it would still shine by its own light, as a thing which has its whole value in itself."

"ஒரு நல்வினையைச் செய்து முடிப்பதனாலும், அதனைச் செய்தற்கு ஏற்ற தகுதி உடைமையினாலும் ஓர் எண்ணம் நல்லெண்ணம் என்று கருதப்படமாட்டாது; அது தன்னுள் நல்லதாக இருத்தல்வேண்டும்; வாய்ப்பு இன்மையாலும், யாதானுமொரு முன் நிலையாலும் ஒரு நல்லெண்ணம் ஒரு நல்வினையைச் செய்யாது ஒழிந்தாலும், அதனைச் செய்ய ஆற்றலில்லாது நின்றாலும், அது தன்னுள் நல்லதாக இருக்கும் ஒரே தன்மையால், ஒரு மணிபோன்று, ஒளிவிட்டு விளங்கும்" என்பது காண்ட் என்பாரின் கருத்து.

நிற்க, அறஞ்செய விரும்பு என்றதனால் மறஞ்செய விரும்பற்க என்றும் கூறியவாறாம். இதனால் மறஞ் செய்யாமை ஒன்றே சாலாது என்பதும் மறஞ்செய்ய விரும்பாமையே நனி வேண்டப்படும் என்பதும் அறியக்கிடக்கின்றன. மாந்தர் யாவரும் மறம் (தீவினை) செய்ய விரும்புதல் கூடாது என்பது அவ்வையின் ஆணை. என்னை? மறஞ்செய்தலினும் அது செய்ய விரும்புதல் தவரத் தீதுடைத்து. ஒரொருகால் மறஞ் செய்தல் இன்றியமையாது வேண்டப்படுகின்றதாகலின், 'மறஞ் செய்யற்க' என்பது பொருந்தாது. ஒறுத்து நல்வழிப் படுத்தல் கருதி ஆட்சிமுறையிலும், போர்முறையிலும், வழக்கு முறையிலும் மறஞ்செய்தல் நிகழ்வது யாம் அறிந்ததே. ஆயின் ஆண்டு மறஞ்செய்தன்மேல் விருப்பம் இன்று.

"அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கு மஃதே துணை"

Koviloor Digital Library



என்ற குறளின்படி, நல்வழிப்படுத்தும் அன்பான விருப்பமே ஆண்டு மறஞ் செய்தற்கு முன் நிலையாம். ஆகலான், 'மறஞ் செய்யற்க' என்னும் அறமொழியினும் 'மறஞ்செய விரும் பற்க' என்னும் அறமொழியே நனி ஏற்புடைத்து. அம் மொழியை எதிர்மறை வாயிலாகப் பெறுமாறு, 'அறஞ் செய்க' என்னுமல், 'அறஞ்செய விரும்பு' என்று அமைத் தது அவ்வைப் பெருமாட்டியாரின் ஆழ்ந்த புலமையைக் குறிக்கின்றது.

---

## தமிழ்த்தாய்க் கோத்தும்பி

1. நந்தும்உல கியல்மலியும் தொல்லைகளால் நலிவுற்று
வெந்துயராம் பாலையிடைத் திரிதந்து சோர்தருமென்
சிந்தைநனி தளிர்ப்பெய்திக் களிப்பூறித் தனைமறக்கும்
செந்தமிழ்த்தாய் சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ!

2. உற்றுரி லாதேனுக் குற்றூராய் உடனமர்வும்
பற்றேதும் இல்லேனைப் பற்றிவிடாப் பெரும்பற்றும்
மற்றுருரும் தன்னொப்பார் இல்லாத மாண்பும்உடை
நற்றாய்தன் நாண்மலர்க்கே நயந்தூதாய் கோத்தும்பீ!

—வித்துவான் முருக இலக்குவன்

---

Koviloor Digital Library

# சிலப்பதிகாரம்—மணிமேகலை

"வித்துவான் அ. கிருட்டினமூர்த்தி"

(தமிழாசிரியர், சருவசன உயர்நிலைப்பள்ளி, பூளைமேடு, கோவை)

1. சிலப்பதிகாரம் முந்தியது; மணிமேகலை பிந்தியது.

2. சிலப்பதிகாரத்தை இயற்றினவர் அரசர் குடியில் பிறந்து துறவியாக வாழ்ந்தவர்; மணிமேகலை எழுதியவர் வணிகர் குடியில் பிறந்து வாணிபத் தொழிலும் புலமைத் தொழிலும் நடத்தி வாழ்ந்தவர். இருவரும் நண்பர்கள். ஒருவர் தமது நூலை எழுதியதும் மற்றொருவருக்குப் படித்துக் காட்டியதாகக் கூறப்பட்டுள்ளது.

3. சிலப்பதிகாரத்தை எழுதியவர் சமணர்; மணிமேகலை எழுதியவர் பௌத்தர்; செங்குட்டுவன் சைவன்;—இவர்களுக்குள் மதத்தகராறு கிடையாது.

4. இரண்டு நூல்களின் ஆசிரியர்களும், இயல், இசை, நாடகம் என்ற மூன்று தமிழிலும் நிரம்பிய புலமைபெற்றதோடு, சமய தத்துவங்களிலும் சிறந்து விளங்கினர்.

5. இரண்டு நூற்களும் முப்பது முப்பது காதைகளையுடையன.

6. ஐம்பெருங் காவியங்களுள் மிகப் பழைமை வாய்ந்தவை இவ்விரண்டு நூல்களும்.

7. சிலப்பதிகாரத்தில் இயல், இசை, நாடகம் என்ற மூன்று தமிழையும் காணலாம்; மணிமேகலையில் இயற்றமிழ் மட்டுமே காணலாம்.

8. சிலப்பதிகாரத்தில் ஆசிரியப்பா, வெண்பா, கலிவெண்பா, கலி விருத்தம், ஆசிரியத் தாழிசை முதலான பல வகைப் பாடல்களைக் காணலாம். மணிமேகலையில் தொடக்கம் முதல் இறுதி வரையில் ஆசிரியப் பாட்டே.

9. சிலப்பதிகாரத்தில் உரைநடை கலந்த பாட்டுக்கள் உண்டு. மணிமேகலையில் அவை இல்லை.

Koviloor Digital Library



10. சிலப்பதிகாரத்தில் கடவுள் வாழ்த்துப் போல ஞாயிறு, திங்கள், மழை, புகார்—ஆகியவை போற்றப் படுகின்றன. மணிமேகலையின் தொடக்கத்தில் அங்ஙனம் ஒன்றும் கடவுள் வாழ்த்தாகவோ, அதைப்போன்ற வேறு பாட்டாகவோ குறிப்புக் காணோம்.

11. சிலப்பதிகாரத்திற்குப் பதினான்காம் நூற்றாண்டில் உரை எழுதப்பட்டதாகத் தெரிகிறது; எழுதியவர் அடியார்க்கு நல்லார். இவருக்கு முற்பட்டவர் அரும்பதவுரையாசிரியர். ஆனால் மணிமேகலைக்கு உரையில்லை. சாமிநாதையர் எழுதிய அரும்பதவுரை மட்டும் உண்டு.

12. சிலப்பதிகாரம் மூன்று காண்டமாகப் பகுக்கப்பட்டுள்ளது. மணிமேகலை அங்ஙனம் பகுக்கப்படவில்லை.

13. திருக்குறளின் கருத்துக்களும் சில குறள்களும் மணிமேகலை சிலப்பதிகாரங்களுள் ஆங்காங்கு வந்திருக்கின்றன.

14. சிலப்பதிகாரத்தின் கதை சேர, சோழ, பாண்டியம் என்ற மூன்று நாடுகளிலும் நடைபெற்றது. ஆனால் மணிமேகலையின் கதை அம் மூன்று நாடுகளையும் கடந்து ஜாவாத் தீவு முதலான கடல் நடுவிலும் நடைபெற்றுளது.

15 சிலப்பதிகாரத்தில் நம்பமுடியாத செய்திகள் சிலவாக இருக்கின்றன. மணிமேகலையில் அவை பலவாகவுள்ளன.

16. இவ்விரண்டு நூல்களுக்கும் பதிகம் உண்டு.

17. சிலப்பதிகாரத்தின் முதலிலும், இடையிலும், கடையிலும் கட்டுரைகள் எனச் சில பகுதிகள் காணப்படுகின்றன. மணிமேகலையில் அவை ஓரிடத்திலும் காணப்படவில்லை.

18. சிலப்பதிகாரத்தைவிட மணிமேகலையில் ஏராளமான வடமொழிச் சொற்கள் வந்து குவிந்து கிடக்கின்றன.

19. சிலப்பதிகாரம் மற்றை மதங்களைக் குறைவுபடுத்தாமல் அவ்வவற்றிற்கு உரிய மதிப்பை முழுவதும் தந்து செல்

Koviloor Digital Library



கின்றது; மணிமேகலை இடங்கிடைத்தபொழுதெல்லாம், பிற மதங்களைக் குறைத்துக்கூறுகின்றது.

20. இரண்டு நூல்களும் நிலையாமையை வற்புறுத்தினுலுங் கூட, மணிமேகலை சில இடங்களில் முறையல்லாத முறையிலும் தாறுமாறாகவும் சென்று அதனை வற்புறுத்துவதில் முனைந்து நிற்கிறது.

21. மணிமேகலையில் அக்காலத்திலிருந்த அறுவகைச் சித்தாந்தங்கள் விளக்கப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் அவற்றைப் பற்றிய குறிப்புக்கள்தாம் காணப்படுகின்றன.

22. சிலப்பதிகாரம் கதையை முதன்மையாக வைத்துக் கொண்டு, மதச்செய்திகளை ஆங்காங்குப்புகுத்திச்செல்கின்றது. மணிமேகலை மதச்செய்தியை அடிப்படையாக வைத்து அதற்குத் தக்கபடி கதையைக் கூறுகிறது.

23. கதையாக எழுதப்பட்ட நூல்களுள் மிகப் பழமை வாய்ந்ததாக இப்போழுது கிடைப்பது சிலப்பதிகாரம்; மதத்திற்காக எழுதப்பட்ட கதைகளுள் மிகப்பழமையுடையதாக இப்பொழுது கிடைக்கப்பெறுவது மணிமேகலை.

24. இவ்விரண்டு நூல்களும் ஒரே செய்தியைப் பற்றிக் கூறுகின்ற இடங்களுள், இரண்டோரிடங்களில் ஒன்றோடொன்று சிறிதளவு மாறுபடுகின்றன.

25. மணிமேகலையில் காணப்படுகின்ற சில தெய்வங்களின் பெயர்கள், சிலம்பு நூலில் காணப்படவில்லை.

26. மணிமேகலையில் தவத்திறம் பூண்டு, தருமங்கேட்ட காதைக்கு (29-ஆம் காதை) உரை விளங்கவில்லை; அதுபோல, சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதைக்கு உரை தெரியவில்லை.

27. சிலப்பதிகாரத்தில் முற்பகுதிக்குக் கோவலன் தலைவனுக இருக்கிருன்; அதன் பிற்பகுதிக்குக் கண்ணகி தலைவியாக வருகிருள்; இவ்விருவர் செய்திகளையும் நடு நின்று இணைக்கின்

Koviloor Digital Library



றது சிலம்பு; ஆனால், மணிமேகலையில் நூன்முழுதும் மணிமேகலையே தலைவியாக வருகிறாள்.

28. ஒரு பெண்மகளை நூலுக்குத் தலைவியாக வைத்துக் கூறுகின்றது மணிமேகலை. இதற்குப் பின்னர், காரைக்காலம்மையார் என்ற வாணிகப் பெண்ணும், மங்கையர்க்கரசி என்ற பாண்டியன் மனைவியும் பெரிய புராணத்தில் நூலின் தலைவராய் வருகின்றனர்; எனினும், முதன் முதலில் இவ்வாறு கூறுவது மணிமேகலைதான். வேறு எந்த நூல்களும் பின்னர் இவ்வாறு செய்யவில்லை.

29. அரசர் குடியில் பிறந்து முதன்முதல் துறவியாகப் போனதாக அறியப்படுபவர் சிலப்பதிகார ஆசிரியர்; பெண்ணாக இருந்து, துறவு பூண்டதாக முதன்முதல் பெயர் தெரியப்படுவது மாதவியின் பெயரே.

30. பெண்ணாகவிருந்து இளம்வயதில் துறவுபூணுவது அருமை. அங்ஙனம் முதன்முதல் செய்தவளாய்ப் பெயர் அறியப்படுவாள், மணிமேகலை.

31. மணிமேகலையை விடச் சிலப்பதிகாரம் சரித்திரத்திற்கு மிகவும் பயன்படுவது.

32. மணிமேகலையில் மதக்கொள்கைகளை வற்புறுத்தப் பல சிறு கதைகள் இடையிடையிலே கூறப்பட்டுள்ளன. ஒன்றேனும் கொலையைக் கூறாமல் இல்லை. ஏறக்குறைய சிலப்பதிகாரமும் இவ்வாறே இருக்கின்றது.

33. சிலப்பதிகாரத்தில் காவிரிப்பூம்பட்டினம் மிக உயர்வாகச் சிறப்பிக்கப்படுகின்றது; மணிமேகலையில் அதைப்பற்றி முற்பகுதியிற் கூறப்பட்டாலும், பிற்பகுதியில் அந் நகரம் கடலில் மூழ்கிய செய்தியே தெரியவருகிறது.

34. சாத்தனாரினும், பரந்தநோக்கமும் ஆழ்ந்த புலமையும் உடையவர் இளங்கோவடிகள்.

35. சிலப்பதிகாரத்திற் காணப்படுகின்ற தமிழின் அழகு மணிமேகலையில் குறைவுபடுகின்றது.

36. சிலப்பதிகாரம் படிப்பதற்குக் கிளர்ச்சியாக இருந்தால், மணிமேகலை சிறிது தளர்ச்சியாகவே இருக்கும்.

Koviloor Digital Library



37. சிலப்பதிகாரத்தில் சொற்களும், அவற்றின் முடிவுகளும், கதைப் போக்கும் தெளிவாக இருக்கின்றன. ஆனால், மணிமேகலையின் சொற்கள் சிலவிடங்களில் ஒன்றோடொன்று சேராமலும் செய்திகள் பல சிக்கலாகவும் இருக்கின்றன.

38. சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் சிலவிடங்களில் மதக்கொள்கைகளை வற்புறுத்தத் தொடங்கி, அவற்றின் ஆசிரியர்கள் இடத்திற்குத் தேவையான அளவிற்குமேல் கொள்கைகளை விரித்துவிடுகின்றனர்.

39. சங்க இலக்கியங்களின் நடை, முறை, இலக்கண வழக்கு ஆகியவற்றில் சிலசில சிலப்பதிகார மணிமேகலைகளில் மாறியுள்ளன. முறைகளைக் கடந்து மிகுதியாக மாறியவர் மணிமேகலை யாசிரியர்.

40. சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்ற சொற்களும் சொற்றொடர்களும் அடிக்கடி மணிமேகலையில் வருகின்றன.

41. சிலப்பதிகாரத்தில் முன்னர்ச் சொன்ன செய்தியையே பின்னும் கூறுவது, மிகச் சிலவிடங்களிலேதாம் நிகழும். மணிமேகலையில் இங்ஙனம் கூறியதைக் கூறல் அடிக்கடி நிகழும்.

42. சிலப்பதிகாரத்தில் கண்ணகி கோவலர்களின் பிறப்பு, வாழ்க்கை, இறப்பு மூன்றும் கூறப்படுகின்றன. மணிமேகலையில் மணிமேகலையின் பிறப்பும் இறப்புங் கூறப்படவில்லை. துறவற வாழ்வு மட்டுமே கூறப்பட்டுள்ளது. ஆனால், அவளுடைய பழைய பிறப்பும், அவளுடைய மறுபிறப்பும் பற்றிய செய்திகள் இடையில் விரியக் கூறப்படுகின்றன. இது விந்தையே !

43. சிலப்பதிகார மணிமேகலைகளில் காணப்படுகின்ற பலப்பல தெய்வங்களும், உயர்ந்த அறிவும் போக்கும் உடையனவாகக் காணப்படவில்லை. ஏறக்குறைய மக்களின் அறிவையே உடையனவாகக் காணப்படுகின்றன.

44. முதன்முதல் ஆசிரியப் பாட்டால் எழுதப்பட்ட கதை நூல் சிலப்பதிகாரம். மணிமேகலை அதனை அடுத்தது.

Koviloor Digital Library



45. மணிமேகலையில் காஞ்சிநகரைப் பற்றிய விரிவான செய்திகள் காணப்படுகின்றன. அதுபற்றிய ஒரு குறிப்பும் சிலப்பதிகாரத்தில் இல்லை.

46. சிலப்பதிகாரத்தில் கூறப்படுகின்ற மன்னர்களை நோக்க மணிமேகலையில் வரும் மன்னர்கள் நுண்ணறிவும், பீடு நடையும், பேராண்மையும், தலைமையும் உடையவராகத் தோன்றவில்லை.

47. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார்க்கும், அரும்பதவுரையாசிரியர்க்கும் பல இடங்களில் கருத்து மாறுபாடுகள் உண்டு.

48. சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் அதன் பிற் பகுதிக்குப் போதியவளவு அரும்பதவுரை எழுதவில்லை.

49. சாமிநாதையரின் மணிமேகலை 'அரும்பதவுரை' மற்றை உரையாசிரியர் சொற்களையும், சொற்றொடர்களையும் ஆங்காங்கிருந்து எடுத்தும், புதுமுறை தழுவியும் எழுதப்பட்டது. சிலப்பதிகார அரும்பதவுரை பெரும்பாலும் அதன் ஆசிரியர் அறிவினலே (Original) எழுதப்பட்டது.

50. சிலப்பதிகாரத்தைப் பற்றிய கட்டுரைகளும், நூல்களும், சொற்பொழிவுகளும் பல இடங்களில் உண்டு. மணிமேகலை பற்றி, அம்மாதிரி இல்லை.

51. சிலப்பதிகாரத்தைச் சேர்ந்ததனலேதான் மணிமேகலைக்கு மிக்க பெருமை விளைந்தது.

52. சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் தன்மை முற்பகுதியில் மிகச் சாந்தமாக வுள்ளது; எனினும், பிற்பகுதியில் அவள் மிக ஆவேசம் உடையவளாய்த் திடீரென மாறுகிருள்; ஆனல், மணிமேகலையின் தன்மை எங்கும் ஏறக்குறைய ஒரேமாதிரியாக இருக்கிறது.

53. சிலப்பதிகாரத்தை விட மணிமேகலையில் மிகுதியான தத்துவங்களை உணரக்கூடும்.

54. மணிமேகலையின் ஒவ்வொரு காதையும் 'என' என்று முடிகின்றது; சிலப்பதிகாரத்தில் 'என்' என்று முடிகின்றது.

Koviloor Digital Library

# தமிழ் வித்துவான்களுக்குத்
## தேவாரப் பரிசளிப்பு விழா

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆதாயத்திலிருந்து நடைபெற்று வருகின்ற அறநிலையங்களுள் ஒன்ருன தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தின் ஆதரவில், 30-11-40 மாலை 4-மணிக்கு, இவ்விழா, சென்னைச் சிந்தாதிரிப்பேட்டை உயர்பள்ளி மண்டபத்தில், சென்னை இந்துமத அறப்பாதுகாப்பு நிலையத் தலைவரும், தமிழ்ப் பேரன்பினருமான திருவாளர் திவான்பகதூர் T. M. நாராயணசாமி பிள்ளை M.A., B.L., அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

சென்னைப் பல்கலைக் கழகத்தார் நடத்துகின்ற தமிழ் வித்துவான் தேர்வில் முதல் வகுப்பில் தேர்கின்றவர்களுக்கு ஆண்டுதோறும் சிறந்த நூற்பரிசுகள் வழங்கவேண்டுமென்று தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கம் தீர்மானித்திருக்கின்றபடி இப்போது 1939, 1940 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் முதல் வகுப்பில் தேர்ச்சிபெற்ற வித்துவான்களுக்கு மூவர் தேவாரம் பரிசளிக்கும்பொருட்டு இவ்விழா நடைபெற்றது.

### 1939-ம் ஆண்டில் தேர்ச்சிபெற்றவர்கள்

1. வித்துவான் M. ஆறுமுகம், திருவெண்காடு
2. ,, T. V. முருகேசன், திருவத்திபுரம்
3. ,, ம. இராசமாணிக்கம், உடையார்பாளையம்
4. ,, M. அருணசலம், அண்ணமலைநகர்

### 1940-ம் ஆண்டில்

1. வித்துவான் V. A. அரங்கசாமி, விண்ணமங்கலம்
2. ,, M. தண்டபாணி, வண்டிப்பாளையம்
3. ,, S. பொன்னுசாமி, கீரனூர்
4. ,, K. செந்தில்நாயகம், கூடலூர் N.T.
5. ,, T. V. சாந்தலிங்கம், திருக்கழுக்குன்றம்
6. ,, R. வாசுதேவன், மீன்சுருதி
7. ,, G. வில்வபதி, திருவத்திபுரம்
8. ,, சுப்பிரமணியம், திருநெல்வேலி.

இவர்களில், T. V. முருகேசனவர்கள், ம. இராசமாணிக்கம் அவர்கள், T. V. சாந்தலிங்கம் அவர்கள், R. வாசுதேவனவர்கள், சுப்பிரமணியம் அவர்கள் ஆகிய வித்துவான்கள் ஐவர் விழாவுக்கு வந்திருந்தனர்.

Koviloor Digital Library



தலைவரவர்கள் தம் முன்னுரையில், சங்கத்தார் இங்ஙனம் பரிசளிப்பதன் மாட்சிமை பற்றியும், சைவசித்தாந்தக் கழகம் காலத்துக்கேற்றபடி தமிழ் நூல்களை மிக அழகிய கண்கவர் பதிப்புக்களாகத் தொடர்ந்து வெளியிட்டுத் தமிழ்க்கு நல்ல மேன்மை தேடிவருகின்ற சிறப்பினால், நூல்கள் பரிசளிப்பதற்குக் காட்சியாயிருக்கின்றன என்னும் உண்மைபற்றியும் விளங்க எடுத்துரைத்தார்கள்.

அவர்கள் கருத்தைத் தொடர்ந்து, திரு பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் 'தமிழ்ப் புலமைக்கு நாட்டில் இங்ஙனமெல்லாம் மேம்பாடு காட்டுவது பெருநன்மை பயக்கும்' என்றும், திரு ரா. சேதுப் பிள்ளையவர்கள் B.A., B.L. 'ஆங்கிலத்தில் B.A., ஆராய்ச்சியில் தேர்ச்சி பெற்ற கிறித்தவர்களுக்கு அவ்வினத்தவர், அவர்கள் திரு மறை நூலாகிய விவிலியநூல் ஒவ்வொன்றைப் பரிசு அளிப்பது போலத், தமிழ்த் தேர்ச்சி பெற்றவர்களுக்குத் தமிழ் மறை நூலாகிய தேவாரங்களைப் பரிசளிப்பது சிறந்த செயலேயாம்' என்றும், பின் திருமிகு T. S. நடராச பிள்ளை B.A., B.L. அவர்கள் 'சமயம் இலக்கியத்தின் வேறன்றாகலின் தமிழ்த் தேர்ச்சி பெற்றவர்க்குச் சமய இலக்கியமான தேவாரங்களைப் பரிசளிப்பது பொருந்துவதொன்றே' என்றும், பிற பலவுங் கூறி இவ் விழா நிகழ்ச்சியைப் பாராட்டினார்கள்.

பின்பு, பரிசுக்குரியவர்களில் அன்று அவைக்கு வந்திருந்த ஐவருக்கும், அங்கே மண்டபத்தில் உயர்ந்த ரெக்சைன் கட்டடம் செய்து அட்டை மேலுறையோடு அழகாகக் கண்களைப் பறிக்கத் தக்கபடி வைத்திருந்த மூவர் தேவாரங்களையும் தலைவரவர்கள் அன்புடன் வாழ்த்தி வழங்கினார்கள். அன்று வராத தேர்ச்சியாளருக்கு அவரவருடைய பரிசுகள் புகைவண்டி வழியாக அனுப்பிவைக்கப் பெற்றன.

நேரிற் பரிசுபெற்றவர்களில் வித்துவான் சுப்பிரமணியம் அவர்களும், வித்துவான் ம. இராசமாணிக்கம் அவர்களும் பரிசின் நன்மை கருதித் தம் நன்றி காட்டிப் பேசினார்கள்.

அவையோர் பாராட்டுதலுடன் விழா மாலை 5½ மணிக்கு மகிழ்ச்சியுடன் நிறைவெய்தியது.

தமிழறிஞர்கள் மேலுமேலும் பெருகி அதனால் தமிழகம் எங்கும் பேரொளி விளக்கமாய் விளங்குதலை அனைவரும் விரைந்து எதிர் நோக்குவோமாக !

---

Koviloor Digital Library

# மதிப்புரை

1. ஸ்ரீ அரவிந்த யோக விளக்கம் (இரண்டாவது பதிப்பு): சுவாமி சுத்தானந்த பாரதியார் மொழிபெயர்ப்பு. பாரத சக்தி நிலயம், புதுவை. விலை அணா 5.

இந் நூலில் மெய்ப்பொருள் விளக்கங்கள் வந்திருக்கின்றன. பெரியார் அரவிந்தரது ஒருமை நெறி நன்கு விளங்குகின்றது. அங்கங்கும் வடமொழி மேற்கோள்கள் காட்டப்பட்டிருக்கின்றன. அடிகள் சுத்தானந்த பாரதியார் பன்மொழி யறிஞர். ஒருமையில் வாழ்பவர். கருத்துக்களைக் கலையுணர்வோடும் மெய்யுணர்வோடும் விளங்க எழுதுந் திறலுடையார். இம் மொழிபெயர்ப்பில் இந்நலங்களும் அமைந்திருக்கின்றன. இந்நூலில், 'கடவுளரசு' 'செய்தக்க வினை' 'தொந்தம்' முதலிய தமிழ்த் தலைப்புக்கள் அங்கங்கும் அமைந்து மின்னுவது இன்பமாயிருக்கின்றது. நூலின் வெளித்தோற்றமும் அகமும் நல்லவை.

2. நிர்மலகுமாரி: ஆசிரியர்: காழி சிவ கண்ணுசாமி பிள்ளை பீ.ஏ., வெளியிடுவோர்: சக்தி காரியாலயம், 46, முத்துமாரிச் செட்டித் தெரு, சென்னை. விலை அணா 12.

இது கதை நூல்; அமைப்பு நன்றாயிருக்கிறது. ஓர் ஆங்கிலக் கதையைத் தழுவி எழுதப்பட்டதாயினும் புதுக்கதையைப் போலவும், நடந்த வரலாறு போலவும் இயற்கையொடு மாறுறாமல் இனிது அமைந்திருக்கின்றது.

இடங்கள், காலங்கள், நிலைமைகள் முதலியவற்றைத் தெளிவுபடுத்தி விளக்கியெழுதும் பாகங்கள் திறமை வாய்ந்திருக்கின்றன. இடங்களுக் கேற்றபடி அளவோடுங் கையாளப்பட்டிருக்கின்றன. உரையாடல்களின் தொடுப்பு, உணர்ச்சியோடு ஒத்திருக்கின்றது. உள்ளத்தை அள்ளிச் செல்லுங் கூறுகள் பல்வேறு சுவைகளோடு மின்னி இழைகின்றன.

நிகழ்ச்சி இணைப்புக்களும், கருத்துக்களை வெளிப்படுத்தும் நிறங்களும், அவற்றிற்கு ஏற்ற தொடர்ப் புனைவுகளும் நல்லவாறு அமைதலில் ஆசிரியர் மிக முயன்றிருக்கின்றார். படிப்பவருள்ளம் தமதுள்ளத்தோடு வேறற இணைந்து இடையறவின்றி எழுச்சியாய்ப் பின்றொடருமாறு, தகுமுறைகளி லெல்லாம் ஆசிரியர் முயன்றிருக்கின்ற அருமை அங்கங்கும் வெளிப்படாமலில்லை.

உரைநடை தெளிவுடையது. உலகியலின் இயல்பு வாய்ந்தது. தமிழ்நலம் அமைந்தது.

சுருங்கக் கூறினால் இது, கதையிலக்கியங்களுள் ஒன்றாக அமையுந் தகுதிவாய்ந்ததென்று கூறலாம்.

அச்சுந் தாளும் அழகியவை; மேலுறை இருகண்களுக்கும் விருந்து. இது தமிழ் நாட்டின் ஆதரவுக்கு உரியது.

Koviloor Digital Library




நிற்பவர் :—1. C.M. இராமச்சந்திரஞ் செட்டியார் 2. C.K. சுப்பிரமணிய முதலியார் 3. S. முத்தைய முதலியார் 4. டாக்டர் S. திருமூர்த்தி 5. T.M. நாராயணசாமி பிள்ளை 6. குமாரராஜா முத்தைய செட்டியார் 7. S. நடேச பிள்ளை 8. திருவாட்டி S. நடேச பிள்ளை 9. திருவாட்டி இராமநாதன் 10. அலர்மேல்மங்கைத் தாயாரம்மாள் 11. T. S. நடராச பிள்ளை.

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—மார்கழி [பரல்-கூ

# மிளிர்க!

" தேவ குலமும் தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையும் மிடைந்து
நற்றவ முனிவரும் கற்றடங் கினரும்
நன்னெறி காணிய தொன்னூற் புலவரும்
எங்கணும் விளங்கிய எயிற்புற இருக்கை "

—மணிமேகலை.

மணிமேகலையில் வஞ்சிமாநகரத்தைப்பற்றிப் பேச விரும்பிய ஆசிரியர், அதன் பெருமை இத்தகையது என்று விளக்கி மகிழ்கின்றார்.

வஞ்சிமாநகரத்தின் எல்லையைச் சூழ்ந்த இடங்களில், தெய்வத் திருக்கோயில்களும், மேடைகளும், அறிவுநிலையங்களும், அழகிய மலர்ச் சோலைகளும், மலர்வாவிகளும் செறிந்து காணப்படுமோம். பற்றில்லாமல் தவஞ்செய்கின்ற முனிவரும், திருமறை நூல்களைக் கற்று அவ்வண்ணம் அடங்கிநிற்கும் மறையவரும், முடிந்த இன்பநிலைக்கு நல்லவழி காண்டற்காகப் பழைய நூல்களின் பயிற்சிமிக்க அறிஞரும் எங்கும் விளங்கிக்கொண்டிருப்பார்களாம். நகர்வாயிலின் புறத்து இடங்கள் இங்ஙனம் மிளிர்ந்திருந்தனவென்று இப் பாட்டிலிருந்து தெரிகின்றது.

நகரத்தின் சிறப்புக்கு, இங்ஙனம் நல்ல நிலையங்களும் நல்லோர்களும் அங்கங்கும் இருந்து மிளிர்தலே சிறந்த காரணமாகும். மிளிர்க!

Koviloor Digital Library

# நல்ல காலம்

நல்ல காலம் வருகிறது என்னும்போது யாருக்கும் இன்பம் ஊறுவது இயல்பாக இருக்கிறது. தமிழர்களுக்கு நல்ல காலம் என்பது, அவர்கள், தமது தமிழ் மொழியினிடத்துப் படிந்து இன்புறுகின்ற காலமேதான். மொழிகள் என்பவை அறிவின் ஊற்றுக்கள். அங்கே படிந்தால் அவர்களுக்கு அது நல்ல இன்பம் உதவும். அக் காலம் நல்ல காலமாம்.

தமிழ்மொழியிற் படிவதற்குத் தமிழிலுள்ள உயர்ந்த நூல்களிற் படியவேண்டும். அந் நூல்களிற் படிவதற்கு அந் நூல்கள் பயின்ற அறிஞர்களின் ஆராய்ச்சியுரைகளிற் படியவேண்டும்; அதற்கு, அவர்கள் ஆராய்ச்சியுரைகள் நிகழ்வதற்கேற்ற வாய்ப்புகள் நேரவேண்டும். அவ் வாய்ப்புகள் நேருங்காலம் நல்ல காலமேயாம். இத் திங்களிலும் அத்தகைய நல்ல காலம் வந்தது.

நல்ல காலம் வருகின்றதென்றால், மகிழ்ச்சியில்லாமவிருக்குமா? 15-12-40 ஞாயிற்றுக்கிழமை விடியற்காலம் 4-மணிக்கே 'செல்வி' அலுவற்கூடத்தில் பரபரப்புண்டாயிற்று. எல்லாரும் சுருசுருப்புடையராயினர். மார்கழி முதல் நாளானமையின் விடியல் நீராட்டும் கடவுள் பாராட்டும் உடன் சேர்ந்தன. நொடிப்பொழுதில் அன்பர் பலர் ஒருங்கு குழீஇயினர்.

மக்களின் உள்ளுணர்வுகளைச் சித்திரித்துக் காட்டும் நூல்களில் தமிழிலுள்ள 'அகநானூறு' என்னும் சங்க நூலும் ஒன்று. அதைப்பற்றிய ஆராய்ச்சியுரைகள் அன்று நிகழவிருக்கின்றன என்று அறியும்போது, உள்ளுணர்ச்சிகளுக்குங் கிளர்ச்சிகளுக்குங் குறைவு உண்டோ? மிக்க கிளர்ச்சியோடு எல்லாரும் சென்னை எழும்பூர் புகைவண்டி நிலையம் அடைந்தனர்.

Koviloor Digital Library



அகநானூறு மாநாட்டுக்கு அன்று தலைமை ஏற்று நடத்த அன்புடன் இசைந்து திருவையாற்றிலிருந்து வந்த அவ்வூர் அரசர் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியரான தலைவர் திரு. வேங்கடாசலம் பிள்ளை யவர்களை அங்கே காணப் பெற்று மலர்மாலை யணிந்து வரவேற்கும் பேறு நேர்ந்து கிளர்ச்சி பெருங் கிளர்ச்சியாயிற்று.

சென்னைச் சிந்தாதரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளி மண்டபத்தின் முகப்பும் அகமும் அன்று புதுத்தோற்றம் பெற்றிருந்தது. தமிழொளி மிளிரும் அறிஞர்கள் காலை 9-மணிக்கெல்லாம், தனித்துங் கூடியும் இம் மண்டபத்தை அடைந்துகொண்டிருந்தனர். மண்டபம் சென்னைக்கு நடுவில் கடலுக்குங் கழிக்கும் அருகில், இயற்கைக் காட்சிகளோடும் அன்று காலையில் துளித்த மெல்லிய மழைப்பெயல் இனிமையோடும் நன்கு விளங்க, அதனால் அது, தன்னை அடைந்தவர் அனைவர்க்கும் நல்ல அமைதியைத் தந்துகொண்டிருந்தது; உள்ளத்தின் விரிவுக்கும் இடமாயிருந்தது.

நேரம் ஆக ஆகக் கூட்டம் பெருகிக்கொண்டிருந்தது. பேரவை நிகழ்ச்சி 9½-மணிக்குத் துவங்கித், தலைவரவர்கள் தலைமையுரையும், சொற்பொழிவாளர்களான தமிழறிஞர்கள் ஐவர் விரிவுரைகளும் ஒன்றின்பின் ஒன்றாக மாறி மாறிச் சொரிந்துகொண்டிருந்தன. மாலை 5-மணிக்கு அவையைப் பார்த்தால், மண்டபம் முழுமையுமன்றி வெளியேயும் அன்பர்கள் குழீஇ அப் பேரவை ஒரே நிறைவும், அமைதியும், இன்பமும் நிலவிக் கண்ணியமாய் விளங்கியது. அகன்று நிறைந்து ஆழ்ந்து அமைந்து பற்பல நற்பொருள்களோடும் பேரினிமையாய் அசைந்து செல்லும் ஒரு சிறந்த செந்தமிழ்ப் பேராறு போல அவ்வவை காட்சியளித்தது. அவை முடிவில், எங்குங் குழாம்பெருகி விழவொலி விண்ணளவுஞ் சென்று விம்மி மிகுந்தது. 'அகநானூற்றுச் சொற்பொழிவுகள்'

Koviloor Digital Library



என்னும் நூலும் மாநாட்டில் வெளியாயிற்று ;

(பிற குறிப்புக்கள், 'செய்திகளுங் குறிப்புக்களும்' என்னுந் தலைப்பில் வருகின்றன.)

நல்ல காலம் வந்தாலும் வந்தது ! சங்க இலக்கியங்களின் பேரொலி சிறந்தாலும் சிறந்தது ! என்றும் எங்கும் இப் பேரவை நிகழ்ச்சிகள் பெருகவேண்டும் என்னுங் கிளர்ச்சி பலருள்ளங்களையும் விடாமற் கவர்ந்துகொண்டன. நல்ல நல்ல தமிழ்நூற் பெரு மாநாடுகள் — மேன்மேல் வளர்ச்சிகளுடன் இனித்தான் இன்னும் நன்கு நடைபெற விருக்கின்றன என்று தோன்றுகின்றது ; வாழி தமிழ் ; வாழி தமிழர் !

---

## தமிழ்த்தாய்க் கோத்தும்பீ !

1. உலகமெலாம் இருள்மூடி ஊமர்களாய் மக்களுற்ற
தலைநாளே நாகரிகத் தனியரசு செலுத்தியவள்
கலவார்தம் அழிவுசெயல் புறங்கண்ட இளமையினள்
உலவாச்சீர்த் திருவடிக்கே ஊணர்ந்தூதாய் கோத்தும்பீ !

2 தீங்கனியிற் பிழிந்தெடுத்த நறுஞ்சாறும் செழுங்கரும்பின்
தேங்கு சுவைக் கட்டிகளும் சேல்விழிய மடவாரும்
ஒங்குமுடி கவித்துலகாள் அரசும்உவை கைப்பூறும்
பாங்குதரும் தமிழ்த்தாய்க்கே படர்ந்தூதாய் கோத்தும்பீ !

3. எழுத்தொடுசொல் பெற்றூர்கள் எல்லாரும் பொருளிலராய்
வழுத்திகனி கையேந்த வளஞ்சான்ற பொருள்பெற்றுள்
தழைத்தனளால் அகம்புறமும் தமிழ்த்தாய்தன் தண்ணூர்ந்த
முழுத்தபுகழ்ச் சேவடிக்கே முன்னூதாய் கோத்தும்பீ !

4. தாதணையைத் தள்ளிநனி வாய்வல்ல பாட்டிசைத்துக்
கோதுவாய் தினையளவிற் குறைதேனை உண்ணுதே
ஓதலின்றி உள்ளுதொறும் தெள்ளமுதக் கள்ளூறும்
தீதில்லாத் தமிழ்தாய்த்தன் திருவடியே கோத்தும்பீ !

—முருக இலக்குவர்.

Koviloor Digital Library

# சமயக் கல்வியின் அவசியம் *

"ராவ்சாகேப் C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள்"

இந்நாட்டில் சைவாங்கில பாடசாலை, சைவத் துவிபாஷா பாடசாலை, சைவத் தமிழ்ப் பாடசாலை என மூன்றுவிதக் கலா சாலைகளிலும் சைவம் கலந்திருக்கும்போது சமயக் கல்வியைப் பற்றி இங்கே பேசத் தொடங்கியது என் அறிவின்மையைத் தோற்றுவிக்கும். ஆனால் எங்கள் நாட்டில் சமயக்கல்வி மிகவும் வேண்டற்பாலது. அங்கே கல்விக்கும் சமயத்திற்கும் சம்பந்த மில்லாமல் செய்துவைத்திருக்கிறார்கள். அதனால் வாலிபர்க ளுடைய நிலைமை பரிதாப நிலை அடைந்திருக்கிறது. பிற் காலச் சமயநிலை அபாயத்திற்குட்பட்டிருக்கிறது. கிறிஸ்தவ முகம்மதிய சமயங்களைக் காட்டிலும் இந்து சமயமே அபாயத் தில் உள்ளது.

இந்தியாவில் எல்லாவற்றையும்விடப் பெரியதாயுள்ள நகரத் தை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். காளிகட்டம் என்ற கல்கத்தா, வங்காளத்தில் ஹூக்ளி தீரத்தில் 12 லட்சம் சனத் தொகை கொண்ட ஒரு பெரிய நகரம். அதில் 100-க்கு 70 பேர் இந்துக்களும் 25 பேர் முகம்மதியர்களும் இருக்கிறார்கள். அவர்களுக்கு 3,66,282 ரூ. மதிப்புள்ள 475 கோயில்களும், 3,74,634 மதிப்புள்ள 411 பள்ளிவாசல்களும் இருக்கின்றன. அதாவது 70% இந்துக்களுக்கு 475 கோயில்கள்; 25 முகம்மதி யர்களுக்கு 411 பள்ளிகள். ஆகவே மதப்பற்று 1-க்கு 2·7 ஆகிறது. ஆலயங்களுக்கு 70% இந்துக்கள் 3·66 லட்சமும், பள்ளிகளுக்கு 25% முகம்மதியர்கள் 3·74 லட்சமும் ஆகத் தம்தம் சமய நிலைகளுக்குச் செலவழித்துள்ளார்கள்.

மேலும் வரி கொடுப்பதில், இந்துக்கள் 90%-ம் முகம்மதி யர்கள் 5·6%-ம் கொடுக்கிறார்கள். ஆகவே முகம்மதியர்களை விட இந்துக்கள் 5·35 மடங்கு அதிக செல்வந்தர்கள். இதைக் கணக்கிடும்போது இந்துக்களைவிட முகம்மதியர்கள் ஏழை

* 1940 ஜனவரியில் ஈழநாட்டு இந்து வாலிபர் மாநாட்டில் யாழ்ப் பாணக் கல்லூரியில் பேசியது.

Koviloor Digital Library



களாக இருந்தும் 6·31 மடங்கு சமயத்திற்காகச் செலவு செய்கிருர்கள். இரு சமயத்தினருடைய சமயப் பற்றை எல்லா வகையிலும் முடிவாகக் கணக்கிடும்போது இந்துக்களைப் பார்க்கிலும் முகம்மதியர்கள் 2·34 மடங்கு அதிகப் பற்றுக்கொண்டவர்கள் என ஓர் ஆசிரியர் இம்முறையில் கணக்கெடுத்திருக்கிருர்.

இக்கணக்கை இத்துடன் நிறுத்துவோம். ஆலயங்களுக்கு வழிபடச்செல்லும் ஒரு வழக்கத்தை எடுத்துக்கொள்வோம். பள்ளிவாசல்களுக்கு முகம்மதியர் வெள்ளிக்கிழமைகளிலும் கிறிஸ்தவர்கள் தம் தேவாலயங்களுக்கு ஞாயிற்றுக்கிழமைகளிலும் தவருமல் செல்லுகிருர்கள். இந்துக்களோ திருவிழாக்களில் கூத்து, நடனம், மேளம், வேடிக்கை இவைகளைப் பார்க்கச் செல்லுகிருர்களே ஒழிய, குறித்த நாள்களில் ஆலயங்களுக்கு வழிபடச் செல்லுகிருர்களா? செல்லுபவர்களிலும் கல்வி கற்றவர்கள் எத்தனைபேர்? மேலும், கிறிஸ்தவர்களும் முகம்மதியர்களும் தங்கள் வீடுகளிலாவது நாடோறும் தவருமல் தொழுகிருர்கள். இந்துக்கள் எத்தனைபேர் இவ்விதப் பூஜைகளை வைத்துக்கொண்டிருக்கிருர்கள்? இவர்களிற் படித்தவர்களும் ஏழைகளும் வர்த்தகர்களும் தொழிலாளர்களும் உத்தியோகஸ்தர்களும் திருநீறு திருமண் இவைகளை அணிய வேண்டுமென்று எப்போதாவது அறிந்திருக்கிருர்களா?

சோழபாண்டியர்களுடைய சமயாபிமானத்தின் காரணமாக ஆலயங்களால் சிறந்து விளங்கும் மதுரை, திருச்சி, தஞ்சை, சிதம்பரம், திருவண்ணுமலை, காஞ்சி முதலான சில ஊர்களைத் தவிர வேறு ஊர்களில் நம் ஆலயங்கள் பிரசித்தமாக விளங்குகின்றனவா? தற்காலத்தில் முளைத்திருக்கும் கிறிஸ்தவ முகம்மதியப் பள்ளிகள் உயர்ந்து நீண்டு விளங்குகின்றன அல்லவா? உதாரணமாக, எங்கள் கோவையில் இரயிலடி இறங்கியதும் கிறிஸ்தவ சர்ச்சும், கடைவீதி சென்றதும் முகம்மதியப் பள்ளியும் பெரியவைகளாகத் தோன்றுகின்றன. இந்து ஆலயங்கள் இருக்கும் இடமே தெரியாமல் வீடுகளுக்குள் மறைந்திருக்கின்றன. ஆகவே இந்துமதம் தலை நீட்டவும் வெட்கப்படுகிறதுபோலும்? சமயக்கல்வியின் குறைவே இதற்குக் காரணம்.

Koviloor Digital Library



இந்தியாவில் ஆங்கிலர் வந்தபிறகு சமயவிஷயத்தில் தலையிடக்கூடாது என்ற கொள்கையினால் சமயக்கல்வியைப் பொதுப் பள்ளிக்கூடங்களில் வைக்காமல் சமயம் அல்லாத கல்வியை மாத்திரம் போதித்து வருகிறார்கள். இந்துக்கள் பெரும்பான்மையான பேர் தங்கள் குழந்தைகளைப் பொதுப் பாடசாலைகளுக்கு அனுப்புவதினால் அவர்களுக்குச் சமயக் கல்வி கிடைப்பதில்லை. ஆனால் முகம்மதியர்களும் கிறிஸ்தவர்களும் தங்கள் பாடசாலைகளில் சமயக்கல்வி போதிக்கிறார்கள். ஆகவே அவர்களுடைய பிள்ளைகளுக்கு மாத்திரமேயன்றி அங்கு வாசிக்கும் இந்து பிள்ளைகளுக்கும் அவர்களுடைய மதக் கொள்கைகள் படிக்கவேண்டி வருகிறது. அதன் காரணமாகத் தங்கள் மதத்தை அறியாததற்கு முன்பே பிறமதங்களைப் பற்றி அறிந்துகொள்ளுகிறார்கள். அதன் பயன் 'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்ற வகையில் விபரீதமான முடிவை அடைந்துவருகிறது. மேலும் இந்துக்களுக்குத் தனியாக ஏற்பட்ட சில பாடசாலைகளில் சில்லரைப் பிரிவினைகளின் காரணங்களைக் கொண்டு மதப்படிப்பைக் கற்றுக் கொடுப்பதில்லை. சமீப காலத்திலேதான் 'இராமகிருஷ்ண சமாஜம் பாடசாலை' முதலிய பாடசாலைகளில் மதப்படிப்புப் போதிக்க ஆரம்பித்திருக்கின்றனர். சைவத்திற்கு ஏற்பட்டவைகள் மிகச் சிலவே.

கிறிஸ்தவர்களிலும் முகம்மதியர்களிலும் தங்கள் வீடுகளில் பெற்றோர்கள் மதப்படிப்புக் கற்றுக்கொடுக்கின்றனர். இந்துக்களிலோ பெற்றோர்களுக்கே மதவாசனை இல்லாத போது எவ்வாறு பிள்ளைகளுக்கு அதனைக் கற்பிக்க முடியும். சைவர்கள் வீடுகளில் 12 திருமுறைகளை இல்லாமலிருக்கும் போது சைவத்தைப்பற்றி எவ்வாறு அறிவார்கள்? விவிலிய நூல் இல்லாத கிறிஸ்தவர் வீடு ஒன்று உண்டா? யோசியுங்கள். தற்காலத்தில் உலகம் போகும் போக்கை வெகு சுலபத்தில் வாலிபர்கள் அறிந்துகொள்ளுகிறார்கள். பாடசாலையிலும் வீட்டிலும் சமய ஒழுக்கம் கற்பிக்கப்படாதபோது தம் மனம் போன போக்கில் நிரீசுவர நூல்களை வாசித்து அலைகிறார்கள். மேற்கே பேருக்குக் கிறிஸ்து சமயம் அரசாங்க மார்க்கமாக

Koviloor Digital Library



இருந்தும் உண்மையில் அதன் கோட்பாடுகளை யாரும் எடுத்து ஆளுவதில்லை. ருஷியர்களுக்குச் சமயமே இல்லை. ஜெர்மானி யருக்கு அது வேண்டியதில்லை. இத்தாலியர் அது இருந்தும் அதனைப் பின்பற்றுவதில்லை. ஆகவே கிறிஸ்து பகவான் சொன்ன புத்திமதிகளுக்கு எதிராகவே மேற்கு அரசர்கள் நடக்கின்றனர். சண்டை கூடாதென்றால் அதுதான் வேண்டும் என்கிறார்கள். கடவுளை வேண்டாம் என்று அவரைச் சிங்கா சனத்திலிருந்து தள்ளிவிட்டார்கள். ஆன்மா மக்களுக்கு அவசியமில்லை என்று எண்ணுகிறார்கள். உயிருள்ள மட்டும் சுயநலத்துடன் சுகப்படவேண்டு மென்பதே தற்காலத்து ஜீவிய நோக்கம். இந்த நோக்கத்தைக் கண்ட தற்காலத்து வாலிபர்கள் அதன் போக்கிலேயே போகிறார்கள்.

நம் இந்து வாலிபர்கள் சமயத்தை வெறுப்பதற்கு இன் னும் சில காரணங்கள் உண்டு. கல்கத்தாவில் கிராமதேவதை யான காளிகட்டத்துக் கோயிலுக்குச்சென்றால் நாள்தோறும் ஆடுகளைக் கதற வெட்டிப் பலிதருகிறார்கள். இதனைக் கண்ட வாலிபர் எவரும் அதை ஏற்றுக்கொண்ட சமயத்தை வெறுக்க மாட்டாரா? தென்னிந்தியாவிலும் எத்தனை கிராமங்களில் கிராமதேவதைகளுக்காக ஆடு, கோழி, பன்றி, எருமை இவை களைப் பலிகொடுக்கிறார்கள். இவ்வக்கிரமங்களை நடத்திவரும் வகுப்பார்களுக்கு மெய்ஞ்ஞானம் இருக்குமா? ஒரு தாயின் முன்னால் ஒரு மகன் மற்றொரு மகனை அறுத்துக் காணிக்கை யாக வைத்தால் அத் தாய்க்கு எப்படிப் பிரீதி உண்டாகும்? ஆகவே படித்த வாலிபனுக்குச் சமயத்தில் வெறுப்பு உண்டா கிறது சகஜம். அதிலும் வேண்டுதலைக்காகவும், வைசூரி முதலி யவைகளைப் போக்கவும் பலி கொடுப்பதென்றால், இதனைவிட அருவருப்பானதும் உண்மைக்கு மாறானதும் வேறு எது உண்டு? கல்கத்தாவில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பூசித்த தக்ஷி ணேசுவரத்தில் ஆலய வாசலண்டை பூசனைக்கு வைத்த மாமி சங்களைப் பிரசாதமாக விற்றால் அந்தச் சமயத்தில் ஒரு கற்ற மானிடனுக்கு எவ்வாறு நம்பிக்கை வரும்? ஆகவே நம்மில் பலி கொடுத்தல் முதலிய மூடக்கொள்கைகள் அறவே ஒழிய வேண்டும் அல்லவா?

Koviloor Digital Library



மேலும் தக்ஷிணேசுவரத்தில் இராமகிருஷ்ணரின் படுக்கை, குறிச்சி முதலியவைகளுக்குப் பூசனை நடக்கிறது. போளூரில் இராமகிருஷ்ணர், விவேகாநந்தர் முதலிய பெரியார்களுக்கு ஆலயங்கள் கட்டி அவர்களுடைய உருவங்களுக்கு உருவ வழிபாடு நடக்கிறது. திருவண்ணாமலையிலும் சேந்தமங்கலத்திலும் மானிடவழிபாடு வெகு மும்முரமாக நடக்கிறது. இவ்விதமாக உயிருள்ளவர்களும் குறைபாடு கொண்டவர்களுமான மானிடர்களுக்குப் பரிபூரணமான கடவுளுக்கு வழிபாடு நடத்தலைப்போல் ஒரு வழிபாடு நடந்தால் அதைக் காணும் கல்விகற்ற மாணவன் எவ்வாறு சகிப்பான்? ஆகவேதான் நம் நாட்டு இளைஞர்களுக்குச் சமயத்தில் பற்றுக் குறைந்து கொண்டு வருகின்றது. மானிட வழிபாடு கூடாதென்று எவ்வளவு அழகாகத்,

> "தம்மையேபுகழ்ந் திச்சைபேசினும்
> சார்வினும்தொண்டர் தருகிலாப்
> பொய்ம்மையாளரைப் பாடாதேஎந்தை
> புகலூர் பாடுமின் புலவீர்காள்"

என்று சுந்தரமூர்த்திகள் கூறியிருக்கிறார்கள். மானிட வழிபாட்டில் ஈடுபட்டு எத்தனைப் பூசனைகள் புரிந்தாலும் நமக்கு அப்பூசனையைப் பெற்றவர்கள் உண்மையான நிலைமையை அளிக்கப் போகிறார்களா? அந்த ஈனச் செயல்களுக்கு மாறாக ஈசனைத் தொழுது ஈடேறுங்கள் என்று சுந்தரர் வற்புறுத்தியிருக்கிறார். இதனை நம் இளைஞர்கள் செவ்வனே அறிவார்கள். ஆகவே இக்குறைகளை நீக்கினால் ஒழிய நம் வாலிபர்களுக்குச் சமயக் கல்வியில் பிரீதி ஏற்படாது.

குற்றமற்ற சமயக்கல்வி இருந்தால் குணமும் ஒழுக்கமும் முன்னேறும். அப்போதுதான் வாலிபர்கள் நன்மக்களாகிச் சன்மார்க்கத்தில் வளர்ந்து தம் குடும்பத்திற்கும் நாட்டிற்கும் பயன்பட்டவர்களாகித் தம் பிறப்பின் பயனையும் பெறுவார்கள். மேற்கு நாட்டார்களைப்போல் நிரீசுவர வாதத்தில் இறங்கிச் சுயநலத்திற்காக நாகரீகத்தின் பெயரால் ஒருவரை ஒருவர் கொலைபுரிந்து நாசமாக்காமல் கடவுளிடத்துப் பக்தியோடும் மக்களிடத்து அன்போடும் பிழைப்பார்கள். அப்

Koviloor Digital Library



படிப்பட்ட கல்வி கிடைத்தால் பற்பல விதங்களிலும் நம் வாலி பர்களுக்கு நன்மைகள் ஏற்படும்.

மறு உலகத்தில் நன்மை கிடைக்குமென்ருல், இக்கால வாலிபர்களுக்கு நம்பிக்கை வருவது கடினம். இவ்வுலகில் ஏதாவது நன்மை கிடைக்குமா எனக் கேட்பார்கள். இவ் வுலகத்திலும் கிடைக்கும் என்று சுந்தரர் உறுதி கூறியிருக் கின்ருர்.

"இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையேசிவ லோகமாள்வதற்கு யாதும்ஐயுற வில்லையே"

அதாவது மறுமையில் சிவலோகம் கிடைப்பது மாத்திரமன்றி இவ்வுலகில் உண்ணச் சோறும் இருக்கக் கூறையும் கிடைக்கு மாம். ஒருவனுக்கு இவ்வுலகில் சுகமுடன் இருக்க இந்த இரண் டும் போதுமானவையல்லவா? மனிதனுக்குள்ள அவசியங்கள் சோறு கூறை என்ற இரண்டில் அடங்கிவிடும் என்பதைக் கவனியுங்கள். சமயக் கல்வி இவ்விரண்டும் தந்தால் பின்னர் நம் வாலிபர்களுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் என்பது ஏது சொல்லுங்கள்? அவ் வேலையில்லாத் திண்டாட்டந்தானே நம் படித்த இளைஞர்களை வாட்டுகிறது. படித்துவிட்டுப் பல உத்தியோக வேலைகளுக்கும் வேட்டையாடிச் சலித்துவிட்டுக் கடவுள் முதலான பல பேர்களிடமும் வெறுப்புக்கொண்டு தெய்வ நம்பிக்கையில்லாமல் எவ்வளவு ஆன்மாக்கள் வாடு கின்றன? அவர்களுக்குச் சமயக் கல்வி இருந்தால் சோறும் கூறையும் கிடைக்கும் என்றறிக. அது எப்படி என்று கேட் பீர்கள்.

நமது கிறிஸ்தவச் சகோதரர்களை எடுத்துக்கொள்ளுங் கள். எல்லாரும் படித்தவர்களே. ஆனல் எல்லாருக்கும் வேலை கிடைக்கிறது. உத்தியோகங்களில் அமர்ந்த பேர்களைத் தவிர மற்றவர்களுக்குத் தமது சமூகத்திலேயே சமய வேலை கிடைக்கிறது. அவர்களுடைய சங்கத்தார்கள் செய்து வந் திருக்கும் வேலையைப்பற்றியும் இனிச் செய்ய இருக்கும் வேலை களைப்பற்றியும் வருடாவருடம் அறிக்கைகளை விடுத்து வரு கிருர்கள். அவைகளைப் படித்தால் எவ்வளவு துறைகள் சமய

Koviloor Digital Library



நிலையில் இருக்கின்றன என அறியலாம். இவ்விதமாய் வேலைத் திட்டம் ஏற்படுத்துவதற்குச் சமயச் சங்கங்கள் வேண்டும். அவைகள் ஒருங்குகூடி ஆலோசனை புரிந்து தீர்மானித்தால் வேலையில்லாத் திண்டாட்டத்தை வெகு சுலபத்தில் நீக்கி விடலாம். அவ்விதம் சமயச் சார்பில் செய்யக்கூடிய சில துறைகளை எடுத்துக்காட்டுகளாக விளக்கிக் காட்டுவோம்.

## A　வேலை செய்யக்கூடிய நிலையங்களாவன:

1. சமயச் சங்கங்கள்
   - (1) பெரியவர்கள்
   - (2) மாதர்கள்
   - (3) வாலிபர்கள்

   } சமயப்பிரசாரம்.

2. ஆலயங்கள்
   - (1) நிர்வாகம்
   - (2) அர்ச்சகத் தொழில்
   - (3) திருவிழாக்கள்
   - (4) நூதனக் கட்டடம்

3. சமய நூற்பதிப்புகள்
   - (1) நிர்வாகம்
   - (2) வெளியீடுகள்—புதியவை, பழையவை
   - (3) கட்டடங்கள்.

4. சிசுக்கள், விதவைகள், அநாதைகள் முதலியவர்களுக்குச் சங்கங்கள்.

## B.　சங்கவேலைகளில் பிரிவுகள்

(கிறிஸ்தவர்கள் கணக்குப் புள்ளிகள்)

i.　பொருளாதார நிலையங்கள்

| | | இந்தியா | சென்னை |
|---|---|---|---|
| (1) | விவசாயம் | 71 | 14 |
| (2) | கூட்டுறவுச் சாலைகள் | 37 | 9 |
| (3) | அச்சுச் சாலைகள் | 47 | 13 |
| (4) | கைத்தொழிற் சாலைகள் | 41 | 19 |
| | | 196 | 55 |

Koviloor Digital Library



| ii. கல்விச் சாலைகள் | இந்தியா | சென்னை |
|---|---|---|
| (1) கல்லூரிகள் | 48 | 12 |
| (2) உயர்தரம் | 350 | 93 |
| (3) தொழில் | 133 | 40 |
| (4) வேலையாளர் மக்கள் | 13 | 6 |
| (5) நடுத்தரம் | 505 | 117 |
| (6) போதனாமுறை | 114 | 40 |
| | 1163 | 308 |

| iii. சமயப் பிரசார நிலையங்கள் | | |
|---|---|---|
| (1) குருபோதனா முறை | 81 | 25 |
| (2) வேலைக்காரர் | 51 | 20 |
| | 132 | 45 |

| iv. குருக்கள்மார் விடுமுறை விடுதிகள். | 34 | 8 |
|---|---|---|

| v. வைத்திய நிலையங்கள் | | |
|---|---|---|
| (1) சிறுசாலைகள் | 268 | 40 |
| (2) ஆஸ்பத்திரி | 285 | 72 |
| (3) குஷ்டரோகம் | 58 | 9 |
| (4) க்ஷயரோகம் | 11 | 2 |
| | 622 | 123 |

| vi தருமசாலைகள் | | |
|---|---|---|
| (1) குருடு ஊமை | 15 | 5 |
| (2) பெண் | 48 | 4 |
| (3) மதமாற்றம் | 9 | 6 |
| (4) அநாதை | 128 | 30 |
| (5) சமூகவேலை | 80 | 20 |
| | 280 | 65 |

| vii பத்திரிகைகள் | | |
|---|---|---|
| (1) இந்தியாமுழுவதும் | 21 | 4 |
| (2) வகுப்புவாரி | 37 | 10 |
| (3) மாகாணம் | 73 | 21 |
| | 131 | 35 |

Koviloor Digital Library



தெலுங்கு 4, தமிழ்-11 } 21 }
மலையாளம்-6

ஆகமொத்தம் நிலையங்கள் } இந்தியா 2568 சென்னை 639

C. அவ் வேலையில் ஈடுபட்டவர்கள் 1932-33 ஆண்டில்

| | |
|---|---|
| கிறிஸ்தவர்கள் | 2,671,536 |
| கிராமங்கள் | 46,794 |
| மொத்த தொகை ரூ— | 3,147,177 |

வேலைசெய்த ஆட்கள்

| | வெளிநாடு | | உள்நாடு | |
|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| குருமார் | 1380 | 1004 | 13651 | 6191 |
| படிப்பு | 419 | 854 | 20753 | 10079 |
| வைத்தியம் | 89 | 191 } | 718 | 1169 |
| ஆயா | | 243 } | | |
| மற்றவர் | 168 | 159 | 2805 | 896 |
| | ... | 1014 | ... | .... |
| | 2056 | 3465 | 37927 | 18335 |

ஆகவே இந்தியர்களில் 56,262 பேர் வேலை செய்தார்கள்.
இவர்கள் வேலைசெய்த தாபனங்கள் 2568

D. இவர்களிடம் கல்வி முதலிய சகாயம் பெற்ற ஆட்கள்.

i. கல்வி

மொத்தம் கல்லூரிகளும் பாடசாலைகளும் 16.791

| | கிறிஸ்தவர் | | ஏனையோர் | |
|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| கல்லூரி | 1596 | 911 | 9798 | 618 |
| உயர்தரம் | 36313 | 26642 | 62609 | 15097 |
| கீழ்த்தரம் | :175231 | 101,381 | 1,87,041 | 91637 |
| | 2,13,140 | 1,28,934 | 2,59,448 | 1,07,352 |

ii. வைத்தியம்

| | |
|---|---|
| ஆஸ்பத்திரி | 675 |
| நோயாளிகள் | 3,554,443 |
| படுக்கைகள் | 8,091 |

Koviloor Digital Library



iii. சமய வகுப்புகள் (ஞாயிறு)

| | |
|---|---|
| பாடசாலை | 19,936 |
| ஆசிரியர்கள் | 31,431 |
| பிள்ளைகள் | 6,76,264 |

iv.

| | | |
|---|---|---|
| (1) | சாப்பாட்டு விடுதிகள், சென்னை | 104 |
| (2) | கல்லூரி விடுதி | 9 |
| (3) | உயர்தரப் பாடசாலை | 23 |
| (4) | வெறும் விடுதி—மாணவர் | 22 |
| (5) | ஏனைய விடுதிகள் | 17 |
| | | 175 |

மேற்கூறிய கணக்குகள் பிராடஸ்டெண்ட் வகுப்பார்களுடையவை. இவைகளைவிட அதிகமாக ரோமன் வகுப்பார்கள் நடத்துகிறார்கள். இக் கணக்குகள் சமயச் சார்பில் படித்த மக்களில் எத்தனை பேருக்கு வேலை கிடைக்கிறது, எத்தனை சமயப்பிரசாரம் செய்யக்கூடும் என்று எடுத்துக் காட்டுகின்றன. சைவர்கள் ஏன் இக் கைங்கரியம் செய்யக் கூடாது?

இனி, இலங்கையைப்பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்லவேண்டும். பலியிடல் தமிழர்களுடைய வழக்கம் அன்று. கண்டிப்பாகச் சைவர்களுடையதன்று. பலி என்ற சொல்லே தமிழ்ச்சொல் அன்று. ஆகவே, அவ்வழக்கம் தமிழருக்கு ஏது? திருவள்ளுவரும், சாந்தலிங்க சுவாமிகளும் அவதரித்த நாட்டிலும் அந்நாட்டு மக்களிலும் பலி இருந்திருக்க முடியுமா? அது பிறநாட்டிலிருந்தே இறக்குமதியான ஒரு கெட்ட கொடிய பழக்கமேயாகும். இந்தியாவில் இத் துர்ப் பழக்கம் அதிகம் உண்டு. இந்நாட்டிலும் ஒரு சிறிது உண்டெனக் கேள்விப்பட்டேன். கொலையும் பலியும் அறவே கூடாது என்று போதித்த பௌத்த சமயம் ஆளும் இத் தீவில் எவ்வாறு இத் துர்ப்பழக்கம் வந்ததோ தெரியவில்லை. அது, எங்கேனும் இருந்தால், இனி அடியோடு மறைந்துவிடும் என்று எண்ணுகிறேன்.

Koviloor Digital Library



சமயச்சார்பில் நடக்கும் மற்ற மூடப்பழக்கங்கள் எவை யெனில் வெறியாடல், அலகு குத்துதல், தீ மிதித்தல் முதலி யன. இவை காட்டுமிராண்டிகளின் சமய நடவடிக்கைகள். சாத்வீக சமயமாகிய சைவத்தில் இவைகளுக்கு இடமில்லை. நோன்பு அல்லது தவம் என்பதைக் கூறும்போது, தெய்வப் புலவர்,

> " உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை
> அற்றே தவத்திற் குரு ".

என்றார். ஆகவே உடம்பில் வலிசெய்துகொண்டு பின்பு அதைப் பொறுத்துக்கொள்ளுதல் தவம் ஆகாது. இந்நாட்டில் இத்தவம் அதிகமாகக் குடிகொண்டிருக்கிறது. அது, இருந் தால் வெளிநாட்டாரும் வெளிச்சமயத்தாரும் ஏளனம் செய்ய இடம் இருக்கும். நம் வாலிபர்க்கும் நம்பிக்கைக் குறைவு உண் டாகும். ஆகவே இந்தத் தீ ஒழுக்கங்களை விடவேண்டும். நல் லொழுக்கத்தில் சேரவேண்டும். அப்போதுதான் எல்லாரையும் 'சேரவாரும் செகத்தீரே' என்று நாம் அழைக்க முடியும்.

இக்காரணங்களினால் சமயக்கல்வி நமது நாடுகளில் அவ சியம் என்று தோன்றவில்லையா !



Koviloor Digital Library

# நச்சிஞர்க்கினியர்

வித்துவான் அ. கிருட்டினமூர்த்தி
தமிழாசிரியர், சருவசன உயர்நிலைப்பள்ளி, பூளைமேடு, கோவை.

ஒரு பொருளுக்கு நல்ல மதிப்பு உண்டாகவேண்டின், அதைப்பற்றிய சிறப்புக்களெல்லாம் நன்கு வெளியாகவேண்டும். இல்லையேல், அப்பொருள் எவ்வளவுதான் பெருமையுடையதாயிருந்தாலும், எப்பொழுதும் அது குடத்துக்குள் விளக்குப்போலவே மறைந்து கிடந்து, நாளடைவில் மடிந்துவிடும். தொல்காப்பியம், பத்துப்பாட்டு முதலான சங்க நூல்கள் பல நூற்றூண்டுகள் வரையில் அவ்வாறே மறைந்து கிடந்தன. பதின்மூன்று பதிஞன்காவது நூற்றூண்டுகளில் அப் பழைய நூல்களுள், ஒரு புதிய ஒளி வீசத் தொடங்கிற்று. அவ்வொளியினை வீசியவர்கள் அக்காலத்தில் வாழ்ந்த உரையாசிரியர்கள். உரையாசிரியர் என்போர் இளம்பூரணர், பரிமேலழகர், சேஞவரையர், பேராசிரியர், நச்சிஞர்க்கினியர் முதலியோராவர். இவர்களுடைய உரைகள் பழைய தமிழ் இலக்கியங்களைப் படித்து அறிந்துகொள்ளுவதற்குப் பேருதவியாக இருக்கின்றன. சில ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததைவிட இப்பொழுது பழைய தமிழ் இலக்கியங்களாகிய சங்க இலக்கியங்களைப்பற்றிப் பலரும் பெருமையாகப் பேசத் தொடங்கியுள்ளனர். அப்பெருமைகள் வெளிப்பட்டதற்கெல்லாம், உரையாசிரியர்களே காரணராவர். அவர்களால் எழுதப்பட்ட உரை நூல்களுள் (Commentaries) மிகப் பழைமையானது, "இறையனர் அகப்பொருள் உரை" என்பது. அவர்களுள், எல்லோரையும்விட, மிகுதியான நூல்களுக்கு உரை எழுதித் தமிழ் மொழியை விளங்க வைத்தவர், ஆசிரியர்—நச்சிஞர்க்கினியர். எனவே, அவரைப்பற்றிய சில குறிப்புக்களை இங்குக் காணுவோம்.

மற்றை ஆசிரியர்களைப்போலவே, நச்சிஞர்க்கினியருடைய வரலாறும் தெளிவாகத் தெரியவில்லை. அவருடைய ஊர் மதுரை சில்லாவில் உள்ளது என்பர். இவர் பிறவியில் சமண மதத்தைச் சார்ந்தவர் என்றும், பிறகு சைவராக மாறினர்

Koviloor Digital Library



என்றும் சிலர் கூறுகின்றனர். இவர் வடமொழியிலும் தமிழிலும் நிரம்பிய பயிற்சியுடையவர். தாம் படித்த செய்திகளை மறவாது நினைவில் வைத்திருக்கும் ஆற்றலும் அவற்றை ஏற்ற இடத்தில் நினைவுக்குக் கொண்டுவரும் சிறப்பும் இவருக்கு உண்டு. அவை மிக மிக வியப்பதற்கு உரியன. நினைவாற்றலில், இவரை ஒரு மெக்காலேவுக்கு ஒப்பிடலாம். சுருங்கக் கூறினால், இவர் படித்தறியாத தமிழ் நூல்கள் இவர் காலத்தில் இல்லையென்று சொல்லலாம்.

இவற்றையெல்லாம் இவர் எழுதியுள்ள தொல்காப்பிய உரை, பத்துப்பாட்டு உரை, கலித்தொகை உரை, சீவக சிந்தாமணி உரை முதலான நூல்களில் நன்கு விளங்கக் காணலாம். இவர் குறுந்தொகை என்ற நூலுள் இருபது பாட்டுகளுக்கு உரை எழுதி இருப்பதாகவும் தெரிகிறது. இவருடைய உரைகளின் இடையே ஆங்காங்கு எண்பதுக்கு மேற்பட்ட நூற்களை மேற்கோளாக எடுத்தாண்டுள்ள சிறப்புப் பெரிதும் பாராட்டற்பாலது.

இவருடைய உரைகள், திருத்தமான உரைநடையில் அழகிய முறையில் எழுதப்பட்டுள்ளன. இவராலேதாம் தமிழில் நல்ல உரை நடை பெருவழக்காயிற்று என்று கூறினும் அது பிழையுடைத்தன்று. ஆங்கிலத்தில் ‘criticism’ எனப்படும் ‘மதிப்பீட்டு முறையைத்’ தமிழிற் போற்றி வளர்த்து வழிகாட்டிய பெரியாருள் இவர் சிறந்தவர்.

இவருடைய காலத்திற்கு முன்பு உரையாசிரியர்கள் பலர் இருந்திருக்கின்றனர். அவர்களுடைய உரைகளில் எப்பகுதியாவது பொருந்தாதது என்று தமக்குத் தோன்றினால், அதனைக் காரணங்கள் காட்டி மிகத் தெளிவாக மறுத்து எழுதுவார். சில இடங்களில், அவருடைய பெயரையே குறிப்பிட்டு அவர் உரையிலுள்ள குறைகளை எடுத்துக் காட்டுவார். பொருள் எளிதில் விளங்காத பல சொற்களுக்கெல்லாம், இவருடைய உரை ஒரு சிறந்த திறவுகோலாக இருக்கிறது. இவர், வருந்தி உழைத்து மிகுதியான உரைகள் எழுதியிருப்பது போல வேறு யாரும் எழுதவில்லை. இத்தகைய பெரியா

Koviloor Digital Library



ரைப்பற்றி, டாக்டர் போளவர் என்பார் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"ஐரோப்பியர், தம் நூல்களுக்கு எழுதிய விளக்கவுரை (Annotations)களைப்போல நச்சினார்க்கினியரின் உரைகளும் மிகச் சிறப்புடன் அமைந்துள்ளன. அவர் பாட்டின் செய்திகளை உரைநடைப்படுத்துவதும் (Paraphrases) இலக்கணக் குறிப்புக்கள் எழுதுவதும் மிகச் சிறந்தன. அவர் தமது உரையில் ஆங்காங்குத் தொல்காப்பியச் சூத்திரங்களைக் குறிப்பிடுகின்றார்; விளங்காத பல சொற்களைத் தெளிய விளக்குகிறார்; பாட வேறுபாடுகளையும் (Various readings) தமது காலத்தில் உள்ளபடி குறிப்பிடுகின்றார். ஆனால் அவருடைய நடை ஆழ்ந்த பொருளை யுடையது; மொழிப்போக்குக் கடினமானது; நூலிலுள்ள செய்திகளை வகுத்தும் தொகுத்தும் விளக்குகின்ற அவர் பேராற்றலே அவர் நூல்கள் நன்கு விளக்குகின்றன.

இவ்வளவு சிறப்பும், பரந்த படிப்பும், ஆழ்ந்த அறிவும், அழுத்தமான நினைவும், தளராத உழைப்பும் உடையவராயினும், அவரிடத்தில் சில குறைகளும் உண்டு. அவருடைய உரைகளில் 'கொண்டு கூட்டுதல்' என்ற ஒருவகை உரை வரையும் முறையை முறைமை கடந்து வழங்கியுள்ளார். ஒரு செய்யுளில் முதலடிக்கும் முந்நூறு மடிக்கும் இயையு இருக்க முடியாது. இருப்பினும் நச்சினார்க்கினியர் அவ்வாறன இயைபை எக் கருத்துடன் எடுத்துக் கையாளுகிறாரோ அக் கருத்துடன் அவ்வடிகள் அமைந்திருப்பது முடியாது. தாறுமாறாகத் தம்முடைய கருத்துக்களையெல்லாம் நுழைத்துச் செய்யுளைச் சிதைத்துக் கொண்டுகூட்டுகள் செய்திருப்பினும், அக் கொண்டுகூட்டுமுறையால் அவ்விலக்கியங்களுக்குப் பொருள் செய்யும் முறையை நாமனைவரும் உய்த்துணரும்படி செய்தவர் அப் பேராசிரியரே யாவர். அவ்வாறு அவர் வரைந்துள்ள உரைகளால், அவர், தம் காலத்தவரான ஏனையர் யாரையும் கருதாமல், தம் உளத்திற் பட்டதைத் திட்பமாக எடுத்துக் கூறியிருக்கிறார் என்பதை நாம் நன்கறியக் கூடும்.

இவ்வாறன குறையுடன், வடமொழிக் கருத்துக்களைத் தம் உரைவாயிலாக நூலிற் பெய்து கூறுவதும் அவருக்

Koviloor Digital Library



குப் பெரு வழக்கம். இவைபோன்ற குறைகளெல்லாம் சிலவேயுள.

இனி, இளம்பூரணரின் உரை எழுத்ததிகாரத்திற்குச் சிறந்தது; பேராசிரியன் உரை தொல்காப்பியத்திற்குச் சிறந்தது. அதுபோல, நச்சினார்க்கினியரின் உரை சிந்தாமணிக்கே சிறந்தது.

நிற்க, திருக்கோவையாருக்கு உள்ள உரையும், மயிலேறும் பெருமாள் பிள்ளை எழுதிய கல்லாடவுரையும் நச்சினார்க்கினியர் எழுதியன என்று கருதப்பட்ட காலமும் உண்டு. கீழ்க்கணக்கு நூல்களில் சிலவற்றிற்கு உள்ள பழைய வுரைகள், இவர் பெயரால் அச்சிடப்பட்டுள்ளவற்றை—யான் பார்த்ததுமுண்டு. நிற்க, நச்சர் என்ற ஒருவர் திருக்குறளுக்கு உரை வரைந்ததாக ஒரு தனிப்பாட்டால் அறியக் கிடக்கின்றது. அந் நச்சர் என்பவர் இவரே என்று பலர் கருதுகின்றனர். பலவேறு பெரு நூல்கட்கு இவர் உரை வரைந்துள்ளமையால், தமிழ் நூல்களின் தலைமணியான வள்ளுவர் குறளுக்கு, இவர் உரை வரைந்திருக்கக் கூடும் எனக் கருதுதல் பொருத்தமுடையதே எனினும், அங்ஙனம் இவர் எழுதினரா? நச்சர் எனப்பட்டவர் இவர்தாமா? என்பனவெல்லாம் ஆய்வதற்குரியன என்க.

இடையில் முன்னர்க் கூறியாங்கு, சில குறைகள் இவர்தம் உரையிற் காணக்கிடப்பினும், இவருடைய அரிய பெரிய உயர்ச்சிகளுக்கு முன்பு, அவை நிலைநிற்கமாட்டா. இங்ஙனம் பேரும் புகழும் பெற்று விளங்கினமையால், அவரை "உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க்கினியன்" என்று பின்னர்த் தோன்றிய புலவர்கள் போற்றுவாராயினர். அவருள் ஒருவர், "நச்சினார்க்கினியன் எச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்" என்று பாடினர். அதாவது நச்சினார்க்கினியன் படித்து்த் துப்பிய எச்சிலான தமிழையே, மற்றைப் புலவர்கள் நுகருகின்றனர் என்பது. தேனீயால் திரட்டப்பட்ட எச்சிலாகிய தேனை எல்லா மக்களும் மாந்தி மயங்குவதைக் காண்கிறோம். ஆனால், நச்சினார்க்கினியன் எச்சில் பட்டுத் தேனைக் காட்டினும் தித்தித்து நிற்பது நமது செந்தமிழ். எனவே, அதனைப் பருகுவோம்; அறிவு விளக்கம் பெறுவோம்; அகங்களிப்போம்.

Koviloor Digital Library

# மண்ணும் எண்ணெயும்

"N. K. வேலன்"

இக்காலத்திய போருக்கு உறு துணையாய் நிற்பது மண் எண்ணெய். மோட்டார் கப்பல், ஏரோப்ளேன் முதலியவற்றின் பொறிகளை இயக்குவதற்கு மண் எண்ணெய் பெரிதும் பயன்படுகின்றது. பூமிக்குள் எண்ணெய் இருப்பது நெடுநாட்களாய் மக்களுக்குத் தெரியாமல் இருந்தது. சில இடங்களில் மண் எண்ணெய் ஊற்று நீருடன் கலந்து வெளிக்கிளம்பிற்று. இந்த இடங்களிலேதான் முதன்முதலில் எண்ணெய்க் கிணறுகள் வெட்டப்பட்டன.

எண்ணெய்க் கிணறுகள் வெட்டுவதற்குக் கல், மண், பாறை முதலியவற்றின் ஆராய்ச்சியில் திறமைவாய்ந்த அறிஞர்கள் பலர் உதவி செய்தனர். பூமிக்குள் எண்ணெய் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிப்பது அவ்வளவு எளிதன்று. எண்ணெய் இறுகிய பாறைகளின் இடையினும், இளகிய பாறைகளின் உள்ளேயும் தோய்ந்து நிற்கும். இப் பாறைகளைத் தேடி ஆராய்ச்சிக்காரர்கள் பூமிக்குள் இறங்கிச் செல்வதில்லை. அவர்கள் பூமியில் துளை போட்டு உள்ளே இருக்கும் பாறைகளைச் சோதனை செய்வார்கள். இதிலிருந்து எண்ணெய்ப் பசையுள்ள பாறைகளைக் கண்டுபிடிப்பார்கள்.

உலகில் மக்கள் தோன்றுவதற்கு நெடுங் காலத்திற்கு முன்னமேயே மண் எண்ணெய் உண்டாயிருக்க வேண்டுமென அறிஞர் கூறுகின்றனர். பண்டைக் காலத்தில் வாழ்ந்துவந்த மிகப் பெரிய உயிர்கள் இறந்துபட்டு அழுகிப்போய்க் கடலின் அடியில் அமிழ்ந்து கிடந்தனவென்றும், அவை நாளடைவில் இறுகிப்போய் எண்ணெய்ப் பாறைகளாக மாறி இருக்கவேண்டுமென்றும் கூறப்படுகின்றது. எண்ணெய்க் கிணறுகள் வெட்டும் இடங்களில் எல்லாம் கடல் உயிர்களின் எலும்புக் கூடுகளும் கடற்பாசிகளும் நிறைந்து கிடக்கின்றன. இதனாலேதான் கடல் உயிர்களினின்றும் மண் எண்ணெய் தோன்றியிருத்தல் வேண்டுமென நாம் நம்புகின்றோம். எண்ணெய்ப் பசையோடு கடல் தரையில் இருந்த மண் பல நூற்றாண்டுகளாய் இறுகிப்

Koviloor Digital Library



போய்ப் பாறைகளாக மாறின. இவற்றுள் சில பகுதிகள் கடற் பூச்சிகளின் எலும்புக் கூடுகளுடன் கலந்து சுண்ணும்புக் கல்லாக மாறியது. மண் எண்ணெய் பெரும்பாலும் சுண்ணும்புக் கல் உள்ள இடங்களில் மிகுதியாய் எடுக்கப்படுகின்றது.

எண்ணெய்க் கிணறு வெட்டுவதற்குக் கூர்மையான இரும்புக் கம்பியைக் கயிற்றின் உதவியால் மேலே உயர்த்திப் பாறையின்மேல் போடுவார்கள். இங்ஙனம் இடைவிடாது அடித்துக்கொண்டே இருப்பதால் பாறையில் சிறிது சிறிதாகக் குழி விழுகின்றது. அடிமேல் அடி விழுந்தால் ஆழம் மிகுதிப்படும். பாறையில் துளை போடுவதற்கு இன்னெரு வகையான கருவியும் உண்டு. இக்கருவி சுழன்றுகொண்டேபோய்ப் பாறையைத் துளைத்துவிடும் எண்ணெயைக் காணும்வரை துளை போட்டுக் கொண்டே இருக்கவேண்டும். பல திங்களாக இரவும் பகலும் ஓயாது தோண்டினும் சில வேளைகளில் எண்ணெய் கிடைப்பதில்லை. ஒரு மைல் ஆழத்திற்குமேல் வெட்டினுலும் எண்ணெயைக் காணமுடிவதில்லை. இதில் கோடிக்கணக்காய்ப் பொருட் செலவு ஏற்படும்.

துளை போடும் கருவி கிணற்றின் உள்ளே விழுந்துவிட்டால் அதனைக் கொக்கிகளின் உதவியால் வெளியில் எடுக்க வேண்டும். இதற்குப் பல நாட்கள் செல்லும். சில வேளைகளில் எண்ணெய் இருக்கும் இடம் வரையில் துளை போட்டாலும் எண்ணெய் மேலே பொங்கி வருவதில்லை. இங்ஙனம் நேர்ந்தால் குழாயின் வழியாய்க் கிணற்றின் உள்ளே வெடி மருந்தைச் செலுத்தி அதனை மின்சார ஆற்றலால் வெடிக்கச் செய்வர். இதனுல் பூமியில் அதிர்ச்சி ஏற்பட்டு உள்ளே இருக்கும் பாறைகள் வெடித்து எண்ணெய் வெளிப்படும்.

கிணறு வெட்டும்போது எண்ணெய் திடுமென வெளிக் கிளம்பினுல் அது காற்றுடன் உராய்ந்து தீப் பிடித்துக்கொள்ளும். எண்ணெய்க் கிணற்றில் தீப் பிடித்துக்கொண்டால் அதனை எளிதில் அணைக்க முடியாது. கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதுபோல் ஆய்விடும். நீராவியின் உதவியாலேதான் இத் தீயை அணைக்க முடியும். நெருப்பு அணைக்கும் வேலைக்

Koviloor Digital Library



காரர்கள் முகமூடி அணிந்துகொண்டு கிணற்றின் உள்ளே நீராவியைச் செலுத்துவர். ஆயினும் இத் தீ அணைவதற்குப் பல நாட்கள் செல்லும். எண்ணெய்த் தீயினால் பெருஞ் சேதம் விளைவதால் அதனைத் தடுக்கப் பல ஆராய்ச்சிகளைச்செய்துவருகின்றனர்.

மண் எண்ணெயைக் கிணற்றிலிருந்து குழாய்களின் வழியாய்த் தொழிற்சாலைகளுக்கு அனுப்பி அதிலுள்ள அழுக்கு முதலியவற்றைப் போக்குவார்கள். அழுக்குள்ள எண்ணெய் நுட்பம் வாய்ந்த பொறிகளை இயக்குவதற்கு உதவாது. இந்த எண்ணெயைப் பக்குவமாகக் காய்ச்சி அதனை ஆவியாக்கி, மீண்டும் குளிரச் செய்தால் அது மாசற்ற எண்ணெயாக மாறுகின்றது. இங்ஙனம் முதலில் வடிக்கும் எண்ணெய் பெட்ரோலாகவும், அடுத்தபடியாக வருவது கெரோசினாகவும், மூன்றாவதாகத் தார் முதலிய கலப்பு எண்ணெயாகவும் எடுக்கப்படுகின்றன.

மண் எண்ணெய் நமக்கு எல்லா வகையிலும் பயன்படுகின்றது. இதிலிருந்து எடுக்கப்படும் "பாரஃபின் (paraffin) என்னும் மெழுகு, தீக்குச்சி செய்ய உதவுகின்றது. கூந்தலுக்குப் போடும் தைலங்களும், முகத்திற்குத் தடவும் எண்ணெய்களும், பல்வேறு சாயங்களும் மருந்துகளும் இதனால் செய்யப்படுகின்றன. இக்காலத்தில் மண் எண்ணெயைத் தேடி மன்னரும் அலைகின்றனர். மண் எண்ணெய்க்காகப் பல நாடுகள் ஒன்றோடொன்று போட்டி இடுகின்றன. மண் எண்ணெயின் மாண்பை என்னென்பது!



Koviloor Digital Library

# சிலப்பதிகாரமும் அவலச்சுவையும்

" கோட்டாறு தே. ப. பெருமாள் "

—"நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு"

என்று சிலப்பதிகாரத்தினைப்பற்றி அழகாக எழுதிவைத்தார் ஒரு தமிழ்ப்புலவர். இம்மொழிகள் எத்துணை உண்மைசான்றன வென்பதைச் சிலப்பதிகாரத்தை ஊன்றிக் கற்பார் நன்குணர்வர். சிலப்பதிகாரம் தமிழ்மொழிக்கு இறவாத புகழினைத் தேடிக்கொடுத்த நூற்களுள் ஒன்றாகும். இது பழந்தமிழரின் திருந்திய வாழ்வினையும், பொருந்திய நேர்மையினையும், விரிந்த மனபான்மையினையும் விளக்கும் நூல். அவரின் வீரத்தின் விளைவையும், வெற்றியின் உயர்வையும், கலையின் தேர்ச்சியையும், கவின்பெறக் காட்டுவது இந்நூல். இது அவரின் வாணிபச் சிறப்பையும், தொழிலின் ஏற்றத்தையும், நாகரிகமுதிர்ச்சியையும் நன்கு காட்டித் தமிழ்ப் பண்ணையில் வந்த பண்டை மக்கள் உலகின் பிற எக் குலத்தினருக்கும் இளைத்தவரின்றிச் சிறந்தவரே யென்பதைச் சீர்பெறக் காட்டுகிறது.

இந்நூலின் ஆசிரியர் சேரநாட்டுச் செல்வம் இளங்கோ வடிகள் ஆவார். இந்நூல் ஏனைய நூற்களைப் போன்று வடமொழியினின்றாயினும், பிறமொழியினின்றாயினும் மொழிபெயர்க்கப்பட்ட ஒரு நூலன்று. அதோடு இந்நூலில் கூறப்படும் கதை இந்நூலாசிரியர் காலத்தே நிகழ்ந்ததுமாகும். இந்நூலாசிரியரோ முதற்கண் இன்ப வாழ்வினையும், அதன் பின் துறவு வாழ்வையும் கொண்டவராதலான் உலகஇயல்பை நன்கு உணர்ந்தவராகின்றார். இவைகளெல்லாம் இந்நூலுக்கு ஏனைய நூற்களுக்கில்லாத் தனிப்பட்ட சிறப்புகள் அமையப் பெறுவதற்குக் காரணங்களாகும்.

"உண்மைக் கவிதைகள் உள்ளத்தைத் தம் வயப்படுத்துந் தன்மையானவை" என்பது சான்றோர் சொல். இக் கூற்றுக்குச்சிலப்பதிகாரக்கவிதைகள் சிறந்த எடுத்துக்காட்டுகளாக

Koviloor Digital Library



இருக்கின்றன. இந்நூற்கண் அமையப்பெற்றுள்ள கவிதைகள் உணர்ச்சியின் உயர்ந்த எல்லையைத் தம் வயம் கொண்டு கற்பாரைத் தம்மிடையே மூழ்கச் செய்கின்றன. காதல் சுவை பொதுளிய பாக்களை நாம் படிக்கும்போது நமது உள்ளம் இன்பத்தில் திளைக்கிறது. அவலச்சுவை ஆர்ந்த கவிதைகளைப் படிக்கும்போது நமது நெஞ்சம் கசிய ஊன் உருகுகின்றது. வீரச்சுவை விளங்கும் பாகங்களைப் படிக்கும்போது நமது மெய் சிலிர்க்க நமது உள்ளத்திலே வீரக்கனலின் சோதி வீறுற்றெழுகின்றது. இவ்வாறு ஒவ்வோரிடமும் நம்மை ஈர்க்குந் தன்மையதாய் இயங்குகின்றது.

எண் சுவையுள் அதிகச் சுவைகளும் சிலப்பதிகாரத்துள் அங்கங்கே காணப்பெறுகின்றன. ஆனல் அவையுள் மூன்றையே சிறப்பாகச் சொல்லலாம். அவை உவகைச் சுவை, (சிருங்கார ரஸம்), அவலச்சுவை (சோக ரஸம்), பெருமிதச் சுவை (வீரரஸம்) என்பனவாம். இம் முச்சுவைகளுமே ஒரு நூலின் சிறப்பை அதிகப்படுத்துதற்கு ஏதுவாக அமைகின்றன.

சிலப்பதிகாரத்தின்கண் புகார்க்காண்டம், கண்ணகி, கோவலன் திருமணத்தையும், அவர்கள் துய்க்கும் இன்பத்தையும், பின்னர் மாதவியின் ஆடலையும், பாடலையும், பிற மகிழ்ச்சிகளையும் அழகுபெறக் கூறுதலால் அதன்கண் உவகைச் சுவையும், மதுரைக்காண்டம், கண்ணகி தன் கேள்வனை இழந்து துன்பாடித் துயருழத்தலைக் கூறுதலால் அதன்கண் அவலச் சுவையும், அதோடு அக் காண்டம் கண்ணகி பாண்டியனிடம் முறைகேட்டுத் தங் கணவன் கள்வனல்லன் என்பதை வீரத்தோடு விளக்கிக் காட்டுதலையும், பின் அவள் வஞ்சினம் கூறி மதுரையை அழித்தலையும் கூறுதலால் அதன்கண்ணே வீரச் சுவையும், இனி வஞ்சிக்காண்டம் சேரன் செங்குட்டுவனது போரின் வெற்றியையும், வெற்றியின் சிறப்பையும் விரித்துக் கூறுதலால் அதனிடமும் வீரச்சுவை மிகுந்தும் தோன்றுகின்றன. இனி இக் காண்டங்களுள் பிற சுவைகள் விரவியும் வந்துள்ளன.

Koviloor Digital Library



சிலப்பதிகாரத்துள் அவலச்சுவை நிறைந்த இடங்களைப் படிக்கும்போது நாம் நம்மையே மறந்து அதனிடம் படிந்து விடுகின்றோம். அவலச்சுவையின் இயல்பினைக் கூறவந்த ஆசிரியர் தொல்காப்பியனார்,

> "இளிவே இழவே அசைவே வறுமையென
> விளிவில் கொள்கை யழுகை நான்கே"

என்னும் சூத்திரத்தான் விளக்குகின்றார். இச்சூத்திரத்தால் அவலச்சுவை இளிவு, இழவு, அசைவு, வறுமை என்னும் நான்கால் பிறக்குமென்பது பெறப்படுகின்றது. இளிவு என்பது பிறரால் இகழப்படுதல், இழவு என்பது நெருங்கிய சுற்றத்தாரையும், இன்பத்திற்குரிய பொருளையும் இழத்தல், அசைவு என்பது வயது முதிர்ச்சி முதலியவற்றால் வருந்துதல், வறுமை என்பது பொருளின்மையால் இன்பம் துய்க்கப் பெறாது செல்லுதல், இவற்றுள் சிலப்பதிகாரத்தின்கண் அமைந்த அவலச்சுவை பெரிதும் இழவால் ஏற்படுவதாகும். கண்ணகி கணவனை இழந்த இடத்திலேயே ஆசிரியர் இளங்கோவடிகள் அச் சுவையின் முதிர்ச்சியைக் காட்டி இருக்கின்றார். பிறவற்றால் அங்கங்கே அவலச்சுவைகள் காணப்பெறுமாயினும் அவை இழவு போன்று அத்துணைச் சிறப்பிலவென்றுதான் கூறவேண்டும். சிலப்பதிகாரத்துள் அவலச்சுவை நிறைந்த இடங்களே இக் கட்டுரையில் ஒருவாறு காட்டப்படுகின்றன.

காடும், மேடும், நாடும், நீரும் சூழ்ந்த கடுவழியைக் கால் நடையால் நடந்து கடந்த கண்ணகியும், கோவலனும், கவுந்தியடிகளும், மதுரைமா நகரை அடைந்தனர். ஆங்கு அவ்வமயம் வந்தெய்திய மாதரி என்னும் ஆயர்குல முதுமகளிடம் கண்ணகியை அடைக்கலமாக ஒப்புவித்தார் கவுந்தியடிகள். காசறு குணத்துக் கண்ணகியை மாசற உணர்ந்த மாதரி மனமிசைந்து முகமலர்ந்து மகிழ்வுபொங்க அவளை அடைக்கலமாகப் பெற்றுக் கோவலனோடு அந்திமாலையில் தமதில்லம் வந்தடைந்தாள். மாதரி அங்கு இவர்கட்குத் தனியில்லம் கொடுத்தாள். கண்ணகிக்குத் தன் மகள் ஐயையைப் பணிப்பெண்ணாக அமர்த்தினாள். கண்ணகியும் தம் காந்தள் விரல் சிவப்பு,

Koviloor Digital Library



கவின்முகம் வியர்வை உகுப்ப, காவிக்கண் புகையால் கலங்க, காதலனுக்கு உணவு சமைத்தாள். பின் அவள் கோவலனைத் தடுக்கில் இருத்தி அவன் பாதமலர்களை நன்னீரால் தூய்மைப் படுத்தி அவனுக்கு உணவு படைத்தாள். இல்லாள் ஈந்த அறுசுவை உண்டியை ஆர்வமுற உண்ட கோவலன் அவள் கையால் அடைப்பமும் பெற்றான். பின் அவன் தன் காதலியை அருகில் அழைத்தான். அவனது உள்ளத்திலே கடந்த கால நிகழ்ச்சிகளெல்லாம் காற்றெனப் பறந்துவந்தன. தான் செய்த தீச்செயல்களை எண்ணியெண்ணி மனம் புண்ணுற்றான். தம் தாய்தந்தையர் நிலையை ஓர்ந்து மனம் குலைந்தான். தன் காதலியின் உயர்வை உன்னி யுன்னி உணர்ந்து அவளைக்,

"குடிமுதற் சுற்றமும் குற்றிளை யோரும்
அடியோர் பாங்கும் ஆயமும் நீங்கி
நாணமும் மடனும் நல்லோ ரேத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னொடு போந்திங் கென்றுயர் களைந்த
பொன்னே! கொடியே! புனைபூங் கோதாய்!
நாணின் பாவாய்! நீணில விளக்கே!
கற்பின் கொழுந்தே! பொற்பின் செல்வீ!

என்னும் அழகு மொழிகளால் புகழ்ந்து போற்றினான்.

பின் அவளின் காற்சிலம்பு ஒன்றைப் பெற்று விற்று வருவதாகக் கூறி அவளைத் தேற்றி அன்புடன் அணைத்துத் தழுவினான். இப்போது கோவலனைப் பிரிவின் துயர் பற்றிப் படர்ந்தது. தன் காதலியின் இயல்பை எண்ணி அறிந்தான். மெல்லியல் மங்கையின் தனிமையை ஓர்ந்து மனம் வருந்தினான். அவனது நெஞ்சம் கலங்க விழிகளினின்றும் கண்ணீர் பெருகியது. தன் கண்ணீரைக் காதலி காணின் அவளது நெஞ்சம் புண்ணுறுமே என அஞ்சிக் கண்ணீரை அவள் அறியாது துடைத்தான். இத்தகைய அவனது கோலத்தை ஆசிரியர் இளங்கோவடிகள்,

"கருங்கயல் நெடுங்கண் காதலி தன்னை
ஒருங்குடன் தழீஇ உழையோர் இல்லா

Koviloor Digital Library



ஒருதனி கண்டுதன் உள்ளகம் வெதும்பி
வருபனி கரந்த கண்ண னாகி''

என்று அழகாக எழுதிக் காட்டுகின்றார்.

அவ்விடத்தை விட்டகன்ற கோவலன், தன்னை எதிர்த்துப் பாய்ந்த கொல்லேற்றின் செய்கையினையும் அபசகுன அறிகுறியென அறியாது மதுரையின் உள்நகருள் புகுந்தான். அங்கேதான் பின் அவன் கொலையுட்படுகிறான்.

இங்கு ஆயர்சேரியில் நிகழ்ந்த புதுமையால் துன்பம் வராது இருத்தல் வேண்டி மாதரி மற்றை ஆயர்குலப் பெண்களோடு குரவைக் கூத்தாடிய பின்னர்த், திருமாலை வழிபட ஆற்றில் நீராடச் சென்றாள். அவண், அவள், பாண்டியனால் கோவலன் கள்வனென்று கொல்லப்பட்ட செய்தியை அறிந்தாள். நேராய் இல்லம் வந்தாள். கண்ணகியைத் தன் எதிரில் கண்டாள். இதை அவளிடம் தன் வாயால் கூற அவள் மனம் இசையவில்லை. ஆனால், அவளது மெய்ப்பாடு இதைச் செவ்வனே விளக்கிக் காட்டிற்று. அவள் மற்றைப் பெண்டிரோடு கோவலனுக்கு நேர்ந்த கொடுமையைக் கூறி மனம் வருந்தினாள்.

இதைக் கண்டாள் கண்ணகி; கலக்கம் கொண்டாள். காதலன் தன்னை விட்டுப் பிரியும்போதே, கன்றிய அவள் உள்ளம் இப்போது மயக்கம் கொண்டது. காதலனுக்கு ஏதோ துன்பம் நிகழ்ந்திருக்கின்றது என்பதைப் பத்தினிப் பெண்ணாகிய அவளுக்கு இப்போது அவள் உள்ளம் உணர்த்திற்று.

ஐயையை நோக்கினாள். 'என் தோழீ!' என அழைத்தாள். 'என் காதலன் இதுவரையும் வரவில்லை. என் நெஞ்சமோ அஞ்சுகின்றது. என்னை நோக்கி இவ்வாய்ச்சியர்கள் யாது கூறுகின்றார்கள். நீயாயினும் இதை எனக்கு அறிவியாயோ?' எனக் கண்ணகி ஐயையை நோக்கி மனம் கரைந்து கரைந்து இரங்கிக் கேட்டாள்.

"காதலன் காண்கிலேன் கலங்கிநோய் கைம்மிகும்
ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சன்றே

Koviloor Digital Library



ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சாயின்
ஏதிலார் சொன்ன தெவன்வாழி யோதோழீ"

என்று கேட்கும் அவளது வாய்மொழியிலே அவளது மன நிலை நன்கு விளங்குவதாகும். நெஞ்சு கலங்கி நிலையழிந்ததால் அவள் மூச்சுவிட்டவண்ணமாகவே இருந்தாள். அந்த மூச்சிலே வெம்மை கலந்திருந்தது. கண்ணகி தான் விடும் அத்தகைய மூச்சை "ஊதுலை தோற்க உயிர்க்குமென் நெஞ்சன்றே" என்று கூறி விளக்குகின்றாள். இன்னும் அவள்,

"நன்பகல் போதே நடுக்குநோய் கைம்மிகும்
அன்பனைக் காணாது அலவுமென் நெஞ்சன்றே
அன்பனைக் காணாது அலவுமென் நெஞ்சாயின்
மன்பதை சொன்ன தெவன்வாழி யோதோழீ"

என்றும்,

"தஞ்சமோ தோழீ தலைவன் வரக்காணேன்
வஞ்சமோ உண்டு மயங்குமென் நெஞ்சன்றே
வஞ்சமோ உண்டு மயங்குமென் நெஞ்சாயின்
நெஞ்சிலார் சொன்ன தெவன்வாழி யோதோழீ"

என்றும் கேட்கின்றாள். இம்மொழிகளில் எத்துணை சோகம் கலந்திருக்கின்றது. அன்பனைக் காணாது அவலமுறும் நெஞ்சத்தைக் கண்ணகி படம்பிடித்தன்றோ காட்டுகிறாள்? அந்நெஞ்சத்தை அவள் அலவும் நெஞ்சென்றும் மயங்கும் நெஞ்சென்றும் கூறுவது எத்துணை இயற்கை!

இனிக் கண்ணகி கோவலன் இறந்ததை அறிகிறாள். பொங்கி எழுந்தாள்; விழுந்தாள்; அரற்றினாள்; அலறினாள்; அழுதாள்; மோதினாள்; மனம் மயங்கினாள்; கண்கள் சிவக்க, கண்ணீர் பொங்க, கருங்குழல் சிதறிய கண்ணகியின் கோலத்தை அடிகள்,

"பொங்கி எழுந்தாள், விழுந்தாள், பொழிகதிர்த்
திங்கள் முகிலொடுஞ் சேணிலம் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள் தங்கேள்வனை
எங்கணா என்னா இனைந்தேங்கி மாழ்குவாள்"

Koviloor Digital Library



என்ற அடிகளால் சித்திரித்துக் காட்டுந் திறன் உன்னி உணர்தற்குரியதாகும்.

பின் கண்ணகி தந் நிலையை நினைந்து மனம் உழன்று கூறுவதை ஆசிரியர் மிக அழகாக எடுத்துக் காட்டுகின்றார்.

"இன்புறு தங்கணவர் இடரெரி யகமூழ்கத்
துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல்
மன்பதை அலர்தூற்ற மன்னவன் தவறிழைப்ப
அன்பனை இழந்தேன்யான் அவலங்கொண் டழிவலோ"

என்றும்,

"நறைமலி வியன்மார்பின் நண்பனை இழந்தேங்கித்
துறைபல திறமூழ்கித் துயருறு மகளிரைப்போல்
மறனொடு திரியுங்கோன் மன்னவன் தவறிழைப்ப
அறனெனும் மடவோயான் அவலங்கொண் டழிவலோ"

என்றும் கூறும் அடிகளில் நமது உள்ளத்தைக் கரைக்கும் வண்ணம் சோகம் கலந்திருக்கின்றது.

கண்ணகி மற்றைச் சிலம்பைக் கைக்கொண்டு மதுரைமா நகரின் உள்ளே புகுந்தாள். வழியிடைப் பத்தினிப் பெண்டிர் களைக் கூவி யழைத்தாள். அவர்களை நோக்கி "உலகத்தில் நான் பிறந்தேன். ஆனால் ஒருவர் படாத துன்பம் பட்டேன். உறாத துயரை உழந்தேன். என் கணவனோ கள்வனுமல்லன். அவனது கைச்சிலம்பைக் கொள்ளுதற்கன்றோ பாவியர் இத் தகைய சூழ்ச்சியைச் செய்தார்கள்! உண்மையில் யான் ஒரு கற்புடைப் பெண்ணாயின் இங்குள்ள பத்தினிப் பெண்டிர் முன் என் கணவனை உயிரோடு காண்பேன். அதோடு அவனது இனிய சொற்களைச் செவி மடுப்பேன். அங்ஙனம் கேளேனாயின் என்னை இழந்தோள் என்று எல்லோரும் இகழுங்கள்" எனக் கூறி அழுது புலம்பினாள்.

மதுரையில் உள்ளார் சிலர் கண்ணகிக்கு அவளது கணவன் வெட்டுண்டு இறந்துகிடந்த இடத்தைக் காட்டிக் கொடுத்தனர். அச்சமயம் ஆதவன் கண்ணகியின் துன்பத்தைக் காணச் சகியாதான் போன்று மேற்றிசையில் மூழ்க எங்கும்

Koviloor Digital Library



இருள் படர்ந்திருந்தது. கண்ணகி கோவலன் வெட்டுண்ட உடலைக் கண்டதும் நெஞ்சம் துடித்தவளாய், நிலையழிந்தவளாய் அவனது இரத்த வெள்ளத்திலே தன் உடலை நனைத்தாள். அவள் உள்ளத்திலே பலவித எண்ணங்கள் எழுந்தன. தன் மணவினை நிகழ்ந்த காலத்தில் தங் காதலன் அணிந்திருந்த பொன்னையும் மணியையும் நினைத்தாள். அவன் அணிந்திருந்த வாச மலர்க்கோதையை உன்னினாள். ஆனால் இப்போது அவன் பெற்ற நிலையைக் கண்டு மனம் புண்ணானாள். இவ்வாறு எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியெண்ணிக் கண்ணகி இயம்பிய,

"என்னுறு துயர்கண்டும் இடருறும் இவளென்னீர்
பொன்னுறு நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ?
மன்னுறு துயர்செய்த மறவினை யறியாதேற்
கென்னுறு வினைகாணா இதுவென உரையாரோ?

கண்பொழி புனல்சோருங் கடுவினை யுடையேன்முன்
புண்பொழி குருதியிராய்ப் பொடியாடிக் கிடப்பதோ?
மன்பதை பழிதூற்ற மன்னவன் தவறிழைப்ப
உண்பதோர் வினைகாணா இதுவென உரையாரோ?

யாருமில் இருண்மாலை இடருறு தமியேன்முன்
தார்மலி மணிமார்பம் தரைமூழ்கிக் கிடப்பதோ?
பார்மிகு பழிதூற்றப் பாண்டியன் தவறிழைப்ப
ஈர்வதோர் வினைகாணா இதுவென உரையாரோ?

இம்மொழிகள் சோகத்தின் எல்லையைத் தாண்டிவிட்டன. இவ்வரிசைகளைப் படித்ததும் நமது உள்ளம் உண்மையிலேயே அழுகையில் கலந்துவிடுகின்றது. நம்மை அறியாது நாம் விம்மி விம்மி அழுகின்றோம். எவ்வளவு இயற்கையாய், விளக்கமாய், கண்ணகியின் உள்ள நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றார் ஆசிரியர் இளங்கோவடிகள். உலக இலக்கியங்களிலே சோகத்தைப் பிழிந்து வடிகட்டிக் காட்டும் எந்தக் காவியத்திற்கும் சிலப்பதிகாரம் இளைத்ததன்று என்பதை இவ்விடங்கள் எத்துணை விளக்கமாய் எடுத்துக் காட்டுகின்றன! "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்" என்று மொழிந்த

Koviloor Digital Library



புலவரின் பொன்மொழி எத்துணை உண்மை சான்றது என்பது ஈண்டு விளங்கிற்றிலதோ ?

பின் கண்ணகி கோவலனைத் தழுவ, அவன் எழுந்தவனாய்த் தன் காதலியின் காசில் மதிபோன்று கவின் பெற்ற முகம் கன்றியதே என உளம் குன்றியவனாய் அவள் கண்ணீரை மாற்றினான். கண்ணகி காதலன் இணையடியைப் பற்றிப் பிடித்தாள். அவன் நீ இருவெனக் கூறித் தெய்வ ஒளியொடு விண்ணடைந்தான். இதைக் கண்ட கண்ணகி ஒன்றும் விளங்கப்பெறாதவளாய்,

> " மாயங்கொல் ? மற்றென்கொல் ?
> மருட்டியதோர்—தெய்வங்கொல் ?
> போயெங்கு நாடுகேன்
> பொருளுரையோ இதுவென்று
> காய்சினந் தணிந்தன்றிக்
> கணவனைக் கைகூடேன் "

என்றவளாய், முந்திய கனவை உன்னியவண்ணம் தனது காவியனைய கண்களினின்றும் வடிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பாண்டியமன்னன் அரண்மனையை நோக்கிச் சென்றாள்.

இவ்வாறு வாடிய மேனியும், வதங்கிய உள்ளமும், ஆடிய சாயலும் அவிழ்ந்த கூந்தலும் உடைய கண்ணகியைக் கண்டதும் பாண்டியன் பெற்ற நிலையை ஆசிரியர் தெளிவுற எடுத்துக் காட்டுகின்றார்.

> " காவி உகுநீரும் கையில் தனிச்சிலம்பும்
> ஆவி குடிபோன அவ்வடிவும்—பாவியேன்
> காடெல்லாம் சூழ்ந்த கருங்குழலும் கண்டஞ்சிக்
> கூடலான் கூடாயி னான்."

> ' மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
> கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும்—வையைக்கோன்
> கண்டளவே தோற்றான் காரிகைதன் சொற்செவியில்
> உண்டளவே தோற்றான் உயிர்."

என்னும் வெண்பாக்களில் பாண்டியனின் நிலையை ஆசிரியர் காட்டுவதோடுகூடக் கண்ணகியின் துன்பக் கோலத்தையும் நன்கு படம்பிடித்துக் காட்டிவிட்டார்,

Koviloor Digital Library

# 'ஐயா!' என்றால் அரைக் கோபம்

"அ. ஆ."

தெருவழியே விரைந்து நடந்துகொண்டிருந்த இளைஞன் ஒருவனை நோக்கி அவனினும் இளையவன் மற்றொருவன், "ஐயா! சற்று நில்லும்" என்றான். அவ் இளைஞன் சினங் கொண்டு திரும்பி நோக்கினான். "என்னடா? யாரடா நீ? இவ்வாறு சிறிதும் மதிப்பில்லாமல் கூப்பிடுகிறாய்! பல்லை உதிர்த்துக் கையில் கொடுத்திடுவேன்; பத்திரம்" என்றான். மற்றவனோ, மன்னிப்புக் கேட்கும் குறிப்புடன், "ஒன்றும் இல்லை (யுங்க). அங்கே விழுந்த கைக்குட்டை உங்களுடையதாக இருக்கலாம் என்று எண்ணிக் கூப்பிட்டே (னுங்க). அதற் காகக் கோபம் கொள்ளுகிறீர்களே" என்றான். இளைஞன் சினம் இருந்த இடம் தெரியாமற் போயிற்று; கைக்குட் டையை எடுத்துக்கொண்டு விரைந்து நடக்கத் தொடங்கினான்.

இங்கே ஆராயற்பாலது ஒன்றே; "ஐயா!" என விளித்தவுடன் இளைஞன் ஏன் அவ்வளவு சினம் கொள்ளல் வேண்டும்?

நம்மோடொத்த நண்பர் வீட்டிற்கேனும் நம்மினும் உயர்ந்த பெரியோர் வீட்டிற்கேனும் சென்று, அந் நண்பரையோ பெரி யோரையோ காண விரும்பிக் கதவைத் தட்டும்போது, 'சார். (sir) என்று விளித்தே தட்டுகின்றோம். தாய்மொழியாகிய தமிழ் இருக்க, வேறொரு மொழியில் 'சார்! சார்!' எனல் தாய்மொழிப் பற்று உடையவர்க்குத் தகுதியாகுமோ? அன்றியும், அங்ஙனம் விளிக்கப்படும் நண்பரும் பெரியோரும் தமிழன்பராக இருப்பின், அவரும் வருந்துவர் அல்லரோ? எனவே, 'சார்' என விளிப்பது பற்றித் தயங்கவேண்டி நேர் கின்றது. அதற்கு ஒத்த தமிழ்ச்சொல் 'ஐயா' என்பதே. நண்பர் வீட்டு வாயில்களிலும் பெரியோர் வீட்டு வாயில் களிலும் நின்று, அவரை அத் தூய தமிழ்ச்சொல்லால் விளிக்க முன்வருவோர் அரியர். அவ்வாறு விளிக்கலாமே என மனத் தில் எண்ணும்போதே அவ் எண்ணம் தடைபடுகின்றதே!

Koviloor Digital Library



காரணம் என்னை? 'ஐயா' என்றால் அவர் சினம் கொள்வரோ அல்லது வெறுப்பு அடைவரோ என்ற அச்சமே ஆகும். அதி னின்றும் பெறப்படும் உண்மை ஒன்றைக் காண்க. 'ஐயா' என் பதன் சொற்பொருள் யாதாயினும், வெறுப்பும் சினமும்எழத் தக்க குறிப்பு-இழிவுபடுத்தும் குறிப்பு ஒன்று அச்சொல்லின் கண் அமைந்துள்ளது; எனவே, தெருவழியேசென்ற இளைஞன் கொண்ட சினத்திற்கு ஒரு காரணம் உண்டு என்பதாயிற்று.

இவற்றைக் கருதுங்கால், என் நண்பரும் ஒரு சாலை மாணுக்கரும் ஆகிய இருவர் பத்து ஆண்டுகளுக்கு முன் அடிக் கடி கூறிவந்த தொடர் எனக்கு நினைவு வருகின்றது. 'ஐயா என்றால் அரைக்கோபம்' என்பதே அத் தொடர். மாணுக்க ராகிய யாம், அக் காலத்தே, எம் ஆசிரியர் திரு. ஆ. கு. மு. அவர்களின் இல்லத்திற்குச் சென்று அவரிடம் பாடம் கேட் கும்போது, உள்ளே இருந்த அவரை அழைக்கும் பொறுப்பு என்மீது சுமத்தப்படும். யான் அப்போதெல்லாம் அவரை 'ஐயா! ஐயா!' என்றே அழைப்பது வழக்கம். (யான் உயர்நிலைப் பள்ளியில் அவரிடம் தமிழ் கற்ற மாணவனுகை யால் அவ்வழக்கம் உடையேன் ஆயினேன்.) அவ்வாறு அழைக் கும்போதெல்லாம் அந் நண்பர் அத் தொடரைக் கூறுவர்.

'ஐயர்' என்ற சொல் மிகச் சிறந்த பொருள் அமைந்த தாகும். பெரியோரைக் குறிக்கும் இடங்களிலே அது தமிழ் நூல்களில் வழங்குகின்றது: "ஐயர் யாத்தனர் கரணம் என்ப" என்ற தொல்காப்பியனாரும் சான்றோரை ஐயர் என்றே குறித்தனர். சாதிப்பேய் தமிழ்நாட்டை ஆளத் தொடங்கியதும், சாதிக்கேற்ற ஒழுக்கமும் பட்டப்பெயரும் ஏற்பட்டன. அப் பேயின் ஆட்சிக்கு அடிமைப்பட்ட மக்கள் அப் பட்டப் பெயர்களைப் பெரிதும் போற்றத் தொடங்கினர். இன்றும் அவற்றைப் பொன் எனப் போற்றுவோரே பெரும் பான்மையோர். சாதியால் அமைந்த உயர்வும் தாழ்வும் நிலைத்தன. அங்ஙனம் உயர்வுபெற்ற சாதியினர், 'ஐயர்' என்ற சொல்லைத் தமக்கு உரிய பட்டப் பெயராகக் கொண் டனர். பின்னர், தமிழகத்தில் கிறித்துவ சமயத்தைப் பரப்பப் புகுந்த பாதிரிமாரும் தத்தம் பெயருடன் உயர்வு குறிக்கும்

Koviloor Digital Library



சொல் ஒன்றைச் சேர்க்க விழைந்து, ஐயர் என்றசொல்லே ஏற்புடைத்து என்று கண்டனர். போப்பையர், சூசப்பையர் எனத் தம் பெயருடன் சேர்த்து வழங்கினர்.

இவ்வாருக, அச் சொல், உயர்வு ஒன்றனையே குறிக்க வழங்கியது என்பது வெளிப்படை. ஆனால், இன்று அதன் பொருளில் சிறிய மாறுதலும் நிகழ்ந்துள்ளது. அச் சொல் விளி ஏற்கும்போது அஃது அறியப்படும். ஒருவரை ஒருவர் 'ஐயர்' என விளித்தல் அரிதாயுள்ளது. நெருங்கிப் பழகிய நண்பர் அளவளாவிப் பேசும்போது அங்ஙனம் விளித்துப் பேசுகின்றனர். மற்றோர் அவ்வாறு பேசுதல் இல்லை. தெருவில் திரிந்து விற்பவர் முதலானோரைச் சிலர் 'ஐயா' என அழைத்தல் உண்டு. பள்ளிக்கூடத் தமிழ் ஆசிரியரை அவ் வாறு விளித்தல் உண்டு. பாதிரிமார் அவரை முதலில் விளித்த முறையாகும் அது. ஆங்கிலம் அறியாத் தமிழ் ஆசிரியரை மாணவர் அவ்வாறே இன்னும் அழைக்கின்றனர்.

அம் மாணவரே, அவரைப் பற்றிப் பிறரிடம் பேசும் போது, 'தமிழ் ஐயா, வந்தார்' 'ஐயா நன்ருகக் கற்பித்தார்' 'அந்த ஐயா மிக நல்லவர்' என்பர். 'ஐயா' என்பதே விளி ஏலாப் பெயரும் ஆயிற்று. அதுபோலவே, தாய் தந்தை மாமன் முதலானவரையும், 'அம்மா வந்தார்' 'அப்பா கேட் டார்' 'மாமா சொன்னர்' என்று பேசுங்கால், அம்மா அப்பா மாமா எனக் குறித்து, அச் சொற்களை விளிஏலாப் பெயர் களாக வழங்குகின்ரும்.

இங்ஙனம் வழங்கத் தொடங்கி, 'ஐயா' என்ற சொல், 'ஐயர்' என்பதுபோலவே உயர்வு குறித்து வருகின்றது. கல்வி கேள்வி ஒழுக்கங்களால் உயர்ந்தாரை 'ஐயர்' என முன்னோர் வழங்கியதுபோலவே, செல்வம் அதிகாரம் முதலியவற்ருல் உயர்ந்தாரை இன்று 'ஐயா' என வழங்குகின்ரும். 'செட்டி யார் ஐயா எப்போது வருவார்' 'இன்ஸ்பெக்டர் ஐயாவைப் பார்த்துப் பேசினேன்' என்ற வழக்குக்களை ஆராய்க.

ஆனல், உயர்வு குறிக்கும் சொற்கள் இழிவையும் ஒரோ வழிக் குறிப்பனபோலும்! அது சொல்லுவோன் குறிப்பின் பட்டதாகும்.

---

Koviloor Digital Library

# இலக்கியப் பயிற்சி—(க)

" திரு மா. பாலசுப்பிரமணிய முதலியார், எம். ஏ."

ஒரு நூல் இலக்கியமாகக் கருதப்படுவதற்கு இரண்டு தன்மைகளை உடைத்தாயிருத்தல் வேண்டும். ஒன்று, மாந்தர் யாவர்க்கும் பொதுவாகப் பயன்படும் பொருளையே நுதலும் தன்மை : மற்றொன்று, நுதலும் பொருள் இன்பம் பயக்கும் வகையில் அழகுற அமைக்கப்பெற்றுள்ள தன்மை.

வாழ்க்கையில் தாம் கண்ட உண்மைகளையும், நுகர்ந்த நுகர்ச்சிகளையும், பொதுவாக மாந்தர்களுக்குப் பயனுறும் பொருள்களைப்பற்றித் தாம் கொண்டுள்ள எண்ணங்களையும் திரட்டிப் புலவர்கள் எழுதும் நூல்களே இலக்கியமாம். சுருங் கக் கூறுமிடத்து, வாழ்க்கையின் வழிகளை மொழியின் வாயி லாக விளக்குவதே இலக்கியம் என்பது பொருந்தும்.

இலக்கியம் தோன்றுதற்கு முன்னிலையான எழுவாய்கள் நான்கு. ஒன்று, தன்மை-நவிற்சியில் புலவனுக்கு விருப்பம் உண்டாதல் ; மற்றொன்று, பிற மாந்தர் வாழ்க்கையின் தரத்தை அறிய அவன், மனம் செலுத்துதல் ; பிறிதொன்று, இப் பரந்த புலனறி-உலகத்தும் மனக் கற்பனை யுலகத்தும் அவன், மனம் செலுத்துதல் ; வேறொன்று, அழகில் ஈடுபட்டு யாதொன்றையும் அழகாக அமைக்க விரும்புதல் என்பன. இந் நான்கு மனவியல்புகளும் மாந்தர் ஒவ்வொருவர்க்கும் உள என்பது கூர்ந்து கருதுவார்க்குப் புலனும் ; இறுதியில் கூறப்பட்டது எந்நூல் எழுதுவார்க்கும் பொதுவாக உண்டு. ஏனைய மூன்றும் மாந்தர் உள்ளத்தில், தனித்தனியாகப் பிரித் துணர இயலாத வகையில் கலந்தே நிற்கும்.

இந்த எழுவாய்களால் எழும் நுதல்பொருள் வகைகளை வரம்பிட்டு வகுத்தறிதல் அரிது : என்னெனில் இலக்கியத்தின் நுதல் பொருள் வாழ்க்கையேயாதலானும், அவ்வாழ்க் கையோ வரம்பிலதாதலானும் என்க. ஆயினும் ஒருவாறு வகுத்துக் கூறுமிடத்து இலக்கியத்தின் நுதல்பொருள் ஐ வகைப்படும் எனலாகும். முதல் வகை புலவனுடைய தன்னுகர்ச்சிகள் என்பது. இரண்டாம் வகை மாந்தர்தம்

Koviloor Digital Library



பொதுப்பட்ட வாழ்க்கை - நுகர்ச்சிகள் என்பது. மூன்றும் வகை தனியொருவனுடைய இனத்தொடர்பு வாழ்க்கை - நுகர்ச்சிகள் என்பது. நான்காம் வகை புலவனுடைய புறவுலக வாழ்க்கை - நுகர்ச்சிகள் என்பது. ஐந்தாம் வகை இலக்கிய அமைப்பு—வகை வரலாறு என்பது. இந்த ஐந்து நுதல் பொருள் வகைகளைப்பற்றி வகுக்குமிடத்து இலக்கியமும் ஐவகைப்படும். அவை முறையே தன்மை இலக்கியம், மன்பதை இலக்கியம், இனத்தொடர்பு இலக்கியம், புறவுலக இலக்கியம், இலக்கிய இலக்கியம் எனப்படும்

ஓர் இலக்கிய ஆக்கத்திற்கு வேண்டப்படும் உறுப்புக்களை இரண்டு வகைகளாகப் பிரித்துக் கூறலாம். ஒன்று இயற்கையாகவே தோன்றுவது: அது பா, கட்டுரை, நாடகம், புனை கதை, சிறு கதை என்பவற்றைக் கொண்டது. மற்றொன்று புலவனால் தோற்றுவிக்கப்படுவது: அது கருத்து, உணர்ச்சி, கற்பனை என்பவற்றைக் கொண்டது. ஒரு புலவன் தான் காணும் ஒரு வாழ்க்கை - நிகழ்ச்சியைப் பாவாக யாக்க விரும்புவன்; மற்றொரு நிகழ்ச்சியைக் கட்டுரையாகச் செய்ய விரும்புவன்; பிறிதொன்றை நாடகமாக அமைக்க விரும்புவன்: வேறொன்றைப் புனை கதையாக எழுத விரும்புவன். இவ் விருப்ப வேற்றுமைகளுக்கு முன்னிலை அவ்வந் நிகழ்ச்சிகள் அவனது உள்ளத்தில் எழுப்பும் உணர்ச்சிகளும் கருத்துக் களும் வேறு வேறாக இருத்தலேயாம். அப் புலவன் அந் நிகழ்ச்சிக்கு ஏற்றவாறு பா முதலிய உறுப்புக்களில் ஒன்றால் இலக்கியத்தை ஆக்கத் துணிந்தபின், தன் திறமையினால் தன்னுடைய கருத்து, உணர்ச்சி, கற்பனை என்பவற்றைத் தக்கவாறு கலந்து, படிப்பார்க்கும் கருத்து, உணர்ச்சி, கற்பனை என்பன தோன்றுமாறு தன் வினையைச் செய்து முடிக்கின்றான். அவ்வாறு அவன் செய்யுங்கால், அவ் விலக்கியத்துக்குள் அழகு, முறைமை, கட்டமைப்பு, வன்மை, Beauty, (Order, Symmetry, Effectiveness) முதலியன விளங்குமாறு அவன் சில யாப்புமுறைகளைக் கையாளவேண்டும். கருத்து, உணர்ச்சி, கற்பனை என்பவற்றோடு யாப்புமுறையும் புலவன் கையாளும் ஆக்கவுறுப்பாம்.

Koviloor Digital Library



2

வாழ்க்கையின் வழிகளை மொழியின் வாயிலாக விளக்குவதே இலக்கியம் என்றதனால், விளக்குவானுடைய கருத்துக்களும் நுகர்ச்சிகளுமே இலக்கியத்தைப் படிப்பார் கவனிக்க வேண்டியன. அவ்வாறு கவனிக்குங்கால், ஆக்கியோனது வாழ்க்கை - நுகர்ச்சி சிறிதாயினும் பெரிதாயினும், அவனது எழுதுந்திறமை சிறிதாயினும் பெரிதாயினும், அவனுடைய கருத்துக்கள் ஏற்றனவாயினும் ஏலாதனவாயினும், அவன் தான் கண்டவற்றையும், எண்ணினவற்றையும், உணர்ந்தவற்றையும் உண்மையுடன் உரைக்கின்றானா என்று தெரிந்துகோடல் இன்றியமையாதது. ஏனெனில், ஓர் இலக்கியத்தின் மதிப்பு அதை ஆக்கியோனது உண்மை நவிற்சியைச் சார்ந்து நிற்கும். அவ் வுண்மைநவிற்சி இல்லாதது இலக்கியமாகாது.

ஆக்கியோனது கருத்துச் செல்லும் வழியிலும் உணர்ச்சி போகும் போக்கிலும் படிப்பானது கருத்தும் உணர்ச்சியும் கலந்து சென்று, வாழ்க்கை - நிகழ்ச்சிகள் ஆக்கியோனது உள்ளத்தில் எண்ணங்களைத் தூண்டின வகையையும், உணர்ச்சிகளை எழுப்பின வகையையும் நுணுகி உணர்ந்து, ஆக்கியோன் அந் நிகழ்ச்சிகளில் கண்ட உண்மைகளையும் அவன் மேற்கொண்ட கருத்து - முடிபுகளையும் அறிய முயல்வதே இலக்கியப் பயிற்சியாம். இவ்வகைப் பயிற்சியினால், கற்பான் ஆக்கியோனது தன்மை, கருத்து, உரம், நலிவு முதலிய வற்றை நன்கு அறிதல் கூடும். ஆக்கியோன் தன் இலக்கியத்தில் தன்னை எவ்வாறு வெளிப்படுத்துகின்றானோ, அவ்வாறே அவனை அறிதல் இலக்கியப் பயிற்சியின் நோக்கம். பல இலக்கியங்களை நன்கு பயில்வதால் ஒருவன் உலக வாழ்க்கையைப் பற்றிய பல புலவர்களின் கருத்துக்களையும், உணர்ச்சிகளையும், கற்பனைகளையும், அவர்தம் தன்மை, உயர்வு, தாழ்வு முதலியவற்றையும் தெரிந்துகொள்ள வழி ஏற்படுகின்றது. இதனால் அவனது உலகியலறிவு விரிவடைகிறது.

3

இலக்கியப் பயிற்சியில் கருத்துடையான் ஒருவன் மனம் போகும் போக்காக யாதானும் ஓர் இலக்கியத்தை எடுத்துப்

Koviloor Digital Library



படித்தல் கூடாது: ஓர் ஒழுங்கு முறையாகக் கற்றல் வேண்டும். முதலில் அவன் ஓர் ஆக்கியோன் எழுதிய இலக்கிய நூல்களைத் தொடர்ந்து கற்கும் பழக்கத்தை மேற்கொள்ளவேண்டும். அவ்வாறு கற்றால்மட்டுமே ஆக்கியோனது உள்ள வாழ்க்கையின் வளர்ச்சியையும், அவனுடைய கருத்துக்களும் உணர்ச்சிகளும் கற்பனைகளும் விரிந்து செல்லும் முறையையும், உலகியல் - நுகர்ச்சி ஆக்கியோனது நெஞ்சினைப் பண்படுத்தும் திறத்தையும் நன்கு அறிதல் கூடும். ஒரே ஆக்கியோன் எழுதிய பல இலக்கியங்களையும் ஒப்பிட்டுக் கற்பதால், கற்பானுக்கு ஆக்கியோன் கையாளும் நடைத்திறமும், இலக்கிய அமைப்பு முறைகளும் நன்கு புலனாகும். ஒரே புலவன் எழுதிய இலக்கியங்களைக் கற்கும்போதும் கற்பான் கொள்ளவேண்டிய முறை ஒன்றுண்டு. அது யாதெனில், அப் புலவன் எழுதிய முதல் நூலை முதலாகவும், இரண்டாம் நூலைப் பிறகும், மூன்றாம் நூலை அதன் பின்னுமாக, நூல்கள் எழுதப்பட்ட காலமுறைப்படி இறுதி நூல் வரையில் கற்கவேண்டும். அவ்வாறு கற்றால் புலவனது நெஞ்சப் பண்பு வளரும் வகையும் அவனது உலகியலறிவு விரியும் முறையும், அவனது நடைத்திறம் வளரும் வழியும் பிறவும் தெளிவாகத் தோன்றும். இனி, ஓர் ஆக்கியோனது ஓர் இலக்கியத்தைக் கற்குங்கால், அதே நுதல் பொருள் பற்றி வேறு புலவர்கள் இயற்றிய இலக்கியங்களையும் ஒருங்கு வைத்து, ஒப்பு - முறையால் கற்றல் வேண்டும். இவ்வாறு கற்பதால் கற்பானது இலக்கியவறிவு மிகவும் விரியும் என்பது கூறாமலே அமையும்.

## 4

ஒரு புலவன் எழுதிய இலக்கியங்களை மேற்காட்டிய முறையின்படி கற்பவன் ஒருவன் அப் புலவனது வாழ்க்கை வரலாற்றினையும் நன்கு அறிவானாயின், அவ்வறிவு அவ்விலக்கியங்களை மேலும் நன்றாகப் பயில்வதற்குப் பெரிதும் துணையாகும். என்னை? ஒரு புலவனது வாழ்க்கையில் இன்ன நிகழ்ச்சி நிகழ்ந்தமையால் அவன் இன்ன நூலில் இன்னவகைக் கருத்தும் கற்பனையும் தோன்ற எழுதினான் எனவும், அவனது வாழ்க்கையில் இன்ன இடர்ப்பாடு வந்துற்றமையால் அவன்

Koviloor Digital Library



இன்ன நூலில், உள்ளம் வெதும்பி இன்னவாறு வரைந்தான் எனவும், அவனது வாழ்க்கையில் இன்ன மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சி நடைபெற்றமையால் அவன் இன்ன நூலில் களி துளும்ப இன்ன முறையில் கூறினன் எனவும் நுணுகியறியும் வாய்ப்பு அவனது வாழ்க்கை வரலாற்றை நன்கு அறிந்தால் தான் கைகூடும். ஆயின் இது கருதி ஓர் ஆக்கியோனது வாழ்க்கை வரலாற்றைப்பற்றி, அவன் எழுதிய இலக்கியப் பயிற்சிக்கு வேண்டப்படாத பற்பல சிறுசிறு உண்மைகளை ஆராய்ந்தறிய முனைதல் பயனற்ற செய்கையாம்.

5

ஒரு புலவனுடைய இலக்கியங்களை முறைப்படி கற்குங்கால் அவனது நடையும் நன்கு கவனித்தற்கு உரியது. முதல் நூலில் புலவன் எழுதிய நடையும், அஃது அடுத்தடுத்து எழுதப்பட்ட இலக்கியங்களில் சீர்மை அடைந்த வகையும், அவன் சொற்களைப் பொருளறிந்து ஆளும் திறனும், சொற்றொடர்களைத் தொடுத்தாளும் தரமும், சொன் முடிபுகளைக் கோத்து வைக்கும் ஒழுங்கும், ஒலியின்பம் பயக்குமாறு சொல்லடுக்கும் பான்மையும், அவன் எளிய சொற்களில் வலிய பொருளைப் புதைத்து வைக்கும் புலமையும், உவமைகள் காட்டும் நுணுக்கமும், இன்ன பிறவும் அவனுடைய நூல்களைக் கற்பான் நன்கு ஓர்ந்து அறியவேண்டும். இவ்வாறு அறிந்து இலக்கியம் பயிலுங்கால், ஒவ்வோரு புலவனுக்கும் ஒவ்வோரு சிறப்பான நடை அமைகின்றது என்னும் உண்மை புலனாகின்றது. அன்றியும், அந் நடை அப் புலவனது மனப்பான்மையைப் புலப்படுத்துகின்றது என்னும் உண்மையும் தெளிவாகின்றது.

மொழி ஒன்றேயாயினும், அம்மொழியில் வல்லுநர் பலர் ஒரு கருத்தை அம்மொழியில் கூறுங்கால் ஒரே வகையாற் கூறுதல் யாண்டுமில்லை: பற்பல வகைகளாற் கூறுதலே நம் கண்கூடு. கூறும்வகை இங்ஙனம் பற்பல ஆதல் அன்னவர் தம் தன்மைகள் பல்வேறாக இருத்தலினாலேயாம். ஔவையின் ஆத்திசூடிச் சொன்முடிபுகளையும் (sentences) வள்ளுவர் குறட்பாக்களையும் ஒப்பு நோக்கிப் பார்ப்பார்க்கு இது புலனாகும். "அறஞ் செய விரும்பு" என்பது ஔவையின் கட்டளை; இது

Koviloor Digital Library



னயே வள்ளுவர் பத்துக் குறட்பாக்களால், பயன்வகை காட்டிச் செயல்வகை கூறும் முறையால் அறிவுறுத்தி யிருக்கின்றார். இதனால் கற்பார் அறியவேண்டியன எவையெனில் ஔவையார், அக்கால் கட்டளையிடும் கருத்தோடு, அம்மனப் பான்மையுடன் நூல் செய்தார் என்பதும், வள்ளுவனார் மாந்தர்தம் அறிவுக்கு எடுத்துக்காட்டும் கருத்தோடு, அம்மனப் பான்மையுடன் நூல் செய்தார் என்பதுமாம். இதுபோல் பிறவும் தெரிந்துகோடல் வேண்டும்.



Koviloor Digital Library

# மூதுரை

"இளவழகனார்"

இனி, ஔவைப்பிராட்டியார், மக்கள் அனைவரும் வளத்தோடு வாழவேண்டுமென்னும் அருளுள்ளங் கொண்டு அறிவுறுத்துந் தெளிவான நல்லுரைகள் சிலவுங் கருத்திருத்துதல் வேண்டும்.

முதலில் வளம் என்பதே யாதென்று அறியவேண்டுமாகலின், பழகுதற்கு இனியரான சுற்றத்தவரும், மேன்மை வாய்ந்த செம்பொற்றிரளும், அழகு, வடிவம் முதலிய நல்ல தோற்றமும், சிறந்த நண்பர்களுமெல்லாம் செழுமையின் கூறுகளேயாம் என்று "மருவினிய சுற்றமும்" (செ.உகூ) என்னுந் திருப்பாடலின் முகமாக அவர் அருளிச்செய்தார்.

இனி அவ் வளங்களெல்லாம், அமையவேண்டுங் காலங்களிலேயே அமையவேண்டுமென்பதும் ஔவையின் கருத்து. இளமையில் வறுமை நேர்ந்தபின் முதுமையில் இனிய நுகர் பொருள்கள் அமைவதனால் என்ன பயன்? சூடிக்கொள்ளக் கூடாத காலத்தில் மலரும் நறுமலர்களைப்போலவும், கணவனில்லாத காலத்தில் விளங்கும் ஒரு மங்கையின் பேரெழிலைப் போலவுந் துய்ப்பதற்கு வழியின்றி வீணே கழிந்தொழிதலால் நன்மை என்ன உண்டு? (ஈ). ஆதலால், உரிய காலங்களில் வளங்கள் அமைவது இன்றியமையாததாயிருக்கின்றது.

அங்ஙனம் அமைவதற்குத் திருமகள் நோக்கம் முதன்மையானது. ஏனென்றால், அவை திருமடந்தை ஆம்போது அவளோடும் ஆகும்; அவள்பிரிந்து போம்போது அவளோடும் போம். (உகூ). திருமகள் நோக்கத்தைப் பெறுவதற்குமுன்னைத் தவம் அமைந்திருக்க வேண்டுவதோடு, இப்போது முயற்சியும் சிறிது வேண்டும்; எடுக்கும் முயற்சியை எப்போதும் திருத்தமாகச் செய்துகொண்டிருக்க வேண்டும். பயன் தானே விளையும். எப்பொழுதும் முயற்சி முன்னும் பயன் பின்னுமாகத்தான் நடைபெறும். பயன் உண்டாகும் நேரம் வாய்த்துவிட்டால் அது தானே உண்டாய்விடும். அது வாயாமுன் நாம் அடுத்

• Koviloor Digital Library



தடுத்துமுயன்றாலும் செயல் நிறைவேறிவிடாது. நாம் நமது தோட்டத்திற் சில பழ மரங்களை வைத்துப் பயிரிட்டால், அவை மிக நீண்டு உயர்ந்த மரங்களானபின்னும் பழுக்கும் பருவம் வந்தால்மட்டுமே பழுக்கின்றன. அன்றிப் பழா. அது போலத்தான் நம் முயற்சிகளும் பயன்றரும் நேரம் வந்தால், தாமே பயனுண்டாக்கும். ஆகவே, பயன்களில் முனைப்புக் கொள்ளாமல் முயற்சிகளில் திருந்திய எண்ணம் வைத்து ஒழுகுதலே, உரிய நேரங்களில் நல்ல வளங்கள் மிகுவதற்கு ஏற்றதாகும்.

அடுத்து முயன்றாலும் ஆகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா.

என்று ஔவைப் பெருமாட்டியார் அருளிச்செய்த திருப்பாடலில் இவ்வுண்மைகள் விளங்குதல் காணலாம்.

இனி, முயற்சிசெய்யும் நல்லோர் இங்ஙனம் திண்ணிய திருந்திய உள்ளம் உள்ளவராய்த், தாம் செய்யும் வேலைத்துறையிற் பேராற்றலுடையவராயிருந்தாலும், தக்க துணைவலியோடு அக் காரியங்களைச் செய்வது பின்னும் உறுதியுடையதாயிருக்கும். தட்டாமல் நற்பயன் உண்டாவதற்கு ஏதுவாயிருக்கும். நெல்லிலுள்ள அரிசியிலேயே ஆற்றலோடு கூடிய முளை அமைந்திருந்தாலும், அவ்வரிசியைச் சூழ அமைந்துள்ள உமி விண்டுபோனால் முளைத்தல் என்னும் செயல் நிகழாமற்போகின்றது; ஆதலால், நமது முயற்சிக்கு உறுதுணையா யிருக்கக்கூடிய தக்க துணைவர்களையும் உடன் அமைத்துக்கொண்டு, எம் முயற்சியையும் வலிமைபெறச் செய்ய மனங்கொள்ளவேண்டும்; (கக). அப்போது செல்வம் தக்கவாறு செழிப்பதற்கு இடமாகும்.

இனி அங்ஙனந் துணைவலியாக அமைத்துக்கொள்ளத் தக்கவரைப்பற்றியும் ஔவையார் சில குறிப்புக்கள் தருகின்றார். துணைவலியா யமைவோர் காரியத் தகுதியுடையவரா? நேரத்தில் தன்னை இழந்தாயினும் செயலை நிறைவேற்றுவோரா? கரவில்லாதவரா? என்பதுபற்றி ஆராயவேண்டுவது கட்டாயமாகும்.

Koviloor Digital Library



உடன்பிறந்தார் முதலிய உறவினராய் அமைந்தார் சிலரைத் தாம் துவங்கிய பொருள் முயற்சியில் தமக்குத் துணைவராக அமைத்துக்கொள்ளலாமென்று சிலர்க்கு நினைவு தோன்றும். காரிய வெற்றிக்கு உறவு என்பது முதன்மையன்று. உண்மையோடு கூடிய திறமையே முதன்மையானது. இத்திறமையோடு உறவும் அமைந்திருந்தால் அமைந்திருக்கட்டும். அப்படியில்லாவிட்டால், அவர்போன்றாரைத் துணைவராகக் கொள்ளுதலிற் பயனில்லாமையோடு, அதனால் தீமை நேரினும் நேரும்; ஏனென்றால், உடம்பை மாய்க்கும் நோய் என்பது உடம்போடு உடன்பிறந்ததாகத்தான் இருக்கின்றது; இருந்தாலும் உடம்பை அது மாய்த்துவிடக் காண்கின்றோம்; ஆனால், அவ்வுடம்பை மாயவிடாமல் அதன் நோயைத் தீர்த்துப் பிழைப்பிக்கும் பச்சிலை முதலிய மருந்துவகைகளோ, அவ்வுடம்போடு உடன்பிறவாமல் எங்கோ தொலைவிலுள்ள மலைகளில் இருக்கக் காண்கின்றோம். அங்ஙனமே, உறவினரல்லாதவர்களிலும், உண்மைத் திறமையாளராயிருந்து பயன்படக் கூடியவர்கள் உலகத்தில் இல்லாமலில்லை. ஆதலால், உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிராமல், காரியவெற்றியையே குறிக்கோளாகக்கொண்டு அதற்குரிய திறமையாளரெவரோ அவரையே துணைவராகத் தழுவி முயற்சிகளைப் பலமுகமாக நடத்திப் பொருளீட்டுதல் வேண்டும்.

இனி அத் துணைவலிக்குரியோர் ஒருகால் தக்க தோற்றமில்லாதவராகவும் இருக்கலாம்; ஆடம்பரமில்லாதவராகவுமிருக்கலாம்; காரியத் திறமைக்குமுன் இவையெல்லாம் அவ்வளவு பொருளல்ல; காரியத்திறமையோடு இவையுமிருப்பின் நன்றேயாம். திறமையையே முதன்மையாகக் கருதவேண்டும். தாழம்பூ இதழ் பெரியதுதான்; மகிழம்பூ இதழ் சிறியதுதான். ஆனால், மகிழம்பூவின் மணம் தாழம்பூவுக்கு இல்லையே! பெரிய தோற்றத்தோடு இருந்துமட்டும் என்ன பயன்? அகலமாகப் பரந்து தோன்றும் ஒரு பெரிய கடலையும் அதனருகே சிறுகலாகக் குழிந்து தோன்றும் ஒரு சிறிய நீரூறலையும் நினைக்குமிடத்தும் இவ்வுண்மை விளங்குகின்றது. சிற்றூறலின் நீரோ உண்பதற்கும் பயன்படுகின்றது; கடல்நீரோ உடம்பைக் கழுவுவதற்கும் ஆகாததாயிருக்கிறது; (கஉ). ஆதலால், உடல் சிறிய

Koviloor Digital Library



ரென்று கருதி அதனாலேயே காரியத்திறமையைப் போற்றிக் கொள்ளாமலிருப்பது ஆகாது. இங்ஙனமே ஆரவாரமில்லாமல் அடங்கியிருப்போரையும் உடனே எளியரென்று கருதி அவரா லாந் திறமையை இழந்துவிடுதலுமாகாது. ஏனென்றால், நீர்க் காலில் ஓடுமீன் ஓடத், தனக்கு இரையாவதற்குரிய தகுதியான மீன் வருமளவும், கொக்கு அதன் மடைத்தலையில் மிக்க அடக்க முடையதுபோல வாடியிருப்பது கண்டு, அதனைத் திறமையில் லாததென்று கருதிவிடுதலாகாதன்றோ? (கசு). ஆதலால், துணைவலிக்குத் தெரிந்தெடுப்போரிடம் திறமையைக் கருதுத லொன்றே முதல் நோக்கமாக இருக்கவேண்டுமென்பது இக் குறிப்புக்களிலிருந்தெல்லாந் தெரிகின்றது.

இனி, நேரத்தில் தன்னை இழந்தாயினுஞ் செயலை நிறை வேற்றுவோரா என்பதுங் கருதுதல்வேண்டும்: ஏனென்றால், செயலைத் துறைபோக நிறைவேற்றுதற்கு, ஏற்ற நேரங்களில் அவ்வியல்பு இன்றியமையாததா யிருக்கின்றது. செயல் நன்கு நிறைவேறி அதனால் பலர்க்கும் நன்மைவருமாயின், ஒருவர், தன்னுடைய சிறுநலங்கள் சிலவற்றை இழந்துவிடுவதனாற் குறையில்லை. ஒருகால் உயிரையே இழக்க நேரினும், கட மையை நிறைவேற்றும்பொருட்டு அதுவே செய்யத்தக்கது. நன்மையில் உள்உரம் உடையோர், கடமைகட்கு நேரும் எதிர்ப்புகட்கு அஞ்சார்; தளரவுந் தளரார். ஒரு கல்தூணின் மேல் பளுவு மிக ஏறித் தாக்குமாயின் அத்தூண் பிளந்து முறியுமேயல்லால் தளர்ந்து வளையாதன்றோ! (சு). முழுத் தன்னல இழப்பை இங்கே ஒளவையார் எடுத்துக்காட்டினாராயி னும், பொதுவில் அத்தகைய அன்புள்ளம் காரியஞ் செய் வோர்க்கு வேண்டும் என்பதே இங்குக் கருத்தாவதாம்.

துணைவலிக்கு உரியாரை இவ்வாறு தேர்ந்துகொள்ளுங்கால் அவர் கரவில்லாதவரா என்பதும் ஆய்ந்துகொள்ளுதல் வேண் டும். அதனைக் கண்டுகொள்ளும் வழி, அவரும் அவர் செய்கை கள் முதலானவையும் ஒளிவுமறைவு இன்றி நிகழ்கின்றனவா என்று ஆராய்தலாகும். நாகப்பாம்பு தன்பால் நஞ்சு இருப் பதனால், மறைந்து உறைகின்றது; நீர்ப்பாம்பு அஃதில்லா மையால் அஞ்சாமல் வெளியே கிடக்கின்றது. ஆதலின், கரவு

Koviloor Digital Library



உடையோர் எப்போதும் மறைந்து மறைந்தே உறைவர். இங்கே கரவு என்பது உட்பகை ; இத்தகைய உட்பகை யுடையோரைத் துணைவராகக் கொண்டால், காரியங் கெடுவதோடு அனைவர்க்கும் பொல்லாங்குகள் நேரும். (உ௫). ஆதலின், துணைவர்களைத் தெரிந்தெடுத்தலில், இங்ஙனமெல்லாம் பலவகைகளுங் கருதிக்கொள்ளுதல் இன்றியமையாததாயிருக்கின்றது.

இங்கெடுத்துக்காட்டிய கருத்துக்களைப் பொருள்முயற்சிகள் செய்யுங்காலங்களில் எங்கெங்கு எவ்வெவ்வாறு பயன்படுத்திக்கொள்ளவேண்டுமோ அவ்வவ்வாறு கொண்டு ஏற்றபடி நடந்துகொள்ளுதலும் வேண்டும்:

முன்னைத் தவமுடையோர்க்கு இவைபோல்வனவெல்லாம் எளிதின் இனிமையாக நடைபெற்றுச் செல்லும் ; முயற்சி மிகுதியாக இராது.

செவ்விதின் செல்வம்பெற்று அனைவருந் தக்காங்கு இல்வாழ்வில் வாழ்ந்து இம்மை மறுமை நலங்களை அடையவேண்டுமென்பதே ஔவைத் தாயின் கருத்து. இல்லாள் அகத்திருந்தால் தேடிய செல்வங்களும் வளம்பெறும் ; அப்போது, இல்லாததென்பதே ஒன்றுமில்லை ; எல்லாம் இருக்கும். இல்லாளும் துணைவருள் ஒருத்தியாவள் ; அவளை 'வாழ்க்கைத் துணை' என்றன்றோ தெய்வப்புலவர் அழைத்தார் ! இல்லாள் எப்போதும் பொருள்போற்றி இன்புறுத்தும் செந்தாமரையாள் ஆவள். அவள் தக்க நிலையில் இல்லாவிட்டால், இவ்வளவெல்லாங் கருதிப் பொருளீட்டியும், அப்பொருள் குவிந்த வீடு ஒரு புலி கிடந்த தூறுதானே ! அவள் தக்க நிலையில் இருந்தால், அவ்வில்லம் ஆ, ஓர் ஒளிவிளங்குந் திருக்கோயிலாய் மிளிரும் !

---

Koviloor Digital Library

# செய்திகளும் குறிப்புகளும்

## அகநானூறு மாநாடு

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் அறநிலையங்களுள் ஒன்றான தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில், சென்னை, சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளி மண்டபத்தில் திருவையாறு அரசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு R. வேங்கடாசலம் பிள்ளையவர்கள் தலைமையில் 15-12-40 ஞாயிற்றுக்கிழமை அகநானூறு மாநாடு நடைபெற்றது.

காலை 6-40 மணிக்கு மாநாட்டுத் தலைவரவர்கள் எழும்பூர் புகை வண்டி நிலயத்தில் வரவேற்கப்பெற்று, 9-30-மணிக்கு மாநாடு துவங்கிற்று.

திரு T. M. நாராயணசாமி பிள்ளை M.A., B.L., T. S. நடராச பிள்ளை B.A., B.L., திரு. வி. கலியாணசுந்தர முதலியார். K. கோதண்டபாணி பிள்ளை B.A., S. சச்சிதானந்தம் பிள்ளை B. A., L T., தெய்வசிகாமணி முதலியார், M. பாலசுப்பிரமணிய முதலியார் B.A , B.L , S. R. ரங்கநாதன் M. A., கோபால் ஐயர், C. D. நாயகம், T. சிவசைலம் பிள்ளை M.A., L.T., T. B. மீனாட்சிசுந்தரம் பிள்ளை M.A., B.L., M. O. L. தியாகராஜ பிள்ளை B.A., L.T., E. T. இராஜேஸ்வரி அம்மாள் M.A., L.T., முதலிய பெருமக்கள் பலர் வந்திருந்தார்கள்.

காலையில், சென்னைப் பல்கலைக் கழக மாணவர் திரு. பண்டிதர் K. P. இரத்தினம், சைவ சித்தாந்தக் கழகப் புலவர் திரு. இளவழகனார் என்னும் இருவரும், மாலையில் பாலக்காடு விக்டோரியா கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் S. ஆறுமுக முதலியார் M.A., B. O. L., L.T. இராயப்பேட்டைப் பால குருகுல உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் முருக. இலக்குவர், சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் பூ ஆலாலசுந்தரஞ் செட்டியார் M.A., என்னும் மூவரும் முறையே நெய்தல், குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம் என்னுந் திணைகள்மேல் அகநானூற்றுச் செய்யுள்களை ஆராய்ந்து அழகாக விளக்கிப் பேசினார்கள்.

அவையினர் நிரம்ப வந்திருந்து கேட்டு மகிழ்ந்தார்கள்.

வெளியூர்களிலிருந்து வந்த பாராட்டுக் கடிதங்கள் பல இடையே படிக்கப்பட்டன.

தமிழ் வளர்ச்சி பற்றிய ஏழு தீர்மானங்கள் பின்வருமாறு தீர்மானிக்கப்பட்டன.

Koviloor Digital Library



தலைவரவர்களின் அரிய முடிபுரைகளோடு, சங்கச் செயலாளர் திரு வ. சுப்பையா பிள்ளையவர்கள் வாழ்த்தும் நன்றியுங் கூற மாநாடு மாலை 7½-மணிக்கு இனிது நிறைவெய்தியது.

## தீர்மானங்கள்

கரந்தைக்கவியரசு. 2. வெங்கடாசலம் பிள்ளை அவர்கள் தலைமையில் நடந்த அகநானூற்று மாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள்.

(1) கல்லூரிகளில் ஆங்கில ஆசிரியர்களைப் போன்றே தமிழாசிரியர்களுக்கும் ஊதியந்தருதல் மிகவும் இன்றியமையாத கடமையாகலான் அது செய்யுமாறு அரசியலாரை இம்மாநாடு கேட்டுக்கொள்ளுகின்றது.

(2) தொடக்கப் பள்ளிகளில் தமிழ்வித்துவான்களை ஆசிரியர்களாக நியமித்துக் கல்வி கற்பித்தல் தமிழ்வளர்ச்சிக்கு இன்றியமையாத தொன்றாகலின் அது செய்யுமாறு அரசியலாரை இம்மாநாடு கேட்டுக்கொள்கின்றது.

(3) உயர்திரு சீனிவாச சாத்திரியார் தலைமையின்கீழ் ஆராயப் பெற்று அரசியலாருக்கு அனுப்பப்பட்டிருக்கின்ற கலைச்சொல்லாக்க முடிபுகளாவன:—ஆங்கிலத்தை அப்படியே தமிழ் எழுத்துக்களில் எழுதிக்கொள்ளல், வடமொழியிலேயே மொழி பெயர்த்தல் இவை போன்றனவாம். இவை தமிழ் மொழிக்கு ஊறுசெய்யுமாகலின் அம் முடிபுகள் தமிழ்மக்கட்கு ஒத்தனவல்ல என்பதை அரசியலாருக்கு அறிவித்துக்கொள்வதோடு சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தார் வெளியிட்டுள்ள கலைச்சொற்களையே நடைமுறையிற் கொண்டு வருதல் நல்லது என்றும் இம்மாநாடு கருதுகின்றது.

(4) வித்துவான் பாடத்திட்டத்தைக் குறைத்து, அதற்கு ஈடாகக் கலைப்புலமைக்கான பாடத்திட்டத்தை ஏற்படுத்துதல், பல்கலைக் கழகத்தார் தமிழ் மொழிக்குச் செய்யத்தக்கவற்றுள் சிறந்த தொன்றாகலான் அது செய்யுமாறு அவரை இம்மாநாடு கேட்டுக்கொள்கின்றது.

(5) தமிழ்வித்துவான் தேர்வில் தேர்ச்சி பெற்றவர்களும், தேர்வுக்குச் செல்லாமலே தனிமையாகப் பயின்ற அறிஞர்களும், தமக்கமைந்த மொழிப்புலமையோடு தமக்கு விருப்பமான கலைத்துறையில் தனிப்புலமையும் பெறுதல் நன்று என்று கருதி அவர்களை அத்துறையிலும் ஊக்குங்கொள்ளுமாறு இம்மாநாடு கேட்டுக்கொள்கின்றது.

(6) வீடுகள்தோறும் நினைவுக்குறியாகப் பண்டைநல்லிசைப் புலவர்களுடைய படங்களைத் திறப்பித்துப் பிறந்தநாள் விழாபோன்ற

Koviloor Digital Library



பெருவிழாக்களைச் செய்யுமாறு தமிழ் அன்பர்களை இம்மாநாடு கேட்டுக்கொள்ளுகின்றது.

(7) தமிழ்ப்பேரவைகள் நடைபெறுவதற்காகத் தமிழ்நாட்டின் தலைநகராகிய சென்னையில் தக்க தமிழ்மன்றம் ஒன்று தனியாக இருக்கவேண்டுதலின், தமிழ்நாட்டில் தமிழ் அமைப்புக்களைச் சிறக்கச் செய்துவரும் மாட்சிமை மிக்க செட்டிநாட்டரசர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரவர்களே, அதனையும் அன்புடன் அமைத்துதவுமாறு அவர்களைக் கேட்டுக்கொள்ளவேண்டு மென்றும், "அண்ணாமலைத் தமிழ்மன்றம்" என்னும் நற்பெயரால் அம்மன்றம் விளங்க வேண்டுமென்றும் இம்மாநாடு விரும்புகின்றது.

## 7-வது சென்னை மாகாணத் தமிழர் மாநாடு

### தமிழ்ப்புலவர் மாநாடு

24, 25-12-40-ம் நாட்களில் சென்னைச் சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளி மண்டபத்தில், இலங்கைச் சட்டசபை உறுப்பினரும் யாழ்பாணம் இராமநாதன் கல்லூரித் தலைவருமான திரு S. நடேச பிள்ளையவர்கள் தமிழ்க்கொடி எற்றிவைக்க, செட்டிநாட்டிளவரசர் திரு முத்தையா செட்டியார் எம். எல். ஏ. அவர்கள் மாநாட்டைத் திறந்துவைக்க, சென்னை டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி அவர்கள் வரவேற்றற்கழகத் தலைவராயிருந்து அன்பர்களை வரவேற்று அளவளாவ, சென்னை அறநிலையப் பாதுகாப்புத் தலைவரான திவான்பகதூர் திரு டி. எம். நாராயணசாமி பிள்ளை எம். ஏ. பி. எல். அவர்கள் அரிய தலைமையில் முறையே தமிழர் மாநாடும்,

சென்னை திரு S. முத்தையா முதலியார் சி. ஐ. இ அவர்கள் திறப்பாளராகவும் சென்னை திரு. மா. பாலசுப்பிரமணியம் எம். ஏ. எம். சி அவர்கள் வரவேற்பாளராகவு மிருந்து சிறப்பிக்க, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் தலைமை தாங்கிப் பழந்தமிழர் மனப்பான்மைபற்றியும் புலவர்களின் இன்றியமையாமைபற்றியும் நல்லுரை நிகழ்த்தத் தமிழ்ப் புலவர் மாநாடும் சிறப்பாக நடைப்பெற்றன. அரிய தீர்மானங்கள் பலவும் ஆர்வமாக நிறைவேற்றப்பெற்றன; மாநாட்டில் தக்கோர் பலருங் கலந்துகொண்டமை தனியாகக் குறித்தற்குரியது.

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை
பொதுச்செயலாளர், சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம்.

அ. முத்தையா எம். ஏ.
வித்துவான் மறை. திருநாவுக்கரசு
*மாநாட்டுச் செயலாளர்.*

Koviloor Digital Library




சிலம்பு-கஎ] விக்கிரம—தைமீ [பரல்-கo

# தழைக !

" நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
வல்லா ராயினும் புறமறைத்துச், சென்றோரைச்
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
நல்லிதின் இயக்கும்அவன் சுற்றத் தொழுக்கம் "

—மலைபடுகடாம்

உலகத்தில் மக்களுடைய காரியங்களெல்லாம் அவரவர் நினைவுகளால் நடைபெறுகின்றன; ஆனால் அந் நினைவுகளும், தக்கார் சிலருடைய நல்ல நினைவுகளாலேயே இயங்குகின்றன. ஆதலால், எல்லாக் காரியங்களுக்கும் ஏதுவாயிருப்பவை, உலகத்தில் அங்கங்கும் விளங்குகின்ற நல்லோர் சிலருடைய நன்னினைவுகளேயாம் என்பது விளக்கமாகின்றது. அந் நல்லோர் குழு எங்குந் தழைக என விரும்புவோம்.

'மலைபடுகடாம்' என்பது பத்துப்பாட்டைச் சேர்ந்த ஒரு நூல். 'நன்னன்' என்னும் வேளிர் தலைவனைப்பற்றிப் 'பெருங்கௌசிகனார்' பாடியிருக்கிறார். நன்னன், நல்லோர்கள் சூழ விளங்கியிருந்தவன். 'நல்லோர் கூடிய நாப்பழக்க மிக்க அந்த அவையில், அப் பழக்கமில்லாதார் எவரேனும் செல்ல நேர்ந்து, நன்னனுக்குத் தங்கள் கருத்தை வல்லமையாகச் சொல்லமாட்டாமல் தயங்குவாராயின், அங்கிருக்கும் அமைச்சர் முதலியோர் அவர் மாட்டாமையை மறைத்துத் தாமே சொல்லிக் காட்டிக் கருத்தையுங் குறைவின்றி விளக்கி அவர்களை நல்ல முறையில் நடத்திவைப்பார்களாம்.

இங்ஙனம் எங்கும் நல்லோர்கள் விளங்கினால், உலக வாழ்க்கை எவ்வளவு மேம்பட்டதாயிருக்கும்!

Koviloor Digital Library

# எழுத்துப் புரட்சி

'புரட்சி! எல்லாம் புரட்சிதாம்! வரையறை என்னுங் கரை இப் புரட்சிக்குமட்டும் இல்லைபோலும்!' என்று அழுத்தமாகச் சொல்லிக்கொண்டு ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டார் பெரியவர் ஒருவர்.

ஆனால், அருகிலிருந்த இளைஞரோ மிகு தீவிரப் புரட்சிக்காரர்! சற்றுச் சுவையாளருங்கூட; மிக்க அறிவாளியும், பன்மொழிப் பயிற்சியாளருமாவர்; ஆயினும், அமைதியானவர்!

இனிய தேமாம் பழங்களைக் கண்டு நாவூறி நிற்பவரைப்போல, இவ் விருவரது சொற்சுவை அமிழ்தை எதிர்நோக்கிச் சிலர் அவரருகில் அறிவூறி நின்றனர்.

இளை : தங்களுக்கு இவ்வளவு கவலை உண்டாகக் காரணம் என்னவோ?

பெரி : காரணம்! புரட்சி அப்படிப்போய் இப்படிப் போய் இப்போது முடிவில் தமிழ் எழுத்துக்களுக்கல்லவா வந்திருக்கிறது! என்னவோ 'டைப்' அடிப்பதற்கும் அச்சுக் கோப்பதற்கும் ஆங்கிலத்தில் எளிதாம்; தமிழில் அரிதாம். அதற்காகத் தமிழ் எழுத்துக்களின் ஒலிகளை மட்டும் வைத்துக்கொண்டு, அவற்றின் உருவங்கள் சிலவற்றை மாற்றிவிடுவதாம்; மாற்றிவிட்டாலன்றோ தெரியும்!

இளை : மாற்றிவிட்டால் என்ன தெரியும்?

பெரி : எல்லாம் குழம்பிவிடும்.

இளை : எப்படிக் குழம்பிவிடும்?

Koviloor Digital Library



பெரி : எப்படியா! அவையெல்லாம் சொல்லி அடங்குவன அல்ல.

இளை : போகிறது ; ஒன்றிரண்டேனும் சொல்ல வேண்டும்.

பெரி : தமிழில் உயிரெழுத்துக்கள் எத்தனை ?

இளை : இது வேறேயா ? சரி; பன்னிரண்டு.

பெரி : அவற்றில் பத்துக் குறிகளைமட்டும் வைதது்க் கொண்டு, ஐ, ஔ என்னும் எழுத்துக்களை 'அய்' 'அவ்' என்னும் எழுத்துக்களாலேயே எழுதிவிடுவதாமே; எப்படிப் பொருந்தும்?

இளை : ஏன் பொருந்தாது? ஆசிரியர் தொல்காப்பியனுரே,

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐ யென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"

என்று ஒரு நூற்பா இயற்றி இப்படி ஒரு புரட்சியை அப்போதே உண்டுபண்ணி யிருக்கிருரே! 'ஔவை' என்பதுகூட 'அவ்வை' என்று வருமென்று அதன் உரையில் நச்சினர்க்கினியரும் எடுத்துக் காட்டியிருப்பது தங்கட்கு நினைவிருக்கலாமே!

பெரி: நன்ருய் நினைவிருக்கிறது ; அத்தகைய போலி எழுத்துவடிவங்களைப் பற்றிக் கூறுமிடங்களில், நச்சினர்க்கினியரே 'அது கொள்ளற்க' என்று உரை எழுதியிருப்பதும் நினைவிருக்கிறது.

இளை : அது நச்சினர்க்கினியர் கருத்துத்தானே!

பெரி : அப்படியாளுல், உரைவிளங்காத நூற்பாக் களுக்கு மட்டும் உரையாசிரியர்களின் கருத்துக்களை விரும்பலாம்போலும்! இவ்வளவு பொருட்படுத்தாமல் எள்ளிவிடக்கூடியவையா அவ்வுரைகள் ?

Koviloor Digital Library



இளை : ஆனால், நச்சினார்க்கினியர் 'அது கொள்ளற்க' என்று எழுதியிருப்பதற்கு என்ன காரணம் இருக்கலாம்?

பெரி: அப்படி நினைப்பது நல்ல முறைதான்; ஐ என்பது நெட்டெழுத்து; அதற்கு மாத்திரை இரண்டு; 'அய்' என்று எழுதினால் அதனைக் குறிலென்று கொள்வதா, நெடிலென்று கொள்வதா? மாத்திரை என்ன கொள்வது? இவற்றின் தொடர்பான இலக்கண நூற் பாக்களை என்ன செய்வது?

இளை : 'ஔ' என்பதுமட்டும்?

பெரி : 'ஔ' என்பது இரண்டெழுத்துப்போல இருந்தாலும் மாத்திரைக் கணக்கில் இரண்டு மாத்திரைகளே ஆகின்றன. அதனால் அது, நெடிலாவதற்கு இயைபுண்டு. ஔகாரம் இப்படிக் கூட்டெழுத்தாக இருப்பதனாலேதான் அது மொழிக்கு இறுதியிலும் இடையிலும் வருவதில்லை. ஐயென்பது மொழிக்கு முதலிலும் இடையிலும் கடையிலும் பெருவழக்காய் வருகின்ற எழுத்து.

மேலும் 'ஐ' என்பது ஒரு வேற்றுமை யுருபுமாகும். வேற்றுமைகளில் அதற்கொரு முதன்மையும் உண்டு. சொற்றொடர் என்றாலே எழுவாய் பயனிலை செயப்படு பொருள் என்று மூன்று முதன்மை பெறுகின்றன. 'ஐ' செயப்படுபொருளை உணர்த்தும் உருபு.

இனிச் சொற் புணர்ச்சிகளிலும் ஒன்று எடுத்துக் காட்டலாம்; 'வரையரமகளிர்' என்பதில், 'வரை' என்பதை 'வரய்' என்று எழுதினால், அரமகளிர் என்று சேரும்போது ய் என்பதோடு அ என்பது சேரவேண்டும். அப்போது 'வரயரமகளிர்' என்றுதானே எழுதும்படி நேரும். இல்லாவிட்டால் 'வரய்யரமகளிர்' என்று எழுது

Koviloor Digital Library



வதற்குப் புது இலக்கண இலக்கியங்கள் உண்டுபண்ண வேண்டும். இப்படி எத்தனைக்கு உண்டுபண்ணுவது ?

இலக்கணங்களில் இந்த ஓர் எழுத்தின் இயல்புகளுக்கும் செயல்களுக்குமே பல நூற்பாக்கள் உண்டு. அதன் வரிவடிவை மாற்றினால், பல நூற்பாக்களை மாற்றும்படி நேரும். அந் நூற்பாக் குறிப்புக்களுக்கு இயைபான இலக்கிய வழக்குக்களையெல்லாமும் மாற்றியாக வேண்டும். இப்படித்தான் எல்லாம் குழம்பித் தமிழ் மொழியே வேறு மொழிபோலாகி முரணும். இங்ஙனமே பிறவும்.

இளை : இவையெல்லாம் கருதாமலா, எழுத்துப் புரட்சி செய்வோர் செய்துவிடுவர் ?

சூழ நின்றிருந்தவர்கள், இத் தமிழன்பர்கள் இருவரின் உண்மைக்கும் அன்புக்கும் பெரிது மகிழ்ந்து வியந்தனர் ; வியவாதிருப்பரோ !



Koviloor Digital Library

# மணிமேகலை*

"பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்"

மணிமேகலை யென்பாள், கோவலன் என்னும் வணிக குமரனுக்குக் காதற்கணிகையாகிய மாதவி பெற்ற மகளா வாள். அவள் வரலாறு கூறும் காப்பியத்திற்கும் இதுவே பெயராகும். இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு யாண்டுகளுக்கு முன், சோழநாட்டின் தலைநகராக விளங்கிய காவிரிப்பூம் பட்டினத்தில், பெருங்குடி வணிகர் மரபில் தோன்றிய கோவலன் என்பான், அரசவையில் ஆடல்பாடல்களில் திறமை பெற்று அரங்கேறிய நாடக கணிகையாகிய மாதவி யென்பாளைக் காதலித்து, அவளுடனுறைந் தொழுகினனாக, அவனுக்கு அவள் வயிற்றில் மணிமேகலை என்னும் பெண்மணி பிறந்தனள். நிகரற்ற அழகுவாய்ந்த இப் பெண்கள் திலகம், மங்கைப்பருவம் எய்தியிருக்கும் நாளில், தன் அருமைத் தந்தையாகிய கோவலனும், பெற்ற தாயினும் உற்ற தாயாக மேற்கொண்ட கண்ணகியும், படாத துன்பங்களுக்கு ஆளாகி இவ்வுலக வாழ்க்கையை நீத்த செய்தி கேட்டுத் திடுக்கிட்டு, இவ்வுலக இன்பத்திற் பற்றற்று ஒழுகத் தலைப்பட்டாள்.

"ஆடவர் கண்டா லகறலு முண்டோ
பேடிய ரன்றோ பெற்றியி னின்றிடின்"

என்று, சுதமதியாற் பாராட்டப்பட்ட இவள் அழகின் சிறப்பை நினைந்து, இவளைத் தகாத ஒழுக்கத்திற்கு ஆளாக்க முயன்ற இவள் அன்னையின் தாயாகிய சித்திராபதி என்பாள், 'பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையில்-யாழினம் போலு மியல்பினம்' என்றும், 'நறுந்தா துண்டு நயனில் காலை வறும் பூத் துறக்கும் வண்டு போல்குவம்' என்றும், தங் குல ஒழுக்கத் திற்கு ஏற்ப நினைத்து, ஒரு தோழி மூலமாக இச் செய்தியை மாதவிக்குத் தெரிவித்தனள். அதுகேட்ட மாதவி,

"மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை
அருந்தவப் படுத்த லல்ல தியாவதுந்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்"

---

* திருச்சி வானொலியில் 25-1-41-ல் பேசியது.

Koviloor Digital Library



என்று மறுத்து உரைத்தனள். இந்நிலையில், இருமுது குரவரையும் இழந்தமையால் மணிமேகலைக்கு நேர்ந்த துன்பத்தை ஆற்றுதற்பொருட்டுச் சுதமதியென்னும் தோழி, 'உபவனம்' என்னும் ஒரு பூஞ்சோலைக்கு அவளை அழைத்துச்சென்றாள். இவள் கட்டழகின் மாண்பைக் கேட்ட அந்நகரத்து அரச குமாரனாகிய உதயகுமரன் என்பான், காமபரவசனாய் அவ்வுபவனத்திற் சென்று பளிக்கறையுட் புகுந்திருக்கும் மணிமேகலையைப்பற்றிப் பலவாறு பாராட்டிச் சுதமதியால் தெருட்டப்பட்டு மீண்டும் அவளையடையலாம் என்னும் துணிவுடன் திரும்பினான். இந்நிலையில் உதயகுமரன் காட்சியில் மணிமேகலைக்குச் சிறிதளவு அவன்பால் உள்ளஞ் சென்றது. இதனை அவள் ஒளியாமல் தோழியாகிய சுதமதியை நோக்கி,

"கற்புத் தானிலன் நற்றவ வுணர்விலன்
வருணக் காப்பிலன் பொருள்விலை யாட்டியென்
றிகழ்ந்தன னாகி, நயந்தோ னென்னாது
புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்சம்
இதுவோ அன்னாய் காமத் தியற்கை"

என்று கூறிய செய்தியாலும், பின்னர் உதயகுமரன் காஞ்சனனால் வெட்டுண்டு இறந்தபொழுது மனங்கலங்கி,

"உவவன மருங்கில் நின்பா லுள்ளந்
தவிர்விலே னாதலின்...........
...........நின் இடர்வினை யொழிக்கக்
காயசண் டிகைவடி வானேன் காதல"

என்று இரங்கிப் புலம்பினமையாலும் அறியலாம். இங்ஙனம் உதயகுமரனால் இழித்து உரைக்கப்பட்டும், அவள் உள்ளம் சிறிது காதலித்ததற்குக் காரணம், பண்டைப் பிறப்புக்களில் இவ்விருவரும் கணவனும் மனைவியுமாக வாழ்ந்துவந்த தொடர்பென்று ஆசிரியர் கூறுகின்றார். காமத்தீச் சிறிதாகப் பற்றினும் பெரிதாகி வெதுப்பும் ஆதலின், இவளை அத் தொடர்பினின்றும் ஒழித்தற்கு இவர்கள் குலதெய்வமாகிய மணிமேகலா தெய்வம் யாரும் அறியாதபடி மணிமேகலையை எடுத்து, இலங்கையிலுள்ள மணிபல்லவம் என்னும் தீவிற்குக் கொண்டுவந்து

Koviloor Digital Library



புத்தபீடிகையைத் தரிசிக்கச் செய்தது. இச் செய்தியை ஆசிரியர் மணிமேகலா தெய்வத்தின் கூற்ருக,

"ஆங்கவ னன்றியும் அவன்பா லுள்ளம்
நீங்காத் தன்மை நினக்குமுண் டாகலிற்
கந்த சாலியின் கழிபெரு வித்தோர்
வெந்துகு வெண்களர் வீழ்வது போன்மென
அறத்தின் வித்தாங் காகிய உன்னையோர்
திறப்படற் கேதுவாச் சேயிழை செய்தேன்"

என்று கூறியதனுல் அறியலாம். இங்கே மணிமேகலையை நோக்கிச், சிறந்த மணமுள்ள கந்தசாலி என்னும் நெல்வித்தை உவர்நிலத்தில் வீழ்த்து வீணுக்குதல் போல, அறத்தின் வித்தாகிய நின்னை இழிகாமத்துக்கு இலக்காக்குதல் தக்கதன்று என்றெண்ணி அறச்செல்வியாக்குதற்கு ஏற்றது செய்தேன் என்னுங் கருத்துத் தோன்றக் கூறியது பாராட்டத்தக்கது.

இனி, இந் நங்கையர்திலகம் மணிபல்லவம் என்னுந் தீவில் எதிர்ப்பட்ட தீவதிலகையென்பாள் உதவியால் கோமுகி யென்னும் பொய்கையினின்றும் அமுதசுரபியென்னும் அட்சய பாத்திரத்தைப் பெற்ருள். இப் பேறே மணிமேகலையின் அறச்செயற்குச் சிறந்த முதற்கருவியாயிற்று. தீவதிலகை

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவிஅது தீர்த்தோர்
இசைச்சொல் அளவைக் கென்ஞ நிமிராது"

எனவும்,

'மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே'

எனவும் கூறிய அறவுரைகளைக் கடைப்பிடித்து, அவ்வமுத சுரபியினின்றும் அள்ள அள்ளக் குறையாத உண்டியை எளிய மக்களுக்கு வழங்குதலாகிய பேரறத்தை மேற்கொண்டொழுகு வாளாயினள். இங்ஙனம் புரிந்த அறச்செயலில்,

Koviloor Digital Library



" ஆற்றுநர்க் களிப்போர் அறவிலை பகர்வோர்
ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை "

என்னும் உண்மை இவ்வம்மையால் மேற்கொள்ளப்பட்டது. செல்வமுடையார்க்குப் பல்வகைச் சுவை நிரம்பிய உணவு களைப் படைத்தல் அறமாகாதெனவும் அஃது ஆரவார நீர் மையேயாமெனவும் உணர்ந்தமையால், அம்முறை கைவிடப் பட்டுக் குருடர் முடவர் செவிடர் ஆதரவில்லோர் நோய்த் துன்பமுடையோர் ஆகிய எளிய மக்களுக்கே இவளறம் பயன் படுவதாயிற்று. இவ்வன்னதானமாகிய அறம் புரிதற்கு ஏற்ற இடமாகக் காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள 'உலக அறவி' என் னும் ஊரம்பலத்தைத் தெரிந்தடைந்தனள். அங்கே உதய குமரன் தன்மேற் காதலுடையனாய் வருதலையறிந்து அவனால் இடையூறு நேரவுங் கூடுமென்று எண்ணிக் காயசண்டிகை என்னும் வித்தியாதரப்பெண்ணின் உருவத்தை மேற்கொண்டு, தன் அறச்செயலைப் புரிவாளாயினள். அவ்வமயம், காய சண்டிகையின் கணவனாகிய காஞ்சனன் என்பான், தன் மனைவியைக் காதலித்ததாகத் தவறுபட நினைந்து உதய குமரனை வாளாலெறிந்து கொன்றான். இச்செயலை அறிந்த உதயகுமரன் தந்தையாகிய அரசன், தன் மகன் கொலைப் பட்டது குறித்துச் சினமுடையனாய் மணிமேகலையைச் சிறைப் படுத்தினான். அவ்வரசன் மனைவியாகிய 'இராசமாதேவி' என்பாள், மணிமேகலைக்கு நலஞ்செய்வதாக வெளிக்காட்டித் துன்புறுத்தும் நினைவுடையளாய் அவளைச் சிறையினின்றும் விடுவித்து, மயக்குமருந்தை உணவிற் கலந்து ஊட்டியும், புழுக் கறையில் அடைத்தும், காமுகன் ஒருவனை விடுத்துப் பழி யுண்டாக்க முயன்றும் பலவாறு கொடுமை செய்தனள். மணிமேகலை இக் கொடுந்துன்பங்களையெல்லாம் பொறுத்துக் கொண்டு, தான் எய்திய சில சித்திகளால் அவ்விடையூறுகளைக் கடந்து, சிறிதும் வாட்டமின்றியிருந்தனள். இந்நிலையை அறிந்த இராசமாதேவி அச்சமுற்று, 'மகனை இழந்த துன்பம் பொறுக்கலாற்றாது இத்தீங்குகளைச் செய்தேன், பொறுத் தருளவேண்டும்' என்று மணிமேகலையை, வேண்ட மணிமேகலை அவள் துன்பத்தை யொழிக்கு முகமாக உண்மைப்பொருளை

Koviloor Digital Library



மனங்கொளத் தெருட்டி, அருளறத்தைக் கடைப்பிடிக்கச் செய்தனள். மகனது இறப்பால் துயருறும் இராசமா தேவிக்கு மணிமேகலை கூறிய பொருளுரையால் அவளறிவு எவ்வளவு தெளிந்த நிலையிலுள்ளதென்பது புலனும்.

"உடற்கழு தனையோ உயிர்க்கழு தனையோ
உடற்கழு தனையேல் உன்மகன் றன்னை
எடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
உயிர்க்கழு தனையேல் உயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையால் தெரிந் துணர் வரியது
அவ்வுயிர்க் கன்பினை யாயின் ஆய்தொடி
எவ்வுயிர்க் காயினும் இரங்கல் வேண்டும்"

என்பது அப் பொருளுரையாம். இதன்கட் குறிக்கப்பட்ட பொருள், 'உடல் ஒழிந்ததற்கு அழுதேனென்றால், அவ்வுடலைச் சுடலையில் இடக்கொடுத்தது யார்? நீயன்றோ? அன்றி, உயிர் நீங்கியதற்கு அழுதேனென்றால், அவ்வுயிர் நித்தியமாகலின் அது செய்த வினைவழி ஓர் உடல் எடுத்திருக்கும் அவ்வுடல் இன்னதென நம்மால் தெரிந்துகொள்ளுதல் அரிது; அவ் வுயிர்க்கு அன்புசெய்ய விரும்பின் உலகத்துள்ள எவ்வுயிர்களுக் கும் இரங்கல்வேண்டும்; அங்ஙனம் இரங்குவையாயின், பல வாகிய அவ்வுயிர்த்தொகுதிகளுள், நின்மகன் உயிரும் ஒன்று மாதலின் அதற்கு அன்புசெய்தனையாவை' என்பதாம். இங்ங னம் அவள் துயரம் ஒழிதற்குரிய நெறியைக் காட்டி, அதன் முகமாக அருளறத்தைமேற்கொள்ளச் செய்த மணிமேகலையின் தெளிந்த நுண்ணறிவுத் திறனும், அருளறத்திலுள்ள விருப்ப மும் பாராட்டத் தக்கன. இவள் உபதேசச் சிறப்பைக் குறித்து, 'மகனை இழந்தமையால் நேர்ந்த துயரமாகிய நெருப்பு, மனம் விறகாகப் பற்றி உள்ளத்தைச் சுடுதலின், ஞானமாகிய நல்ல நீரைத் தெளித்து அவித்தனள்' என்னும் பொருள் தோன்ற,

"ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்
தேனு ரோதி செவிமுதல் வார்த்து
மகன்றுயர் நெருப்பா மனம்விற காக
அகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்ப"

என்று ஆசிரியர் பாராட்டி யுள்ளார்.

Koviloor Digital Library



இஃதன்றி, மணிமேகலை தன் ஆற்றலால் அந் நகரத்துள்ள சிறைச்சாலையை அடைந்து தண்டிக்கப்பட்டுப் பசியால் வாடிய மக்களுக்கு வேண்டுமளவு உணவளித்தும், அவர் களுக்கு அறிவுரை பகர்ந்து அச் சிறைச் சாலையை அறச்சாலை யாக்கிப் பலவகைப் புண்ணியச்செயல்களும் நடைபெறும்படி அரசனைக் கொண்டு செய்வித்தனள். இக்காலத்தில் சிறைச் சாலையைச் சீர்திருத்துவதற்கு முற்படும் விருப்பமுடைப்பெரி யோர்களுக்கு இம் மணிமேகலையின் அருஞ்செயல் வழிகாட்டி யாக உள்ளதாகும். தனக்குப் பலவகைக் கொடுஞ்செயல் களால் தீங்கிழைத்த இராசமாதேவியை வெறுது, அவள் அறி யாமையை ஒழித்து, அவளை நல்வழிப்படுத்திய பேருதவியை நினைக்குங்கால் திருவள்ளுவதேவர் அரிதினுராய்ந்து கூறிய,

" இன்னுசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல் "

" இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு "

என்னும் திருக்குறள்கள் நம் நினைவின்முன் நிற்பனவாம். ஒருவன், தனக்குத் துன்பஞ்செய்தாரை அவர் நாணும்படி அவர்க்கு நன்மை செய்தலே அவரைத் தண்டித்ததாகும் என்னும் பொருளுரை மணிமேகலை வாழ்க்கையில் தலைநின்று விளங்குவதொன்று. இங்ஙனம் மணிமேகலை தன் வாழ்நாளிற் பெரும்பகுதியைப் பிறர்க்கு நலம் செய்தலிலேயே கழித்தனள். கணிகையர் குலத்திற்றோன்றிக் கட்டழகும், யௌவனமும் வாய்க்கப் பெற்றும், அரசகுமாரனால் பலமுறை விரும்பப்பட் டும் இழிதகவாகிய காமநிலையில் உள்ளத்தைச் செல்லவிடாது, தனக்குத் தீங்கு செய்தார்க்கும் நன்மையே செய்தும், உரிய சமயங்களில் அறவுரைகளைக்கொண்டு அறிவுக்கலக்கமுற்றாரைத் தேற்றியும் அருளறத்தை வளர்த்த பெருமை மணிமேகலைக்கே சிறந்ததாகும். திருவள்ளுவர் தவத்தின் இலக்கணங் கூறுங் கால்,

" உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு "

Koviloor Digital Library



என்றனர். தனக்கு நேர்ந்த பலவகைத் துன்பங்களையும் பொறுத்துப் பிறவுயிர்களுக்கு ஒரு சிறிதும் துன்பஞ் செய்யாமையோடு நன்மையும் புரிந்த தவப்பெருஞ் செல்வியாக விளங்கினமையின், மணிமேகலையே அதற்கு இலக்கியமாவாள்.

இன்னும் இவ்வம்மை, சாவகநாடு, இலங்கை முதலிய அயல்நாட்டு யாத்திரையையும், வஞ்சி, காஞ்சி முதலிய உண்ணாட்டுச் செலவையும் மேற்கொண்டு ஆங்காங்குப் பற்பல அறங்களைப் புரிந்தும், ஞானமிக்க தவச்செல்வர்களிடத்தில் தருமோபதேசங்களைப் பெற்றும், பற்பல சமய உண்மைகளைக் கேட்டும், சிறப்பாகப் பௌத்தமதவுண்மைகளை உணர்ந்தும் ஒழுகுவாளாயினள். அறிவுவளர்ச்சியடைதற்கு அயல்நாட்டு யாத்திரை பெரிதும் உதவியாகுமென்னும் உண்மையையும், இவ்வம்மை சரிதம் புலப்படுத்துவதாகும். பற்பல சமயவாதிகளையடுத்து உண்மைதெளிதற்கு வாதித்ததும், மாறுபட்ட கொள்கையுடையாரைத் திருத்தியதும் வியப்பை அளிப்பனவாம். ஒருசமயம், காட்சியளவை ஒன்றனையே கடைப்பிடித்து அநுமானப் பிரமாணத்தை ஏற்றுக் கொள்ளாத பூதவாதியையடுத்து இவ்வம்மை தேற்றியமுறை அரிதினும் அரிது. அப் பூதவாதியை நோக்கி அம்மையார், நின் தந்தை தாயார் யாவரென அன்னுரை அவன் காட்டினனாக, காட்சியளவையொன்றனையே கடைப்பிடிக்கும் நினக்கு இவர் எப்படி தந்தை தாயார் ஆவர்; காட்சியில் வைத்து எவ்வாறு காண முடியும்; என வினவ, அவன் கலக்கமுற்றுத் தன் கொள்கையைக் கடைப் பிடிக்கும் நிமித்தம் தந்தை தாயரை ஏற்றுக் கொள்ளாது ஒழிப்பதா? அல்லது அவரை ஏற்றுக்கொள்ளும் நிமித்தம் தன் கொள்கையை விட்டு ஒழிப்பதா? என்னும் ஊசலாட்டிற்கு ஆளாயினன். இங்ஙனம் தந்தை தாயாரை விட்டொழிக்க மனம் வாராத அந்நிலையில், மணிமேகலை,

> " தந்தை தாயரை அனுமானத் தாலலது
> இந்த ஞாலத் தெவ்வகை யறிவாய் "

என்று தேற்றுவாளாயினள். இவள், இளமை நிலையாமை யாக்கை நிலையாமை முதலியவற்றைப் பிறர்க்கு எடுத்துக்

Koviloor Digital Library



காட்டி நல்வழிப்படுத்துந் திறமையில் மிகச் சிறந்தவளென்ப தற்கு இவ் வரலாற்றுப் பகுதியிற் கண்ட வேறு சில சான்று களும் உள. அவற்றுள், முன்னர்க் காமவேட்கையிற் சிக்குண்ட உதயகுமரனுக்கு இளமை நிலையாமையை அறிவுறுத்த எண்ணி, அப்பொழுது அங்கே இயல்பாக வந்த முதிர்பருவத் தினளாய ஒருத்தியைக் காட்டிப், பண்டு வனப்புடையனவாக இருந்த அவளுடல் உறுப்புக்கள் இப்போது வன்மை குறைந்து அழகிழந்திருத்தலைக் குறித்து,

> "தண்ணறல் வண்ணந் திரிந்தது வேறாகி
> வெண்மண லாகிய கூந்தல் காணாய்"

என்பது முதலாக ஏனையுறுப்புக்களின் வேறுபாட்டையும் விளக்கிக்காட்டி முடிவில்,

> "பூவினுஞ் சாந்தினும் புலால்மறைத் தியாத்துத்
> தூசினும் மணியினும் தொல்லோர் வகுத்த
> வஞ்சந் தெரியாய் மன்னவன் மகன்"

என்று தெளிவுறுத்தியதொன்று. சாவகநாட் டரசனாகிய புண்ணியராசனைக் கண்டு, அவன் முற்பிறப்பில் ஆபுத்திரனாக இருந்து அருளறம் பேணிய செயலை எடுத்துக் காட்டி அவ னுக்கு நேர்ந்த மயக்கத்தைத் தெரிவித்துத் தருமோபதேசஞ் செய்து நன்னெறிப்படுத்தியது மற்றொன்று. இங்ஙனம் பல் லாற்றானும் பலர்க்கும் உதவிபுரிந்து முடிவில் வஞ்சி நகரத்திற் சென்று, சமயவாதிகள் பற்பலரோடு வாதப்போர் நடத்தித் தள்ளுவன தள்ளிக் கொள்ளுவன கொண்டு காஞ்சியம்பதிக் குச் சென்று, அறவண அடிகளையடுத்துத் தத்துவஞானங் கைவரப் பெற்றுப் பவத்திறம் அறுகெனத் தவச்செயலில் தலைப்பட்ட மணிமேகலையின் சிறந்த வாழ்க்கை வரலாறு, அறிவுடையுலகம் நன்னெறிப்படுதற்குச் சிறந்த வழிகாட்டி யாக உள்ளதென்பது தெளிவாம்.

---

Koviloor Digital Library

## சென்னைத் தமிழ்ப் புலவர் மாநாட்டு

# வரவேற்புரை

### "மா. பாலசுப்பிரமணிய முதலியார், எம். ஏ."

தமிழன்பர்களே! தமிழ்ப் புலவர்களே! தமிழ்ப் புரவலர்களே! உங்கள் வரவு நல்வரவாகுக! உங்கள் வரவு வெல்வரவாகுக!

இம் மாநாட்டின் வரவேற்புக் கழகத் தலைமை ஏற்குமாறு பணித்து, உங்கட்கு வரவேற்புரைக்கும் பேறுடைய வாய்ப்பினை அளித்து, எம்மைப் பெருமைப்படுத்திய இம் மாநாட்டுச் செயலாளர்களுக்கு எம் உளமுவந்த நன்றி உரித்தாகும். தந்நலமறியாச் சீரியர்களோடும் மொழியறிவு நிரம்பிய சான்றோர்களோடும் சேர்ந்து யாமும் இன்று எம்மவர்க்குப் பயன்பட நேர்ந்தமை கருதி எம் உள்ளம் இறும்பூது எய்துகின்றது. தமிழ் நலமும் தமிழர் நலமும் சிறந்தோங்கி, தமிழ்நாடு பெருமை கமழ் நாடாகத் தழைத்துப் பெருக இறைவன் இன்னருள் பெய்வானாக.

நிற்க; மெய்யன்பர்களே! ஈண்டு, முதன் முதலாக உங்கட்கு ஒன்றை எடுத்துக் காட்ட எம் மனம் விழைகின்றது. தனிமொழியாக இலங்கும் தமிழ்மொழியில், பிறமொழிக் கலப்பின்றி இயங்கவல்ல தமிழ்மொழியில், தாய்மொழியாகும் தமிழ்மொழியில் தேர்ச்சிபெறும் அன்பர்களுக்கு, இப் பல்கலைக் கழகத்தார் கல்விச் சான்றாக 'வித்துவான்' என்னும் பெயரை அளிப்பது ஏலாத செய்கையாக இருப்பதோடு, தமிழுக்கே ஓர் இழுக்கினைத் தேடும் செய்கையாகவும் இருக்கின்றது. இளம்புலவர், புலவர், பெரும்புலவர், புலவர்மணி என்றுதல்; பைம்புலவர், செம்புலவர், புலவர், நுண்புலவர் என்றுதல், இன்ன பிற முறையதாகவாதல், படிமுறைப்படி கல்விச் சான்றுகள் அளிக்க உரிமைத் தமிழ்ச்சொல் இடந்தந்து விளங்க, இடந்தந்தவர் மனைக்குக் குடிவந்தவர் பெயரால் பெயரிட்டதுபோல, 'வித்துவான்' என்னும் பிறமொழிக் குறியீட்டை மேற்கொண்டது விரும்பத்தகாத செய்கையாகும். தமிழ், தெலுங்கு, மலையாளம் முதலிய ஒவ்வோர் உண்ணாட்டு மொழி

Koviloor Digital Library



யிலும் தேர்ச்சிபெற்ற அவ்வம் மொழிப்புலவர்க்கும் பொதுக் கல்விச் சான்றுப் பெயராக 'வித்துவான்' என்னும் தமிழல்லாச் சொல் மேற்கொள்ளப்பட்டதுபோலும் எனில், அக்கருத்து ஒருகாலும் ஏற்புடைத்தாகாது. ஒவ்வொரு மொழியில் தேர்ச்சி பெற்றார்க்கும் அவ்வம் மொழியில் கல்விச் சான்றுப் பெயர் வழங்கும் நேரிய செயலை விட்டு வேறு செய்வது ஒருபோதும் பொருந்தாது. இனியேனும் தக்கார் இதனை நன்கு உணர்ந்து வேண்டிய மாற்றம் காலம் கழிக்காது செய்தல் வேண்டும். தமிழ்ப் புலவர்கள் இதுபற்றி ஏற்ற கிளர்ச்சி செய்தல்வேண்டும். அரிய கடமையைச் செய்ய முயல்வதுதான் யாண்டும் மக்கட்கு அரிதென்றால், உரிய உரிமையைப் பெற முயல்வதும் மக்கட்கு அரிதாதல் கூடுமோ!

இரண்டாவதாக, மற்றொன்று ஈண்டுக் கூறப்படுதல் வேண்டும். தமிழ்ப் புலவர்கள் பெயரளவில் குறைவு செய்யப் பட்டதோடு, பொருளளவிலும் குறைவு செய்யப்பட்டுவிட்ட னர். பல்கலைக் கழகங்களிலும், உயர்தரக் கல்லூரிகளிலும், பிற பள்ளிக்கூடங்களிலும், தமிழ்க் குரவர்களாக இருக்கும் புலவர்கள் பெறும் திங்கள் வருவாய், ஒத்த அளவில் தேர்ந்த பிற ஆங்கிலக் குரவர்களும் கலை நூற் குரவர்களும் பெறும் வருவாயைவிடக் குறைவாக இருக்கின்றது. இது தாய் நாட் டிலேயே தாய் மொழியையும் தாய் மொழியைக் கற்றாரையும் பிறமொழிக்கும் பிறமொழி கற்றார்க்கும் கீழ்ப்படுத்துவதா மன்றோ? இந்நிலை நீங்கி ஏற்ற நன்னிலை எய்துமாறு தக்கார் முயற்சி செய்தல் வேண்டும். புலவர்களும் பிறரும் இது கருதி ஏற்ற கிளர்ச்சி செய்தல் வேண்டும். வரம்பு கடவாமல் வினைத் திட்பத்தோடும் மனத் திட்பத்தோடும் கிளர்ச்சி செய்து இக் குறைபாட்டை அகற்றிக்கொள்ளுதல் வேண்டும்.

இருப்ப, அன்பர்களே! தமிழைக் காத்து வளர்த்து, தமிழ்ப் புலவர்களைப் போற்றிப் பாராட்டி, நாடெங்கும் தமிழ்மணம் விரவுமாறு செய்து, தமிழ் மன்னர்கள் தமிழாட்சி கோடாது செலுத்திய இந் நாட்டில், இன்று தமிழைப் பேணுவாரும் தமிழ்ப் புலவர்களைப் புரப்பாரும் அருகிவிட்டனரேனும், மாண்ட நிலைமையை மீண்டும் பெற, ஏற்ற திண்ணிய முறையில்

Koviloor Digital Library



முயற்சிகள் செய்தல் தமிழ்ப் பொதுமக்களாவார்க்கும் தமிழ்ப் புலவர்களாவார்க்கும் உற்ற கடனன்றோ? எவ்வினைக்கும் அரசினரது உதவியையும் துணையையுமே நாடி நிற்பது நன்றாமோ? அரசினர் நமராயின் அவ்வாறு நாடுதல் பயன் தரும். அரசினர் அயலாரான போழ்து அவரையே நாடி நிற்றல் பயனற்றதாகும். நமருள் செல்வராய்த் திகழ்வாரின் உதவியை நாடி, பொதுமக்களின் துணையை நாடி, மீண்டும் தமிழாற்றல் தமிழ்நாட்டில் தழைக்குமாறு செய்ய முயல்வது தமிழ்ப்புலவரது இன்றியமையாக் கடனன்றோ? இக் கடனை ஒல்லும் வகையாலெல்லாம் ஆற்றுதற்கு முதன்மையாக வேண்டப்படுவது ஒரு தமிழ்ப் புலவர் கழகமேயாகும் என்று யாம் துணிந்து கூறலாம். இக் கழகம் ஓர் ஊன்றிய முறையில் நிறுவப்படவேண்டும். தமிழ்நாடு முழுதுமே இதன் எல்லையாக வேண்டும். ஏற்பது இகழ்ச்சியாயினும் அது பொதுநலம் கருதியதாயின் இழுக்கில்லதாமாதலின், ஏற்றாயினும் முதற்பொருள் தேடிவைத்து, அதன் வருவாய் கொண்டு இக் கழகத்தைத் தொழிற்படுத்தவேண்டும். ஆற்றலிடத்தே அமர்ந்தார் எவராயினும், அவர் தமிழ்மொழி வகையிலேனும், தமிழ்க்கல்வி வகையிலேனும், தமிழ்ப்புலவர் நிலைமை வகையிலேனும் எது செய்யக் கருதினும், இக் கழகத்தோடு ஆராய்ந்து, இது காட்டியவழியில் ஒழுகுமாறு இக் கழகம் தன் வன்மையை மிகவும் பெருக்கிக்கொள்ளவேண்டும். உரிய துறையில் இதன் சொல்லே உறுதிச்சொல்லாக யார்க்கும் உடன்பாடாக வேண்டும். அதற்குரிய ஆற்றலை இக்கழகம் பெற்றுப் போற்ற வேண்டும். அந்நாளில் பெரிய தமிழ்ச் சங்கங்கள் இருந்தனவென்றும், அவற்றில் பெரும்புலவர்கள் விளங்கி இருந்தனர் என்றும், அக்காலத்து மன்னர்கள் அவற்றைப் பெரிதும் பாராட்டிப் போற்றி வந்தனர் என்றும் நூல்கள் வாயிலாக அறிவனவெல்லாம் இன்று இப் பெரிய புலவர் கழகத்தின் வாயிலாக நாம் கண்கூடாகக் காணவேண்டும்.

மெய்யன்பர்களே! யாம் கூறும் இக் கருத்துக் கைகூடிப் பயன் தரவல்ல கருத்தேயாகும். ஆனால் தளரா முயற்சி வேண்டும்; அம் முயற்சியும் பேரளவினதாக இருத்தல் வேண்டும். என்னை? ஒரு நாட்டின் ஆள்வினைமன்றம் அமைந்திருத்

Koviloor Digital Library



தல் போல விரிந்த அமைப்பு முறையில் இக் கழகம் அமைதல் வேண்டும். தமிழ் நாட்டைப் பல சிறு தொகுதிகளாகப் பிரிக்க வேண்டும். தேர்தல் போன்ற ஒரு தகுந்த முறையைக் கையாண்டு ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் ஒவ்வொரு புலவரை ஆணையாளராகப் பெறவேண்டும். தற்காலத் தமிழெல்லையைக் கடந்துள்ள தமிழ்கூறு நல்லிடங்களையும் தொகுதிகளாகப் பிரித்து, ஆண்டிருந்தும் புலவர்களை ஆணையாளர்களாகப் பெறவேண்டும். மேலும், பல்கலைக் கழகம், அரசியல் கல்விப் பிரிவிலே, நகராண்மைக் கழகம் கல்லூரிகள் முதலிய இடங்களிலிருந்தும் ஆணையாளர்களைப் பெறவேண்டும். ஆயின், இத்தகைய விரிந்த முறையில் கழகத்தை அமைப்பதற்கு வேண்டிய புலவர்கள் உளரோ என்னும் ஐயம் வேண்டாம். ஒருகால் இலரேனும் விரைவில் அத்தகையோர் உளராகும் நிலைமை தோன்றும். இத்தகைய முயற்சியில் தமிழின் பெருமையையும் தூய்மையையும் கெடுக்க எண்ணும் பிறமொழி உட்புகவும் கூடும். அது நேராதபடி வேண்டிய காவல்வரைகள் செய்துகொள்ளுதல் வேண்டும். இவ்வாறேனும், தகுந்த பிற எவ்வாறேனும் இப் புலவர் கழகத்தை அமைத்த பிறகு, செய்தக்க தொழில்களையெல்லாம் தொகுத்துக்கொண்டு, மூவாண்டுச் செய்வழி, ஐயாண்டுச் செய்வழி போன்ற ஒருகாலச் செய்வழியை வகுத்துக்கொண்டு, இப் பெருங் கழகத்தைச் சொல்லாக்கக் கழகம், மொழியாராய்ச்சிக் கழகம், மொழிபெயர்ப்புக் கழகம் என்பன போன்ற சிறுசிறு உட்கழகங்களாகப் பிரித்துக்கொண்டு, வகுத்த செய்வழியின்படி ஊக்கத்தோடு முயறல் வேண்டும். அறிவால் தமிழனுக்கு மேற்பட்டவன் எவனுமிலன். ஆற்றலாலும் அவனுக்கு மேற்பட்டவன் எவனுமிலன். ஆகையால், நாம் இம்முறைப்படி தொடங்கி முயல்வோமாயின் விரைவில் நம் தமிழ்நாடு ஒரு தனிநாடாகவே விளங்கும்.

இருக்க, இப் புலவர் கழகம் ஒரு வரம்புக்கு உட்பட்ட வகையில் நாட்டாட்சியில் தலையிடவும் கூடும். அவ்வரம்பின் எல்லையை நடைமுறையில் பின்னர்த் தெளிந்து கோடலாகும். எடுத்துக் காட்டாகக் கூறுமிடத்து, அரசியல் அலுவல் வேண்டுவார்க்கு இன்ன அளவு தமிழ்க் கல்விக்கு மேற்பட்ட

Koviloor Digital Library



தகுதி வேண்டியதில்லை என்றோ, இன்ன பிறமொழிக் கல்வி இன்றியமையாது வேண்டுமென்றோ, இன்ன படிப்புமுறைக்கு இன்ன அளவு தமிழ்க் கல்விக்கு மேற்பட்ட பயிற்சி வேண்டியதில்லை என்றோ அரசினர் கட்டளை செய்வாராயின், அதனைத் தடுத்தாயினும் அடுத்தாயினும் சொல்லவும் செய்யவும் இக் கழகம் கடமைப்பட்டதாக வேண்டும். வேறு எவ்வெவ்வகையால் அரசியலில் தமிழ்த் தொடர்பு ஏற்படக்கூடுமோ அவ்வவ்வகையால் எல்லாம், ஆக்கம் கருதி, நாட்டாட்சியில் தலையிடுதல் இக் கழகத்தின் இன்றியமையாக் கடனாகும்.

எனவே, மெய்யன்பர்களே! பல நலம் பயக்கத் தக்க இக் கழகக் கருத்தைத் தொடர்ந்து கருதி, ஆவன ஆற்றுமாறு, தக்காரை யாம் வேண்டுவோமாக.

இனி, தமிழ்க் கல்வித்துறையில் தமிழ்ப்புலவர்கள் செய்ய வேண்டிய ஒரு சில புது வாய்க்கால்களைப் பற்றிச் சில பேசுவாம். முதன்மையாக வேண்டப்படும் புது வாய்க்கால் சொல்லாட்சி நூல் என்பதாம். நம் தமிழில் பல பொருள் ஒரு சொற்களும், ஒரு பொருள் பல சொற்களும் நிரம்பியிருக்கின்றன. இந்நாள் தமிழ் மாணவர்கள் இச் சொற்களை எடுத்து ஆளுங்கால் பெரிதும் இடர்ப்பாடு உறுகின்றனர். இதைத் தவிர்க்கவே ஒரு சொல்லாட்சி நூல் இன்றியமையாது வேண்டப்படுகின்றது. அந்நாளில் தமிழ்க்கல்வி பயின்றவர்கள் வரன்முறையாக வந்த குரவர்களை அடுத்து, ஏறக்குறையப் பவணந்தி முறைப்படி கற்றவர்களாகையால் அவர்கள் சொல்லாட்சிகளைப் பழையோர் கொண்ட முறைப்படி வாய்வழியாக அறிந்து கையாண்டு மகிழ்ந்தனர். ஆயின் இந்நாள் கல்வி முறையோ பவணந்திமுறைக்கு இடந்தந்து நிற்கவில்லை. வாழ்க்கைமுறைகளின் மாறுபாட்டால் கல்விமுறைகள் மாறுதல் எய்தின. ஆதலின் பழையோர் கொண்ட சொல்லாட்சி நுணுக்கங்களை அறிந்து ஆளுதல் ஆராய்ச்சியறிவு உடையார்க்கன்றி மற்றவர்க்கு அரிதாகின்றது. எடுத்துக்காட்டாக ஏகு, போ, செல் என்னும் சொற்களில் எதை எவ்விடத்தில் ஆளுதல் வேண்டும் என்பதறிய யாவர்க்கும் எளிதன்று. ஆகலான் நிரம்பிய புலமையுடைய தமிழ் அறிஞர்கள் ஒரு

Koviloor Digital Library



சொல்லாட்சி நூல் வகுப்பது பெரும் நன்மைதரக்கூடிய செய்கையாகும். மேனாட்டு மொழிப்பயிற்சியினால் தமிழில் தோன்றின புது இலக்கிய வகைகளுக்கு இலக்கணம் கற்பிப்பதும் புலவர்கள் செய்யவேண்டிய மற்றொரு வினையாகும். கட்டுரை சிறுகதை, புனைகதை முதலிய உரைநடை இலக்கியங்களை இலக்கணத்துக்கு உட்படுத்தவேண்டும். அன்றியும், Confession, Tragedy, Comedy, Historical play முதலிய ஆங்கில நூல் வகைகளுக்கும் தமிழில் இலக்கணம் கற்பித்தல் வேண்டும். Biography என்னும் வரலாறு, Autobiography என்னும் தன் வாழ்க்கை வரலாறு முதலிய நீண்ட உரைச் செய்யுள் களுக்கு அமைப்பு நிறுவவேண்டும். Letters என்னும் புதுவகை இலக்கியத்துக்கும் அமைப்பு வகுக்க வேண்டும். மேலும் பற்பல செய்தற்கு உள. அவை யாவும் இடமும் காலமும் நேர்ந்துழிப் பேசுவோம்.

மெய்யன்பர்களே ! இதுகாறும் எம் நெஞ்சில் சிறந்தனவாகப் பட்ட சில கருத்துக்களைப் பற்றி எடுத்துப் பேசினோம். உங்களுக்கு வரவேற்புரை கூறும் வாயிலாகத், தமிழுக்கும் தமிழ்ப் புலவர்களுக்கும், தமிழ் மக்களுக்கும் பொதுவாகத் தமிழ் நாட்டுக்கே வரக்கூடிய ஒரு நற்காலத்துக்கு வரவேற்புக் கூறி, எல்லாம் வல்ல இறைவன் நம் முயற்சிகளை வெற்றியுறச் செய்யுமாறு அவன் பொன்னடிகளை வழுத்தி எம் உரையை முடித்துக்கொள்ளுகிறோம்.

வாழ்க தமிழ் மொழி
வாழ்க தமிழ்ப் புலவர்
வாழ்க தமிழ் மக்கள்
வாழ்க தமிழ் நாடே.

Koviloor Digital Library

# நல்ல எண்ணம்*

" T. செங்கல்வராய பிள்ளை, B.A., L.T. "

சண்டை சச்சரவுகளை நாம் ஒழிக்காவிட்டால், சண்டை சச்சரவுகள் நம்மை ஒழித்துவிடும். சண்டை சச்சரவுகளை நீக்கி அமைதியாக வாழவேண்டுமானால், பொது மக்களிடத்தில் நல்ல எண்ணம் பிறக்கவேண்டும். நல்ல எண்ணத்தோடு ஒரு காரியத்தைச் செய்தால், அதில் எவ்வகை இடர்ப்பாடும் இராது. செம்மனம் உடையவர்கள் நன்மை செய்வதில், எவ்வித இடையூறுகள் தோன்றினும் அவைகளை எளிதில் போக்க வழி கண்டு பிடிப்பார்கள். இந்த உண்மையை நமது வாழ்கையில் எல்லாத் துறைகளிலும் காணலாம். சமூக வாழ்க்கையிலும், வியாபாரத்திலும், அரசியலிலும், சமயங்களைப் பின்பற்றுவதிலும் நல்ல உள்ளம் - களங்கமற்ற எண்ணம் அடிப்படையாக எல்லோரிடத்திலும் இருக்கவேண்டும். நல்ல எண்ணமிருந்தால் எல்லாம் கைகூடும். நாம் ஒவ்வொரு துறையிலும் நல்ல எண்ணத்தை வளர்க்கவேண்டும்.

கல்வித் துறையைக் கவனிப்போம். ஒவ்வொரு நாட்டிலும் பொதுமக்கள் நல்ல உள்ளமும், நல்ல செயலும் உடையவர்களாக இருக்கவேண்டுமானால் அவர்களுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசிரியர்கள் செம்மனம் உடையவர்களாக இருக்கவேண்டும். உலகத்தில் சமாதானமும், அமைதியும் நிலைத்திருப்பதற்குக் கல்வி மிகவும் அவசியம். ஆகவே கல்வி புகட்டுபவர்கள் தங்களுடைய உயர்ந்த பொறுப்பை உணர்தல் வேண்டும். இன்று மாணவர்களாக இருப்பவர்களே வருங்காலத்தில் நாட்டின் பொறுப்பேற்று நடத்துங் குடிகளாவார்கள். வருங்கால நாட்டுத் தலைவர்கள் நல் எண்ணம் உடையவர்களாக இருக்கவேண்டுமானால் ஆசிரியர்கள் நல்ல எண்ணமும் நல்ல செயலும் உடையவர்களாக இருக்கவேண்டும். மற்றவரைத் தம்மைப்போல் நினைத்து நேசிக்கும் மனப்பான்மை நல்ல எண்ணமுடையவர்களுக்கே உண்டு. இவ்வகை மனப்பான்

---

* சென்னை ஒலிபெருக்கு நிலயத்தார் இசைவின்படி வெளியிடப்படுகின்றது.

Koviloor Digital Library



மையைக் கலாசாலை ஆசிரியர்கள் மக்களுக்கு இளம் பருவத்தில் உண்டாக்காவிட்டால், இப் பிள்ளைகளின் வாழ்க்கையில் நல்ல எண்ணம், இனிய சொற்கள், நல்ல செயல்கள் ஆகியவைகளை நாம் பெரும்பாலுங் காணமுடியாது.

அதனால், அவர்கள் வாழ்க்கையில் பலவகையான சச்சரவுகளும் பிணக்குகளும் ஏற்படுகின்றன. பிணக்குகள் அதிகமாவதனால் அவர்கள் தங்களுக்கும் பிறர்க்கும் நன்மை தருகின்ற ஆக்க வேலைகளை விட்டு, அழிவு வேலைகளைச் செய்யத் தொடங்குகின்றனர். அவர்கள் சமூகம் முன்னேற வழி தெரியாது பின்னணியிலேயே தங்கிவிடுகின்றது. இயற்கையை ஊன்றி நோக்கினால் நாம் எவ்வளவோ வேற்றுமைகளைக் காணலாம். ஆனால் நாம் இயற்கையிலுள்ள ஒற்றுமையைத் தானே கண்டு களிக்கிறோம். இயற்கையில் அழகும் இன்பமும் பொருந்திய ஒற்றுமைக் காட்சியைப் புலவர்கள் பார்த்துப் பார்த்து எவ்வளவு இனிமையாகப் பாடியுள்ளார்கள். இயற்கையின் மத்தியில் வாழ்கின்ற மனிதர்கள் மாத்திரம் ஏன் வேற்றுமைகளைப் பாராட்டவேண்டும்? அதனால் சச்சரவுகளும் பிணக்குகளுும் மேலிட்டு வருத்தப்படுவதேன்? ஒரு வகுப்பிற்கும் மற்றொரு வகுப்பிற்கும் சில வேற்றுமைகள் இருப்பினும் நல்ல எண்ணமுடையவர்களுக்கு வேற்றுமைகள் தோன்றா. அவர்கள் ஒற்றுமையை வளர்ப்பதற்குத்தான் முயற்சி செய்வார்கள்.

ஒரு நாட்டில் மட்டும் நல்லெண்ணம் இருந்தால் போதாது. எல்லா நாடுகளிலும் தூய்மையான சிந்தை வளர வேண்டும். இக்காலத்தில் எந்த நாடும் மற்ற நாடுகளுடன் சம்பந்தமில்லாமல் தனித்து வாழமுடியாது. வியாபாரம், அரசியல், மதம் முதலிய விஷயங்களில் பல நாடுகள் ஒன்றோடொன்று சம்பந்தமுடையனவாக இருக்கின்றன. இவ்விதத் தொடர்புடைய நாடுகளுக்குப் பரஸ்பரம் நல்ல எண்ணம் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவைகளுக்குள் போட்டி மிகுந்து போர் மூண்டுவிடும்.

நாம் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெறட்டும் என்ற பரந்த நல் எண்ணம் எல்லாரிடத்தும் இருந்தால் முதலாளி

Koviloor Digital Library



களுக்கும் தொழிலாளிகளுக்கும் அடிக்கடி மனக்கசப்பு ஏற்படுமா? வேலை நிறுத்தக் குழப்பங்களும் அவைகளுக்காகத் தண்டனைகளும் உண்டாகுமா? ஏற்றுமதி இறக்குமதிக்குரிய மூலப் பொருள்கள் அதிகமாக உடைய நாடுகளுக்குள் கொடிய போர் விளையுமா? இப்போர்களினால், கோவிலில் கடவுளைத் தொழும் பக்தர்களும், பரோபகாரச் சிந்தையுடைய செஞ்சிலுவைத் தொண்டர்களும், குழந்தையைப் பெறுவதற்கு ஆஸ்பத்திரிக்குச் சென்றுள்ள ஒரு பாவமும் அறியாத பெண்களும், பள்ளிக்கூடத்தில் கல்வி பயிலச் சென்ற இளஞ்சிறுவர்களும் குண்டுமாரிக்கு இரையாவதைக் கேட்க எவ்வளவு வருத்தமாக இருக்கிறது.

பல்லாயிர வருஷங்களாகப் போற்றப்பட்டுவந்த கலைகளும், சிற்பங்களும், நாகரிகத்துக்கு இடமான நகரங்களும் அழிவதேன்? இவைகளுக்கெல்லாம் போட்டியும் பொறாமையுமல்லவா காரணம்!

ஈரமில்லாத கல்நெஞ்சர்கள் வசத்தில் நாடுகளில் அரசாட்சி அகப்படுமானால் இவ்வளவு இழிவான முறையிலே தானே அழிவு வேலையைச் செய்வார்கள். உலகத்திலே அமைதியை உண்டுபண்ணி நாகரிகத்தைப் பரப்புவதற்காகப் போர் தொடுத்தோம் என்றுகூட இந்த அழிவு வேலைக்காரர்கள் சொல்லுவார்கள். இது பரிகசிக்கத் தக்கதன்றோ? அழிவு வேலையைச் செய்யும் சர்வாதிகாரிகள் உள்ளத்தில் கடவுளே நல்லெண்ணத்தைப் புகட்டவேண்டும்.

அரசியல் நிபுணர்கள் உலகத்திலே சமாதானத்தை நிலைப்படுத்த எவ்வளவோ பாடுபட்டும் அவர்கள் முயற்சி முழுமையும் கைகூடவில்லை. நல் எண்ணம் எல்லோரிடத்திலும் இல்லாமையால் தானே அவர்கள் முயற்சி பலிக்கவில்லை. 1914-ஆம் ஆண்டில் தொடங்கி நடந்த கொடிய உலகயுத்தம் முடிவடைந்தபோது, அமெரிக்கா ஐக்கிய நாடுகளின் தலைவர் உட்ரோ வில்ஸன் மிக உயர்ந்த நோக்கங்களோடு சர்வ தேச சங்கத்தை ஸ்தாபித்தார். 'இவ்வுலகத்தில் போர் தலைகாட்டாது மறைந்துபோம். தனி நாடுகளின் உரிமைகள் பாது

Koviloor Digital Library



காக்கப்படும். சிறு நாடுகளின் எல்லைகள் நிலைத்து நிற்கும். ஒரு நாடு மற்றொரு நாட்டின்மேல் அக்கிரமமாகப் படையெடுத்துச் செல்ல இயலாது. படுகளமும் இரத்த வெள்ளமும் பார்ப்பதற்கு அரிதாகும்' என்று எண்ணி மகிழ்ந்தோம்.

ஆனால் இப்போது நாம் காண்பதென்ன? நேற்று இருந்தவன் இன்று இல்லை என்னும் பெருமையுடையது இவ்வுலகம் என்றார் திருவள்ளுவர். இவ்வுண்மையை இக்காலத்தில் பிரத்யக்ஷமாகக் காண்கிறோம். நேற்று இருந்த நாடு இன்று இல்லை என்னும் பெருமையைத்தான் இப்பொழுது பார்க்கிறோம்; வல்லான் வகுத்ததே வாய்க்காலாக இருக்கிறது. வாக்குறுதிகள், கட்டுப்பாடுகள், யுத்த தர்மங்கள் எல்லாம் காற்றில் பறக்கின்றன. நாகரிகம் நசித்துப் போகிறது. காட்டுமிராண்டித் தன்மை தாண்டவம் ஆடுகிறது. சர்வாதிகாரிகளது ஆட்சியின் கீழுள்ள வலிய நாடுகள் எளிய நாடுகளைச் சின்னபின்னமாக்கிப் பாழ்படுத்துகின்றன.

அரசாங்க ஆதிக்கம் பெற்றுள்ளவர்கள் எல்லோரிடத்திலும் நல்ல உள்ளம் இல்லை. அதனாலேயே சமாதானமும் அமைதியும் நீங்கி மறுபடியும் போர் தொடங்கிவிட்டது. நல்ல எண்ணம் சில நாடுகளிடத்திலாவது இருந்ததால் மட்டுமே சர்வதேச சங்கம் சில துறைகளிலாவது உருப்படியான வேலைகளைச் செய்ய முடிந்தது. கிரீஸுக்கும் பல்கேரியாவுக்கும் நடக்கவிருந்த சண்டை நின்றது. முன்பு நடந்த மகா யுத்தத்தினால் ஒன்று மற்ற நாடுகளாகப் போன ஆஸ்திரியாவும் ஹங்கேரியும் நல்ல நிலைமைக்குக் கொண்டுவரப்பட்டன. ஆனால் சில நாடுகள் நல்ல உள்ளமில்லாமையால் சங்கத்தோடு ஒத்துழைக்கவில்லை. எனவே சமாதானமும் அமைதியும் உலகில் நிலைகுலைந்தன. ஜெர்மனி, ஜப்பான், இத்தாலி ஆகிய நாடுகள் நல்ல எண்ணத்தோடு சர்வதேச சங்கத்துடன் ஒத்துழைத்திருந்தால் எவ்வளவு நன்மைகள் விளைந்திருக்கும். நல்ல எண்ணம் அற்றதனால் ஆயுதப்பரிகரணம் நிறைவேறவில்லை. கெட்ட எண்ணமுடைய நாடுகள் இரகசியமாகப் போர்க்கருவிகளைப் பெருக்கிக்கொண்டே போயின. அதனால் மீண்டும் போர் தலைகாட்டலாயிற்று.

Koviloor Digital Library



பிரிட்டன் தன்னைப்போலவே பிறநாடுகள் எல்லாம் நல்ல எண்ணமுடையவை என்று நம்பிற்று. போர்க்கருவிகளையும் படைகளையும் ஆயுதப்பரிகரண மாநாடுகளின் தீர்மானங்களுக்கு இணங்க அதிகமாகக் குறைத்துக்கொண்டது. வியாபார உரிமை, பிறநாடுகளில் ஆதிக்கம் செலுத்துதல் முதலிய விஷயங்களில் ஜெர்மனி, இத்தாலி, ருஷியா, ஜப்பான் முதலிய நாடுகளுக்கு நேச தேசங்கள் எவ்வளவோ சலுகை காட்டி வந்துள்ளன. நேச நாடுகள் நல் எண்ணத்தினால் எவ்வளவோ விட்டுக்கொடுத்திருக்கின்றன. ஆனால் எல்லா நாடுகளிடத்திலும் பரஸ்பரம் இந்த நல்ல எண்ணம் இல்லை. எனவே நல்லெண்ணத்தை வளர்ப்பதிலே எல்லோரும் ஈடுபட்டால் நல்லது.

உலகத்தில் எல்லா நாடுகளிலும் உள்ள மக்கள் தமது உள்ளத்திலுள்ள அழுக்கைப் போக்கிச் செம்மை உடையவர்களாக ஆகவேண்டும். எல்லோரும் நெறியைப் பின்பற்றினால் அமைதி உண்டாகும். சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்தில் கவியரசாக இருந்த ஆல்ப்ரேட் டேனிசன், 'சர்வ ஜன பார்லிமெண்டும், 'சர்வதேச ஐக்யமும் பிற்காலத்தில் ஏற்படும்' என்று சுட்டிக் காட்டிய காட்சி வெறுங்கனவாக நில்லாது அநுபவத்திலும் வரவேண்டும். இப்போது இந்திய நாட்டில் உலகு புகழ் கவியாக விளங்கும் இரவீந்திரநாத தாகூர் நிறுவியுள்ள விஸ்வ பாரதிபோல் உலகெங்கும் அன்புமயமான விஸ்வபாரதி நிலையங்கள் தோன்றி நல்லெண்ணத்தையும் ஒருமைப்பாட்டையும் சமாதானத்தையும் பெருக்கவேண்டும்.

இனி வருங்காலத்தில் எல்லோருக்கும் திருப்தியை உண்டாக்கும் வகையில் நல்லெண்ணத்தோடு ஒவ்வொரு நாட்டின் எல்லைகளும் நிர்ணயிக்கப்படவேண்டும். வியாபாரத் துறை முதலியவற்றிலுள்ள சிக்கல்களையும் ஞாயமான வழியில் தீர்த்துவிட்டு நாடுகள் ஒழுங்கான முறைகளைப் பின்பற்றச் செய்துவிட்டால், பொறாமையும் போட்டியும் அடங்கிவிடும். அப்பொழுது எல்லா நாடுகளும் சர்வதேச சங்கத்தில் சேர வழி உண்டாக்கி அச் சங்கம் புத்துயிர் பெற்று விளங்கும்! நல்ல எண்ணத்தோடு எல்லா நாடுகளும் ஒன்றாய்ச் சேர்ந்தால்

Koviloor Digital Library



கெட்ட எண்ணத்தோடு கேடு விளைக்க முன்வரும் நாட்டை அடக்குவதற்குச் சர்வதேசச் சமாதானப்படை ஒன்று எளிதில் திரட்டக்கூடும். சர்வ தேச சங்கம் உண்மையில் சமாதானத்தை நிலை நாட்டுங் கருவியாக இருக்கவேண்டுமானுல் ஒவ்வொரு நாடும் அதற்குத் துணையாகச் சில நல்ல காரியங்களைச் செய்தல் அவசியம். தம் நாட்டைப் போற்றியும் பிற நாட்டைத் தூற்றியும் எழுதப்படும் சரிதங்கள் வெளியிடலாகாது. நல் எண்ணத்தையும் சமாதான உணர்ச்சியையும் பரப்பக்கூடிய உலக சரிதங்கள் வெளிவரவேண்டும். அச் சரித்திரத்தை எல்லா நாடுகளிலுமுள்ள மாணவர்கள் படித்தல் நன்று. பிற நாட்டவரிடம் உள்ள நலன்களைக் காண்பதற்கே நாம் முயலவேண்டும். சர்வதேச நல்ல எண்ணம் வளர்வதற்கும் உலகத்தில் மக்கள் ஒருவரையொருவர் நேசிக்கும் மனப்பான்மை உண்டாவதற்கும் ரேடியோ ஓர் ஒப்பற்ற கருவியாகும். கலை, விஞ்ஞான ஆராய்ச்சி, வியாபாரம், அரசியல் நடவடிக்கை அனைத்திலும் சர்வதேச ஐக்கியத்தை நல்லெண்ணத்தின் மூலமாக வளர்க்கலாம். அப்போது நாடுகளுக்குள் சந்தேகங்களும் பொருமையும் போரும் விளையா.

பல நூற்றுண்டுகளுக்குமுன், ஒரு பெருந் தமிழ்ப் புலவர் "யாதும் ஊரே, யாவரும் கேளிர்"; எல்லா நாடுகளும் நாடுகளே. எல்லா மக்களும் நம் உறவினர்களே. இதையறிந்தால் இன்பமுண்டு என்று சொன்னுர். அது இன்று நடைமுறையில் அனைவரும் பின்பற்ற வேண்டிய உண்மையாகும்.

அன்பே சர்வதேசத்திற்கும் சம்மதமான மதம். அன்பே அனைவரும் போற்றும் கடவுள். சாதிப்பிணக்கு, சமயச் சண்டை, நாட்டுக் குழப்பங்கள் அனைத்தையும் போக்குவதற்காக மக்களுக்கு நல்ல உள்ளத்தை அளித்து உலகில் அமைதியைப் பரப்பவேண்டுமென்று அன்பு வடிவமான இறைவனை அல்லும் பகலும் துதிப்போம்.

---

Koviloor Digital Library

# அணுக் கவர்ச்சி

"N. K. வேலன் B.A."

ஏதேனும் ஒரு பொருளை எடுத்து அதனை வகுத்துக் கொண்டே போனால் முடிவில் அது மிகச் சிறியதாகி அணுவின் தன்மையை அடைகின்றது. இதனை ஆங்கிலத்தில் மாலிகியூல் (Molecule) எனக் கூறுவர். அணுக்களை ஒன்ருய்ப் பிணைக்கும் ஆற்றல் உலகிலுள்ள ஒவ்வொரு பொருளிலும் இருக்கின்றது. இதனை அணுக்கவர்ச்சி (Cohesion) எனக் கூறலாம். இக் கவர்ச்சி இல்லையேல் உலகமனைத்தும் அணுவணுவாய்ப் பிரிந்துபோம். நமது உடலும் இப்போதுள்ள வடிவத்தை இழந்து கணக்கற்ற அணுக்களாய்ப் பிரிந்துவிடும்.

ஒரு கருங்கல்லை உடைத்துத் தூளாக்கிவிட்டால் அஃது அணுவணுவாகப் பிரிந்து போகின்றது. அது கல் வடிவமாக இருக்கும் பொழுது காலில் பட்டால் காலில் காயம் ஏற்படுகிறது. ஆனல் தூளாகிய கல் காலை நசுக்குவதில்லை. கல்லாய் இருந்த காலத்தில் அதனுள்ளிருந்த ஆற்றல் தூளாய்ப் போன பின் எங்குச் சென்றது? கல்லின் அணுக்கள் எங்ஙனம் தனித் தனி ஆயினவோ அங்ஙனமே அதனுள்ளிருந்த ஆற்றலும் பிரிந்து ஒவ்வோர் அணுவிலும் தனித்து நிற்கின்றது. அற்ப அணுக்களை ஓர் ஆற்றல் ஒன்று சேர்த்து இறுகப் பிடித்துக் கொள்வதால் கல் மிகவும் உறுதி உடையதாக இருக்கின்றது. இவ் ஆற்றல் கல்லினுள் மறைந்து நிற்கின்றது. பொருள்கள் கட்டியாகவும் நீர் வடிவாகவும் காற்று வடிவாகவும் இருப்பது அவற்றில் உள்ள அணுக்கவர்ச்சி மிகுதியாகவோ குறைவாகவோ இருப்பதனலேதான். கட்டிப் பொருளில் உள்ள அணுக்கள் ஒன்றையொன்று இறுகப் பிடித்துக்கொண்டிருப்பதனல் அதன் வடிவம் எளிதில் மாறிப்போகாமல் ஒன்றுபோல் நிலைத்திருக்கிறது. நீர்ப்பொருள்களில் அணுக்கவர்ச்சி குறைவாய் இருப்பதால் அதன் வடிவம் எளிதில் மாறிவிடுகின்றது. இதனலேதான் தண்ணீரைக் குடத்தில் ஊற்றினல் குடத்தின் வடிவத்தையும் புட்டியில் ஊற்றினல் அப் புட்டியின் வடிவத்தையும் அடைகின்றது. ஆவியாக உள்ள பொருள்களில் அணுக்கள் பிரிந்து நிற்பதால் அவற்றிற்கு வடிவமில்லை.

Koviloor Digital Library



பனிக்கட்டி நீராகவும் நீர் ஆவியாகவும் மாறுவதற்கு வெப்பம் வேண்டும். இஃதேபோல் நீராவி தண்ணீராகவும் தண்ணீர் பனிக்கட்டியாகவும் மாறுவதற்குக் குளிர்ச்சிவேண்டும். பனிக்கட்டியைக் காய்ச்சினால் அதன் அணுக்கவர்ச்சி குறைந்து நீராகின்றது. நீரைக் குளிர்ச்சி செய்தால் அதன் அணுக்கவர்ச்சி மிகுந்து கட்டியாகின்றது. ஆகவே அணுக்களின் கவர்ச்சியை வெப்பத்தினால் குறைக்கலாம், குளிரினால் மிகுதிப் படுத்தலாம். பொருள்களின் வெப்ப தட்ப நிலைமைக்கு ஏற்றவாறு அவற்றின் வடிவங்கள் மாறுபடுகின்றன.

ஒரு பொருளின் அமைப்பு, தோற்றம் முதலிய தன்மைகள் ஒவ்வோரணுவிலும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வோரணுவும் ஒருவகை நடுக்கம் அல்லது அசைவு உடையதாக இருக்கின்றது. ஒரு பொருளுக்கு வெப்பம் ஏற்றினால் அவ்அணுக்களின் அதிர்ச்சி மிகுதிப்படுகின்றது. அணுக்கள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு இருப்பதுபோல் தோன்றினாலும் அவை அசைவதற்கு இடைவெளிகள் இருக்கின்றன. கட்டிப் பொருள்களில் இருப்பதைவிட நீர்ப்பொருள்களில் மிகுந்த இடைவெளிகளும், ஆவிப்பொருள்களில் இன்னும் மிகுதியான இடைவெளிகளும் அமைந்திருக்கின்றன.

சர்க்கரையை அணுவணுவாகப் பிரித்தல் மிக எளிது. சர்க்கரையைத் தண்ணீரில் கரைத்துவிட்டால் அஃது அணுவணுவாய்ப் பிரிந்து நிற்கும். நம் உடம்பின் அணுக்களின் இடையே வியர்வை வெளிப்படுகின்றது. புதிய மட்பாண்டத்தில் உள்ள நீர் வெளிப்புறத்தில் கசிந்து வழிகின்றது. நுண்ணிய அணுக்கள் இடைவெளியுடையன என்பது இதனால் விளங்கும். மை ஒற்றும் தாளில் இடைவெளிகள் மிகுந்திருப்பதனாலேதான் அது மையை உடனே இழுத்துக்கொள்கிறது.

உலகிலுள்ள ஒவ்வோரணுவும் அதனதன் வேலையை ஒழுங்காய்ச் செய்கின்றது. ஒரு தாளில் பென்சிலால் எழுதினாலும், பென்சிலின் அணுக்கள் தாளில் ஒட்டிக்கொள்கின்றன. இவ் அணுக்கள் ஒன்று சேர்ந்து எழுத்துக்களாய்த் தோன்றுகின்றன. நமது கையைத் தண்ணீரில் வைத்தால் தண்ணீர் கையில் ஒட்டிக்கொள்வதும் அணுக்கவர்ச்சியாலேயே ஏற்படு

Koviloor Digital Library



கின்றது. அணுக்கவர்ச்சி இல்லாவிடில் இவ் உலகமும், உலகி லுள்ள பொருள்களும் தம் உருமாறி அணுவணுவாய்ப் போய் விடும். ஒவ்வோரணுவும் ஆண்டவனால் ஆட்டுவிக்கப்படுகின் றது. அணுக்கவர்ச்சியின்றி உலகம் நடைபெறாது. அணு வின் தன்மைகளைப் பற்றித் தமிழ் நூல்களில் பல இடங்களில் குறிப்பிருக்கின்றது. இவ் ஆராய்ச்சி இன்னும் விரிப்பிற் பெருகும்.

---

## நாமகளூசல்

(க) சீர்பூத்த செழுங்கமலச் செல்வி யாரும்
சிறந்தெடுத்துப் பாராட்டும் செவ்வி வாய்ந்தே
பார்பூத்த அண்டங்கள் படைத்தா னாவிற்
பயிலுமொரு பைங்கிளியே பரிந்தெந் நாளு
நார்பூத்த பாவலங்கல் நயக்கும் வண்ணம்
நணுகிமிகச் சூட்டுவார் நலமா ருள்ளம்
நீர்பூத்த நிறைபுலம்போ லாக்கு விப்பீர்
நேயமுடை னமகணீ ராடி ரூசல்.

(உ) அறியாமை யென்னுமிரு ளகல வோட
அடியார்க ணெஞ்சினிலே யமுத மூறக்
குறியாதார் மனக்கோட்டக் கொடுமை தீரக்
குணம்பெருகி நலம்பலவுங் கொண்டுசேர
அறிவாரும் விளக்காகி யலரும் பாவாய்!
ஆரமிர்தே! யன்னமே! யன்னங் கோத்த
மறைமுடிவின் பொருளானீ ராடி ரூசல்
மழலைமொழிப் பசுங்கிளியீ ராடி ரூசல்

சி. து. கன்னிசாமி

---

Koviloor Digital Library

# முல்லை—ஒரு சொற்பொழிவு

"ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, செங்கைமா"
(செங்கம், N. A. Dt.,)

தமிழ் நலம் சான்ற தலைவர் அவர்களே, சான்றோர் பெரு மக்களே, தாய்மார்களே,

இதுகாறும் நாம் தலைவர் அவர்களின் இனிய சொற் பொழிவைக் கேட்டு மகிழ்ந்தோம். குறுந்தொகை யென்னும் சங்க இலக்கியத்தின் நலம் பலவும் இனிமையுறக் கூறி வந்தனர். யானும், இனி, அக் குறுந்தொகையில் உள்ள முல்லைப் பாட்டுக்களைப் பொருளாகக் கொண்டு சொற்பொழிவு செய்ய இருக்கின்றேன்.

தலைமைப் பேருரையில் தலைவன், தலைவி என்ற இரண்டு சொற்கள் அடிக்கடி வழங்கப்பட்டன. தலைவன், தலைவி என்ற இவர்கள் யாவர்? உயர்ந்த குணமும், உயர்ந்த ஒழுக்கமும், உயர்ந்த எண்ணமும், உயர்ந்த சொற்களும், உயர்ந்த செயல் களும் உடைய ஆண்மகன் தலைவன் ஆவான்; அவனோடு எவ் வகையிலும் ஒப்பாகக் கூடிய குணமும் செயலும் ஒழுக்கமு முடைய பெண்மகள் தலைவி ஆவாள். இவ்விருவரும் அன் போடு கூடி இன்புற்று நடத்தும் வாழ்க்கையே பொருள் இலக்கணத்தின் இலக்கியமாகும். இந்த இன்ப வாழ்க்கைக் குரிய ஒழுக்கத்தை விளக்குவதே தமிழ் நூல்களில் காணப் படும் பொருளிலக்கணத்தின் கருத்தாகும்.

உலகில் ஏனை மொழிகட்கு இல்லாத ஒரு சிறப்பு நம் தமிழ்மொழிக்கு உண்டு. ஏனைய யாவும் மக்கள் பேசும் சொற்களுக்கும், அச் சொற்கள் தம்மில் தொடர்ந்து பேசு வோர் கருத்தை வெளிப்படுக்கும் முறைக்கும் இலக்கணம் கூறுகின்றன. நம் தமிழிலக்கணமோ, அவ்வளவில் நில்லாது, மக்கள் நடத்தும் வாழ்க்கைக்கும் ஒரு சீரிய இலக்கணம் காண்பதாயிற்று. இதனையறிந்தே ஏனை நாட்டு அறிஞர் நம் தமிழ் நாட்டின்பாலும், தமிழ் மக்கள்பாலும் பண்டை நாளி லேயே பெருமதிப்புக் கொண்டிருந்தனர். அகத்தியர் தென்

Koviloor Digital Library



ஞட்டிற்கு வந்தபோது, அவர் சிவபெருமான்பால் விடை பெற்றுக்கொண்டார். அப்போது அவர் "நான் ஏகும் தேயம் தொடைபெறு தமிழ்நாடு என்று சொல்லும்; அந்த நாட்டின் இடையில் மனிதரெல்லாம் இன் தமிழ் ஆய்ந்து கேள்வியுடையவர் என்ப; கேட்டார்க்கு உத்தரம் உரைத்தல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார் என்று பதஞ்சலி முனிவர் கூறுகின்றார். ஆகவே, அகத்தியர்க்கும் அச்சம் விளை விக்கும் அறிவுத்திட்பம் பெற்றது நம் தமிழ் என்பதை மறக்க லாகாது.

இப் பொருளிலக்கணம் காட்டும் இன்பவொழுக்கத்தைப் பற்றிப் பாடிய பாட்டுக்கள் அகப்பாட்டுக்கள் என்றும், அகப் பொருட்பாக்கள் என்றும் வழங்கும். இப் பாட்டுக்கள் மக்க ளின் மனவியலை அறிந்து, மனத்தின் உணர்வும், அவ்வுணர்வு உடலை இயக்கும் திறமும் அறிந்து செய்யப்பட்டவையாதலின் இவற்றை ஆராய்பவருக்கு வருத்தமும் மெலிவும் பிறப்பது இயல்பு. ஒரு தலைவன் ஒரு தலைவியைக் கண்டு அவள்பால் தன் நெஞ்சைப் போக்கி மெலிந்துவந்தான்; அவனைக் கண்ட அவன் நண்பன், 'தோழ, உனக்கு ஏன் இவ் வாட்டம்; நீ அன்று பரமன் கூடல் நகரில் இருந்து தமிழாராய்ந்த அகப் பாட்டாராய்ச்சியில் உன் கருத்தைச் செலுத்தினையோ? அன்றி, எழுவகைப்பட்ட இசையில் செலுத்தினையோ? யாது செய்தனை? இவை தவிர உன் அறிவை அலைக்கக்கூடியது வேறு என்ன இருக்கிறது என்பவன்,

> "சிறைவான் புனல்தில்லைச் சிற்றம் பலத்தும்என்
> சிந்தையுள்ளும்
> உறைவான் உயர்மதிற் கூடலின் ஆய்ந்தவொண்
> தீந்தமிழின்
> துறைவாய் நுழைந்தனையோ? அன்றி ஏழிசைச்
> சூழல்புக்கோ?
> இறைவா தடவரைத் தோட்கென்கொ லாம்மெலி
> வெய்தியதே"

என்றதாக நம் மணிவாசகனுர் பாடுகின்றார். மேலும், அகப் பாட்டு, ஏழ் இசை என்ற இரண்டினும், ஆராய்வார் அறிவை

Koviloor Digital Library



அலைப்பதில், அகத்துறைப்பாட்டே மேம்பட்டது என்பதைக் காட்ட, "தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையோ" என்பதை முதலிலும், "ஏழிசைச் சூழலே" அதன் பின்னரும் வைத்துக் கூறியிருக்கின்றார். இத்துணை ஏற்றமுடைய அகப் பாட்டுக்களின் தொகுதியே இக் குறுந்தொகை முதலிய தொகை நூல்கள் என்பனவாகும்.

இக் குறுந்தொகையில் குறிஞ்சி முதலாக ஐவகைத் திணைச் செய்யுட்கள் இருக்கின்றன என்றும், அவற்றின் பொருள் நலம் இத்தகையது என்றும் தலைவரவர்கள் நன்கு காட்டிட, நாம் அனைவரும் கண்டு மிக்க மகிழ்ச்சியுற்றோம்.

இனி, அக் குறுந்தொகையின் முல்லைப்பாட்டுக்களைப்பற்றி ஒரு சிறிது கூற நினைக்கின்றேன். உயர்ந்த எண்ணமும், உயர்ந்த சொல்லும், உயர்ந்த செயலும் உடைய ஆண்மகனொருவன், அத்தகைய பெண்மகளை விரும்பியொழுகுகின்றான். அவன் வினைகுறித்தோ, பொருள்குறித்தோ தலைவியைவிட்டுப் பிரிந்தேகுகின்றான். அவன் பிரிந்து சென்று தான் குறித்த கருத்து முடியுமளவும் தன் காதலியின் பிரிவைப் பொறுத்திருந்து, அது முடிந்தபின் மீள்கின்றான். இவ்வாறு அவன் பிரிவாற்றியிருப்பது முல்லை எனப்படும்; அவனைப்போல, அவளும், அவன் பிரிந்த வழி, பிரிவுத் துயரைப் பொறுத்து, அவன் வற்புறுத்திவிட்டுச் சென்ற சொற்களைத் தெரிந்து தேறி, அவள் மனைக்கண்ணே இருந்து தனக்குரிய அறங்களைச் செய்தொழுகுவது முல்லையெனப்படும். இதுவே முல்லையென்பதன் முடிந்த கருத்தாகும்.

தலைமகள் தலைவியோடு கூடியிருக்கும்போது, இருவர் மனத்தும் நிகழ்ந்த ஒத்த காதலால், இருக்கும் நாள் ஒவ்வொன்றும் இன்பநாள் என்றும் வாழ்நாள் என்றும் கருதுகின்றான். இன்ப நுகர்ச்சியுள்ள நாளே வாழ்நாள்; அஃது இல்லாத நாள் வீழ்நாள் என்று எண்ணுகின்றான்.

"விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிதுபெறு சிறப்பின் புத்தேள் நாடும்
இரண்டும் தூக்கின் சீர்சா லாவே......
மாண்வரி யல்குற் குறுமகள்
தோள்மாறு படூஉம் வைகலொ டெமக்கே"

Koviloor Digital Library



என்று வாய்விட்டும் கூறுகின்றான். இதனால், அவனது உள்ளம் காதல்வயப் பட்டு, அதன் வழி எய்தும் இன்பத்தில் எத்துணை மிகுதியாக ஆழ்ந்திருக்கின்ற தென்பது தெரியும். இன்ன இயல்புடையோன் ஏதோ வினையோ பொருளோ கருதிப் பிரிகின்றான் என்றால், அப் பிரிவு எத்துணை வன்மையுடைதாக இருக்கும். அதற்கு—அப் பிரிவிற்கு, காதலின்பத்தை நீக்கி வைக்கும் பிரிவிற்கு—அவ் வன்மை எங்கிருந்து வந்தது? "வினையே ஆடவர்க்கு உயிர்" "நாளும் நாளும் ஆள்வினை மழுங்க, இல்லிருந்து மகிழ்வோர்க்கு இல்லையால் புகழ்" "அறங்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும் பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும், பொருளினாகும்" என்ற எண்ணங்கள் எழுந்து அத் தலைமகனது ஆண்மைப் பண்பை எழுப்புகின்றன. உயர் குணமும் செய்கையும் படைத்த உரவோனாதலால் இவ்வாண்மகன் தானே தலைமகனாயினான். ஆதலால், அவனது உள்ளத்தே ஆள்வினையும் காதலும் பூசலிடுகின்றன. உண்மைத் தமிழ்த் தலைமகனுக்குக் காதலினும் ஆள்வினையே மாண்பு தருவது. அதனால், ஆள்வினை மேம்படுகிறது; காதல் தாழ்கிறது. அவனும் பிரிந்து ஏகுகின்றான். எடுத்த வினையையோ பொருளையோ முடித்துக் கொள்ளுகின்றான். அதன் முடிவில் இன்பம் தோன்றுகிறது. அவ்வின்பம் அவளது காதலியை நினைப்பிக்கின்றது. அவளை "உள்ளிய வினை முடித்தன்ன இனியோள்" என்று மன மகிழ்ந்து வியக்கின்றான். வினை செய்யுமிடத்து அவனது உள்ளம் அவளை நினையாதோ? காதல் பெருவலியுடையதாயிற்றே என்ற ஐயமெழும். கடலன்ன காதல் எழினும், அதனை அடக்கி எடுத்த வினையை முடிப்பதே தலைமைக் குணமாதலால், அவன்பால் அதன் வேகம் செல்லுவதில்லை. வினைசெய்யுமிடத்து அவளை நினைந்து கூறல் ஆண்மையன்று என்பதற்காகவே ஆசிரியர் தோல்காப்பியனார் இங்கே ஓர் அணை வகுக்கின்றார். வினைமேற் சென்ற ஆண்மைகள் அது முடியுங்காறும் தன் காதலியின் காதலின்பத்தை நினைந்து கலுழ்தல் கூடாது; வினைமுற்றி வென்றியெய்தும்போது அது மிக்குத் தோன்றுதல் சிறப்பென்கிறார். "கிழவி நிலையே வினையிடத் துரையார் வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" என்கின்றார்.

Koviloor Digital Library



வினைமுடிவில் தோன்றிய இன்பத்தால் தலைவியை நினைந்து மீண்டுவரும் தலைவன் அவளைப் பிரிந்திருந்த நாட்களையும், பிரியாது வாழ்ந்த நாட்களையும் எண்ணுகின்றான். "எல்லாம் எவனோ பதடிவைகல்" எனப் பிரிந்திருந்த நாட்களைப் பதடிவைகல் என்கின்றான். இன்பவுள்ளீடு இல்லாத நாள் என்பது கருத்து. வினைமேற் செல்லும்போது மடங்கியிருந்த அவனது காதல், அது முடித்து மீளும்போது அளவுகடந்து எழுந்து அவனது உள்ளத்தை விதுப்புகின்றது. நெஞ்சம் துடிக்கின்றது. அது இக் குறுந்தொகைக்கண் மிக அழகாகக் கூறப்பட்டுளது. உழவன் ஒருவனுக்குப் பரந்த நிலம் இருக்கிறது; ஆனால் அவன்பால் ஒரே ஏர்தான் உண்டு. நிலத்து ஈரமும் பக்குவமாக இருக்கிறது; உழுகின்றான். உழுது முடிவதற்குள் ஈரம் செவ்வி கெட்டுப் புலர்ந்துவிடும்போல் இருக்கிறது. உழவேண்டிய பகுதியோ பரந்து கிடக்கின்றது; அந்நிலையில் அவன் உள்ளம் என்ன பாடுபடும்! வினை முடித்து வரும் தலைவன் தன் மனை நோக்கி வருகின்றான்; குறித்த காலமும் வந்துவிட்டது; போகவேண்டிய வழியோ நீண்டிருக்கிறது; காலத்தில் சென்று சேர்வதற்கு அவன் உள்ளம் துடிக்கிறது; குறித்தகாலம் தவறின் தன் காதலி என்னுவாளோ என்ற எண்ணம் அவன் மனத்தைக் கலக்குகின்றது. என்ன செய்வான்!

"ஆடமை புரையும் வனப்பின் பணைத்தோள்
பேரமர்க் கண்ணி இருந்த வூரே
நெடுஞ்சேண் ஆரிடை யதுவே நெஞ்சே,
ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்து
ஓரேர் உழவன் போலப்
பெருவிதுப் புற்றன்றால் நோகோ யானே"

என்று பாடுகின்றான்.

இனித் தலைமகள் என்பவள் உயர்ந்த குணமும் உயர்ந்த செய்கையுமுடையவள். அவளும் காதல் வயப்பட்டுக் கருத்தறியும் பான்மையளே. அவள் அவன் பிரிவாற்றாது மெலிந்து பொலிவிழந்து நிற்பதும், அவள் குறித்த காலம் நோக்கியிருப்பதும், இதற்கு இடையே தனக்குரிய இல்லறம் நன்கு ஆற்று

Koviloor Digital Library



வதும் அவளுடைய தலைமைப் பண்புகளாகும். அவன்பால் உண்டான காதலால் அவனைப் பிரிவது என்பது அவட்கு உயிரிழப்பது போல்வதாகும். மேன்மையே உருக்கொண்டது போல்பவள். தன் அறத்துக்கோ புகழ்க்கோ, கற்புக்கோ சிறு கேடு தோன்றக் கூடிய சொல்லோ செயலோ தோன்று மாயின் உடனே உயிர் விட்டுவிடக்கூடிய அத்துணை மென்மை யுடையவள்; காதலனோடு கூடியுறையுங்கால் "பூவிடைப்படி னும் யாண்டு கழிந்தன்ன" புலம்புகொண்டு மெலியும் மென் மையுடையள்; அருளின் உருவே அவளது உள்ளம். இப் பண்பு குறித்தே இவளை "மெல்லியல்" என மேலோரும் கூறு கின்றனர்.

இத்துணை மென்மையுடையளாயினும், இவள் மனத்தே கற்பென்னும் கலங்கா நிலைமை, திண்மை, உண்டு. காதலன் பால் அவளுக்குற்ற நம்பிக்கையை எவராலும் எவ்வாற்றாலும் அசைக்க முடியாது. உலகமே தலைகீழாக மாறினும், தன் காதலன் சொன்னதே அவட்கு உறுதியாகும். தலைவன் பிரி கின்ற காலத்தில் குறித்துச் சென்ற பருவம் வருகிறது. அத னைத் தோழி காண்கின்றாள்; இது தலைவன் குறித்த பருவம்; அவனோ இன்னும் வந்திலன்; இம்மெல்லியல் நல்லாள் என்னா வாளோ என்று கலங்குகின்றாள். இதனைத் தலைவி அறிந்து கொள்கின்றாள்; அவள் தோழியை நோக்கி, "தோழி, நீ கவ லற்க. புதுப்பூங் கொன்றைக்கானம், கார் எனக் கூறினும், யானோ தேறேன்; அவர் பொய் வழங்கலர்" என்று கூறித் தோழியை ஆற்றுவிக்கின்றாள்.

மேலும், தலைவி தான் தலைமகனோடு கூடிச் செய்யும் இல் லறம் வெறும் காதலின்ப நுகர்ச்சி யொன்றையே கருதியது என்னுங் கருத்து அவட்குக் கிடையாது. தலைவன்பால் அவள் எவ்வளவு காதல் மிக்கிருப்பினும், அவள், அவன் தன் ஆண்மை குன்றாதிருக்கும் நெறி எதுவோ அதனையே நினைந்த வண்ண மிருப்பள். ஆண்மைக்கு மாசும், மானத்துக்குக் கேடும் தரு வனவற்றை மனத்தால் நினைத்தற்கும் அவள் கூசுவள். குறித்த பருவம் வரக் கண்ட அவள் ஒருநாள் மெலிந்து நின்றாள். அதனை அறிந்த தோழி வருத்தமுற்றாள். அப்போது, அத்

Koviloor Digital Library



தலைவி, "தோழி, யான் அவர் குறித்த பருவம் வரக்கண்டு வருந்துகின்றேனில்லை. இப் பருவம் தனித்திருப்போரை வருத்தும் இயல்புடையது; இங்கே இது என்னை வருத்துவதுபோல அங்கே அவரையும் வருத்துமன்றோ! அதுபோது அவர் தாம் மேற்கொண்ட வினையில் சோர்வுபட்டு ஆண்மை குன்றுவரோ? வினை முடியாது பழி தந்துவிடுமோ என்றெல்லாம் எண்ணி என் மனம் கலங்குகிறது; வேறே ஆற்றாமையன்று என்கின்றாள்;

> "பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து
> அரும்பே முன்னும் மிகச்சிவந் தனவே,
> யானே மருள்வேன் தோழி பானாள்
> இன்னும் தமியர் கேட்பின்
> என்னாகுவர்கொல் பிரிந்திசி னோரே"

என்று கூறுகின்றாள். வினைமுடியாது ஆண்மை மழுங்கிக் காதற்கு அடிமையாகி விடுவரோ என்று வெளிப்படக் கூறாமல், "என்னாகுவர் கொல்" என்றும், "யானே மருள்வேன்" என்றும் கூறும் திறத்தைக் காண்மின்! தலைமைக்குணமும் தலைமைச் செய்கையுமுடைய் தலைவிக்குத் தோழமைகொண்ட நங்கையொருத்தி உளள்; அவளைத் தோழி என்றே கூறுவர். அறிவே அவளது வடிவு; அன்பே அவளது உள்ளம்; அறமே அவளது செய்கை. "இடித்து வரைநிறுத்தல்" அறிவுடையோரது செயல் என ஆசிரியர் தொல்காப்பியனார் வகுத்தாராயினும்,

> "உறுகண் ஓம்பல் தன்இயல் பாகலின்,
> உரிய தாகும் தோழிகண் உரனே"

எனத் தோழிக்கும் அச் செயல், பணிந்த வாய்பாட்டால் உரித்தாகுமாறு மொழிந்திருக்கின்றார். அதனால் அவள் ஒழுகும் திறம் மிக்க ஒட்பமுடையதாகவுளது.

புதுமணம் புணர்ந்த தலைமகன் தலைமகளோடு கூடியிருக்கும்போதே வேட்கை மீதூர்ந்து புணர்ச்சி விதும்புகின்றான். அதனை அந்நெறியே விடின் அது கழிகாமமாய் ஆண்மைக்கும்

Koviloor Digital Library



இற்சிறப்புக்கும் மாசு தரும் என்று அஞ்சுகின்றாள் தோழி. உடனே அவள், அவனை நெருங்கி, "ஐயனே, நல்ல இனிய நீர் நிரம்பிய குளத்தில் ஆம்பல் மலர்ந்துளது; அதனை ஒருவன் பறிக்கச் செல்கின்றான். மார்பளவு தண்ணீரில் நின்று பறிக்கின்றான். அப்போது எனக்குத் தண்ணீர் தாகமாய் இருக்கிறது; தண்ணீர் கொண்டுவாவெனக் கரைமேல் இருப்பவர்க்கு அவன் சொன்னால், அது எப்படியிருக்கும்? அது போலன்றோ இருக்கிறது தங்கள் செயல்" என அவன் வேட்கை வேகத்தைத் தணிக்கின்றாள்.

> "அயிரை பரந்த அந்தண் பழனத்து
> ஏந்தெழில் மலரத் தூம்புடைத் திரள்கால்
> ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்குஇவள்
> இடைமுலைக் கிடந்தும் நடுங்க லானீர்"

என்று கூறி, களவுக்காலத்தே எளிதிற் கூடலாகாதபடி நாங்கள் இருந்த காலத்தில் எழுந்த வேட்கையைப் பொறுத்துக் கொண்டிருந்த உமக்கு இதுபோது அவ் வன்மை கழிந்து போயிற்றோ? என் நெஞ்சு வருந்துகின்றதே என்பாள், "யாம் நமக்கு அரியமாகிய காலைப் பெரிய நோன்றனிர், நோகோ யானே" என்கின்றாள். இவ்வண்ணமே இவளது அறிவின் பெருமையும், அன்பின் அகலமும், அறத்தின் சிறப்பும் இத்தொகை நூல்கள் விரியக் கூறுகின்றன. ஈண்டு விரிக்கிற் பெருகும்.

இனிச் செவிலியென்பாள் ஒருத்தியுண்டு. அவள் இத்தோழியின் தாயாவாள். தலைவியின் தாய்க்குத் தோழியுமாவாள். அவளும் தலைமக்களது வாழ்வு செம்மை பெறுவதற்குவேண்டும் செயல் பலவும் செய்பவள். அவள் ஒருகால் தலைவியின் இல்வாழ்க்கையைக் காண வருகின்றாள். அச் சமயத்தில் தலைவி தயிர்க்குழம்பு வைத்துத் தன் கணவனுக்கு இடுகின்றாள். அவன் "இனிது" என உண்கின்றான். அது கண்ட தலைவி பெருமகிழ் கொண்டு நாணத்தால் அதனை மறைக்கின்றாள். அதனைக் கண்டு உவந்த செவிலி, தலைவியைப் பயந்த தாயிடம் சென்று உரைக்கின்றாள் :

Koviloor Digital Library



"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"

என்று சொல்லி மகிழ்கின்றாள்.

இவ்வாறு பண்டை நன்மக்களின் வாழ்க்கைப் பண்புகளை ஓவியம்போற் காட்டும் இச் சங்க இலக்கியங்களை ஆராய்ந்து மாநாடு கூட்டி மகிழ்ந்து சிறக்கும் இக் கூட்டத்தில் என்னையும் கலந்துகொள்ளச்செய்து சிறப்பிக்கும் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர்க்கும், இதுகாறும் யான் கூறியவற்றை அமைதியோடு கேட்டிருந்து சிறப்பித்த உங்கட்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொண்டு என் சொற்பொழிவை இதனோடு நிறுத்திக்கொள்ளுகின்றேன்.

"வாழி பகலோன் வளரொளிசேர் ஞாலமெலாம்
ஆழி செலுத்தும் அரசர்பிரான்—வாழியரோ
நங்கள் கரந்தைத் தமிழ்ச்சங்கம் நாளும்
அங்கம் தழைக்க அமைந்து."

—

Koviloor Digital Library

# பந்தடிமேடையும், வாதமடக்கியும்

"புலவர் பாண்டியனார்"

பாளையங்கோட்டை, பாளையக்காரர் காலப் பழநகர். அதன் பெயரே இதனையுணர்த்தும். பழமை யொழிந்தது; புதுமை புகுந்தது. பழைய கோட்டை வீடுகள், புதிய துரைத்தன விடுதிகள். இதுதான் "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையி னானே" என்னும் நன்னூல் இலக்கணத்துக்குப் பின்னால் இலக்கியம் போலும்! கோட்டைகள் அழிந்தன; கோயில்கள் மலிந்தன; கலைமகள் ஆலயம் கவினுறச் சிறந்தன. அனையவற்றுள் புனித சேவியர் கழகம் அவட்குப் புனைதொழில் அரணம். இது தென் கோட்டை மதிலின் நன்காட் டமைந்தது.

இற்றைய பல்கலைக்கூடம் வடமேற்கு மூலையும், உயர்நிலைப் பள்ளித் தென்மேற்கு முடங்கியும் கூடாவண்ணம் ஓடா நிற்கும் உயர்நிலைப் பெரு வீதியொடு (High ground road) ஒருங்கே பொருந்த மருங்கே கிடக்கு மங்காளம்மன் கோயிற் செவ்வழி சேர எழுந்த சீரகம்—கொடைக்கையன் கரையாள னும் கலைக்கையன் தாமசும் கலந்தெடுத்த—நூலகந்தான் பழைய பந்தடி மேடைமேல் வந்தடை புத்தகம்.

பந்தடி மேடையைப் பாளையப்பட்டார் பாவையர் பந்தடி மேடையாய்ப் பகர்வர். மேற்கில் கூப்பிடு தொலையில் எட்டுப் பட்டை தட்டிக் கட்டிய திட்டு ஒன்று காவல் மரம்போலும் மஞ்சணத்தி பொலியத் தோன்றல் இன்றுங் காணலாம் இவற்றிற்கிடையே பரந்ததுதான் இற்றைய களிவனம். இதன் மருங்கே வீரக்கல் போலும் எழுத்துக் கற்கள் மழை யால் கிளம்ப, மாடு கட்டுவதற்கு மாக்கள் எடுத்துச் செல் வதைக் முழுமக்கள் முழுவிழியால் மகிழ்வதை யான் கடை விழியாற் கலுழ்ந்ததுண்டு. புது நாகரிகத்தில் பொதுவீதி யெங் குங் கழிகால் மருங்கில் கவிழ்ந்தும் மலர்ந்துங் காணும் எழுத் துக் கற்கள் நம் பற்றை நோக்கி நாணியுங் கோணியும் வெட்கி யும் எள்ளியும் நகுவதை மானும். பள்ளிவாய்ப் படிமுதல்

Koviloor Digital Library



கொள்ளிவாய் வெள்ளாவி யடுப்புவரை இக் கற்களே. இதுவே நமது புதிய வீர வாழ்வைப் பொறுக்கெனக் காட்டும்.

இத் தொற்று நோய் பந்தடி மேடையையும் பற்றியது. மேனுட்டவரெனின் கோட்டை யமைத்துக் கொடியும் நட்டுப் 'பாருங்கள் பாருங்கள்' என்று பறையறைந்து, நாளிதழ்களில் நாற்றி, ஒலிபரப்பிகளால் நிரப்பி, 'வாருங்கள் வாருங்கள்' என்று வரவழைத்து, நுழையப் பணம், பார்க்கப் பணம், பறிக்கக்கூடும். இந்தியருக்கு என்ன தெரிகின்றது. மாருக இங்கு ஏலமென வோல மிட்டனர். . கோட்டை பறந்தது?

ஆண்டை நின்ற அழகிய வாதமடக்கியும் ஆண்டாகு முன்னர் மாண்டொழிந்தது. மழை, காற்று, மடக்கி மடக்கி யடித்தன. மடக்கி யொடித்தன வாதமடக்கியை; முடக்கி விட்டன. மடங்கியது வாதம்; மடங்கியது பித்தம்; எழுந்தது சிலேப்பணம்; விழுந்தது மண்மேல்; "நரம்பு கோணிடில் நாமதற் கென்செய்வோம்"! எழுந்தது பாடல்:

காலம் : வெள்ளி 2-11-'34 மாலே 4 மணி

இடம் : புனித சேவியர் உயர்தரப்பள்ளி மாணவர் விடுதி.

### நேரிசை யாசிரியம்

வாத மடக்கி! வாத மடக்கி!!
வானுற வோங்கிய வாத மடக்கி!!!
வைத்தவ ரறியேம், வளர்த்தவ ரறியேம்.
வந்ததோ வுனக்கு மிந்த முடிவே!
வரிவளே வாய்விட, வார்சடை துவள,
வரிவண் டார்த்து வானிடை யொதுங்கப்,
பொலங்கொடு சமைத்த சிலம்பொலி புலம்ப,
மேகலே யலேய, மின்னிடை யொசிய,
மென்குறு வேர்வை மிளிர்சாந் தொளிசெய,
கிண்கிணி கிலுங்கக், கீழவர் நெறியெனக்
கண்ணிணே யோடக், கவினகி லாட
வரிப்பந் தாட வனிதையர்க் கமைத்த,
வாங்கொளி மான்கண் வரிசையும், வான்வெளி

Koviloor Digital Library



கண்ட நாற்புறக் கல்லடிச் சுவரடி
யடிகற் பாவி, யறைக்கத வாடப்,
படிசமைத் தும்பர் பந்தரு மொருபா
லோங்கு பாளையங் கோட்டைப் பந்தடி
மேடையின் வடாது, மெல்லிணர்ப் பிஞ்சடி
பொன்னெனப் பொதுளிப் பொன்துணர் மின்மினிக்
குழுவெனக் குளிர்தழை யிடையிடை கொங்கொடு
சிந்தக், கொன்றைவாழ் சடையரன் சிவணி,
வேருந் தூரும் வெண்பா சடையும்,
விரிதடிக் கொம்பும் வீசு வளாரும்,
வியன்மலர் செறிகொடி வெள்ளிவாற் றெருத்துடன்,
மங்கல மாலைதாழ் மணிச்சினை யசைவும்,
பொங்கப் பொலிந்தனை ! பொன்முடி மன்னர்,
மின்னிடை மெல்லியர், இன்குறு குதலையர்.
விளையாட் டயர்தல் களித்தனை ! அந்தோ ?
அரசறி வீற்றிரு வாழ்வும் வீழும் :
அரசு வீழ்ந்தது ; அரிவைய ரகன்றனர் ;
அணங்கினர் குறுநகை யஞ்சொற் காந்தை
யலறின ; அழிந்த தழகு ; குலைந்தது
கோப்பு ; குடிகொண்ட பேயும் ; பூத்தவெள்
ளெருக்கு ; நெரிஞ்சி யெங்கும் படர்ந்த ;
அரவு நெளிந்த ; அழியுமெய் மானும் ;
வரலாற் றுணர்ச்சி வறிய மாக்கள் ;
நகராள் குழுநரி நாக ரிகரவர்
வைத்தனர் கண்ணே ; வழங்கின ரேலம் ;
ஆயிரத் தம்ம னடைந்தனன் மேடையை :
வெட்டினர், கொத்தினர் ; வேட்டிடி முழங்க,
வெடித்தன சுவர்கள் ; விழுந்தன கற்கள் ;
சரிந்தது கட்டுச் சாய்ந்தன வெல்லாம் !
கழுகு, செந்நாய், காக்கை, யோனாய்,
கழிவுடற் கவ்வுவ கடுப்பக், கரியர்
மலையெனக் குவிந்த மண்ணுங் கல்லுங்
கணப்பொழு தள்ளிக் கழிந்தனர், கண்டதார்
மேடையை ! மேகம் மென்றுயில் கொள்ளு

Koviloor Digital Library



மரமே ! வேரடி மண்ணும் போனவால்
மென்சிறு சிதருடன் மேல்காற் றசைப்பவும்
வேருங் கிளம்பத் தூரு மாடப்
பொத்தென விழுந்தனை ; போனதுன் வாழ்வே !
போதா வென்பபோல் புடைபிரு வாத
மடக்கியை மடக்கி மண்மேல் வீழ்த்தினை !
நடுவோ இஃதே நவிலுக நமக்கே,
என்செய ; அண்டிய வரசன் வீழவு
மடுத்தா ரனைவரு மாழ்வது வாழ்வே;
அன்றி யழியா வறஞ்செய் தலர்த்தா
ளசையா விருக்கை யருட்பெரு மலையை
யண்டி னென்றும் வீழா
வாழ்வது திண்ணம் வழியு மஃதே.

---

# தமிழைப்பற்றிய சில நினைவுகள்

"C. N. சிங்காரவேலு B. A."

தற்போது சங்க இலக்கியங்கள் மிகவும் பரவி வருகின்றன. சிறிது காலத்திற்கு முன் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலியன எவை எவை என்றே தெரியாதிருந்தன. காலஞ் சென்ற ராவ்பஹதூர் சி, வை. தாமோதரம் பிள்ளை அவர்களும், ராவ்பகதூர் எஸ். பவானந்தம் பிள்ளை அவர்களும் எடுத்த நன்முயற்சியாலும், வயது முதிர்ந்து உடம்பு தளர்ந்தும் தமிழ் உழைப்பைக் கைவிடாத மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதய்யர் அவர்களுடைய பேருழைப்பாலும் சங்க நூல்கள் யாவும் நன் முறையில் பதிப்பிக்கப் பெற்று வெளிவந்திருக்கின்றன. சங்கநூல்கள் வெளிவந்த பின்புதான் தமிழின் தொன்மையும், பெருமையும், இலக்கிய வளமும் தெரியவந்தன. பிற்காலத்திய நூல்கள் பெரும்பாலும் புராண கதைகளாகவும், சமயத்தொடர்பு உடையவைகளாகவும் இருக்கின்றன. புராணங்களில் நம்பிக்கை யில்லாதார்க்கும் சமயப்பற்று இல்லாதார்க்கும் இந்நூல்கள் அவ்வளவாகச் சுவைப்படா. இராமரைக் கடவுளாகக் கருதாவிடில் கம்ப இராமாயணத்தில் உள்ள உலாவியற் படலம் எப்படி

Koviloor Digital Library



விளங்கும்? ஆகையால் சமய சம்பந்த மில்லாமல் வெறும் இலக்கியச் சுவையை நுகரவேண்டுமானால் சங்க நூல்களையே அணுகவேண்டும். இன்னும், பிற்காலத்திய ஆசிரியர்கள் சொல் நயங்களின் மீதே மிகவும் கவனம் செலுத்தினார்கள். சங்கத்து ஆசிரியர்களோ பொருள் நயத்தையே பொருளாகக் கொண்டார்கள்.

சங்க இலக்கியங்களில், கதைகளுக்கே முதன்மை கொடுக்க வில்லை என்று தெரிகிறது. தொகை நூல்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலியனவெல்லாம் வெவ்வேறு புலவர்கள் பாடின தனித்தனிப் பாடல்கள். ஒவ்வொரு பாட்டும் மற்றப் பாட்டுகளோடு தொடர்பு கொள்ளாமல் தனித்தனியே சுவை பயப்பது. பெரும்பாலும் அப் பாட்டுகளில் அகமும் புறமும் கலந்தே வருகின்றன. உலகத்தை இரு கூறாகப் பிரிக்கலாம். ஒன்று அகம், மற்றொன்று புறம். மனிதனுடைய மனத்தின்கண் நிகழும் எண்ணங்களும் உணர்ச்சிகளும் 'அகத்திணை' எனலாம். புறத்திலிருக்கும் இயற்கையின் வனப்பு, பொருள், அரசியல் முதலியனவும் ஏனைப் புற நிகழ்ச்சிகளும் 'புறத்திணை' எனப்படும். புலவன் அகப்பொருளுக்கு முதன்மை கொடுத்தால் அகப்பாட்டும், புறப்பொருளுக்கு முதன்மை கொடுத்தால் புறப்பாட்டுமாகப் பாட்டுகள் முடிகின்றன. குறுந்தொகை முதலிய செய்யுட்களைப் பார்த்தால் ஒரு பகுதி இயற்கை வருணனையாகவும் மற்றொரு பகுதி உள்ளத்தின் நிகழ்ச்சியாகவும் இருக்கின்றன. அகப்பாட்டுகளில் இவ்வியற்கை வர்ணனை பெரும்பாலும் உள்ள நிகழ்ச்சியைப் புலப்படுத்துவதற்கே பயன்படுகின்றது. எடுத்துக்காட்டாகப் பின்வரும் செய்யுளை நோக்குவோம்.

> ஆம்பற் பூவின் சாம்ப லன்ன
> கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
> முன்றி லுணங்கன் மாந்தி மன்றத்
> தெருவின்நுண் டாது குடைவன வாடி
> இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
> புன்கண் மாலையும் புலம்பும்
> இன்றுகொல் தோழியவர் சென்ற நாட்டே.
>
> (குறுந்தொகை-46)

Koviloor Digital Library



[இதன் பொருள்: தோழி, ஆம்பல் மலரின் வாடலை யொத்த குவிந்த சிறகுகளையுடைய வீட்டின்கண் தங்கும் குருவிகள், முற்றத்தில் உலரும் தானியங்களைத் தின்று பொது விடத்தின்கண் உள்ள எருவினது நுண்ணிய பொடியைக் குடைந்து விளையாடி வீட்டிறப்பிலுள்ள இடத்தே தம்முடைய குஞ்சுகளோடு தங்கியிருக்கும். பிரிந்தார்க்குத் துன்பத்தைத் தரும் மாலைக் காலமும் தனிமையும் தலைவர் பிரிந்து சென்ற அத்தேயத்தில் இல்லையோ?]

இது பிரிவின்கண் வருந்தித் தலைவி கூறியது. இங்குப் புலவர், தலைவியின் தனிமையையும், தனிமையாலான வருத்தத்தை யும் தெரிவிக்க நினைத்தார். ஆனால் அவளுக்கு எப்போது தனிமை எண்ணம் சிறந்தது என்றால், அவள் புறப்பொருளைப் பார்த்தபோதுதான். குருவி தன்னுடையபிள்ளைகளுடன் வந்து தங்கியிருப்பதைப் பார்க்கும்போது தானும் தன் அன்பிற் குரிய கணவனுடன் வதியவில்லையே என்ற எண்ணம் தோன்று கிறது. இன்னும் அக் குருவி இரைதேடும்பொருட்டு வெளியே போகவேண்டியிருந்தாலும் இரவில் தன் குஞ்சுகளிடத்தில் வந்து துயிலுவதைப் பார்க்கும்போது தன் கணவனும் அப் படியே பொருள் தேடும்பொருட்டு வெளியே போனாலும் மாலையில் வீடு திரும்பவில்லையே என்னும் எண்ணம் அவளுக் குத்தோன்றுகிறது. புலவர் இச் செவ்வியைக் கைப்பற்றிக் குருவியின் இயற்கையைத் தெளிவாக எடுத்துச் சொல்லுகிறார் இப்போது சொல்லப்படும் குருவி காட்டில் வாழுங் குருவி யன்று; மனையுறை குரீஇ என்பதை முதலில் தெரிவிக்கிறார். குருவி என்னாமல் குரீஇ என்பதனால் ஓசை நயம் மட்டும் அல்லாமல், அதனிடத்தில் தமக்குள்ள அன்பையும் புலவர் தெரிவிப்பதுபோலத் தோன்றுகிறது. பின், அக் குருவியின் முழுத்தோற்றம் ஆம்பல் மலரின் வாடலை யொத்திருக்கிறது என்கிறார். தலைவன் வேற்றூருக்குச் சென்று பொருளுக்காக வருந்துவதுபோல இக் குருவி வருந்த வேண்டாம் என்பது தோன்ற 'முன்றில் உணங்கல் மாந்தி' என்றார். வயிறார உண் டது என்பது தெரிய 'மாந்தி' என்றார். வயிறார உண்டவத னாலும் முயற்சியின்றி உணவுப் பொருள் கிடைத்ததனாலும்

Koviloor Digital Library



குருவி மகிழ்ச்சியுற்றது என்பதற்காகக் 'குருவி ஆடிற்று' என்றார். எங்கு ஆடிற்று? எப்படி ஆடிற்று என்பதைப் புலப் படுத்துவதற்காக 'மன்றத்து எருவில் ஆடிற்று' என்றும் 'குடைந்து ஆடிற்று' என்றுங் கூறினார். இவ்வளவு காரியங் களை வெளியில் நிகழ்த்தினாலும், மாலையில் தன் கூட்டிற்கு வந்து தன் குழந்தைகளுடனே தங்கியிருக்கின்றது. அதனு டைய கூடு வீட்டின் இறப்பில் இருக்கிறது என்றுங் கூறினார். இந்த நிகழ்ச்சிகளெல்லாம் தலைவிக்கு வருத்தந் தருவதனால் அம் மாலை புன்கண் மாலை ஆயிற்று. 'புலம்பு' என்னும் சொல் லினாலேயே தனிமையும் வருத்தமும் ஒருங்கே புலப்படுத் தினார்.

தமிழ்மொழி தற்போது ஆங்கிலம் பிரெஞ்சு முதலிய ஐரோப்பிய மொழிகளைப்போல அவ்வளவு சீரிய நிலைமையில் இல்லை "புத்தம் புதிய கலைகள் மெத்த வளருது மேற்கே" என்றார் பாரதியாரும். பேர்னட்ஷா, வெல்ஸ், பேர்ட்ரேண்ட் ரேஸ்ஸல் இன்னோரன்ன ஆங்கிலப் புலவர்களைப் போன்ற வர்கள் தமிழ் நாட்டுக்கு மேலுமேலும் மிகவேண்டும். தமிழ் மொழியில் உள்ள நல்ல நூல்களைக் குறிக்க வேண்டுமானால் நானூறு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முந்தித்தான் போகவேண் டும். சேக்கிழாரையுங் கம்பரையும் குறிக்கலாம். இன்னும் சீரிய நூல்கள் வேண்டுமானால் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திச் சென்று சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய நூல்களை யும், இன்னும் முற்பட்ட சங்கநூல்களையுமே பார்க்கவேண்டும்.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## மாணிக்க நாயகர் திருநாள்

தமிழ்மொழிக்கு நுண்ணிய அறிவியல் தொண்டு செய்துதவிய தமிழ்ப் பெருமகனாரான திரு. பா. வே. மாணிக்க நாயகரவர்கள் திரு நாள், இவ்வாண்டு 12-2-41-ம் நாள் உற்றது. அன்று மாலை கலைபணிக் கழக ஆதரவில் சென்னை ஆழ்வார்பேட்டையிலுள்ள நாயகரவர்கள் திருமாளிகையில், திருநாள் விழா அவை திருவாளர் இளவழகனாரவர் கள் தலைமையில் கூடியது; சென்னைப் பச்சையப்பன் கல்லூரித்

Koviloor Digital Library



தமிழ் விரிவுரையாளர் வித்துவான் மு. வரதராசனர் B.O.L. அவர்களும், தியாகராயநகர் இராமகிருஷ்ண பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் மா. இராசமாணிக்கம் பிள்ளையவர்களும் நல்ல விரிவுரைகள் நிகழ்த்திச் சிறப்பித்தார்கள். இறுதியில் அவைத் தலைவரவர்கள், திரு நாயகரவர்கள் தமது நுண்மாண் நுழைபுலத்தால் அறிவியற் புதுமையாக ஆராய்ந்து காட்டிய ஆராய்ச்சி நெறியைப் பின்பற்றி மேலுமேலும் ஆராய்ந்து புதுவது காண முயல்வது தமிழர்கடன் எனவும், அவர் செய்த உதவிக்கு அதுவே கைம்மாறு மெனவுங் குறிப்பித்து இனியதொரு முடிவுரை கூற, அவை நிறைவெய்தியது.

## தமிழ்ப்புலவர் பிரிவு

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் முன்னே தலைமைக் கணக்கராயிருந்தவரும் அணுக்கத்தில் லூதர்மிஷன் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராயிருந்தவருமான வித்துவான் சோம சங்கரலிங்க முதலியாரவர்கள் அண்மையில் இளமையிலேயே தமதுபருவுடல் நீத்தமை பெரிதும் வருத்தந் தருவதொன்று. அவர், திறமையாளரும் உழைப்பாளருமாவர். அவர் பிரிவால் மிக்க துயருறும் அவர் குடும்பத்தார்க்கு நம் இரங்குதலை அன்புடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

சென்னையில் இவர் பிரிவு கருதித் தமிழ்ப் புலவர்கள் குழுமிய இரங்கற் கூட்டம் ஒன்று 20-1-41-ல் திருவாளர் பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. அறிஞர்கள் பலரும் இரங்கலுரை கூறி அவர் குடும்பத்துக்கு ஒரு பொருளுதவி செய்ய முயலவேண்டுமென்று தெரிவித்துக்கொண்டனர். தமிழுலகம் ஆதரவு தருவது நல்லது.

## சென்னை இராமலிங்க அடிகள்

## தைப்பூச விழாப் பேரவை

‘ இவ்வாண்டுத் தைப்பூசத் திருநாளன்று (10-2-41) இவ்விழாப் பேரவை திருவாளர் இளவழகனாரவர்கள் அவைத் தலைமையில் சென்னையில் நடைபெறும். தமிழறிஞர்களும் சிவநேயச் செல்வர்களும் பலர் அரிய விரிவுரைகள் நிகழ்த்துவார்கள். அன்று பகல் அனைவர்க்கும் அன்னதானம் நடைபெறும் ’ என்று சமரச சன்மார்க்க சங்கத்தார் அறிவிக்கின்றனர்.

Koviloor Digital Library



# திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி விரிவுரை நிறைவு விழா

இவ்வாண்டு மார்கழித் திங்கள் சென்னைத் ‘திருவள்ளுவர் தொண்டர்படை’யினர் சார்பில் ஆசிரியர் இளவழகனாரவர்கள் சென்னையில் நிகழ்த்திய திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி விளக்கச் சொற்பொழிவுகளுக்காக 6-2-41-ம் நாள் ஒரு நிறைவுவிழாப் பேரவை சென்னை இராசமன்னர் செட்டியார் பள்ளி மண்டபத்தில், இந்து அறநிலைப் பாதுகாப்புக் கழக ஆணையாளரான திருவாளர் இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் B.A., B.L. அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. திருவள்ளுவர் தொண்டர் படையின் முதலாம் ஆண்டுவிழாவும் இணைந்து நடந்தது. சென்னைக் கேபிரியல் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் திருவாளர் வித்துவான் சொக்கலிங்கனார் அவர்களும், சென்னைப் பல்கலைக் கழக விரிவுரையாளர் திருவாளர் ரா. பி. சேதுப் பிள்ளை B.A., B.L. அவர்களும் இனிய சொல்லுரைகள் நிகழ்த்திச் சிறப்பித்தனர்.

திருவெம்பாவை விளக்கச் சொற்பொழிவுகளில் ஆர்வமுற்ற அவையோர், நூற்றெட்டு வெண்பொற் காசுகள்கொண்டு நூற்றெட்டுத் திருப்பெயர் வழிபாடாக (அஷ்டோத்தர சதம்) ஆசிரியர் இளவழகனாரவர்களுக்கு அன்பளிப்புச் செய்து பாராட்டினர். அவைத் தலைவரவர்கள், திருவாளர் சேதுப் பிள்ளையவர்கள், திருவாளர் இரத்தினசபாபதி செட்டியார் அவர்கள் B.A., முதலிய பெருமக்கள் இளவழகனாரவர்களின் புலமை, பணி முதலியவற்றைப் பற்றிப் பேசிப் பாராட்டி அன்போடு வாழ்த்துரைகள் வழங்கினர்.

திருவெம்பாவை விரிவுரைத் துவக்கத்திலும், திருவாளர் சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் M.A., திருவாளர் T. S. நடராசபிள்ளை அவர்கள் B.A., B.L. கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியாரவர்கள், திருமதி பார்வதி அம்மையாரவர்கள் முதலிய பெருமக்கள் கலந்து பாராட்டிச் சிறப்பித்தமை இங்கு நினைவுகூரற்குரியது.

திருவெம்பாவை விளக்கங்கள் நடைபெற்று வந்த காலங்களில் பன்மொழி அறிஞர்கள், புராணபடன முடையோர், சொற்பொழிவாளர்கள், புராண விரிவுரையாளர், பலவகையாலும் சிவத்தொண்டு தமிழ்த்தொண்டு செய்வோர், சைவர், வைணவர், சுமார்த்தர் முதலிய பலசமயத்தவர், பலசமய ஆராய்ச்சியாளர், தவநிலையுடையோர், இராமகிருஷ்ண சங்கம், தியாசபிகல் சங்கம், இராமலிங்க சங்கம், தேவார

Koviloor Digital Library



சங்கம் முதலிய பல நிலையத்தவர்கள், அன்பர்கள், தொண்டர்கள் எனப் பல்லோராலும் விரிவுரை அவை நாடோறும் சிறப்புற்று விளங்கியது. விரிவுரை காலங்களில் அவையோர், இறைவன் திருவருள் நினைவிற்படிந்து, உருகிய உணர்வுடன் செவிச்சுவையில் ஈடுபட்டிருந்தனர். இவ் விளக்கச் சொற்பொழிவுகள் இங்கே நல்ல தமிழ்நல உணர்ச்சியையும், அருள்நல உணர்ச்சியையும் ஒருங்கே உண்டு பண்ணியிருக்கின்றது.

இவ்வளவு சிறப்பாக இத் தொடர்பான விரிவுரைகளை நிகழச் செய்து நன்கு நிறைவேற்றிய அன்பர்களின் நன் முயற்சி போற்றுதற் குரியதாகும்.

## தொல்காப்பிய உரையாசிரியர்

## சேனாவரையர் திருநாள்

### ஔவைத் தமிழகம், செங்கைமா (வ. ஆ. ஜில்லா)

இக் கழகத்தின் சார்பாக இத் திருநாள் வேலூர் ஊரிஸ் உயர் நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் க. ப. மகிழ்நன் (சந்தோஷம்) B.A., L.T. அவர்கள் தலைமையில் செங்கைமா போர்டு உயர்நிலைப்பள்ளியில் 18-1-41 சனிக்கிழமையன்று நடைபெற்றது.

காலை 10-30 மணிக்கு நிகழ்ச்சி தொடங்கிற்று. வித்துவான் ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் கடவுள் வாழ்த்துப் பாடினார். பிறகு விழாத்திறப்பாளரான உயர்திரு. வே. தா. மா. திருநாவுக்கரசு செட்டியார் B. A. L. T. அவர்கள் விழாவைத் திறந்துவைக்கையில் தமிழின் பெருமையைப் பற்றியும் மேனாட்டு மொழிகளின் இன்பத்தை விடத் தமிழின்பமே பெரிதென்றும் சங்க இலக்கியங்களுள் ஒன்றிரண்டு சான்றுகள் எடுத்துக்கூறிச் சுமார் $1\frac{1}{2}$ மணி நேரம் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

பிறகு தலைவரவர்கள் தமிழ் மற்றெல்லா மொழிகளிலும் சால உயர்வுடைத்தென்றும், தமிழுக்காகத் தாம் எதையும் விட்டுக்கொடுக்கத் தயாராக இருப்பதாகவும் வீரமுழக்கஞ் செய்தனர். சுமார் 1-மணிக்கு இடைவேளை ஒய்விற்காகக் கூட்டம் இனிது கலைந்தது.

மாலை மறுபடியும் விழா ஆரம்பமாயிற்று. கூட்டத்துக்குப் பல அறிஞர்கள் வந்திருந்தனர். திரு. இலக்குமண முதலியார் அவர்கள், திரு. வேதாத்திரிப் பிள்ளையவர்கள் B. A. L. T. மா. கந்தசாமி முதலியார் அவர்கள், வித்துவான் ம. கோவிந்தனார் அவர்கள் சேனாவரையர் திறம் முதலியவைபற்றி அரிய சொற்பொழிவுகள் ஆற்றினார்கள்.

Koviloor Digital Library



## மெய்கண்ட சாத்திர மாநாடு, திருநெல்வேலி.

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைச் சார்ந்த தென்னிந்திய சைவசித்தாந்தச் சங்க ஆதரவில், வருகிற வேனிற் கால விடுமுறையில் அதாவது சித்திரைத் திங்கள் 29-ம் நாள் முதல் 5 நாட்கள் இம் மாநாட்டைத் திருநெல்வேலியில் நடத்தத் திருவருளை முன்னிட்டுத் தீர்மானித்திருக்கிறோம்.

மெய்கண்ட நூல்கள் பதினான்கையும் ஆராய்ந்து அவ்வாராய்ச்சிக் குறிப்புகளைச் சொற்பொழிவுக் கட்டுரைகளாகத் தொகுத்து அச்சிட்டு, விழாக்காலத்திலேயே வெளியிடக் கருதியுள்ளோம். கட்டுரைகள் வெறும் ஆராய்ச்சியாகவே இருக்குமானால் சித்தாந்த நூலுணர்ச்சி பெற விரும்பும் எல்லா மக்களும் படித்து உண்மை காண முடியாதிருக்குமாதலால், மேற்குறித்த நூல்களின் பொருள்களைச் சொற்பொழிவு வடிவாகவே எழுதியளிக்க வேண்டுமென்று, சொற்பொழிவு செய்யும் பெரியோர்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறோம்.

மேல்மேல் நடைமுறைகளைப் பற்றிய குறிப்புக்கள் பின்னர் வெளிவரும்.

### வேண்டுகோள்

மக்களுக்கு மக்கட் பண்புகளை அளித்து உலகியலை இனிமையாக நடைபெறச் செய்து இருமைப் பயன்களையும் ஒருங்கே உதவுவது சமய உண்மைகளேயாகுமாதலால், இம் மாநாடு சிறப்பாகவும் பயன் பெறவும் நடைபெறுவதற்கு நாடுமுழுமையும் தக்கவாறு கலந்து கொள்ளவேண்டுமென்று விரும்பிக்கேட்டுக்கொள்ளுகிறோம்.

சித்தாந்த ஆராய்ச்சி மிக்க அறிஞர்களும், அன்பர்களும் அங்கங்கே இருப்பார்களாதலால், 'செல்வி' நேயர்கள் அன்புகூர்ந்து, அறிந்தவரையில் அவர்களைப்பற்றி அவரவர் முகவரிகளுடன் (விலாசம்) திருநெல்வேலிக் கீழரத வீதிக் கழக நிலையத்துக்கு அறிவித்துதவுமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

அன்பன்,
வ. திருவரங்கம் பிள்ளை,
அமைச்சர்,
'மெய்கண்ட சாத்திர மாநாடு', திருநெல்வேலி.

---

Koviloor Digital Library



சென்னை, பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர்

ஆ. வீ. கன்னைய நாயுடு.

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—மாசிமீ [பரல்-கக

# செழிக்க !

இன்பமும் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள
நன்செயல் புன்செய லாலந்த நாட்டிற்காம்
என்ப இறைநாடி நாடோறும் நாட்டினில்
மன்பதை செப்பஞ் செயவையம் வாழுமே.

—திருமூலர்.

எல்லாரும் இன்பம் அடையவே விரும்புகிறார்கள்; துன்பம் வரக்கூடாதென்று நினைக்கிறார்கள். ஆனால் அதற்காகச் செய்யப் படும் முயற்சிதான் முறையானதாக இல்லை என்று சான்றோர்கள் கருதுகிறார்கள்.

அண்டை அருகிலுள்ளவர்கள் இன்பமாயிருந்தால் நமக்கும் இன்பமுண்டு; அவர்கள் துன்பமாயிருந்தால் நமக்கும் துன்பமுண்டு. இந்த உண்மையைமட்டும் உண்மையாகவே மக்கள் தெரிந்திருந்தால், தம் வரையில் காரியங்கள் பார்த்துக்கொள்ளுதலோடு அவர்கள் நிற்க மாட்டார்கள்.

இன்பமும் துன்பமும், நாட்டாரிடத்துள்ள நல்ல செயல், அல்ல செயல்களாலேயே அந்த நாட்டிலுள்ள மற்றவர்களுக்கும் ஆகின்றன வென்று, தெரிந்தவர்கள் சொல்லுவார்கள்; திருவருளுண்மையை விரும்பி நாடோறும் நாட்டுமக்களைச் செப்பஞ் செய்து வந்தால், உலகத்தில் எல்லாரும் இன்பமாய் வாழலாம்.

ஆதலால், மன்பதைத் (சமூகத்) தொண்டு நாட்டுக்கு முதன்மை யாக வேண்டியிருக்கிறது. அத் தொண்டு எங்குஞ் செழிக்க! நல்லவர் களும் நற்செயல்களும் எங்குஞ் செழிக்க! என விரும்புவோம்.

Koviloor Digital Library

# யார் கற்றவர்?

கேள்விகளிற் பல வகை உண்டு. அவற்றுள் இதுவும் ஒரு வகை. எதற்கும் கேள்விமேற் கேள்வி கேட்டுக் காரியம் நடத்துகின்ற இக்காலத்தில், கல்வித் துறையில் மட்டும் அவை எழாமலிருக்குமா?

ஔவையார் பாடியருளிய தனிப்பாடல் ஒன்று உண்டு. அது,

*சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்*
*வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்*
*நடையும் நடைப்பழக்கம் நட்பும் தயையும்*
*கொடையும் பிறவிக் குணம்*

என்பது. இதில், சித்திரம், மொழி, கல்வி, நடை, குணம் என்னும் ஐந்து உண்மைகள் அறிவுறுத்தப்படுகின்றன. எது செய்தாலும் கண்ணுக்கு அழகாகச் செய்கின்ற திருந்திய செய் முறைமை இங்குச் 'சித்திரம்' எனப்பட்டது. 'செந்தமிழ்' என்பது ஒரு மொழியைக் குறிக்க எழுந்தது. 'கல்வி' என்பது அம் மொழியில் வைத்து விளக்கப்படுகின்ற கருத்துக்கள். 'நடை' என்பது உலகத்தில் அவரவரும் நடந்துகொள்கின்ற முறைமை. 'குணம்' என்பது நட்பு, இரக்கம், கொடை முதலிய உயிர்க்குணங்கள். இவை முறையே கைப் பழக்கத்தினும், நாப் பழக்கத்தினும், மனப் பழக்கத்தினும், நடைப் பழக்கத்தினும், பிறவியியற்கையினும் ஒவ்வொருவர்க்கும் உண்டாகுமென்பது இப் பாட்டிலிருந்து தெரிகின்றது.

### திருந்திய செயல்

கையெழுத்து நன்றாக எழுதுவது, நூல்களையும் பண்டங்களையும் ஒழுங்காகப் பயன்படுத்துவது முதலியன வெல்லாம், 'சித்திரம்' என்னும் பகுதியில் அடங்கும்.

Koviloor Digital Library



## மொழிப் பயிற்சி

சிதைவில்லாமலும், தட்டுத்தடங்க லில்லாமலும், எளிதாகவும் கருத்துக்களைச் சொல்வளத்தோடு பொருத்திக் கவி பாடுவது, விளக்கிப் பேசுவது முதலியன வெல்லாம் 'மொழி' என்பதில் அடங்கும். எழுத்தாற்றலை விடப் பேசும் ஆற்றலே மொழியறிவுக்குச் சிறப்பு; செந்தமிழை 'நாப் பழக்கம்' என்று கூறியதனால் இவ் வுண்மை விளங்குகின்றது. பிற நூல்களிலும், "புலன் நா உழவர்" என்று வருவது இங்கே நினைவுகூர்தற்குரியது.

> "கல்வியே கற்புடைப் பெண்டிர்அப் பெண்டிர்க்குச்
> செல்வப் புதல்வரே ஈர்ங்கவியாச்—சொல்வளனே
> மல்லல் வெறுக்கையா மாண்அவை மண்ணுறுத்துஞ்
> செல்வமும் உண்டு சிலர்க்கு"

என்று வருகின்ற செய்யுளிலும் நாவன்மையே சிறப்பாக எடுத்துப் பேசப்படுகின்றது

## கல்வியறிவு

இனி, மொழிவல்லுநர், உலகத்தின் இயற்கைகள், உயிர்களின் இயற்கைகள், இறைவனின் இயற்கைகள், இவற்றின் நடைமுறைகளான உலகியலின் உண்மைகள், அவற்றோடு கலந்து வாழ்கின்ற தம்முடைய உள்ள நிலை கள் முதலியவற்றை எண்ணி எண்ணி ஆழ்ந்த நுண்ணிய அழகிய புதிய பயன்படு கருத்துக்களை அரித்து அரித்து எடுப்பது, அக் கருத்துக்களின் நயந் தெரிந்து பயின்று இன்புறுவது, பிறரை இன்புறுத்தும் முறைகள் தேர்வது முதலியன 'கல்வி' என்பதில் அடங்கும். 'கல்லுதல்' என் பது தோண்டுதல்; இங்கே தோண்டுதலாவது ஆழ்ந்து ஆராய்தல். ஆதலின், இக் கருத்துக்கள் 'கல்வி' எனப் பட்டன. இங்ஙனங் கல்வி என்பது, உள்ளத்தால் எண் ணிப் பெறப்படுங் கருத்துக்களாயிருத்தலின், சான்றோர் கள் அதனை 'எண்' என்றுங் கூறுவார்கள். மொழியறிவு 'எழுத்து' எனப்படும். 'எண்' என்னுங் கல்வியறிவே

Koviloor Digital Library



மொழியறிவினும் முதன்மையானது. ஆதலாலன்றே சான்றோர்கள் அதனையே முதலில் வைத்து,

"எண்ணெழுத் திகழேல்"

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு"

என அருளிச்செய்வாராயினர்! இலக்கணம், இயற்கைப்பொரு ளாராய்ச்சிகள், கலை, சமயம் முதலிய எவ்வகைக் கருத்துக்களும் இங்கே காட்டப்பட்ட 'எண்' என்னும் பகுப்பில் அடங்கிவிடும். 'கல்வி' யென்பது இது; 'கல்வி மனப்பழக்கம்' என்றது நினைவு கூர்க; 'ஆராய்ச்சி' என்பதும் இது.

**ஒழுக்கம்**

இனி, இக் கல்விக்கேற்ப ஒழுகும் ஒழுக்க முறைமைகள், பழக்க வழக்கங்கள் முதலியன 'நடை' என்பதில் அடங்கும். பொருள்களின் இயற்கைகள், அவற்றின் வரையறைகள், பயன் கொள்ளு முறைகள் முதலிய கல்விக் கருத்துக்களை ஆராய்ந்து ஐயமறத் தெரிந்து கொண்டாலும், அவை நடைமுறையிற் கொண்டுவரப் பட்டு உயிர்க்குணம் விளங்கப் பயன்படும்போதுதான் அக் கல்வி மேலுமேலும் நிரம்பிவரும். அப்போதுதான் தெளிவு மிகுதியாகி மாட்சிமைப்படும். அதனாலன்றே 'கல்வி' என்னும் அதிகாரத்தின் முதலிலேயே ஆசிரியர் திருவள்ளுவர்,

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக"

என்று அருளிச்செய்து, கற்றபடி நிற்றலை நன்கு வலியுறுத்துவாராயினர்! இன்னும், இத் திருக்குறட் பெருநூலுக்குக் கூர்ந்து நுண்ணுரை வகுத்த உரையாசிரியர் பரிமேலழகரும், இவ் வதிகாரத்தில், "உவப்பத் தலைக்கூடி"

Koviloor Digital Library



என்னுந் திருக்குறளின் உரையில் "தாம் நல்வழி ஒழுகல், பிறர்க்குறுதிகூறல் என்பன இரண்டும்" புலவர் தொழில்; அதனால், "கற்றூர் மாட்டு எல்லோரும் அன்புடையராவர்" எனவும்; 'கேள்வி' என்னும் அதிகாரத்தில் "இழுக்கலுடையுழி" என்னுந் திருக்குறளின் உரையில், "கல்வியுடையரேனும் ஒழுக்கமில்லாதார் அறிவிலராகலின் அவர் வாய்ச்சொற்கேட்கப்படாதென்பது தோன்ற 'ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்' என்றூர்" எனவும்; இனி 'ஒழுக்கமுடைமை' என்னும் அதிகாரத்திலும் "உலகத்தோ டொட்ட ஒழுகல்" என்னுந் திருக்குறளின் உரையில், "கல்விக்குப் பயன் அறிவும் அறிவிற்குப் பயன் ஒழுக்கமுமாகலின் அவ்வொழுகுதலைக் கல்லாதார் பல கற்றும் அறிவிலாதார் என்றுங் கூறினர்" எனவும் விளங்க உரைப்பர். இக் குறிப்புக்களால் ஒழுகுதலைக் கற்றலும் கல்வி நிரம்புவோர் கடன் என்பது வெளிப்படும்.

### உயிர்க்குணம்

இனி, இவ் வகைகளால் நட்பு முதலிய உயிர்க்குணங்கள் நன்ருகச் சுடர்விட்டு விளங்கிப் பெரிதும் மாட்சிமைப்படும். உயிர்க்குணங்களில் திளைத்துப் பிறர்க்குப் பயன்பட வாழ்தலைக் கற்கும்போது, கல்வி பின்னும் மாட்சிமை பெறுகின்றது. ஐயந் திரிபுகள் பின்னும் குறைகின்றன. மேல்மேல் தெளிவு உண்டாகின்றது.

> "உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
> மெள்ளக் குடைந்துநின் ருடார் வினைகெடப்
> பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
> கள்ள மனமுடைக் கல்வியி லோரே"

என்று தெய்வத் திருமூலர் திருவாய்மலர்ந்தருளுந் திருமந்திர அருளுரையில், 'உள்ளத்தின் உள்ளே ஊற்றெழுந்து பெருகும் உயிர்க்குண நீரில் திளைத்து இன்புறலறியா

Koviloor Digital Library



தார் கல்வியில்லாதவராவர்' என்னுங் கருத்துப் பெறப்படுதல் காணலாம்.

இவ்வாற்றூல், கல்வி என்பது இன்னது என்பதும், அது நிறைவடையும் இடங்கள் இன்ன இன்ன என்பதும் விளக்கமாகும்.

ஔவையார் செய்யுளின் பகுப்புமுறை இங்ஙனமெல்லாம் மிக்க அழகுவாய்ந்ததா யிருக்கின்றது. ஆகவே, 'முதலில் எதையுந் திருத்தமாகச் செய்யும் நற்பழக்கத்திற் பழகி, ஒரு மொழியறிவுந் தேர்ந்து, பின் கல்வியறிவும் பெற்று, அவ் வழியே நல்லொழுக்கம் மேற்கொண்டு, அதனுல் நட்பு முதலிய உயிர்க்குணங்களை மேலுமேலும் விளங்கச்செய்ய வேண்டுமென்பது முன் செய்யுளின் கருத்தாகின்றது. திருத்தமும் மொழியறிவும், கல்வியறிவு பெறுவதற்கு உதவிசெய்யும்; ஒழுக்கமும் நட்பு முதலிய உயிர்க்குணங்களும் அக் கல்வியறிவின் மாட்சிமைக்கு நல்ல அடையாளங்களாகும்.

இவ்வளவும் வந்தபின்பே, 'கல்வி' ஓர் அரையளவேனும் நிறைந்து வந்ததாக மதிக்கப்படும். இறுதியாக, இறைவனேடு இரண்டறக் கலத்தலாகிய மெய்யுணர்வுப் பெருநிலை கைவருகின்றபோதுதான் புலமை நிறைவடைகின்றது.

"பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்"

என்னுந் திருத்தொண்டத் தொகையில், அத்தகைய மேலோர் 'புலவர்' என்னுஞ் சொல்லாற் குறிக்கப்படுதல் நினைவுகூர்தற்குரியது. கல்வியின் நிறைவு இங்ஙனம் முடிக்கப்படுதல்,

"நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்
கற்கின்ற செய்மின் கழிந்தறும் பாவங்கள்
சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்
மற்றென் றிலாத மணிவிளக் காமே"

Koviloor Digital Library



என்று மிக அருமையாகத் திருமூல நாயனாரும்,

> "கற்றதனா லாய பயனென்கொல்? வாலறிவன்
> நற்றாள் தொழாஅ ரெனின்"

என்று மிக முடிபாகத் திருவள்ளுவப் பெருமானும் அருளிச் செய்திருக்கும் மெய்யுரைகொண்டு தெளிந்துகொள்ளப் படும்.

இங்ஙனங் கல்வியுடையோரே, 'கற்றவர்' என்று மேன்மக்களாற் கருதப்படுகின்றனர். சான்றோர்கள் கருத்து இவ்வாறிருக்கின்றது.

இவ்வுண்மைகளையெல்லாங் கருத்தூன்றி நோக்கினால், கல்வித் துறையிற் பழகுவோருடைய புலமை நிலைகள் பலபடியாகக் காணப்படும். திருவருள் நிலையிற் படியாதவரது கல்வி அரைகுறைக் கல்வியாகவே கொள்ளப்படும்; குணமாட்சிமை யில்லாதவரது கல்வி அதனினும் அரைகுறையேயாம்; அங்ஙனமே ஒழுக்கமில்லாதவரது கல்வி அதனினும் அரைகுறையாய்க், கலைப் பயிற்சி யில்லாதவரது நிலை அதனினும் அரைகுறையாய், மொழிப்பயிற்சி இல்லாதவரது நிலை அதனினும் அரை குறையாய் நிற்கத், திருந்திய பழக்கந்தானு மில்லாதவரது நிலையோ ஏதுமே கருதுதற்கில்லாமல்,

> "விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
> கற்றாரோ டேனை யவர்"

என்னுந் திருவள்ளுவர் கருத்தோடு ஒப்ப, விலங்கு நிலையில் வைத்தே நினைக்கவேண்டியிருக்கின்றது. அதனாலன்றோ ஆசிரியரே இத் திருக்குறளைக் 'கல்வி' என்னும் அதிகாரத்தினும் வையாமல், 'கல்லாமை' என்னும் அதிகாரத்தினுங் கடைசியில் வைத்தே கூறி ஒதுக்கியிருக்கின்றார்!

மக்களின் கல்வி நிலை இங்ஙனமெல்லாம் பல தரத்ததாக நிற்றலின், எவரேனும் ஒருவர் ஒரு சிறிது மொழிப்

Koviloor Digital Library



பயிற்சி பெறுகின்ற நிலையிலேயே தம்மைக் கற்றவராகக் கருதிக்கொள்வராயின், ஆ, அவரது நிலைமை எவ்வளவு ஏழைமையானதாயிருக்கின்றது! கல்வியின் நிறை யளவும் அந் நிலைக்குமுன் அவரவர் குறையளவும் இங் ஙனமெல்லாம் விளங்கிக் கிடத்தலின், இப் படிமுறை களில் வைத்தன்றோ அவரவர் தகுதியும் சான்றோர்க ளால் மதித்துக்கொள்ளப்படும்!

ஆதலால், கல்வியின் அளவுகள் இன்னவெனத் தெரிந்து, உரிய நிறைவை அடைவதற்கு முயலவேண் டுவதும், அடைந்தவரையிற் பலர்க்கும் உதவியாயிருக் கவேண்டுவதுமே அவரவர் கடமைகளாக இருக்கின்றன வென்று தெரிகின்றது.



Koviloor Digital Library

# திருக்குறளில் சைவசமய வுண்மை

"மா. வே. நெல்லையப்ப பிள்ளை"

[பதிப்புரிமை ஆக்கியோர்க்குரியது]

"இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னுந்
துன்பத்துள் துன்பங் கெடின்"

இது துறவறவியலில் ஞானம் என்ற பகுதியில், அவா வறுத்தல் என்னும் அதிகாரத்தில், ஒன்பதாவது குறளாகக் கூறப்பட்டிருக்கிறது. நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்னும் நான்கும் துறவி ஒருவனுடைய உள்ளத்தின்கண் விளங்கும் அறிவு நிலையில் நிகழ்ந்து, வீடு பேற்றுக்குக் காரணமாகிய மெய்யுணர்தலுக்கு ஏதுக்களாயிருத்தலின், இது துறவறவியலில் ஞானம் என்ற உட்பகுதியில் வைக்கப்பட்டது. வீடுபேற்றிலுணரும் பேரின்பம் உள்ளமும் உரையும் செல்லா நிலைமைத்தாதலின், நிலையாமை முதலிய நான்கு அதிகாரங்களும் அப் பேரின்பத்தை அடைவிக்கும் காரண வகைகளாகத் திருக்குறளில் கூறப்பட்டன. இங்ஙனம் அறத்துப்பாலின்கண்ணுள்ள இருபெரும் பகுதியிலொன்றாகிய துறவறவியலில் கூறப்படும் தவம் ஞானம் என்னும் உட்பகுதிகளி லொன்றாகிய ஞானத்தின்கீழ் வீட்டிற்குக் காரண வகைகளாக நிலையாமை முதலிய நான்கும் கூறப்படுதலின், திருக்குறளுக்குச் சிறப்புப் பாயிரங் கூறிய புலவர் சிலர், திருக்குறளானது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் பால்களை யுடையதாய்க் கூறப்படுதல்பற்றி அதனை முப்பால் என்றும், சிலர், திருக்குறள் முப்பாலினை யுடையதாய்க் கூறப்படினும் அறத்துப்பாலில் துறவறவியலில் நிலையாமை முதலிய நான்கு அதிகாரங்களும் வீட்டின்பத்துக்குக் காரண வகைகளாகக் கூறப்படுதலின், அம் முப்பாலோடு வீடு என்னும் பாலையும் சேர்த்து நாற்பாலெனவும் கூறினர். ஆகவே அவாவறுத்தல் என்னும் அதிகாரம் வீடு என்னும் பாலின் கீழ்க் கூறப்பட்டதாக ஆன்றோரால் கருதப்படும். காரணவகையாற் கூறப்பட்ட வீடென்னும் நாலாவது பால், காமத்துப் பாலுக்குப் பின் நாலாவது தனிப்பாலாகத் திருக்

Koviloor Digital Library



குறளிற் கூறப்படாமல் முப்பாலாகக் கூறப்பட்டதென்னை யெனின், அஃது, அறம் என்னும் பொதுமையானும், இல்லறத் தின் பயன் துறவறமாதலானும், துறவறத்தின் பயன் வீடு ஆதலானும் அமையும் என்பது.

துறவறவியலில் ஞானம் என்னும் உட்பகுதியின் கீழ் வீடுபேற்றிற்குக் காரணங்களாய்க் கூறப்பட்ட நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்னும் நான்கு அதி காரங்களின் வைப்புமுறையானது, சைவ சமய வுண்மையை எவ்வாறு உணர்த்துகிறதென்பதுபற்றிக் கருதுவாம்.

துறவற வொழுக்கத்திற் செய்யப்படும் தவத்தினாலே ஒருவனது உள்ளத்தில் உணரப்படும் உடல் நிலையாமையும், செல்வ நிலையாமையும், அந் நிலையாமை பற்றி அகப்புறப் பற்றுக் கள் விடுதலும், அவ் விடுதல்பற்றி அவனுள்ளத்தி லுணரப்படும் மெய்யுணர்தலும், அம் மெய்யுணர்தல் வீடுபேற்றிற்கு நேரே காரணமாயிருப்பினும் தான் பிராரத்த வினைவயத்தால் எடுத்த உடம்பு நீங்குமளவும் பழைய 'வாசனை'யால் ஒரோ வழி உள்ளத்தில் பிறக்கும் அவாவின் நினைவைத் தடுத்தலும், மேலே கூறப்பட்ட நான்கு அதிகாரங்களில் ஒன்றின் பின் ஒன்று ஏதுவும் பயனுமாக வரன்முறையாகச் சைவசமய வுண் மைப்படி கூறப்பட்டிருக்கின்றன. வரன்முறையாகக் கூறப் பட்ட நான்கு அதிகாரங்களுள் முதல் மூன்று அதிகாரங் களும் முறையே இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநி பாதம் என்னும் மூன்று சைவ சமய வுண்மைகளையும் குறிக்கின் றன. இவை மூன்றையும் இங்கே விளக்கி விரித்தெழுதுதற்கு இடம் போதாது. இம் மூன்று உண்மைகளும் சைவ சமயத்தி லன்றி வேறெந்தச் சமயத்திலுங் கூறப்படவில்லை.

மூன்றாவதாகக் கூறப்பட்ட மெய்யுணர்தலென்பது, ஒரு வன் இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்து அவனைத் தூயவுள் ளத்தின்கண் உணர்தலாகும். இது வீடுபேற்றிற்கு நேரே காரணமாயுள்ள முடிந்த முத்திநிலையாகும்.

இந்த முத்திநிலைக்குப் பின் அவாவறுத்தலென்ற அதிகா ரம் வைத்தது குறிக்கத்தக்கது. பொதுவாக அவாவென்பது

Koviloor Digital Library



புறத்து உலகப் பொருள்களை நுகருதற்கு உள்ளத்தின்கண் எழுகின்ற காமம் அல்லது விருப்பமாகும். முத்திநிலையடைந்த ஒருவருக்கு இந்தக்காமம் உள்ளத்தில் எழுதல் பொருத்தமில்லை; அஃது இங்கே பழைய பயிற்சிவயத்தால் ஒரோவழி உள்ளத்தில் எழுகின்ற, முன் விடப்பட்ட விருப்பு வெறுப்புக்களின் நினைவு (Memory). இது பெருங்காயமிருந்த ஒரு மட்பாண்டத்தை நன்ருய் நீராற் கழுவிய பின்னும் அதிலிருந்து எழுகின்ற 'வாசனை' போன்றதாதலால் 'மலவாசனை' என்று கூறப்படும். அவாவென்பதற்கு இங்கே பழைய விருப்பு வெறுப்புக்களின் 'வாசனை' பொருளென்பது, நூலாசிரியர் இந்த அதிகாரம் 7-வது செய்யுளில் "அவாவினை ஆற்ற அறுப்பின்" என்றதனுலும், முன்னைய அதிகாரம் 10 வது செய்யுளில்,

> காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
> நாமங் கெடக்கெடு நோய்.

என்றதனுலும் நன்கு விளங்கும். உரையாசிரியர் பரிமேலழகரும் அவாவறுத்தல் என்பதற்கு முதற்கண் இந்தப் பொருளையே கூறுகின்ருர். சிவஞான சுவாமிகள், சிவஞானபாடியம் சீவன்முத்தராகிய அணைந்தோர் தன்மையிற் கூறுகிற 12-வது சூத்திரத்தில் கூறுவதாவது:—

"எல்லா மலங்களும் பற்றறத் துடைத்து மற்றுண்மை ஞானத்தைத் தலைப்பட்டார்க்கு உடம்புள்ளளவும் 'பிராரத்த' வினை அவ்வுடம்பையொட்டி நிற்றலான், அஃது அவர்க்கு ஒரோவழி 'வாதனை வயத்'தால் இங்குளி வாங்குங் கலம்போல வந்து தாக்குங்கால் பிற்செயாது 'அனுபவிப்பது' இன்ருகலின், அது சார்பாக விருப்பு வெறுப்புக்களுளவாம்." சிவஞான போதம், முடிந்த முத்திநிலை கூறுகிற 11-வது சூத்திரத்திற்குப் பின் 12-வது சூத்திரமாக அணைந்தோராகிய சீவன்முத்தர் தன்மை கூறப்பட்டது இக் கருத்துப் பற்றியே. இம்மை வாழ்விலேயே ஒருவர் முடிந்த முத்திநிலை யடைந்து அதன்பின் எடுத்தவுடல் நீங்குமளவும் சீவன்முத்தரா யிருக்குந்தன்மை சைவசமயத்திலன்றி வேறு எச் சமயத்திலும் கூறப்படவில்லை. பிற சமயங்களில் அபரமுத்தி, பதமுத்தி, பரமுத்தி என்னும்

Koviloor Digital Library



முத்தி வேறுபாடுகளுங் கிடையா. அவை கூறும் ஒரே முத்தி நிலை தத்துவங்களுக்குட்பட்ட நிலை. இங்ஙனம் திருக்குறளில் மெய்யுணர்தலுக்குப் பின் அவாவறுத்தலை வைத்த வைப்பு நிலையே சைவசமய வுண்மையைக் குறிக்கிறதென அறிக.

இனி எடுத்துக்கொண்ட செய்யுளில், சைவசமய வுண்மை எங்ஙனங் குறிக்கப்படுகிறதென்பது கருதுவாம். "அவா வென்று சொல்லப்படுகின்ற மிக்க துன்பம் ஒருவருக்குக் கெடுமாயின், அவன் வீடுபெற்ற வழியேயன்றி உடம்போடு நின்ற வழியும் இன்பமிடையறாது" என்பது இச் செய்யுளுக்குப் பரிமேலழகர் கூறிய உரையாகும். இந்த உரையானது சைவ சமய வுண்மைக்குப் பொருத்தமாயுள்ளது. ஆனால் அவா வென்னும் சொல்லுக்கு அவர், அதிகாரத் தலைப்பில் கூறிய பொருளை நாம் கொள்ளல் வேண்டும். வீடுபெற்ற வழியே யென்று உரையில் கூறப்பட்டதை, எடுத்தவுடல் நீங்கியபின் வீடுபெற்ற வழியென்று நாம் பொருள் கொள்ளல் வேண்டும். ஈண்டும் என்பது இவ்விடத்தும் அதாவது உலகில் வாழும் இம்மை வாழ்விலும்; உம் என்பதும் மேலாகிய முத்தி உலகத்திலன்றிச், சிறிது இன்பமும் பெரிது துன்பமும் மாறி மாறி வருகின்ற இவ்வுலகத்திலும் (இம்மை) என்று பொருள்படுதலால் இழிவு சிறப்பும்மை. இன்பம் ஈண்டும் இடையறாது என்றதனாலே அம்மையாகிய முத்தியுலகில் இன்பமிடையறாதென்ற கருத்தைக் குறிப்பிடுதல்பற்றி எதிரது தழீஇய வெச்சவும்மையுமாகும். இம்மை, மறுமை, அம்மை ஆகிய மும்மையிலும் மக்கள் நுகர விரும்புவது இன்பமே. இம்மையிலும், மறுமையிலும் அவர்கள் தாங்கள் செய்த வினைக்குத் தக்கவாறு துன்பத்தோடின்பம் நுகருகிறார்கள். அம்மையாகிய வீட்டு நிலையில் அவர்கள் இடையறாது இன்பம் நுகருகிறார்கள். இவையே மும்மை நிலையிலுமுள்ள இன்ப வேறுபாடுகள். ஆதலால் உலகில் வாழும் மக்களுக்குத், தாங்கள் 'அநுபவத்தி' லறியாத முத்தியின்ப வுணர்வைத், தாங்களறியும் உலகவாழ்வு 'அநுபவத்'தின் மேல் வைத்து ஆசிரியர் விளக்கிக் கூறினார் என்பது பெறப்படும். இம்மை வாழ்விலேயே பேரின்ப மிடையறாது நுகரும் சீவன் முத்தநிலையைச்—சைவ சித்தாந்த உண்மையை —இச் செய்யுள் குறிப்பது மேலே கூறப்பட்டதனாலறிக. இக்

Koviloor Digital Library



கருத்தைத் திருமூலர் தாமியற்றிய தமிழ் ஆகமமாகிய திருமந் திரம் 2394-வது பாட்டில்,

சித்தாந்தத் தேசீவன் முத்தி சித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே.

என்று கூறுதல் காண்க. (இங்கே வேதாந்தம் என்பது ஆகம மாகிய சித்தாந்தத்திற்குப் பொருத்தமான வேதத்தின் முடிவு; ஏகான்மவாதமன்று). இங்ஙனம் திருக்குறளில் நாற்பாலாகிய வீட்டுப் பாலைக் காரண வகைகளாகக் கூறுகிற நான்கு அதிகாரங்களின் வைப்புமுறையும், அவ் வைப்பு முறையின் ஈற்றில் அவாவறுத்தல் கூறப்பட்டிருக்கும் முறையும், அவ் வதிகாரம் 7-வது செய்யுளின் கருத்தும், சைவசமய வுண்மை யைக் குறிக்கும் மாண்பினையுடையன வென்பது.



Koviloor Digital Library

# வால் நட்சத்திரம்

## (Comet)

"N. K. வேலன் B. A."

நேற்றுமாலை சென்னைக் கடற்கரையில் யான் உலாவிக் கொண்டிருந்தேன். இரவு ஏழு மணி இருக்கும். என் எதிரில் வந்த அன்பர் ஒருவர் "உலகிற்கே பெருங்கேடு வந்துவிட்டது" எனக் கூவினர். "ஏன் அப்படிச் சொல்கிறீர்" என்று அவரை வினவினேன். "அதோ பாருங்கள். வால் நட்சத்திரம் வந்திருக்கிறது" என்று வானத்தைச் சுட்டிக் காட்டினர். வானத்திலே தென் மேற்குப் பக்கத்தில் ஓர் அழகிய தோற்றத்தை யான் கண்டேன். அது விண்மீன்களின் உருவங்களுக்கு முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது. அதில் ஒரு புறம் தலையும் மற்றொரு புறம் வாலும் காணப்பட்டது. வால் வெண்மையான ஒளியுள்ளதாயும் நீண்டு அகன்றதாயும் இருந்தது.

ஏதோ குருட்டு நம்பிக்கையால் மக்கள் இதனைக் கண்டு அஞ்சுகின்றனர். வால்மீன் தோன்றுவதால் உலகம் நோயினுலும், வெள்ளத்தினுலும், பஞ்சத்தினுலும் துன்பமுறும் என்றும், தலைவர்கள் இறக்க நேரிடும் என்றும் பலர் நம்புகின்றனர். உண்மையில் இம் மீன்களும் ஏனைய கோள்களைப் போன்று கால வரையறைப்படி ஞாயிற்றினைச் சுற்றி வருகின்றன. நெடுங்காலமாக இவற்றின் தன்மைகளைப் பற்றி வான நூற் புலவர்கள் ஆராய்ச்சி செய்து வந்திருக்கின்றனர். இம் மீன்கள் ஞாயிற்றினைச் சுற்றி வரும் கோள்களிலிருந்து ஆவி வடிவமாய்ப் பிரிந்துபோன பகுதிகளென்று கூறப்படுகின்றன. இதுவரை 270-க்கு மேற்பட்ட வால் மீன்கள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின் நிலைகளும் காலங்களும் கணக்கிடப்பட்டிருக்கின்றன. வால்மீன் ஒவ்வொன்றும் அதனைக் கண்டுபிடித்தவரின் பெயராலேயே வழங்கி வருகின்றது.

இம் மீன்களின் வால்கள் எல்லாம் ஒன்றேபோல் இல்லாமல் நீண்டும், குறுகியும், வளைந்தும், பிரிந்தும் பல் வேறு வகை

Koviloor Digital Library



யாய்க் காணப்படுகின்றன. இம் மீன்கள் சிற்சில வேளைகளில் மட்டும் கண்ணுக்குப் புலப்படுகின்றன. சில நாட்கள் வானத்தில் தோன்றிப் பின்னர் மறைந்து போகின்றன. 1682-ஆம் ஆண்டிற் கண்டுபிடிக்கப்பட்ட வால்மீன் 75 அல்லது 76 ஆண்டுகளுக்கு ஒரு முறை தோன்றி மறைகின்றது. இம் மீன் 1759, 1835, 1910 இவ்வாண்டுகளில் தோன்றிற்று. மீண்டும் 1986-ஆம் ஆண்டில் திரும்பிவரும் எனக் கணக்கிடப்பட்டிருக்கின்றது. 1826-ஆம் ஆண்டிற் கண்டுபிடிக்கப்பட்ட வால் மீன் மீண்டும் தோன்றியபோது இரு பகுதிகளாகப் பிரிந்து காணப்பட்டது. நாளடைவில் அப் பகுதிகள் விலகிக்கொண்டே வந்து முடிவில் காணுது மறைந்து போயின; 1744-ஆம் ஆண்டில் கண்டுபிடிக்கப்பட்ட வால்மீன் பலவால்க ளுடையதாய் இருந்தது.

1843-ஆம் ஆண்டில் தோன்றிய வால்மீன் மிகுந்த ஒளியுடையதாக இருந்ததால் அது பகலிலும் நன்கு தெரிந்தது. மீண்டும் 1882-ஆம் ஆண்டில் ஒரு பெரிய வால்மீன் பகலில் தோன்றியது. அதன் வால் 9 கோடி மைல் நீளம் இருக்கும் எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. 1910-ஆம் ஆண்டிற் பகல் வேளையில் ஓர் அழகிய வால்மீன் தோன்றிற்று. அதன் வால் பொன்னாலாகிய பட்டாக்கத்தியைப்போல் இருந்தது. இம் மீன் சில நாட்கள் இருந்து வான வெளியில் மறைந்து விட்டது.

வால்மீன் தோன்றுவது கெட்ட குறியென்றும் உலகமே அழிந்துவிடுமென்றும் மக்கள் நம்பி இருந்தனர். இம் மீன்கள் பன்முறை தோன்றியும் உலகம் அழிந்துவிடவில்லை. உலகில் இன்பமும் துன்பமும் மாறிமாறி வரும் என்னும் பாடத்தை நமக்கு வால்மீன் கற்பிக்கின்றது. விண்மீன் தோன்றிய காலத்திலும் உலகின் ஒருபகுதி செழிப்பாகவும் மற்றொரு பகுதி பஞ்சத்தினல் வாடியும் இருக்கிறது. ஒருபுறம் மக்கள் ஒற்றுமையாகவும் மறுபுறம் போரிட்டும் மாள்கின்றனர். ஒரு நாட்டில் வெள்ளப் பெருக்கும் இன்னொரு நாட்டில் நீரில்லாது வறட்சியும் ஏற்படுகின்றது. வால்மீன் தோன்றிய காலத்திலேயே ஒருசாரார்க்கு நன்மையும் மற்றொரு சாரார்க்குத்

Koviloor Digital Library



தீமையும் நேர்கின்றது. ஆகவே வால்மீன் தோன்றியதா லேயே கெடுதல் வந்தெதென்று அதன்மேற் பழி சுமத்துவது சரியன்று. நாம் வால்மீன்களைக் கண்டு அஞ்சுவதை விடுத்து அவற்றின் தன்மைகளை ஆராய்ச்சி செய்தல் வேண்டும். இது போன்று வானத்திற் காணும் வியத்தகு தோற்றங்களைக் குறித்துப் பல ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. "எப் பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருளின் உண்மை யைக் காண்பது" அறிஞரின் கடமையாகும்.



Koviloor Digital Library

# தமிழ்த் தாய் வாழ்த்து

"அ. சிதம்பரநாதச் செட்டியார் எம். ஏ."
*தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைநகர்.*

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி யிருப்பதுபோற்
கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே"

(மனோன்மணியம்—தமிழ்த்தாய் வாழ்த்து)

தொன்மையான மொழிகளென்று உலகின்கண் எண்ணப் படுவன தமிழ், எபிரேயம், எகிப்தியம், கிரேக்கம், பெர்சியன், சமக்கிருதம், இலத்தின் முதலாய சிலவேயாம். அவைதம்முள் எபிரேயம், எகிப்தியம், சமக்கிருதம், இலத்தின், கிரேக்கம் என்பன பேச்சு வழக்கு முன்னரே இழந்தன. எஞ்சியவற்றுள் பெர்சியன் மொழியைப் பேசுகின்றவர் தொகை எண்பது நூறாயிரத்திற்குமேல் இல்லை. 1931-ல் தமிழ் பேசிக்கொண்டிருந்தவர் தொகை ஏறத்தாழ இரண்டரைக் கோடி என அறிகின்றோம். இதனால் அறியப்படுவது தமிழ் தொன்மையதே யாயினும் இன்றும் பேச்சு வழக்கிற் பலராற் பல இடங்களிற் பயிலப்படும் பெற்றி வாய்ந்ததென்பது. அதற்குக் காரணம் அம்மொழியின் சிறப்பியல்புகளும் பிறமொழித் தொடர்பால் தம் மொழியைக் கைநெகிழ விடலாகாது என்ற தமிழர்தம் உறுதியுமாம். அதனாலன்றோ, பேராசிரியர் சுந்தரம்பிள்ளை "ஆரியம்போல் உலகவழக்கு அழிந்தொழிந்து சிதையாத் திறம்" தமிழினது என்று செப்பிப் பாராட்டியது! தமிழ்ச் சொற்களின் பகுதியென்று சொல்லப் படுகின்ற அடிவேர் எல்லாம் முழுச் சொற்களாகுங்கால் சிறிதளவே மாறுதல் அடைகின்றன. நட வா மடி விடு கூ வே வை நொ போ வெள முதலாய பகுதிகள் எல்லாம், நடக்கிறான் வந்தான் மடிவான் விட்டான் கூவினான் வேகும் வைத்தாள் நொந்தேன் போயிற்று வெளவின முதலாய சொற்களில்

Koviloor Digital Library



அடையும் வேறுபாடு தவச்சிறிது என்பது யாவர்க்கும் புல னாகக் கூடியதொன்று. சமக்கிருதம் முதலாய உருவுதிரியும் மொழிகளில் சொற்களின் பகுதிகள் எனப்படுவன அடையும் மாறுதலுக்கு எல்லையில்லை. காட்டாக், "ஜகாந" என்னுஞ் சொல்லில் "ஹன்" என்னும் பகுதியும் "ஆர்ய" என்னுஞ் சொல்லில் "ரு" என்னும் பகுதியும் அடைந்துள்ள மாறுதலை நோக்குக. தமிழ் ஒட்டியற் பண்புடைய சொற்கள் நிரம்பிய தாய், அசையசையாக எளிதில் உச்சரிக்கக்கூடிய சொற்கள் மலிந்ததாய், பகுதி இன்னதென்று எளிதில் உணரக்கூடிய புணர்ச்சிவகையை யுடையதாய் இருப்பதாலே சீருஞ் சிறப்பு முடைய மொழியாக அறிஞர்களாற் கருதப்படுகிறது. தொன்றுதொட்டே இலக்கண இலக்கிய நிலைகளை எய்திவிட்ட படியால் தமிழ்மொழி தன் சொற்களின் பழைய வடிவங்களை இன்றுகாறும் பெற்றிருக்கிறது. அதனால், இம்மொழி கட்டி ளமையோடு திகழ்கிறது என்று மொழிநூற் கலையறிஞர் கால்டுவேலர் எழுதினார்*. அதனாலன்றே பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் "சிதையா உன் சீரிளமைத் திறம் வியந்து வாழ்த்துதும்" எனப் பாடியதென்க.

கன்னடமுங் களிதெலுங்குங் கவின் மலையாளமுந் துளுவும் பிற சிலவும் பெற்றெடுத்த அன்னை தமிழ் என அவர் பகர்ந்தார். ஒரு மொழி மற்றொரு மொழியினின்று பிறந்தது என்றுதல் சில மொழிகள் புராதன மொழியினின்று பிறந்தன என்றுதல் கூறத் தக்கன எனத் தெரியின், அவ்வொரு மொழி மற்றொரு மொழியின் புதல்வி யென்றும் அச் சிலமொழிகள் தம்முட்டாம் உடன்பிறந்த நங்கையர் என்றும் உருவகப் படுத்தி யுரைக்கப்படும். வேதகாலச் சமக்கிருதத்தின் புதல் வியர் பாளிபோன்ற பிராக்கிருதங்கள் என்றும், அப் பிராக் கிருதங்கள் வழித்தோன்றிய அஸ்ஸாமியம், வங்காளம், ஹிந்தி, மராத்தியம், குஜராத்தியம் முதலானவை உடன்பிறந்த நங் கையர் என்றும் உரைக்கப்படும். தெலுங்கு, கன்னடம், மலை

* "These languages (= Dravidian languages) present in consequence the appearance of fresh youth" (Comp. Grammar P. 194.)

Koviloor Digital Library



யாளம் ஆகிய மொழிகள், இன்று காணப்படும் நிலையில் சமக் கிருதத்தின்வழி வந்தனவோ என ஆராய்ச்சியில்லாராற் கருதத் தக்கனவேனும், உண்மையில் அவையெல்லாம் தமி ழொடு நெருங்கிய தொடர்புடையன என்பதைச் சில சான்று களால் நிறுவலாம்.

ஒரு மொழியின் சொற்களாக உள்ளவற்றுள் மக்கள் வாழ்க்கைக்கு அடிப்படையான கருத்துக்களையும், இன்றியமை யாத கருத்துக்களையும், எல்லா மக்களாலும் எளிதில் அறியக் கூடிய கருத்துக்களையுந் தெரிவிக்குஞ் சொற்களே அம்மொழி பிறிதொரு மொழியொடு தொடர்புடையதா அன்றா என்ப தைக் காட்டவல்லுந. எல்லா மக்களாலும் எல்ல இடங்களிலும் நாடோறும் வழங்கப்படுஞ் சொற்களாகக் காணப்படுவன நான் நீ என்பனபோன்றவும், ஒன்று இரண்டு என்பனபோன் றவும், நிலம் நீர் என்பன போன்றவும், உண் வா என்பன போன்றவும், தாய் தந்தை என்பன போன்றவும், தலை கால் என்பன போன்றவும் ஆம். சிறப்புடைய மொழியொன்று இப்பொருள்களைக் குறிக்க வேறொரு மொழியினின்று சொற் களைப் பெரும்பாலுங் கடன்வாங்குதல் இல்லை. அதனால், இப்பொருள்களைக் குறிக்குஞ் சொற்களால் ஒத்தன எனக் காணப்படு மொழிகள் ஓரினத்தன என்று கூறும் பெற்றிய. அம்முறையான் நோக்கின், தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளுவம், குடகு, தோடம், கோடம், கோண்டு, கூய், குறுக்கு, மாலர் ஆகிய மொழிகளனைத்தும் ஓரினத்தன என அறியப்படும். இவற்றுள் முன்னைய நான்கும் எழுத் துடைமையும் இலக்கியமுடைமையும் ஆகிய சிறப்புற்றவை. பின்னைய எட்டனுள் துளுவம் கூய் ஒழிந்த பிற, எழுத்துப் பேறும் இலக்கியப் பேறும் அறவே உடையனவல்ல. துளுவம் கன்னடவெழுத்துக்களாலும் கூய் ஒரியா எழுத்துக்களாலும் எழுதப்படுவனவாக, எஞ்சிய பிற ஆங்கில எழுத்துக்களால் இக்காலை எழுதப்படுகின்றன. கருத்து என்னெனின், இவை பேச்சு வழக்கிலொன்றே உள்ள மொழிகள் என்பது. இனி, இலக்கிய இலக்கண வரம்புகளெய்திய மொழி நான்கிலும், அடிப்படையான கருத்துக்களைத் தெரிவிக்குஞ் சொல் வடி வங்கள் எங்ஙனம் ஒத்துளது என்பதைக் காண்பாம்.

Koviloor Digital Library



தன்மை யொருமைப் பெயராக யான் நான் என்பன தமிழில் இருத்தல்போல மலையாளத்தில் ஞான் என்பதும், தெலுங்கில் ஏனு நேனு என்பனவும், கன்னடத்தில் ஆனு நானு என்பனவும் வழங்கியதும் வழங்குவதும் உண்டு. நண்டு ஞண்டெனத் திரிதல்போலத் தமிழ் நான் மலையாளத்தில் ஞான் எனத் திரிந்திருக்கவேண்டும். தமிழ் யாறு தெலுங்கில் ஏறு எனத் திரிதல்போலத் தமிழ் யான் பழந் தெலுங்கில் ஏனு என மாறி யிருக்கவேண்டும். யாறு யானை யாடு என்பன ஆறு ஆனை ஆடு என மாறுதல்போலத் தமிழ் யான் பழங் கன்னடத்தில் ஆனு என்ற வடிவத்தைப் பெற்றிருக்கவேண்டும். இலக்கியப் பேறு எய்தாதவை என்று முற்கூறிய மொழிகளில் எல்லாம் என் ஆனு நானு நா ஆகியவற்றுள் ஒன்றே வழங்கு கிறது. இம்மொழிகளில் ஒன்றிலேதானும் சமக்கிருத அஹமா தல் அஸ்மத் ஆதல் இவற்றின் திரிந்த வடிவமாதல் வழங் காமை குறிப்பிடற்பாற்று. முன்னிலையொருமையில் "நீ" என்பதே தமிழிலும் மலையாளத்திலும் வழங்க, அதனொடு ஒத்த நீவு என்பது தெலுங்கிலும், நீனு என்பது கன்னடத்திலும் வழங்குகின்றன. இப்பொருளுடைய சமக்கிருத "த்வம்" என்பதோ' அதனை ஒத்த சொல் பிறிதொன்றோ இம் மொழி களில் வழங்குதலில்லை. படர்க்கை யொருமையைக் குறிக்கத் தமிழிலும் மலையாளத்திலும் அவன் என்பதே வழங்குவதாக, அவனு என்பது கன்னடத்தில் வழங்குகின்றது. இப் பொரு ளுடைய தெலுங்கச் சொல் வாடு என்பது வேறுபட்டதுபோற் காணப்படினும், உண்மையில் அது "அவன்" என்பதன் வழியாக வந்ததேயாகும். மொழிக்கு முதலில் உள்ள ஒரெழுத்து நிலைமாறி வேறிடத்திற்குப் பெயருமாறுஞ் சேரு கின்ற இடத்திலே நீடலுடைத்து என்பது, மொழிநூற் கலை யறிஞர் கருத்து. உதாரணமாக, அவர் என்னுஞ்சொல் உகரச் சேர்க்கை விருப்பத்தால் அவரு என ஆவதன்கண் உள்ள முதலெழுத்தாகிய அகரம் இரண்டாமிடத்தின்கண் சேருங் கால் "வாரு" என்றாகும். அம் முறைப்படி உலகமொழிகள் பலவற்றில் மாறுதல் நிகழ்வதுண்டு. அதற்குக் காரணம், பின்னால் உச்சரிக்கவேண்டிய எழுத்து இன்னதென்று நினைக் கின்ற மனம் அதனை முன்னரே உச்சரித்துவிடுமாறு செய் வதும், ஒரெழுத்தை இழந்ததற்கீடாகப் பிறிதோரெழுத்தை

Koviloor Digital Library



நீட்டிவிடுமாறு செய்வதுமாம்.* அதனால், அவனு என்பதனோ டொக்கும் அவடு என்னுஞ் சொல் ஒரு காலத்தில் வழங்கி யிருக்கக் கூடியதாய் "வாடு" எனத் தெலுங்கில் திரிந்தது வியப்பன்று.

ஒன்று முதலான எண்ணுப் பெயர்கள் இம் மொழிகளிற் பெரும்பாலும் ஒத்தவடிவங்களைப் பெற்றிருப்பது நோக்கத் தக்கது. தமிழ்க் கன்று மலையாளத்திற் கன்னு ஆதல்போல ஒன்றென்பது ஒன்னு என அம் மொழியில் மாறிற்று. ஒண்டு என்று தெலுங்கில் வழங்குவது இன்றைக்கு என்பது இண் டைக்கு என்று யாழ்ப்பாணத்தில் வழங்குவதோடு ஒக்கும். கன்னடத்தில் ஒந்து என்று காணப்படுகிறது. தமிழ் இரண்டு என்பதோடு ஒத்த ரெண்டு என்ற வடிவு மலையாளத்திலுந் தெலுங்கிலும் வழங்குவதாக, எரடு என்பது கன்னடத்தில் வழங்குகிறது. இலை என்னுஞ்சொல் எலை என்று வழங்குதல் போல இரண்டு எரண்டு ஆதல் கூடும். பூண்டு பூடு என்பன வும், கூண்டு கூடு என்பனவும் ஒவ்வொரு சொல்லின் வெவ் வேறு வடிவாதல்போல எரண்டு எரடு என்பன சொல்லொன் றின் இருவேறு வடிவம் என்க.

பின்வரும் அட்டவணை கொண்டு இந் நான்கு மொழிகளி லும் வழங்கும் பிற எண்ணுப் பெயர்களின் பொதுத் தன்மையை அறியக்கூடும்.

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| மூன்று | மூன்னு | மூடு | மூரு |
| நான்கு<br>அல்லது<br>நாலு | நான்கு<br>அல்லது<br>நால் | நாலுகு | நால்கு<br>அல்லது<br>நாலு |
| ஐந்து<br>அல்லது<br>அஞ்சு | அஞ்சு | ஐது | ஐது |
| ஆறு<br>ஏழு<br>பத்து<br>நூறு | ஆறு<br>ஏழு<br>பத்து<br>நூறு | ஆரு<br>ஏடு<br>பதி<br>நூரு | ஆரு<br>ஏளு<br>ஹத்து<br>நூரு |

* இதனை Compensatory lengthening என்பர்.

Koviloor Digital Library



இவற்றுள், கன்னடத்திற் காணப்படும் நால்கு என்ற ஒரு வடிவம் பழந்தமிழிலக்கியத்தில் நால்கு என்றே காணப்படுவது குறிப்பிடற்பாற்று. "பால்புரை புரவி நால்குடன் பூட்டி" என்பது பொருநராற்றுப்படையில் வரும் ஓர் அடி.

"வளைகண் டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி"

எனப் பெரும்பாணாற்றுப்படையிலும் வந்துள்ளது. தமிழ்க் கோழி தெலுங்கிற் கோடி என்றும், கன்னடத்திற் கோளி யென்றும் ஆவதுபோலத் தமிழ் ஏழு ஏடென்றும் ஏளென்றும் ஆயின. பழங் கன்னடம் மொழிமுதற் பகரத்தைச் சிதைக்காது வைத்திருந்ததாக, இக்காலக் கன்னடமோ பெரும்பாலும் ஹகாரமாகத் திரித்துவிடுகிறது. தமிழ்ப் பசுவும் பாலும் ஹசுவும் ஹாலுவும் ஆகத் திரிவதை நிகர்த்துத் தமிழ்ப் பத்துக் கன்னடத்தில் ஹத்து எனத் திரிந்துவிட்டது. எட்டு என்று தமிழிலும் மலையாளத்திலுங் காணப்படுவதற்கேற்ப, எண்டு என்று கன்னடத்திலும் எநிமிதி என்று தெலுங்கிலுங் காணப்படுகின்றன. இவ்வெண்ணின் பண்டைய வடிவம் "எண்" என ஊகிக்கப்படுவதால், அது இந் நான்கு மொழிகளிலும் ஒவ்வொருவாறு காணப்படுகிறதென்க. தமிழிலும் மலையாளத்திலும் "ஒன்பது" வழங்குவதாக, கன்னடத்தில் "ஒம்பத்து" வழங்குகின்றது. தெலுங்கில் வழங்கும் தொம்மிதி என்பதோடு பழந்தமிழில் வழங்கிய "தொண்டு" என்பது ஒருவாறு ஒத்திருக்கவில்லையா?

"பாழெனக் காலெனப் பாகென ஒன்றென
இரண்டென மூன்றென நான்கென ஐந்தென
ஆறென ஏழென எட்டெனத் தொண்டென
நால்வகை யூழியெண் ணவிற்றுஞ் சிறப்பினை"

என்ற பரிபாடற் பகுதியிற் கடுவனிளவெயினனார் ஒன்பதைக் குறிக்கத் தொண்டு என்ற சொல்லை ஆண்டதைக் காண்க. மேலே காட்டிய ஒன்றுமுதற் பத்துகாறும் உள்ள வடிவங்கள் சமக்கிருத எண்ணுப் பெயரொடு ஒவ்வா. ஏக, த்வ, த்ரி, சதுர், பஞ்ச, ஷஷ், சப்த, அஷ்ட, நவ, தச என்ற அப் பத்துப் பெயர்களில் பஞ்ச என்பதோடு தமிழ் அஞ்சு என்பதும்

Koviloor Digital Library



அஷ்ட என்பதோடு எட்டு என்பதும் ஒருவாறு ஒப்புமை யுடையபோலத் தோற்றினும், அவ்வொற்றுமை போலியென்க. அஞ்சு என்பது ஐந்து என்பதன் திரிபே யாதலாலும், ஐ என்பதே அச் சொல்லின் அடிவேர் ஆதலாலும் பஞ்ச என்ப தோடு அஃதொவ்வாதென்க. எட்டென்பதன்கண்ணே எண் ணென்பதே பகுதியாதலாலும் டகரம் ஆண்டு எய்தியது பிற் காலத்திலாதலாலும், அஷ்ட என்பதோடு அஃதுறழாதென்க. தமிழ் நூறென்பதோடு சமக்கிருத சதம் பொருந்தாது என்று எடுத்துரைக்க வேண்டியதில்லை.

இனி, நிலம் நீர் தீ காற்று வான் ஆகிய அடிப்படையான பொருள்களைக் குறிக்குஞ் சொற்கள் தமிழினின்று மேற்கூறிய மொழிகளுக்குச் சென்றிருக்கக்கூடும் என்பதற்குரிய சான்று காண்பாம். கீழ்வரும் அட்டவணை அதற்குரிய சான்று.

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| நிலம்<br>மண்<br>புடவி | நிலம்<br>மண்ண. | நெல<br>மந்நு. | பொடவி. |
| நீர் | நீர்<br>(வெள்ளம்) | நீள்ளு | நீரு |
| தீ<br>நெருப்பு | தீ | நிப்பு | தீ<br>(பெங்கி) |
| கால்<br>காற்று | காட்ட | காலி | காலி |
| வான்<br>வானம்<br>விண் | வானம் | மிந்நு | பான்<br>பானு |

சிலர் நிலையென்பதை நெலை என்று கூறுவது போலவும் புடவை யென்பதைப் பொடவை யென்று பேசுவது போல வும், தமிழ் நிலம் என்பதை நெல என்று தெலுங்கரும் புடவி யென்பதைப் பொடவி என்று கன்னடியரும் வழங்குவர்

Koviloor Digital Library



என்க. தெலுங்கு "நீள்ளு" என்பது நீருலு என்பதன் திரிபாய் இருத்தல் கூடும். நீரு என்பதன் பன்மைப்பெயர் நீருலு என ஒரு காலத்து வழங்கியதாக, நீருலு நீருளு என மாறி இப்பொழுது நீள்ளு என வழங்குகிறதென்க. ரகர ழகரங்கள் சொல்லின் இடையில் வருவன அடுத்துவரும் மெய்யெழுத் தொலியோடிசைந்த ஒலியைப் பெறுமென்பது மொழி நூலார் கண்டது. தமிழ் இருபது கன்னடத்தில் இப்பது என மாறுவதும், எருமை "எம்மெ" என ஆவதும், தமிழ்ப் பொழுது தெலுங்கிற் "பொத்து" எனத் திரிவதும் இதனால் என்க. இக்காரணத்தாலே "நீருளு" என்று ஒருகாலத்து வழங்கியிருக்கக்கூடியது நீள்ளு என இக்காலத் தெலுங்கில் வழங்குகின்றது. தமிழ் நெருப்பு "நெப்பு" "நிப்பு" எனத் தெலுங்கில் வழங்குவது, பருப்பு "பப்பு" எனத் திரிந்து வழங்குவதைப்போன்றது. ஒரு சொல்லின் இடைப்பகுதியிலும் கடைப்பகுதியிலும் றகர டகரங்கள் தம்முள் தாம் மாறுதலுண்டு. உதாரணம், கெடுத்து என்னும் பொருளுடைய தெலுங்கச் சொல், "செச்சு" என்பது "செடுச்சு" என்பதன் திரிபு (தெலுங்குச் செடு = தமிழ்க் "கெடு"). அதுபோலவே தமிழ்க் காற்றும் மலையாளக் "காட்ட" என்பதும் ஒரு சொல்லின் வெவ்வேறு வடிவங்கள் என்க. வாழை "பாளெ" என்றும் வாழ் "பாளு" என்றும் வழங்குதல் போன்றே தமிழ்ச் சொல்லாகிய "வான்" என்பதே கன்னடத்தில் பான் எனவும், பானு எனவும் வழங்குகின்றது. வானம் மானம் என்றும், வண்ணான் மண்ணான் என்றும் யாழ்ப்பாணத்தில் வழங்குவன விண்ணு மிந்று என்று வழங்குகின்றவாற்றைப் புலப்படுத்தும். மண் கண் எனுந் தமிழ்ச் சொற்கள் தெலுங்கில் மந்து கந்று என்று வழங்குகின்றவாறே போல மிண் (விண்) என்றது மிந்து என மாறி வழங்கியிருக்கக் கூடும்.

(வரும்)



Koviloor Digital Library

# எண்ணெய்க் குடத்தில் எலி

"அரசு"

ஆசிரியர் வகுப்பில் பாடம் கற்பிக்கும்போது, மாணவர் அப் பாடத்தில் கருத்துச் செலுத்தாமல் இருத்தலும் உண்டு என்பதை விளக்க ஒரு கதை கூறுவர். அதனை என் இளமையில் யான் ஐந்தாம் வகுப்பில் படித்துவரும்போது, என் ஆசிரியர் என் பொருட்டாகவே கூறினர். ஆசிரியர் கூறுவதைக் கேளாது மாணவன் ஒருவன் அவ் வகுப்பின் ஒரு மூலையை உற்றுநோக்கிக்கொண் டிருந்தானும். பாடம் முடிந்த பிறகு, அவர், அவனை நோக்கி, "நான் சொன்னது தெரிந்ததா? (உன் செவியில்) நுழைந்ததா?" என்று கேட்டாராம். அச் சிறுவன், "வால் மட்டும் நுழையவில்லை" என்றானும். ஆசிரியர் செய்த ஆராய்ச்சியின் பயனாக, அம் மாணவன் உற்று நோக்கிய இடம், அங்கிருந்த சிறியதோர் எலிவளை, அதில் நுழைந்த எலி, அதன் வால் மட்டும் நுழையாமை—எல்லாம் விளங்கின. (அம் மாணவன் கவனிப்புக் குறைந்தவன் அல்லன்; ஆனால், வகுப்புப் பாடத்தில் கருத்துச் செலுத்துதல் என்பது பழமையும் வெறுப்புமாய்விட்டது; அதனால், எலி தன் வளையில் நுழைதலாகிய புதுமையில் விருப்பத்துடன் அவன் அறிவு செல்லுதல் இயற்கை என அகத்திணை வல்லோர் கூறுப.)

அம் மாணவனுக்கு மாறான மாணவர் பலரும் உலகில் இருந்தனர்; இருக்கின்றனர். அவருள் ஒருவர் என் 'தந்தையார்' திரு கீ. வே.; சிறியேனை என்னை அவர் 'என் மகன்' 'என் மகன்' என உலகறியக் கூறிப் பாராட்டிப் போற்றி மகிழ்பவர். ஆகலின், யான் மறக்கினும், என் நா மறக்கினும், எழுதும் கை மறக்கினும் தமிழுலகம் மறவாது அவர்தம் பேரன்பிற்குச் சான்று பகரும். அவர் தம் இளமையில், தமிழ் கற்கத் தொடங்கிய காலத்தே, தம் ஊரை விடுத்து அயலூர் சென்று, அங்கே வாழும் தமிழ் ஆசிரியரை அடுத்து, அவ் ஆசிரியர் இல்லத்திலேயே இருந்து உண்டு உறங்கிக் கற்று வந்தார். அப்போது நிகழ்ந்ததொரு நிகழ்ச்சியை

Koviloor Digital Library



அவர்தாமே கூற, யான் கேட்டவாறு இங்கே குறிக்கின்றேன். (நோய் வாய்ப்பட்டு உடல் மெலிந்து படுத்தவாறே கிடந்து உருகிக் கூறியவற்றுள் ஒன்றாகும் அது). அவர் கூறியது வருமாறு :—

" ஒரு நாள் முன்னிரவில் கூடத்தில் மரக் குத்துவிளக்கின் அருகே இருந்து தமிழ்நூல் ஒன்றைக் கற்றுக்கொண்டிருந்தேன். அவ் விளக்குச் சிறிய சுடர் விட்டு மினுக் மினுக் என ஒளிதர, அவ் ஒளியின் உதவியால் அந் நூலைக் கற்பதில் ஆழ்ந்திருந்தேன். ஆசிரியர் வெளியே திண்ணையின்மீது அமர்ந்திருந்தவர் திடீரென எழுந்து அங்கும் இங்கும் சுற்றிச் சுற்றி வந்தார் ; வெளியே சென்று நின்றார் ; உள்ளே வந்து நின்றார் ; நடை முழுதும் நடந்தார் ; மீண்டும் திண்ணையில் அமர்ந்தார் ; திண்ணையின் மூலை முடுக்கு மேல் கீழ் எல்லாம் பார்த்தார் ; உடனே எழுந்தார் ; நேராக உள்ளே சென்றார் ; மீண்டு வந்து குத்துவிளக்கருகே நின்றார் ; தம் துணைவியாரை அழைத்து விளக்கெண்ணெய்க் குடத்தைக் கொண்டு வருமாறு பணித்தார். எண்ணெய்க் குடம் வந்ததும் அதினின்றும் எழும் நாற்றத்தை அவரால் பொறுக்க முடியவில்லை. அதனுள் நோக்கி, எலி ஒன்று விழுந்து செத்து உடல் சிதைந்து குழம்பாய்க் கிடத்தலைக் கண்டார்.

அக் குடத்தை அங்கே அப்படியே விட்டுவிட்டு நேரே திண்ணைக்கு வந்து அமர்ந்து,

" எண்ணெய்க் குடத்தில் எலிவிழுந்து செத்ததனால்
திண்ணையெலாம் தீயமணம் வீசுதே—
.... .... .... ....
.... .... .... .... ."

என நான்கடியும் பாடி என்னைக் கேட்கச் செய்தார். அப்போதுதான், தீய நாற்றம் வீசுதலை உணர்ந்தேன். அந் நாற்றம் என் பக்கத்தே இருந்த குத்துவிளக்கிலிருந்து எழுதலையும் ஆராய்ந்தேன். நாற்றம் பொறுக்க முடியாமையால், ஆசிரியர் அங்கும் இங்கும் அலைந்ததும், எண்ணெய்க் குடத்தால் உண்மை கண்டவாறும் தெரிந்துகொண்டேன்.

Koviloor Digital Library



" ஆசிரியர் 'உணவில் உப்பு இல்லை' 'காரம் குறைவு' என்று அடிக்கடி குறை கூறுவார்; குறை கூறும்போதெல்லாம், அவர்தம் துணைவியார், 'அது இப்போதுதான் சாப்பிட்டுப் போனதே. அது ஒன்றும் குறை சொல்லவில்லையே, உங்களுக்கு மட்டும் உப்பும் காரமும் இல்லாமற் போய்விட்டனவோ' என்று சொல்வதுண்டு. உடனே ஆசிரியர், 'அவனா? அவனுக்கு என்ன தெரியும்? உப்பும் காரமும் தெரியுமா? அவனுக்கு என்ன வேண்டும்? நன்னூல் வேண்டும்; பிரபுலிங்கலீலை வேண்டும்; வேறென்ன வேண்டும்?' என்பார். எண்ணெய்க்குடத்தில் செத்த எலியால் எழும் நாற்றமும் அறியாமல் யான் கற்றுவந்த காலம் அது" என்றார்.



Koviloor Digital Library

# சங்ககாலத் தமிழ்மகன்

"ஔவை சு. துரைசாமி பிள்ளை"
செங்கைமா, செங்கம் (வ. ஆ.)

செந்தமிழ்ப் பெருஞ் சான்றோர்களே, தாய்மார்களே!

உங்களைத் தமிழ்பெருஞ் சான்றோர்களே என்று அடியேன் அழைக்கின்றேன். அங்ஙனம் அழைப்பதில் ஒரு கருத்துண்டு. சான்றோர்களாகிய நீங்கள் வாழும் இந்த இனிய நாடு 'சேந்தமிழ் நாடு' எனப்படுவது. நம் நாடு, நமது இந்தத் தென்னிந்திய நாடு, பண்டை நாளில் **சேர நாடு, சோழநாடு, பாண்டிநாடு** என மூன்று நாடுகளாக வகுத்து அறிவுடைய பெருமக்களால் ஆட்சி செய்யப்பெற்று, புலவர் பாடும் புகழும் ஓங்கி விளங்கி யிருந்ததென்பது நீங்களும் பிறரும் நன்றாக அறிந்த செய்தியா கும். அம்மூவகை நாடுகளில் **பாண்டிநாடு**, செந்தமிழ் நாடு என்ற பெயரைத் தனக்கே சிறப்பாகக் கொண்டிருந்தது. அந்நாட்டு நன்மக்கள் நீங்கள். தமிழ்மக்கள் என்றவிடத்து, அடியேனும் பிறரும் அடங்க நாம் அனைவரும் ஒருங்கே ஒன்றுபட்டு நிற் போம். செந்தமிழ் மக்கள் என்றவழி ; நீங்கள் அனைவரும் தனியே மிகச்சிறந்த நலமுடைய நன்மக்களாகின்றீர்கள். இக் கருத்தினாலேதான் செந்தமிழ்ப் பெருஞ்சான்றோர்களே என அழைக்கலானேன்.

பண்டைநாளில் நீங்கள் சொல்லும் அத்துணை உயர்ச்சி எங்கள் நாட்டிற்கு இருந்திருக்கலாம் ; இன்று உண்டோ என்று சிலர் ஐயுறலாம். செந்தமிழ் நாடு எனச் சொல்லும் பெயர் சான்றோர்தம் சால்பினால் இட்ட திருப்பெயராதலால் அஃது ஒருகாலும் பொய்படாது. இன்றும் இந் நெல்வேலி நாட்டில் முத்தமிழ் நெறிகள் வளம்பெற்றுத் திகழ்கின்றன. இயற்றமிழ்க்கும் இசைத்தமிழ்க்கும் இவையிரண்டும் விரவிய நாடகத் தமிழ்க்கும் நிகரற்ற புலமைகொண்டு திகழும் பெருமக் கள் இந்த நாட்டிலே தோன்றியிருக்கின்றனர். திரு. கா. சுப்பிர மணியபிள்ளை, திரு. வையாபுரிப்பிள்ளை, திரு. நெல்லையப்ப பிள்ளை முதலியவர்களும், திரு. சுந்தரமூர்த்தி ஓதுவார், திரு. இலக்குமணப் பிள்ளை முதலியவர்களும் மேலே குறித்த தமிழ்

Koviloor Digital Library



வகைகட்குத் தலைமைப் புலமை நலம் பெற்றுத் தமிழுலகு பரவும் தக்கோராய் உள்ளனர். இச் செந்தமிழ்நாட்டில் செம்மை நிலைக்கு உரிய சிறப்புத் தருவோர் "இலரல்லர், உளர்" என்ற கருத்து யாவர் மனத்தும் நிலைபெற நிற்றல்வேண்டும்.

பண்டைநாளில் வாழ்ந்த தமிழ்மகன் என்னது சங்ககாலத் தமிழ்மகன் என்றே இச் சொற்பொழிவின் தலைப்பு அமைந்துள்ளது. பண்டைக்காலம் என்பது ஒரு காலவெல்லைக்குள் அடங்காது பரந்த பண்பினதாய் இருக்கிறது. சங்ககாலம் என்றவழி, முற்காலத்தே நம் செந்தமிழ் நாட்டில் சங்கம் இருந்து தமிழ்த் தொண்டாற்றித் தனிப்பெருஞ் சிறப்பெய்தியிருந்த காலம் என்ற உணர்வு நம் உள்ளத்தில் எழக் காண்கின்றோம். ஆயினும் இச் சங்ககாலம், இத்துணை ஆண்டுகட்கு உட்பட்ட காலம், மேற்பட்ட காலம் என எண்ணிட்டுக் காண முடியாத நிலையில் உள்ளது. சங்கத்தின் உண்மையையே ஐயுறுவோரும், ஐயுற்றுச் சங்கமென்பதே இருந்ததில்லையென்போரும், உண்டென்போரும், கிறிஸ்து பிறப்பதற்கு முன்னென்போரும் பின் என்போரும் எனப் பல திறத்தராய் ஆராய்ச்சியாளர் உளர். மற்று, நம் செந்தமிழ்மொழிக்கண் பழைய நூல்கள் பல சங்க இலக்கியங்கள் என்ற பெயரால் வழங்கி வருகின்றன. அவ்விலக்கியங்கள் தோன்றி நிலவிய காலமே சங்க காலமாம் என்ற பொது எல்லையை ஈண்டுக் கால வெல்லையாகக் கொள்கின்றேன். அவ்விலக்கியங்கள் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க் கணக்கு என மூவகையாய் இயலுகின்றன. இவை எழுந்து வளர்ந்து சிறந்த காலம், சங்ககாலம் இன்றேல், இவை சங்க இலக்கியம் எனப்படா.

பத்துப்பாட்டு என்பது ஒரு தொகை நூல். இதன்கண் திருமுருகாற்றுப்படை முதலாகக் கூத்தராற்றுப்படை ஈறாகப் பத்துப் பெரும்பாட்டுக்கள் உள்ளன. இவற்றுள் இயற்கையின் இனிய காட்சி இனிது காட்டப்பெறுகிறது. அக்காட்சியைக் காட்டும் கட்டுரைகள் இலக்கணவரம்பு கடவாது, உள்ளம் கொள்ளத்தக்க அளவில் நின்று இன்பம் சுரப்பிக்கும் திறம் எண்ணுந்தோறும் நமக்கு இறும்பூது தருகின்றது. இதனால்

Koviloor Digital Library



உந்தப்பட்ட உள்ளமுடையராய திரு. P. சுந்தரம் பிள்ளையவர்கள் தாமெழுதிய மனோன்மணீயத்தில், "பத்துப்பாட்டாதி மனம் பற்றினர் பற்றுவரோ, எத்துணையும் பொருட்கிசைவில் இலக்கணமில் கற்பனையே" எனப் பொங்கிப் புகழ்ந்து கூறுகின்றார். எட்டுத் தொகை என்ற தொகுதியுள் நற்றிணை முதல் புறநானூறு ஈறாக எட்டு நூல்கள் உள்ளன. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன அவ்வெட்டுமாகும். மற்றொரு தொகுதி பதினெண்கீழ்க் கணக்கு எனப்படும். இத் தொகைக்கண் தலையாய நூல் திருக்குறள். இங்கே ஒன்று குறிக்க விரும்புகின்றேன். கீழ்க்கணக்கு என்ற தொடரால், இந் நூல்களுள் ஏதோ கீழ்மை இருப்பதாக நினைத்தல் கூடாது. கீழ்க்கணக்கு என்றது, பாட்டுக்களின் அடிவகையால் வகுக்கப்பெற்றதோர் இலக்கணம். இவை ஒவ்வொன்றும் பாட்டழகாலும், பொருள் நலத்தாலும் மிக்க வீறு உடையவையாகும். "வள்ளுவர் செய் திருக்குறளை மறுவற நன்கு உணர்ந்தோர்கள், உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக் கொரு நீதி" என்பது முதலாகக் கூறவரும் சிறப்புரைகள் திருக்குறளின் நிகரற நிறைந்து, உயர்வற உயர்ந்து நிற்கும் ஒள்ளிய மாண்பினை ஓதுகின்றன. இவையனைத்தும் சங்க நூல்கள் எனப்படுதலால், இவை எழுந்து நிலவிய காலத்தே, தமிழ் வழங்கும் இந்நாட்டிற் பிறந்து, மொழிபயின்று, பெருவாழ்விற் சிறந்த மகனொருவன் ஒழுகலாற்றைக் கூற நினைத்தே, இத்தலைப்பு, "சங்ககாலத் தமிழ் மகன்" என எழுவதாயிற்று. இந் நெறியே சங்ககாலத்துத் தமிழ் மகள், தமிழ்ச் செல்வர், தமிழ் அரசர், தமிழ் வீரர் எனப் பல வகையாக வகுத்துக் கூறலாம். அவ்வெல்லாம் கூறலுறின், காலம் பெருகுமென்றும், சங்ககாலத்துத் தமிழ் மகனது வாழ்க்கை நலத்தை மட்டில் வடித்து ஒரு சிறிது காட்ட வேண்டுமென்றுமே இவ்வண்ணம் கொள்ளல் வேண்டுவதாயிற்று.

சங்ககாலத்தே தமிழ்மகனது வாழ்வு அகவாழ்வு, புறவாழ்வு என இரண்டு கூறு செய்து உரைக்கும் வகையில் இயன்று வந்தது. பிறந்து மொழிபயின்று அறிவும் ஆண்மையும் பெற்று மணம்புரிந்து மனைவாழ்க்கை தொடங்

Koviloor Digital Library



குங்காறும் பெற்ரோர்க்கு அடங்கிநின்று வாழ்ந்துவரும் அவன், மனைக்கண் இருந்து நல்லறம் செய்து ஒழுகியது அகவாழ்வு, அகவொழுக்கம் என்றும்; மனையறம் செய்வதற்காகப் பொருளீட்டல், வினைசெய்தல் முதலியன குறித்துப் பிரிந்து சென்று ஒழுகுவது புறவாழ்வு, புறவொழுக்கம் என்றும் சான்ருேர் கூறுவர். ஒழுக்கத்தை இலக்கணப் பேரறிஞர் திணையென்று சுட்டி, அகவொழுக்கத்தை அகத்திணையென்றும், புறவொழுக்கத்தைப் புறத்திணையென்றும் வழங்கினர்.

அகத்திணைக்கண் நல்லறம்புரிந்து நாடுபுகழும் பீடுபெற நிற்கும் தமிழ்மகன் இளமைப்பருவத்தே அவனைப் பெற்ற தாயாரால் நல்லறிவு கொளுத்தப் பெறுகின்ருன். அவனது உடல் வளம்பெற வளர்த்தலை அவன் தாய் தன் கடனுகக் கொண்டு, உடல்வளர்ச்சி அறிவொடு வளர உழைக்கின்ருள். காலம் கிடைக்கும்போதெல்லாம் அவனுக்குக் கடமைக்கண் கருத்து ஊன்றி நிற்குமாறு செய்கின்ருள். தாய் தனக்கு வழங்கும் பாலொடு அவள் வரைந்து உணர்த்தும் அறிவும் ஒருங்குபெற்று வளரும். அவன் உடலில், ஓடும் குருதியில் அத் தாயது பாலும் நல்லறிவும் கடமையுணர்வும் ஒருங்கு ஓடுகின்றன. மகனே,

> "ஈன்று புறந்தருதல் என் தலைக் கடனே
> சான்ருே ஞக்குதல் தந்தைக்குக் கடனே
> நல் நடை நல்கல் வேந்தற்குக் கடனே"

என உணர்த்தி 'நின் தலைக் கடன் இதுவென்பாள், ஒளிறுவாள் அருஞ்சமம் ததைய நூறிக், களிறு எறிந்து பெயர்தல் காளையாகிய நினக்குக் கடன்' என்று வற்புறுத்துகின்ருள். மேலும் ஒருமகன் வாளா உடல்வளர்ச்சி பெறுவதுமட்டில் அறமாகாது; நலமும் தாராது; உடல் வளர்ச்சியொடு கல்வியறிவு சிறக்கப்பெறுதல்வேண்டும் என்பது சங்ககாலத் தமிழ்மக்கள் கொண்டிருந்த சீரிய கொள்கை. இதனைப் பெற்ருேரும், சுற்றமும், பிறரும் வற்புறுத்துவது இன்றும் என்றும் காணும் இயல்பாகும். ஆனல், பண்டைநாளில், அரசப்பெருமக்களே

Koviloor Digital Library



கல்வியின் இன்றியமையாமையை வற்புறுத்தியிருக்கின்றார் கள். தமிழ்மன்னன் ஒருவன் தன் கோல் நிழலில் வாழும் மக் களை நோக்கி,

" உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனம்திரியும்;
ஒரு குடி பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும் "

என்று வற்புறுத்துகின்றான். ஒரு பெரியவர், வாழ்நாள் மிகுதியாகியவழியும், தமக்கு நரையோ திரையோ உண்டா காமல் இருந்தார். அது கண்ட அறிஞர் சிலர் அவரை நோக்கி. இதற்குக் காரணம் என்னை' என வினவினர். அவர்கட்கு அவர், " என் மனைவி, மக்கள் முதல் அனைவரும் என் கருத்திற் கேற்ப ஒழுகும் இயல்புடையவர். வேந்தனும் அல்லவை செய்வதிலன். சான்றோர் பலர் யான் வாழும் ஊரே " என்றார். எனவே, சான்றோர் இனத்தனாய், கல்வியறிவு சிறந்து நிற்பது தனக்கு இன்றியமையாதது என்பதைச் சங்க காலத் தமிழ்மகன் இனிதறிந்து ஒழுகிய திறம் நாம் காண் கின்றோம்.

சங்ககாலத் தமிழ்மகன், தன் வாழ்வில், உடல் வளர்ச்சி கருதாது உயிர் வளர்ச்சியொன்றே கருதி, கல்வி பயின்று அறிவுபெற ஆர்வம் கொண்டான் என்பவர் அவனது இயல்பை அறியாதவராவர். உடல் உரம்பெறுவதற்கேற்ற ஆள்வினைக் கண் அவனது உள்ளம் அழுந்திய பயிற்சி பெற்றிருந்தது. வாளேந்திப் போருடற்றிச் செய்வன செய்தல் தன் கடன் என் பதை அவன், தாயால் இளமையிலேயே வற்புறுத்தப் பெறு கின்றான். நீரில் நீந்துதல், யானை குதிரை முதலிய இவர்ந்து செல்லுதல், வாட்பயிற்சி, விற்பயிற்சி முதலியன பயின்றிருந் தான். இதனை நன்குணர்ந்த கம்பனும், இராமன் வாயில் வைத்து, " மதிதரு தனயரும் வலியர்கோல் " என்று வினவு கின்றான். உடல் வளர்ச்சிக்குப் படைப் பயிற்சியும், அறிவு

Koviloor Digital Library



வளர்ச்சிக்குக் கல்வியும் வேண்டுவனவாம் என்பதைச் சங்க காலத் தமிழ்மகன் நன்கு அறிந்திருந்தான். உடல் வன்மை யால் மனத்திட்பமும் வினைத்திட்பமும் பிறக்கும் என்பது அவனது உள்ளக்கிடை. வீரமகனொருவன், மனக்கினிய மக ளொருத்தியை மணம்புணரும் காலத்தே, அரசனது போர்ப் பறை முழங்கக் கேட்டான். ஒருத்தியை மணந்து நுகரும் இன்பத்தினும், தன் நாட்டிற்கு உற்ற இடர் நீக்குதலால் உள தாகும் இன்பம் பெரிதெனக் கருதி, மணத்தைத் தள்ளிவைத் துப் போர்க்குச் செல்கின்றான்.

> " விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
> சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
> மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ,
> ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
> நீளிலை யெஃக மறுத்த உடம்பொடு
> வாரா உலகம் புகுதல் ஒன்றெனப்
> படைதொட் டனனே குரிசில் "

என்று பரணர் கூறுகின்றார்.

இவ்வண்ணம் கல்வியறிவும் உடல் வன்மையும் ஒருங்கு பெற்றுத் திகழும் தமிழ் மகனுக்குத் திருமணம் செய்விக்கும் எண்ணம் இந்நாளில், பெற்றோர்க்கு அமைகின்றது. அந்நாளில் அங்ஙனம் இல்லை. தக்கோனாய் மணப்பதம் பெற்ற மகன், தன் மனம் விரும்பும் மாண்புடைய மகள் ஒருத்தியைத் தானே தேர்ந்து காண்கின்றான். அவளது மனவொருமை யைப் பல நெறிகளால் ஆராய்கின்றான். கற்பின் திண்மை யைக் களவில் ஒழுகிக் காண்கின்றான். பின் தன் களவு நெறி உலகறிய வெளிப்படுக்கின்றான். " அம்பலும் அலரும் களவு வெளிப்படுத்தலின், அங்கு அதன் முதல்வன் கிழவன் ஆகும் " என்றே ஆசிரியர் தொல்காப்பியனார் உரைக்கின்றார். பின்னர், பெற்றோர் மணத்திற்கு இயைந்து மணம் புணர்விக்கின்றனர்.

மனைவாழ்க்கையின் மாண்பு குறித்து அவன் செய்யும் திறம் மிக்க வியப்புத் தருவதாகும். தான் நடத்தும் வாழ்க்கை தன் நலமே குறித்த வாழ்வாதல் கூடாது. ஈதலும் இசைபட

Koviloor Digital Library



வாழ்தலுமே மனைவாழ்க்கை. தன் வாழ்வு ஏனை எவ்வகை மக்கட்கும் ஏமம் பயக்கும் வாழ்வாதல் வேண்டும். தான் ஈட்டிய பொருளைத் தானே நுகர்தலின்றி, பிறர்க்குப் பல்லாற்றாலும் பயன்படுத்துகின்றான். தனக்கும் பிறர்க்கும் பயன்பட வாழ வேண்டிய தமிழ்மகன் பொருள் ஈட்டல் கருதிக் கலங்கள் ஏறிக் கடல் கடக்கின்றான். நிலவரையிலும் நாடிடையிட்டும் காடிடையிட்டும் செல்கின்றான். செல்பவன் தன் மனைவியின் பிரிவாற்றாமை கண்டு தெருட்டு முகத்தால் வாழ்வின் குறிக்கோளை நன்கு வற்புறுத்துகின்றான். அவன் பிரிந்தவழி, அதனை அவன் மனையுறையும் மகளிர் பேசிக்கொள்வதால் நாம் இனிது அறியலாம்.

> " அறந்தலைப் பிரியாது ஒழுகலும், சிறந்த
> கேளிர் கேடுபல வூன்றலும், நாளும்
> வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல் "

என்றும்,

> " அறன்கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்
> பிறன்கடைச் செலாஅ செல்வமும் இரண்டும்
> பொருளின் ஆகும் புனைஇழை "

என்றும் பொருளைக் கருதித் தமிழ்மகன் வாழ்ந்திருக்கின்றான். இவ்வண்ணம் தானும், தன் நாட்டுமக்களும் பொருட்குறைபாடின்றி இனிது வாழ்தல் வேண்டும்; நாட்டில் வறுமை தோன்றின், (நாட்டவர் மனத்தே நல்ல எண்ணங்கள் வற்றிவிடும்;) நல்லறிவு மாயும் என்று அஞ்சி, அவன், " செல்வம் என்பது சேர்ந்தோர் புன்கண் அஞ்சும் மென்கட் செல்வம்" என்று பிறர்க்கென வாழ்தலைப் பொருளாகப் பேணி வாழ்ந்துவந்தான்.

தான் ஈட்டிய பொருளைத் தானும் ஏனைத் தமிழ்மக்களும் பிறரும் பெற்று இன்பவாழ்வு நடத்தவேண்டும் என விரும்பும் அத் தமிழ்மகனுக்கு வேறொரு கடமையும் உண்டாகின்றது. நாட்டுக்குப் பகைவரால் உண்டாகும் கேடும் அச்சமும், வாழ்க்கையின்பத்தைச் சிதைக்கும் என்ற எண்ணங் கொள்கின்றான். அதனால், தன் நாட்டிற் காவல் குறித்துப் போர் செய்தற்கும், பிற வினை செய்தற்கும் அவன் உள்ளங்கொண்டு, அது

Koviloor Digital Library



குறித்து வினை செய்வதும் கடமை என்பதை உணர்கின்றான். தான் இளமையிற் பெற்ற கல்வி, நாட்டின் நலம் கருதிச் செய்வன செய்தற்குப் போதிய துணை செய்யாமை கண்டவழி, நிரம்பிய கல்வி பெறுவதும் கடன் என்று தெளிகின்றான். ஒருகால் ஒரு தமிழ்மகன் கல்வி குறித்துப் பிரிந்திருந்தபோது, அவன் பிரிவாற்றாது வருந்திய அவன்றன் மனைமகளிர், வாடைக்காற்றை நோக்கிக்கூறுவாராய், "ஏ, வாடைக்காற்றே,

> தமியோர் மதுகை தூக்காய் தண்ணென,
> முனிய அலைத்தி, முரண்இல் காலை
> கைதொழு மரபின் கடவுட் சான்ற
> செய்வினை மருங்கின் சென்றோர் வல்வரின்,

நீ, கரிகாலனோடு வாகையென்னுமிடத்தே ஒன்பது வேந்தர் ஒன்றுகூடி எதிர்த்தபோது, அவனால் 'அலைப்புண்டு தம் கொற்றக்குடை இழந்த அந்தப்

> ' பீடில் மன்னர் போல
> ஓடுவை மன்னால் வாடைநீ எமக்கே"

என்கின்றனர். இங்கே, தமிழ்மகன் மேற்கொண்ட கல்வியை, "கைதொழு மரபின் கடவுட்சான்ற செய்வினை" என்கின்றனர். அரசுமுறையாயினும், வாழ்க்கைமுறையாயினும் அவ்வதற்கு வேண்டிய கல்வியறிவு இல்வழிச் சிறவாது என்பதற்காகக்,

> " காவற் சாகாடு உகைப்போன் மாணின்,
> ஊறின் றாகி ஆறுஇனிது படுமே;
> உய்த்தல் தேற்றா னாயின், வைகலும்
> பகைக்கூழ் அள்ளல் பட்டு
> மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே"

என்று இளந்திரையன் கூறுகின்றான்.

நாட்டின் காவல் குறித்துப் போருடற்றி உயிர்கொடுப்பது நல்வினையென்றும், அவ்வாறு உயிர்கொடுத்துப் புகழ்கொள்வோரே சிறந்தோர் என்றும் தமிழ்மகன் கருதியிருந்தான். அக் கருத்தை அவனேயன்றி, அவன் மகளிரும் இனிதறிந்து இருந்தனர். பகைவருடன் போருடற்றச் சென்ற தமிழ்மகன் ஒருவன்றன் மனைமகளிர்,

Koviloor Digital Library



“ நோற்ருேர் மன்ற தாமே கூற்றம்
கோளுற விளியார் பிறர்கொள விளிந்தோர் எனத்
தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர் ”

என்று பேசிக்கொள்கின்றனர். இந்நெறியில் மகளிர் வீரத் தீ எரிய நிற்கும் உள்ளமுடையராதலைச் சங்ககாலத் தமிழ்மகள் இயலறியும் நெறியிற் புலப்படும்.

மனைவாழ்க்கையில் பொருளீட்டல், கல்வியறிவு பெறுதல், வினைசெய்து நாடுகாத்தல் முதலியன செய்தொழுகும் தமிழ் மகன் மகப்பேறு குறித்து மகிழ்கின்ருன். மக்களையில்லாத வாழ்க்கையை விரும்புவதிலன். “ மக்களை இல்லோர்க்குப் பயக் குறையில்லை தாம்வாழும் நாளே ” என்று கூறுவன். பெற்ற மக்கள் தம் குடியின் உயர்ச்சிக்கு உழைத்தல் வேண்டுமெனக் கருதுகின்ருன். அன்ன மக்களைப் பெற்ருேரை வாயார வாழ்த்தி மகிழ்வன்.

“ எண்ணியல் முற்றி ஈரறிவு புரிந்து,
சால்பும் செம்மையும் உளப்படப் பிறவும்
காவற் கமைந்த அரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பயந்தவை ”

என்று பாராட்டுதலைக் காண்க.

இனி, இவனது உள்ளத்தே கடவுள் உணர்ச்சி வீறுபெற்று நிற்கின்றது. “ பல்லோரும் பரம்பொருள் ஒன்று உண்டு; அதன் பால் பரிவுகோடு பரசி வாழ்தல் எல்லோரும் செய்கடனும் ” என்று கருதி வாழ்பவன். இவன் ஆண்டவனை வழிபட்டு வேண்டுவன மிக்க வியப்புத் தருவனவாம். சங்க காலத்தே ஏனை நிலத்து மக்கள் வேண்டியன வேறு. பிறர் அழிவதையும், பிறர் ஆக்கம் கெடுவதையும் பொருளாகக் கருதி ஆண்டவனை வேண்டினர் பிறர்; தமிழன்,

“ யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமு மல்ல,
அருளும் அன்பும் அறனும் மூன்றும் ”

என்றும்,

Koviloor Digital Library



"யாமும் எம் சுற்றமும் பரவுதும்,
ஏம வைகல் பெறுகயாம் எனவே"

என்றும் வேண்டுகின்றான்.

இங்ஙனம், சங்ககாலத் தமிழ்மகன், தன் வாழ்க்கையைத் தனக்கேயன்றிப் பிறர்க்கும் தன் நாட்டின் நலத்துக்கும் எனக் கருதிச் செலுத்தி, ஆண்டவன் வழிபாட்டை மறவாது, மேற்கொண்டு, அவ்வழிபாட்டிலும் தன் வாழ்வின் குறிக்கோள் கைகூடுதற்கு ஆக்கமாகும் அருள், அன்பு, அறம் என்ற மூன்றுமே விரும்பியிருந்த நிலையை, இற்றைநாளில் மக்கள் அறிந்து நலம் பெறுவாராக என வேண்டி என் சொற்பொழிவை இவ்வளவில் நிறுத்திக்கொள்கின்றேன்.



Koviloor Digital Library

# எங்கள் தபால்

"அ. வீர. அ. சேவு. சுப்பய்யா, சிட்குயின்"

வேற்சாமிக் கவிராயர் என்பவர் நல்ல அறிவாளி. நன்கு தமிழ்ப் பயிற்சியும், எதனையும் ஆழ்ந்து நோக்குந் தன்மையும், வாக்கு வன்மையும் உடையவர். "கவிபால சரசுவதி" என்று பட்டமும் பெற்றவர்.

ஒரு திங்கள், எங்கள் சிற்றூரிலிருந்து, நானும் வேற்சாமிக் கவிராயரவர்களும் நடராயபுரம் என்ற ஓர் ஊருக்கு ஒரு வேலையின் நிமித்தமாகச் சென்றிருந்தோம். அன்றையதினம் மாலை ஏறக்குறைய ஐந்துமணிக்கு ஒரு தபால் எழுதிக்கொண்டு அவ்வூரின்கண் உள்ள தபால் நிலையத்திற்குச் (Post office) சென்று அங்குள்ள தலைமையதிகாரியிடம், ஓர் அணாத் தபால் முத்திரை ஒன்று கொடுக்குமாறு கேட்டோம். அவர் அதுபோதுதான் எல்லாவற்றையும் பூட்டிக்கொண்டு வெளிவந்துகொண்டிருந்தாரானதால், நாங்கள் தபால் முத்திரை கேட்டதற்கு அவர், எல்லாவற்றையும் பூட்டியாய்விட்டது. இன்றைக்கு இனிமேல் தபால் முத்திரை கொடுக்க முடியாது; கட்டாயமான தபாலாயிருந்தால் தபால் முத்திரை ஒட்டாமலே போடுங்கள். இல்லாவிடில், நாளைக்கு வாருங்கள் என்று கூறினார். அதற்கு நாங்கள், மிகவும் முக்கியமான தபாலென்றும், தபால் முத்திரை ஒட்டாமல் போட்டால் திரும்பிவந்தாலும் வந்துவிடுமென்றும், அவசியம் இன்றைய கட்டுக்கே சேரவேண்டுமென்றும் வேண்டிய வரை சொல்லித் தபால் முத்திரை கொடுக்குமாறு வேண்டியும், அவர் விடையொன்றுஞ் சொல்லாமல், கொடுக்க மறுத்துவிட்டுச் சென்றார்.

அத் தபால் நிலையத்திற்கு அடுத்துள்ள ஒரு பெரிய வேப்பமர நிழலில் பெரிய திண்டு ஒன்று கெட்டிச் சாந்தினால் (Cement) நன்கு கட்டியிருந்தது. அதில் ஒருவர் கம்பராமாயணம் படித்து அதற்குப் பொருள் சொல்லிக்கொண்டிருந்தார். பலர் கேட்டுக்கொண்டிருந்தனர். அவ்

Koviloor Digital Library



விடத்தில் அத் தபால் நிலையத் தலைமை யதிகாரியும் (Post master) சென்று கேட்டுக்கொண்டிருந்தார். நாங்களும் தபால் நிலைய முகப்புத் திண்ணையிலிருந்தவாறு, அவரதற்குப் பொருள் சொல்லுவதைக் கேட்டுக்கொண்டிருந்தோம். அது போது அவர் அயோத்தியா காண்டத்தில் கைகேயி சூழ் வினைப் படலத்தின் கடைசியில், இராமனுக்கு முடிசூட்டு நாளன்று இராமன், கைகேயி தயரதனுடன் அரசமாளிகையி லிருந்துகொண்டு தன்னை வரச்சொன்னு ளென்றறிந்து, அங்குச் சென்று அவ் விருவரையுங் காணுமல், கைகேயி மாளிகையை அடைகின்றபோது,

ஆயன நிகழும் வேலை அண்ணலு மயர்ந்து தேருத்
தூயவ னிருந்த சூழ றுருவினன் வருத னேக்கி
நாயக னுரையான் வாயா,னுனிது பகர்வ னென்னுத்
தாயென நினைவான் முன்னே கூற்றெனத் தமியள் வந்தாள்.

என்ற கவியைப் படித்துவிட்டு, அதற்கு, 'இராமன், தயரதன் இருக்குமிடத்தில் இல்லாமையால் சோர்வுற்றுத் தேருமல் தயரதன் எங்குள்ளா னென்று அவன் அப்போது இருக்குமிடத்திற்கு வருதலைக் கைகேயி கண்டு, அரசன், 'பரதன் நாடாள்வான் நீ காடேகு' என்று வாயால் சொல்ல மாட்டான் ; இதனை நானே கூறுவே' னென்று சொல்லித் தாயென்று நினைப்பவன் முன்னே எமன்போலவந்தாள்' என்று கூறிவிட்டு, அடடா என்ன கொடியவள் இப்படியுங் கூற மனந் துணிந்ததா என்றார். மற்றவர்களும் அதை ஆமோதிப்பதைப் போல் மிகவுங் கெட்டவ ளென்றும், துரோகி யென்றும், கல் நெஞ்சினள் என்றும் சொன்னுர்கள். அதுபோது வேற் சாமிக் கவிராயரவர்கள் என்னிடத்தே, 'கைகேயி மிகவும் நல்லவள். அவளா கொடியவள் ; நீங்கள் அக் கவிக்குப் பொருள் கூறியது சரியன்று' என்று கம்பராமாயணம் படித்துக்கொண் டிருந்தவரிடம் கூறுமாறு சொன்னுர்கள். யானும் அப்படியே போய்க் கம்பராமாயணம் படித்துக் கொண்டிருந்தவரிடம் கூறினேன். அதற்கவர், 'கைகேயி எப்படி நல்லவளாவள். நான் பொருள் சொன்னதில் என்ன குற்றம்' என்று, யான் மிக இளைஞனுயிருந்தமையால் முகத்

Koviloor Digital Library



தில் கோபக்குறி தோன்ற வினவினர். உடனே வேற்சாமிக் கவிராயரவர்களும் அவ்விடத்திற்கு வந்து, 'ஆம் அது, உண்மையே; கைகேயி எல்லாருக்கும் மிகவும் நல்லவளே. நீங்கள் அக் கவிக்குப் பொருள் கூறினதும் குற்றமே' என்று கூறினர். கூறினதும் உடனே அவர்கள் வேற்சாமிக் கவிராயரை அமரும்படி செய்து, கம்பராமாயணப் புத்தகத்தை அவர் கையிற் கொடுத்து, அக் கவிக்குச் சரியாகப் பொருள் கூறுமாறும், கைகேயி எப்படி எல்லாருக்கும் நல்லவளாவள் என்பதைக் கூறி விளக்கும்படியும் வேண்டினர்கள்.

வேற்சாமிக் கவிராயரவர்களும், 'கைகேயி, தோற்றத்திற்கு எமனாக வந்தாளே யன்றி, உண்மையில் எமனல்லள்.

கைகேயி எப்படி எல்லாருக்கும் நல்லாள் என்றால், நீங்கள் இதற்கு முன் படித்த மந்தரை சூழ்ச்சிப் படலத்திலேயே,

அரக்கர் பாவமு மல்லவ ரியற்றிய வறமும்
துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்
இரக்க மின்மையன் றோவின்றிவ் வுலகங்க ளிராமன்
பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின் றதுவே.

(துரக்க-தூண்ட. நல்லருள்-நல்மொழி. துறந்தனள்-கைவிட்டனள். தூ-தூய்மை. மடம்-இளமை. தொல்-பழைய. உலகங்கள்-உலகங்களில் உள்ளார்.)

என்று கூறியபடி, கைகேயி கருணையைக் கைவிட்ட குற்றம் இராமாயணத்துக்குக் காரணமாய்க் குணமாயிற் றென்று கவியே கூறியிருக்கிறானன்றோ! அதாவது: (பொருள்) இராவணாதி இராக்கதர்கள் செய்த தீவினையும், அவரல்லாதவர் செய்த நல்வினையுந் தூண்டக், கைகேயி தனக்கு இயல்பாக உள்ள இரக்கத்தைக் கைவிட்டாள். அவளுக்கு இரக்கமில்லாமையினாலன்றோ முற்காலத்தும், தற்காலத்தும், பிற்காலத்தும் எல்லா வுலகத்தினரும், உலகெல்லாம் பரவிய இராமனது பழம்புகழ் கூறுவதாகிய இராமாயண அமுதத்தை (செவியால் மனவயிறு நிரம்ப) உண்ணுவதற்குக் காரணமாயிற்று. இதுவன்றி, இனி வருங் குகப்படலத்திலும்,

Koviloor Digital Library



சுடுமயா னத்திடைதன் துணையேகத்
தோன்ற றுயர்க் கடலினேகக்
கடுமையார் கானகத்துக் கருணையார்
கலியேகக் கழற்கான் மாயன்
நெடுமையா லன்றளந்த வுலகெல்லாந்
தன்மனத்தே நினைந்து செய்யும்
கொடுமையா லளந்தானை யாரிவரென்
றுரையென்னக் குரிசில் கூறும்.

என்று வருகின்றது. (துணை - கணவன்; வாழ்க்கைத்துணை) தோன்றல் - மகன். கடுமை - கொடுமை, வன்மை. ஆர்கலி - சமுத்திரம். கருணை ஆர்கலி - கிருபா சமுத்திரமான இராமன். கழல் - வீரகண்டை.)

அதாவது: 'தன் உயிர்த்துணையான கணவன் உயிரற்ற பிணங்களைச் சுடும் சுடுகாட்டை அடையவும், தன் புதல்வன் துன்பக் கடலில் செல்லவும், கருணைக்கடலான இராமன் கடினமான கற்களும் முட்களும் மிகுந்த காட்டிற்செல்லவும், அக்காலத்தில் நெடுமால் திருவடி நெடுமையால் அளந்த உலகங்கள் யாவையும் இக்காலத்தில் தான் செய்த கொடுமையா(ன நெடுமையா)ல் அளந்த கைகேயியை, 'இவர் யார் என்று கூறு' எனக் குகன் வேண்டப், பரதன் கூறுவான்' என்பது.

கைகேயி செய்த கொடுமை, அறியாது செய்ததன்று; ஆராய்ந்து துணிந்து அறிவோடு கூடிச் செய்ததென்பது குறிக்கத் 'தன்மனத்தே நினைந்து செய்யும் கொடுமை' என்றார்.

திரிவிக்கிரமாவதார மெடுத்து ஈரடியால் மூன்றுலகங்களையும் அளந்த காலத்தில் திருமாலின் பாதம் பரவாத இடம் எங்குமில்லை; எங்கும் எல்லாராலும் உணரப்பட்டதனால் கைகேயியின் கொடுமை பரவாத இடமும் எங்கும் இல்லை; என்ற கருத்து இனிது விளங்க, 'மாயன் நெடுமையால் அளந்த உலகெல்லாம் கைகேயி கொடுமையால் அளந்தாள்' என்று கூறிய கவியின் சாதுரியம் கண்டு களிக்கத்தக்கதன்றோ!

திருமாலும் கைகேயியும் வரங்கேட்டபோது மெல்லியராகக் காணப்பட்டனர்; வரங்களும் எளியனவாகத்

Koviloor Digital Library



தோன்றின; கொடுத்த வரங்களை நிறைவேற்றும்படி வற்புறுத்திய காலத்தில் இருவரும் வன்மை காட்டினர். வரங்களின் வன்மையும் வெளியாயின. திருமாலின் வன்மை நெடுமையாகவும், கைகேயியின் வன்மை கொடுமையாகவும் உருக்கொண்டன; அந்த நெடுமையும், கொடுமையும் வரங்கொடுத்தாரை மண்வாழ்க்கையைத் துறக்கச் செய்தன என்று உவமான உவமேயங்களில் கவி எவ்வளவு ஒற்றுமை நயமாகக் கூறியிருக்கிறார்! மாவலியின் ஆட்சியிலிருந்த மண்ணையும் விண்ணையும் ஈரடியாற் கொண்டு, மூன்றும் அடிக்கிடமாக அம் மாவலியை ஆக்கிக்கொண்ட திருமாலின் நெடுமை தோற்றத்தில் கொடுமையாகவும், உண்மையில் அவன் திருவடியை அடைந்த எல்லா முத்தர்களையும்போல் அம் மாவலி அவனுக்குரிய யாவற்றையும் தியாகஞ் செய்தாலன்றி அடையமுடியாத அத் திருவடிக்கீழ் அவனை அவ்வாறு தியாகஞ் செய்யச் செய்து இருத்தின அருளாகவும் இருப்பதுபோலத், திருமாலின் நெடுமையுடன் உவமிக்கப்பெற்ற கைகேயியின் கொடுமையும் தோற்றத்திற்குக் கொடுமையே யன்றி உண்மையில் கொடுமை யன்று; அருளே.

இவை நிற்க, அத் தூமொழி மடமானாகிய கைகேயி கொடுமை செய்திராவிடில், தயரதன் ஒரு நாள் வேட்டையாடும் வேட்கையோடு காட்டிலேகிச் சிங்கங்களையும் யானைகளையும் தேடித் திரிந்த காலத்தே, அவையொன்றும் அகப்படாமையினால், அவை தண்ணீர் குடிக்கவரும் நதிக்கரையிலே அவைகளை எய்வதற்கு அம்பு பூட்டி வில்லேந்திய கையினனாய் ஒரு மறைவிடஞ்சென்று அவைகளின்வரவைஎதிர்பார்த்துக்கொண்டிருக்கும் வேளையில், “சலபோசன மாமுனி” வனது புத்திரன், தானே துணையாகத் தவஞ்செய்யும் தன் அந்தகத் தாய் தந்தையர்க்குத் தண்ணீர் முகந்துகொண்டு போக நதிக்கரையிலே இறங்கிக் குடத்தில் நீர்முகக்கும் ஓசையைக் கேட்டு, அது யானை நீர்குடிக்கும் ஓசையென்று அவ்வோசை பிறந்த இடம் குறித்து அம்பைவிட்டு அவன் மடிந்ததால், சலபோசன மாமுனிவன், ‘நீயும் எங்களைப்போல் உன் புத்திரன் பிரிவாற்றாமையால் இறப்பாய்’ என்று தயரதனுக்கு இட்ட சாபம் எவ்வழி நிறைவுறும்?

Koviloor Digital Library



இரண்டாவது, மகாவிட்டுணுவாகிய இராமன் தான் கோரிப் பிறந்ததை எப்படி நிறைவேற்றுவான்?

மூன்றாவது, கைகேயி வன்கண்மை செய்ததனால் உலகத்தோருக்கெல்லாம் தன் மகன் பரதனுடைய உயர்ந்த நற்குணங்கள் வெளிப்பட்டு விளங்கச் செய்யவும், இராமனுடைய பழம்புகழ் பெருகவும், இலக்குமணனுடைய வீரப்பிரதாபங்கள் வெளிப்படவும், சீதையின் கற்பு நெறி தெரியவும், மாருதியினுடைய மிகு வீர மிகு கனிவு விளங்கவும் காரணமாயிற்றல்லவா? என்று மிக இனிமையாகவும், அழகாகவும், பொருள் புரியுமாறும் கூறி விளக்கி முடித்தார். அதைக் கண்டு அங்குள்ளோர் யாவரும் அகமகிழ்ந்து உவகை கொண்டனர்.

அதுசமயம் எங்களுக்குத் தபால் முத்திரை கொடுக்க மறுத்த தபால் நிலையத் தலைமையதிகாரி வேற்சாமிக் கவிராயரிடம் வந்து, 'ஐயா! நீங்கள் மிகவும் வேண்டியும் நான் தங்களுக்குத் தபால் கொடுக்க மறுத்ததை மன்னியுங்கள். நீங்கள் இவ்வளவு புலமை வாய்ந்தவரென்று எனக்கு முன்பே தெரியாது. நீங்கள் இனி அதைப்பற்றி நினைக்கவேண்டாம்; உங்களுடைய தபால் முக்கியமானது என்றீர்களே; இன்றைக் கட்டுக்கே சேரும்படியாகப் பதிவு (Registration) செய்து தருகிறேன், வாருங்கள்' என்றழைத்தார். நாங்களும் அவர் கூடவே சென்று 'எங்களுக்குத் தபால் முத்திரை கொடுத்தால் போதுமானது; பதிவு செய்யவேண்டாம்' என்று கூறினோம். அவர் நாங்கள் கூறியதை மறுத்து எங்களுடைய தபாலைப் பதிவு செய்து தந்ததுமன்றி, அதற்குக் கூலிப்பணமும் வாங்க மறுத்துவிட்டார்.

பின்பு, முதலில் இராமாயணம் படித்துக்கொண்டிருந்தவர் எங்களை அழைத்துச் சென்று, அன்றைய இரவுக்கு எங்களிருவருக்கும் நல்லுணவு படைத்தும், நித்திரை செய்வதற்குப் படுக்கை முதலியன தந்தும், மறுநாட் காலையில் நாங்கள் போய்ச் சேரவேண்டிய புகைவண்டி நிலையத்திற்குப் பயணச் சீட்டு எடுத்துத் தந்தும் அகமகிழ்வோடு எங்களிருவரையும் பயணஞ் செய்து அனுப்பிவைத்தார்.

---

Koviloor Digital Library

# செய்திகளும் குறிப்புக்களும்

## திருவாவடுதுறை ஆதீனத்தின் சைவசமய விளக்க அறிவிப்பு

இப்போது இடையே எழுமாத காலமாகத் திருநெல்வேலித் தமிழ்ப்போதகாசிரியர் வி. சிதம்பர ராமலிங்க பிள்ளையை ஆதீன வித்துவானாக நியமனம் செய்திருக்கிறோம். அவர்களிடம் ஆதீனத்துத் தம்பிரான்கள் சிலரும் வேறு மாணவர்கள் சிலரும் தமிழ்மொழி பயின்றுவருகிறார்கள். நாள்தோறும் காலையில் மடாலயத்தில் புராணப் பிரசங்கம் நடைபெற்றுவருகிறது. பெரிய புராணம் முடிந்து இப்பொழுது கந்த புராணம் நடந்துகொண்டிருக்கிறது. ஆதீனத்தின் சரஸ்வதி மஹால் பொது நன்மக்களுக்குப் பயன்படும்படி அழகாக அமைத்து வைக்கப்பட்டிருக்கிறது. ஆதீனத்து ஆங்கில உயர்தரப் பாடசாலை எளிய மாணவர்கள் பள்ளியிறுதி வகுப்புவரை வாசிப்பதற்குரிய சௌகரியத்துடன் செவ்வையாக நடந்துவருகிறது.

தமிழ் மொழியும் சைவ சித்தாந்தமும் பரவுவதற்கான முறையில் அடியிற்கண்ட காரியங்களைச் செய்ய உறுதிகொண்டிருக்கிறோம்.

1. தமிழ்ப் பொதுக் கல்வி :—தமிழ் இலக்கியமும் இலக்கணமும் மாணவர்களின் தகுதிநோக்கி வகுப்பு அமைத்துக் கற்பிக்கப்படும். இந்தக் கல்விக்கு 10 மாணவர்கள் தெரிந்தெடுக்கப்படுவர்.

2. வித்துவான் பரீக்ஷை :—சென்னைப் பல்கலைக் கழகத்து வித்துவான் (தமிழ் மாத்திரமுள்ள) பரீக்ஷைக்குரிய பாடங்கள் கற்பிக்கப்படும். இந்தப் பரீக்ஷைக்கு 5 மாணவர்கள் தெரிந்தெடுக்கப்படுவர்.

3. சமயக் கல்வி :—சைவ சித்தாந்த சாஸ்திரம் தக்க மாணவர்களுக்குக் கற்பிக்கப்படும். இந்தக் கல்விக்கு மூவர் தெரிந்தெடுக்கப்படுவர்.

4. பிரசங்கப் பயிற்சி :—தமிழிலக்கியத்திலும் இலக்கணத்திலும் போதுமான சாதாரணக் கல்வி யுடையவர்களுக்குப் பிரசங்கப் பயிற்சி அளிக்கப்படும். இப் பயிற்சிக்குப் பதின்மர் தெரிந்தெடுக்கப்படுவர். தேறினால் அவர்கள் ஆதீன சைவப் பிரசாரகர்களாக நியமனம் பெறுவர்.

குறிப்பு:—(1) குறித்த கல்வி முறைகளைக் கற்க விரும்புகிறவர்கள் நமது ஆதீன வித்துவானுக்கு விவரமான விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும்.

Koviloor Digital Library



(2) மாணவர்களுக்கு உண்டியும் உறையுளும் புத்தகங்களும் இலவசமாகக் கொடுக்கப்படும். சம்பளமும் இல்லை.

(3) மாணவர்கள் யாவரும் சைவ வேளாளர்களாக இருத்தல் வேண்டும். (சைவ வேளாளர்களென்பது தொண்டைமண்டல வேளாளர், கார்காத்த வேளாளர், சைவச் செட்டிமார், சைவ வேளாளர் என்னும் நால்வரையும் குறிக்கும்.)

(4) குறித்த கல்விப் பயிற்சிகள் இந்த அறிவிப்புத் தேதிமுதல் இம் முறைபற்றி நடைபெறும்.

(5) குறித்த பரீக்ஷைகளில் தேறியவர்களுக்கு நமது ஆதீனத்திலிருந்து பட்டங்கள் அளிக்கப்படும்.

பிரசங்கம்

தகுதியான வித்துவான்கள் வருங் காலத்தில் ஆதீனத்தின் தலைமையிடத்தில் பிரசங்கங்கள் செய்விக்கப்படும். தைக் குருபூசையினும் தக்க பிரசாரகர்களைக் கொண்டு பிரசங்கங்கள் செய்விக்கப்படும்.

வெளியீடு

ஆதீனத்திலிருந்து தமிழ்மொழி சைவசமயம் இவ்விரண்டனையும் பற்றி வெளியீடுகள் பிரசுரிக்கப்படும்.

நாம் செய்யும் இந்த நன்முயற்சிகளுக்குத் தமிழ் நாட்டிலுள்ள சைவநன்மக்கள் மாணவர்களை அனுப்பி ஆதரவு செய்யும்படி விரும்புகின்றோம்.

மகாசந்நிதானம் அவர்களின்
21-11-1940 உத்தரவுபடி
வி. சிதம்பரராமலிங்க பிள்ளை,
ஆதீன வித்வான்,
திருவாவடுதுறை.

## அங்கம்பாக்கத்தில் சிறப்பு

### தமிழ்ப் பெரியார்கள் வருகை

செங்கற்பட்டு ஜில்லாபோர்டு உறுப்பினரும் காஞ்சி தமிழ்க் கலை ஆசிரியருமான வித்துவான் பரமசிவானந்தம் அவர்கள் அன்னையார் பதினாறும் நாள் சடங்கு 16-2-41-ஆம் நாளன்று அங்கம்பாக்கத்தில் சிறப்பாக நடத்தப்பெற்றது.

'நவசக்தி' ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களும், சைவசித்தாந்த மஹாசமாசக் காரியதரிசி திரு. ம. பாலசுப்பிரமணிய

Koviloor Digital Library



முதலியார் அவர்களும் இந்துமத அறநிலைய ஆணையாளர் திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் அவர்களும், துறையில், காலஞ்சென்ற வள்ளியம்மையாரின் உயர்குணங்களைப்பற்றியும் இறந்தவர்களின் உயர்வுக்காகச்செய்யவேண்டியவைகளைப்பற்றியும் பேசினார்கள். ஏழை ஆதிதிராவிடமாணவர்களுக்கு உடையும், வேறு பலருக்கு உணவும் அன்று அளிக்கப்பட்டன. அன்று பகல் சிதம்பரம் மௌனசுவாமிகள் மடத்திலும், வாலாஜாபாத் இந்துமத பாடசாலை மாணவர் இல்லத்திலும் உள்ள எல்லாருக்கும் விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பெற்றன.

மாலை 3-30-க்குச் செங்கற்பட்டு ஜில்லா கல்வியதிகாரி திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் தலைமையில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் "தாயும் சேயும்" என்னும் பொருள்பற்றி விரிவுரையாற்றினார்கள். அக்கூட்டத்தில் வந்திருந்தோர்களில் முதன்மையானவர்களிற் சிலர் பின்வருமாறு: சென்னைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சுப்பையா பிள்ளையவர்கள், காஞ்சிபுரம் மாஜி முனிசிபல் தலைவர் ம. சாமிநாத முதலியார் அவர்கள், புரிசை சு. முருகேச முதலியாரவர்கள், தமிழிசைமணி சுந்தரமூர்த்தி ஓதுவாரவர்கள், இந்து மத பாடசாலைச் செயலாளர், திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள்.

வள்ளியம்மையார் நினைவாக அவர்கள் சரித்திரம் முதலியவை சேர்ந்து, "அன்னை வள்ளி நினைவுமலர்" என ஒன்று எல்லாருக்கும் இலவசமாக வழங்கப்பெற்றது.

அன்று இரவு திரு. சுந்தரமூர்த்தி ஓதுவார் அவர்களால் வல்லாள மஹாராஜன் சரித்திரம் காலக்ஷேபமாகச் சொல்லப்பெற்றது. பிரிந்த ஆன்மா சாந்தி பெறுவதாக !

நா. ப. தணிகையரசு.

## பழநி வேத சிவாகம பாடசாலைத் திறப்பு

பழநி ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தானத்து ஆதரவில் வியாழனன்று காலை, (23-1-41) ஊர்க்கோயிலில் சென்னை இந்து சமய நிலைய பாதுகாப்புக் கழகத் தலைவர் ஸ்ரீமான் டி. எம். நாராயணசாமி பிள்ளை அவர்களால் வேத தேவார பாராயண பூசைகளுக்கிடையே வேத சிவாகம பாடசாலை ஆரம்பம் செய்யப்பெற்றது. சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார், பாடசாலையின் நோக்கம், அவசியத்தைப் பற்றிப் பேசித் திரளாகக் கூடியிருந்த குருக்கள்—பண்டாரங்கள் குடும்ப மாணவர்களுக்கு ஆரம்பபோதனை செய்து வைத்தார். மாலையில் ஒரு பொதுக்கூட்டம் தலைவரின் தலைமையில் கூடியது. ஸ்ரீமான் நாராயணசாமி பிள்ளை பாடசாலையின் அவசியத்தையும் இந்த நல்ல

Koviloor Digital Library



தருணத்தைக் கோயிலில் பணிபூண்டொழுகும் குருக்கள், பண்டாரங்கள் தங்கள் பிள்ளைகளை அனுப்பி யாவரும் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்றும், இதனால் நம் மத நிலையங்கள் விரைவில் சீர்பெற்று மக்கள் நல்வாழ்வு எய்துவார்களென்றும் பேசினார்கள். பிறகு சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்களும், கோவை சைவச்சிவமணி சி. கே. சுப்பிரமணியமுதலியார் அவர்களும் கோயில் நடைமுறைகளைத் தெளிவாக எடுத்துரைத்துப் பாடசாலையில் ஒவ்வொருவரும் தனிப் பொறுப்பையும், உரிமையையும் கொண்டாடவேண்டுமென்றும் எடுத்துரைத்தார்கள். தேவஸ்தான நிர்வாக அதிகாரி ஸ்ரீமான் ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை யாவருக்கும் நன்றிகூறித் தமிழகத்திலே, புராதன கோயில்களில் வியாகரணம், வேதம், ஆகமம், கலைகள் ரூபாவதாரம் முதலிய கலைகளை வளர்த்தற்கான, ஜனநாதமண்டபம் வியாகரணதானமண்டபம் என்ற கல்விச்சாலைகள் இருந்துவந்தனவென்றும் அம்முறையாக இன்று ஆரம்பிக்கும் பாடசாலை முருகனது அருளால், பெரும் பயனைத் தருமென்றும் கூறினார். மடாலயங்கள், பெரியார்களின் ஆசிமொழிகளையும் அவ்விடத்தில் குறிக்கப்பெற்றது.

## புதுவையில்
## இளவழகனார் சொற்பொழிவுகள்

தமிழன்பர்கள் விரும்பி விருவித்ததற்கிசைந்து சென்று திரு. இளவழகனாரவர்கள் புதுவையில் (Pondicherry) 18, 20, 21, 22, 23-2-41-ம் நாட்களில் ஆரிய வைசிய சமாஜத்தின் ஆதரவில் முறையே 'வள்ளலார் உள்ளுணர்வு', 'பொது நெறி', 'சங்க இலக்கியங்கள்', 'பிற்கால இலக்கியங்கள்', 'உலகமும் தமிழும்' என்னும் பொருள்கள் மேல் தொடர்பாக ஐந்து அரிய விரிவுரைகள் நிகழ்த்தினார்கள்.

உள்ளூரிலும் சுற்றுப்பக்கங்களிலுமிருந்து அன்பர்கள் மிகுதியாக வந்திருந்து சுவையோடு கேட்டு மகிழ்ந்தனர். நாளுக்கு நாள் சுவையுணர்வும், கிளர்ச்சியும், அன்பும் பெருகிக் கடைசி நாளில் பொங்கித் ததும்பின. முடிவில், சமாஜத்தின் ஆதரவில் மிக்க அன்புடன் ஒரு பாராட்டுரை படித்தளித்து ஒரு சால்வைப் பரிசளிப்பும் பொருண் முடிப்பும் வழங்கப்பெற்றன. திரு. அரவிந்த ஆசிரமத்தில் தவங்கோலி விளங்கும் சுவாமி சுத்தானந்த பாரதியாரவர்கள், உயர் அலுவலிலிருந்து விலகி இப்போது ஆசிரமத்தில் அமைதி நிலையிற் றிகழும் திருவாளர் முத்தைய முதலியாரவர்கள் முதலிய பெருமக்கள் அருளுடன் வாழ்த்துரைகள் வழங்கினர். புதுவை ஊர்காவற் றுறைப் பெருமகனாரும் சிவநேயச் செம்மலுமான திருவாளர் கருப்பூர முதலியாரவர்கள் பேரன்போடு தமதில்லத்துக்கு வருவித்து மிக்க

Koviloor Digital Library



பெரும்போக்காஞ் சிறப்புக்கள் செய்து பாராட்டிய அருமை பெரிது. கடைசியில், பலர் ஆகத்துள் ஓர் உயிர்போல அன்பர்கள் பலரும் உணர்ச்சி வழியும் பெருவிழிகளுடன் எளிதிற் பிரியமாட்டாராயிருந்த உருக்கக்காட்சி ஒரு பேர் அருட்காட்சியாயிருந்தது.

புதுவையில் தமிழன்பர்களிடமும் தமிழ்மாணவர்களிடமும் தமிழுணர்ச்சி வீறுகொண்டுளது. இத்தனைப் பேருணர்வு மீதூர்ந்து சிறக்கும்படி புதுவைத் தமிழாசிரியன்மாரும் தமிழ் நல்லோரும் செய்து வருகின்ற நன்முயற்சிகள், பெரிதும் பாராட்டற்பாலன.

சென்னை, சைதாப்பேட்டையில் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில் பெருந்திருவிழாவில் 2-3-41 முதல் 12-3-41 வரையில் திருநெல்வேலி தமிழிசைமணி சிவத்திரு. சுந்தர ஓதுவாமூர்த்தி அவர்களால் திருமுறை திருப்புகழ் பாராயணம் நடைபெற்று வருகிறது. 10-3-41 மாலை 6 மணிக்கு மேற்படி கோயிலில் திருநீலகண்டநாயனார் கதையும் பக்க மேளங்களுடன் அவர்களால் நடைபெறும்.

---

## மதிப்புரை

கலிங்கத்துப் பரணி உரை: உரையாசிரியர்: சென்னைப் பச்சையப்பன் பள்ளித் தலைமைத் தமிழாசிரியரும், 'திருவெங்கைச் செய்யுட்கோவை' முதலியவற்றின் நூலாசிரியருமான திருவாளர் ஆ. வீ. கன்னைய நாயுடு அவர்கள். விலை ரூ. 2.

'பரணி' என்னும் நூல்வகைக்கு எடுத்துக்காட்டாக உள்ளது, சயங்கொண்டார் என்னும் புலவர் பிரானால் இயற்றப்பட்ட இக் கலிங்கத்துப் பரணியேயாம். தமிழ்ச் சுவையும், இலக்கிய இன்பமும், பொருட்கருவும் உடைய சிறந்த நூல். விசயதரன் என்னும் சோழ வேந்தனது கலிங்கவெற்றியாகிய, நிகழ்ந்த வரலாற்றை எடுத்துக் கூறுவது; ஆராய்ச்சிக்குப் பயன்பட்டு என்றும் நின்று நிலவுவது. புறப்பொருட் சுவை வாய்ந்தது.

இத்தகைய அரிய நூலை இப்போது பதவுரையோடும் விளக்கவுரையோடும் திரு. நாயுடு அவர்கள் திருத்தமாக வெளிப்படுத்தியிருக்கிறார்கள். உரைகள் நல்ல தமிழ் நடையில் தெளிவாக விளக்கி எழுதப்பட்டிருக்கின்றன. வரலாற்றுக் குறிப்புக்களும் அங்கங்குந் தரப்பட்டிருக்கின்றன. உரையாசிரியரின் நன்முயற்சியும் உழைப்பும் பெரிதும் போற்றற்பாலன. செய்யவேண்டிய பணியை அவர்கள் செய்திருக்கிறார்கள். இங்ஙனம் புதியன செய்து தொண்டாற்றுவதே தமிழன்னைக்குத் தகக வளர்தரும். தமிழகம் ஆசிரியர்க்கு ஊக்கங் காட்டவேண்டுமென்று விரும்புகிறோம்.

Koviloor Digital Library

# தமிழ் வித்துவான் தேர்வில் 1000 ரூபா பரிசுபெற்ற



வித்துவான்
A. பூவராகம் பிள்ளை





வித்துவான்
வி. அ. அரங்கசாமி

Koviloor Digital Library




சிலம்பு-கஅ] விக்கிரம—பங்குனிமீ [பரல்-கஉ

# வெல்க !

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சோல்மலர்
போதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே!

—சேக்கிழார்.

தூய்மையும் ஆற்றலும் உடையோரே உயர்ந்தோர். அவரே பொதுமன்றத்திலிருந்து பொதுநலத் தொண்டுகள் நன்கு செய்வர்; மதி, தூய்மையின் அடையாளம்; சடை, ஆற்றலின் அடையாளம் இருக்குமிடம் தெரியாமலே அவ்வளவு அடக்கமாக ஆனால் அவ்வளவு ஆற்றலாக அவர் காரியங்களை நிறைவேற்றுவர்.

புகழுக்குரிய அப் பெரியோருடைய பணிகளில் ஈடுபட்டு அவற்றைத் தம நடையாலும் மொழியாலும் உலகமெங்கும் பரவச் செய்யும் அன்பும் தகுதியும் முயற்சியுமுடையோர் மன்பதைக்குத் தலைவராகின்றனர். அத் தலைமை கருதியே அவரை முன்னோர் நாயன்மார் (leaders) என்று பாராட்டி மகிழ்ந்தனர்.

அத் தலைவர்களின் ஆணைமொழிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தூய நறுமலராகும். அச் சொல்மலர்களிலிருந்து ஒழுகுந் தீஞ்சுவைத் தேனாகிய அருப்பெருங் கருத்தினிமையை எஞ்ஞான்றும் அவரைச் சூழ்ந்துகொண்டு ஆர நுகர்ந்து நுகர்ந்து தாமும் இன் புற்று அவர் பணிகட்கு நாட்டிலும் ஆக்கமுண்டாக்கிக்கொண்டிருக்கும் உறுதுணைவரே உலகிற் புனிதராவர்! அவரே தொண்டர்! அவரே நல்லோர்! அவர் சில விதி முறைகளில், நின்று அன்பினால் ஒழுகும் பொது இயக்கம் நன்கு வளர்கின்றது. அத்தகைய புனிதர்பேரவைகள் (followers) நாட்டில் அங்கங்கும் வெற்றியுடன் விளங்கவேண்டும். அப்போது நாடு நன்கு தழைக்கும். ஆகவே, நாமும் சேக்கிழாரோடு ஒத்து, எங்கும் 'புனிதர் பேரவை விளங்கி வெல்கவே!' என்று வெற்றி கூறுவோம்.

Koviloor Digital Library

# கனம் அறிதல்

ஆசிரியர் திருவள்ளுவர் 'இலேசானவர் அல்லர்' என்றார், திருக்குறளை அதன் உரையோடு அலசிப் படிக்கும் திருக்குறள் மாணவரில் ஒருவர்.

'அப்படியானால்....?' என்றார் அவரில் மற்றொருவர்.

'கனமானவர்' என்றுதான் சொல்லுகிறேன்.

அது தெரிகிறது; ஆனால் உரையாசிரியர் எப்படி என்பதற்காகக் கேட்டேன்.

சொல்லவேண்டுமா! நூலாசிரியரின் கனத்தை அறியும் உரையாசிரியரை வேறுவகையாக நினைப்பதெப்படி? கனம் உரையாசிரியர்தாம்! தடையில்லை. "கற்றோரே கற்றோர் கனம் அறிவர்" என்பது உரையாசிரியர்க்கு முற்றும் பொருந்தும்.

'இலேசு' 'கனம்' என்றால்?'

'எளிமை' 'அருமை' என்று கருதிக்கொள்ளலாம்; அல்லது 'சிறுமை' 'பெருமை' என்று மதித்தாலும் சரி.

ஆனால், கற்றோரின் தகுதியை அறிவதற்குக் கற்றோர்க்கே இயலும்; மற்றோர்க்கு இயலாதென்று தெரிகின்றது.

ஆம்; கல்லாதார், கற்றார் தகுதியை அறிய அருகராகார்.

பின், அக் கல்லாதவர் அறிவதுதான் எது?

அவர் அறிவது யாரிடமும் சிறுமைதான்; பெருமையன்று.

ஆனால், கற்றோரிடமும், குறைகள் உண்டுபோலும்!

Koviloor Digital Library



அவரும் மனிதர்தாமே! இறைவனோடு இரண்டறக் கலக்கும் வீடுபேறு வரையிற் குறைகள் இல்லாமலிருப்பது அரிது. ஆனால், அக் குறைகள் அவரிடம் எளிதிற் காணமுடியாதபடி மிகவும் மெலிந்துபோயிருக்கும்; "பூவிற்கும் புல்லிதழ் உண்டு;" அப் புல்லிதழும் எங்கோ அடியில், உடனே தெரிந்துகொள்ளக்கூடாதபடிதானே மறைந்துகொண்டிருக்கிறது; கற்றாரிடம் நான் இனி இரேன் என்று அக் குறைபாடும் ஆற்றலிழந்து மெலிந்து ஒளிந்து ஒளிந்து மறைந்தொழிந்துகொண்டேயிருத்தலின். நல்லோர் அதனையொரு பொருளாகத் துருவித் தேடுதலில் தமது அரிய காலத்தைச் செலவு செய்யமாட்டார். கற்றோர்பால் நன்றாக விளங்கித் தெரியும் நன்மைகளையே அவர்கள் அறிந்து, தாமும் உலகமும் பயன்படுவதற்கு முயல்வர். ஒருவருக்கொருவர் இங்ஙனம் நன்மையறிந்து பயன் பெற்றுக்கொள்ளும்போதுதான், உலகம் இன்ப உலகமாக மாறி மலர்கின்றது.

அது சரி; உலகில் தக்கோராயிருப்பவர், கல்வித் துறையிற் பழகிவருவோருடைய குறைபாடுகளை அவர்க்கு எடுத்துக்காட்டினாலன்றோ, அவர் மேலுமேலுங் கற்று நிறைவடைதல் கூடும்! அவரால் உலகமும் நன்மை பெறக்கூடும்!

ஆம்; அவர் விரும்பினால் அத்தகைய தக்கோர் சிறிது முயன்று கண்டு அவர்க்குமட்டும் அறிவிப்பது செய்வர்.

ஒருகால் அவர் விரும்பாதவராயிருந்து, அல்லது தக்கோர் அவர்க்கு அன்போடு எடுத்துக்காட்டுமிடத்தும் ஏற்றுக்கொள்ளாத நிலையினராயிருந்தால்?

அவர்க்கும் உலகத்துக்கும் நன்மைகள் உண்டாதலைவிரும்பி, இனிக்க நினைந்து நினைந்து நினைவுத் தொண்டாற்றுவதுதான் சான்றோர் கடன்.

Koviloor Digital Library



ஆனால், 'கனம் அறிவோர் கற்றோர்; பிழையறிவோர் மற்றோர்' என்பதுதான் அத் தொடரின் பொருள் போலும்!

சான்றோர்கள் கருத்து அதுதான் என்பது, "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்னும் ஔவைத்தாயின் அருள்மொழியினாலும் விளங்குகிறது. 'காமுறுதல்' என்னுஞ் சொல் 'விரும்புதல்' என்றன்றோ பொருள்படும். கற்றாரைக் கற்றார் விரும்பவேண்டும் என்றால், அவர்பால் உள்ள பெருமைக்குரிய தகுதி சிறியதேயாயினும் அதனையே அறிந்து மகிழ்ந்து பாராட்டவேண்டுமென்பது கருத்தாகுமேயல்லாமல், அவர்பாற் பிழைகளை முயன்று கண்டு வெறுக்கவேண்டுமென்பது பெறப்படாதன்றோ! உள்ள பிழைகளையே கண்டுகொண்டிருப்பது அவர் செயலன்றெனின், இல்லாத பிழைகளையெல்லாம் பிழையென்று வருவித்துக் கூறுதல் அவரால் எவ்வளவு ஒதுக்கப்படும்!

அப்படியானால், கற்றோர்களின் குறைகண்டு கூறுவது கற்றோர்க்கே இயலும் என்பது அத்தொடரின் கருத்தன்று!

தடையென்ன? அன்றி அதுதான் கருத்தெனில், அது, ஒன்றை வேறொன்றாக உணரும் திரிபுணர்விற் சேரும்; "பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருள்."

ஆ, அவ்வாறோ!

அவ்வாறுதான்; கல்வியை அதற்குத்தானே ஐயந் திரிபறக் கற்கவேண்டும் என்று சான்றோர் பணித்தது! "கற்க கசடற" என்னும் நாயனார் திருமொழி எவ்வளவு வன்மையாயிருக்கிறது! "கசடறக் கற்றலாவது, விபரீத ஐயங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலருடனும் பலகாலும் பயிறல்" என்று உரையாசிரியர் அதற்குத்

Koviloor Digital Library



தெரிந்து உரைசெய்வதும் எவ்வளவு ஆற்றலாயிருக்கிறது!

ஆயின், உரையும் நூலுக்கு ஏற்பக் கனமுடையதே!

அவ்வுரைத் தொடரில் எவ்வளவோ தகுதி இருக்கிறது! 'மெய்யுணர்வு என்பது விபரீத ஐயங்கள் நீங்கிய நிலை; கற்றல் என்பது அம் மெய்யுணர்வைத் தெரிந்து கொள்ளுதல் மட்டுமன்று; அதனோடு பழகுதல்; அதுவும் நல்லோர் துணையுடன் பழகுதல்; நல்லோர் ஒருவர் துணையுடன் மட்டுமன்று; நல்லோர் பலர் துணையுடன் பழகுதல். அதுமட்டுமோ; பலகாலும் பழகுதல்;' எனவெல்லாமன்றோ அத் தொடர் உணர்த்துகின்றது! இங்கே கற்றார் பலருடனும் பழகுதலென்னமல் நல்லோர் பலருடனும் என்றது, மிகவும் நயமான தொடர். கற்றார் என்பது வெறுங் கலையறிவுமட்டுமுடையார் என்று கருத்தாகாதபடி நற்குணமாட்சிமையும் திருவருள்நேயமுமுடையா ரென்னும் அழகு கருத்தையன்றோ அது விளக்கிக்கொண்டிருக்கிறது!

திருக்குறளும் அதன் உரையும் நுட்பமானவையே; இவற்றை நல்லோர் பலரோடு பலகால் பயிலவேண்டுவது கடமையே.

இன்னும் பார்க்கலாம்; திருக்குறளில் வருகின்ற 'மெய்யுணர்வு' என்னும் அதிகாரத்தின் முதலிலேயே உரையாசிரியர், 'ஒன்றனை உண்மையாக உணர்வதென்பதே மெய்யுணர்வு என்பது; அம் மெய்யுணர்வு நிலையே ஐயந்திரிபுகள் அறுகின்ற இடம்; ஆனால் அந் நிலை, இறைவன் திருநெறியைப் பற்றி அதில் ஈடுபட்டு ஒழுகுமிடத்தேதான் உண்டாகும். அதனாலேதான் "பற்றுக பற்றற்றான் பற்றினை" என்று கடைசியாகக் கூறும் 'துறவு' என்னும் அதிகாரத்தின் பின் இம் 'மெய்யுணர்வு' அதிகாரம் வைக்கப்பட்டது' என்னுங் கருத்துடைய சில வரிகளை எழுதுகிறார். அதற்கேற்ற

Koviloor Digital Library



படியே. தெய்வத்திருவள்ளுவரும், 'துறவு' அதிகாரத்தின் கடைசியிற் "பற்றுக பற்றற்ருன் பற்றினை" என்று இறைவன் அருணெறியைக் கடைப்பிடிக்கும்படி பணித்தவர், இம் மெய்யுணர்வு அதிகாரத்தின் முதலிலேயே. 'விபரீத உணர்வு என்பது பொருளல்லவற்றைப் பொருளென்று உணர்வது; அதனுலேதான் இழிவு நேர்கின்றது; அம் மருள் நீங்கி மாசறு காட்சியவர்க்கு இருள் நீங்கி இன்பம் பயக்கும்' என்று விபரீத உணர்வு நீங்குதல்பற்றியும், அதன் பின், ஏதொன்றையும் இதுவோ அதுவோ என்று தெரியாமலிருப்பதுதான் ஐயவுணர்வென்பது; அந்த ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்குப் பெயராத பேரின்பம் உடனே கிட்டும்' என்று ஐயவுணர்வு நீங்குதல் பற்றியும் அரிய குறள்களை அருளிச் செய்திருக்கிருர். இதில் இன்னுமொரு பெருஞ்சிறப்பு, ஐயவுணர்வு நீங்குதலைப்பற்றிக் கூறும் திருக்குறளுக்கு உரையெழுதுமிடத்தில் உரையாசிரியர், "யாது மெய்? என நிகழும் ஐயத்தினை யோக முதிர்ச்சியுடையார் தம் அநுபவத்தானீக்கி மெய்யுணர்வராகலின், அவரைஐயத்தின் நீங்கித் தெளிந்தார் என்றும்........கூறினுர்" என எழுதியிருப்பதாகும். இது மிகவும் கருத்திருத்துதற்குரியது.

சரி; இவைகளாலெல்லாம் என்ன தெரிகிறது?

என்ன தெரிகிறதா? 'கல்வி என்பது ஐயந்திரிபுகள் அறக் கற்பது; ஒன்றனை ஏட்டளவாகத் தெரிந்து கொள்வதனுல் ஐயந்திரிபுகள் அறமாட்டா. அந்தத் தெரிவினுல், எப்போதும் ஒன்றின்மேலொன்று ஐயம் எழுந்தபடியேதான் இருக்கும்; ஒன்றை உணரவேண்டிய முறையில் உணராமல், பழுதையைப் பாம்பென்று மயங்குவதைப்போல வேருென்ருக உணர்ந்துவிடும் திரிபு உணர்வும் நிகழ்ந்தபடியேதான் இருக்கும்; நூல்களைப் படித்துவிடுவதனுலும், அறிஞர்களிடம் சில கேட்டுவிடுவதனுலுமே இந்த ஐயந்திரிபுகள் அறுந்துவிடுவ

Koviloor Digital Library



தில்லை. பரிமேலழகர் சொன்னபடி நடக்கை (அனுபவம்) யினாலும், குணமாட்சிமை திருவருள் தோய்வு என்பவற்றாலுமே அவை அறும்; அதன்பின்பே உண்மையுணர்வு தலைப்படும்; தலைப்பட்ட அவ்வுணர்வு மீண்டும் அறியாமையில் மயங்கிவிடாதபடி நல்லோர் பலருடன் பலகாலும் பயிலவேண்டும்; அப்போதுதான், முன்பு அறுந்த ஐயவுணர்வும் திரிபுணர்வும் மீண்டும் தலையெடுக்கமாட்டா; அவ்வொளிநிலையே 'கசடற்ற கல்விநிலை' என்று தெரியவில்லையா?

இவை தெரிந்தன; 'கற்றோர்களிடம் குறைகள் கண்டு கூறுவது கற்றோர்க்கே இயலும்' என்று கொள்ளுங் கருத்து திரிபு பொருளாகும்; மெய்ப் பொருளாகாது' என்பது எப்படி என்கிறேன்.

அதற்கு விடைதான் மேலே சொன்னது; 'வெறும் நூலறிவு உடையோர் கற்றோராகார்; கற்றபடி நடக்கை, நற்குணம், அருள்நேயம், நல்லாரிணக்கம் உடையோரே ஐயந்திரிபு நீங்கிய கற்றோராவார். இத்தனை அருளொழுக்கமுடையோரான அவர், ஏனைக் கற்றோரிடம் உள்ள பெருமைகளை அறிந்து மகிழ்வரே அல்லாமல், அவர் குறைகளை முயன்று கண்டு புறங்கூறமாட்டார்; ஆதலின்; 'கற்றோர் கனமறிவார் கற்றோரே, என்பதற்குக் 'கற்றோருடைய பெருமையறிந்து பாராட்டுவோர் கற்றோரேயாவர்' என்பது பொருளாகுமேயன்றி, 'இக் கற்றோரென்று சொல்லப்படுகின்றவரை எவ்வளவு தூரம் சிறியவராகக் குறைக்கலாம் என்று குறைகள் கண்டு புறங்கூறுவோர் கற்றோர்' என்பது பொருளாகாது; அங்ஙனம் பொருள்கொள்ளின், ஒன்றுகிடக்க ஒன்று உணர்தலாகிய திரிபுணர்வாகவே அது கொள்ளப்படும்' என்பவைதாம் நன்கு விளங்குமே!

அப்படியானால்,

Koviloor Digital Library



" அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் இரண்டும்
மிகைமக்க ளால்மதிக்கற் பால—நயம் உணராக்
கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்
வையார் வடித்த நூலார் ".

என்று வரும் நாலடியார்ச் செய்யுளில், ஒருவருடைய குறைவுநிறைவுகளை அளவிட்டு அவரை அவமதிப்பதற்கும் மதிப்பதற்கும் மேன்மக்களே உரியவர் என்னுங் கருத்துப் பெறப்படுதலின், அவமதித்தல் என்பதும் அப் பெரியாருக்கு உரியதொன்ருகக் கொள்ளுதல் பொருந்தாதோ?

பொருந்தாது; மதித்தலொன்றே மேன்மக்கட்கு உரியது. அங்ஙனம் மதிப்பதற்குரிய தகுதி பிறரிடம் காணப்படவில்லையென்ருல், அவர் சும்மா இருப்பர்; பாராட்டி மகிழார்; அந்நிலேயே 'அவமதிப்பு' என்பது. மதிப்பின்மை என்பதுதானே அதன்பொருள்! அங்ஙனம் சும்மா இருப்பதை விடுத்து அத் தகுதியில்லார்க்கு ஒரு குறைவு தேடுவது அவர்க்கு உரியதன்று; 'அவமதிப்பு' என்பதன் பொருளும் அதுவன்று.

அங்ஙனம் சும்மா இருந்து அவமதிப்பைத் தருவது மட்டும் குறைவு செய்ததாகாதோ?

ஆகாதே! அதற்கு அவர் என்ன செய்யலாம்! தகுதியில்லாதவரின், தகுதியின்மையே அங்ஙனம் மதிக்கப் பெருமைக்கும் அதனுலான குறைவுக்கும் காரணம்.

அது பொருத்தந்தான்;

அதுமட்டுமன்று; இச் செய்யுள் மேன்மக்களின் இயல்பையும் கீழ்மக்களின் இயல்பையும் வேறொரு வகையினுலும் நன்ருக எடுத்துக் காட்டுகின்றது; 'மிகைமக்களால் மதிக்கற்பால' என்று வருதலின், மேன்மக்கள் அவரவரையும் பற்றித் தம் உள்ளத்தில் மதித்துக்கொள்வரென்பதும், 'கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்' என்று வருதலின் கீழ்மக்கள் வாய்விட்டு இழித்

Koviloor Digital Library



துப் பேசிவிடுதலோ அல்லது இல்லாதன வெல்லாங் கட்டி உயர்த்திப் பேசிவிடுதலோ செய்வர் என்பதும் விளங்குகின்றன; சான்றோர்கள் நாக்கு இழிவுரைகள் பயிலாததாகலின், மதிக்கக்கூடிய தொன்றைமட்டும் இன்றியமையாத இடத்தில் அளவோடு பாராட்டிக் கூறக் கூடும். மேலும்; தகுதியை உள்ளபடியே அறிந்துகொள் ளும் அழகிய உள்ளம் அச் சான்றோர்களுக்குத்தான் உண்டு. ஆனல் கீழ்மக்கள், தமக்குப் பிறர் தகுதியை அறிந்து மகிழும் வன்மையில்லாமையால், தமக்கு ஆகா தவர் ஆனவர் என்னுங் காரணங்களாலேயே வெறுத்தும் விரும்பியும் அங்ஙனம் வாய்விட்டு எதனையும் கூறிவிடுவர். ஆதலால், 'கற்றோர்கள் அவரவர்பால் அமைந்துள்ள கல்வி நிலைகள் எவ்வளவோ அவ்வளவு வரையில் மதித்து, இன்றியமையாத இடத்தில் அந் நன்மைப் பகுதியைமட் டும் அனைவர்க்கும் நலமுண்டாகும்பொருட்டு அளவோடு பாராட்டுந் தகுதியுடையவராவர்' என்பதே 'கற்றோர் கனமறிவார் கற்றோரே' என்பதன் கருத்தாகும்.

நன்று; இவ்வளவு கருத்தும் ஆசிரியர் தெய்வத் திருவள்ளுவரின் கனமறியும் பண்பினலேயே தெளிவு பெறலாயின. கற்றோர், தம் கல்வி நிலையையும் பிறர் கல்வி நிலையையும் நன்கறிந்து ஒருவருக்கொருவர் அவர வர்பால் அமைந்த தகுதித்தன்மையை மட்டும் என்றும் மதித்து, அதனை அளவுகுறையாமல் மகிழ்ந்து பாராட்டு தலுடையராய் ஒருவரையொருவர் உள்ளன்புடன் போற்றிக்கொண்டு ஒழுகுவதுதான் கடமை; நாடும் நன்ருகும்.

என்று அம் மற்றவர் முடிவாகக் கூறினர்.

திருக்குறள் கற்கும் இம்மாணவர்களின் உரையாட லில் தமிழ்நாட்டின் நன்மைக்குரிய பல அழகிய நுட்பங் கள் மின்னிக்கொண் டிருக்கின்றனவென்று தெரி கின்றது.

Koviloor Digital Library

# வேதாகம விளக்கம்

"துடிசைகிழார் அ. சிதம்பரனார்"

வேதம் பசுவதன்பால் மெய்யா கமம்நால்வர்
ஓதும் தமிழதனின் உள்ளுறுநெய்—போதமிகு
நெய்யதனின் இன்சுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்.

இப் பழைய பாட்டானது வேதம், ஆகமம், தேவார திருவாசகங்கள், சிவஞானபோத முதலிய சித்தாந்த நூல்களின் தொடர்பைத் தெளிவாக உள்ளங்கை நெல்லிக்கனியெனக் காட்டும் தன்மைத்து.

இது இப்போது உருக்குலைந்தும் வேறுபட்ட பேதங்களுடனும் நடைபெறக் காண்கின்றோம். இதனை எடுத்து ஆள்கின்றவர்களும் சரியானபடி சொல்லுவதுமில்லை; எழுதுவதுமில்லை. இப்பாட்டிற்கு உரை கூறுகிறவர்களும் பாட்டு ஒன்றைக் கூறத் தாம் ஒன்றைக் கூறி மகிழ்கின்றனர். உலகத்தையும் மயங்கச் செய்கின்றனர். சென்ற இரண்டாயிர வருடங்களின் தமிழ் மொழியின் நிலைமாறுதலால் உண்மைக் கருத்துப் புலப்படாமற் போயிற்று. வடமொழியாளர் தமிழைக் கற்று வடமொழி நூற் கருத்துக்களைத் தமிழ்ப்பாக்களில் நுழைத்து வந்திருக்கின்றார்கள். தென்மொழிப் புலவரும் அக் கருத்துக்களை அப்படியே ஆராயாமற் பொன்னேபோல் போற்றிவருகின்றார்கள். ஆதலின் இப்பாட்டின் உண்மைக் கருத்தினை விளக்கவேண்டியது நம் கடமையாயிற்று.

இப்பாட்டில் உவமானமாக எடுத்துக் காட்டப்பட்டவை ஐந்து பொருள்கள். அவையாவன :—பசு, பால், வெண்ணெய், நெய், நெய்யின் சுவை என்பன. உவமேயமும் அதற்கேற்ப வேதம், ஆகமம், நால்வர் ஓதும் தமிழ், (சிவஞான)போதம், மெய்கண்டார் செய்த தமிழ் என்பன ஆகும்.

Koviloor Digital Library



தமிழ்நாட்டுப் புலவர்களும் சாதாரண மக்களும் வேதம் என்று சொன்னாலும் ஆகமம் என்று சொன்னாலும் வடமொழி வேதங்களையும் வடமொழி ஆகமங்களையுமே சிந்திக்கும் அள வுக்கு வந்துவிட்டார்கள். தமிழ் மொழியிலுள்ள வேதங்களும் ஆகமங்களும் என்று நினைப்பதே இல்லை. ஏனென்றால் வட மொழியாளர்களுடைய பழக்கத்தால், அப்படி நினைக்கும் வன் மையே போய்விட்டது என்று கூறலாம். அப்பேர்ப்பட்டவர் களுக்கு எல்லாம் இப் பழம் பாட்டானது உண்மையை எடுத் துப் புகட்டும் ஒப்பற்ற ஆசிரியன்போல் விளங்குகின்றது. எப்படி எனின், பாட்டின் கருத்தை உற்று நோக்குங்கள். நமக்கு இப்போது தமிழில் உள்ளன நால்வர் ஓதுந் தமிழும் சிவஞானபோதமும், மெய்கண்டார் செய்த தமிழுமே என் கின்றனர். அவைகள் வெண்ணெய், நெய், சுவை; பால் கூடத் தமிழில் இருக்கிறதென்றே கொள்வர். அதுதான் தமிழ் மூவா யிரமாகிய (திருமந்திரம்) ஒன்பது ஆகமங்கள். ஆகையால் இவை யெல்லாம் எதனிடத்திருந்து கிடைத்தன? பசுவினிடத்திருந்து; பசுதான் வேதம். பசுவெண்ணெய் பசுவின் பாலினின்றும், எருமை வெண்ணெய் எருமைப் பாலினின்றும், ஆட்டு வெண் ணெய் ஆட்டுப் பாலினின்றுமே கிடைக்கும். பசுமாட்டினின்று எருமைப்பாலும் எருமை வெண்ணெயும் கிடைக்கா. ஆத லின், பால், வெண்ணெய் முதலியன எந்த வகையைச் சேர்ந்த னவோ அந்த வகைதான் பசுவும். ஆகையால் இப்பாட்டில் கூறிய வேதம் தமிழ் வேதம் என்றே கொள்ளுதல் வேண்டும். அது தமிழர்களின் அறிவுக் களஞ்சியமாயுள்ள முதல் இடை கடைச் சங்க நூல்களாம். அதற்குத்தகவே, நால்வர் தோன்றி அவ் வேதங்களின் கருத்துக்களை வெளியிட்டனர்.

வடமொழியில் வேதம் ஒன்றே. அது, 'இருக்கு' எனப் படும். அவ்வொன்றையே வியாசர் பாரத காலத்தில் மூன்றா கச் செய்தபோது "வேதம் திரெயீ" எனப்பட்டது. இப் பொழுது வடமொழியில் வேதங்கள் மூன்றே. வியாசர் ஒரு வேதத்தை மூன்றாகச் செய்ததால் வேதவியாசர் எனப் பட்டார்.

Koviloor Digital Library



இப் பழம்பாட்டில் வெண்ணெய்க்கு உள்ளூறு நேய் என்று கூறியிருப்பதை நோக்குங்கள். எதன் உள்ளூறும் நெய்? பாலின் உள்ளூறும் நெய்; பாலின் உள் நெய் எது? வெண்ணெய் என்று பொருள் கொள்ளல் பொருத்தம். அதனை விட்டு வேறுவிதம் பொருள் செய்தால் இடர்ப்பாடு நேரும். அடுத் தாற்போல் போதம் மிகு நேய் என்று இரண்டாந் தடவையும் நெய் என்றார். முதலில் கூறிய நேய்க்கு உருக்கின நெய் என்று பொருள் கொண்டால் இரண்டாந் தடவை கூறிய நெய்க்கு என்ன கூறுவது? இரண்டாம் தடவை கூறிய நெய்தான் உருக்கின நேய் என்று பொருள் செய்யும்படி மிகுநேய் என்று கூறினார். வெண்ணெயை உருக்கினால் அளவில் நேய் மிகும் என்பது படியாத நெய் விற்கும் பெண்களும் அறிந்தது ஒன்று. ஆதலின் உள்ளூறுநேய் - மிகுநேய் என்ற அடைமொழிகளைக் கூர்ந்து நோக்கிப் பொருள்கொள்ளுதல் வேண்டும்.

மேலும், போதம் என்னும் பதம் சிவஞானபோதம் என்னும் மொழியின் குறுக்கம். மெய்கண்டார் செய்தது சிவ ஞானபோதமன்று. சிவஞானபோதத்தைப் பரஞ்சோதி முனிவர் மெய்கண்டாருக்குக் கூற, அதனைச் சிந்தித்து அதற்கு விளக்கமாக 81 வெண்பாக்களும் உரைச் செய்யுளுமாக மெய் கண்டார் செய்தார். அவ் வெண்பாக்களும் உரையுமே மேய் கண்டார் சேய்த தமிழ் என்று உணரவேண்டும். இதனை இன் னொரு பழம்பாட்டாலும் அறியலாம்.

"எந்தை சனற்குமரன் ஏத்தித் தொழஇயல்பாய்
நந்தி யுளத்தருளும் ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏதிருட் டாந்தத்தால் இன்று."

என்ற பாட்டை நோக்கச் சிவஞானபோதமானது நந்தியெம் பெருமான் சனற்குமர முனிவருக்குச் சொன்னது; சனற்குமா ரர் சத்தியஞான தரிசனிகளுக்குச் சொன்னார். அவர் பரஞ் சோதி முனிவருக்குச் சொன்னார். அவர் மெய்கண்டாருக் குச் சொன்னார். அதனைத்தான் மெய்கண்டார் மனனம்

Koviloor Digital Library



செய்தார் - சிந்தித்தார். அந்த நூலே 'ஞான நூல்' என்று கூறப்பட்டிருக்கிறது. அந்த ஞான நூல் என்பதுதான் தமிழில் இருக்கும் 12 சூத்திரங்களால் ஆகும் சிவஞான போதம்.

ஆதலின் 'வேதம் பசு' என்ற முதலடியையுடைய பாட்டில் காட்டிய போதம் என்பது இப்போது தமிழில் இருக்கும் 12 சூத்திரங்களே.

தமிழ்வேதமாகிய சங்க இலக்கியப் பசுவினின்றும் தமிழ் ஆகமமாகிய தமிழ் மூவாயிரப் பாலைக் கரந்து நால்வர் தமிழாகிய வெண்ணெயை எடுத்து, தமிழ்ச் சிவஞானபோதமாகிய நெய்யை உருக்கி, மெய்கண்டார் செய்த தமிழாகிய நெய்யின் சுவையை நுகர்கின்றோம்.

வேதாகம முதலியவற்றை வேறுவிதமாகப் பொருள் கொள்ளாதபடி உண்மையை உலகிற்கு அறிவுறுத்திய அப்பாட்டின் ஆசிரியர்க்கு நாம் என்றும் கடமைப்பட்டவர் ஆவோம்.



Koviloor Digital Library

# தமிழ்த் தாய் வாழ்த்து

"அ. சிதம்பரநாதச் செட்டியார் எம். ஏ."

தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைநகர்.

(முன் தொடர்ச்சி)

உண்டல் முதலான அடிப்படையான வினைகள் சிலவற்றை இம்மொழிகள் ஒத்த சொற்களாற் குறிக்கின்றனவா என்பதை ஆராய்வாம். தின், வா, ஈ, போ, நகு, நட, நில், தெரி முதலாய அடிகளிற் பிறக்குஞ் சொல்வடிவங்களே இம்மொழிகளில் உண்டல் வருதல் கொடுத்தல் போதல் நகுதல் நடத்தல் நிற்றல் தெரிதல் ஆகிய தொழில்களையுணர்த்து கின்றன. கீழ் வரும் அட்டவணை அவ்வடிகளைக் காட்டும் :—

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| தின், உண் | தின்னு, உண்ணு | திந | தின்னு |
| வா | வரு | வச்சு | பா, பரு |
| ஈ, தா, கொடு | தரு, கொடுக்க | ஈச்சு | ஈ, கொடு |
| போ | போ | போவு | ஹோகு |
| நகு, சிரி | சிரி | நவ்வு | நகு |
| நட | நடக்க | நடிச்சு | நடெ |
| நில் | நில்க | நிலுச்சு | நில்லு, நிந்து, கொள்ளு |
| தெரி | திரி | தெலி | திளி |

தாய்தந்தையரைக் குறிக்குஞ் சொற்களும், வீடு மாடு என்பவற்றைக் குறிக்குஞ்சொற்களும், உப்பு இரும்பு இவற்றைக் குறிக்குஞ் சொற்களும், கல் மலை மரம் பூ ஆகியவற்றைக்

Koviloor Digital Library



குறிக்குஞ் சொற்களும், பொழுது பெயர் உண்டு இல்லை ஆகிய வற்றைக் குறிக்குஞ் சொற்களும், அம்பு படகு எலும்பு குருதி ஆகியவற்றைக் குறிக்குஞ் சொற்களும், யானை பாம்பு மீன் முட்டை என்பனவற்றைக் குறிக்குஞ் சொற்களும் இம்மொழி களில் ஒத்த வடிவம் பெற்றிருத்தல் தமிழ்மொழியின் தாய்மை யையுந் தொன்மையையும் காட்டும் என்க.

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| தாய், ஆய், அம்மை, தள்ளை | அம்மா, தள்ளா | அம்மா, தல்லி | தாயி அம்மா |
| தந்தை அப்பன் | அப்பன் (அச்சன்) | தண்ட்ரி அப்பா | தந்தெ அப்பா |
| வீடு, மனை, இல் | வீட, இல்லம் | இல்லு | மனெ |
| ஆ(=மாடு) | ஆ | ஆவு | ஆவு |
| உப்பு | உப்ப | உப்பு | உப்பு |
| இரும்பு, கரும்பொன் | இரிம்ப | இநுமு | கப்பின |
| கல் | கல்ல | கல்லு | கல்லு |
| மலை குன்று | மல | கொண்ட | மலெ |
| செடி, மரம் | செடி, மரம் | செட்டு, ம்ராநு | கிட மர |
| பூ | பூ | பூவு | ஹூவு |
| பொழுது | போள் | பொத்து | ஹொத்து |
| பெயர், பேர் | பேர் | பேரு | (பெசரு) ஹெசரு |
| ஆம், உண்டு | அதே, உவ்வ | அவுநு | ஹவுது |

Koviloor Digital Library



| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| இல்லை | இல்ல | (இலது) லேது | இல்ல |
| அம்பு | அம்ப | அம்பு | அம்பு |
| படகு, வள்ளம், தோணி | வள்ளம் | படவ | தோணி |
| என்பு எலும்பு | எல்ல | எமுக | { எலுமெ எலுவு |
| நெய்த்தோர், குருதி, செந்நீர் | சோர | நெத்துரு | நெத்துரு கெம்நீரு |
| யானை, ஆனை | யானை ஆன | யேனுகு | ஆனெ |
| பாம்பு | பாம்ப | பாமு | (பாவு) ஹாவு |
| மீன் | மீன் | மீநு | மீநு |
| முட்டை | முட்ட | குட்டு | மொட்டெ |

மேலும், மலையாளம், தெலுங்கு, கன்னடமாகிய மொழிகளில் தலை கை கால் கண் காது பல் முதுகு முதலானவற்றைக் குறிக்குஞ் சொற்கள் அவற்றைக் குறிக்குந் தமிழ்ச் சொற்கள் அனையவாய உண்மை அறியற்பாற்று :—

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| தலை | தல | தல | தலெ |
| கை | கை | செய்யி | கயி |
| அடி, கால் | அடி | அடுகு, காலு | அடி |
| கண் | கண்ண | கந்நு | கண்ணு |

Koviloor Digital Library



| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| காது<br>செவி | காத<br>செவி | செவி | கிவி |
| பல் | பல்ல | பல்லு | (பல்லு)<br>ஹல்லு |
| முதுகு,<br>வென் | முதுக | பெந்நு | பெந்நு |

இதுகாறும் பார்த்தவாற்றால், எல்லா மக்களும் பொதுவாக எந்நாட்டினும் அறிந்திருக்கவேண்டிய அடிப்படையான கருத்துக்களையும் பொருள்களையுங் குறித்தற்குரிய சொற்களுக்காக மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகள் தமிழிற்குக் கடன்பட்டனபோல் தோன்றுகின்றன என்பது அறியப்படும். அவற்றைப்போலவே முன் எண்ணப்பட்ட பிற எட்டு மொழிகளும் தமிழொடு தொடர்புடையன என்க. அதனால் அன்றே சுந்தரம் பிள்ளையவர்கள் "கன்னடமுங் களிதெலுங்குங் கவின் மலையாளமுந் துளுவும் உன்னுதரத்து உதித்தெழுந்து" என இயம்பினர் என்க. தேன்போன்றினிய மொழி என்று விளம்பப்படுந் தெலுங்கிற்குக் "களி"யென்ற அடைமொழியும், மலையும் ஆழமுமாய்த் தோன்றி எழிலொடு விளங்குமொரு நாட்டின்கண்ணே வழங்கும் மொழியாகிய மலையாளத்திற்குக் கவின் என்ற அடைமொழியும் வைத்துப் பாவினை அவர் யாத்தது நினைக்குந்தொறும் இன்பம் பயப்பது.

மாதா பிதா என்ற சொற்களும், கிரஹம் பசு என்ற சொற்களும் இம் மொழிகளில் இந்நாளிற் சிலவேளை வழங்குகின்றது கொண்டு இம் மொழிகள் சமக்கிருதத்தினின்று தோன்றியன என்று கூறுதல் சாலாது. தமக்கெனச் சொல்லின்றி வடமொழிச் சொற்களை ஆளவேண்டுவது இன்றியமையாததென இருந்தாலன்றோ, வடமொழியின்றித் தமிழ் முதலிய மொழிகள் இயங்கா எனக் கூற முன் வரலாம்? ஆனால், தத்தம் பொருள்களைக் குறிக்கும் உரிய சொல்லிருந்தும், வேண்டாமலே விளையாட்டாகவே சிற்சிலர் வடமொழிச் சொற்களைத் தமிழில் ஆளுகின்றனர். அங்ஙனம் ஆளுகின்றவர்தாமும் பெரும்பான்மையாக நகரங்களில் வாழ்க்கை

Koviloor Digital Library



நடாத்துபவராவர். நாட்டுப்புறங்களில் வாழுந் தமிழ்மக்கள், பிறமொழியாளர் தொடர்பின்றி வாழ்வோராய், பிறமொழியாளரால் நன்கு மதிக்கப்படவேண்டும் என்ற மாறு எண்ணமுடையரல்லராய்த் தங்கள் மொழியின் பழைய சொற்களை இன்னம் வைத்திருக்கின்றனர். இதுபற்றிக் கால்டுவேலர் * பின்வருமாறு ஆங்கிலத்தில் வரைந்தார் :—

"தமிழ்மொழி விரும்பினால், தான் ஆளுகின்ற வடமொழிச் சொற்களை அடியோடு அகற்றிவிட்டுத் தனித்தியங்குமென்பதன்றி நன்று தழைக்கவுந் தழைக்கும். சமக்கிருதத்தினின்று வந்து வழங்குஞ் சொற்கள் இன்றியமையாதவை என மதிக்கப்படாமல் வேண்டாப் பொருள்களென்றுதல் விளையாட்டுப் பொருள்கள் என்றுதல் மதிக்கப்படுகின்றன. பொதுவாக, இன்றியமையாதது என்ற காரணத்தால் அல்லாமற் பிறராற் பாராட்டப்படவேண்டும் என்ற தப்பெண்ணத்தினுற் சிலர் சமக்கிருதச் சொற்களை ஆளுகின்றனர். எல்லாத் தேயங்களிலும் பாச்செய்யுட்கள் வாயிலாகவும் நாட்டுப் புறத்தாருடைய பேச்சு வழக்கு வாயிலாகவும் மொழியின் பண்டைய நிலை அறியப்படும். தொலையில் உள்ள நாட்டுப் புறங்களில் வாழுந் தாழ்ந்த வகுப்பு மக்களுடைய தமிழ்ப் பேச்சு சமக்கிருதத்தினின்று வந்த சொற்களை ஆளாதிருக்கும் வகையில் பழந் தமிழைப் பெரிதும் ஒத்திருக்கின்றது."

இதன் உண்மை, கல்லைச் 'சிலை' என்றும், மலையை 'அசலம்' என்றும், மரத்தை 'விருட்ச'மென்றும், பூவைப் 'புஷ்பம்'

* Caldwell, "Tamil can dispense with its Sanskrit altogether, if need be, and not only stand alone but flourish well. Sanskrit derivatives are considered rather as luxuries or articles of finery than as necessaries. Generally it is not through any real necessity, but from choice and the fashion of the age, that it makes use of Sanskrit. In every country it is in the poetry and in the speech of the peasantry that the ancient condition of the language is best studied. The speech of the very lowest classes of the people in the retired country districts accords to a considerable extent with the classical dialect in dispensing with Sanskrit derivatives."

Koviloor Digital Library



என்றும் வழங்காத நாட்டுப்புறப் பேச்சுவழக்கால் அறியத் தகும். பொழுதினைச் சமயம் என்பாரும், பெயரினை நாமம் என்பாரும், அம்பினைப் பாணம் என்பாரும் எலும்பினை அஸ்தி என்பாரும் நகரில் வாழும் தமிழரேயாவர்; நாட்டுப்புறங் களில் வாழுந் தமிழரல்லர். பாம்பினைச் சர்ப்பம் என்றும், தலையினைச் சிரஸ் என்றும், பல்லினைத் தந்தமென்றும் வட மொழிப் பெயரால் வழங்குவோர் பெரும்பாலும் நகர்வாழ் மக்களே. "நேத்திரம் பிரதானம்," "கர்ண கொடூரமா யிருந்தது" என்று கூறி நேத்திரம், கர்ணம் என்னும் வட மொழிச் சொற்களைக் கண் காது இவற்றிற்கொப்ப வழங்கு கின்றவர் நாட்டுப்புறத்தாரல்லர். ஆம், இல்லை, யானை, மீன், முட்டை இவற்றிற்கேற்ற வடமொழிச் சொற்கள் நாட்டிலும் நகரில்தானுந் தமிழரது பேச்சு வழக்கிற் பயிலுதல் இல்லை. "தின்" முதலாக முன்னர் எண்ணிய வினைச்சொல் எல்லாம் பேச்சிலும் எழுத்திலும் வழங்குகின்றனவேயன்றி அவற்றிற் கேற்ற வடமொழிச் சொற்கள் பயிலுதல் அறவேயில்லை. பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் என்னுஞ் சமக்கிருதச் சொற் களை இந்நாளில் தமிழர் சிலர் நகர்க்கண் வாழ்வார் வழங்கு கின்ற காரணத்தால், தமிழ்மொழி தனக்கென ஒன்றின்றி எல்லாவற்றிற்கும் வடமொழிக்கே கடன்பட்டது என்றும் அது வடமொழியினின்றே தோன்றிற்று என்றுங் கூறப்படு மாயின், அக் கூற்றுப் பொருந்தாக் கூற்றென விடுக்க. நிலம், நீர், தீ, காற்று, வான் என்ற தனிப்பெயர்கள் நம் மொழிக் குத் தொன்றுதொட்டே உண்டு என்றும், அவை பிற திரா விடமொழிகளிலுங் காணப்படுகின்றன என்றும் முன்னரே காட்டினும்.

இனி, பழந்தமிழ்ச் சொற்கள் இப்பொழுது தமிழிற் பேச்சு வழக்கில் இல்லாதன முன்னர்த் தமிழிலக்கியங்களிற் பயின்றன. இன்றும் பிற திராவிட மொழிகளில் ஒரோவொரு வடிவிற் காணப்படுதல் கருதத்தக்கது. நால்கு, தொண்டு, தள்ளை, வள்ளம், நெய்த்தோர், வென் என்பன இத்தகைய. இதனால், மறைந்து கிடக்கும் பல தொடர்புகள் பழந் தமிழிலக் கியச் சொற்கள் வாயிலாக வெளிப்படும் என்பது விளங்கும்.

Koviloor Digital Library



தமிழ்த்தாய் பெற்றெடுத்த மகள் என்று சொல்லற் பால தாகிய கன்னடம், குடகர்மொழி படகர்மொழி என்ற இரு வேறு மொழிகளைத் தோற்றுவித்ததாகக் கூறுதல் கூடும். அதனாற்போலும் பாவலர் பிள்ளையவர்கள் "உன் உதரத்து உதித்து எழுந்தே ஒன்று பல ஆயிடினும்" என்றார் என்க.

ஆன்மா அநாதி காலந் தொட்டே இருந்ததற்குக் கடவுள் கருணையான் உடலம் ஈந்தான் என்றும், அதனால் அவன் படைக்குந் தொழிலுடையன் எனக் கூறப்பெறுவன் என்றுஞ் சொல்லுப. அதுபோல, மக்கள் பலர் முற்காலத்தே இருந் தார்க்குச் சொற்பொருள் தமிழன்னை தந்தமையால் அவள் பலமொழி நங்கையர்க்குத் தாயெனற் பாலள். கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளுவம் ஆகியவை அவ்வன்னை பெற் றெடுத்த மக்கள் என்று சுந்தரம் பிள்ளை கருதினார். அதனால் "எல்லையறு பரம்பொருள் பல்லுயிரும் பலவுலகும் படைத்தல்" போன்று தமிழ்த்தாயும் ஆக்குந் திறனுடையள் என்றவாறு அவர் குறிப்பிட்டது மிக்க பொருத்தமுடைத்து. மேலே கூறிய மொழிகள் தமிழ்ப்பால் உண்டு வளர்ச்சியுற்றதால் அவற்றை அளித்தல் செய்கின்றாள் தமிழன்னை என்றதும் ஒக்கும். பழைய மலையாள இலக்கியங்கள் இதற்குத் தெள்ளிதின் அமைந்த சான்று. மலையாள எழுத்துக்களால் எழுதப்பட்டிருப்பினும் சொற்களும் சொல் புணர் முறையும் தமிழில் உள்ளவற்றோடு ஒத்துள என்பதற்குக் கீழ்வரும் பழைய மலையாள இராமா யணப் பகுதியொன்று தக்க சான்று:—

"கொண்டலின் நேரிருண்டு சுருண்டு
நீண்டொளி வார்ந்து திங்ஙும்
குந்தள பாரமொடு முகில் குலத்திட
மின்னல் போலே..................அரிகெப் பொலிந்தவள்
சீத சொன்னாள்".

தான் பெற்றெடுத்த மக்களைத் தமிழ் அளித்தற்கு இதனினுஞ் சான்று வேண்டுமோ? டகர ணகர ளகரங்களை வடமொழியும் அதன் வழிவந்த பல்வேறு மொழிகளுந் தமிழினின்று கடன் வாங்கின என்று மொழி நூற் பேராசிரியர் சிலரும் * வினைச்

* Mr. Norris, Dr. Buhler, Dr. Caldwell, Mr. Beames and Dr. Sunitikumar Chatterjee.

Koviloor Digital Library



சொல்லை வாக்கியத்தின் இறுதியில் வைத்து முடிக்கும் பெற்றியை வடமொழி தமிழினின்று பெற்றதென்று எட்கிஞ்சு† என்பாரும், தற்காலச் சமக்கிருத ஐகார ஔகார உச்சரிப்பிற்காக வடமொழி தமிழ்மொழிக்குக் கடன்பட்டதென்று மொழி நூற்கலையாசிரியர் தாரப்போரிவாலா‡ என்பாரும் முன்னரே மொழிந்துளராதலின் பேரருளுடைய பரம் பொருள் "பல்லுயிரும் பலவுலகும் அளித்தல்" போலத் தமிழ்த்தாய் பல்வேறு மொழிகளையும் அளித்தல் செய்கின்றாள் என்க. பரம்பொருள் அருள் காரணமாகத் துடைத்தல் போல அவளுஞ் சில மக்களைத் துடைத்தனள்போலும்! அதனால் அன்றோ குறுக்குமாலர் ஆகிய மொழிகளின் நேர்த் தாயர் இப்பொழுது அறியப்பட்டிலர்? வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய மாகாணங்களில் வழங்கும் அம்மொழிகள், தமிழின் பேர்த்திகள் என்று சொல்லத்தக்கன இன்றும் உளவாகவும், அவற்றின் தாயர் அறியப்படாமைக்குக் காரணம் தமிழன்னை அவற்றைத் துடைப்பித்ததுபோலும்! நீலகிரியில் இருளருங் குறும்பரும் பேசும் மொழிகள் தமிழிற் பிறந்ததொரு முன்னைய மொழியின் வழி வந்தன எனக் கூறத்தகும். அம்மொழியுந் துடைக்கப்பட்டதுபோலும்! இவற்றையெல்லாம் உன்னுங்கால், "பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர் எல்லைபறு பரம்பொருள் முன்னிருந்தபடி யிருப்பதுபோல்" என்று பாடிய பாவலர் பெருமை விளங்கும்.

இதுகாறும் எழுதிவந்தவாற்றால், பரம்பொருள் முத்தொழிலுடையதாய் என்றும் அநாதியாய் அழிவிலதாய் இருத்தல்போலத் தமிழ்த்தாயும் ஆக்கல் அளித்தல் அழித்தல் தொழிலுடையளாய்ப் பண்டு தொட்டு உள்ளவளாய் அழிவில்லாதவளாய்த் திகழ்ந்தருளுபவள் என்பதும், கன்னட முதலாய பல மொழிகளைத் தன்பால் தோற்றுவித்தவள் என்பதும், அப் பல மொழிகளில் ஒவ்வொன்றும் பலப் பலவாகப் பல்கியக்காலும், தான், பிற சில பழைய மொழிகள் வழக்கழிந்து

† Mr. Edkins in 'China's Place in Philology.

‡ Dr. I. J. S. Taraporewala in "Elements of the Science of Language".

Koviloor Digital Library



சிதைந்து போனதுபோலன்றி என்றுஞ் சீரிளமை நலத்தொடு பிறங்குகின்றவள் என்பதும், இக் காரணங்களால் வாழ்த்தி வணங்கத் தக்கவள் என்பதும் உறுதியாதல் காண்க.

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி யிருப்பதுபோற்
கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத்து உதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக்கு அழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே."

---

## முகில்

வானகத்தில் வந்துபல
வடிவு காட்டுவோம்—பச்சைக்
கானகத்தைக் கண்டிறங்கிக்
கவினைக் கொட்டுவோம்.

ஆட்டுமந்தை போவதுபோல்
ஆர்ந்தே யோடுவோம்—வெய்ய
காட்டுயானைக் கூட்டமொப்பக்
கலங்கிக் கூடுவோம்.

மயில்நடனம் விரும்பிநாங்கள்
மாற்றம் காட்டுவோம்—இன்பக்
குயிலிசையைக் கேட்கவேண்டிக்
கூத்தும் கொள்ளுவோம்.

பச்சைப்பயிர் தலையசைக்கப்
பாட்டுப் பாடுவோம்—மலர்
நச்சியெம்மை முறுவலிக்க
நலிவைப் போக்குவோம்.

மலையரசன் தழுவியெம்மை
மகிழும் வேளையில்—அன்பால்
விலைமதியா முடியவர்க்கு
விளங்கச் சூட்டுவோம்.

கோட்டாறு தே. ப. பெருமாள்.

Koviloor Digital Library

# பாதள உலகம்

"N. K. வேலன்"

பூமியின் மேல் உயர்ந்த மலைகள் இருப்பது போன்று கடலின் உள்ளேயும் பெரிய பள்ளங்கள் உள்ளன. சில இடங்களில் ஆறுமைல் ஆழத்திற்கு மேற்பட்ட பள்ளங்கள் இருக்கின்றன. இமய மலையையும் விழுங்கக் கூடிய பள்ளங்கள் கடலில் உண்டு.

இத்தகைய பள்ளங்களில் நீரின் அழுத்தம் மிகவும் அதிகமாய் இருக்கும். ஒரு மரக்கட்டையை இரும்புடன் சேர்த்துக் கட்டிக் கடலின் உள்ளே இருக்கும் பெரிய மடுவிற் போட்டு மீண்டும் வெளியில் எடுத்துப்பார்த்தால், அது நசுங்கிப்போய் முன்னிருந்த அளவிற் பாதி ஆய்விடும். ஆழமான இடங்களில் ஓர் அங்குலப் பரப்பிற்குச் சற்றேறக்குறைய ஐந்து டன் எடை உள்ள அழுத்தம் ஏற்படுகிறது.

மிகவும் ஆழமான இடங்களிலுள்ள கடல் நீர் எக்காலத்திலும் பனி போன்று குளிர்ந்து இருக்கும். ஞாயிற்றின் ஒளி இவ்வளவு ஆழத்திற்கு எட்டுவதே கிடையாது. எங்கே பார்த்தாலும் ஒரே இருள் சூழ்ந்துகிடக்கும். சிற் சில வேளைகளில் மின் மினி போன்று ஒளிவிடும் மீன்கள் இவ் விருளைப் போக்குகின்றன. பாதளத்திலுள்ள மீன்கள் தண்ணீர் மட்டத்திற் காணப்படும் மீன்களைப்போன்றன அல்ல. இவற்றின் உடல்கள் நீரின் அழுத்தத்திற்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டுள்ளன. இவற்றின் பஞ்சு போன்ற உடல்களின் உள்ளே நீர் கசிந்து வெளிப்படுகின்றது இதனுல் நீரின் அழுத்தம் இவற்றை நசுக்குவதில்லை இம் மீன்கள் எப்போதும் ஆழமான இடங்களிலேயே இருக்கும். தண்ணீர் மட்டத்தில் இவை உயிர் வாழ முடியாது.

சில மீன்களின் கண்கள் மின்சார விளக்கைப் போன்று சுடர்விட்டு எரிகின்றன. இம் மீன்கள் தம் பார்வையைச் செலுத்தும் இடங்களில் எல்லாம் வெளிச்சம் உண்டாகும். சில மீன்களின் உடலிலேயே ஒளி உண்டாகின்றது. இம்

Koviloor Digital Library



மீன்கள் தாம் இருக்கும் இடங்களில் ஒளி உண்டாக்கித் தாம் போகும் வழிகளைத் தெரிந்துகொள்கின்றன.

இன்னும் சில மீன்கள் கொம்புகள் உடையனவாயும் அக்கொம்புகளின் நுனியில் ஒளியுள்ள கண்களை உடையனவாயும் இருக்கின்றன. மற்றும் சில மீன்கள் ஒளியுள்ள மூக்குகள் உடையன. இம் மீன்கள் தம் கையில் விளக்கை ஏந்திச் செல்வன போன்று தோன்றும். இவைபோன்று இன்னும் பல திறப்பட்ட மீன்கள் இருள் உலகத்திற் காணப்படுகின்றன. அங்குள்ள நிலைமைக்கு ஏற்றவாறு அவற்றின் உடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. பாதள உலகத்தின் கொடுமையான குளிரும் அவற்றைத் தாக்குவதில்லை.

கடலின் தரையில், இறந்துபோன சிற்றுயிர்கள் நிரம்பிக் கிடக்கின்றன. இவைகள் பல்லாயிரம் ஆண்டுகளாய் அழுத்தப்பட்டு இறுகிச் சுண்ணும்பாக மாறுகின்றன. அங்குள்ள மண் மிகவும் இளக்கமாய் இருக்கும். அதில் வாழும் உயிர்களுக்கு இயற்கையாகவே கால்கள் மிகவும் நீண்டு இருக்கின்றன. இல்லையேல், இளகிய தரையில் அவ் வுயிர்கள் நடக்கமுடியாது. நீர் மட்டத்திற் காணப்படும் நண்டுகளின் கால்களை விட ஆழத்திலுள்ள உயிர்களின் கால்கள் ஆறு பங்கு நீண்டு இருக்கும். சில உயிர்கள் செடிகளைப்போன்று ஒரே இடத்தில் நின்றுகொண்டு மேலிருந்து வரும் பூச்சி புழுக்களைத் தின்று காலங் கழிக்கின்றன.

சில மீன்களுக்கு உடலைப்போன்று ஆறுபங்கு நீளமுள்ள மீசைகள் உள்ளன. இன்னும் சில மீன்கள் மிகப் பெரிய கண்களுடன் ஒரு புறம் சிவப்பு ஒளியும் மற்றொரு புறம் பச்சை ஒளியும் வீசிக்கொண்டு வருகின்றன. இவை பார்ப்பதற்கு மிகவும் அழகாய்த் தோன்றும். மற்றொரு வகை மீன் தன் குஞ்சுகளை மார்பில் அணைத்துக் கொண்டு செல்லும். மீன் குஞ்சுகள் பாதள உலகத்தின் இருளில் வழிதப்பிப் போய் விடாமல் இங்ஙனங் காப்பாற்றப்படுகின்றன.

கடலின் அடியில் பல்வேறு வகையான உயிர்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. நீர் மூழ்கிகள் இறங்க முடியாத ஆழங்

Koviloor Digital Library



களில் வலை போன்ற பையை விட்டு அதன் உதவியால் கடலி லுள்ள உயிர்களை மேலே கொண்டுவந்து அவற்றின் தன்மை களை ஆராய்ச்சி செய்வார்கள். இங்ஙனம் சோதனை செய்து பார்த்ததில் மிகவும் ஆழமான இடங்களிலும், இருள் மிகுந்த இடங்களிலும், பனி மிகுந்த இடங்களிலும், அழுத்தம் நிறைந்த இடங்களிலும் எங்கே பார்த்தாலும் உயிர்கள் மலிந்து கிடப் பது தெரியவந்தது. இவற்றின் உடல்கள் மிகவும் நுட்பமாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. பாதளத்திலிருந்து வெளியில் எடுக்கும் உயிர்கள் மேலே வருவதற்குள் உயிரிழக்கின்றன. காற்றின் அழுத்தமின்றி மக்கள் உயிர்வாழ முடியாது. அஃதே போன்று நீரின் அழுத்தமின்றி இவ் வுயிர்கள் பிழைப்ப தில்லை. படைப்பின் வியத்தகு தோற்றங்களைக் காணுந்தோறும் இறைவன்றன் பேராற்றலும் பேரறிவும் வெளிப்படுகின்றன.

---

## நாமகளூஞ்சல்

பொதியமலைக் குறுமுனியும் புகழார் சங்கப்
　　புலவரொடு புரவலரும் போற்றி யேத்த
மதிதவழு முடியண்ணா லருளே போல
　　வளர்ந்தெங்கும் புகழ்படைத்த மடவாய்! கஞ்சப்
பதிவளரும் புலவனருள் பூத்த நாவிற்
　　பயிலுமெழிற் பூங்குருந்தே! பாவியேற்குக்
கதியருளும் பதயுகத்தீ ராடி ரூசல்
　　கலைமகளாங் காரிகையீ ராடி ரூசல்.

வள்ளுவர்தந் திருக்குறளும் வகையார் கோவை
　　வயங்குமிளங் கோமொழியு மலருஞ் செல்வங்
கொள்ளுமொரு பெண்ணரசே! கோப மேய்க்குங்
　　குலவுமிதழ்ச் செங்கரும்பே! தொண்ட ருள்ளப்
பள்ளமிழி பூம்புனலே! பகரு மன்பாம்
　　பரியகயிற் றூலசையும் பண்பி லேன்றன்
உள்ளமெனும் பலகையமர்ந் தாடி ரூசல்
　　ஒளியுலவு மணியசைய வாடி ரூசல்.

—சி. து. கன்னிசாமி.

Koviloor Digital Library

# எனக்கு வேண்டாம்

"தணிகை யரசு"

பேராசை மிகுந்துள்ள இந்நாளில் - எவ்வளவு பொருள் தன்னிடமிருந்தாலும் இன்னும் வேண்டுமென எண்ணுகிற இக்காலத்தில்—பக்கத்து வீட்டுக்காரனுடையதும் தன்னுடையதாக்கித் தானே எல்லாமாயிருக்க விரும்பும் இந் நூற்றூண்டில்—எனக்கு வேண்டாம் எனச் சொல்லுபவன் ஒருவன் இருக்கக்கூடுமோ என்ற ஐயம் யாவருள்ளத்திலும் எழுதல் இயல்பே. கறுத்த உடம்பையும், பாதி அழுக்கேறிய இடுப்புக் கந்தையும் கொண்ட, ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டு இளைஞனொருவன் அன்பின் கண்ணீர் ததும்பிய குழைந்த முகத்தோடு என்னைப் பார்த்து 'எனக்கு வேண்டாம்' என்று சொன்னதை யான் என்றும் மறவேன்.

'தொண்டை நாட்டில் திருக்காளத்தி மலைமீதில் கண்ணப்பருக்கு அருள்புரிந்த காளத்தி நாதரைத் திருநாவுக்கரசர் தொழுதுகொண்டிருந்தார். அஞ்ஞான்று அவருக்கு வடகயிலை சென்று பரமசிவனைக் கண்டு, அப் பெருமானின் அருள்வெள்ளத்தில் தோய விருப்பம் வந்தது. திருக்காளத்திக்குத் 'தென்கயிலை' என ஒரு பெயர் வழங்குகின்றமை அவரது விழைவுக்குக் காரணம்போலும்! அப்பொழுதே அங்கு நின்றும் புறப்பட்ட அப்பர் இரவுபகலென் றெண்ணாது, இளைப்பாறுதலுஞ் செய்யாது, தொடர்ந்து சென்று கயிலையை நெருங்கவும், அங்குச் சிவபெருமான் அருள்செய்தவண்ணம் ஆங்குக் காணப்பட்ட திருக்குளத்தில் மூழ்கித் திருவையாற்றில் கரையேறினர். அங்குச் சிவபெருமான் திருக்கயிலைக் காட்சியைத் திருநாவுக்கரசருக்குக் காட்டியருளினர்' என்னும் இவ் வரலாறு சேக்கிழார் கூறுந் திறன் மனமுருக்குந் தகையது. அதனைப் படித்தறியும் பேறுபெற்ற அடியேன் திருவையாற்றுக்கும் சென்றுவரும் பேறுபெற்றேன்.

சென்ற வைகாசித் திங்களில் ஒரு நாள் திருவையாற்றில் பகல் மணி பன்னிரண்டு இருக்கையில் ஒரு வண்டிக்காரனிடம் நான்கணு கொடுக்கையில் அவன், 'எனக்கு வேண்டாம்' என்றனன்.

Koviloor Digital Library



'ஏன் மறுக்கிறாய்?' என்றேன்.

'இன்று தாங்கள் எனக்குச் சொன்ன பெரியார் கதைக்காக யான் அதை வாங்கிக்கொள்ளமாட்டேன்' என்றான்.

'நான் உன் வண்டியில் ஏறி வந்தேனே?' ஏறு முன்னர் நான் பேசியபடி, கொடுக்கவேண்டாமா? இந்தா வாங்கிக் கொள்' என்றேன்.

'சாமி! நீங்கள் சொன்னீர்களே ஒரு கதை. அந்தத் திருநாவுக்கரசரைக் கல்லில் கட்டிக் கடலில் விட்டார்களே. அந்தக் கல் மிதந்து வந்தது என்றீர்களே. கடவுளிடத்தில் பத்திமட்டும் இருப்பின் நமக்கு ஒரு துன்பமும் வாராதுபோல் இருக்கிறதே. தண்ணீருக்கும் கல்லுக்கும் உயிரேயில்லை. அவைகளுக்கு அறிவும், இரக்கமும் இல்லையே. அப்படியிருந்தும் கல் மிதந்து கடல் அவரைக் கரையில் சேர்த்துவிட்டது என்று சொன்னீர்களே. என் நெஞ்சை அது மகிழ்விக்கிறது.

'நான் இந்த ஊரில் எத்தனையோ ஆண்டுகளாக வண்டி ஓட்டிப் பிழைத்து வருகின்றேன். பலர், என் வண்டியில் ஏறுபவர்கள், திங்களூருக்கு ஓட்டச் சொல்லுவார்கள். நான் வண்டியை ஓட்டிக்கொண்டு போகையில் அவர்கள் ஒருவருக்கொருவர் அப்பூதியடிகள் தண்ணீர்ப் பந்தலைப்பற்றிப் பேசிக்கொள்ளுவார்கள். ஆனால் எனக்கு ஒன்றுந் தெரியாது. இன்றுதான் அந்தத் தண்ணீர்ப் பந்தலைப்பற்றிய செய்தி அடியேனுக்குத் தெரிந்தது. நான் நாலாவது வரையிற் படித்திருப்பதால் அந்தத் தண்ணீர்ப்பந்தலின் பக்கத்தில் மண்டபத்திலும், மரங்களிலும் 'திருநாவுக்கரசு' என அச்சிட்டு ஒட்டியிருப்பதை மட்டும் படித்துப் பார்ப்பேன். ஆனால் திங்களூர் அப்பூதி நாயனார் தமக்குத் திருநாவுக்கரசர் மீதிருந்த பற்றினால் அவர் பெயரைத் தாம் நடத்திய அப் பந்தருக்கு வைத்து வழங்கினார் என்பது இன்றுதான் எனக்குத் தெரியும். ஆனால் எனக்கு ஓர் ஐயம். அப்பூதியடிகள் திங்களூரிலிருந்த ஐயர் என்று சொன்னீர்கள். அவர் வீட்டில் திருநாவுக்கரசர் சாப்பிட்டார் என்றும் சொன்னீர்களே! எப்படி அது நடந்திருக்கும் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை.'

Koviloor Digital Library



'தம்பி! என்னைவிட உனக்கு வயது சிறிது குறைவாகத் தான் இருக்கும்? அதனாலேதான் 'தம்பி' என்று கூப்பிடுகிறேன். சாதி, சாதி என்று பேசுவோரெல்லாரும் தெரியாதவர்களே. நாம் எல்லோரும் கடவுளுக்குப் பிள்ளைகள். ஓர் ஐயர் வீட்டிலும் ஒரு முதலியார் வீட்டிலும் குழந்தைகள் பிறந்தால் அவர்கள் ஒரே மாதிரியாகத்தான் பிறக்கின்றனர். இரு குழந்தைகளும் ஒரே மாதிரியாகத்தான் அழுகின்றனர். ஆனால் குழந்தைகள் பெரியவராகிறபோது ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கையில் வெவ்வேறு தொழில்களை மேற்கொள்ளுகிறார்கள்; அதனால் இருவரும் வேறுபடுகிறார்கள். அல்லாமலும், ஒரே வீட்டில் பிறக்கும் இருவரில் ஒருவனைப்போல மற்றவன் பெருமையடையாமல் இருக்கிறான். இதே போன்றுதான் எல்லாமும். ஆகவே, பிறப்பினால் உயர்வு தாழ்வு இல்லை என்பது தெரிகிறதன்றோ? இதனை நன்றாகத் தெரிந்தவர்கள், கடவுளிடம் அன்புடையவர்கள். ஒரே தந்தைக்குப் பிறந்த பிள்ளைகளில் ஒருவன் மற்றவர்களைவிடத் தான் உயர்ந்தவன் என்று சொல்லிக்கொண்டு அவர்களோடு கலந்து உண்ணாமலும், அவர்களைத் தொடாமலும் இருந்தால், அவர்களைப் பெற்ற தந்தையானவன் வருந்துவான் அல்லனோ? அப்பாவிடம் உண்மையான அன்புடைய பிள்ளைகள் தங்களுக்குள் சண்டையிட மாட்டார்கள். அப்பூதியடிகள் சிறந்தவராக இருந்ததால், அந்த வேற்றுமையை அவர் எண்ணவேயில்லை. மேலும், அவர் வீட்டில் சாப்பிடும்போதும், திருநாவுக்கரசர் நடுவிலும், அவருக்கு ஒரு பக்கத்தில் அப்பூதியடிகளும் இன்னொரு பக்கத்தில் அவர் புதல்வர்களும் உட்கார்ந்து சாப்பிட்டார்களாம். அது மட்டுமா, அவர்களுக்கு அன்போடு உணவு படைத்தது அப்பூதியடிகளின் மனைவியாராம்; வேலைக்காரர்களல்லர். அந்த அம்மையார் கணவருக்கேற்ற சிறந்த மங்கை; தம்பி! இவ்வளவு ஆர்வத்துடன் கேட்கின்றனையே. நீ மிக நல்லவன்போல் தோன்றுகின்றது.'

'சாமி! அந்த மாதிரி நாயனாரை இப்பொழுது பார்க்க முடியுமா? பிள்ளை பாம்பு தீண்டி இறந்துவிட்டபொழுது பெற்றவர்கள் மனம் வருந்தி அழுது இருக்கமாட்டார்களா? அதைப்பற்றி நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லையே.'

Koviloor Digital Library



"நல்ல கேள்விகேட்டாய். உன்னோடு பேசிக்கொண்டிருப்பதில் வைகாசித் திங்களின் வெயில்கூடத் தெரியவில்லை. பிள்ளை இறந்தது தெரிந்ததும் பெற்றோர்கள் வருந்தினார்கள். பிள்ளையை இழந்ததற்காக அவர்கள் வருந்தினார்களென்று எண்ணுகிறாயா? இல்லை. அவன் இறந்தால் அப்பர் பெருமான் அமுதுசெய்யக் காலந்தாழ்க்குமே எனத்தான் வருந்தினார்கள். அப்பர், 'மூத்த திருநாவுக்கரசு எங்கே?' எனக் கேட்க, அவர்கள் உண்மையைச் சொன்னார்கள். திருநாவுக்கரசர் கடவுளை நோக்கிப் பாடினார். இறந்த பிள்ளை உயிர் பெற்றெழுந்துவிட்டான். அப்பொழுது அப் பெற்றோர்கள் மிக மகிழ்ந்திருப்பார்களென்று எண்ணுகிறாயா? அவர்கள் மகிழவில்லை. அடியார் உணவுக்குக் காலந் தாழ்த்ததே என அப்பொழுதும் அவர்கள் வருந்தினார்களாம்.

இதனை யான் சொல்லிக்கொண்டேயிருக்கையில், கேட்டுக் கொண்டிருந்தவன் கண்களில் நீர்பெருகிற்று. அவன் உணர்ச்சியால் விழுங்கப்பட்டவனாய் நின்றான். அப்பொழுது அவனிடம் யான் நாலணாவை நீட்ட, அவன் வாய் பேச முடியாவிடினும் முகம் 'எனக்கு வேண்டாம்' என்று சொல்லிற்று.



Koviloor Digital Library

# படைப் பயிற்சி

## (Military Training)

"வித்துவான் மு. வரதராஜனார், B. O. L."

எல்லோருக்கும் படைப் பயிற்சி வேண்டும் என்னும் கொள்கை புதிது அன்று. அஃது தொன்றுதொட்டு அறிஞர்களால் கூறப்படுவதே ஆகும். பண்டைத் தமிழ்நாட்டில் போர் நேர்ந்த காலத்தில், ஒவ்வோர் ஆண்மகனும் செருக்களஞ்சென்று வீரத்துடன் போர்புரியும் பொருட்டுப் பயிற்சி பெற்றிருந்தான் எனத் தமிழ்நூல்கள் கூறுகின்றன. பண்டைய ரோம், ஸ்பார்ட்டா நாடுகளிலும் இப் பயிற்சி பெறவேண்டுமென்று ஒவ்வொருவரும் வற்புறுத்தப்பட்டனர்.

ஆனால், நாகரிகம் வளர வளர, பற்பல மாறுதல்கள் ஏற்பட்டன. அவற்றுள் ஒன்று, படைப் பயிற்சியைப் பற்றிய மாறுதல் ஆகும். மக்கள் அனைவர்க்கும் வேண்டும் என்றிருந்த படைப் பயிற்சியை ஒரு சிலர்க்கே ஒதுக்கிவிட்டனர்.

ஆயினும், படைப் பயிற்சியைப் பலர்க்கும் உரித்தாக்குதல் நன்மையே தரும். இப் பயிற்சியை ஒரு நாட்டுமக்கள் அனைவரும் பெற்றிருப்பின், போர் நேருங்காலங்களில் பெரும் படை திரட்டமுடியும். படையின் பெருமையையும் வலிமையையும் பிறநாட்டார் உணர்வர்; உணர்ந்து போர்துவங்கவும் அஞ்சுவர். மற்றொரு பெரும்பயன் உளது; அனைவரும் போரில் தலையிடுமாறு வற்புறுத்தப்படுதலால், போரின் கொடுமையையும் அதன் விளைவையும் நாடு முழுதும் உணரும். காரணமின்றிப் படைதிரட்டுதலையும் போரில் அழிதலையும் அழித்தலையும் மக்கள் ஒருங்கே எதிர்ப்பர்; அடிக்கடி போர் நிகழாத வண்ணம் தடுப்பர்; போர் போர் என்னும் பெரும் பயம் ஒழியும்.

இப் பயிற்சியினால் பிற நன்மைகளும் உள்ளன. நாட்டு மக்கள் உடல் நலமும் வன்மையும் எய்துவர். இதனினும் பெரிய செல்வம் ஒரு நாட்டுக்கு வேறு யாது உளது? அன்றியும் ஒற்றுமை உணர்ச்சி, ஒழுங்குடன் நடத்தல், அஞ்சாமை முத

Koviloor Digital Library



லான சிறந்த பண்புகளை மக்களிடையே வளர்த்தற்கு இப் பயிற்சியே உறுதுணையாகும்.

1914-1918-ல் ஐரோப்பியப் பெரும்போர் நடந்த பின்னர், கட்டாயப் படைப்பயிற்சியை மேனுடுகள் மக்கள் பலரிடையே புகுத்தத் தொடங்கின. ஆனல், உலகப் பொது மன்றம் (League of Nations) அம்முறை வளரவொட்டாது தடுத்தது. ஆனல், பல நாடுகள் அத் தடையைப் பொருட் படுத்தவில்லை. எனினும், தொழிலற்ற மக்களுக்கு ஊதியம் தரும் தொழிலாக இப் பயிற்சி மாறிவிட்டது. ஆதலின், தன் னலங்கொண்டு, அரசியலில் செல்வாக்கு மிக்க செல்வர் ஈரமற்ற நெஞ்சினராய் இவ் ஏழைமக்களைப் போர்க்கு இரையாக்கு கின்றனர். எனவே, இப் பயிற்சியை ஊதியம் தருவதொரு தொழில் ஆக்காது, செல்வர் வறியர் என்ற வேறுபாடு கருதாது, அனைவர்க்கும் உரிய கட்டாயப் பயிற்சியாக வற்புறுத்தல் வேண்டும். அப்போதுதான், உலகமுன்னேற்றத்துக்கும் அமைதிக்கும் வழி உண்டு.

---

## இன்பம்

இன்ப மின்பமென் றேங்கு மாந்தர்காள்
இன்ப மன்பின்றி எங்கணுண் டாகும்?
அன்போ டுயிரிடை யொழுகுவீ ராயின்
இன்பந் தான்வந் தியையு முமையே.

உலகில் மக்க ளொருவரோ டொருவர்
இகலின்றி யன்புட னிணங்கி யொழுகும்
உள்ளப் பான்மை யுடையராய் வாழ்ந்து
துன்ப நீங்கி யின்ப மடைகவே.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை B. A.

Koviloor Digital Library

# சிறுமகளிர் விளையாட்டு

"வித்துவான் இ. சிவகுருநாதன்"

சிறுவர்கள் பொழுது முழுவதும் விளையாடுவார்கள்; சிறிதும் சலிக்கமாட்டார்கள். அதிலுள்ள விருப்பம் அவர் கட்கு வேறு எதிலும் இருப்பதில்லை. விளையாட்டே சிறுவர் களுக்கு உயிர் எனலாம்.

விளையாட்டு, சிறுவர்களின் உள்ளத்திற்குக் கிளர்ச்சியைக் கொடுக்கும்; எழுச்சியை உண்டாக்கும்; மகிழ்ச்சியை ஊட் டும். அவை சிறுவர்களின் உடலையே அன்றி உயிரையும் ஒம்பும். வாழ்க்கை வளத்திற்கு மகிழ்ச்சி உரம்போன்றது. மகிழ்ச்சி இல்லா வாழ்க்கையால் யாது பயன்? ஆதலின் மகிழ்ச்சியுண்டாக்கும் விளையாட்டுக்கள் வேண்டற்பாலனவே.

ஆண்டவன் மகிழ்ச்சியை உயிர்கட்குப் பலப்பல வகையில் உண்டாக்குகின்றான். கவிஞன் கவிபாடுவதில் மகிழ்கின்றான். அறிஞன் அறிவுடைய நூல்களை ஆராய்வதில் இன்பங்கொள்ளு கின்றான். அடியவர்கள் ஆண்டவனருளைப் புகழ்வதில் மகிழ் கின்றார்கள். மயில்கள் ஆடிக் களிக்கின்றன. குயில்கள் பாடி இன்புறுகின்றன. புள்ளிமான்கள் துள்ளி நடப்பதில் பூரிப்புக் கொள்ளுகின்றன. இங்ஙனம் உலகம் மகிழ்ச்சி கொள்ளும் வகை ஒன்றன்று பலப்பல.

சிறுவர்கள் விளையாட்டு ஒரேவகையில் இராது. சிறுவர் களிலும் ஆடவர் விளையாட்டு ஒரு வகைப்படும்; மகளிர் விளை யாட்டு வேறுவகைப்படும். அவர்தம் விளையாட்டு அதனைக் காணும் பிறருக்கும் அளவிலா இன்பத்தை அளிக்கும்.

தெய்வ மணங்கமழும் பாக்களைச் செப்பியவர் சேக்கிழார். அவர் சிறு மகளிர் விளையாட்டை ஓரிடத்தில் கூறுகிறார். அது காணுந்தொறும் கழிபேருவகையை ஊட்டுகின்றது. அதனை இவண் காண்பாம்.

வயல் சூழ்ந்த மேட்டு நிலம். மேட்டு நிலத்தில் மக்கள் கூட்டங் கூட்டமாகத் தொழில் செய்கின்றனர். அவருள் ஒரு

Koviloor Digital Library



சாரார் வயலில் விளைந்த நெல்லை அரியரியாக அறுத்து வைப்பர். வேறொரு சாரார் அவ் வரிகளை ஒன்று கூட்டிக் கட்டுக் கட்டாகக் கட்டிவைப்பர். மற்றொரு சாரார் அதனை அணி யணியாகத் தூக்கிவந்து களத்தில் அடுக்கி வைப்பர். இன் னொரு சாரார் அதனை அவிழ்த்துப் போரடிப்பர் (கோடு அடிப்பர்). பிறர் கடாவிட்டும், களத்து நெல்லைத் தூற்றியும் தொழில் புரிவர். அப் பலவகைக் கூட்டத்துள்ளும் ஆடவரி னும் மகளிரே பெரும்பான்மையராக இருந்தனர்.

பெண்கள் தம்மொடு சிறு மகளிர்களையும் களத்திற்கு அழைத்து வந்திருந்தனர். அச் சிறு பெண்கள் ஒன்று கூடி விளையாடத் தொடங்கினர்.

அவர் போர்மீது ஏறிக்குதித்து உளம் பூரிப்பர்; களத் திற்கு வருங் கட்டுக்களை எண்ணி எண்ணிக் களிப்புறுவர். ஞெண்டு வளைகளைக் கிண்டி விளையாடுவர். செங்குவளை மலர்களைப் பறித்துக் கருங் கூந்தலில் அணிந்து கணக்கிலா இன்பங்கொள் வர். வளையல்கள் ஒலிக்க வண்டுகளை ஓட்டி உளம் மகிழ்வர்.

இங்ஙனம் விளையாடியவர், பின் மண் வீடு கட்டிச் சோறு ஆக்கி மகிழ விரும்பினர். மணலைக் கையால் குவித்து மனம் போல வீடுகட்டிக்கொண்டனர். அதற்கு உள் அறைகளையும் அடுப்புக்களையும் நன்கு அமைத்தனர். வீடு கட்டி முடிந்த வுடன் சோறு ஆக்க முயன்றனர்.

சோறு சமைக்கச் சட்டி வேண்டும்; உலை நீர் வேண்டும்; அரிசிவேண்டும்; அடுப்புவேண்டும்; நெருப்பு வேண்டும். இவற்றை முறையே மகளிர் முயன்று தேடினர்.

இன்று, சிறுமகளிர் விளையாட்டுக்கென்றே பலவகையான பாண்டங்களைச் செய்கின்றனர். மண்ணாலும் மரத்தாலும் பித் தளை முதலிய பலவற்றாலும் செய்த சிறு பாண்டங்களைக் கொண்டு மகளிர் விளையாடுவதை நேரிற் காணலாம். இத் தகைய பாண்டங்களை அச் சிறுமகளிர் கொண்டிலர்.

வயலில் விளையாடிய மகளிர் பாண்டங்களைத் தேட அய லில் உள்ள குளத்திற்குச் சென்றனர். அவ்விடத்துச் சட்டி

Koviloor Digital Library



களைத் தேடினர். நத்தை கழித்த ஓடுகள் குளக்கரையிற் குவிந்து கிடந்தன. அவற்றைப் பாண்டங்களாக ஏற்றனர். அவற்றுள், பெரிய ஓடு ஒன்றைப் பானையாகக் கொண்டனர்.

பானையிலிட உலைநீர் வேண்டும். உலை நீருக்குக் குளத்து நீரைக் கொள்ளலாம், அன்றிப் பிற நீரைக் கொள்ளலாம். அதனை அவர் கொண்டிலர்; வேறு ஒரு நீரைக் கொண்டனர். என்னை? வயல் எங்கணும் குவளையும் ஆம்பலும் குவிந்து மலர்ந்திருந்தன. மலர்கள்தொறும் தேன் தேங்கி நின்றது. அத் தேனை நத்தை ஓடுகளில் ஊற்றி உலைநீராக வைத்தனர்.

உலையிலிட அரிசிவேண்டும். அரிசிக்கு அவர்கள் அப்பால் அகலவேண்டியதில்லை. இருக்கும் இடமே நெற்களம். நெல் மலையெனக் குவிந்து கிடக்கின்றது. அந் நெல்லரிசியைக் கொள்ளாது, வேறு அரிசியைத் தேடினர். அவ்வரிசி யாது?

விளைந்து முற்றிய நெல்லினின்றும் முத்துக்கள் பிறக்கும் என்பது முன்னையோர் கொள்கை. அங்ஙனே, வயல்களெல் லாம் முத்துக்கள் உதிர்ந்து கிடந்தன. அவற்றை அரிசி யாகக் கொண்டு உலையிலிட்டனர்.

அரிசிபெற்ற பின்னர் அடுப்பைக் கோலினர். கற்களை யோ கட்டிகளையோ அடுப்பாகக் கோலவில்லை. வயலிலுள்ள ஆமை ஓடுகளை அடுப்பாக்கினர்.

அடுப்பில் நெருப்பிடவேண்டும். நீர் நிறைந்த வயலில் நெருப்புக்கு யாண்டுச் செல்வர்? உண்மையாகவே நெருப்பை இட்டால், ஓடும் பிறவும் என்னாகும்? நெருப்பைப் போலச் செக்கச்செவேலெனத் திகழ்ந்து விளங்கிய ஆம்பல் மலரைப் பறித்தனர். அதனை நெருப்பாகக்கொண்டு அடுப்பிலிட்டு ஊதிஊதி உளங்களித்தனர்.

அன்பர்களே! ஆம்பல் நெருப்பால் ஆமை அடுப்பில் நத்தையோடு நிறைய வார்த்த தேன் உலையில், போட்ட முத் தரிசி சோறாகுமோ? சோறாகிச் சுவைதருமோ? ஆம். நமக்கு அவை சோறும் ஆகாது, சுவையுந் தாராது. அம் மகளிர்கட்கோ அஃதளிக்குஞ் சுவை அமிழ்தும் அளிக்காது.

Koviloor Digital Library



அமிழ்தும் கைக்குஞ் சோறாக்கி, வயல் மாதர் சிறு மகளிர் விளையாடுகின்றனர். அவ் விளையாட்டைப் பாட்டில் தீட்டிக் காட்டுகிறார் தெய்வப் புலமைச் சேக்கிழார். பாடல் இதோ மிளிர்கின்றது. படித்து இன்புறலாம்!

கயல்பாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி யுலைப்பெய்தங்(கு)
அயலாமை யடுப்பேற்றி அரக்காம்பல் நெருப்பூதும்
வயல்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்பெல்லாம்.

—பெரியபுராணம்-நாடு-16.

---

# மூன்றாம் பிறை

உள்ளத்தைக் கொள்ளையிடும் பாப்பா!—அந்தப்
பிள்ளை நிலவினைப்பார் பாப்பா. (1)

வானக் கடலிலே அ, ஆ!—அந்தக்
கூனப் பிறைவந்தது பாப்பா. (2)

வெள்ளியின் துண்டென்றே சொல்வர்—அழகை
அள்ளியள்ளி வீசுதுபார் பாப்பா. (3)

கிள்ளிய நகமென்றே காண—ஒளி
துள்ளி வருகுதுபார் பாப்பா. (4)

நாணில்லா வில்லென்றே தோன்றச்—சேணில்
கோணிக் கிடக்குதுபார் பாப்பா. (5)

நில்லென்று சொல்லினும் அன்பாய்—பின்பின்
நில்லாமல் வருதுபார் பாப்பா. (6)

குழந்தை நிலவினை நாமும்—அழைத்து
மகிழ்ந்து விளையாடுவோம் பாப்பா. (7)

வளரும் பிறையினைப் பின்னும்—நாளும்
வாழ்த்தி வணங்குவோம் பாப்பா. (8)

—வித்துவான் இ. சிவகுருநாதன்.

---

Koviloor Digital Library

# புகழ் விளைந்த தமிழர்கள்

"நா. சண்முகம்"

தமிழர்கள் மிகவுந் தொன்மை வாய்ந்தவர்கள்; பெருமை பெற்றவர்கள். சரித்திர ஆராய்ச்சிக்கும் அப்பாற்பட்டவர்கள். உலகத்தில் தனக்கு ஈடும் எடுப்பும் இல்லை என இறுமாந்து தங்கியுள்ள இமயம் நீரில் மூழ்கியிருந்தபொழுதும், எல்லை காணுத் தாழ்வினைத் தன்னகங்கொண்ட இந்துமாக் கடல் நிலமாக இருந்தஞான்றும், மீண்டும் இமயம் வெளிப்பட்ட போதும், இன்று இந்தியா எனக் கூறும் எல்லை கண்டபோதும் அவையவை தமிழகமாய் அத் தமிழகம் முழுவதும் தமிழர்கள் தலைசிறக்க வாழ்ந்திருந்தனர் என்பது ஆராய்ச்சியாளர்களின் தேர்ந்த துணிவு. வாழ்க்கைக்கு வேண்டிய எல்லா நலன் களையும் பெற்று அன்னுர் மிகச் சிறப்புடன் வாழ்ந்து வந்தனர்.

"நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

என வருஉம் புறப்பாட்டின் அடியைச் சிறிது நினைவுகூர்ந்தால், தக்க செய்திகள் சில கிடைக்கப்பெறுவோம்.

பஃறுளி குமரி என்னும் ஆறுகளால் வளமை பெற்ற நாடு குமரி நாடு. அந்நாடு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்க் கடலாற் கொள்ளப்பட்டது. இப்பொழுதுள்ள இந்துமாக் கடல் என்னும் பெரு நீர்பரப்பு நிலந்தோன்ற இருந்ததென்றும், ஆண்டே மக்கள் தோற்றம் முதன்முதல் உற்றதென்றும், அந்நிலம் பின்னைக் கடலால் விழுங்கப்பட்ட தென்றும் ஆசிரியர் எர்னஸ்ட் ஹேக்கல், ஸ்காட் எலியட் உள்ளிட்ட அறிஞர் பலர் தமது ஆராய்ச்சியிற் கண்ட உண்மை யை உலகுக்கு உணர்த்தியுள்ளனர். லெமூரியா என்னும் நிலப்பரப்பே தமிழ் நூல்கள் கூறும் குமரி நாடு. அக் குமரி நாடு எல்லா வளமையும் பெற்றுப் பொன்னுடாக மிளிர்ந்தது.

சிறந்த நாடெனில் இயற்கையிலேயே எல்லா வளமையும் அது பெற்றிருத்தல்வேண்டும். அந்நாடு தன் தேவைக்கு ஏனைய எந்நாட்டின் உதவியினையும் எதிர்நோக்கி நிற்கவில்லை. புலவரெலாம் புகழும் நறுந்தமிழ்க் கவியரசரான தெய்வப் புலவர் இயற்றியருளிய திருக்குறளில்,

Koviloor Digital Library



" காடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு."

என்று கூறியது இந்நாட்டின் இயல்புக்கு முற்றும் ஒக்கும். வாழ்வதற்கு வேண்டிய பொருள்கள் அனைத்தையும் நமது அருந்தமிழ் நாடு வளத்துடன் பெற்றிருந்ததாலன்றோ, பாரதியார் நம் பைந்தமிழ் நாட்டை நோக்கிச்

" செந்தமிழ் நாடெனும் போதினிலே
இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே "

என்று புகழ்ந்து பாடியுள்ளார். தற்கால நிலையில் நாகரிகத்திலும், கல்வியிலும், விஞ்ஞான ஆராய்ச்சியிலும், பொருளாதார நிலையிலும் சிறந்திருக்கும் ஐரோப்பா ஒரு சமயம் நாகரிகம் இன்னதென்று அறியாத மரப் பட்டைகளையும் தழைகளையும் இலைகளையும் ஆடைகளாக அணிந்துகொண்டு காடுகளில் உழன்று ஒருவகையான வாழ்வு நடாத்திய அன்று, இந்நாட்டு மக்கள், நாடு கண்டு, அரசியல் உணர்ந்து, செங்கோல் ஓச்சினர். இலக்கியங்கள் எழுதினர்; இலக்கணங்கள் இயற்றினர்; வாழ்விற்குரிய எல்லாத் துறைகளையும் பெற்றிருந்தனர்.

பண்டைக்காலத்தில் இருந்த தமிழ்மக்கள் புகழே பெரிதெனக்கொண்டு வாழ்க்கையை இனிதுற நடாத்திவந்தார்கள்.

" தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று "

என்று பகர்ந்த வாய்மொழிக் கிலக்காகச் செந்தமிழ் மக்கள் அன்று பிறந்து இறக்கும்வரை புகழினையே போர்த்திருந்தார்கள். அதனால் அவர்கள் தம் வாழ்க்கையைச் செம்மையுடன் பிணக்கின்றி நடாத்தி வந்தார்கள். அவ்வாழ்க்கையைச் சிறந்ததெனப் பொய்யாமொழிப் புலவரும், கவியரசர் கம்பரும் பெருமைபடக் கூறிப்போந்தார்கள் என்றால், அதன் பெருமைதான் என்னே!

அக்காலத்தில் வாழ்ந்த தமிழர்களின் கொள்கைகள் சிறந்தனவாக இருந்தன.

Koviloor Digital Library



“ தமியர் உண்டலும் இலரே ; முனிவு இலர் ;
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சி;
புகழ்எனின் உயிரும் கொடுக்குவர் ; பழிஎனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் ; அயர்வுஇலர் ;
தமக்கென முயலா நோன்றாள் பிறர்க்கென
முயலுநர் உண்மை யானே ”

என்ற புறநானூற்றுப் பாட்டை நாம் சிறிது ஆராயின் அதன் கண் நம் பண்டைத் தமிழ்மக்களின் ஏற்றம் தெள்ளிதின் புலனாகும்.

பண்டைத் தமிழர் பாத்தூண் புரிவதில் ஏற்றம் பெற்றவர் ; தேவரும் விரும்பும் தேன் அமுது எனினும் யாவரும் கொள்ளப் பகிர்ந்து உண்பதே அன்னாரின் சீரிய கொள்கை. அதியமான் தான் அரிதிற்பெற்ற நெல்லிக்கனியை ஔவையாருக்கு அளித்த தன்மையே சான்று பகரும். இருப்பினும் தருக்கும் முனிவும் இன்றித் தாழ்வுடன் வாழ்ந்தனர் ; வீர வாழ்வு பெற்றிருந்தாரெனினும் அஞ்சவேண்டுவனவற்றிற்கு அஞ்சி வாழ்வர் ; புகழ் பெறத், தம் உயிரையும் பொருட்படுத்தார். பெரும்பேறு உறுவதெனினும் அது பழியோடு வருமாயின் அதனைக் காய்ந்தே தள்ளுவர் ; தாம் கொண்ட நன்னோக்கம் இனிதே முடிய அயர்வு இன்றி உழைப்பர்.

அவ்வளவு பெருமையுடன் விளங்கிய பைந்தமிழ் மக்கள் இன்று சின்னா பின்னமாய்ச் சிதறுண்டு கிடப்பதற்குத் தலையாய காரணங்கள் பல ; அவைகளிற் சில ‘எமக்குப் புகழ் வரவேண்டும் ; யாம் பெருமையடையவேண்டும்’ என்று தந்நலங் கருதும் எண்ணங்கள் போல்வன. பண்டைத் தமிழர்கள் போன்று இன்றைத் தமிழர்கள் நல்வாழ்வு நடாத்தவேண்டுமெனின், தமிழ்மக்கள் ஒன்று செய்தல்வேண்டும் ; அஃது யாதெனின், தம் தொல்குடி புகழுடையப் பாடுபடல் வேண்டும். பண்டைத் தமிழரின் மாட்சிமைகளை வானளாவக் கூறிக் கொண்டே இருப்பதனாற் பயனில்லை. அம் மாட்சிமைக்கு உழைப்பின் நம்மனோர் சீர்பெறுவார்கள் என்பதில் ஐயமே இல்லை.

Koviloor Digital Library



நேற்றுத் தொன்றிய குடிமக்களெல்லாம் பெருமையுடன் அரசு வாழ்வில் விளங்குகின்றார்கள். ஆனால் பழங்குடிமக்களாக இருக்கும் நம் தமிழ் மக்கள் அங்ஙனம் விளங்குகிறார்களா? அவர்கள் இருக்கும் இடமே தெரியவில்லையே! மஞ்சினால் மறைக்கப்பட்ட மதிபோன்று தமிழர்கள் இருக்கின்றார்கள். அம் மஞ்சாகிய மாசை அகற்றித் தமிழர்கள் எழிலுடன் விளங்கப் பெருமையுடன் உழைக்கவேண்டும். உழைப்பால் மாபெரும் புகழ் அடையக்கூடும். உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ? ஆதலின் உயர்வு அடையும் வரை வீறுகொண்டு உழைக்க! உழைக்க! வாழ்க நற்றமிழர்; வாழி வாழியே!

---

## கடல்

["பந்த மெரியுதோடி" என்ற மெட்டு]

எங்கும் ஒரே பரப்பாய்—நீரும்
ஏங்கித் தயங்குது பார்
பொங்கும் நுரைகளுடன்—அலையும்
பொம்மென்று துள்ளுது பார்.

காலக் கடவு ளாவான்—கடலைக்
கண்டும் அறிந்தி ரானோ
சாலப் புத்திளமை—கொண்டு
சாயா துழைக்குது பார்.

தகதக என்று வந்து—தங்கத்
தகடொன்று தோன்றுது பார்
முகநகப் பார்த்தாயானல்—நிலவும்
முத்தொளி வீசுது தேர்.

நீந்தக் கற்றுக்கொண்டு—கப்பலும்
நீளமாய் வைத்துக்கொண்டு
வேந்தர் ஆகி விட்டார்—வீர
வெள்ளை மனிதரெல்லாம்.

அச்சம்நீ கொள்ளாதிரு—அலையும்
அன்பாய் அழைக்குதுபார்
நிச்சமாய்க் கப்பலேறு—நீயும்
நேயமாய் மேம்படலாம்.

வித்துவான் G. சுப்பிரமணியம், M. A., B. L.

Koviloor Digital Library

# செய்யுள் விளைத்த செய்யர்

"புலவர் வளவன் பாண்டியனார்"

(உரிமை ஆசிரியர்க்கே உரியது)

'பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து' என்பதைப் பூவுலகமன்றி மூவுலகுமறியும். தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு தானோ எனச் சான்றோர் வாழ்வையும், தண்கய ஆழ்வையும், வண்ணில வரம்பையும், பொய்யாப் பொருநையையும், மெய்யாய் விளைவையும், வற்றாக் குற்றால வளச் சித்திரை யாற்றையும் கண்டோர் வாய்விட்டயிர்ப்பர். சோறுடைத்து; சோழவள நாடு தானோ வெனச் சொல்லுவர். வேழ முடைத்தே மலை நாடு; சேரநாடோ வெனச் செப்புவர். பாண்டி நாட்டின் பண்பிவை யெனப் பகருமற் பாடலாம்.

திருநெல்வேலி வட்டகைதான் தென்னாட்டுத் திருவெனக் கூறின், திரும்பிப் பேச வருவாரெவரோ? நெல்லையின் எல்லையே நெல்வயல். நேரில் பார்த்தவர் நினைவில் இருக்கும்.

நெல்லை நகர் முதல் பாளையம்பதிவரை நேராயோடுஞ் சீருடைச் செவ்வழி நிலவுலகிலேயே நலமுடையதெனப் பலநாடும் பார்த்தவர் பறைசாற்றலை என் செவியே எண்ணற்றமுறை யேற்றதுண்டு. உண்மைதான்போலும்; இரு மருங்கும் இடை நுடங்கும் உடைதான் மருதம்; இரு மருங்கும் அணிசெய எழுவது மா மருதம்! மங்கல நாணிற் பொன்கலமென்ன மஞ்சட் பூவே மயமாய் வயங்கும். பசிய மஞ்சட் பிஞ்சுப் பூவிடைப் பாசிலைக் காயும், பழுத்த பழமும், பாங்குறப் பொலியும். பழுப்புங் காயும் பயிர்விளை வயலைக் கொழுக்கச் செய்யும். வெண்பாசடியுடன் விண்வரை வளரும் மருத மரங்களின் மாட்சியே காட்சி.

இத்தகைய பெருவழி வழியே பெயர்வார் எத்திசையும் இயற்கை எழிலையே எதிர்ப்படுவர். எங்குப் பார்த்தாலும் பச்சைப்பசேரென்ற பைங்கூழே; தேறிய நடுவை தென்புறம்; வளரும் பயிர் வடபுறம். கூன் நிமிர்ந்த பயிர்க் குண்டுகள் பல; கரு நடுவைக் கன்றுகள் சில. பாற்சம்பாப் பண்ணை

Koviloor Digital Library



கள் பல ; பற்றுகள் சில, கெண்டைப் பொதிப் பயிர் கிளர்ந்து குழையும் ; உண்ட பச்சைப் பாம்பெனத் தொண்டைப் பொதிப் பயிர் தோன்றும் நெடுங் குண்டுகளில் பயிர் விக்கலும் கக்கலும் ; வாங்கிய கதிர் வாலங்கள் சில. பூவுதிரும் புலங்களில் பொத்தி குதிக்கும் ; பாலடையும் பல மணிகள். கருங்காய்க் குலை கறித்துண்ணக் காரெருமை ஈாநீட்டும் ; பழக்குலைகள் பல உதிரப் பள்ளப் பருவரால் பாய்ந் துழக்கும். அறிந்தார் தலையன்ன விளைந்த குலைகள் வளைந்து தோன்றும் வயல் நடுவே. தாள் பழுத்த பயிரெல்லாம் பாயும் படுக்கையுமாய்ச் சாயும்.

பைங்காற் கொக்கும் செங்கால் நாரையும் குழிப்பறியும் கோட்டு அயிரை பார்த்திருக்கும். நெடும் வாய்க்காலில் பாம்பினம் நெளியும். பெருவாய்க் கால் புறம் உள்ளான் பெடையோடுலவும். கிளை வாய்க்கால்களில் கெண்டைகள் குதிக்கும். கொப்பு வாய்க்கால் குறுங்கெண்டைக்குக் கொக்கு கள் கொந்தும். தினைத்தாளன்ன சிறுபசுங் காலக் குருகுக் கொக்கு ஒழுகுநீராரல் பார்க்கும்.

பள்ளியர் பச்சைப் புல் லறுப்பர் ; பள்ளர் மோட்டை மடை மிதிப்பர். கடைசியர் குவளைக் களை களைவர் ; கடையர் விரைவர் களம் பார்க்க.

தேனினும் இனிய தெம்மாங்கு திசையெல்லாம் பரவி எதிரொலிக்கும். உழவரோதை, மதகோதை, வழிநீரோதை, தண் பதங்கள் விழவரோதை சிறந்தார்க்கும். நாட்குரவை முழக்கம், களைஎடு கலிப்பு, அறுவடை அரவம், பிணையடி பேச்சு, சூடடி சொல்லு, பொலியிடு பாட்டு காணுமிடமெல் லாம் கேட்கும்.

கருணைக் காணிகள், சேனைச் செய்கள், சேப்பம் பாத்தி கள், மஞ்சள் மடக்குகள், இஞ்சிக் கிணறுகள், வசம்பு வாய்க் கால்கள், கருப்பஞ்சோலைகள், கொடிக்கால் கூறுகள், கமுகந் தோப்புகள், வாழை வயல்கள், பழமரப் பத்திகள், பல மர ஈட்டங்கள் இடையே பாவெனப் பொருனை பாயும் ; மருங்கு வண்டு சிறந்தார்க்கும் ; மணிப்பூவாடையது போர்க்கும் ; கருங்கயற் கண் விழித்தொல்கும் ; பூவார் சோலை மயிலாடும் ;

Koviloor Digital Library



புரிந்து குயில்கள் இசைபாடும்; காமர் மாலை யருகசையும்; அழகுதேடி அகச்சேரி, புறச்சேரி, பட்சேரி, பறைச்சேரி, பார்ப்பனச்சேரி, வேளாளங்குடி, காராளர்வைப்பு, வீரராகவ புரம், கொக்கிருகுளம் (கொக்கரூக்குளம்), சொக்கனுக்குளம் வண்ணார்பேட்டை, பாளையங்கோட்டை நீ முந்து நான் முந்து எனப் பத்திபத்தியாய்ப் போட்டி போடும்.

இந்த எழில் நலத்தையுண்டு உவந்தவாறு, கண்டுகளித்துக் கைகோத்துக்கொண்டு பாளையங்கோட்டையிலிருந்து வண்ணார்பேட்டைக்கு வாயார வல்லதும் பேசி *நண்பருடன் நால்வராய் வழிநடந்தோம் (1939). காணச் சென்றது, கம்ப ராமாயணக் கடலையே கடலையாய், முத்தொள்ளாயிர முதல் பாரதி பாடலீறுயுள்ளனவே கள்ளாய், நெஞ்சையள்ளும் பஞ்சப் பாடல்களே பாகஞ்செய் கறிக் கூட்டாய் உள்ளுண்ட உவப்பில் ஊதுந் தேன் வண்டெனத் தீஞ்சொல்லாடும் உயர் திருவாளர் சிதம்பரநாத முதலியார் அவர்களைத்தான்.

மாலைவேளை; மலை யிளந்தளிர் மரங்களின் மலரிடைப் பகலவனின் மஞ்சளொளி தயங்குங்காலை. சற்றுத் தொலையில் காளை யொருவன் கையில் வடமும் மெய்யில் சாந்தெனச் சகதியும், தோளில் கலப்பையும், தாங்கி செல்ல, பின்னால் கஞ்சிக் கலயந் தாங்கிய †சவரியணி காரிகையும் செல்கின்றாள். இருவர் நிழலும் ஒருங்கு சேர்ந்து உயிரொன்றென உகைத்தது. மருங்குள்ள வரப்பிலும், வளைந்தோடும் வாய்க்கால்களிலும், பள்ளப் பயிரிலும், பாய்ந்தோடும் வெள்ளத்திலும் நிழல் நுடங்குவது இன்பத்தும் துன்பத்தும் இணைபிரியார் என்றது. எஃதேதோ பேசிக்கொள்கின்றனர்; இன்முகமும் புன்முறுவலும் இடைஇடையே நன்னகை தரப், பாட்டும் படிப்புமாய் வீட்டை நோக்கி விரைந்தனர்போலும்.

சாலையில் சாயும் மருத மர நிழலில் வாழ்க்கையின் மாலை நேர வயதுடைப் பெரியவள் ஒருத்தி: தலை நரைத்து, கால்

---

* திரு. மகாராச பிள்ளை பி.எசி., பி.எல்.;
திரு. முத்துச்சிவன் பிள்ளை பி.ஏ. ஆனர்சு;
திரு. வெங்கட்டராமய்யர் பி.எசி. (பாளையங்கோட்டை).

† ஒரு கொடி.

Koviloor Digital Library



தள்ளாடிக் கம்பூன்றிப் பல்லில்லாச் சொல்லோடு கல்லொன் றில் கால்நீட்டி யமர்ந்தனள். பேரிளம்பெண் ணொருத்தி பேரேக்கமும், பெருமூச்சும் இடை இடை எழும்பக் கண்ணீர் துடைத்துக் கைநெறித்து நிற்கின்றாள்.

தானியங்கிகள் போவதும் வருவதும் போகவில்லை; தணி யவுமில்லை. கன்று கருதிக் கதறிச் செல்லுங் கால்நடைகள் கணக்கில்லை. ஆடுமாடும் ஆளும் தேளும் சாய்ந்த வண்ணமே சாலை இருந்தது.

என்னுளம் எங்கெங்கெல்லாமோ ஓடிற்று. நண்பர்கள் நயம்படப் பேசலில் வயப்படவில்லை. 'கன்னி யொருத்தி காளை பின்னே சென்றனளோ? காதற் றுயு மறியாளோ? கண்டபின்னர்க் கலுழ்வாளோ? கலங்குமுள்ளங் கண்டார்க் கெல்லாங் கழறுவளோ? முதியோளிடமும் முறையிடுமோ?' என வுன்னினேன்.

உணர்ச்சி யிடையில் தெளிந்த நடையில் எளிய சொல்லில் இனியமுறையில் பாடுதலைப்பற்றி நண்பர் உரையாடுதல் ஓரளவு செவியுள் விழுந்தது. விழலும், எழுச்சி விரைந்து எழலும், அமைந்த வடிவம்:

" மஞ்சட்பூப் பூத்திலங்கும் மருதமர நிழலில்தங்கும்
பஞ்சுப்பெட்டி போல்நரைத்த பல்லில்லாச்சொற்
　　　　　　　　　　　　　　　　பாட்டியேசொல்
கஞ்சிக்கலயங் கொண்டு போனதுண்டோ காதற்கனி
வஞ்சநெஞ்சக் காளை பின்னால் வயலூஉடே"

என்பது. வாய்விட் டெண்ணினேன்; குரல்விட்டுப் படித் தேன்.

'பாட்டி என்றுதான் இருக்கவேண்டு'மென்று பகர்ந் தார் ஒருவர்.

'பாலைத்திணை'யில் 'முதியோள் வினதல்' என்றொரு துறை புதிதாய் அமைந்ததே என்று வியந்தனர் இருவரும். 'மஞ்சட்பூ' 'மருதமரம்' 'பஞ்சுப் பெட்டி' 'பல்லில்லாச்

Koviloor Digital Library



சொல் பாட்டி' 'கஞ்சிக் கலயம்' 'காதல்கனி' 'வஞ்ச நெஞ்சக் காளை' 'வயலூடே' என்று சொல்லிச் சொல்லிச் சுவைத்துப் பார்த்தனர்.

இத்தகைய செய்யுட்கள் பல விளைத்த செய்களையும், தூண்டிய செய்யர்களையும் என்று காண்பேன்! என்று இன்றும் தாவும் என்னெஞ்சம்; என்றும் உன்னும் என்னுள்ளம்.

## செய்திகளும் குறிப்புகளும்

### ஒரு லக்ஷம் ரூபா

#### திருப்பனந்தாள் காசிமடத்து அறநிதி

பிரிட்டன் வெற்றியும் அமைதியும் பெற உதவவும், முடிவில் தமிழ் வளர்ச்சிக்குப் பயன்படவும் ஏற்படுத்தப்பெற்றது.

திருப்பனந்தாள் திருமடத்துத் தலைவர் மறைத்திரு காசிவாசி சாமிநாத தம்பிரான் அவர்கள் தமிழ்நாடும் தமிழன்னையுஞ் செய்த பெருந்தவ உருவினரேயாவர். தமிழன்னையைத் தக்க அரசிருக்கையில் இருத்தும்பொருட்டு அவர்கள் செய்துவருகின்ற தமிழுதவிகளும் பிறவும் பலப்பல வகையினவாய் அனைவரும் நன்கறிந்தனவேயாம். பல்கலைக் கழகங்கள் வாயிலாகவும், நூலாசிரியர்கள் வாயிலாகவும் தமிழ் வளர்ச்சிக்கான நல்லுதவிகள் பல அவர்கள் செய்திருப்பதோடமையாது, கிராமங்களிலும் தமிழன்னையின்நிலை உயர்வதற்காகச் சென்ற ஆண்டில் ஒரு நூறுயிரம் ரூபா வைப்பு நிதியாக அமைத்திருக்கிறார்கள். இத்தொகை இப்போது பிரிட்டனுக்கு உதவுங் கருத்துடன் போர் நிதிக்கு வட்டியில்லாக் கடனாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது; 15-6-1940-லிருந்து மூன்று ஆண்டுகளுக்குப் பின் அத்தொகை வட்டிக்கு விடப்பட்டு அவ் வட்டியிலிருந்து, தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் கிராமக் கணக்குப்பிள்ளைகள், கிராமத்தில் நாட்டு மருந்துகளைக்கொண்டு பணி செய்யும் மருத்துவர்கள் (L. I. M.) என்போர் தமிழ்த் தேர்விலுந் தேர்ந்து அவரவர் துறையில் தமிழ்வளர்ச்சிக்குரியராக நிற்பார்க்கு மாதந்தோறும் ஓர் உதவித் தொகை, நிலையாகக் கொடுத்துவர ஏற்பாடு செய்யப்பெற் றிருக்கிறது. அவரவரும் வழக்கமாகப் பெற்றுவருகின்ற சம்பளம் அல்லாமல் இது தனியாக

Koviloor Digital Library



அளிக்கப்படும். ஒருவர் இவ்வுதவியைப் பெற்றுவிட்டால் பின் அவர் வேலையிலிருந்து விலகும்வரையில் விடாமற் கொடுத்துவரப்படும். சென்னை மாகாணம் வரையில் அவர் எங்கு மாற்றப்பட்டாலும் கொடுத்துவரப்படும். சாதி மதம் முதலிய எவ்வேறுபாடும் ஆண் பெண் வேறுபாடும் இதற்குக் கிடையா; கிடைக்கும் தொகை, கிராமத்தில் ஒரு குடும்பச் செலவுக்குப் போதுமானதாக இருக்கலாம். தமிழில் வித்துவானுகத் தேர்வுபெறுகின்ற மேற்காட்டிய மூவகையினர்க்கும் இதனுல் நன்மையுண்டு. இதன் ஏனைய விவரங்கள் 22-1-41 சுதேசமித்திரன் இதழிலும் வெளிவந்திருக்கின்றன.

கிராமங்களில் பள்ளியாசிரியர்களும், கணக்குப் பிள்ளைகளும், மருத்துவர்களும் வித்துவான்களாக இருப்பது நாட்டுப்புறங்களில் தமிழ் பரவுவதற்கு எவ்வளவோ வசதியாயிருக்கும்; வாழ்க்கைக்கு நலமான நாட்டுப்புறங்களைவிடுத்து வருவாய் மிகுதிக்காக இவர்கள் நகரங்களுக்கு வரவேண்டிய இடரும் இல்லாமற்போகும். பலரும் வித்துவான்களாக மிளிர்வதற்கு இதனுல் வாயிலுண்டு.

திருப்பனந்தாள் திருமடத்து அருட்டலைவரவர்களின் இவ்வருட் பெருந் தமிழுதவிகளையும், திறமான ஏற்பாடுகளையும் நினைந்து நினைந்து அப் பெருமானைத் தமிழன்னை ஒருபுறம் அகம் மிக மலர்ந்து புன்னகை மிக்குக் கனிவுடன் வாழ்த்தியருள, மறுபுறம் தமிழகம் முழுமையும் உளமகிழ்ந்து பாராட்டித்தொழாநிற்கின்றது மறைத்திரு. தம்பிரானவர்கள் வாழி!

## சைவப் பெரியார் பிரிவு

சைவவுலகத்திற் கல்வி கேள்விகளாற் சிறந்து மிக்க சிவசீலராய் விளங்கிய திருவாளர் வ. சு சண்முகம் பிள்ளை B.A., B.L. அவர்கள் 3-3-1941 மாலை 7 மணிக்குத் தணிகேசன் திருவடி நீழலைச் சார்ந்தனர்.



திருப்புகழை உலகுக்குத் தந்த பெரியார் சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் முதற் புதல்வர். 'கற்றுணர்ந்தடங்கல்' என்பதற்கு இலக்கியமாக ஒழுகும் வாய்மையாளர் திருவாளர் வ. சு. செங்கல்வராய பிள்ளை M.A., அவர்களின் தமையனுர். தந்தையாரைப்போலத் தாமும் டிஸ்டிரிக்ட் முன்சீப் அலுவலில் இருந்தவர். தந்தையாரைப்போலச் 'சிவஸ்தல' யாத்திரையில் மிக ஈடுபட்டவர். தேவாரம் பெற்ற 274 தலங்களுள் 257 தலங்கள் நேரிற்றரிசித்தவர்.

Koviloor Digital Library



கல்லூரியில் தமிழில் மெடல் பரிசுபெற்றவர். மெட்ரிகுலேஷன் வரையில் சமஸ்கிருதம் கற்றுத்தேர்ச்சியுற்றவர். தமிழில்இலக்கணஇலக்கிய அறிவு நன்கு வாய்ந்தவர். எப்படி ஆங்கிலம் கற்றவர்கள் ஆங்கிலம் எழுதினும் பேசினும் இலக்கணப் பிழை முதலியவற்றை விலக்கித் திருத்தமாகப் பேசவும் எழுதவும் முயலுகின்றார்களோ அவ்வாறே தமிழும் எழுதப்படவேண்டும், பேசப்படவேண்டும் என்னுங்கொள்கை உடையார். பழக்கத்திலும் அக் கொள்கையை நடத்திக் காட்டினவர். திருப்புகழ், சிவஸ்தலமஞ்சரி, பிரமோத்தரகாண்டம், திருத்தருப்பூண்டி மான்மியம் என்னும் நூல்களைப் பதிப்பித்ததோடு, குடவாயிற் புராணம், கண்டியூர்ப் புராணம், ஆடானைப் புராணம் முதலிய நூல்களை ஆய்ந்தெழுதி அச்சிட்டவர். தஞ்சையிலும், மஞ்சகுப்பத்திலும் சைவசித்தாந்த சபைகளுக்குத் தலைவராயிருந்தவர். சைவ வளர்ச்சிக்கு உழைத்தவர். ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளுடனிருந்து 'திருவாசக அகராதி'என ஒரு நூல் எழுதி வந்தது அரைகுறையாக இருக்கின்றது. கோகர்ண தலபுராணம் இவர் எழுதிவைத்தது அச்சுக்குத் தயாராயிருக்கிறது. இறைவன் திருவடி கூடுந் தினத்தில் "கூகா என என்கிளை கூடியழப் போகாவகை மெய்ப் பொருள் பேசியவா"—என்னுங் கந்தரனுபூதிச் செய்யுளையும், "உயிர்மங்குபொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும்" என்னுந் திருப்புகழ்ப் பாவையும் பன்முறை செபித்துப் பற்றொழித்த பெரியார். இவர் ஆருயிர் இறைவன் திருவருள் நீழலில் விளங்குக! இவர் குடும்பத்தவர் அனைவர்க்கும் எங்கள் ஆறுதலை மிக்க அன்புடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## தென்னிந்திய தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி

## தனித் தமிழ்த் தேர்வுகள்

இச் சங்கத்தார் நடத்திவரும் தனித்தமிழ்த் தேர்வுகள் இவ்யாண்டு ஜூன்மீ 26, 27, 28 (மெய்கண்டான் யாண்டு எகஅ. ஆனி ௰௩, ௰௪, ௰௫) வியாழன், வெள்ளி, சனிக்கிழமைகளில் சென்னை, திருநெல்வேலி, ஆரணி, சிதம்பரம் போன்ற முக்கிய தலைநகரங்களில் நடைபெறும். விண்ணப்பம் முதலியன பெற்று, 1941 மேமீ 1உக்குள் சங்க அமைச்சர்க்குக் கட்டணத்துடன் விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். 1942 ஜூன்மாதத் தேர்வு முதலே பாட மாறுதல் ஏற்படும்.

திருநெல்வேலி
24-3-1941

பு. சி. புன்னைவனநாதன்,
அமைச்சர்.

Koviloor Digital Library

# மதிப்புரை

கட்டுரைத் திரட்டு: பகுதி—1. ஆசிரியர்: பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்; விலை ரூ. 1.

தெளிந்த அழகிய தமிழ்ப் பெரும்புலமையிலிருந்து இந்நூல் வழங்கப்பெறுகின்றது. இலக்கியம், கலை, வரலாறு முதலிய பல கருத்துக்கள்மேல்எழுதிய பன்னிரண்டு அரிய கட்டுரைகள் இதன்கண் தொகுக்கப்பட்டிருக்கின்றன. பல நுண்ணிய கருத்துக்களும் அவற்றின் வரையறையும், நயமும், பிறவும் வளமான செந்தமிழ் உரை நடையில் விளங்க எழுதப்பட்டிருக்கின்றன. எய்ப்பில் வைப்பாகக் கிடைத்திருக்கும் இம் மெய்ப் பொருட் களஞ்சியத்தில் நுழைந்து, அரும்பொருள்கள் முகந்து மிடிதீர்ந்து இன்புறுதல், தமிழ் பயில்வார் அனைவர்க்கும் உரிய முதற் கடனாகும்.

அகல்யா:—மொழிபெயர்ப்பாசிரியர்: பண்டிட் P. மகாலிங்கம், R. B. V. அவர்கள். விலை அணா 12.

கவிதுவிஜேந்திரலால் ராய் என்னும் ஆசிரியரால் முதலில் வங்க மொழியில் இயற்றப்பட்ட இந்நாடக நூல் பின் இந்திமொழியில் மொழிபெயர்க்கப்பட, இந்திமொழியிலிருந்து இப்போது தமிழில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. கதை புராண முறைப்படியே அமைக்கப்படவில்லை; தற்கால உலகம் ஏற்குமென்று கருதி முதல் நூலாசிரியர் இதனைப் பல வகைகளில் திருத்தி அமைத்திருக்கிறார். நூலில் அழகான உவமைகளுங் கருத்துக்களும் வருகின்றன. மொழிபெயர்ப்பு தெளிவாகவும் செம்போக்காகவும் இருக்கிறது. இத் திறம் இன்பந் தருகின்றது. மேலுமேலும் மொழிப் புலமையிற் சிறக்குங்காலங்களில், இவ்வாசிரியரது எழுத்து தமிழகத்துக்கு நலந் தருவதாயிருக்கும். பிறமொழியிலுள்ள நல்ல நூல்களையெல்லாம் தமிழ்மொழியிற் கொண்டுவருகின்ற பேருதவியாளர்களைத் தமிழுலகம் விரைவில் நிரம்பப்பெறுவதாக!

திருவாசகம்.—முதல் இரண்டு அகவல்மட்டும்; இதனை இலட்சுமி புரம் (கானாடுகாத்தான் வழி-Ramnad Dist.) சொக்கலிங்க வித்தியா சாலை வெளியீடாகப் பதிப்பித்தோர், சென்னை தியாகராயநகர் ஸ்ரீ முத்துக்குமார நிலையம் ந. சோ. அரு. அருணாசலன் அவர்கள். அரையணாத் தபால் பில்லை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

இந்நூல் அன்பர்களின் பாராயண வசதிக்காகப் பதிப்பிடப் பட்டிருக்கிறது. திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் பார்வையில் வெளிவந்திருக்கிறது. பதிப்பு நன்றாயிருக்கிறது.

திருநாவுக்கரசு:—ஆசிரியர் நா. ப. தணிகையரசு: பதிப்பித்தோர்: வாலாஜாபாத் இந்துமத பாடசாலையார்.

நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலை அதிபர் உயர்திரு சி. வீ. நா. பழநியப்ப செட்டியார் அவர்கள் பேரன் திரு. நா. திருநாவுக்கரசின் புதுமை அன்பளிப்பாக இதனை வெளியிட்டிருக்கிறார்கள். அப்பர் வரலாறு கூறுவது இந்நூல். சிறுவர்கட்கும்

Koviloor Digital Library



பயன்படும்படி பல தலைப்புகளிற் பகுத்துச் சிறுசிறு தொடர்களால் எளிமையாக எழுதப்பட்டிருக்கின்றது. கருத்துவிளக்கங்கள் உள்ளது. தமிழின் நடையுண்டு. இது குழந்தைகளுக்குத் தமிழ்ச் சுவையும் அருட்சுவையும் ஒருங்கு ஊட்டும்.

வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் இவ் (விக்கிரம) வாண்டுப் பொங்கல் மலர் எமது கருத்துரைக்கு வந்தது. இனிய எளிய தமிழில் சிறுசிறு தொடர்கள் கொண்டு பலவகையான தலைப்புக்களில் கருத்துக்களை விளங்கப் பாகுபடுத்தித் திறமையாக அம் மலர் எழுதப்பட்டிருக்கின்றது. பள்ளிக் கூடங்கள் நடத்துவோர்க்கும் பிறர்க்கும் அம் மலரிலுள்ள விளக்கங்கள் நன்கு பயன்படும். நாட்டுப்புறத்தில் பாலாற்றங் கரையில் புகைவண்டி நிலையத்தை அடுத்து இம்மாணவர் விடுதி அமைந்திருப்பது ஒரு நல்ல வாய்ப்பு. இப் பாடசாலையிலும் மாணவரில்லத்திலும், எல்லாவகைகளிலும் கவர்ச்சியான முறைகளைப் பின்பற்றுவதில் ஊக்கம் காணப்படுகிறது. இதனை நடத்துகின்ற திருவாளர் வா. தி. பஞ்சாட்சர முதலியார், வா. தி. மாசிலாமணி முதலியாரவர்கள் இருவரும், இவர்களோடு ஆசிரியர்களும் திறமையான உழைப்புச் செய்தலின், இப் பள்ளி, அடுத்த ஆண்டில் வெள்ளி விழா நிகழப்பெறும் வளர்ச்சியில் உள்ளது. தமிழ் நாட்டுக்கே இஃதொரு தனிப்பெருங் கல்வி விழாவாக நடைபெற வேண்டுமென்று பெரிதும் விரும்புகின்றோம்.

# மெய்கண்ட சாத்திர மாநாட்டு அழைப்பு

இம் மாநாடு தென்னிந்திய சைவ சித்தாந்தச் சங்கத்தின் ஆதரவில் வரும் சித்திரைத் திங்கள் 29-ம் நாள் முதல் 5 நாட்கள் திருநெல்வேலியில் சிறப்பாக நடைபெறும்.

அப்போது மெய்கண்ட சாத்திர நூல்கள் பதினன்கும் இம் மாநாட்டில் அறிஞர்கள் பலராலும் நன்கு ஆராயப்பெறும். அவ்வாராய்ச்சியின் பயனை சொற்பொழிவு நூலும் வெளிவர ஏற்பாடு செய்திருக்கிறது.

தமிழ்நாடெங்கணுமிருந்து அனைவரும் நண்பர் உறவினருடன் திருநெல்வேலியில் ஒருங்கு குழுமித் தொடர்பாக ஐந்து நாட்களுமிருந்து மாநாட்டைச் சிறப்பித்துச் சைவ நன்மக்களுக்கும் உலகுக்கும் ஆவன செய்துதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்ளுகிறோம்.

அன்புள்ள,
வ. திருவரங்கம் பிள்ளை,
அமைச்சர்.